# தொல்காப்பியம்

## பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும்

முன்னைந்தியல்கள்

பாகம் - ஒன்று




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies

# தொல்காப்பியம்

பொருளதிகார மூலம்

முன்னைந்தியல்களும்

மதுரையாசிரியர் பாரத்துவாசி

நச்சினார்க்கினியருரையும்

முதல் பாகம்

கணேசையர் பதிப்பு



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
**Chennai - 600 113**

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | Tolkāppiyam - Poruḷatikāram<br>Mūlamum Naccinārkkiṉiyaruraiyum |
| Publisher | : | **International Institute of Tamil Studies**, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113. |
| General Editor | : | **Dr. M. Rajendran**<br>**Director (Full additional Incharge)**<br>**International Institute of Tamil Studies**, C.I.T. Campus, Taramani,<br>Chennai - 600 113. |
| Publication No | : | 583 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2007 |
| Edition | : | 2nd Edition |
| Paper Used | : | NS Maplitho 18.6 kg |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing Types | : | 10 points |
| No.of Pages | : | xxxviii + 866 = 904 |
| Price | : | Rs. 325.00<br>(Two Hundred and Seventy Five Rupees Only) |
| No.of Copies | : | 1200 |
| Subject | : | Tamil Ancient Grammar and Commentary |
| Printed by | : | ***The PARKAR***<br>293, Ahamed Complex, 2nd Floor,<br>Royapettah High Road,<br>Chennai - 600 014. |

---

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் அரிய தமிழ் நூல்கள் அச்சிடுவதற்கான நிதியுதவித் திட்டத்தின்கீழ் நிதி பெற்று அச்சிடப் பெற்றுள்ள நூல்.

ஓம்

தொல்காப்பிய முனிவரால் இயற்றப்பட்ட

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

முதல் பாகம்

**முன்னைந்தியல்களும்**
**நச்சினார்க்கினியமும்**

இவை

*புன்னாலைக்கட்டுவன்*

**தமிழ் வித்துவான், பிரமஸ்ரீ சி. கணேசையர் அவர்கள்**

*ஏட்டுப்பிரதிகளோடு ஒப்புநோக்கித்*
*திருத்திய திருத்தங்களோடும்,*
*எழுதிய*

**உரைவிளக்கக் குறிப்புக்களோடும்**

*"ஈழகேசரி" அதிபர்*

**நா. பொன்னையா அவர்களால்**

*தமது*

**சுன்னாகம், திருமகள் அழுத்தகத்தில்**

*பதிக்கப்பட்டன*

*1948*

**முனைவர் ம. இராசேந்திரன்**
*இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*தரமணி, சென்னை 600 113.*

## முகவுரை

வடவேங்கடம் தென்குமரிக்கு இடைப்பட்ட தமிழ்கூறு நல்லுலகின் வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் ஆய்ந்து தொகுக்கப்பட்டது **தொல்காப்பியம்** என்று பனம்பாரனார் பாயிரம் கூறுகிறது. தமிழகத்தின் எல்லைகள் பற்றிய குறிப்புகளைத் தரும் தொன்மைமிக்க ஆதாரமாகவும் பனம்பாரனார் பாயிரம் திகழ்கிறது.

ஒரு நாட்டின் எல்லைகளைக் கடந்துசெல்லும் வாய்ப்பினைப் பெற்றோர் அல்லது வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாதோர் என்று வரலாற்றில் துறவிகள், புலவர்கள், வணிகர்கள் காணப்படுகின்றனர். துறவிக்கு வேந்தனும் துரும்பு; கற்றோர்க்குச் சென்றஇடம் எல்லாம் சிறப்பு.

துறவியும் புலவரும் வணிகரால் போற்றப்படுகின்றனர். துறவிகளுக்குப் படுக்கைகளை வணிகர்களே அமைத்துக் கொடுத்துள்ளனர் என்பதைத் தொல்லியல் மற்றும் கல்வெட்டியல் சான்றுகள் தெரிவிக்கின்றன. புலவர்களுக்குப் புரவலராக அரசர்கள் இருந்துள்ளனர்.

இன்னொரு நாட்டிற்குள்ளும் சென்று மக்களைச் சந்திக்கும் உரிமை துறவிகளுக்கு உண்டு. அதியமானுக்காக ஔவையார் இன்னொரு நாட்டரசனிடம் தூது சென்றிருக்கின்றார்.

வணிகர்கள், வாணிகத்தின் பொருட்டுத் தம் நாட்டின் எல்லையைக் கடக்கிறார்கள். இன்னொரு நாட்டுடன் வாணிகத்

தொடர்பினை ஏற்படுத்திக் கொள்வதற்குத் துறவிகளின் உதவியையும் புலவர்களின் அனுபவத்தையும் வணிகர்கள் பயன்படுத்திக் கொள்வர். வணிகத்திற்கு, வணிகர்களுக்கு இடம் தராமல் இடையூறாக இருக்கும் நாடுகளைக் கைப்பற்றித் தம் நாட்டு எல்லைகளை அரசுகள் விரிவு படுத்திக் கொள்ளும் போலும். போர்களுக்குரிய காரணங்களில் வாணிகப்போட்டியும் ஒன்றாக இருந்துவருகிறது.

கனகவிசயர் தமிழ் அரசர்களைக் குறைத்துக்கூறிய செய்தி புலவர்களாலேயே சேரன் செங்குட்டுவனுக்குத் தெரியவந்திருக் கிறது.

எனவே நாடுகளும் ஆட்சி எல்லைகளும் வணிகத்திற்காகவும் செயற்கையாகவே கட்டமைக்கப்படுதலையும், செயற்கைக் கட்டமைப்புகள் அரசியல் வணிகக் காரணங்களாலேயே சிதைக்கப் பெறுவதையும் வரலாற்றில் காணலாம்.

ஆனால் மொழிவழி அமைவன இயற்கையான எல்லைகள். இயற்கையான எல்லைகளையும் அரசியல் வணிகக் காரணங்கள் மாற்றியமைக்கவே விரும்பும். அத்தகைய விருப்பம் நிறைவேற மேற்கொள்ளப்பெறும் நடவடிக்கைகள் மக்களிடம் மன அழுத்தத்தை உருவாக்கும். வரலாற்றின் பெரும்பகுதி மன அழுத்தம் மிக்க நிகழ்வுகளின் பதிவுகளே. பனம்பாரனார் குறிப்பிடும் எல்லைகள் மொழிவழியானவை.

மக்களின் சடங்குகள், வழிபாடுகள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றில் வணிக நோக்கச் செயற்பாடுகளின் வேர்களே வெளிப்படுகின்றன. அவற்றின் தொடர்ச்சிக்கும் நிலைபேற்றிற்கும் கூட வணிக நோக்கங்களே வாழ்வளித்துக் கொண்டிருக்கின்றன.

எனவே தமிழ்கூறு நல்லுலகத்தின் எழுத்தும் சொல்லும் பொருளும் அடங்கிய வழக்கும் செய்யுளும் தொகுக்கப்பட்டு, ஆய்ந்து தமிழ் இலக்கணமாகத் தொல்காப்பியம் உருவாக்கப் பட்டுள்ளதிலும் இத்தகைய கூறுகளைக் காணும் ஆய்வுகள் வர வேண்டும். தெளிவு உணர்த்திட உரையாசிரியர்களும், கால மாற்றத் திற்கேற்பக் கைவரப்பெறும் ஊடகத்திற்கேற்பப் பதிப்பாசிரியர்களும் தொல்காப்பியம் தொடர்ந்து கற்கப்பட உதவிவருகின்றனர்.

தமிழின் தொன்மையும் சிறப்பும் பெருமையும் தெரிந்திடத் தொல்காப்பியம் உதவுகிறது. மேலும் இன்றைய மொழியியல் ஆய்வாளர்களுக்கும் வியப்பைத் தருகிற மொழிசார் கூறுகளை நுட்பமாகவும் கொண்டிருக்கிறது என்பதும் இலக்கியக் கொள்கை களை உருவாக்கித் தந்திருக்கிறது என்பதும் இனியும் வரும் கொள்கை களுக்கு இடம் தருகிற வகைப்பாடுகளைக் கொண்டிருக்கிறது என்பதும் தொல்காப்பியத்தின் தனிப் பெருமைகளாகும்.

ஏடுகளிலிருந்த தொல்காப்பியத்தை மீட்டெடுத்து அச்சிட்ட பெருமை மழவை மகாலிங்கையருக்கு உரியது. அவர் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தை நச்சினார்க்கினியர் உரையுடன் முதன்முதலில் வெளியிட்டுள்ளார். இப்பதிப்பு 1848இல் வெளிவந்துள்ளது.

தொல்காப்பியத்தின் ஏனைய அதிகாரங்களும் அவற்றின் உரைகளும் இன்னும் பல ஆண்டுகள் கடந்தே வெளிவந்துள்ளன. சேனாவரையர் உரையுடன் சொல்லதிகாரத்தை 1868இல் சி.வை. தாமோதரம் பிள்ளை பதிப்பித்தார். 1882இல் நச்சினார்க்கினியர் உரையுடன் பதிப்பித்தார்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு முதல் ஐந்து இயல் களுக்கு நச்சினார்க்கினியர் உரையும், அதன் எஞ்சிய நான்கு இயல் களுக்குப் பேராசிரியர் உரையும் கிடைத்துள்ளன. இவற்றைக் கொண்டு 1885இல் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை இவர் பதிப்பித்துள்ளார். பின்னர், தொல்காப்பிய எழுத்ததிகாரத்தை நச்சினார்க்கினியர் உரையுடன் இவர் 1891இல் பதிப்பித்துள்ளார்.

அதன் பின்னர் மூலம் மட்டும் தனியாகவும் வந்துள்ளது. மூலமும் உரைகளும் தனித்தனியே வெளியிடப் பெற்றும் வந்துள்ளன. கையடக்க அளவிலும் தொல்காப்பியம் அச்சிடப் பெற்றுள்ளது. கூடவே தெளிவுரை, குறிப்புரை, எளிய உரை, மாணவர்க்கான உரை, பாடபேத ஆய்வு என இதுவரை நூற்றுக்கும் அதிகமான பதிப்புகள் தொல்காப்பியத்திற்கு வெளிவந்துள்ளன.

இத்தகைய முயற்சிகளுக்குப் பின்பும் கூட, தொல்காப்பியத்தை முழுமையாக முறையாக, இன்னும் அறிந்துகொள்வதில் இடர்ப் பாடுகள் இருந்து வருகின்றன. இவை தொல்காப்பியத்தின் சிறப்புப் பண்புகளாகவும் நோக்குதற்குரியன.

தொல்காப்பியத்தின் நச்சினார்க்கினியர் உரை மற்றும் அவருரை கிடைக்காத இயல்களுக்குப் பேராசிரியருரைகளை முழுமையாக வெளியிட்ட சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களின் தமிழ்த் தொண்டினைப் பாராட்டும் பொருட்டு ஈழகேசரி அதிபர் நா. பொன்னைய பிள்ளை 1937இல் சி.வை. தாமோதரம் பிள்ளை பதிப்பித்த நச்சினார்க்கினியர் உரையுடன் கூடிய தொல்காப்பிய எழுத்ததிகாரத்தை மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் கொண்டுவர விரும்பினார்.

அப்பதிப்பிற்கு அப்போது தமிழ் இலக்கண அறிவு மிகவும் கைவரப்பெற்றவராக இருந்த யாழ்ப்பாணம் புன்னாலைக் கட்டுவனைச் சேர்ந்த சி. கணேசையர் உதவவேண்டும் என அவரை அணுகியுள்ளார். நச்சினார்க்கினியர் உரைக்கு மேலுமொரு விளக்கமாக உரையொன்றைச் செய்ய உடல் நலமின்மை காரணமாகச் சி. கணேசையரால் அப்போது இயலவில்லை.

அந்நிலையில் அவர் கற்ற காலத்தும் கற்பித்த காலத்தும் குறித்து வைத்திருந்த குறிப்புகளை அப்பதிப்பில் சேர்க்க அனுமதித்துள்ளார். மேலும் அப்பதிப்பில் தொல்காப்பியர் வரலாறு, நச்சினார்க்கினியர் வரலாறு, உதாரண அகராதி, அரும்பத விளக்கம் முதலியவற்றின் அகராதி, தொல்காப்பிய முற்பதிப்புகளில் இடம் பெறாத மேற்கோள்விளக்கம், மற்றும் இணைப்பாக இடம்பெறக் கூடிய சில இலக்கணக் குறிப்புகள் போன்றவற்றைத் தாம் எழுதியும் தம் மாணவர்களைக்கொண்டு எழுதுவித்தும் சேர்த்துள்ளார்.

அதேபோன்று தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கான சேனாவரையர் உரையையும் விளக்கக் குறிப்புகளோடு அச்சிட்டு வெளிப்படுத்த நா. பொன்னையபிள்ளை அவர்கள் கணேசையரைக் கேட்டுக்கொண்டுள்ளார். அவரும் சொல்லதிகாரத்திற்குத் தாம் முன்பு எழுதிவைத்த குறிப்புகளை மீண்டும் ஆராய்ந்து பதிப்பித்துள்ளார். இப்பதிப்பு முன்பு ஆறுமுகநாவலர் அவர்களால் பரிசோதிக்கப்பெற்று, சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பெற்றதைப் பெரும்பாலும் தழுவிப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

இப்பதிப்பில் தொல்காப்பியம் ஏட்டுப்பிரதிகளை ஒப்புநோக்கி சி. கணேசையர் திருத்திய பல திருத்தங்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றால் இப்பதிப்பு "கணேசையர் பதிப்பு" என்றே சிறப்புடன் அழைக்கப்படுகிறது.

உரையாசிரியர் காட்டியுள்ள மேற்கோள் பாடல்களின் அருஞ் சொற்களுக்கும் கணேசையர் பொருள் தந்துள்ளார். மூலபாடங்கள் கவனமாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. இவற்றை மதிப்பிட்டும் இவர்தம் உரை விளக்கக் குறிப்புகளில் எழுதியுள்ளார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கணேசையர் பதிப்புகளாகிய, தொல்காப்பிய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் ஆகியவற்றின் மறுபதிப்புகளை இப்போது வெளியிடுகிறது.

இந்நிறுவனத் தலைவர் **மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** இந்நிறுவனத்தின் தோற்றம் முதல் தொடர்ந்து ஆக்கமும் ஊக்கமும் அளித்து நிறுவனத்தை வளர்த்து வருகிறார்கள். **மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களுக்கு இத்தகைய பணிகளால் நிறுவனம் நன்றி செலுத்துகிறது.

நிறுவனப் பணிகள் விரைவாகவும் நிறைவாகவும் அமைய ஒல்லும் வகையான் உதவி நல்கி ஆற்றுப்படுத்தும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் செயலாளர், **முனைவர் கி. இராச மாணிக்கம் (இ.ஆ.ப ஓய்வு)** அவர்களுக்கு நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் சிறப்பு ஆணையர் மற்றும் தமிழ் வளர்ச்சி, இந்து சமய அறநிலையத்துறை மற்றும் செய்தித்துறைச் செயலாளர் **திருமிகு கோ. சந்தானம் இ.ஆ.ப.** அவர்களுக்கும், இவ்வெளியீட்டிற்கு அரிய நூல் நிதியுதவித் திட்டத்தின்கீழ் அச்சிட நிதி நல்கிய தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறைக்கும், இந்நூலின் ஒளி அச்சுக் கோப்பைச் செய்தும் அச்சிட்டும் அளித்த தி பார்க்கர் நிறுவனத் தார்க்கும் நன்றி

**– இயக்குநர்**

# பொருளடக்கம்

# அணிந்துரை

**உலகியல் விளக்க நூலாசிரியரும் பரமேஸ்வரக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் போதகாசிரியரும் பண்டிதமணியுமாகிய மாவை, பிரமஸ்ரீ க.சு. நவநீதகிருஷ்ணபாரதியார் அவர்கள் எழுதியது**

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியனடி
பல்காற் பரவுதும் எழுத்தொடு
சொல்கா மருபொருட் டொகைதிகழ் பொருட்டே

## தமிழ் மொழியின் தொன்மையும் சிறப்பும்

இவ்வுலகத்து இப்பொழுது வழங்கிவருகின்ற மொழிகள் சற்றேறக் குறையத் தொள்ளாயிரத்துக்கு மேற்பட்டவை என்ப. அவற்றுள் அன்று தொட்டின்றுவரையும் அழிந்தொழியா துய்ந்து வரும் மொழிகள் இபிரேயம், கிரீக்கு, இலத்தீன், சமஸ்கிருதம், தமிழ் என்னு மைந்துமேயென ஆராய்ச்சியாளர் கூறாநிற்பர். இவ்வைந்து மொழிகளுள்ளும் தமிழ் ஒழிந்த ஏனைய நான்கு மொழிகளும், பலநூற்றாண்டுகட்கு முன்பே உலகவழக் கழியப் பெற்று, நூல்வழக்கொன்றின்கண்ணேயே நிலைத்து வருகின்றன. தமிழ்மொழியோ அன்றுமுதலின்றுகாறும் நூல்வழக்கினும் உலக வழக்கினும் நிலைபெற்றுவருஞ் சிறப்புடையது. தெலுங்கு கன்னடம் முதலாய பல மொழிகளும் இத் தமிழ்மொழியினின்றுந் தோன்றி யுள்ளன. இம்மொழி, பிறமொழித் துணையின்றித் தானே தனித் தியங்கும் பேராற்றல் பெற்றது. மொழியுலகமே முன்பின் கண்டி ராத காதல்கனிந்த அகப்பொருளிலக்கணத்தையும், வீரம்வீறிய புறப்பொருளிலக்கணத்தையும் தன்பாற்கொண்டு மிளிர்வது. அன்றுமின்றுமுள்ள தமிழ்ப் புலவர்கள் எல்லோரும் தமிழ் மொழியை அமிழ்தத் தமிழே! ஆருயிர்மருந்தே! பசுந்தமிழ்க் கொழுந்தே! விசும்புறவரு தமிழ்மணியே! என்றாங்கு விளித்துப் போற்றுவது வழக்காறாகவுள்ளது. வடமொழி முதலாய பிற மொழிகளிலோ கலைகளைத் தெய்வமாகப் பொதுப்படக் கோட லன்றி, இங்ஙனம் தத்தம் மொழிகளை விளித்துக் கூறுவது காணப் பட்டிலது. இதுவும் தமிழ்க்கென வாய்ந்த தனிச்சிறப்பே. சொற்

களின் தொடர்ச்சிகளாலறியப்படும் அல்வழிவேற்றுமைப் பொருட் கூறுபாடுகளை, அச்சொற்கள் தம்முட் புணரும் புணர்ச்சியா லடையப்பெறும் இயல்பும் விகாரமுமாகிய செய்கைகளால் புலப் பட வைக்கும் சிறப்பு, இத் தமிழ்மொழிக்கன்றி வேறு மொழிகட் குள தாமோ? புலவன் தான் பாட எடுத்துக்கொண்ட பொருட்குரிய செய்யுட்கேற்ப நுண்ணிதாக அசைவுறும் அளவொலியும், அவை தம்முள் ஏற்றவாறு அமைந்தொலிக்கும் எழுத்தொலியும் அங்ஙனமே அவ்வெழுத்துத் தனித்தும் பிறவற்றோடு சேர்ந்தும் அசைவு பெற்றொலிக்கும் அசையொலியும், அவ்வசையொலியே ஏற்ற பெற்றி அளவாகப் பொருள்பெறத் திரண்டொலிக்கும் சீரொலியும், அங்ஙனம் அசையானும் சீரானும் பொருள் திரண் டொன்றுபட்ட அடியொலியும், அவ்வடியொலிதோறும் அப் பொருளறுதி பெற்று நிலைபெறச்செய்யும் யாப்பும், காலமுமிட மும் பற்றி மாறுபடுகின்ற வழக்கிற்கேற்ப வழுவுறாமற்செய்யும் மரபும், அடியோசையால் நிறைவுபெற்ற பொருள் நிரம்பிய ஓசைத் தொகுதியைத் துணித்து நிறுத்துவைக்கும் தூக்கும், அடிகாரணமாகச் சொல்லாலும் பொருளாலும் தொடுக்குந் தொடையும், நுண்ணொலியான மாத்திரை முதலாக உறுப்பு களுடைய பகுதிகளைக் கேட்போரை, அச் செய்யுளின் முதற் பொருளையே நோக்கவைக்கும் நோக்கும், இன்ன செய்யுளென்று அறிந்து கோடற்கேதுவாய பரந்துபட்ட செய்யுளோசையும் என்பனவாதியாகச் செய்யுளுக்கென வகுக்கப்பட்ட இருபத் தாறுறுப்பும் பிறமொழிகளில் ஒருங்குடன் காணப்பெறா.

க - ங;- ச - ஞ; ட - ண; த - ந; ப - ம; என்னு மிவற்றிடையே மும்மூன்றெழுத்தொலிக ளுள்ளன. இவ்வைந்துவகைப்பட்ட எழுத்தொலிக் கூட்டங்களை, "பஞ்சவர்க்கம்" என வடமொழி யாளர் கூறுவர். அவ்வைந்தனுள்ளும் முதலுமிறுதியுமாகவுள்ள எழுத்துக்களே தமிழில் உள்ளன. அங்ஙனமிருப்பினும், அவ்வவ் வருக்கத்திடைப்பட்ட எழுத்துக்கள் பலவும் தமிழ்ச்சொற்களி டையே ஆங்காங்கொலித்துவருதல் கண்கூடு. ஆயினும், அவற் றுக்குரிய தனிப்பட்ட வரிவடிவுகள்தாம் தமிழ்நெடுங்கணக் கிலில்லை. க, ச, ட, த, ப, என்னுமைந்தனையுமே வரிவடிவிற் கொண்டு, ஏனைய அவ்வவற்றின் வேறுபட்டஒலிகளைச் சொற் களிடத்தேகொண்ட தமிழ் மொழியானது, எல்லா ஒலிகளையும் தனித்தனி எழுத்துக்களாகத் தம்முட்கொண்ட வடமொழி முதலாய ஏனைய மொழிகட்கெல்லாம் மிக முற்பட்டதொரு தொன்மொழியாமென்பது வெளிப்படை.

மிகப் பழைய காலத்தே, வடமொழி முதலியவற்றிலுள்ள எல்லா எழுத்துக்களையும் மக்கள் உச்சரிப்பார் என்பது இயலாத தொன்று. தமிழ் எழுத்துக்களையே இலகுவில் உச்சரித்துக் கொள் வர் என்பது மிகையாகாது. சொற்களைப் பேசத் தொடங்கும் காலத்தும், முடிக்குங் காலத்தும் 'வர்க்' என்ற ஓசைகள் அமைந்த எழுத்துக்களால் பிறமொழிகளில் உச்சரிப்பது போல அக்கால மக்கள் உச்சரிக்க மாட்டார் என்பது வெளிப்படை. இத் தமிழ் மொழியிலோ சொற்கள், இயல்பாகிய ஓசையினால் முதற்கண் தோன்றப்பெற்று, இடைக்கண் இயல்போசைக்குள்ளேயுள்ள 'வர்க்' என்ற ஓசைகளமைந்து, இயல்பாய ஓசையெழுத்துக்களால் முடிவுறும் பெற்றியனவாகப் பண்டைத்தமிழுலகத்து வழங்கப் பட்டு வந்தன. இயல்பான எழுத்தொலிகளையும், அவற்றை முற் கூறியாங்குப் பேசும் வகையினையும் உற்றுநோக்கில் ஏனைய மொழிகட்கெல்லாம் இத் தமிழ்மொழி எத்துணைத் தொன்மை யுடைத்தென்பது போதரும். இவ்வியல்பெல்லாம் மற்றைய மொழி கட்கில்லை யென்பது மிகையாகாது. அன்றியும், கற்றோன்றி, மண் தோன்றாக் காலத்தே மலையிடத்திலே தோன்றிய தமிழ்மக்கள் மொழியாதலானும் அதன் தொன்மை விளங்கும். நிற்க:

## தொல்காப்பிய வரலாறு

அறிந்த வரையில் இத் தமிழ்மொழிக்குத் தொன்மையாக வுள்ள இலக்கணநூல் அகத்தியமேயாகும். இந்நூல், இயலிசை நாடகம் என்னும் முத்தமிழிலக்கணங்களையும் கூறுவதென்பர். தலைச்சங்கத்துக்கும் இடைச்சங்கத்துக்கும் இலக்கணமாக இருந்ததும் இந் நூலே. அகத்தியமுனிவர்பால் இந்நூலைப் பாடங் கேட்ட தொல்காப்பியனார் முதலிய பன்னிரு மாணவரும் ஒருங்கு சேர்ந்து "பன்னிருபடலம்" என்னும் இலக்கண நூலையும், தொல்காப்பியனார் இயற்றமிழிலக்கணமாகிய தொல்காப்பியத் தையும் இயற்றினர் என்ப. தொல்காப்பியம், எழுத்துச் சொற் பொருள் என்னும் மூன்றதிகாரங்களையும், ஓவ்வோரதிகாரங் கட்கும் ஒன்பதொன்பதியல்களாக இருபத்தேழியல்களையும் ஆயிரத்தறுநூற்றுப்பத்து நூற்பாக்களையும் உடையது.

தொல்காப்பியம் தொடங்கிய பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டுப் பேராசிரியர்கள் தத்தம் மாணவர்கட்குத் தாந்தாமே பாடஞ்சொல்லி வருவாராயினர். இங்ஙனம் மரபுமரபாகப் பல்கி நூற்கு உரைநுவல வந்தவர்கள் தத்தமக்குத் தோன்றியவாறே உரைவிரிப்பாராயினர். அதனால் முரண்பாடுகொண்ட பல திறப்பட்டவர்களாகித் தாந்தாம் நுவல்வதே மெய்யுரையாகக்

கொண்டு வாதாடியும் வருவாராயினர். இங்ஙனம் பல நூற்றாண்டுகள் கழிந்தன. இக் குறைபாடுகளையெல்லாம் களைந்து, தொல்காப்பிய மெய்ப்பொருளை உலகம் கண்டுய்யும் வண்ணம், பேரருளே காரணமாக முதன்முதலில் இளம்பூரணவடிகள் தொல்காப்பிய நூற்கடலுட் புக்குத், தமது நுண்மாண் நுழை புலனைச் செலுத்திப் பெறலரும் பொருள்களை ஆராய்ந் தெடுத் துரைவகுத்தனர். இவரே முதன்முதலில் உரை வகுத்தாரெனக் கொண்டு இவரையே உரையாசிரியர் என்பாரும், உரையாசிரியர் வேறொருவர்; அவர் இவர்க்கு முந்தியவர் என்பாருமுளர். இளம் பூரணவடிகளியற்றிய உரை மூன்றதிகாரங்கட்கும் இப்போது முளது. அஃது அச்சிடப்பட்டு வெளிவந்துமுளது. அதன்பின்னர், வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர், தம் மதிநுட்பத்தால் சொல்லதிகாரத்துக்கு மட்டும் உரைகண்டார். அவ்வுரையும் அச்சாகி வெளிவந்துளது. பேராசிரியருரை பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் முதலாகவுள்ள ஐந்தியல்களுக்குமே வெளி வந்துளது. உற்றுநோக்கின் முழுவதற்கும் இவர் உரை கண்டா ரென அறியக்கிடக்கின்றது. நச்சினார்க்கினியம், எழுத்ததிகாரத் துக்கும், சொல்லதிகாரத்துக்கும், பொருளதிகாரம் அகத்திணை யியல் முதலிய ஐந்தியல்கட்கும், செய்யுளியலுக்கும் மட்டுமே வெளிவந்துளது. பொருளதிகாரத்தின் ஏனைய பகுதிகள் வெளி வந்தில. கல்லாடர் சொல்லதிகாரத்துச் சிலபகுதிகட்கு மட்டும் உரைவகுத்தார். அவருரையின் சிற்சில பகுதிகளேயன்றி, முழுவதும் அச்சிடப்பட்டு வெளிவந்திலது. தெய்வச்சிலையாருரை சொல்லதிகாரத்துக்கே அச்சாகி வெளிவந்துளது. இவ்வரலாறு இங்ஙனமாயினும், இன்ன இன்னபகுதிகட்கு இன்னாரின்னார் தாம் உரைவகுத்தார் என அறுதியிட்டுரைத்தல் சாலாது. ஆராய்ச்சி வல்லார் மேலும் மேலும் ஆராயுங்கால், வேறுபட்ட முடிபுகள் தோன்றவே தோன்றும்.

## தொல்காப்பியப் பதிப்பு வரலாறு

சற்றேறக்குறைய எண்பதாண்டுகட்குமுன், முதன்முதலில், சென்னைச் சர்வ கலாசாலைத் தமிழ்ப்பேராசிரியர், மழவை மகாலிங்கையர் அவர்களால் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம் பதிப்பிக்கப்பட்டது. அதன்பின்னர், மகாவித்துவான் சுப்பராயச் செட்டியார் அவர்கள், எழுத்ததிகாரம் இளம்பூரணத்தைப் பதிப் பித்து வெளியிட்டார்கள். அவ்விரு பதிப்புகளும் பல திருத்தங் களைப் பெறவேண்டியன. கோமளபுரம், மகாவித்துவான், இராசகோபாலபிள்ளையவர்கள், சொல்லதிகாரம் சேனாவரையம்

பதிப்பித்தார்கள். அவர் பதிப்பும் பல திருத்தங்கட்கிடமாகவுள்ள தேனும், சேனாவரையருடைய உரைப்பகுதிகள் பலவற்றையும் அறிந்து கொள்வதற்குப் பெரிதுமுதவியாயிருந்தது. ராவ்பகதூர் சி.வை. தாமோதரம்பிள்ளையவர்கள், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவல ரவர்களைக் கொண்டு பரிசோதிப்பித்துச் சொல்லதிகாரம் சேனாவரையத்தைப் பதிப்பித்தார்கள். அதன்பின்னர்ச் சொல் லதிகாரம் நச்சினார்க்கினியத்தையும் அதன்மேல், நச்சினார்க் கினியருரை என்ற பெயரோடு பொருளதிகாரம் முழுவதையும், மற்றதன் மேல், மகாலிங்கையராற் பதிப்பிக்கப்பட்ட எழுத்ததி காரம் நச்சினார்க்கினியத்தையும் பதிப்பித்தனர். அம்மட்டோ டமையாமல், சங்க இலக்கியங்கள் முதலிய சிலவற்றையும், மற்றவை அழிந்தொழியுமுன்னரே பதிப்பித்துதவினர். "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரித" ன்றோ? அப்பெரியாருடைய செயற்கருஞ்செயலை மறத்தலும் தமிழுல கிற்குண்டாமோ? அவர் பதிப்புக்களும் பல திருத்தங்கட்கிட னாக வுள்ளன. செய்யுளியல் நச்சினார்க்கினியமும், இளம் பூரணமும் மகாவித்துவான் ரா. ராகவ ஐயங்கார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டன. ரா. ராகவ ஐயங்கார் அவர்கள் சி.வை. தாமோதரம்பிள்ளையவர்கள் பதிப்பித்த பொருளதிகாரப் பதிப்பில் முதல் ஐந்தியல்களும் நச்சினார்க்கினியம் எனவும், பின்னான் கியல்களும் பேராசிரியம் எனவும் ஆராய்ந்து செந்தமிழில் வெளி யிட்டார்கள். மற்றதனையே கருவியாகக்கொண்டு, ராவ்பகதூர் பவானந்தம்பிள்ளையவர்கள், பொருளதிகாரத்தை மூன்று பாகங்களாகப் பதிப்பித்து வெளியிட்டார்கள். அப்பதிப்புக் காலப்போக்கிற்கேற்பப் பல திருத்தங்களையும் பெற்றுக் கொண்டது. பின்னர்ப் பல திருத்தங்களோடும் சைவசித்தாந்தப் பதிப்பகத்தில் பதிப்பிக்கப்பட்ட எழுத்ததிகாரம் நச்சினார்க் கினியமும், சொல்லதிகாரமும் சேனாவரையமும் முன்னரை விடச் சிறந்த பதிப்புக்களாக வெளிவந்தன. மற்றதன்மேல் திரிசி புரம், ச . கனகசபாபதிப்பிள்ளையவர்கள் பொருளதிகாரத்தை இரண்டு பாகமாகப் பதிப்பித்து வெளியிட்டார்கள். அவற்றுள்ளும் பலதிருத்தங்கள் காணப்பட்டன.

## கணேசையரும் தொல்காப்பியமும்

இங்ஙனமெல்லாம் பல பதிப்புக்கள் வெளிவந்தும், தொல் காப்பிய நுண்பொருள்கள் இவைதாம் என்று கற்போர்க்கும் கற்பிப்போர்க்கும் விளங்கற்கரியனவாகிச் சிலபல இடர்ப்பாடு களையே செய்துவந்தன. அப்போது, என்னரிய நண்பரும், இந்தியா, இலங்கை என்னுமிடங்களிலுள்ள புலவர்கள் பலராலும்

பாராட்டப் பெற்ற செந்நாப் புலமையுடையாரும், கற்றதற்குத்தக நிற்கும் ஒழுக்கம் பெற்றோரும், தெய்வபக்தி, பொறை, செந் தண்மை முதலிய நற்குணமமைந்தவருமாகிய அந்தணத் திருவாளர் வித்துவான், சி. கணேசையர் அவர்கள் அவ்விடர்ப்பாடுகளை இயன்றவாறு தீர்க்க வேண்டுமே என்னும் கருணை மேலிட்டு, 1937 ஆம் வருடத்தில் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியத்தையும், அதன்மேல், 1938 ஆம் வருடத்தில் சொல்லதிகாரம் சேனாவரை யத்தையும், மற்றதன்மேல், 1943 ஆம் வருடத்தில், பொருளதிகாரம் (இரண்டாம் பாகம்) பேராசிரியத்தையும், இப்போது (1948 ஆம் வருடத்தில்) பொருளதிகாரம் முதலாம்பாகம் நச்சினார்க்கினியத் தையும், தமது நுண்மாண் நுழைபுல ஆற்றலாலும், காலந்தோறும் பதிப்பித்து வெளியிடப்பட்ட தொல்காப்பியப் பதிப்புகளினும் ஏட்டுப் பிரதிகளினும் ஆராய்ந்துவந்த பயிற்சி மிகுதியானும், தமது ஆசிரியர்களிடங் கேட்டறிந்த முறையானும், தக்க நன் மாணக்கர் பலர்க்குக் கற்பித்துவந்த அநுபவமுதிர்ச்சியானும் மிக்க பல திருத்தங்களைச் செய்தும் விளங்காவுரைகளை விளக் கியும் பதிப்பித்து வெளியிட்டுதவினார்கள். அவர்தம் பதிப்புக்கள் ஏனையோர் பதிப்புக்களினும் பல சிறந்த திருத்தங்களைப் பெற்றுளவென்பது படிப்போர்க்கு நன்கு புலப்படும்.

இப்பொழுது பதிப்பித்த பொருளதிகார முதலாம்பாகப் பதிப்பில், பதிப்பாசிரியர், சி. கணேசையர் அவர்கள், புறத்திணை யியல், 13-ம் சூத்திர உரையுள் "படிவம் முதலியன கூறல்" என்ப தனைப் "படிவம் முதலியன கோடல்" எனவும் மேற்படியியல் 16-ம் சூத்திர உரையுள், "திணைக்கெல்லாம் பொதுவன்மை யிற்றிணையெனவும் படாது" என்பதனைத் 'துறைக்கெல்லாம் பொதுவன்மையிற்றிணை யெனவும் படாது எனவும், களவியல் 20-ம் சூத்திர உரையுள், "இட்டுப் பிரிவிரங்கினும்' என்பதனுரை யுள், "கற்பினுட் சொல்லாத பிரிதலையும்" என்பதனைக் "கற்பினுட் சொல்லாது பிரிதலையும்" எனவும் அவ்வாறே கற்பியல் 5-ஞ் சூத்தி ரத்தும், பிறவற்றினும் பல திருத்தங்களைக் கண்டுள்ளார்கள். கற்ப வர்கள் அவற்றையெல்லாம் ஆராய்ந்து படித்தின்புறுவார்களாக.

நிற்க, இப்பெறலரும் உதவியை உதவிய அந்தணத்திருவாளர் சி. கணேசையர் அவர்கள் மீண்டும் மீண்டும் இத்துறையில் முயன்றுசெல்லும் வண்ணம், இறைவன் ஒரு கூறுறை உமையம் மையார் கடைக்கணித்தருள்வாராக.

இந் நூலைப் பதித்துத் தமிழுலகிற் குதவிய 'ஈழகேசரி'ப் பத்திராதிபர் ஸ்ரீமாந் நா. பொன்னையாபிள்ளை அவர்களும், நீண்ட ஆயுளும் செல்வமும் பெற்று, இன்னும் இதுபோலும் தமிழ்த் தொண்டுகள் செய்து வாழ்வார்களாக.

# முதற் பதிப்பின் முகவுரை

"தன்றோ ணான்கி னொன்று கைம்மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினு
மொளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே"

பொருளதிகார மென்பது பொருளினது இலக்கணத்தை உணர்த்தற்கிடமாகிய படலம் என விரியும். இது தானியாகு பெயர். இலக்கணம் - தானி; படலம் - தானம். இனிப் பொருளினது இலக்கணத்தை உணர்த்தும் படலம்.என விரித்துக் காரியவாகு பெயரெனினுமமையும். இலக்கணம் - காரியம்; படலம் -காரணம். அதிகாரம் - முறைமை. முறைமை, மரபு, இலக்கணம் என்பன ஒரு பொருட்கிளவிகளென்பது நச்சினார்க்கினியர் கருத்து.

பொருளாவன, அகப்பொருளும் புறப்பொருளுமாம். அன்றி, அறம், பொருள், இன்பம், வீடு எனினுமாம். அறம் முதலிய நான்கும் அகம், புறம் என்னும் இரண்டனுள்ளு மடங்கும். இளம் பூரணர் முதல், கரு, உரி எனப் பொருள் மூன்று வகைப்படு மென்றும், உரிப்பொருளில் அறம் முதலிய நான்கும் அடங்கு மென்றுங் கூறுவர்.

அகம் என்பது அகத்தே நிகழும் இன்பம் எனப் பொருள் படும். அவ்வின்பம் ஒத்த அன்புடையராகிய ஒருவனு மொருத்தியுங் கூடித் தாமே அனுபவித் தறிதலின் அகமெனப்பட்டது. ஏனைய அறமும், பொருளும் பிறர்க்கும் புலனாதலிற் புறம் எனப்பட்டன. இவை இளம்பூரணர்க்கும் கருத்தாம்.

இப்பொருளைப் பற்றிய இலக்கணம் இந்நூலாசிரியரானே ஒன்பதியல்களா லுணர்த்தப்பட்டது. அவ்வியல்களாவன; அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என்பன வாம். இவற்றான் அப்பொருளை யாங்ஙன முணர்த்தினாரோ வெனின், அகம், புறம் என்னும் இரண்டனுள்ளுமடங்கும் அறம் முதலிய நான்கனுள்: இன்பத்திற்குரிய பொதுவிலக்கணங்களை அகத்திணையியலானும், இன்பமொழிந்த அறம், பொருள்

என்னுமிவற்றின் இலக்கணங்களையும், வீடடைதற்குரிய நிமித்தத்தையும் புறத்திணையியலானும், இன்பத்திற்குரிய சிறப்பிலக்கணங்களைக் களவியல் கற்பியல்களானும், சொல்லும் பொருளுமுணர்த்தும் வழுக்களையமைத்துச் சொல்லுணர்த்தும் பொருளையும் தொடர்மொழியுணர்த்தும் பொருளையும் பொருளியலானும், பொருட்பெற்றி யுணர்த்துதற்கேதுவாயுள்ள மெய்ப்பாடுவமைகளை மெய்ப்பாட்டியல் உவமவியல்களானும், பொருளை அமைத்து உணர்த்துதற்கிடமாகிய செய்யுளிலக்கணங்களைச் செய்யுளியலானும், பொருட்குரிய மரபுகளை மரபியலானும் உணர்த்தினார் எனக் கொள்க.

இங்ஙனம் பொருட்பெற்றி உணர்த்தப்பட்டமையானே இவ்வதிகாரமும் மக்கட்குப் பெரிதும் பயனுடைத்தேயாம்.

இப்பொருளதிகாரத்தை முதலிற் பதிப்பித்துத் தமிழ்நாட்டிற் குதவியவர் ராவ்பஹதூர் சி.வை. தாமோதரம்பிள்ளையவர்களே. முதலிற் பதிப்பிப்பவர்க்கே பிரயாசமதிகமென்பது யாவருமறிந்த தொன்றாம். ஆதலினாற் பாணமரித்தும் சிதல் தின்றும் இதழ் முரிந்தும் பின்னும் பின்னும் பழுதடையாவண்ணம், பிரதிகளை ஒன்றொடொன்று பலமுறை ஒப்புநோக்கி அதிக பிரயாசத்தோடும் பிழைகள் பெரிதும் வாராவண்ணம் திருத்திப் பதிப்பித்துதவிய பிள்ளை அவர்களுக்கே தமிழகத்தாராகிய நாம் என்றும் கடப்பாடுடையவர்களாக இருத்தல் வேண்டும். பிள்ளையவர்களுக்குப்பின், மேலும் சில திருத்தங்களோடும் இதனை இரண்டாவதாகப் பதிப்பித்துதவியவர் ராவ்பஹதூர் ஸ்ரீமான் பவானந்தம் பிள்ளையவர்களாவர். அவர்களுக்குப் பின் சென்னைப் பல்கலைக் கழகத் தலைமைப் பேராசிரியர் ராவ்சாஹிப் S. வையாபுரிப் பிள்ளையவர்கள் திருத்தியுதவிய சில திருத்தங்களோடும் மன்னார்குடி இயற்றமிழாசிரியர் ம.ந. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் எழுதியுதவிய சில கீழ்க்குறிப்புக்களோடும் பதிப்பித்துதவியவர் ஸ்ரீமான் S. கனகசபாபதிப் பிள்ளையவர்களாவர். இவர்கள் பதிப்பித்துதவிய இம் முப்பதிப்பானும் இவ்வதிகாரமடைந்த திருத்தங்கள் பலவாயினும், இன்னும் பல திருத்தமுற வேண்டியிருந்தமை நோக்கி யாமும் சில ஏட்டுப் பிரதிகளோடும் ஒப்புநோக்கித் திருத்தி, அதனுள் பின்னுள்ள நான்கியல்களையும் உரைவிளக்கக் குறிப்புக்களோடும் முன்னர்ப் பதிப்பித்து வெளிப்படுத்தினேம். அவற்றை முன் வெளிப்படுத்தியதற்குக் காரணம், அவை இங்கு ஆரியதிராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தாராலும், இந்தியாவில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாராலும் பண்டித பரீக்ஷைப்

பாடமாக நியமிக்கப்பட்டிருந்தமையும், படிப்போர்க்குச் சிறப்பாக அறியவேண்டிய பகுதியாயிருந்தமையுமாம். இப்போது அதனுள் முன்னுள்ள ஐந்தியல்களையும் அவ்வாறே பதிப்பித்துள்ளேம். இப்பதிப்பின்கண் யாங் கண்ட திருத்தங்களுள் பிரதானமான சில திருத்தங்களை இங்கே காட்டுகின்றேம். அவற்றை அறிஞர் நாடிக்கொள்க.

**அவையாவன**

புறத்திணையியல், 11-ம் சூத்திர அவதாரிகையுள் 'ஒருவர்க்கு' என்பது 'ஒவ்வொருவருக்கு' என்றிருப்பது நலம். என்னை? பின்னர் 'நான்கு நான்காக' என்னுஞ் சொற்றொடர் வருவதாகலின்.

மேற்படி இயல் 13-ம் சூத்திர உரையுள் 'படிவங்கூறல்' என்பது 'படிவங்கோடல்' எனத் திருத்தப்படவேண்டுமெனக் காட்டப்பட்டுள்ளது. இஃது ஏட்டுப் பிரதிகள் சிலவற்றிலும் அவ்வாறே காணப்பட்டது.

மேற்படி இயல் 16-ம் சூத்திர உரையுள் 'இது திணைக் கெல்லாம் பொதுவன்மையிற் றிணையெனவும் படாது' என்பது, 'துறைக்கெல்லாம் பொதுவன்மையிற் றிணையெனவும் படாது' என்று திருத்தப்படவேண்டும் எனக் கீழ்க் குறிப்பிற் காட்டப் பட்டது. என்னை? துறைக்கெல்லாம் பொதுவாயுள்ளதே திணையாகலின்.

களவியல் 20-ம் சூத்திரத்து "இட்டுப்பிரிவிரங்கினும்" என்பதனுரையுள் 'கற்பினுட் சொல்லாத பிரிதலையும்"என்பது 'கற்பினுட் சொல்லாது பிரிதலையும்' எனத் திருத்தப்பட வேண்டும் எனக் காட்டப்பட்டது. இஃது ஏட்டுப் பிரதிகள் சிலவற்றிலும் அவ்வாறே காணப்பட்டது.

கற்பியல் 5-ம் சூத்திரத்துள் வரும், 'சொல்லெனவே, வேனது சுவைப்பினு நீகை தொட்டது - வானோ ரமிழ்தம் புரையுமா லெமக்கென - அடிசிலும் பூவும் தொடுதற் கண்ணும்' என்னு மடிகள், 'ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது வானோரமிழ்தம் புரையுமா லெமக்கெனச் சொல்லெனவே, அடிசிலும் பூவும் தொடுதற் கண்ணும் என மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டுள்ளன' என்பது உரையை உற்று நோக்கினார்க்கு விளங்கும். ஏனது என்பதற்கு, 'அமிழ்திற்கு மாறாகிய நஞ்சாயினும்' எனப் பொருளுரைக்கப் பட்டுள்ளது. அங்ஙனம் பொருள் கூறியது பின்வரும் அமிழ்தை

நோக்கியாகும். 'ஏனது' அமிழ்தல்லாத தெனவே, நஞ்சென்பது பெறப்படும். 'புனைந்துரைத்' தென்பது 'புனைந்துரைத்துழி' என இருத்தல் வேண்டும். ழகரவிகரம் தவறியதென்பது உரை யானே விளங்கும். இங்ஙனமாக, ஸ்ரீமான் ராவ்பஹதூர் பவானந்தம் பிள்ளை அவர்கள் பதிப்பிலும் S. கனகசபாபதிப் பிள்ளை அவர்கள் பதிப்பிலும், கீழ்க் குறிப்பில் 'சொல் - நெல்; அஃது அமிழ்தை உணர்த்தி நின்றது' எனக் குறிப்பிடப்பட்டது. பொருந்துமோ வென்பது ஆராயத்தக்கது.

மேற்படி சூத்திரத்து 'காமத்தின் வலியும்' என்பதனுரையுள், 'அவளது நீத்து நீக்கியவழி' என்பது, 'அவள் துனித்து நீக்கிய வழி' என்றிருத்தல் வேண்டும். அதுவே பொருத்தமானதென் பதைப் பின் வரும் 'இதுவும் துனி தீர்ப்பதோர்முறை கூறிற்று' என்னுமுரைவாக்கியம் வலியுறுத்தும்.

மேற்படி சூத்திரத்து 'உறலருங் குண்மையின்' என வருமடி யுரையுள் வரும் 'சாந்தழி பெருங்குறி பெற்றார் கூந்தற்றுகளும்' என்பது 'சாந்தழி வேருங்' 'குறி பெற்றார் கூந்தற்றுகளும்' என்றிருத்தல் வேண்டும் என உரைக் குறிப்புட் காட்டியுள்ளாம். என்னை? கலித்தொகைச் செய்யுளில் அவ்விரண்டும் வருதலின். கலி - 66-ம் செய்யுளையும் 72-ம் செய்யுளையும் முறையே நோக்குக. வேரும் என்பதில் வகரத்தின் கொம்பு அழிந்திருத்தல் வேண்டும்.

மேற்படி இயல் 11-ம் சூத்திர உரையுள் 'மெல்லியற் பொறையும்' என்பதனுரை, சி.வை. தாமோதரம்பிள்ளை பதிப்பில், 'வல்லென்ற நெஞ்சொடு பொறுக்கும் அவனைப்போலாது ஒருதலையாக மெல்லென்ற நெஞ்சினளாய்ப் பொறுக்கும் பொறையும்' என்று காணப்படுகின்றது. S. கனகசபாபதிப் பிள்ளை பதிப்பில் 'அவனைப் போலாது' என்பது ஆனையைப் போலாது' என்று காணப்படுகின்றது. ஆனைக்குந் தலைவிக்கும் ஓரியை பின்மையின் 'அவனை' என்பதே பொருத்தமாதல் காண்க. அவன் என்றது தலைவனை. தலைவன் என்பது பின்வரலின் அவ்னை யென்று சுட்டியொழிந்தார். இவ்வாறு வாக்கியத்தினும் சுட்டுவது இவ்வுரையாசிரியரதும் பேராசிரியரதும் வழக்கமாகும். அவ்வாறு வருதலை இச்சூத்திரவுரையுள் 'அவன் முகம் புகுது முறைமை காரணத்தான் தலைவற்குக் கூறல்' என வருதலானும் புறத் திணையியல் 7-ம் சூத்திர உரையுள்ளும். கற்பியல் 14- ம் சூத்திர உரையுள்ளும் வருதலானும் அறிந்துகொள்க. காதன் முதலிய

வற்றைத் தலைவன் மெலிதாக அடக்கமாட்டான். தலைவி அடக்குவள் என்பது கருத்து. 'வல்லென்ற நெஞ்சொடு பொறுத்தல்' என்றதனால், தனக்குற்ற காதல் முதலியவற்றை ஒரு ஆண்மகன் மெலிதாக அடக்க முடியாமையால் வாய் திறந்து கூறிவிடுவான் என்பதும் ஒருவாறு அடக்கின் வலிதாகவே அடக்கிக் கொள்வானென்பதும் மெல்லென்ற நெஞ்சினளாய்ப் பொறுத்தல் என்றதனால், தனக்குற்ற காதல் முதலியவற்றை ஒருபெண்மகள் வாய்திறந்து கூறாள் என்பதும் அடக்கிக் கொள் வாள் என்பதும் பெறப்படும். ஒரு பெண்மகள் தனக்குற்ற காதல் முதலியவற்றைத் தன்னாற் காதலிக்கப்பட்ட ஆண்மகனுக்கு வாய் திறந்து கூறாள் என்பது, இராமாவதாரத்துச் சூர்ப்பநகைப் படலத்துள், "தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப - தாமெனலாவ தன்றால்' என்று சூர்ப்பநகை கூறுவதாக வருஞ் செய்யுளடிகளானும்,

**நோயலைக் கலங்கிய மதனழி பொழுதிற்**
**காமஞ் செப்ப லாண்மகற் கமையும்**
**யானென், பெண்மை தட்ப நுண்ணிதிற் றாங்கி**

என்று தலைவி கூறுவதாக வரும் நற்றிணைச் செய்யுளடிகளானும் (64) அறியப்படும்.

இவையன்றி இச் சூத்திரத்து இன்னும் பல எமது கருத்தின்படி திருத்தப்பட்டுள்ளன. அவற்றைக் கீழ்க் குறிப்பில் அங்கங்கே நோக்கி யறிந்து கொள்க. பழைய ஏட்டுப் பிரதிகள் கிடைப்பின் இன்னும் பல திருத்தம் பெறலாம். எமது உடற்றளர்ச்சியானும், அசௌக்கியத்தானும் ஏட்டுப் பிரதிகளுள்ள இடங்களிற் சென்று பெற்றுப் பார்க்க முடியாமையினாலே கிடைத்த பிரதி யைக்கொண்டும், இயைபு நோக்கியும் இவற்றைத் திருத்தினோம். திருத்தம் பெறாதவற்றையும், திருத்தியவற்றிற் பொருந்தாதவற் றையும் திருத்திக் கொள்ளுமாறு அறிஞர்களை வேண்டிக் கொள்ளுகின்றேம். மேலும்:

இந்திய தேயத்திற்குச் சென்று மதுரைத் தமிழ்ச்சங்க முதலிய இடங்களில் ஏட்டுப் பிரதிகளோடு ஒப்பு நோக்கித் திருத்த வேண்டுமென யாம் குறிப்புக்கள் சில எழுதி வைத்திருந்தேம். எமக்கு நேர்ந்த சுகவீனங் காரணமாக யாஞ் செல்லமுடியாமை யானே, அக்குறிப்புக்களை, மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்குச் சென்று அங்குள்ள ஏட்டுப் பிரதிகளோடு ஒப்பு நோக்கித் திருத் தங்களைக் குறித்து வருமாறு, எம்மிடத்திற் படித்துப் பண்டிதப்

பரீட்சையிலும் வித்துவான் பரீட்சையிலும் சித்தியெய்தியுள்ள ஸ்ரீமாந். க.கி. நடராஜன் அவர்கள் இந்தியாவிற்குச் சென்ற போது, அவர்களிடம் கொடுத்துவிட்டதுமன்றி, மேற்குறித்த சங்கத்தி னின்று வெளிவரும் 'செந்தமிழி'ன் உதவிப்பத்திராசிரியராயிருந்த வரும் இப்போது பத்திராசிரியராயிருப்பவரும் எமது நண்பரும் வித்துவானுமாகிய ஸ்ரீமாந். ஏ. கே இராமானுஜ ஐயங்கார் அவர் கட்கு ஒரு கடிதமுங் கொடுத்து விட்டேம். அவர்கள் மதுரைத் தமிழ்ச்சங்கம் சென்று மேற்குறித்த ஐயங்கார் அவர்களிடம் கடிதத்தைக் கொடுத்தபோது ஐயங்காரவர்கள் படித்துப் பார்த்து மனமுவந்து அங்கு மூன்று ஏட்டுப் பிரதிகளிருப்பதாகக் கூறி அவற்றை எடுத்துக் கொடுத்தது மன்றித் தாமுங் கூடவிருந்து எமது குறிப்புக்களைப் பிரதிகளோடு ஒப்பு நோக்கிச் சில திருத்த மான பாடங்களைத் தெரிவித்தும் உதவி செய்தார்கள். அவ்வாறு உதவி செய்த ஐயங்கார் அவர்களின் பேரறிவும் பரோபகார சிந்தையும் என்றும் எம்மால் மறவாது போற்றற்பாலனவே. ஐயங்காரவர்கட்கன்றி, எமது குறிப்புக்களைக் கொண்டு சென்று, ஐயங்காரவர்களினுதவிபெற்று, பிரதிகளோடு ஒப்பு நோக்கி, திருத்தங்களைக் கொண்டு வந்து எமக்குதவிய மேற்குறித்த ஸ்ரீ. நடராஜன் அவர்கட்கும் எமது அன்பும் ஆசியும் உரியவாகுக.

யாம் இந்நூலுள்ளே புறத்திணையியலுரையுள் வரும் உதாரணச் செய்யுட்களிலுள்ள பிழைகளைத் திருத்துதற்கு ராவ்சாஹிப். வித்துவான், பிரமஸ்ரீ. மு. இராகவையங்காரவர் களுடைய 'பெருந்தொகைத் திரட்டு' என்னுநூல் பேருதவி யளித்தது. அதற்காக அவர்களுக்கும் யாம் வணக்கம் கூற வேண்டிய கடப்பாடுடையேம்.

மேலும், இந்நூலுள்வரும் உதாரணச் செய்யுட்களுட் சில இன்னநூல்களுள் உள்ளன என்று அறியப்படாமையானும் திருத்தமின்றிக் காணப்படலானும் அவற்றின் பொருளை இயைபு பட அறிதல் கூடாதாயிற்று. அதனால், அச் செய்யுட்களிலுள்ள பிழைகளைத் திருத்தவாதல் பொருளெழுதவாதல் முடியாமை யானே அவை வாளாவிடப்பட்டன. அறிந்தோர் திருத்திப் படித் தறிந்து கொள்வார்களாக.

மேலும் யாம் திருத்தமென்று கண்டவிடங்களிலுஞ் சில சொற்களும் வாக்கியங்களும் எம் நோக்கத்திற்குத் தப்பிப் பிழையாகவுமிருக்கலாம். அவற்றையும் ஏட்டுப் பிரதிகளை நோக்கித் திருத்திக் கொள்வார்களாக. நச்சினார்க்கினியர் எழுதிய

உரைதானென்று கூறமுடியாமல் ஆங்காங்குப் பிறழ்ச்சியடைந் திருக்கும் இவ்வுரையை யாம் பூரணமாகத் திருத்திவிட்டே மென்று கூறுவது எமக்கே பெரும் அவமானமாகும். நிற்க.

யாமிப்போது அச்சிட்ட இப்பதிப்புப் பூரணமாகத் திருந்திய தென்பது எமது கருத்தன்றாதலால், பழைய ஏட்டுப் பிரதிகள் வைத்திருப்பவர்கள் தமிழ்மகளின் நலம் கருதி அவற்றை அனுப்பி வைப்பின் இரண்டாம் பதிப்பில் இன்னுந் திருத்தஞ் செய்யலா மென்பதை அவர்களுக்கு அறிவித்துக்கொள்ளுகின்றேம். மேலும் யாம் திருத்திய திருத்தங்களிலும், எழுதிய உரை விளக்கக் குறிப்புக்களிலும் எமது முதுமை, மறதி முதலியவற்றால் நேர்ந்த பிழைகளைத் திருத்திக்கொள்ளுமாறு அறிஞர்களை வேண்டிக் கொள்ளுகின்றேம். அன்றியும் உண்மையான பிழைகளை அறிஞர்கள் எமக்கு அறிவிப்பின் அவற்றை யாமேற்று, அவர்கள் பெயரோடும் இரண்டாம் பதிப்பில் வெளிப்படுத்துவேம்.

யாம் எழுதிய உரை விளக்கக் குறிப்புக்களைப் பலமுறை நுண்ணிதாகப் படித்துப் பார்த்து இன்றியமையாத சில திருத்தங்கள் செய்து துணைபுரிந்த, திருநெல்வேலி ஆசிரிய கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரும், எமது ஆசிரியருளொரு வருமாகிய சுன்னாகம் வித்துவமணி ஸ்ரீமாந். அ. குமாரசுவாமிப் புலவரவர்களிடம் முறையாகக் கற்று விற்பன்னராய் விளங்குபவரு மாகிய பண்டித சிரேட்டர் சி.கணபதிப்பிள்ளையவர்களுக்கு யாஞ் செய்யக்கிடந்த கைம்மாறு யாதென அறியேம். அவர்கள் செய்த நன்றியும், அவர்கள் நுண்மதியும் என்று மெம்மாற் பாராட்டப் படத்தக்கனவே.

யாம் இந்நூலுள் வரும்பிழைகளை ஏட்டுப் பிரதிகளை நோக்கித் திருத்தும் போதும் அச்சிட்டகாலத்து அச்சுத்தாள் களை நோக்கித் திருத்தஞ் செய்யும்போதும் உதவியாளரா யிருந்து பெரிது முதவிசெய்த எமது மாணவரும் பண்டிதருமாகிய ஸ்ரீமாந்.வ. முத்துக்குமார பிள்ளை அவர்களுக்கும் எமது அன்பும் ஆசியு முரியவாகுக.

எமது பாடபேதங்களையும் இவ்வுரை விளக்கக்குறிப்புக் களையும் படித்துப் பார்த்து அணிந்துரையும் சிறப்புப்பாயிரமு மளித்த, அரியகற்றாசற்றவர்களாகிய முப்பெரும் புலவர்களுக் கும் எமது அன்பும் வணக்கமு முரியவாகுக.

அரசர்கள் பெரும்போர் காரணமாகக் காகிதம் முட்டுற்ற இக்காலத்திலே மனமுவந்து பெருந்தொகைப் பொருள் கொடுத்துக் காகிதம் வாங்கி இந்நூலை அச்சிட்டுத் தமிழுலகிற் குபகரித்த, 'ஈழகேசரி' ப்பத்திராதிபர் ஸ்ரீமாந். நா. பொன்னையா பிள்ளை அவர்கட்கு யாமேயன்றி, இத்தமிழுலகத்தாரும் பெரிதுங் கடமைப்பட்டவர்களாகி, அவர்களைப் போற்ற வேண்டியவர் களாகின்றார்கள். அவர்கள் இன்னும் நீண்ட காலமிருந்து தமிழ்ப்பணி யாற்றுமாறு இறைவன் அருள்புரிவாராக.

**சி. கணேசையர்**

# சிறப்புப் பாயிரம்

***"உயிரிளங்குமரன்" என்னும் நாடக நூலாசிரியரும்
இயற்கைக் கவிசிரேட்டருமாகிய நவாலியூர்;
ஸ்ரீமாந். க. சோமசுந்தரப் புலவரவர்கள் இயற்றியது***

ஆசிரியவிருத்தம்

தேமணக்குஞ்சந்தனப்பூம் பொழில்மணக்கும் பொதியமெனுஞ்
சிலம்பில் மேனாள்
தூமணக்கு நறையிதழித் தொடைமணக்குஞ் சடைமௌலித்
தூயோன் றாளுங்
காமணக்குங் கடம்பணிந்த கதிர்வேற்பெம் மானடியுங்
கருதி நோற்று
நாமணக்குந் தமிழ்முனிவ னகத்தியமா முதனூலை
நல்கி னானால். 1

அன்னவன்மா ணாக்கரொரு பன்னிருவ ரவர்தம்மு
ளறிவான் மிக்க
மன்னுபெரும் புகழ்த்தொல்காப் பியனாரங் கியற்றமிழை
வகுத்து நாடிப்
பன்னுதொல்காப் பியமென்னும் வழிநூலொன் றருந்தமிழ்க்கு
மருந்தா யீந்தான்
அன்னதன்சீ ரெடுத்துரைக்க வளவிலடங் காதுமிகுந்
தகலு மன்றே. 2

அந்நூற்கு நல்லுரைபூ ரணனாரை யுள்ளிட்டோ
ரன்று தொட்டே
நன்னூலின் படியொழுகு நங்கைமணி மங்கலநன்
னாணே போலச்
செந்நூலின் கிடைத்திறமு மாசிரிய ருளத்திறமுஞ்
செவ்வே நாடி
எந்நூற்குங் காப்பாகத் திட்பநுட்ப வொட்பமுற
வெழுதி னாரால் 3

எழுதியவவ் வுரைத்திறங்க ளிக்கலாம் பயில்வோர்தா
மினிது தேற
கொழுவியதீஞ் சுவைக்கனியின் தீஞ்சாறுந் தேனுமுடன்
குழைத்த தென்னப்

பழுதில்வகை சொற்றிறமும் பொருட்டிறமும் பலதிறமும்
பண்பி னாடி
எழுதரிய வுரைவிளக்க மையவிப ரீதமற
வெழுதித் தந்தான். 4

எழுத்திற்குஞ் சொல்லிற்கு மெழிற்பொருளிற் கடையுளநான்
கியல்க ளுக்கும்
வழுத்திடுநல் லுரைவிளக்கந் தந்ததற்பின் முன்னுள்ள
வாடாக் காதல்
பழுத்ததனி யன்பூரப் பண்பூறப் பகர்பொருளி
னியல்பு கூறும்
விழுத்தகைய வைந்தியற்கு முறைவிளக்க நுட்பமுற
விளம்பி னானால். 5

ஆரியமுஞ் செந்தமிழு மாமிரண்டு மொழிபயின்றே
யறிவின் மூத்துச்
சீரியநான் மறையொழுக்கந் திறம்பாத தவவிரத
சீல முள்ளோன்
காரணகா ரியத்தொடர்ச்சி யில்லாத கரிமுகவன்
கமல பாத
நேரியநெஞ் சினினிறுத்தி யெந்நாளுந் துதிக்குமொரு
நியமம் பூண்டோன். 6

பன்னுபுகழ் யாழ்ப்பாண நாடுசெய்த பெருந்தவத்தின்
பயனாய் மேலாந்
தொன்மைதிகழ் காசிபகோத் திரமுலகில் நிலவவந்து
தேன்றுந் தோன்றல்
மன்னுபுகழ்ச் சின்னைய மாமறையோன் பெற்றெடுத்த
மதலை கற்றோர்
கண்ணெனவே கொண்டுதுதி கணேசைய னெனுநாமக்
கலைவல் லோனே. 7

மற்றதனைத் தனதுதிரு மகளமுத்த கத்துமிக
மகிழ்வா யேற்றுப்
பொற்புறவே பதிப்பித்து வெளியிட்டான் யாவனெனிற்
புகலக் கேண்மோ
கற்றவர்பா லன்புடையோ னீழகே சரியதிபன்
கலைமே லார்வம்
பெற்றவன்றென் மயிலைநகர்ப் பொன்னைய வேளென்னும்
பெருமை யோனே. 8

***கொழும்பு அரசினர் ஆசிரிய கல்லூரியிலும் வித்தியா நிலயத்திலும் தமிழ்ப் பண்டிதரா யிருந்தவரும் "வித்தகப்" பத்திராசிரியரும் பண்டித சிரேட்டருமாகிய தென்கோவை; ஸ்ரீமாந். ச. கந்தையபிள்ளை அவர்கள் இயற்றியது***

## ஆசிரியப்பா

உலகினி லாதியா யிலகிய தொன்மொழி
பலபல தேஎந்தொறும் பண்டைநாட் பயின்றே
உலகெலா மளந்த வொருதனிச் செம்மொழி
ஆயுத மநாதி காரண மாகி

வியாப்பிய வியாபக மாகி மிளிரும்
பதிபசு பாசப் பண்புநனி காட்டப்
பதினெண் மெய்யும் பன்னீ ருயிரும்
இடைபின் கலைகளி னியக்கங் காட்ட
உவற்றின் பெருக்கி னோக்கமே நாளும்

உடல்வளி யியக்கவெண் ணுண்மை காட்ட
மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையெனும்
மெய்யுயி ருண்மை கைவரத் தெரித்து
வேதாந்த சித்தாந்த விழுப்பொரு ளுணர்த்தி
இயற்கையின் வழாஅ விலக்கண வரம்பும்

அகம்புற வொழுக்க மமைவுறக் காட்டி
விழுமிய சொற்பொரு டழுவுசெந் தமிழால்
இயற்கை யன்னையின் வனப்பு மீக்கூரச்
சங்கச் சான்றோர் தாமினி துகுற்றிய
அறிவுறு துறையெலா நிறைபல பனுவலும்

இறையனார் வள்ளுவ ரிடைக்காட ரவ்வை
ஆதியோ ரருளு மரும்பெரு மறைகளாய்
அறம்பொரு ளின்பம்வீ டடையு நெறியின்
திறன்றெரிந் துரைக்குந் தெய்விக நூல்களும்
பிணிமூப்புச் சாக்காடும் பிறவியு மொரீஇ

உடலு முயிரு மொழிவற வொன்றி
அள்ளூ றாக்கையா யருளாய் வெளியாய்ச்
சத்திசிவ வடிவாய்த் தாரணி கண்டிட
ஞானா காசத்து நண்ணி யொடுங்கும்
அடியவ ராழ்வா ரநுபவந் தெரித்து

முத்திநிலை காட்டும், வித்தக மறைகளாய்
ஒப்புயர் வில்லாத் திப்பியம் வாய்ந்த
திருவா சகமே திருக்கோவை யாதிய
தெய்விக நூல்களுஞ் செகத்தோர்க் கெட்டா
மன்னிய கலையென மருவுநால் வேதத்
திருநெறி யான திருகுகண் மலிந்த
கருமூல மொழிக்குந் திருமூலர் முதலாம்
சித்து மூர்த்திகடந் தெய்விக மறைகளும்
சாத்திரப் பெயராற் றரணியோர் பயில
அறிஞர்பல ரமைத்த வரியபன் னூல்களும்
கற்பனை திகழச் சொற்பொரு ணயம்படப்
புலவர் பல்லோர் புனைந்தபன் னூல்களும்
தன்பாற் கொண்டு தான்றனித் தியங்கும்
ஆற்றல் சான்ற அமிழ்தெனுந் தமிழ்மொழி
முடியுடை மூவேந்த ரோம்பிய முத்தமிழ்
ஊழிதொ றூழிதொ றோங்கி மும்மைச்
சங்கத் திருந்து தழைத்த தனிமொழி
என்றுமே மன்ற நிலைஇய தென்றமிழ்
தேனினு மினிய, செழுஞ்சுவை கனிந்த
தெய்வச் செந்தமிழ்ச் சிறப்பினைத் தெரித்தல்
அகத்திய ரனைய வருந்தவர்க் கல்லால்
எம்ம னோருக் கியல்வதோ! அம்ம !!
உலக மாக்களுக் கொல்லுவ தாமோ!!!
அந்நியர் பல்லோ ராட்சி மன்னிக்
கால கதியிற் கலங்கிய தெனினும்
திருவருட் பெற்றி திகழ்தர வென்றும்
வழக்குவீ ழாது வாழ்வுபெற் றன்றே!
தமிழக மின்றுதன் னுரிமைநலம் பெறுதலின்
நந்தமிழ் மொழியு நலமுறத் தழைத்துப்
புத்துயிர் பெறீஇப் புதுமைநலந் திகழ்ந்து
பண்டைப் பரிசுங் குன்றாது நாளும்
அருநூல் பலப்பல வவனியோர்க் களித்து
வாழ்வுபெற் றோங்கத் திருவருள் வழங்கெனச்
சங்கத் தமிழின் றலைமைப் புலவனைச்
சாந்தசிவ வடிவிற் சண்முக நாதனை
ஞானகுரு பரனா(ம்) நங்கண் மணியினைத்
திருவடி தொழுது சேர்குதும் யாமே!

இயலிசை கூத்தென வியலபன் னூல்களுட்
கடல்கோட் பட்டன வொழிய வழிவழி
இற்றைநாட் பயிலு மிலக்கண நூல்களுள்
தொன்மை சான்றது தொல்காப் பியமே
பிறமொழிக் கமையாப் பெட்புநனி வாய்ந்த
தன்னிலை முன்னிலை யொழுக்கெனச் சமைந்த
அகம்புற விலக்கண மழகுறத் தெரிக்கும்
ஈங்கிதன் பெற்றி பாங்குறக் கிளக்கின்
மறம்பொரு டுன்ப மரணம தொரீஇ
அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனெனும்
பொருளுரைக் கேற்ற பொற்புடைத் தன்றே
அகமே புறமே களவே கற்பே
பொருளிய லெனப்படூ உம்பொருட்பா லிதுவே
வேத வுண்மைபல விளக்கிய தாமே!
முதல்கரு வுரியென முன்னிய மூன்றும்
பதிபசு பாசப் பண்புதெரித் தன்றே
கருவது திரிய முதலெனு முருவும்
திரிதரூஉ முரியெனு மொழுக்கமுந் திரியும்
திரிதலே மாற்றிப் பிறத்தலாய்த் திகழும்
காய மாயங் கழிதிற னிதுவே
பெற்றசிற் றின்பமே பேரின்ப மாகி
முற்ற வரூஉமென முழங்கிடும் வேதம்
பிராணனொ டபானனாப் பேசிட நின்ற
கொடிநிலை வள்ளி வடுநீங்கிச் சமமுற
அசுத்த காம வுணர்ச்சியா யமைந்த
கந்தெனு மசுத்த வளியுங் கசடொரீஇ
அமல மாகி யருவாய்ச் சிவமாம்
ஊச லாட்டு முடலுயி ராயின
இயக்க வொருப்பா டினிதி னமைதரூஉம்
இருவினை சமமுற மலபரி பாகமாம்
மணங்கமிழ் தெய்வத் திளநல மென்னும்
கந்தழி காட்டுங் கந்தருவ நெறியே
அசையா தசையு மமல நிலையாம்
பொன்னூச லாட்டம் பொலிதரத் திகழும்
வேதாந்த சித்தாந்த சமரச நெறியாம்
காமஞ் சான்ற கந்தழி யுருவே
கண்ணீர் மல்கிக் கசிந்து நாளும்
நாத வேத மோதுங் காதலாம்

மையலே காதலென மயங்கு முலகோர்
அசுத்த காமத்தா னலக்கணுற் றழிகுவர்
ஆவது மழிவது மொன்றினா லென்பது
தேவராஞ் சித்தர் திருவாக் கன்றோ!
கடையா யுள்ளா யுடலக மரீஇய

என்பினு ளன்பா யின்பமாய்ச் சிவமாம்
கருவெனும் விந்தே குருநெறி தழீஇய
அரியசா தகத்தா லமலமா யுடலில்
"உணர்வெனும் பெரும்பதந் தெரி" தர வுறைதலாம்
கடைக்கோ ளிதனாற் காமஞ் சான்றுழிக்

"கடக்களி றேற்றாத் தடப்பெரு மதம்" எனும்
விந்து மதமாம் இந்துமதந் திகழ
அன்பினில் விளையு மாரமு தமைய
மருளுறு காயமே மாசெனும் பாசொரீஇ
ஏமஞ் சான்ற வீனமி லுடலெனும்

பேரின்ப நல்கும் பிரமக் கிழத்தியாம்
அன்பே யமிழ்தாய்ச் சிவமா யமைதரூஉம்
சாகாக் கல்விப் பயனா யுடலுயிர்
குருவெனுஞ் செம்பொனாய்க் குலவவே வாய்மைப்
பொருட்பே றாமெனப் புகன்றிடும் வேதம்

தேவியுந் தானுமா யீசனெமை யாளச்
சுண்ண மிடித்தலி னுண்மையு மிதுவே
பொன்மயன் சிவனெனும் பொருட்பொழிப் பிதுவே
உற்ற வாக்கையி னுறுபொரு ளாகிச்
சத்தெனத் திகழுந் தாதுவே பொன்னாம்

திருவடிப் பேறா யிருளினை யகற்றும்
பொருளெனும் பொன்னே பொய்யா விளக்கமாம்
நடுவதா மிதனா லிருதலையு மெய்தும்
தமிழுக் கிருவராய்த் தயங்கி முறையே
சாத லுறாத சாத லடைந்தே

கந்தழி பெறீஇக் கருது மிருநான்
கூன நீங்கி யொழிவற வொன்றி
அசையா தசையு மமலநிலை யமைந்த
உயிரு முடலுமாங் கிழவனுங் கிழத்தியும்
அள்ளூ றாக்கையோ டமிழ்த முண்டு

தவத்திற் கொருவராய்த் தம்பா லமைந்த
பசுகரண மெல்லாம் பதிகரண மாகி

அறம்புரி சுற்றமா யமைதரச் சிறந்த
குருநெறி பக்குவர் குறிக்கொளப் பயிற்றி
நித்தியம் பெறூஉ முத்திநெறி யிதுவே!

இன்னன வேத வுண்மைகண் மலிந்த
பொருட்பான் மாண்பு புகலவும் பெரிதே!
தமிழியன் மாண்பு சாற்றவும் பெரிதே!
தொன்மை சான்றவித் தொல்காப் பியத்துள்
அகத்திணை முதலா வமைந்தவைந் தியற்கும்

உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியர்
உலகிய னாடி யுஞற்றுபே ருரையினைப்
பலகாற் றுருவிப் பண்புற நாடிக்
காலநிலைக் குரிய கடப்பா டோர்ந்து
மாணவர் குழாமு மருவுமா சிரியரும்

மடனகன் றுணரத் தடைவிடை காட்டி
விளக்கமுற விசேடக் குறிப்புரை விரிவான்
உதவுபே ரறிஞ னுவன்யா ரெனினே
செந்தமிழ் வழங்குந் திருநா டிதுவெனப்
போற்றும்யாழ்ப் பாணப் புன்னையம் பதியிற்

சின்னைய விப்பிரன் செய்தவப் புதல்வனாய்க்
கோதிலாக் காசிப குலவிளக் கானோன்
சைவமுந் தமிழுந் தழைத்திட வருந்தொண்
டாற்றிய நல்லூர் ஆறுமுக நாவலன்
மருகனாய் வித்தவன் மணியெனப் புகலும்

பொன்னம் பலவனாம் புலவனுஞ் சிறியேன்
தமிழா சிரியருட் டலைவ னாகிக்
கற்போர் யார்க்குங் கரவாது நாளும்
சொற்பொரு டெளிக்குந் தூய்மைசா லுளத்தாற்
பயன்மர முள்ளூர்ப் பழுத்தன பண்பிற்

சுன்னைவாழ் குமார சுவாமிப் புலவனும்
வரமுறு குரவராய் மன்னிட வுவர்பாற்
கலையெலா மினிது கற்றொருங் குணர்ந்தோன்
பண்டிதர்க் குரிய பரீட்சார்த் திகளாம்
மாணவர் பல்லோர்க் கோவாது பல்லாண்

டருநூல் பயிற்று மநுபவ வுறைப்பினன்
தொல்காப் பியமெனுந் தொன்னூ லுரைக்கெலாம்
விளக்கவுரை வரைந்த வித்துவப் பெரியோன்

தூக்கின் மெலியது நூக்கி மீக்கொள
வலியதே தாழும் வகைமை மான
அறிவுவீற் றிருக்குஞ் செறிவுடை யுளத்தாற்
பணிவுமின் சொல்லுமே யணியெனக் கொண்டோன்
முத்தி வாயிலென முன்னுமுதற் படியாம்
வியாப்பிய வியாபக சந்தியாய் மிளிரும்
அகலிட மாக்க ளணுகுதற் கெட்டாப்
பூம்புக லூரெனும் புகலிடங் காட்டும்
புண்ணிய விமல புராண காரண
விநாயக னடியே விழுத்துணை யாகத்
தனாதுளங் கொண்ட தவநெறி யாளன்
இயற்றமிழ்ப் புலமையி னிணையிலாத் திராவிட
கலாநிதி யென்னுங் கணேசவிப் பிரனே!
இந்நூ லுரைகளை யெழிலுற வச்சில்
அமைத்து வழங்கு மருந்தமிழ்த் தொண்டனாம்
பொன்னைய நாம மன்னிய குரிசிறன்
தமிழ்மொழி யார்வமுஞ் சால்புநனி யுடைத்தே.

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

முன்னைந்தியல்களும்

நச்சினார்க்கினியமும்

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### நச்சினார்க்கினியம்

## முதலாவது: அகத்திணையியல்

**(அகத்திணை ஏழும் இவை எனல்)**

1. கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப

என்பது சூத்திரம்.

[1] நிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த்தினமையின், இது பொருளதிகார மென்னும் பெயர்த்தாயிற்று. [2] இது நாண்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற் போல்வதோர் ஆகுபெயர்.

---

1. நிறுத்தமுறை என்றது மேற்பாயிரத்துள் நிறுத்த முறையை. ஆசிரியன் தன் மனத்து நிறுத்த முறையுமாம்.

2. இது என்றது பொருளதிகாரம் என்பதை. நாண்மீன் - நட்சத்திரம். இன்று கார்த்திகை என்றால், கார்த்திகை என்னும் நாண்மீனின் பெயர் தன்னிகழ்ச்சிக்கிடமாகிய நாளை (அஃதாவது அற்றைத்தினத்தை) யுணர்த்தினாற்போல, பொருளதிகாரம் என்பது (பொருளினது இலக்கணம்) தன்னையுணர்த்தற்கிடமாகிய படலத்தை யுணர்த்தி நின்றது என்பார் இது நாண்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற் போல்வதோ ராகுபெயர் என்றார். அதிகாரம் - முறைமை; முறைமை, மரபு, இலக்கணம் என்பன ஒரு பொருளன. இவை நச்சினார்க்கினியர் கருத்தாம். நூன்மரபு 1-ம் சூத்திர உரை நோக்கியறிக.

பொருளினது முறைமை (இலக்கணம்) தன்னை உணர்த்தற்கு இடமாகிய படலத்தை யுணர்த்தலின் இது தானியாகுபெயராம். சிவஞான முனிவர்க்கும் இது கருத்தாதலை நன்னூல் விருத்தி பெயரியல் 29-ம் சூத்திர விரிவுரை நோக்கியறிக.

பொருளாவன:- அறம் பொரு ளின்பமும், அவற்றது நிலை யின்மையும்,[1] அவற்றினீங்கிய வீடு பேறுமாம். பொருளெனப் பொதுப்படக் கூறவே,[2] அவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியும்,[3] காட்சிப்பொருளும், கருத்துப்பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய இயங்கு திணையும், நிலைத்திணையும், பிறவும் பொருளாம்.

எழுத்துஞ் சொல்லும் உணர்த்தி, அச் சொற்றொடர் கருவியாக உணரும் பொருள் உணர்த்தலின், மேலதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. அகத்திணைக்கண் இன்பமும் புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளும் உணர்த்துப. இது வழக்கு நூலாதலிற் பெரும்பான்மையும் நால்வகை வருணத்தார்க்கும் உரிய இல்லறம் உணர்த்திப் பின் துறவறமுஞ் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட் காண்க. பிரிதனிமித்தங் கூறவே, இன்பநிலை யின்மையுங் கூறிக் 'காமஞ்சான்ற' என்னுங் கற்பியற் சூத்திரத்தால் (192) துறவறமுங் கூறினார். வெட்சி முதலா வாகை யீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட் கூறவே, அறனும் பொருளும் அவற்றது நிலையின்மையுங் கூறினார். 'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்னுஞ் சூத்திரத்தான் (75) இல்லறமுந் துறவறமுங் கூறினார். இங்ஙனம் இந்நிலையாமை யானும் பிறவற்றானும் வீட்டிற்குக் காரணங் கூறினார். இங்ஙனங் கூறவே, இவ்வாசிரியர் பெரிதும் பயன்றுவருவதோர் இலக்கணமே கூறினாராயிற்று; இதனாற் செய்த[4] புலனெறிவழக்கினை

---

1. அவற்றினீங்குதலே வீடுபேறு என்பதை "ஈதலறந் தீவினைவிட் டீட்டல் பொரு ளெஞ்ஞான்றுங், காதலிருவர் கருத்தொத்துற்றாதரவு, பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும், விட்டதே பேரின்ப வீடு" என்னும் வெண்பாவா லறிக.

2. அவற்றின் - அறம்பொருளின் பங்களின். முதல் கரு உரி இவை என்பதை மேல் வரும் மூன்றாஞ் சூத்திரத்தா னறிக.

3. காட்சிப்பொருள் - காட்சியளவையானறியும் பொருள். கருத்துப்பொருள் - கருதலளவையானறியும் பொருள். முதல் கரு உரியே காட்சிப் பொருளுங் கருத்துப்பொருளுமாதலின் அவற்றின் பகுதியாகிய என்பது ஏடெழுது வோரால் விடப்பட்டிருத்தல் வேண்டும். இயங்குதிணை - மக்கள், விலங்கு, பறவை முதலியன. நிலைத்திணை - மலை, மர முதலியன.

4. புலனெறி வழக்கு - புலவராற்று வழக்கு (செய்யுள் வழக்கு)

யுணர்ந்தோர் இம்மை மறுமை வழுவாமற் செம்மை நெறியால் துறைபோவராதலின்.

இப்பொருளை எட்டுவகையான் ஆராய்ந்தாரென்ப: அவை அகத்திணை புறத்திணை என இரண்டு **திணை** வகுத்து, அதன் கட் கைக்கிளை முதற் பெருந்திணை யிறுவா யேழும் வெட்சி முதற்பாடாண்டிணை யிறுவாய் ஏழுமாகப் பதினான்கு **பால்** வகுத்து, ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி பரிபாடல் மருட்பா வென அறுவகைச் **செய்யுள்** வகுத்து, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென நால்வகை **நிலன்** இயற்றி, சிறுபொழு தாறும் பெரும்பொழு தாறுமாகப் பன்னிரண்டு **காலம்** வகுத்து, [1]அகத் திணைவழு வேழும் புறத்திணை வழு வேழுமெனப் பதினான்கு **வழுவமைத்து**, நாடகவழக்கும் உலகியல் வழக்குமென இருவகை **வழக்கு** வகுத்து, வழக்கிடமுஞ் செய்யுளிடமுமென இரண்டு **இடத்தான்** ஆராய்ந்தாராதலின். எட்டிறந்த பல்வகையான் ஆராய்ந்தாரென்போர், முதல் கரு உரியும், [2] திணை தொறு மரீஇய பெயரும் திணைநிலைப்பெயரும், இருவகைக் கைகோளும், பன்னிருவகைக் கூற்றும், பத்துவகைக் கேட்போரும், எட்டுவகை மெய்ப்பாடும், நால்வகை உவமும், ஐவகை மரபும் என்பர்.

---

1. அகத்திணைவழு ஏழாவன:- கைக்கிளையும் ஐந்திணையும் பெருந்திணையு மாகிய ஏழும்பற்றி வருவன. அவற்றை, பொருளியல் 2ம் சூத்திர உரைக்கண் 'எட்டன் பகுதியும் விளங்க வொட்டிய உறுப்புடையது பேர்ல் என்பது முத லாகக் கூறுவன ஐந்திணைக்குரியவழு என்றும், காமங்கண்ணிய என்றதனால் கைக்கிளை பெருந்திணைக்கண் உறுப்புடையது போலக் கூறுவன முதலா யினவுங் கொள்க என்று கூறுவன கைக்கிளை பெருந்திணைக்குரிய வழு வென்றும் கூறுவனவற்றானும் மற்றுஞ் சூத்திரங்களிலும் அவ்வாறு வழு வமைதி கூறுவனவாற்றானு மறிந்துகொள்க. புறத்திணைவழு ஏழாவன:- வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்னுந் திணையேழும் பற்றி வருவன. அவற்றைப் பொதுவியற் கரந்தைப் பகுதி கூறும் சூத்திர வுரையா னுணர்ந்துகொள்க. உணருங்கால் மாவரும் புகழ் ... ... .. மலைந்த பூவும் என்பதும், ஓடாக் கழனிலை என்பதும், பிள்ளையாட்டும் வாகை வழுவாம். உன்னநிலை, வஞ்சி, உழிஞை தும்பைக்குரியது. பூவைநிலை பாடாண்டிணைக்குரியது. ஆ பெயர்த்துத் தரல் வெட்சிக்குரியது. பாணர் முதலியோர் கையற்றுக் கூறல் காஞ்சிக்குரியது. தன்னுறு தொழிலாய் வரு மிடத்து இவைவழுவா மென்க.

2. திணைதொறு மரீஇய பெயர் ஆவன - நில மக்கள் பெயர். திணைநிலைப் பெயராவன - தலை மக்கள் பெயர். இவற்றை 20ம் சூத்திர உரைநோக்கியறிக. இருவகைக் கைகோள் - களவு கற்பு என்பன. பன்னிருவகைக் கூற்று இவை யென்பதைச் செய்யுளியல் 189ம் 190ம் சூத்திரங்களை நோக்கியறிக. பத்து

*இனி, இவ்வோத்து, அகத்திணைக்கெல்லாம் பொது இலக்கணமுணர்த்துதலின் அகத்திணை யியலென்னும் பெயர்த்தாயிற்று. என்னை? எழுவகை அகத்திணையுள் [1]உரிமைவகையான் நிலம் பெறுவன இவை யெனவும் அந்நிலத்திடைப் பொதுவகையான் நிகழ்வன கைக்கிளை பெருந்திணை பாலை யெனவுங் கூறலானும், அவற்றுட் பாலைத்திணை நிலவகையான் நடுவண தெனப்பட்டு [2]நால்வகையொழுக்கம் நிகழாநின்றுழி அந்நான் கனுள்ளும் பிரிதற் பொருட்டாய்த் தான் [3]பொதுவாய் நிற்குமெனக் கூறலானும், முதல் கரு உரிப்பொருளும் உவமங்களும் மரபும் பொதுவகையாற் கூறப்படுதலானும், பிறவும் இன்னோரன்ன பொதுப் பொருண்மைகள் கூறலானு மென்பது. இங்ஙனம் ஓதிய அகத்திணைக்குச் சிறப்பிலக்கணம் ஏனை ஓத்துக்களாற் கூறுப.*

*ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர் பொருளாதலின் அதனை* **அகம்** *என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஒரு ஆகுபெயராம்.*

*[4] இதனை ஒழிந்தன ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லார்க்குந் துய்த்துணரப்படுதலானும், இவை இவ்வாறிருந்த தெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், அவை புறமெனவே படும்.*

---

வகைக் கேடபோராவார் கூற்றுக்குரியோருள் தலைவன் தலைவி யொழிந்த பதின்மருமாவர். எண்வகை மெய்ப்பாடு இவை என்பதை மெய்ப்பாட்டியல் 3ம் சூத்திர நோக்கியறிக. நால்வகை உவமம் இவை என்பதை உவம இயல் 1ம் சூத்திர நோக்கியறிக. ஐவகை மரபாவன: இருதிணைக்கும் பொதுவாகிய இளமை ஆண் பெண் பற்றிய மரபும், உயர்திணை நான்கு சாதியும் பற்றிய மரபும், அஃறிணைப் புல்லு மரனும் பற்றிய மரபும், அவை பற்றிவரு முலகியன் மரபும், நூன்மரபு மென இவை.

1. உரிமை வகையான் நிலம் பெறுவன, குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பன.
2. நால்வகையொழுக்கம் - புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல்.
3. பிரிவு, புணர்ந்தபின்பே நிகழ்தலானும், பின்வரும் புணர்ச்சிக்குக் காரணமாதலானும், பிரிவே இருத்தற்கும் இரங்கற்கும் காரணமாதலானும், பரத்தை வயிற்பிரிவு ஊடற்குக் காரணமாதலானும் பொதுவாய் நிற்குமென்றார்.
4. இதனை ஒழிந்தன என்றது இன்பமொழிந்த அறம் பொருள் வீடு என்பவற்றை.

இன்பமேயன்றித் துன்பமும் அகத்தே நிகழுமாறெனின், அதுவுங் காமங் [1]கண்ணிற்றேல் இன்பத்துள் அடங்கும். [2]ஒழிந்த துன்பம் புறத்தார்க்குப் புலனாகாமை மறைக்கப்படாமையிற் புறத் திணைப்பாலதாம். காமநிலையின்மையான் வருந்துன்பமும் 'தாபதநிலை' 'தபுதாரநிலை' (79) யென வேறாம்.

திணையாவது ஒழுக்கம்; இயல் - இலக்கணம்; எனவே அகத்திணையிய லென்றது இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக் கணமென்றவாறாயிற்று.

இவ் வோத்துக்கள் ஒன்றற்கொன்று இயைபுடைமை அவ்வவ்வோத்துக்களுட் கூறுதும்.

இனி, இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், கூறக்கருதிய பொருளெல்லாம் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** கைக்கிளை முதலா - கைக்கிளை யெனப் பட்ட ஒழுக்கம் முதலாக, பெருந்திணை இறுவாய் - பெருந் திணை யென்னும் ஒழுக்கத்தினை இறுதியாகவுடைய ஏழனை யும், முற்படக்கிளந்த எழுதிணை யென்ப - முற்படக் கூறப்பட்ட அகத்திணை யேழென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

எனவே, பிற்படக்கூறப்பட்ட புறத்திணையும் ஏழுள வென்ற வாறாயிற்று. எனவே, இப் பதினான்குமல்லது வேறு பொருளின் றென வரையறுத்தாராயிற்று.[3] அகப்புறமும் அவைதம்முட் பகுதியாயிற்று. முதலும் ஈறுங் கூறித் திணை யேழெனவே, 'நடுவண் ஐந்திணை' உளவாதல் பெறுதும். அவை மேற்கூறுப.

[4]கைக்கிளை யென்பது ஒரு மருங்குபற்றிய கேண்மை. இஃது ஏழாவதன் தொகை. எனவே ஒருதலைக் காமமாயிற்று.

---

1. கண்ணல் - கருதல்.
2. ஒழிந்த துன்பம் - காமங்கருதாத துன்பம்.
3. அகப்புறம், அகனைந்திணையல்லாக் கைக்கிளையும் பெருந்திணையும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. 54ம் சூத்திர உரை நோக்கியறிக. இனிப் பாங்கன் இடை நின்று புணர்க்கும் எண்வகை மணத்தினும் முன்னைய மூன்றும் பெறுங் கைக்கிளையும் பின்னர் நான்கும் பெறும பெருந்திணையும் காந்தருவம் பெறும் ஐந்திணையும் ஆகிய அவையும் அகப்புறமாம். களவியல் 12ம் சூத்திர உரை நோக்கியறிக.
4. கைக்கிளை - ஒருமருங்குபற்றிய கேண்மை. கை - பக்கம், மருங்கு. கிளை - உறவு, கேண்மை. இது கைக்கட்டோன்றுங் கிளை என விரிதலின் ஏழாவதன் தொகை என்றார். சிறிய உறவு என்பர் இளம்பூரணர்.

எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாதலிற் [1]பெருந்திணை யாயிற்று. என்னை? எண்வகை மணத்தினுள்ளுங் கைக்கிளை, முதல் ஆறு திணையும் நான்கு மணம்பெற, தாளொன்றுமே நான்கு மணம் பெற்று நடத்தலின். [2]பெருந்திணையிறுவாய் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

முற்படக் கிளந்தவென எடுத்தலோசையாற் கூறவே, பிற்படக் கிளந்த எழுதிணை உளவாயிற்று. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை என வரும். ஒழிந் தோர் பன்னிரண் டென்றாராதலிற் புறத்திணை யேழென்ற தென்னையெனின் அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறு போல, அகத்திணை யேழற்கும் புறத்திணை யேழென்றலே பொருத்த முடைத்தாயிற்று. எனவே, அகத்திணைக்குப் புறத்திணை அவ்வந்நிலத்து மக்கள் வகையாற் பிறந்த செய்கை வேற்றுமையாதலின், ஒன்றொன்றற்கு இன்றி யமையாவாறாயிற்று. கரந்தை அவ்வேழற்கும் பொதுவாகிய வழுவாதலின் வேறுதிணையாகாது.

[3] எண்வகைமணனும் எதிர் சென்று கூறுவதாகலானும், காமஞ்சாலா விளமைப்பருவம் அதன் கண்ணதாகலானுங் கைக்கிளையை முற்கூறினார்.

என்பவென்றது அகத்தியனாரை; இக்குறியீடுகளும் அகத் தியனாரிட்டவென்றுணர்க. (1)

---

1. பெருந்திணை - பெருமையாகிய திணை என்பர் இளம்பூரணர். இதனை மங்கலமொழி என்பாருமுளர்.

2. பெருந்திணை இறுவாய் என்பது பெருந்திணையாகிய இறுவாய்க்கண் (இறுதிக்கண்) உள்ளது என விரிதலின் பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்றார். உரையொடு மாறுபடலின் இது ஆராயத்தக்கது.

3. எண்வகை மணத்தினும் எதிர்சென்று கூறுவது கைக்கிளையாதலானும், காமஞ்சாலா இளமைப்பருவம் அக் கைக்கிளைக் கண்ணதாதலானும் கைக்கிளை முற்கூறப்பட்ட தென்றபடி. எதிர் சென்று கூறலைத், தலைவன் மட்டுமன்றி அவன் கருத்தின்படி எதிர் சென்று மணம்பேசுவார்கண்ணுங் கொள்க. கொள்ளவே எண்வகை மணத்தினும் எதிர்சென்று கூறல் கைக் கிளையாதல் பெறப்படும். "பாங்க னிமித்தம் பன்னிரண் டென்ப" (கஅ0) என்னுஞ் சூத்திரவுரையானும் இக்கருத்துப் பெறப்படும். கூறுவது கூறப்படு வது என்றுகொண்டு மணத்தை அதனொடு முடிப்பினு மமையும்.

(எழுவகைத் திணையுள் தமக்கென நிலம்பெறுவனவும்
பெறாதனவுங் கூறல்)

2. அவற்றுள்,
நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே

இது முற்கூறிய ஏழனுள் தமக்கென நிலம் பெறுவனவும் நிலம் பெறாதனவுங் கூறுகின்றது.

இ — ள்: அவற்றுள் - முற்கூறிய ஏழு திணையுள், நடுவண் ஐந்திணை - கைக்கிளை பெருந்திணைக்கு நடுவுநின்ற ஐந்தொழுக் கத்தினை, படுதிரை வையம் பாத்திய பண்பே - ஒலிக்குந் திரை சூழ்ந்த உலகிற்கு ஆசிரியன் பகுத்துக் கொடுத்த இலக்கணத்தை, நடுவணது ஒழிய - நடுவணதாகிய பாலையை அவ்வுலகம் பெறாதே நிற்கும்படியாகச் செய்தார் என்றவாறு.

எனவே, யானும் அவ்வாறே நூல் செய்வலென்றார்.

உலகத்தைப் படைக்கின்ற காலத்துக் காடும் மலையும் நாடுங் கடற்கரையுமாகப் படைத்த நால்வகைநிலத்திற்கு ஆசிரியன் தான் படைத்த ஐவகை ஒழுக்கத்திற் பாலை யொழிந்தனவற் றைப் பகுத்துக் கொடுத்தான், அப்பாலை ஏனையபோல ஒரு பாற்படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கஞ் செய்து வருதல் பற்றி. பாலைக்கு நடுவணதென்னும் பெயர் ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெற்ற பெயர். 'நடுவு நிலைத் திணையை நண்பகல் வேனில்'(9) என ஆள்ப. [1]புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவற்றிற்கு இடையே பிரிவு நிகழ்தலானும், நால்வகை யுலகத்திற் கிடையிடையே,

முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் (சிலப். காடு. 64–66)

என முதற்பொருள் பற்றிப் பாலை நிகழ்தலானும், நடுவண தாகிய நண்பகற்காலந் தனக்குக் காலமாகலானும், புணர்தற்கும் இருத்தற்கும் இடையே பிரிவு வைத்தலானும், உலகியற் பொரு

1. புணர்ச்சிப் பின் பிரிவு நிகழ்தலானும், பிரிவின்பின் ஏனை மூன்றும் நிகழுத லானும் இடையே நிகழ்தல் என்றார்.

ளாகிய அறம்பொரு ளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத் தான் காரணமாகலானும், [1] நடுவணதெனக் குணங் காரணமாயிற்று.

பாயிரத்துள் எல்லை கூறியதன்றி [2]ஈண்டும் எல்லை கூறி னார், புறநாட்டிருந்து தமிழ்ச்செய்யுள் செய்வார்க்கும் இதுவே இலக்கணமா மென்றற்கு.

இவ்விலக்கணம் மக்கள் நுதலிய அகனைந்திணைக்கே யாதலின் இன்பமே நிகழுந் தேவர்க்காகா.

காமப் பகுதி கடவுளும் வரையார் (தொல். பொருள். 83)

என்பது புறம்.

நடுவணாற்றிணை யென்னாது ஐந்திணையென்றார், பாலை யும் அவற்றோடொப்பச் சேறற்கு. இத் திணையை மூன்றாக மேற்பகுப்பர். (2)

**(நடுவணைந்திணைப் பகுப்பு இவை எனல்)**

3. முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை

இது நடுவணைந்திணையைப் பகுக்கின்றது.

இ – ள்: பாடலுள் பயின்றவை நாடும் காலை - புலனெறி வழக்கிடைப் பயின்ற பொருட்களை ஆராயுங் காலத்து, முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே - முதலுங் கருவும் உரிப் பொருளும் என்ற மூன்றேயாம், நுவலுங் காலை முறை சிறந் தனவே - அவை தாம் செய்யுட் செய்யுங்கால் [3]அன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடைய என்றவாறு.

இங்ஙனம் பாடலுட் பயின்றபொருள் மூன்றெனவே, இம் மூன்றும் புறத்திணைக்கும் உரிய வென்பது பெறுதும். அது புறத்திணைச் சூத்திரங்களுள், 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' (56) என்பன முதலியவற்றாற் கூறுப.

---

1. வேறு காரணங் கூறுவர் சிவஞான முனிவர். இதனை, தொல் ... சூத்திரவிருத்தி நோக்கியறிக.

2. ஈண்டும் எல்லை கூறினார் என்றது படுதிரைவையம் என்று வையத்திற்குப் படுதிரையை எல்லையாகக் கூறினமையை.

3. ஒன்று ஒன்றனிற் சிறந்துவருதல் என்றது, முதலிற் கருவும், கருவில் உரியும் சிறந்துவருதலை.

முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளுஞ் சிறந்து வரும். இம்மூன்றும் பாடலுட் பயின்றுவருமெனவே வழக்கினுள் வேறு வேறு வருவதன்றி ஒருங்கு நிகழாவென்பதூஉம், நாடுங்காலை யெனவே புலனெறிவழக்கிற் பயின்றவாற்றான் இம் மூன்றனை யும் வரையறுத்துக் கூறுவதன்றி வழக்குநோக்கி இலக்கணங் கூறப்படாதென்பதூஉம் பெறுதும், 'நல்லுலகத்து, வழக்குஞ் செய் யுளு மாயிரு முதலின்' (தொல். பாயிரம்) என்று புகுந்தமையிற் பொருளும் அவ்விரண்டினானும் ஆராய்தல் வேண்டுதலின்.

[1] இஃது இல்லதெனப்படாது உலகியலேயாம். உலகியலின் றேல், ஆகாயப் பூ நாறிற்றென்றவழி அது சூடக் கருதுவாரு மின்றி மயங்கக் கூறினானென்று உலகம் இழித்திடப்படுதலின் இதுவும் இழித்திடப்படும். இச் செய்யுள் வழக்கினை [2]நாடக வழக்கென மேற்கூறினார், எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தன் முதலாகப் புனைந்துரை வகையாற் கூறும் [3]நாடக இலக்கணம் போல [4]யாதானு மொரோவழி ஒருசாரார்மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமுங் காலமும் நியமித்துச் செய்யுட் செய்தல் ஒப்புமை நோக்கி. மற்று இல்லோன் தலைவனாக இல்லது புணர்க்கும் நாடகவழக்குப்போல ஈண்டுக் கொள்ளாமை, 'நாடகவழக்கு' என்னுஞ் சூத்திரத்துட் (53) கூறுதும்,

> **கணங்கொ ளருவிக் [5]கான்கெழு நாடன்**
> **[6]குறும்பொறை நாட னல் [7]வய லூரன்**

---

1. இஃது - இப் புலனெறிவழக்கு. இதனை இல்லதெனக் கூறுவார் களவியலுரை காரர்.
2. நாடகவழக்கென மேற்கூறினார் என்றது "நாடகவழக்கினும்" என 53ம் சூத்திரத்துட் கூறியதை.
3. நாடக இலக்கணம் நான்குவகைத்து அவையாவன: உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தல், உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல், இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தல், இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தல் என்பன.
4. யாதானும் ஒரோவழி ஒருசாரார்மாட்டு உலகியலின் நிகழும் ஒழுக்க மென் றது களவொழுக்கத்தை. அது உள்ளது. அதனை எல்லார்க்கும் பொதுவாக் கினமையும் அதற்கு இடமும் காலமும் நியமித்ததும் செய்யுள் வழக்கு.
5. கான்கெழுநாடு - முல்லைநிலத்து நாடு.
6. குறும்பொறைநாடு - மலைநாடு, குறிஞ்சி.
7. வயல் ஊர் - மருதநிலத்தூர்.

தெண்[1] கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்புங்
காலை வரினுங் களைஞரோ விலரே. (ஐங்குறு. 183)

என இவ் வைங்குறுநூற்றுள் [2]இடம் நியமித்துக் கூறியது செய்யுள் வழக்கு.

இனி, அவை முறையே சிறந்துவருமாறு:-

முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரிந் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறங் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர
னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறத்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி னாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே (அகம். 4)

இது [3]குறித்த காலம் வந்தது, அவரும் வந்தாரென ஆற்றுவித்தது.

---

1. கடற்சேர்ப்பு - கடற்கரை. முன்வந்த கான்கெழுநாடன் முதலிய பெயர்கள் சேர்ப்பனை விசேடித்து இத்தலைவன் நானிலத்துக்கும் தலைவன் என்பதைக் காட்டிநின்றன. இத்தலைவன் ஒரு மன்னன்போலும்.

2. இடநியமித்தது என்றது, புலனெறிவழக்கமாகிய களவு கற்பொழுக்கங்கட்கு ஐந்நிலமும் இடமென இடநியமித்தது என்றபடி. மேல் புலனெறிவழக்கமாகிய களவொழுக்கத்தை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமும் காலமுநியமித்துச் செய்யுள் செய்தல் என்பதில் இடநியமித்துச் செய்யுள் செய்ததற்கு இது உதாரணமாகக் காட்டப்பட்டது. இச்செய்யுளை எடுத்துக் காட்டியது இதன் கண் நானிலமும் பகுத்துக் காட்டியிருத்தல் பற்றியேயாம். இச்செய்யுளில் நியமிக்கப்பட்ட நிலம் பிரிவிற்குரிய பாலையாயினும், நானிலமுங் கூறலின் அவற்றோடு அவற்றின் றிரிபாகிய பாலையுஞ் சேர்ந்து ஐந்நிலமும் ஐந்திணைக்கு மிடமேயாம் என்க.

3. குறித்தகாலம் - தலைவன் தான் வருவதாகக் குறித்த காலம். அது கார் என்பது இச்செய்யுளா லறியப்பட்டது.

[1]*இக் களிற்றியானை நிரையுள், முல்லைக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.*

கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு
முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த
வாணிற வுருவி னொளி றுபு மின்னிப்
பரூஉவுறைப் பஃறுளி சிதறிவா னவின்று
பெருவரை நளிர்சிமை யதிரவட் டித்துப்
புயலே றுரைஇய வியலிரு ணடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்
றடைஇத் திரண்டநின் றோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயு
மிருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்
பெருமலை விடரகம் வரவரி தென்னாய்
வரலெளி தாக வெண்ணுதி யதனா
னுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
தண்ணிது கமழு நின்மார் பொருநா
ளடைய முயங்கே மாயின் யாமும்
விறலிழை நெகிழச் சாஅய்து மதுவே
யன்னை யறியினு மறிக வலர்வா
யம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க
வண்டிறை கொண்ட வெருமரு டோன்றியொ
டொண்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே. (அகம். 218)

*இஃது இடத்துய்த்துப் பகற்குறி நேர்ந்த வாய்ப்பாட்டான் வரைவுகடாயது.* [2]*இம் மணிமிடை பவளத்துள், குறிஞ்சிக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.*

---

1. களிற்றியானைநிரை - அகநானூற்றின் பிரிவுகளு ளொருபகுதி. அப்பகுதியுள் ஒரு செய்யுள் இச்செய்யுளாதலின் இக்களிற்றியானை நிரை என்றார். இதனுள் கானம் என நிலமும், கார் எனக் காலமுமாகிய முதற் பொருளும் முல்லை, (இல்லம்-) தேற்றா, கொன்றைமான் எனக் கருப் பொருள்களும் வந்தமை காண்க. இருத்தல் உரிப் பொருள்.

2. இம் மணிமிடை பவளம் என்றது மணிமிடை பவளத்திலுள்ள செய்யுளை. மணிமிடைபவளமும் அகநானூற்றினோர்பிரிவு. இச் செய்யுளுள், களிறும், புலியும், ஆரமும், தோன்றியும், வேங்கையும் குறிஞ்சிக் கருப்பொருள்கள். மலைசார்ந்த நிலமும், கூதிரும், இடையாமமும் முதற்பொருள்கள். மின்னிப் பஃறுளி சிதறி உரைஇய நடுநாள் எனவே கூதிரும் இடையாமமும் பெறப் படும். புணர்ச்சி உரிப்பொருள்.

வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ
லுருவக் குதிரை மழவ ரோட்டிய
முருக னற்போர் நெடுவே ளாவி
யறுகோட் டியானைப் பொதினி யாங்கட்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியல மென்ற சொற்றா
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோண் ஞெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி
னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய்
பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி
னுகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச்
சுரம்புல் லென்ற வாற்ற வலங்குசினை
நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்
றுடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே. (அகம். 1)

*இது பிரிவிடையாற்றாது தோழிக்குக் கூறியது. [1]இக் களிற்றி யானை நிரையுள், பாலைக்கு முதலும் கருவும் வந்து உரிப் பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.*

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறரு மொருத்தியை யெம்மனைத் தந்து
வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யிருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்
மொண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே. (அகம்46)

*இது வாயின் மறுத்தது.*

---

1. இதனுள், நிலம்பக அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலையுடைய காடு என்றமையானும் பிறவாற்றானும் நிலம் பாலைநிலம் என்பதும் காலம் வேனில் என்பதும் பெறப்படுமாகலின் அந்நிலமும், அக்காலமும் முதற் பொருளாகும். அறுநீர்ச்சுனை முருங்கை முதலியன கருப்பொருளாகும். உரிப்பொருள் - பிரிவு.

[1] இக் களிற்றியானை நிரையுள், மருதத்திற்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது. 'வண்டூது பனி மலர்' எனவே வைகறையும் வந்தது.

கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடும்பை சேர
வசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தரமை தளரத் தூக்கி மாலை
யழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்துநம் மருளா ராயினு
மறாஅ லியரோ வவருடைக் கேண்மை
யளியின் மையினவ ணுறைவு முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெல் லரிஞர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ணாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
யகமடற் சேக்குந் துறைவ
னின்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே. (அகம். 40)

இது பொருட்பிரிவிடைத் தோழிக்கு உரைத்தது. [2] இக் களிற்றி யானை நிரையுள், நெய்தற்கு முதலுங் கருவும் வந்து உரிப் பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது. [3] இச் சிறப்பானே முதலின்றிக் கருவும் உரிப்பொருளும் பெறுவனவும், முதலுங் கருவுமின்றி உரிப்பொருளே பெறுவனவுங் கொள்க.

திருநகர் விளங்கு மாசில் கற்பி
னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை யெவனோ முல்லை

---

1. இதனுள் பழனம் என்றும், ஊரன் என்றுங் கூறலானே நிலம் மருதம் என்பதும், வண்டூது பனிமலர் என்றதனாலே வைகறையும் பெறப்படுமாகலின், அந்நிலமும் அக்காலமும் முதற்பொருளாகும். காரானும், வள்ளையும், தாமரையும் கருப்பொருள்கள். உரிப்பொருள் - ஊடல்.

2. இதனுள் கடல்பாடெழுந் தொலிப்ப என்றதனானும், துறைவன் என்றமை யானும் நிலம் நெய்தல் என்பதும், மாலை என்றமையானே காலமும் பெறப் படுமாதலின், அந்நிலமும் அக்காலமும் முதற் பொருள்களாகும். கழிப்பூ, மீன், குருகு, புன்னை என்பன கருப்பொருள்கள். உரிப்பொருள் - இரங்கல்.

3. இச்சிறப்பு என்றது, முதலிற் கருவும், கருவின் உரிப்பொருளுஞ் சிறந் தமையை.

யிரும்பல் கூந்த னாற்றமு
முருந்தேர் வெண்ப லொளியுநீ பெறவே.

*இது பொருள்வயிற் பிரிந்தோன் சுரத்து நினைந்து உரைத்தது.* [1] *இது முதற்பொருளின்றி வந்த முல்லை.*

கரந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
யிளைய ரேவ வியங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தனர்நங் காத லோரே.

*இது வந்தாரென் றாற்றுவித்தது.* [2] *இது முதலுங் கருவுமின்றி வந்த முல்லை.*

நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற் – பிறையெதிர்ந்த
தாமரை போன்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன வீண்டு. (திணைமாலை. 1)

*இது மதியுடம்படுத்தது.* [3] *இது முதற்பொருளின்றி வந்த குறிஞ்சி.*

முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலைய னொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.

*இஃது இளையள் விளைவிலளென்றது. முதலுங் கருவு மின்றி வந்த குறிஞ்சி. இது நாணநாட்டம்.*

நாளு நாளு மாள்வினை யழுங்க
வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழென
வொண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே.

*இது வற்புறுத்தாற்றியது.* [5] *இஃது உரிப்பொருளொன்றுமே வந்த பாலை.*

---

1. இதனுள், முல்லை கருவும், இருத்தல் உரிப்பொருளுமாம். இருத்தனிமித்த மும் இருத்தலுளடங்கும். கச-ம் சூத்திர உரைநோக்குக.
2. இதனுள் உரிப்பொருள் - இருத்தல்.
3. இதனுள், சாந்தம் ஏனல் கருப்பொருள். உரிப்பொருள் - புணர்ச்சி.
4. இதனுள் உரிப்பொருள் - புணர்ச்சி. முலையும் வாரா என்றமையான் இளையள் விளைவிலள் என்றதாயிற்று.
5. இதனுள் உரிப்பொருள் - பிரிவு.

**பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை**
**முன்னும் பின்னு மாகி**
**யின்னும் பாண னெம்வயி னானே.**

*இது வாயின் மறுத்தது.* [1] *இஃது உரிப்பொருளொன்றுமே வந்த மருதம்.*

**அங்கண் மதிய மரவின்பாய்ப் பட்டெனப்**
**பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி**
**யேதின் மாக்களு நோவர் தோழி**
**யென்று நோவா ரில்லைத்**
**தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே.**

*இது கழிபடர்;* [2] *இது பெயரானும் உரிப்பொருளானும் நெய்தலாயிற்று.*

*இங்ஙனங் கூறவே, உரிப்பொருளின்றேற் பொருட்* [3]*பயமின் றென்பது பெற்றாம். இதனானே முதல் கரு வுரிப்பொருள் கொண்டே வருவது திணையாயிற்று. இவை, பாடலுட் பயின்ற வழக்கே இலக்கணமாதலின், இயற்கையாம். அல்லாத சிறு பான்மை வழக்கினைச்* [4] *செயற்கையென மேற்பகுப்பர். (3)*

**(முதல் இன்னது என்பதும் அதன் பகுப்பும் உணர்த்தல்)**

**4.** முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி
னியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே.

*இது நிறுத்த முறையானே முதல் உணர்த்துவான் அதன் பகுதியும் அவற்றுட் சிறப்புடையனவும் இல்லனவுங் கூறுகின்றது.*

*இ — ள்:* *முதல் எனப்படுவது - முதலென்று சிறப்பித்துக் கூறப்படுவது, நிலம் பொழுது இரண்டின் இயல்பு என மொழிப - நிலனும் பொழுதும் என்னும் இரண்டினது இயற்கை நிலனும் இயற்கைப் பொழுதுமென்று கூறுப, இயல்பு உணர்ந்தோரே - இடமுங் காலமும் இயல்பாக உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.*

---

1. இதனுள் உரிப்பொருள் - ஊடல்.
2. பெயரானும் என்றது, கடற்சேர்ப்பன் என்ற பெயரை. அதனானும் நிலம் நெய்தல் என்பது பெறப்படும் என்றபடி. உரிப்பொருள் - இரங்கல்.
3. பயம் - பயன்.
4. செயற்கை என்றது செயற்கை நில முதலியவற்றை. அவற்றை வருஞ் சூத்திரங்களானறிக.

இயற்கையெனவே செயற்கை நிலனுஞ் செயற்கைப் பொழுதும் உளவாயிற்று. மேற் 'பாத்திய' (2) நான்குநிலனும் இயற்கை நிலனாம். ஐந்திணைக்கு வகுத்த பொழுதெல்லாம் இயற்கையாம். [1]செயற்கை நிலனும் பொழுதும் முன்னர் அறியப்படும். முதல் இயற்கைய வென்றதனாற் [2]கருப்பொருளும் உரிப்பொருளும் இயற்கையுஞ் செயற்கையுமாகிய சிறப்புஞ் சிறப்பின்மையும் உடையவாய்ச் சிறுவரவினவென மயக்கவகையாற் கூறுமாறு மேலே கொள்க. இனி நிலத்தொடு காலத்தினையு முதலென்றலிற் காலம் பெற்று நிலம் பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக அக் காலத்து நிகழும் கருப்பொருளுங் கொள்க. அது முன்னர்க் காட்டிய உதாரணத்துட் காண்க. (4)

**(நிலப்பகுப்பு இவை எனல்)**

**5. மாயோன் மேய காடுறை யுலகமுஞ்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.**

இது 'நடுவணது' (2) ஒழிந்த நான்கானும் அவ் 'வைய'த்தைப் பகுக்கின்றது.

**இ – ள்:** மாயோன் மேய காடுறை யுலகமும் - கடல்வண்ணன் காதலித்த காடுறை யுலகமும், **சேயோன் மேய மைவரை யுலகமும்** - [3]செங்கேழ் முருகன் காதலித்த வான்தங்கிய வரை சூழுலகமும், **வேந்தன் மேய தீம்புனல் உலகமும்** - இந்திரன் காதலித்த தண்புனனாடும், **வருணன் மேய பெருமணல் உலகமும்** - கருங்கடற் கடவுள் காதலித்த நெடுங் [4]கோட் டெக்கர் நிலனும்,

---

1. செயற்கை நிலன் - பாலை. கூ-ம் சூத்திர உரை நோக்குக. கைக்கிளை பெருந்திணைகளும் நான்கு நிலத்தும் வரலின் அவைக்குரிய நிலமும் செயற்கையாம். செயற்கைப்பொழுது - மயங்கிவரும்பொழுது. கஉ-ம் சூத்திரவுரை நோக்குக.

2. கருப்பொருளும் உரிப்பொருளும் மயங்கற்கு விதியை முறையே சாகூ-ம், கஉ-ம் சூத்திரங்களை நோக்கியறிக.

3. செங்கேழ் - செந்நிறம். சேயோன் - செந்நிறமுடையவன்

4. கோடு - கரை. எக்கர் - மணற்குவியல்.

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய முறையால் சொல்லவும்படுமே - முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என ஒழுக்கம் கூறிய முறையானே சொல்லவும்படும் என்றவாறு.

இந் நான்கு பெயரும் எண்ணும்மையோடு நின்று எழுவாயாகி, 'சொல்லவும்படும்' என்னுந் தொழிற் பயனிலை கொண்டன. என்றது [1]இவ் வொழுக்கம் நான்கானும் அந்நான்கு நிலத்தையும் நிரனிறை வகையாற் பெயர் கூறப்படு மென்றவாறு. எனவே, [2]ஒழுக்கம் நிகழ்தற்கு நிலம் இடனாயிற்று.

[3] உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்லவும்படும் என்பது பொருளாயிற்று. இது [4]**தொகைகளினுங்** [5]**கீழ்க் கணக்குகளினும்** இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க.

முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன் தருதற்கு மாயோன் [6]ஆகுதிபயக்கும் ஆபல காக்கவெனக் குரவைதழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படு மென்றார்.

உதாரணம்: 'அரைசுபடக் கடந்தட்டு' என்னு முல்லைக் கலியுள்,

> பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
> வாடுகொ [7] ணேமியாற் பரவுதும் (கலி. 105)

என வரும்.

> படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
> பாலொடு கோட்டம் புகின் (கலி. 109)

என அவன் மகனாகிய காமனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் 'அவ்வகை பிறவுங் கருவென மொழிப' (18) என்புழி வகை யென்றதனாற் கொள்க.

---

1. இவை நான்கென்றது முல்லை முதலிய நான்கையும்.
2. முல்லை முதலிய ஒழுக்கம் நிகழ்தற்குக் காடுறையுலக முதலியன இடம் ஆயிற்று என்பது கருத்து.
3. உம்மை - சொல்லவும்படும் என்றதிலுள்ள உம்மை. இம்முறைமாறி நடத்தலாவது முல்லை முதலாகச் சொல்லப்பட்ட முறை மாறி வழங்கல்.
4. தொகை - தொகைநூல். அவை எட்டுத்தொகை எனப்படும்.
5. கீழ்க்கணக்கு - பதினெண்கீழ்க்கணக்கு.
6. ஆகுதி - ஆகுதிக்குரிய பாலும் நெய்யும். தருதற்குக் கொடுத்தலின் என இயைக்க.
7. நேமியான் - திருமால்.

இனி, குறிஞ்சி நிலத்திற்குக் குறவர் முதலியோர் குழீஇ வெறியயர்தற்கு வேண்டும் பொருள் கொண்டு வெறியயர்பவாக லின், ஆண்டு முருகன் வெளிப்படு மென்றார்.

அது, 'அணங்குடை நெடுவரை' என்னும் அகப்பாட்டினுள்,

படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடு [1]வேட் பேணத் தணிகுவ ளிவள் (அகம். 22)

என வரும். 'சூரரமகளிரொ டுற்றசூளே' என்புழிச் சூரரமகளிர் அதன் வகை.

இனி ஊடலுங் கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தற்கு மருதநிலத்திற்குத் [2]தெய்வமாக, 'ஆடலும் பாடலு மூடலுமுணர் தலும்' உள்ளிட்ட இன்ப விளையாட்டு இனிது நுகரும் இமை யோர்க்கும் இன்குர லெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் விழவு செய்து அழைத்தலின் அவன் வெளிப் படுமென்றார்.

அது,

வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்தமை
தெய்வத்திற் றேற்றித் தெளிக்கு (கலி. 98)

என இந்திரனைத் தெய்வமென்றதனானும், இந்திரவிழவூரெடுத்த காதையானும் உணர்க.

இனி நெய்தனிலத்தில் நுளையர்க்கு வலைவளந் தப்பின் அம் மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக் கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தலின், ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார்.

அவை,

சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான் (பட்டின. 86 – 87)

எனவும்,

கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கி (அகம். 110)

எனவும்,

அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமொ டயரும் (அகம். 240)

எனவும் வரும்.

---

1. வேள் - முருகன்
2. தெய்வமாக அழைத்தலின் என முடியும்.

இனிப் பாலைக்கு,

**சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்**
**கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ** **(கலி. 16)**

எனவும்,

**வளிதரு செல்வனை வாழ்த்தவு மியைவதோ** **(கலி. 16)**

எனவும் ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற்றோன்றிய மழை யினையும் காற்றினையும் அத் தெய்வப் பகுதியாக்கிக் கூறுபவா லெனின், எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவி கொடுக்குங் கால் [1]அங்கி ஆதித்தன்கட் கொடுக்கு மென்பது வேதமுடிபாக லின், ஆதித்தன் அவ் வெல்லா நிலத்திற்கும் பொதுவென மறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய்வத்தினை முதற் பொரு ளோடு கூட்டிக் கூறியது தெய்வ வழிபாட்டு மரபு. இதுவே, ஒழிந்தது மரபன் றென்றற்கு. எனவே அவ்வந் நிலத்தின் தெய் வங்களே பாலை நிலத்திற்கும் தெய்வமாயிற்று.

உறையுலகென்றார், ஆவும் எருமையும் யாடும் இன்புறு மாற்றான் நிலைபெறும் அக்காட்டின் கடவுளென்றற்கு. மைவரை எனவே மழைவளந் தருவிக்கும் முருகவே ளென்றார். இந்திரன் யாற்றுவளனும் மழைவளனுந் தருமென்றற்குத் தீம்புனலென் றார். திரை பொருது கரை கரையாமல் எக்கர் செய்தல் கடவுட் கருத்தென்றற்குப் பெருமணலென்றார்.

இனி, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்றமுறை யென்னை யெனின், இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம்பற்றிய ஒழுக்க மாதலின் கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லை யாதலின் அது முற் கூறப்பட்டது. எனவே, முல்லை யென்ற சொற் குப் பொருள் இருத்தலாயிற்று. ‘முல்லை சான்ற முல்லையம் புறவின்’ என்பவாகலின். புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். இதற்கு உதாரணம் இறந்தது. ‘கருங்காற் குறிஞ்சி சான்றவெற் பணிந்து’ என்பது கரு. புணர்ச்சிப்பின் ஊடல் நிகழ்தலின் அதன் பின் மருதத்தை வைத்தார். ‘மருதஞ் சான்ற மருதத் தண்பணை’

---

1. அங்கி - அக்கினி. அந்தணர் கொடுக்கும் அவியை அக்கினி ஏற்று ஆதித்தன் கட் கொடுக்கும் என்க.

என்புழி மருதமென்றது ஊடியுங் கூடியும் போகம் நுகர்தலை. [1]பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின்கண் வைத்தார். நெய்தற்பறையாவது இரங்கற் பறையாதலின், நெய்தல் இரக்கமாம்.

> ஐதக லல்குள் மகளிர்
> [2]நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே (புறம். 389)

என வரும்.

இனி இவ்வாறன்றி முல்லை முதலிய [3]பூவாற் பெயர் பெற்றன இவ் வொழுக்கங்களெனின், அவ்வந் நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் அவற்றாற் பெயர் கூறலும் உரியவெனக் கடாவுவாற்கு விடையின்மை உணர்க.

இதனானே நடுவுநிலைத்திணை யொழிந்த நான்கற்கும் பெயரும் முறையுங் கூறினார். இந்நான்கும் உரிப்பொருளாதல் 'புணர்தல் பிரிதல்' (14) என்புழிக் கூறுதும். கருப்பொருளாகிய தெய்வத்தை முதற் பொருளோடு கூறியது, [4]அவை 'வந்த நிலத்தின் பயத்தவாய்' (19) மயங்குமாறுபோல மயங்காது இதுவே யென்றற்கும், கருப்பொருளுடைத் தெனப்பட்ட பாலைக்குத் தெய்வத்தை விலக்குதற்கும் என்றுணர்க.

உதாரணம் :

> வன்புலக் காட்டுநாட் டதுவே (நற்றிணை 59)

எனவும்,

> இறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
> ... கன்மிசைச் சிறுநெறி (அகம். 128)

எனவும்,

---

1. ஊடற்குக் காரணமாகிய பரத்தையிற் பிரிவும், இரங்கற்குக் காரணமாகிய ஏனைப்பிரிவும் பிரிதலளவில் ஒப்புமை யுடைமையின் மருதத்தின்பின் நெய்தலை வைத்தார் என்பார். பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின்கண் வைத்தார் என்றார். பிரிவுபற்றி நிகழும் ஊடலின் பின் பிரிவுபற்றி நிகழும் இரங்கலை வைத்தல் பொருத்த மென்பது கருத்து.

2. நெய்தல் - இரங்கற்பறை, சாப்பறை.

3. பூவாற் பெயர் பெற்றனவெனக் கூறுவார் இளம்பூரணர். முல்லை முதலிய பெயர்க்காரணம் இவை என்பதைப்பற்றி ராவ்சாகிப் வித்துவான் ஸ்ரீமத்.மு. ராகவையங்காரவர்கள் தமது பொருளதிகார ஆராய்ச்சியுட் கூறினமை மிகப் பொருத்தம். அதனை அந்நூலிற் காண்க.

4. அவை என்றது - தெய்வமல்லாத கருப்பொருளை. இது தெய்வம்.

அவ்வய னண்ணிய வளங்கே ழூரனைப்
புலத்தலுங் கூடுமோ தோழி (அகம். 26)

எனவும்,

கானலுங் கழறாது... மொழியாது (அகம். 170)

எனவும் நால்வகை யொழுக்கத்திற்கு நால்வகை நிலனும் உரிய வாயினவாறு காண்க. (5)

**(முல்லைக்குங் குறிஞ்சிக்கும் உரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும்)**

6. காரு மாலையு முல்லை குறிஞ்சி
கூதிர் யாம மென்மனார் புலவர்.

இது முதலிரண்டனுள் நிலங்கூறிக் காலங்கூறுவான் முல்லைக்குங் குறிஞ்சிக்கும் பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுஞ் கூறுதல் நுதலிற்று.

**இ – ள்:** காரும் மாலையும் முல்லை - பெரும் பொழுதினுட் கார்காலமுஞ் சிறுபொழுதினுள் அக்காலத்து மாலையும் முல்லை யெனப்படும், குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர் - பெரும் பொழுதினுட் கூதிர்காலமுஞ் சிறுபொழுதினுள் அதன் இடை யாமமும் குறிஞ்சி யெனப்படும் என்றவாறு.

முதல் கரு உரிப்பொருளென்னும் மூன்று பாலுங் கொண்டு ஓர் திணையாமென்று கூறினாரேனும் [1]ஒரு பாலினையுந் திணை யென்று அப்பெயரானே கூறினார், வந்தான் என்பது உயர்திணை என்றாற்போல. இது மேலனவற்றிற்கும் ஒக்கும். இக்காலங் கட்கு [2]விதந்து ஓர் பெயர் கூறாது வாளா கூறினார், அப்பெயர் உலக வழக்காய் அப்பொருள் உணர நிற்றலின். [3]காலவுரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்கவோரை முதலாகத் தண்மதிக்கு

---

1. பால் - பகுதி. இங்கே முதல் கரு உரி என்னு மூன்று பகுதியுள் முதற்பொரு ளாகிய ஒருபகுதிகொண்டு காருமாலையும் முல்லை என்றதே ஒரு பாலினை யுந் திணையென்றதாம். காருமாலையும் முதற்பொருள். ஆண் பெண் பலர் என்னு மூன்று பாலுங் கொண்டதே உயர்திணையாகவும் வந்தான் எனத் தனித்துவரும் ஆண்பாலினையும் உயர்திணை யென்றலும் வழக்காதல் போல இவ்வாறு கூறலும் வழக்காம் என்பார், வந்தான் என்பது உயர்திணை என்றாற்போல என்றார்.

2. விதந்து கூறல், சிறப்பாக எடுத்துக் கூறல், தெரித்துக்கூறல். வாளாகூறல், கார், கூதிர் என்றும் மாலையாமம் என்றுங் கூறல்.

3. ஞாயிற்றினுதயந் தொடங்கி மற்றைநாள் உதயம் வரைக்கும் ஒரு நாளாக வும், ஞாயிற்றினாட்சி வீடாகிய சிங்கவோரை முதல் (அதற்குரிய மற்றைச் சிங்கவோரைக்கு முன்னுள்ள) ஆடித் திங்களுக்குரிய கற்கடகவோரை வந்து

உரிய கற்கடகவோரை யீறாக வந்து முடியுந்துணை ஓர் யாண்டாமாதலின் அதனை இம்முறையானே அறுவகைப்படுத்து இரண்டு திங்கள் ஒரு காலமாக்கினார். இனி ஒரு நாளினைப் படுசுடரமையந் தொடங்கி மாலை யெனவும், அதன்பின் இடையாம மெனவும், அதன்பின் வைகறை யெனவும், அதன்பின் காலை யெனவும், அதன் பின் நண்பகலெனவும், அதன்பின் எற்பாடெனவும் ஆறாகப் பகுத்தார். அவை ஒரோவொன்று பத்து நாழிகையாக இம்முறையே சூத்திரங்களுட் சிறுபொழுது வைப்பர். பின்பனியும் நண்பகலும் பிற்கூறிய காரணம் அச்சூத்திரத்துட் கூறதும்.

முல்லைக்குக் காரும் மாலையும் உரியவாதற்குக் காரண மென்னை யெனின், பிரிந்து மீளுந் தலைவன் றிறமெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலே முல்லைப் பொருளாயும், பிரிந்து போகின்றான் திறங் கூறுவன வெல்லாம் பாலையாயும் வருதலின், அம் முல்லைப் பொருளாகிய மீட்சிக்குந் தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார் காலமாம். என்னை? வினைவயிற் பிரிந்து மீள்வோன், விரைபரித்தேரூர்ந்து பாசறையினின்று மாலைக் காலத்து ஊர்வயின் வருஉங்காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆதலின், அவை வெப்பமுந் தட்பமும் மிகாது இடை நிகர்த்தவாகி [1]ஏவல் செய்துவரும் இளையர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும், [2]ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலிற் களிசிறந்து மாவும் புள்ளுந் துணையோடின்புற்று விளையாடுவன கண்டு தலைவற்குந் தலைவிக்குங் காமக்குறிப்பு மிகுதலானு மென்பது. புல்லைமேய்ந்து கொல் [3]லேற்றோடே [4]புனிற்றாக் கன்றை நினைந்து [5]மன்றிற் புகுதரவுந் தீங்குழ லிசைப்பவும் [6]பந்தர்முல்லை வந்து மணங்கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்குங் காமக் குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப் பொழுதும் உரித்தாயிற்று.

---

முடியும்வரை ஓர்யாண்டாகவும் இவ்வாறு ஞாயிற்றைக்கொண்டே காலம் வரையறுக்கப்படலின் காலவுரிமை எய்திய ஞாயிறென்றார். சிங்கவோரை - ஆவணித்திங்கள்.

1. ஏவல் - தலைவனேவல்.
2. ஆர்பதம் - உணவு.
3. ஏறு - எருது.
4. புனிறு - ஈன்றணிமை.
5. மன்று - மரத்தடி.
6. பந்தர்முல்லை - பந்தரிற் படர்ந்தமுல்லை. பந்தராகப்படர்ந்த முல்லையுமாம்.

*இனிக் குறிஞ்சியாவது புணர்தற்பொருட்டு. அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் களவு நீட்டிப்பக் கருதுந் தலைவற்கு அக்களவினைச் சிறப்பிக் குங்கால், தலைவி [1]அரியளாக வேண்டுமாகவே அவ்வருமையை ஆக்குவது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய கூதிரும் அதன் இடை யாமமு மென்பது. என்னை? இருள் தூங்கித் துளி மிகுதலிற் சேறல் அரிதாதலானும், [2]பானாட் கங்குலிற் பரந்துடன் வழங் காது மாவும் புள்ளுந் துணையுடன் இன்புற்று வதிதலிற் காமக் குறிப்புக்கழியப் பெருகுதலானும், காவன்மிகுதி நோக்காது வருந் தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின் இந் நிலத்திற்குக் கூதிர்காலஞ் சிறந்ததெனப்படும்.*

*உதாரணம் :*

விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் றீம்பெயற்
காரு மார்கலி தலையின்று தேரு
மோவத் தன்ன கோபச் செந்நிலம்
வள்வா யாழி யுள்ளுறு புருளக்
கடவிக் காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயங்
கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனைமனைப் படரு நனைநகு மாலைத்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்கா னெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி
முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மக னெற்றி
வருகுவை யாயிற் றருகுவென் பாலென
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குலெங் காதலி
புதல்வர்ப் பொய்க்கும் பூங்கொடி நிலையே. (அகம். 54)

*இது பாகற்குரைத்தது. [3] இது முல்லைக்கட் காரும் மாலையும் வந்தது.*

---

1. அரியள் - அரிதாகப் பெறற்குரியவள்.
2. பானாட்கங்குல் இடையாமம். பால்நாள் - பாதிநாள்.
3. இதனுள் தீம்பெயற் காரு மார்கலிதலையின்று என்றதனால் கார்காலம் என்பது பெறப்பட்டது. நனைநகுமாலை என்றதனால் மாலை என்பது பெறப்பட்டது.

மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோடின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
யெவன்கொல் வாழி தோழி மயங்கி
யின்ன மாகவு நன்னர் நெஞ்ச
மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே. (அகம். 128)

இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்கு உரைப்பா ளாக உரைத்தது.[1] இது குறிஞ்சிக்குக் கூதிரும் யாமமு வந்தது.

நிலனும் பொழுதும் முதலென்றமையிற் கார் முதலாதல் வேண்டும்; வேண்டவே, அதற்கிடையின்றிக்கூறிய மாலையும் அதன் சினையாமாதலின், கார்காலத்து மாலையென்பது பெற்றாம். இது கூதிர்யாமம் என்பதற்கும் ஒக்கும். (6)

**(குறிஞ்சிக்கும் முன் பனியு முரித்தெனல்)**

7. பனியெதிர் பருவமு முரித்தென மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறியது; முற்கூறிய குறிஞ்சிக்கு முன்பனியும் உரித்தென்றலின்.

**இ – ள்:** பனி எதிர் பருவமும் உரித்துஎன மொழிப - பனிமுற்பட்ட பருவமுங் குறிஞ்சிக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

எதிர்தலென்பது முன்னாதல்; எனவே, முன்பனியாயிற்று. அது ஞாயிறுபட்ட அந்திக்கண் வரும்.

1. இதனுள் நீர்வார்பு என்றதனால் கூதிர் என்பது பெறப்படும் வார்தல் - பெருகல். யாமங் கொளவரின் என்றதனால் - இடையாமம் என்பது பெறப் படும். மனைமடிந்தன்றே என்பதனானும் அது பெறப்படும்.

உரித்தென்றதனாற் கூதிர்பெற்ற யாமமும் முன்பனி பெற்று வரும் எனக் கொள்க.

உதாரணம் :

[1]பனியடூஉ நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலை (அகம். 124)

என முன்பனியாமங் குறிஞ்சிக்கண் வந்தது. (7)

**(மருதத்திற்குரிய சிறுபொழுதும் நெய்தற்குரிய சிறுபொழுதும் இவை எனல்)**

**8. வைகுறு விடியன் மருத மெற்பாடு**
**நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்.**

இனிச் சிறுபொழுதே பெறுவன கூறுகின்றது..

**இ — ள்:** வைகுறு விடியல் மருதம் - வைகறையும் விடியற் காலமும் மருதமாதலும், எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும் - எற்படுகாலம் நெய்தலாதலும் பொருள்பெறத் தோன்றும் என்றவாறு.

வைகுறுதலும் விடியலும் என்னும் உம்மை தொக்கு நின்றது.

செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ (423) என்றாற் போல வைகுறுதலை வைகுறு என்றார். அது மாலையாமமும் இடையாமமுங் கழியுந்துணையும் அக்கங்குல் [2]வைகுறுதல்; அது கங்குல்வைகிய அறுதியாத னோக்கி வைகறை னெவுங் கூறுப. அதுவும் பாடம். நாள்வெயிற்காலையை விடியலென்றார். 'விடியல்வெங் கதிர் காயும் வேயம லகலறை' (கலி. 45) என்ப. 'விடியல் வைகறை யிடூஉ மூர' (அகம். 196) என்றது விடியற்கு முன்னர்த் தாகிய வைகறையென உருபு தொக்கு முன்மொழி நிலைய லாயிற்று. பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும்பாடலுங் கண்டுங்கேட்டும் பொழுதுகழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல் மீளுங் காலம் அதுவாதலானும், தலைவிக்குங் கங்குல் யாமங்

---

1. பனியடூஉநின்ற பானாள் என்றதனால் முன்பனியாமம் என்பது பெறப் பட்டது.

2. வைகுறுதல் - கழிதல் என்று கொண்டு இருள் கழியுங்காலம் என்று பொருள் கோடலே பொருத்தம். "வைகலும் வைகல் வரக்கண்டும்" என்பதில் வைகல் - கழிதல் என்ற பொருளில் வருதல் காண்க.

கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடலுணர்தற் கெளிதாவதோர் உபகாரமுடைத் தாதலானும், வைகறை கூறி னார். இனித் தலைவி விடியற்காலஞ் சிறுவரைத்தாதலின் இத னாற் பெறும் பயன் இன்றென முனிந்து வாயிலடைத்து ஊட னீட்டிப்பவே அவ் வைகறைவழித் தோன்றிய விடியற்கண்ணும் அவன் [1]மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத் தலின் விடியல் கூறினார்.

'வீங்கு நீர்' என்னும் மருதக்கலியுள்,

அணைமென்றோள் யாம்வாட வமர்துணைப் புணர்ந்துநீ
மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ
பொதுக்கொண்ட கௌவையிற் பூவணைப்பொலிந்தநின்
வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை (கலி. 66)

என மருதத்திற்கு வைகறை வந்தது.

'விரிகதிர் மண்டிலம்' என்னும் மருதக்கலியுள்,

தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்கு நின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத்துஞ்சி
யணங்குபோற் கமழுநின் னலர் [2]மார்பு காணிய (கலி. 71)

என மருதத்துக் காலை வந்தது.

[3]'காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி' என்பதும் (குறுந் 45) அது.

இனி வெஞ்சுடர் வெப்பந்தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நீழற் செய்யவும், தண் [4]பதம்பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட புள்ளெல்லாங் [5]குடம்பை நோக்கி [6]உடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவினாற்றம் முன்னின்று [7]கஞற்றவும், நெடுந்திரை யழுவத்து நிலாக்கதிர் பரப்பவும்,

1. மெய்வேறுபாடு - உடம்பின் வேறுபாடு.
2. மார்புகாணிய என்றதனால் காலை என்பது பெறப்படும் காலையிலேயே விளங்கக் காணலாமாதலின்.
3. இச்செய்யுளிலும், 'எல்லினன் பெரிதென' என வருதல் காலையை யுணர்த்தும். என்னை? அவ்வெல்லை (பரத்தையரொடு புணர்ந்துவருந் தலைவன் விளக்கத்தை) யறிதற்குக் காலையே யுரியதாகலின்.
4. பதம் - உணவு.
5. குடம்பை - கூடு.
6. உடங்கு - ஒருங்கு.
7. கஞற்றல் - நெருங்குதல்.

*காதல் கைமிக்குக் [1]கடற்கானுங் கானற்கானும் நிறைகடந்து வேட்கைபுலப்பட உரைத்தலின், ஆண்டுக் காமக்குறிப்பு வெளிப் பட்டு இரங்கற்பொருள் சிறத்தலின் எற்பாடு நெய்தற்கு வந்தது.*

*உதாரணம் :*

நெடுவேண் மார்பி லாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்து
பைங்காற் கொக்கின நிரைபறை யுகப்ப
வெல்லைபைப் பையக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழின் மழைக்கண் கலுழ விவளே
பெருநா ணணிந்த சிறுமென் சாயன்
மாணலஞ் சிதைய வேங்கி யானா
தழறொடங் கினளே பெரும வதனாற்
கழிச்சுறா வெறிந்த புட்டா ளத்திரி
நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ
வல்வில் லிளையரோ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
யன்றி லகவு மாங்கட்
சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே. (அகம். 120)

*பகற்குறிக்கண் இடத்துய்த்துத் தலைவனை எதிர்ப்பட்டு உரைத்தது. நெய்தற்கு எற்பாடு வந்தது.*

*'கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப' (அகம். 40) என்பதனுள் மாலையும் வந்தது. கலியுள் மாலைக்காலம் நெய்தலின்கண் வந்தவாறு காண்க. இது மேல், 'நில னொருங்கு மயங்குத லின்று' (12) என்பதனாற் பெறுதும்.*

*இவற்றிற்கு அறுவகைஇருதுவும் உரியவென்பதன்றிக் காரும் இளவேனிலும் வேனிலும் பெரும்பொழுதாகக் கொள்ப என்றற்குப் 'பொருள்பெறத்தோன்றும்' என்றார்.*

*இனி நெய்தற்கு ஒழிந்த மூன்று காலமும் பற்றிவரச் சான் றோர் செய்யுட் செய்திலர், அக்காலத்துத் தலைவி புறம்போந்து விளையாடாமையின். அங்ஙனம் வந்த செய்யுளுளவேல் அவற் றையுங் கொள்க.*

---

1. ஆன் இரண்டும் விகற்பப்பொருளில் வந்தன.

கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூர
னெம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் தூக்கு
மாடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே. (குறு. 8)

*இது குறுந்தொகை. புறனுரைத்தாளெனக் கேட்ட பரத்தை தலைவனை நெருங்கித் தலைவன் பாங்காயினார் கேட்ப உரைத்தது.* [1]*இது முதுவேனில் வந்தது.*

அரிபெய் சிலம்பி னாம்பலந் தொடலை
யரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
யிழையணிப் பணைத்தோ ளையை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் டித்தன்
பிண்ட நெல்லி னுறந்தை யாங்கட்
[2]கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்
குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்
கேந்தொழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே யின்றுவந்
தாக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பிற் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேன் மத்தி கழாஅ ரன்னவெம்
மிளமை சென்று தவத்தொல் லஃதே
யினியெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே. (அக. 6)

*பரத்தையொடு புனலாடி வந்தமை கேட்டுத் தலைவி புலந்தது.* [3]*இது இளவேனில் வந்தது, ஏனைய வந்தவழிக் காண்க.*

---

1. இதனுள் மாவின்வீழ்ந்த பழத்தை வாளைகதூம் என்றதனால் முதுவேனில் என்பது பெறப்படும். மாம்பழம் வீழுங்காலம் பெரும்பாலு மதுவாதலின்.
2. கழை - ஓடக்கோல்.
3. இதனுள் கழை நிலைபெறாக் காவிரி நீத்தம் என்றதனால் இளவேனில் என்பது பெறப்படும். ஆறு வெள்ளமிக்குப் பெருகுங் காலமதுவாதலின். நீர்விளையாடற்குரிய காலமும் அதுவே.

நாடகவழக்கானன்றி உலகியல்வழக்கானும் அச்சிறு பொழுதும் அப் பெரும்பொழுதிற்குப் பொருந்து மென்றற்குத் 'தோன்றும்' என்றார். இதன்பயன் இவ்விரண்டு நிலத்துக்கு மற்றை மூன்று காலமும் பெரும்பான்மை வாராவென்றலாம். (8)

**(பாலைக்குரிய காலம் உணர்த்தல்)**

**9. நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே.**

இது நிலனுடைய நான்கற்குங் காலங்கூறி அந்நான்கற்கும் பொதுவாகிய பாலைக்குக் காலங் கூறுகின்றது.

**இ — ள்:** நடுவுநிலைத்திணையே - பாலைத்திணை, நண்பகல் வேனிலொடு - காலையும் எற்பாடும் என்னும் இரு கூற்றிற்கு நடுவணதாகிய ஒரு கூறு தான்கொண்டு வெம்மை செய்து பெருகிய பெரும் பகலோடும் இளவேனிலும் முதுவேனிலும் என்னும் இரண்டினோடும், முடிவு நிலை மருங்கின் - பிரிவெனப்படுதற்கு [1]முடிவுடைத்தாகிய குறிஞ்சியும் முல்லையுமாகிய ஒரு மருங்கின்கண்ணே, [2]முன்னிய நெறித்து - ஆசிரியன் மனங் கொள்ளப்படும் நெறியையுடைத்து என்றவாறு.

நிலையென்றது நிலத்தினை. முடிவு நிலைப்பகுதிக்கண் முன்னப்படு மெனவே அத்துணை யாக்கமின்றி ஒழிந்த மருதமும் நெய்தலும் முடியா நிலமாய் அத்துணை முன்னப்படாதாயிற்றுப் பாலைக் கென்பதாம். பிரிவின்கண் [3]முடிய வருவன வெல்லாம் இவ்விரண்டற்கும் முடிய வருதலும் ஒழிந்த இரண்டற்கும் அவை குறைய வருதலும் [4]உரையிற் கொள்க. என்னை? சுரத்தருமை அறியின் இவள் ஆற்றளாமெனத் தலைவன் செலவழுங்குதலும், துணிந்து போதலும், உடன் போவலெனத் தலைவி கூறுதலும், அதனை அவன் விலக்கலும், இருந்திரங்கலும் போல்வன பலவும் முடியவரும்நிலம் குறிஞ்சியும் முல்லையுமாகலின்.

---

1. முடிவு - முடிதல், = முடிவுபெறல்.
2. முன்னல் - மனங்கொள்ளல் = கருதல்.
3. முடிய - முடிவுபெற = முற்றுப்பெற. முடியவருதலைப் பின்வரும் வாக்கியங்களானறிக.
4. உரையிற்கோடல் என்னு முத்தியாற் கொள்க என்பது கருத்து.

*சுரத்தருமை முதலியன நிகழாமையின் மருதமும் நெய்தலும் அப்பொருண்முடிய வாராவாயின.*

நன்றே காதலர் சென்ற வாறே
யணிநிற விரும்பொறை மீமிசை
மணிநிற வுருவின தோகையு முடைத்தே. (ஐங்குறு. 431)

*[1]இது சுரத்தருமை நினைந்து வருந்தினேனென்ற தலைவிக்கு அவ்வருத்த நீங்கக் கார்காலமாயிற்றென்று ஆற்றுவித்தது. இப்பாட்டு முதலிய பத்தும் முல்லையுட்பாலை.*

கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
யாற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே. (ஐங்குறு. 451)

*[2]இது பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைவி பாசறைச் செய்தி கேட்டு வருந்தியது. இப்பத்தும் முல்லையுட் பாலை.*

கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
யிருங்கல் வியலறை வரிப்பத் தாஅ
நன்மலை நாடன் பிரிந்தென
வொண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய். (ஐங்குறு. 219)

*இது வரைவிடை வைத்துப் பிரிந்துழித் தலைவி யாற்றாமை கண்டு தோழி கூறியது. [3] இவ் வைங்குறுநூறு குறிஞ்சியுட் பாலை.*

எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பசலை செய்தன பனிபடு துறையே. (ஐங்குறு. 141)

*இவ் வைங்குறுநூறு வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் துறையின்ப முடைத்தாகலான் வருத்திற்றெனத் தலைவி கூறியது. [4]இது சுரத்தருமை முதலியனவின்றி நெய்தற்குட் பாலை வந்தது.*

*ஏனைய வந்துழிக் காண்க.*

---

1. மணிநிற வுருவின தோகையு முடைத்து என்றதனால் கார் காலம் என்பது பெறப்படும்.
2. முல்லை நிலத்துள் வந்த பாலை. பாலை - பிரிவு. ஏனையவுமன்ன. கார் முல்லைக்குரியது.
3. மலைநாடு என்றமையால் குறிஞ்சி என்பது பெறப்பட்டது.
4. இதனுள் எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழும் என்றதனால் நெய்தல் என்பது பெறப்பட்டது. பசலை செய்தன என்பதனால் பிரிவும் பெறப்படலின் நெய்தலுட் பாலை என்றார்.

[1]முந்நீர் வழக்கஞ் சிறுபான்மையாகலின் நெய்தற்கு முடிய வாராதாயிற்று. இக்கருத்தானே பிரிவொழுக்கம் மருதத்திற்கும் நெய்தற்குஞ் சிறுபான்மையாகப் புலனெறி வழக்கஞ் செய்யப்படும்.

[2]எற்பாட்டுக்கு முன்னர்த்தாகிய [3]நண்பகலைப் பாலைக்குக் கூற வேண்டிப் பின் வைத்தாரேனும், பெரும்பொழுதிற்கு முற் கூறுதலின் ஒருவாற்றாற் சிறுபொழுதாறும் முறையே வைத் தாராயிற்று. காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூரச் சோலை தேம்பிக் [4]கூவன் மாறி, நீரும் நிழலுமின்றி, நிலம் [5]பயந் துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுவதொரு காலமாதலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலுஞ் சிறப்புடையவாயிற்று.

தெள்ளறல் யாற்றுத் திரைமண லடைகரை
வண்டுவரி பாடத் தண்போ தலர்ந்து
தாதுந் தளிரு மேதகத் துவன்றிப்
பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு
செவ்வித் தென்ற லொவ்விதிற் றாகிக்
குயில்கூஉக் குரலும் பயில்வதன் மேலும்
நிலவுஞ் சாந்தும் பலவுறு முத்து
மின்பம் விளைக்கு நன்பொருள் பிறவும்
பண்டைய போலா தின்ப மிகத்தரும்.

இளவேனிற்காலத்து, பொழில் விளையாடியும் புதுப்பூக் கொய்தும் அருவியாடியும் முன்னர் விளையாட்டு நிகழ்ந்தமை பற்றிப் பிரிந்த கிழத்தி மெலிந்துரைக்குங் கிளவி பயின்று வருத லானும், உடன் போக்கின்கண் அக்காலம் இன்பம் பயக்கு மாத லானும், இளவேனிலோடு நண்பகல் சிறந்ததெனப்பட்டது. பிரிந்த கிழத்தி இருந்து கூறுவன கார்காலமன்மையின் முல்லையாகா.

1. முந்நீர் வழக்கம் - கடலிற் பிரிவு (34-ம் சூத்திரம்). இதற்கு நச்சினார்க்கினியர் அச்சூத்திரவுரையுள் வேறு பொருள் கூறினும் இதனையும் ஒப்புக் கொள்ளு கின்றார் என்பது அச் சூத்திர விரிவுரையாற் பெறப்படும்.

2. எற்பாடு - ஞாயிறு படுதற்கு முன் பத்துநாழிகை என்பர் நச்சினார்க்கினியர்.

3. நண்பகல் - நடுப்பகல் = உச்சிக்காலம்.

4. கூவல் - கிணறு.

5. பயம் - பயன் = வளம்.

*உதாரணம் :*

கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுற லங்கோ டுதிரவலங் கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்
திருங்கன் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திறுக்கு
மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலு
மிருங்கழை யிறும்பி னாய்ந்துகொண் டறுத்த
நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரோ
டகவுநர்ப் புரந்த வன்பிற் கழறொடி
நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூ ரன்னநின்
னலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்
தாழ லென்றி தோழி யாழவென்
கண்பனி நிறுத்த லெளிதோ குரவுமலர்ந்
தற்சிர நீங்கிய வரும்பத வேனி
லறலவிர் வார்மண லகல்யாற் றடைகரைத்
துறையணி மருதமொ டிகல்கொள வோங்கிக்
கலுழ்தளி ரணிந்த விருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை யம்மஞ் சூர
நுகர்குயி லகவுங் குரல்கேட் போர்க்கே. (அகம். 97)

*இது வற்புறுத்துந்தோழிக்குத் தலைவி கூறியது.* [1]இக் **களிற்றியானைநிரையுள்** இருவகைவேனிலும் *பாலைக் கண் வந்தன.*

*நண்பகலோடு வருவன வந்துழிக் காண்க.* *(9)*

### *(பாலைக்குப் பின்பனியும் உரித்தெனல்)*

**10.** பின்பனி தானு முரித்தென மொழிப.

*இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.*

**இ – ள்:** *நடுவுநிலைத்திணைக்கு முற்கூறிய வேனிலன்றிப் பின் பனிக்காலமும் உரித்து என்றவாறு.*

*இது, கூதிரை முன்பனியாகிய மார்கழியுந் தையுந் தொடர்ந் தாற் போல, வேனிலாகிய சித்திரை முதலிய நான்கற்குமுன் பின் பனியாகிய மாசியும் பங்குனியுந் தொடர்ந்ததென்று கூறினார்.*

1. அகநானூற்றின் ஒரு பகுதி களிற்றியானை நிரை.

*உதாரணம் :*

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்ப னுதிபொர முற்றிய கடும்பனி. (கலி. 31)

*[1] இது தனித்தோர்க்குப் பின்பனி ஆற்றலரிது, இஃதெவர்க்கும் [2]ஏதமாம் எனவும், இதனான் இறந்துபடுவேனெனவுங் கூறிற்று.*

அம்ம வாழி தோழி காதலர்
நூலறு முத்திற் றண்சித ருறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்
பிரியு நாளும் பலவா கவ்வே. (குறு. 104)

*தலைவி தோழிக்கு உரைத்தது.*

*[3] இக் குறுந்தொகையும் அது.*

*பின்பனிக்கு நண்பகல் துன்பஞ்செய்யா தென்பதூஉம் அதற்குச் சிறுபொழுது வரைவிலவென்பதூஉங் கூறிற்று; என்னை? சூத்திரத்துத் 'தான்' எனத் தனித்து வாங்கிக் கூறினமையின். (10)*

***(பாலைப்பகுதியும் அவற்றிற்குப் பின்பனி உரித்தெனலும்)***

11. இருவகைப் பிரிவு நிலைபெறத் தோன்றினு
முரிய தாகு மென்மனார் புலவர்.

*இது பாலைப்பகுதி இரண்டெனவும் அவ்விரண்டற்கும் பின்பனி உரித்தெனவுங் கூறுகின்றது.*

*இ – ள்: இருவகைப்பிரிவும் நிலைபெறத் தோன்றினும் - நான்கு வருணத்தார்க்குங் காலிற் பிரிவும் வேளாளர்க்குக் கலத்திற் பிரிவும் தத்தம் நிலைமைக்கேற்பத் தோன்றினும், உரியது ஆகும் என்மனார் புலவர் - பின்பனிக்காலம் அவ்விரண்டற்கும் உரிமைபூண்டு நிற்குமென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

---

1. இதனுள், "புகையெனப் புதல்சூழ்ந்து ...... கடும்பனி" என்றதனால் பின்பனிக் காலம் என்பது பெறப்படும்.

2. ஏதம் - துன்பம்.

3. இதனுள் நூலறு முத்திற் றண்சித ருறைப்ப என்றதனானே பின்பனி என்பது பெறப்படும்.

*கடலினை நிலமென்னாமையிற் கலத்திற் பிரிவு முன்பகுத்த நிலத்துள் அடங்காதென்று அதுவும் அடங்குதற்கு, இருவகைப் பிரிவும் என்னும் முற்றும்மை கொடுத்துக் காலிற் பிரிவோடு கூட்டிக் கூறினார். கலத்திற் பிரிவு அந்தணர் முதலிய செந்தீ வாழ் நர்க்கு ஆகாமையின் வேளாளர்க்கே உரித்தென்றார். வேத வணி கரல்லாதார் கலத்திற் பிரிவு வேதநெறியன்மையின் ஆராய்ச்சியின்று. இக் கருத்தானே இருவகை வேனிலும் நண்பகலும் இருவகைப் பிரிவிற்கும் ஒப்ப உரியவன்றிக் காலிற் பிரிவுக்குச் சிறத்தலும், கலத் திற் பிரிவிற்கு இளவேனிலொன்றுங் காற்று மிகாத முற் பக்கத்துச் சிறுவரவிற்றாய் வருதலும் கொள்க. [1]ஒழிந்த உரிப் பொருள்களி லும் பாலை இடைநிகழு மென்றலிற் பிரியவேண்டிய வழி அவற் றிற்கு ஓதிய காலங்கள் கலத்திற் பிரிவிற்கும் வந்தால் இழுக்கின் றது. என்னை? கார்காலத்துக் கலத்திற் பிரிவும் உலகியலாய்ப் பாட லுட் பயின்று வருமாயினென்க. தோன்றினும் என்ற உம்மை சிறப் பும்மை; இரண்டு பிரிவிற்கும் பின்பனி உரித்தென்றலின்.*

*இனிக் கலத்திற் பிரிவிற்கு உதாரணம்:-*

உலகு கிளர்ந்தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடை போழ
விரவு மெல்லையு மசைவின் றாகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வாள்வினைப் புரிந்த காதலர் நாள்பல
கழியா மையே யழிபட ரகல
வருவர் மன்னாற் றோழி தண்பணைப்
பொருபுனல் வைப்பி னம்மூ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றைப்
பெருவன மலர வல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதள மூதிலைக் கொடிநிரை தூங்க
வறனின் றலைக்கு மானா வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசத்
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாஅய்
நிரைவளை யூருந் தோளென
வுரையொடு செல்லு மன்பினர்ப் பெறினே. **(அகம். 255)**

1. ஒழிந்த உரிப்பொருள்களிலும் இடைநிகழும் என்பதை முன்விளக்கியுள்ளாம். 7ம் பக்கம் நோக்குக. உரிப்பொருள்களிலும் என்பதை உரிப்பொருட்குரிய நிலங்களிலும் என்னுங் கருத்துறப் பாலைக்கலியின் முகப்பில் இவரே கூறுகின்றார். அதனை ஆண்டு நோக்கியுணர்க.

இது தோழி தூதுவிடுவது காரணமாக உரைத்தது.

[1]இம் மணிமிடைபவளத்துப் பின்பனி வந்தவாறும், நண்பகல் கூறாமையும் அவர் குறித்தகாலம் இதுவென்பது தோன்றிய வாறுங் காண்க.

குன்ற வெண்மண லேறி நின்றுநின்
றின்னுங் காண்கம் வம்மோ தோழி
களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே.

வருகின்றாரெனக் கேட்ட தலைவி தோழிக்கு உரைத்தது.

இதன் பின்பனி நின்றகாலம் [2]வரைவின்றி வந்தது.

கடலிடைக் கலத்தைச் செலுத்துதற்கு உரிய காற்றோடு பட்ட காலம் யாதானுங் கொள்க. 'ஆகும்' என்றதனால் வேத வணிகரும் பொருளின்றி இல்லறம் நிகழாத காலத்தாயிற் செந்தீ வழிபடுதற்கு உரியோரை நாட்டிக் கலத்திற் பிரிதற்கு உரியரென்று கொள்க. (11)

(மேலனவற்றிற்குப் புறனடை)

12. [3]திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே.

இஃது உரிப்பொருள் மயங்குமென்றலின் மேலனவற்றிற்குப் புறனடை.

**இ — ள்:** திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே - 'மாயோன் மேய' (5) என்பதனுள் ஒரு நிலத்து ஓரொழுக்கம் நிகழுமென நிரனிறுத்துக் கூறிய ஒழுக்கம் அவ்வந்நிலத்திற்கே உரித்தாயொழு காது தம்முண் மயங்கிவருதலும் நீக்கப்படா, நிலன் ஒருங்கு மயங்குதல் இன்று என மொழிப - அங்ஙனம் ஒரு நிலத்து இரண் டொழுக்கந் தம்முண் மயங்குதலின்றி இரண்டு நிலம் ஒரோ

---

1. பகன்றை மலர்தன் முதலியன நிகழ்தல் பின்பனிக் காலத்தாதலின் பின்பனி வந்தவாறும் என்றார். குறித்தகாலம் - பின்பனி அது சொல்லப்படாமையின் தோன்றிற்று என்றார்.

2. வரைவு - நியமம்.

3. இளம்பூரணர் திணை என்பதற்கு திணைக்குரிய முதற்பொருளெனக் கூறி, அம்முதற்பொருளுள் நிலன் மயங்காதெனவே காலம் மயங்கு மென்பர்.

வொழுக்கத்தின்கண் மயங்குதலில்லையென்று கூறுவர், புலன் நன்கு உணர்ந்த புலமையோர் - அங்ஙனம் நிலனும் ஒழுக்கமும் இயைபு படுத்துச் செய்யும் புலனெறி வழக்கினை நன்று உணர்ந்த அறிவினையுடையோர் என்றவாறு.

என்றது ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கி வருமென்பதூஉம், நிலன் இரண்டு மயங்காதெனவே காலம் இரண்டு தம்முள் மயங்குமென்பதூஉம் கூறினாராயிற்று. எனவே, ஒரு நிலமே மயங்குமாறாயிற்று. உரிப்பொருண் மயக்குறுதல் என்னாது திணை மயக்குறுதலும் என்றார், ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிய பொருண் மயங்குதலும், ஓர் உரிப்பொருள் நிற்றற்கு உரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்து மயங்குதலும், இவ்வாறே காலம் மயங்குதலும், கருப்பொருண் மயங்குதலும் பெறுமென் றற்கு. திணையென்றது [1]அம்மூன்றனையுங் கொண்டே நிற்றலின்.

உதாரணம் :

அறியே மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
[2]சாந்த நாறு நறியோள்
கூந்த னாறுநின் மார்பே தெய்யோ. (ஐங்குறு. 240)

[3] இது புறத்தொழுக்க மின்றென்றாற்குத் தோழி கூறியது.

புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்குங்
குன்றுகெழு நாடன் மன்றதன்
பொன்போற் புதல்வனோ டென்னீத் தோனே (ஐங்குறு. 265)

[4] இது வாயில்களுக்குத் தலைவி கூறியது.

வன்கட் கானவன் மென்சொன் மடமகள்
புன்புல மயக்கத் துழுத வேனற்
பைம்புறச் சிறுகிளி கடியு நாட
பெரிய கூறி நீப்பினும்
பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே. (ஐங்குறு. 283)

---

1. அம்மூன்று - முதல் கரு உரி என்னு மூன்று.
2. சாந்தம் - குறிஞ்சிக்குரிய கரு.
3. இதனுள் ஊடல் வந்தது.
4. இதனுள் குன்றுகெழுநாடு என்றது குறிஞ்சியை. புதல்வனொடு என்னீத் தோன் என்றதனால் ஊடல் பெறப்படும்.

*[1]இது தலைவன் ஆற்றாமை வாயிலாகப் புணர்ந்துழிப் பள்ளி யிடத்துச் சென்ற தோழி கூறியது.*

*இவை குறிஞ்சிக்கண் மருதம் நிகழ்ந்தன; இவை ஒரொழுக் கம் நிகழ்தற்கு உரியவிடத்தே ஒரொழுக்கமும் நிகழ்ந்தன.*

**அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி**
**பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை**
**கொன்னே கடவு யாயி னென்னதூஉ**
**மறிய வாகுமோ மற்றே**
**முறியிணர்க் கோங்கம் பயந்த மானே. (ஐங்குறு. 366)**

*இஃது இவ்வேறுபாடென்னென்ற செவிலிக்குத் தோழி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல். [2] இது பாலையிற் குறிஞ்சி.*

*இஃது உரிப்பொருளோடு உரிப்பொருண் மயங்கிற்று. மேல் வருவனவற்றிற்கும் இவ்வாறு உய்த்துணர்ந்து கொள்க.*

**வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின்**
**முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்**
**குறிநீ செய்தனை யென்ப வலரே**
**குரவ நீள்சினை யுறையும்**
**பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே. (ஐங்குறு. 369)**

*[3] இது பொழிலிடத்து ஒருத்தியொடு தங்கி வந்தும் யான் பரத்தையை அறியேனென்றாற்குத் தோழி கூறியது.*

**வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை**
**யிருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப**
**நீநயந் துறையப் பட்டோள்**
**யார ளோவெம் மறையா தீமே. (ஐங்குறு. 370)**

*[4] இது பரத்தையர்க்குப் பூவணிந்தமை கேட்ட தலைவி அஃதின்றென்றாற்குக் கூறியது.*

---

1. இதனுள், கானவன் மகள் ஏனற் கிளிகடியும் நாடு என்றதனால் குறிஞ்சி என்பது பெறப்படும். 'பெரியகூறி நீப்பினும் பொய்வலைப்படும் பெண்டு தவப் பலவே' என்றதனால் முன் ஊடல் நிகழ்ந்தமை பெறப்படும்.

2. கோங்கு கூறினமையிற் பாலையாயிற்று. பயந்தமாறே் என்றதனால் புணர்ச்சி பெறப்படும்; பசந்தனள் என்றதனால் பிரிவு பெறப்படும். ஆதலின் உரிப்பொருளோடு உரிப்பொருண் மயங்கிற்று என்றார்.

3. இதனுள் குரவு கூறலின் பாலையாயிற்று. குறிசெய்தனை என்பது முதலிய வற்றால் ஊடல் பெறப்படும்.

4. இதனுள், கோங்கு கூறலின் பாலையாயிற்று, யாரள் என்பதனால் ஊடல் பெறப்படும்.

*இவை பாலைக்கண் மருதம் நிகழ்ந்தன; அருந்தவ மாற்றி யார்" என்னும் பாலைக்கலியுமது. (கலி. 30)*

அன்னை வாழிவேண் டன்னை யுதுக்கா
ணோர்கொடிப் பாசடும்பு பரியவூர் பிழிபு
நெய்தன் மயக்கிவந் தன்று நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்குமருந் தாகிய கொண்கன் றேரே. (ஐங்குறு. 101)

*இஃது அறத்தொடுநின்றபின் வரைதற்குப் பிரிந்தான் வரை வொடு வந்தமை தோழி செவிலிக்குக் காட்டியது.* [1] *இது நெய்தலிற் குறிஞ்சி.*

கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
[2] யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே. (ஐங்குறு. 122)

[3] கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
உறாஅ வறுமுலை மடாஅ
வுண்ணாப் பாவை யூட்டு வோளே. (ஐங்குறு. 128)

*இவை பெதும்பைப் பருவத்தாள் ஒரு தலைவியொடு வேட்கை நிகழ்ந்தமையைத் தலைவி கூறித் தலைவன் குறிப்புணர்ந்தது. இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.*

யானெவன் செய்கோ பாணவா னாது
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
புல்லென் றனவென் புரிவளைத் தோளே. (ஐங்குறு. 133)

[4] *இது தலைவன் புறத்துப்போன அத்துணைக்கு ஆற்றா யாகுதல் தகாதென்ற பாணற்குத் தலைவி கூறியது. இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.*

வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானாத் துறைவற்கு
நெக்க நெஞ்ச நேர்கல் லேனே. (ஐங்குறு. 151)

---

1. இதனுள்வரும் அடும்பும் நெய்தலும் நெய்தற்குரியன. வரையவந்தமை கூறலின் குறிஞ்சியாயிற்று.
2. இதனுள் இழை உயர்மணல் வீழ்ந்தென என்றதனானும், வெள்ளாங்குருகு என்றதனானும் கொண்கன் என்றதனானும் நெய்தல் என்பது பெறப்படும்.
3. இது கொண்கன் என்றதனால் நெய்தலாதல் பெறப்படும்.
4. இதனுள் 'மெல்லம் புலம்பன்' என்றமையானே நெய்தலாதல் பெறப்படும். யானெவன் செய்கோ பாண என்பதனால் ஊடல் என்பது பெறப்படும்.

*[1] இது வாயில்வேண்டிய தோழிக்குத் தலைவி வாயின் மறுத்தது. இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.*

இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி
முகம்புதை கதுப்பின ளிறைஞ் சிநின் றோளே
புலம்புகொண் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவ ளெனக்கே. (ஐங்குறு. 197)

*இது இடந்தலைப்பாட்டிற் றலைவி நிலைகண்டு கூறியது.*
*[2] இது நெய்தலிற் புணர்தனிமித்தம்.*

வேப்புநனை யன்ன நெடுங்கட் கள்வன்
றண்ணக மண்ணளை நிறைய நெல்லி
னிரும்பூ வுறைக்கு மூரற்கிவள்
பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய். (ஐங்குறு. 30)

*[3] இது தோழி அறத்தொடு நின்றது.*

பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவுங்
கழனி யூரநின் மொழிவ லென்றுந்
துஞ்சுமனை நெடுநகர் வருதி
யஞ்சா யோவிவ டந்தைகை வேலே. (ஐங்குறு. 60)

*[4] இது தோழி இரவுக்குறி மறுத்தது.*

நெறிமருப் பெருமை நீலவிரும் போத்து
நெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே. (ஐங்குறு. 91)

*[5] இஃது இளையள் விளைவிலளென்றது.*

---

1. இதனுள் வரும் வெள்ளாங்குருகும் நாரையும் நெய்தலும் நெய்தலாதலை யுணர்த்தும். துறைவன் என்னும் பெயரும் நெய்தலாதலை யுணர்த்தும். நெஞ்சநேர்கல்லேனே என்பது ஊடலையுணர்த்தும்.
2. இதனுள் அலவனாட்டி என்றதனால் நெய்தல் என்பது பெறப்படும். நின் றோள் ஆகநல்குவ ளெனக்கே என்றதனால் புணர்ச்சி நிமித்தம் என்பது பெறப்படும். புணர்தனிமித்தங் குறிஞ்சிக்குரியது.
3. இதனுள் கூறிய நெல் மருதத்திற்குரியது. ஊரன் என்னும் பெயரும் மருதத் திற்குரியது. ஊரற்குக் கவினிழப்பது எவன்கொலன்னாய் என்றதனால் அறத் தொடு நிற்றலாயிற்று. இது புணர்ச்சிக்குரியது.
4. இதனுள் கழனியூரன் என்றதனால் மருதம் என்பது பெறப்படும். துஞ்சுமனை வருதி என்றதனால் இரவுக்குறி என்பதும், கைவேலை அஞ்சாயோ என்றத னால் மறுத்ததும் பெறப்படும். இதுவும் குறிஞ்சி.
5. இதனுள் கழனியூரன் என்றதனாலும் பிறவற்றானும் மருதம் என்பது பெறப் படும். பழனவெதிரின் கொடிப்பிணையலள் என்றதனால் இளையள் என்பது பெறப்படும். பழனவெதிர் - கரும்பு.

கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு
நுந்தை நும்மூர் வருது
மொண்டொடி மடந்தை நின்னை யாம் பெறினே. (ஐங்குறு. 92)

[1] இது நின்தமர் வாராமையின் எமர் வரைவு நேர்ந்தில ரென்று தோழி கூறக்கேட்ட தலைவன் தலைவிக்குக் கூறியது. இவை மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தன. இக்காட்டியவெல்லாம் ஐங்குறு நூறு. 'புனையிழை நோக்கியும்' என்னும் மருதக்கலியும் அது. (கலி76)

முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
முட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்
மூதா தின்ற லஞ்சிக் காவலர்
பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்குந்
தீம்புன லூர திறவ தாகக்
குவளை யுண்க ணிவளும் யானுங்
கழனி யாம்பன் முழுநெறிப் பகைத்தழை
காயா ஞாயிற் றாகத் தலைப்பப்
பொய்த லாடிப் பொலிகென வந்து
நின்னகாப் பிழைத்த தவறோ பெரும
கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட் குளப்பட வோச்சித்
தணிமருங் கறியாள் யாஅயழ
மணிமருண் மேனி பொன்னிறங் கொளலே. (அகம். 156)

[2] இது தலைவியைத் தோழி இடத்துய்த்துத் தலைவனை வரைவு கடாயது. இவ்வகப்பாட்டும் அது.

இன்னும், மயக்குறுதலும் என்றதனான் அவ்வந் நிலங்கட்கு உரிய முதலுங் கருவும் வந்து உரிப்பொருள் மயங்குவனவுங் கொள்க. அஃது 'அயந்திகழ் நறுங் கொன்றை' என்னும் நெய்தற் கலியுட் காண்க. [3] இக்கருத்தானே நக்கீரரும் ஐந்திணையுள்ளுங் களவு நிகழுமென்று கொண்டவாறுணர்க.

---

1. இதனுள் எருமைப் புனிற்றாக் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும் ஊர் என்றதனால் மருதம் என்பது பெறப்படும்.

2. இதனுள், செழுஞ்செய் நெல்லின் .... தீம்புன லூர என்றதனால் மருதம் என்பது பெறப்படும். "மேனி பொன்னிறங் கொளல்... ... தவறோ" என்றதனால் வரைவுகடாதல் பெறப்படும்.

3. இக்கருத்தினால் என்றது - உரிப்பொருண் மயங்குமென்னுங் கருத்தினால் என்றபடி. இறையனாரகப்பொருள் 1ம் சூத்திர உரை பக். 30.

*இனிக் காலம் ஒருங்கு மயங்குங்காற் பெரும்பொழுது இரண்டும் பெரும்பான்மையுஞ் சிறுபொழுதும் மயங்குதலுங் கொள்க.*

மழையில் வான மீனணிந் தன்ன
குழையமன் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோற் கோவல
ரெல்லுப் பெயலுழந்த பல்லா நிரையொடு
நீர்திகழ் கண்ணிய ரூர்வயிற் பெயர்தர
நனிசேட் பட்ட மாரி தளிசிறந்
தேர்தரு கடுநீர் தெருவுதோ றொழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
கூதிர்நின் றன்றாற் பொழுதே காதலர்
நந்நிலை யறியா ராயினுந் தந்நிலை
யறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக்
காய்சின யானைக் கங்குற் சூழ
வஞ்சுவர விறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே. (அகம். 264)

*இது தோழிக்குத் தலைவி கூறியது. [1]இம்* **மணிமிடை பவளத்துள்** *முல்லையுட் கூதிர் வந்தது.*

மங்குன் மாமழை விண்ணதிர்பு முழங்கித்
துள்ளுப்பெயல் கழிந்த பின்றைப் புகையுறப்
புள்ளிநுண் டுவலை பூவக நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்
துய்த்தலைப் பூவின் புதலிவ ரீங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளி
ரிருவகி ரீருளி னீரிய துயல்வர
வவரைப் பைம்பூப் பயில வகல்வயற்
கதிர்வார் காய்நெற் கட்கினி திறைஞ்சச்
சிதர்சினைத் தூங்கு மற்சிர வரைநாட்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோ யறியா வறனி லாளர்
ரிந்நிலை களைய வருகுவர் கொல்லென
வானா தெறிதரும் வாடையொடு
நோனேன் றோழீயென் றனிமை யானே. (அகம். 294)

*இது பருவ வரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறியது. [2]இம்* **மணிமிடை பவளத்து** *முல்லையுள் முன்பனி வந்தது. நிலமுங் கருவும் மயங்கிற்று.*

---

1. இதனுள் வருங் கருப்பொருள்களால் முல்லை என்பது பெறப்பட்டது. கூதிர் நின்றன்று என்பதனால் காலம் கூதிர் என்பது பெறப்பட்டது.

2. இதனுள் கருவிளை, ஈங்கை, அவரை முதலியன முல்லை நிலத்தை யுணர்த்தின. வயல் - மருதநிலத்தை யுணர்த்தியது. நெல்மருதநிலக்

கருங்கால் வேங்கை வீயுகு துறுக
லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
யெல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே. (குறுந். 47)

*இஃது இரா வந்து ஒழுகுங்காலை முன்னிலைப் புறமொழி யாக நிலாவிற்கு உரைப்பாளாய் உரைத்தது.[1] இக் குறுந்தொகை யுட் குறிஞ்சியுள் வேனில் வந்தது.*

விருந்தின் மன்ன ரருங்கலத் தெறுப்ப (அகம். 54)

*என்பது கார்காலத்து மீள்கின்றான் முகிழ்நிலாத் திகழ்வதற்குச் சிறந்த வேனி லிறுதிக்கண் தலைவிமாட்டு நிகழ்வனகூறி, அவை காண்டற்குக் கடிது தேரைச் செலுத்தென்றது.*

*[2] இது முல்லைக்கண் வேனில் வந்தது.*

துஞ்சுவது போல விருளி விண்பக
விமைப்பது போல மின்னி யுறைக்கொண்
டேறுவது போலப் பாடுசிறந் துரைஇ
நிலநெஞ் சுட்க வோவாது சிலைத்தாங்
கார்தளி பொழிந்த வார்பெயற் கடைநா
ளீன்றுநா ளுலந்த வாலா வெண்மழை
வான்றோ யுயர்வரை யாடும் வைகறைப்
புதலே ரணிந்த காண்பின் காலைத்
தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து
வெண்புறக் குடைய திரிமருப் பிரலை
வார்மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற்
காமர் துணையோ டமர்துயில் வதிய
வரக்குநிற வுருவி னீயன் மூதாய்
பரப்பிய வைபோற் பாஅய்ப் பலவுட
னீர்வார் மருங்கி னீரணி திகழ
வின்னும் வாரா ராயி னன்னுதல்
யாதுகொன் மற்றவர் நிலையே காதலர்
கருவிக் காரிடி யிரீஇய
பருவ மன்றவர் வருதுமென் றதுவே. (அகம். 139)

*இது பிரிவிடையாற்றாது தோழிக்கு உரைத்தது.*

---

கருப்பொருள், மருதநிலமும் அதன் கருவும் முல்லையோடு மயங்கின. அற்சிரம் - முன்பனி.

1. இதனுள் வேங்கை கூறியதனால் குறிஞ்சி என்பது பெறப்படும். வேங்கைப்பூ மலர்வது வேனிற்காலத்தாதலின் வேனில் என்பது பெறப்பட்டது. நிலா விளங்கற்கேற்ற காலமுமதுவே.

2. இதனுள் "பயநிரை யாயம்... ... மனைமனைப் படரும்" என்றதனால் முல்லை என்பது பெறப்படும். முகிழ்நிலாத் திகழ்தரும் என்றதனாலும் ஆர்கலிதலை யின்று என்றதனாலும் வேனிலிறுதிக்கட் கூறியது என்பது பெறப்பட்டது.

*[1] இம் மணிமிடைபவளத்துப் பாலைக்கண் முன்பனியும் வைகறையும் ஒருங்கு வந்தன.*

தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலி
னல்லாந்தா ரலவுற வீன்றவள் கிடக்கைபோற்
பல்பய முதவிய பசுமைதீ ரகன்ஞாலம்
புல்லிய புனிறொரீஇப் புதுநல மேர்தர
வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள
விளையவ ரைம்பால்போ லெக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர்மிசை மாயவ டிதலைபோ
லாயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர
மேதக விளவேனி லிறுத்தந்த பொழுதின்கண்:

சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி
நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் னிறைநீவி
வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்:

போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச்
சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மற் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு மிருந்தும்பி
யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம்:

தொடிநிலை நெகிழ்த்தார்கட் டோயுமென் னாருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவு
நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்:

எனவாங்கு,

வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தெய்திநம்
மருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் றேமொழி படர்ந்தே. (கலி. 29)

*வந்தாரென ஆற்றுவித்தது. [2] இதில் வேனிலும் வாடையும் கங்குலும் மாலையும் வந்தன.*

---

1. இதனுள், இரலை, பிடவு முதலியன கூறியதனால் இது முல்லை திரிந்த பாலையாகும். உரிப்பொருளானும் பாலையாதல் பெறப்படும். 'ஈன்று நாளுலந்த வாலா வெண்மழை ... ... ஆடும்' என்றதனால் முன்பனி என்பது பெறப்படும். வைகறை என்பதனால் வைகறையும் பெறப்படும்.

2. இதனுள் இளவேனி லிறுத்தந்த பொழுதின்கண் என்றதனால் இளவேனிலும், வாடைவந்தலைத்தரும் என்றதனால் வாடையும், கங்குல் வந்து என்றதனால் கங்குலும், மாலை அலைத்தரூஉம் என்றதனால் மாலையும் வந்தவாறு காண்க.

அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ லுகக்கு மாலையு
மின்றுகொல் காதலர் சென்ற நாட்டே. (ஐங்குறு. 339)

[1] *இவ் வைங்குறுநூறு பாலைக்கண் மாலை வந்தது.*

தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே. (ஐங்குறு. 183)

*பருவ வரவின்கண் மாலைப்பொழுது கண்டு ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறியது.* [2] இவ் வைங்குறுநூறு *நெய்தற்கண் மாலை வந்தது.*

தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போ
லெல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி
னல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர
வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை

பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ
லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல
வினியசெய் தகன்றாரை யுடையையோ நீ (கலி. 129)

[3] *என நெய்தற்கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தன. ஒழிந்தனவும் மயங்குமாறு வந்துழிக் காண்க.* *(12)*

**(கைக்கிளையும் பெருந்திணையும் நான்குநிலத்தும் மயங்குமெனல்)**

**13. [4]உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே.**

*இஃது எய்தாத தெய்துவித்தது.*

---

1. இது காலத்தானும் உரிப்பொருளானும் பாலையாயிற்று, வேம்பு பழுக்குங் காலம் முதுவேனில் மாலை என்றதனால் அதன்கண் மாலை வந்தது பெறப்படும்.

2. இதனுள் கடற்சேர்ப்பன் என்றதனால் நெய்தல் பெறப்படும். 'கையறுமாலை' என மாலை வந்தது.

3. இதனுள் இருள் தலைவர எனக் கங்குலும், மருண்மாலை என மாலையும், பனியோடு இருள் சூழ என்றதனால் முன்பனியும் வந்தவாறு காண்க. பனியிருள் சூழ்தர என்றதனால் முன்பனியாதல் பெறப்படும்.

4. உரிப்பொருளல்லன கருவும் முதலும் என்பர் இளம்பூரணர்,

**இ — ள்:** உரிப்பொருள் அல்லன - உரிப்பொருளென்று ஓதப் படும் ஐந்திணையும் அல்லாத கைக்கிளையும் பெருந்திணை யும், மயங்கவும் பெறும் - நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும் என்றவாறு.

உம்மை எச்சவும்மையாதலின் உரிப்பொருளாக எடுத்த பாலையும் நால்வகை நிலத்தும் மயங்கவும்பெறும் என்றவாறாம். பாலை என்பது ஒன்றுபிரிந்து பலவாகிய [1] கூற்றின் மேற்றாதலின் ஒற்றுமைப்பட்டு நிகழ்கின்றார் இருவர் பிரிந்துவரலும் பாலை யாமன்றே? அதனால் அதுவுங் குணங்காரணமாய்ச் செம்பால் [2]செம்பாலையாயினாற்போல நின்றது.

"ஊர்க்கா னிவந்த" என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினல
மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ. (கலி. 56)

இது நிலம் [3]வரையாது வந்த கைக்கிளை. [4] இதனைக் குறிஞ் சியுட் கோத்தார் புணர்ச்சி யெதிர்ப்பாடாகலின்.

கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே யாயர் மகள்;

வளியா வறியா வுயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்
கெளியவோ வாய்மக டோள்; (கலி. 103)

அவ்வழி, முள்ளெயிற் றேஎ ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்;

ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவன் ... (கலி. 104)

---

1. கூறு (பால்) பகுதி. பிரிவு ஒற்றுமைப்பட்டார் இருவர் என்றதனால் ஒன்றாயினார் இரண்டாகப் பிரிதலின் அப்பிரிவும் பாலையாயிற்று என்பது கருத்தாயிற்று.
2. செம்பாலை - ஒருபண். செம்பால் என்பதே செம்பாலை என்று ஆயிற்று என்பது கருத்து. செம்பால், செம்பாலையாயினாற்போல, பால் பாலை யாயிற்று, பால் என்றது ஒன்று பிரிந்து பலவாகிய பிரிவின்கண்ணதாகலின் ஒன்றெனை ஒற்றுமைப்பட்டார் இருவர் பிரியும் பிரிவினை உணர்த்திற்று.
3. வரையாது - நியமிக்கப்படாது.
4. புணர்ச்சி குறிஞ்சிக்குரியதாதலின் புணர்ச்சிக்குரிய எதிர்ப்பாட்டையும் அதனோடு சேர்த்து வைத்தார் என்பது கருத்து எதிர்ப்பாடு - எதிர்ப்படல். புணர்ச்சிக்குமுன் தலைவனுந் தலைவியும் எதிர்ப்படல் கைக்கிளையாகும்.

என்றாற்போல ஏறுதழுவினாற்கு உரியள் இவளெனவந்த கைக்கிளைகளெல்லாம் முல்லைக்கலி பலவற்றுள்ளுங் காண்க.

[1]'முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே' (105) என்பதனான் அவை கைக்கிளையாயின.

இனி 'எழின்மருப் பெழில் வேழம்' என்றது முதலிய நாலு பாட்டும் ஏறிய மடற்றிறமான (51) பெருந்திணை; என்னை?

**மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்**
**தேமொழி மாத ருறாஅ துறீஇய**
**காமக் கடலகப் பட்டு (கலி. 139)**

என்றாற் போல்வன வருதலின்.

'புரிவுண்ட புணர்ச்சி' என்றது முதலிய ஆறுபாட்டுந் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய (51) பெருந்திணை. இவற்றை நெய்தலுட் கோத்தார் [2]சாக்காடு குறித்த இரங்கற் பொருட்டாகலின். கூனுங்குறளும் உறழ்ந்து கூறும் பெருந்திணையும் ஊடற்பகுதியவாகலின் மருதத்துட் கோத்தார்.

**கல்லாப் பொதுவனை நீமாறு (கலி. 112)**

எனப் பொதுவியர் கூறலும்,

**நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்**
**விடாஅலோம் பென்றா ரெமர். (கலி. 112)**

எனப் [3]பொதுவர் கூறலும் மிக்க காமத்து மிடலாகிய (51) பெருந்திணையாகலின் முல்லையுட் கோத்தார்.

'நறவினை வரைந்தார்', (கூஅ) 'ஈண்டு நீர்மிசை' (க00) என்னுங் கலிகளுங் காமத்து மிகுதிறத்தான் (51) [4]அரசனை நோக்கிச் சான்றோர் கூறியவாகலின் மருதத்துக்கோத்தார். இனி,

**வான மூர்ந்த வயங்கொளி மண்டில**
**நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்டு (அகம். 11)**

எனக் காடுறையுலகத்துப் (5) பாலை வந்தது.

---

1. முன்னைய மூன்று - ஆசுரம், இராக்கதம், பைசாசம். (க0ரு)
2. சாக்காடு - இறப்பு.
3. பொதுவர் - இடையர்
4. தலைவியின் காமத்து மிகுதிறத்தை அரசனை நோக்கிச் சான்றோர் கூறிய என்க. இவை இரண்டு செய்யுளும் பெருந்திணைக்குரியன. அரசன் என்றது அரச குலத்தவனாகிய தலைவனை.

தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக
வடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின்
மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ யவுணரைக்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு
முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்
சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி
லேறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந் தியங்குந
ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
விறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய. (கலி. 2)

*[1] இது மைவரையுலகத்துப் (5) பாலை வந்தது.*

*[2] 'மறந்தவ ணமையா ராயினும்' என்னும் (ஙஎ) அகப்பாட்டுத் தீம்புனலுலகத்துப் (5) பாலை வந்தது.*

*[3] 'அருளிலார் பொருள்வயி னகல' என்னும் அகப்பாட்டினுட் பெருமணலுலகத்துப் (5) பாலை வந்தது.*

*இன்னும் பிறவுஞ் சான்றோர் செய்யுட்கண்ணே உரிப்பொருண் மயங்கியும் காலங்கண்மயங்கியும் வருவனவெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க. (13)*

**(உரிப்பொரு ளிவையெனல்)**

**14.** புணர்தல் பிரித லிருத்த லிரங்க
லூட லிவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.

*இது மேனிறுத்த முறையானன்றியும் [4]அதிகாரப்பட்டமை கண்டு உரிப்பொருள் கூறுகின்றது; உரிப்பொருள் உணர்ந்தல்லது உரிப்பொருளல்லன உணரலாகாமையின்.*

*இ—ள்: புணர்தலும் புணர்தனிமித்தமும், பிரிதலும் பிரிதனிமித்தமும், இருத்தலும் இருத்தனிமித்தமும், இரங்கலும் இரங்*

---

1. மைவரையுலகம் - குறிஞ்சி. இதனுள் வரை பிளந்து என்றதனால் குறிஞ்சி என்பது பெறப்படும். ஒண்கதிர் தெறுதலின் என்றதனானும், அவ்வெயிலேறு பெற்று என்றதனானும், அழலவிராரிடை என்றதனானும் பாலை மயங்கினமை பெறப்படும்.

2. இதனுள் "உழவர் ... ... எருதொடு வதியும்" எனக் கூறலான் மருதம் என்பது பெறப்படும். வண்டளிர் மாஅத்து என்றதனானும் வேனில் கூறியதனானும் பாலையாகும்.

3. இம்முதலையுடைய அகப்பாட்டு அச்சிட்ட புத்தகத்திலில்லை.

4. "உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே" என முதற்சூத்திரத்து அதிகாரப் பட்டமை கண்டு என்க.

கனிமித்தமும், ஊடலும் ஊடனிமித்தமும் என்ற பத்தும் ஆராயுங் காலை ஐந்திணைக்கும் உரிப்பொருளாம் என்றவாறு.

'தேருங்காலை' என்றதனாற் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும், பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும், நெய்தற்கு இரங் கலும், மருதத்திற்கு ஊடலும், அவ்வந்நிமித்தங்களும் உரித் தென்று ஆராய்ந்துணர்க. இக்கருத் தேபற்றி 'மாயோன்மேய' (5) என்பதனுள் விரித்துரைத்தவாறுணர்க.

அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃது இருவர்க் கும் ஒப்ப நிகழ்தலானும் புணர்ச்சியை முற்கூறி, புணர்ந்துழி யல்லது பிரிவின்மையானும் அது தலைவன்கண்ணதாகிய சிறப் பானுந் தலைவி பிரிவிற்குப் புலனெறிவழக்கு இன்மையானும் பிரிவினை அதன்பிற்கூறி, பிரிந்துழித் தலைவி ஆற்றியிருப்பது முல்லையாகலின் இருத்தலை அதன்பிற்கூறி, அங்ஙனம் ஆற்றி யிராது தலைவனேவலிற் சிறிது வேறுபட்டிருந்து இரங்கல் பெரும் பான்மை தலைமகளதேயாதலின் அவ்விரங்கற் பொருளை அதன் பிற்கூறி, இந்நான்குபொருட்கும் [1]பொதுவாதலானுங் காமத்திற் குச் சிறத்தலானும் ஊடலை அதன்பிற்கூறி இங்ஙனம் முறைப் படுத்தினார்.

நான்கு நிலத்தும் புணர்ச்சி நிகழுமேனும் [2]முற்பட்ட புணர்ச் சியே புணர்தற் சிறப்புடைமையிற் குறிஞ்சியென்று அதனை முற் கூறினார். [3]அவை இயற்கைப்புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற் கூட்டமும் தோழியிற்கூட்டமும் அதன்பகுதியாகிய இருவகைக் குறிக்கண் எதிர்ப்பாடும் போல்வன. தலைவன் தோழியைக் குறையுறும் பகுதியும் ஆண்டுத் தோழி கூறுவனவுங் குறைநேர்தலும் மறுத்தலும் முதலியன புணர்ச்சிநிமித்தம்.

இனி, ஓதலும் பகையும் தூதும் (25) அவற்றின் பகுதியும் பொருட்பிரிவும் உடன்போக்கும் பிரிவு. 'ஒன்றாத் தமரினும் பருவத்

1. புணர்ச்சிக்கண் புலவி (ஊடல்) நிகழ்தலானும், பரத்தைவயிற் பிரிவுபற்றி ஊடல் நிகழ்தலானும், ஊடி இருத்தலானும், ஊடல்பற்றியும் இரங்கல் நிகழ்தலானும், பொது என்றார்.

2. முற்பட்ட புணர்ச்சி - புலனெறிவழக்காகிய ஐந்திணையுள் முற்பட்ட புணர்ச்சி. அஃதாவது களவுப்புணர்ச்சி. இப்புணர்ச்சியே புணர்தற் சிறப் புடையது. அவை: இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற்கூட்டம், அதன் பகுதியாகிய பகற்குறி இரவுக்குறி என்பன போல்வன.

3. அவை - அச்சிறந்த புணர்ச்சிகள்.

துஞ் சுரத்தும்... தோழியொடு வலித்தல்' (41) முதலியன பிரிதனி மித்தம். பிரிந்தபின் தலைவி வருந்துவனவுந் தோழியாற்றுவித்தனவும் பாலையாதலிற் பின்னொருகாற் பிரிதற்கு நிமித்தமாம்; அவை பின்னர்ப் பிரியும் பிரிவிற்கு முன்னிகழ்தலின்.

இனித் தலைவி பிரிவுணர்த்தியவழிப் பிரியாரென்றிருத்தலும், பிரிந்துழிக் குறித்தபருவ மன்றென்று தானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர்க்கூறுவனவும் போல்வன இருத்தல். அப்பருவம் வருவதற்கு முன்னர்க் கூறுவன 'முல்லை சான்ற கற்பு' அன்மையிற் பாலையாம். இனிப் பருவங்கண்டு ஆற்றாது தோழி கூறுவனவும் பருவமன்றென்று வற்புறுத்தின வும் வருவரென்று வற்புறுத்தினவும் தலைவன் பாசறைக்கண் இருந்து உரைத்தனவும் அவை போல்வனவும் நிமித்தமாதலின் இருத்தனிமித்தமெனப்படும்.

இனிக் கடலுங் கானலுங் கழியுங்காண்டொறும் இரங்க லும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும், பொழுதும் புணர்துணைப் புள்ளுங் கண்டு இரங்கலும் போல்வன இரங்கல். அக்கடல் முதலியனவுந் தலைவன் நீங்குவனவுமெல்லாம் நிமித்தமாம்.

புலவி முதலியன ஊடலாம். பரத்தையும் பாணனும் முதலி யோர் ஊடனிமித்தமாம்.

[1] ஏனையவும் வழக்கியலான் நால்வகை நிலத்துஞ் சிறு பான்மை வருமேனும் பெரும்பான்மை இவை உரியவென்றற்குத் 'திணைக் குரிப்பொருளே' என்றார்.

உரிமை குணமாதலின் [2]உரிப்பொருள் பண்புத்தொகை. உதாரணம்:

**கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை**
**நாறிணர்க் குவளையோ டிடைப்பட விரைஇ**
**யைதுதொடை மாண்ட கோதை போல**
**நறிய நல்லோண் மேனி**
**முறியினும் வாயது முயங்குதற்கு மினிதே. (குறு. 62)**

[3] இக்குறுந்தொகை புணர்ந்துழி மகிழ்ந்து கூறியது.

---

1. ஏனைய என்றது அவ்வந்நிலத்திற்குரிய பொருளல்லாதனவற்றை.
2. உரிமையாகிய பொருள் என விரியும்.
3. இதனாற் புணர்ச்சி என்னும் உரிப்பொருள் கூறப்பட்டது.

அல்குபட ருழந்த வரிமதர் மழைக்கட்
பல்பூம் பகைத்தழை நுடங்கு மல்குற்
றிருமணி புரையு மேனி மடவோள்
யார்மகள் கொல்லிவ டந்தை வாழியர்
துயர முறீஇயின ளெம்மே யகல்வய
லரிவன ரரிந்துந் தருவனர் பெற்றுந்
தண்சேறு தாஅய் மதனுடை நோன்றாட்
கண்போ னெய்தல் போர்விற் பூக்குந்
திண்டேர்ப் பொறையன் றொண்டி
தன்றிறம் பெறுகவிவ ளீன்ற தாயே. (நற்றிணை. 8)

[1] *இந் நற்றிணையும்*, [2] *"முலையே முகிழ்முகிழ்த் தனவே' என்னுங் குறுந்தொகையும் புணர்தனிமித்தம்.*

அன்றவ ணொழிந்தன்று மிலையே வந்துநனி
வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்றும் யாஅவுயர் நனந்தலை
யுருடுடி மகுளியிற் பொருடெரிந் திசைக்குங்
கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்ற
மெம்மொ டிறத்தலுஞ் செல்லாய் பின்னின்
றொழியச் சூழ்ந்தனை யாயிற் றவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே
மறவ லோம்புமதி யெம்மே நறவின்
சேயித ழனைய வாகிக் குவளை
மாயிதழ் புரையு மலிர்கொ ளீரிமை
யுள்ளகங் கனல வுள்ளுதோ றுலறிப்
பழங்கண் கொண்ட கலிழ்ந்துவீ ழவிரறல்
வெய்ய வுகுதர வெரீஇப் பையெனச்
சில்வளை சொரிந்த மெல்லிறை முன்கைப்
பூவீ கொடியிற் புல்லெனப் போகி
யடர்செ யாயகற் சுடர்துணை யாக
வியங்காது வதிந்தநங் காதலி
யுயங்குசாய் சிறுபுற முயங்கிய பின்னே." (அகம். 19)

[3] *இது மறவலோம்புமதியெனப் பிரிவு கூறிற்று.*

---

1. இந் நற்றிணைச்செய்யுள் இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கண் சென்று ஆயத்தோடு கூடிய தலைமகளை ஆயத்தார் வழிபடக்கண்டு இவள் யார்மகள் என வியந்து இவள் எமக்கு எய்தற்கரியளாமெனக் கருதி இவளைப் பெற்று எனக்கு உதவிய தந்தை தாயர் வாழ்க என அவரை வாழ்த்தியது. பின்வரும் புணர்ச்சிக்கு நிமித்த மாதலின் இது புணர்ச்சி நிமித்தமாயிற்று என்பது நச்சினார்க்கினியர் கருத்து.
2. இச்செய்யுள் இரந்துபின்னின்ற தலைமகன் தலைவி இளையள் விளைவிலள் என்ற தோழிக்கு அவள் பருவம் வாய்த்தவளென உணர்த்தலின் புணர்ச்சி நிமித்தமாயிற்று.
3. இது பிரிந்துபோயதலைவன் இடைச்சுரத்து நின்று தலைவியை யுள்ளியதன் நெஞ்சினைக் கழறியதாதலின் பிரிவாயிற்று.

அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளக்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி ரெறிந்த விடுவாய் நிறைய
நெடுங்கான் முருங்கை வெண்பூத் தாஅய்
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சி
லுள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோ
ரெழுத்துடை நடுக லின்னிழல் வதியு
மருஞ்சுரக் கவலை நீந்தி யென்று
மில்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காத
லருளே காதல ரென்றி நீயே. (அகம். 53)

[1]*இது பிரிதனிமித்தம் வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறியது.*

வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறேனவர் பொய்வழங் கலரே. (குறு. 21)

[2]*இது பருவங்கண்டுழியும் பொய்கூறாரென்று ஆற்றியிருந்தது.*

அவரோ வாரார் முல்லையும் பூத்தன
பறியுடைக் கையர் மறியினத் தொழியப்
பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை யிடைமகன் சென்னிச்
சூடிய வெல்லாஞ் சிறுபசு முகையே. (குறு. 221)

[3]*இது பருவங்கண்டாற்றாது கூறியது. இது முல்லைசான்ற கற்பாயிற்று; அவன் கூறிய பருவம்வருந்துணையும் ஆற்றியிருத்தலின்.*

மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணர் ரூழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே. (குறு. 66)

---

1. இதனுள் பொருளே காதலர் என்றமையின் இது பிரிதனிமித்தமாயிற்று.

2. இது இருத்தல்.

3. இதுவும் இருத்தல்.

*இது புருவமன்றென்று வற்புறுத்தலின் இருத்தனிமித்த மாயிற்று. 'தேம்படு சிமய' என்னுங் களிற்றியானைநிரையும் இருத்தனி மித்தமாம்; இக்காலம் வருந்துணையும் ஆற்றினா ளெனத்* [1]*தான் வருந்துதலின்.*

கானலுங் கழறாது கழியும் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா
தொருநின் னல்லது பிறிதியாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
பறைவ கிளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமா ரலவ பல்காற்
கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅங்
கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிறாக் கனவு நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோ
டன்னுறு விழும நீந்துமோ வெனவே. (அகம். 170)

[2]*இவ் வகப்பாட்டு நெய்தல். இரங்க லுரிப்பொருட்டாயிற்று.*

ஞாயிறு பட்ட வகல்வாய் வானத்
தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை
யிறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் செரீஇய
விரைகொண் டவையும் விரையுமாற் செலவே. (குறு. 92)

[3]*இஃது இரங்கனிமித்தம்.*

தருக்கேம் பெருமநின் னல்கல் விருப்புற்றுத்
தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது
சூழ்ந்தவை செய்துமற் றெம்மையு முள்ளுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால். (கலி. 69)

*இஃது ஊடல்.*

பரியுடை நன்மான் பொங்குளை யன்ன
வடைகரை வேழம் வெண்பூப் பகருந்
தண்டுறை யூரன் பெண்டிர்
துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே. (ஐங்குறு. 13)

---

1. தான் என்றது தலைவனை.
2. இது, அலவனொடு படுத்துத் தூதுபோகும்படி புலம்பியதாகலின் இரங்கற் பொருட்டாயிற்று.
3. மாலைக்காலம் வந்தது; இஃது என்னை வருத்துமெனக் கருதலின் இரங்கனிமித்தமாயிற்று.

[1]இஃது ஊடனிமித்தம்.

பிறவும் வேறுபட வருவனவெல்லாம் அறிந்து இதன்கண் அடக்கிக் கொள்க. (14)

**(பாலைக்கட் குறிஞ்சியும் நெய்தலும் மயங்குமெனல்)**

**15. கொண்டுதலைக் கழியினும் [2]பிரிந்தவ ணிரங்கினு**
**முண்டென மொழிப வோரிடத் தான.**

இது முற்கூறிய ஐந்தனுட் பாலைக்கட் குறிஞ்சி மயங்குமாறும் நெய்தன் மயங்குமாறும் கூறுகின்றது.

**இ — ள்:** கொண்டு தலைக்கழியினும் - தலைவன் தலைவியை உடன்கொண்டு அவள் தமரிடத்துநின்று பிரியினும், பிரிந்து அவண் இரங்கினும் - தலைவன் உடன்கொண்டு போகாது தானே போதலில் தலைவி மனையின்கண் இருந்து இரங்கினும், ஓரிடத் தான - இவ்விரண்டும் ஓரிடத்தின்கண்ணே ஒரொழுக்கமாயின, உண்டென மொழிப - இவ்வொழுக்கந்தான் நான்கு வருணத்திலும் வேளாண் வருணத்திற்கு உண்டென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

கொண்டு தலைக்கழிதலால் இடையூறின்றிப் புணர்ச்சி நிகழுமெனினும் பிரிவு நிகழ்ந்தவாறென்னையெனின்,

**இடைச்சுர மருங்கி னவடம ரெய்திக்**
**கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கஞ ரெய்தி (41)**

என மேலே கூறுவாராதலின் தந்தையுந் தன்னையருந் தேடிப்பின் வந்து இவ்வொழுக்கத்திற்கு இடையூறு செய்வரென்னுங் கருத்தே இருவருள்ளத்தும் பெரும்பான்மை நிகழ்தலிற் பிரிவு நிகழ்ந்தவாறாயிற்று. ஆகவே பாலைக்கண்ணே குறிஞ்சி நிகழ்ந்ததாயிற்று.

உதாரணம் :

**வேனிற் பாதிரிக் கூனி மாமலர்**
**நறைவாய் வாட னாறு நாட்சுர**
**மரியார் சிலம்பிற் சீறடி சிவப்ப**
**வெம்மொ டொராறு படீஇயர் யாழநின்**
**பொம்ம லோதி பொதுள வாரி**

---

1. இதனுள் தலைவன் புறத்தொழுக்கமறிந்து அவன் பெண்டிரை வெறுத்துக் கூறினமையின் ஊடனிமித்தமாயிற்று.

2. பிரிந்தவனிரங்கலைப் பெருந்திணைக்குரியதென்பர் இளம்பூரணர்.

யரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்துச்
சுரும்புசூ ழலரி தைஇ வேய்ந்தநின்
றேம்பாய் கூந்தற் குறும்பல மொசிக்கும்
வண்டுகடிந் தோம்ப றேற்றா யணிகொள
நுண்கோ லெல்வளை தெளிர்க்கு முன்கை
மெல்லிறைப் பணைத்தோள் விளங்க வீசி
வல்லுவை மன்னா னடையே கள்வர்
பகைமிகு கவலைச் சென்னெறி காண்மார்
மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து
நாரரை மருங்கி னீர்வரப் பொளித்துக்
களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல்
கல்லா வுமணர்க்குத் தீமூட் டாகுந்
துன்புறு தகுந வாங்கட் புன்கோட்
டரிலிவர் புற்றத் தல்கிரை நசைஇ
[1]வெள்ளரா மிளிர வாங்கும்
பிள்ளை யெண்கின் மலைவயி னானே. (அகம். 257)

*இது கொண்டுதலைக்கழிதற்கண் தலைவன் நடையை வியந்தது. இஃது அகம். "அழிவிலர் முயலும்' (நற்றிணை. கூ) என்பது பாலைக்கட் புணர்ச்சி நிகழ்ந்தது.*

*இனித் தலைவி பிரிந்திருந்து மிகவும் இரங்குதலின் 'இரங் கினும்' எனச் சூத்திரஞ்செய்து, அதனானே பாலைப் பொருட் கண் இரங்கற்பொருள் நிகழுமென்றார். உதாரணம்:*

ஓங்குமலைச் சிலம்பிற் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
வூன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுட னீன்ற முடங்கர் நிழத்த
துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்
பொறிகிள ருழுவைப் பேழ்வா யேற்றை
யறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கு
நெறிபடு கவலைய நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந் திசினால் யானே பலபுலந்
துண்ணா வியக்கமொ டுயிர்செலச் சாஅய்த்
தோளுந் தொல்கவின் றொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி
மருந்துபிறி தின்மையி னிருந்தும்வினை யிலனே. (அகம். 147)

*இதனுள் வெள்ளிவீதியைப் போலச் செல்லத்துணிந்து, யான் பலவற்றிற்கும் புலந்திருந்து, பிரிந்தோரிடத்தினின்றும் பிரிந்த பெயர்வுக்குத் தோணலந்தொலைய உயிர்செலச்சாஅய்,*

---

1. இதன்கண், நின் - னல மென்பணைத்தோ ளெய்தினமென வருதலின் புணர்ச்சி நிகழ்ந்தது என்றார்.

இரங்கிப் பிறிது மருந்தின்மையிற் செயலற்றே மிகவும் இரங்கிய வாறு [1] மெய்ப்பாடுபற்றி யுணர்க. இஃது அகம்.

'வானமூர்ந்த' என்னும் (11) அகப்பாட்டினுள்

மெய்புகு வன்ன கைகவர் முயக்க
மவரும் பெறுகுவர் மன்னே

எனக்கூறி, அழுதன் மேவாவாய்க் கண்ணுந் துயிலுமென இரக்கமீக் கூறியவாறு முணர்க. 'குன்றியன்ன' என்னும் (133) அகப்பாட்டும் அது. இவை பாலைக்கண் இரங்கல் நிகழ்ந்தன.

இங்ஙனம் இச் சூத்திரவிதி உண்மையிற் சான்றோர் அகத்தினும் கலியினும் ஐங்குறுநாற்றினும் பாலைக்கண்ணே உடன் போக்கு நிகழ்ந்த செய்யுட்களைக் கோத்தாரென்றுணர்க.

இல்லிருந்து செந்தீயோம்பல் வேளாளர்க்கு இன்மையிற் கொண்டு தலைக்கழிதல் அவர்க்கு உரியதாயிற்று. ஒழிந்த மூன்று வருணத்தோருந் தமக்கு உரிய பிரிவின்கட் செந்தீயோம்புவாரை நாட்டிப் பிரிப; ஆகலான் அவர்க்கு ஏனைப் பிரிவுகள் அமைந்தன. இதனைக் 'கொடுப்போரின்றியுங் கரணமுண்டே' (143) எனக் கற்பியலிற் [2] கரணம் வேறாகக் கூறுமாறு ஆண்டுணர்க. 'வேர் முழுதுலறிநின்ற' என்னும் (145) மணிமிடைபவளத்துள்,

[3] கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பி
னூழடி யொதுங்கினு முயங்கும்

எனவும், 'கிளியும் பந்தும்' என்னும் (49) களிற்றியானை நிரையுள்,

[3] அல்குபத மிகுத்த கடியுடை வியனகர்

எனவும், நெல்லுடைமை கூறிய அதனானே வேளாண்வருண மென்பது பெற்றாம். (151)

---

1. செயலற்றேன் என்னுந் தலைவி கூற்றினால் அவளிரக்கந் தோன்றலின் மெய்ப்பாடுபற்றி யுணர்க என்றார். அவள் கூற்று ஈண்டுக் கையறல் என்னும் மெய்ப்பாட்டை யுணர்த்துங் குறிப்பாகும். கையறல், 24வது மெய்ப்பாடு. இதனினூங்கு வருவன கைக்கிளைக்கும் பெருந்திணைக்குமுரிய மெய்ப்பாடுகள். இதனை மெய்ப்பாட்டியல் கஅ-ம் சூத்திரநோக்கியறிக.

2. கரணம் - வேள்விச்சடங்கு.

3. கூழ் - சோறு. அது நெல்லையுணர்த்திற்று. பதம் - உணவு. அதுவும் நெல்லை யுணர்த்திற்று. இவை நச்சினார்க்கினியர் கருத்தாம்.

### (பாலைக்கட் குறிஞ்சி மயங்குமெனல்)

**16. கலந்த பொழுதுங் காட்சியு மன்ன.**

*இதுவும் பாலைக்கட் குறிஞ்சி மயங்குமென்கிறது.*

*இ — ள்: கலந்த பொழுதுங் காட்சியும் - இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்த காலமும் அதன் முன்னர்த்தாகிய [1]வழிநிலைக்காட்சி நிகழ்ந்த காலமும், அன்ன - முன்னர்ச் சூத்திரத்துட் கொண்டு தலைக்கழிந்த காலத்தை உடைய என்றவாறு.*

*என்றது, முன்னர்க் குறிஞ்சி பாலைக்குரிய இருவகை வேனிற் கண் நிகழ்ந்தாற்போல் இவையும் இருவகை வேனிற்கண் நிகழு மென்றவாறு. மழைகூர் காலத்துப் புறம்போந்து விளையாடுத லின்மையின் எதிர்ப்பட்டுப் புணர்தல் அரிதாகலானும், அது தான் இன்பஞ் செய்யாமையானும் இருவகை வேனிற்காலத்தும் இயற்கைப்புணர்ச்சி நிகழுமென்றது இச்சூத்திரம்.*

*[2] முன்னர்க் கூதிரும் யாமமும் முன்பனியுஞ் சிறந்ததென்றது இயற்கைப்புணர்ச்சிப் பின்னர்க் களவொழுக்கம் நிகழ்தற்குக் காலமென்றுணர்க. அது.*

**பூவொத் தலமருந் தகைய வேவொத்**
**தெல்லாரு மறிய நோய்செய் தனவே**
**தேமொழித் திரண்ட மென்றோண் மாமலைப்**
**பரீஇ வித்திய வேனற்**
**குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே** **(குறுந். 72)**

*எனவரும் இக் குறுந்தொகையுட் குரீஇயோப்புவாள் கண்ணென வழிநிலைக்காட்சியைப் பாங்கற்குக் கூறினமையின் அத்தினைக் கதிர் முற்றுதற்குரிய இளவேனிலும் பகற்பொழுதுங் காட்சிக்கண் வந்தன.*

*"கொங்குதேர் வாழ்க்கை" என்பதும் இளவேனிலாயிற்று; தும்பி கொங்குதேருங்காலம் அதுவாகலின்.*

*கலத்தலுங் காட்சியும் உடனிகழுமென்றுணர்க. கலத்தலின் றிக் காட்சி நிகழ்ந்ததேல், உள்ளப்புணர்ச்சியேயாய் மெய்யுறு புணர்ச்சியின்றி வரைந்துகொள்ளுமென்றுணர்க. (16)*

---

1. வழிநிலைக்காட்சி எனினும் குறிப்பறித லெனினும் ஒக்கும். அது தலைவியைக் கண்டபின் நிகழ்வதாகலின் வழிநிலைக்காட்சி எனப்பட்டது.

2. சா-ம் எ-ம் சூத்திரங்களை நோக்கியறிக.

(முதற்பொருள் இருவகைத்தெனல்)

**17. முதலெனப் படுவ தாயிரு வகைத்தே.**

இது முற்கூறிய முதற்பகுதியைத் தொகுத்து எழுதிணையும் இவ்வாற்றானுரிய வென்கின்றது.

இ – ள்: முதலெனப்படுவது - முதலென்று கூறப்படும் நில னும் பொழுதும், ஆயிரு வகைத்து - அக்கூறியவாற்றான் இரு வகைப்படும் யாண்டும் என்றவாறு.

இது, 'கூறிற்றெனல்' (666) என்னும் உத்திவகை.

இதன் பயன் முதல் இரண்டுவகை என்றவாறாம். தமக்கென நிலனும் பொழுதும் இல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் நிலனில்லாத பாலையும் பிறமுதலோடு மயங்கிற்றேனும் அவை மயங்கிய நிலனும் பொழுதும் அவ்வத்திணைக்கு முதலெனப் படுமென்பதாம். இது முன்னின்ற சூத்திரத்துக்கும் ஒக்கும். (17)

(கருப்பொரு ளிவையெனல்)

**18. தெய்வ முணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவுங் கருவென மொழிப.**

இது நிறுத்தமுறையானேயன்றி [1]அதிகாரப்பட்டமையின் உரிப்பொருள் கூறி, ஒழிந்த கருப்பொருள் கூறுதல் நுதலிற்று.

இ – ள்: தெய்வம் உணாவே மாமரம் புள்பறை [2]செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ - எல்லாத் திணைக்குந் தெய்வம் உணா விலங்கு மரம் புள்ளுப் பறை தொழிலென்று இவற்றை யாழின் கூற்றோடே கூட்டி, அவ்வகை பிறவும் கரு என மொழிப - அவைபோல்வன பிறவுங் கருவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'யாழின் பகுதி' என்றதனான் மற்றைய போலாது பாலைக் குப் பாலையாழென வேறுவருதல் கொள்க. 'அவ்வகை பிறவும்' என்றதனான் எடுத்தோதிய தெய்வம் ஒழிய அவற்று உட்பகுதி யாகிய தெய்வமும் உள. அவை 'மாயோன்மேய' (5) என்புழிக் காட் டினாம். இதனானே பாலைக்குத் தெய்வமும் என்றாயிற்று.

---

1. அதிகாரப்பட்டமையிற் கூறி என இயையும்.

2. செய்தி - தொழில்.

இன்னும் 'அவ்வகை' என்றதனானே பாலைக்கு நிலம்பற்றாது காலம்பற்றிக் கருப்பொருள் வருங்கால் தம்மியல்பு திரிய வருவனவும் வருமென்று கொள்க. 'எந்நில மருங்கிற்பூ' (19) என்பதனாற் பூவும் புள்ளும் வரைவின்றி மயங்குமெனவே [1]ஒழிந்த கருவும் மயங்குமென்பது சூத்திரத்துப் 'பொருளன்றியும்' (659) என்பதனான் உரையிற் கொள்க. அது 'அயந்திகழ் நறுங்கொன்றை' என்னும் நெய்தற்கலியுட் காண்க.

முல்லைக்கு **உணா**, வரகுஞ் சாமையும் [2]முதிரையும்; **மா**, உழையும் புல்வாயும் முயலும்; **மரம்**, கொன்றையுங் குருந்தும்; **புள்**, கானக்கோழியும் சிவலும்; **பறை**, ஏறுகோட்பறை; **செய்தி**, நிரைமேய்த்தலும் வரகு முதலியன களைகட்டலுங் கடாவிடுதலும்; **யாழ்**, முல்லையாழ். பிறவுமென்றதனால், **பூ**, முல்லையும் பிடவுந்[3]தளவுந்தோன்றியும்; **நீர்**, கான்யாறு; **ஊர்**, [4]பாடியுஞ் சேரியும் பள்ளியும்.

குறிஞ்சிக்கு **உணா**, ஐவனநெல்லுந் தினையும் மூங்கிலரிசியும்; **மா**, புலியும் யானையுங் கரடியும் பன்றியும்; **மரம்**, அகிலும் ஆரமுந்தேக்குந் திமிசும் வேங்கையும்; **புள்**, கிளியும் மயிலும்; **பறை**, முருகியமுந் தொண்டகப்பறையும்; **செய்தி**, தேன் அழித்தலுங் கிழங்கு அகழ்தலுந் தினை முதலியன விளைத்தலுங் கிளிகடிதலும்; **யாழ்**, குறிஞ்சியாழ். பிறவுமென்றதனால், **பூ**, காந்தளும் வேங்கையுஞ் சுனைக்குவளையும்; **நீர்**, அருவியுஞ் சுனையும்; **ஊர்**, சிறுகுடியுங் குறிச்சியும்.

மருதத்திற்கு **உணா**, செந்நெல்லும் வெண்ணெல்லும்; **மா**, எருமையும் நீர்நாயும்; **மரம்**, வஞ்சியுங் காஞ்சியும் மருதமும்; **புள்**, தாராவும் நீர்க்கோழியும்; **பறை**, மணமுழவும் நெல்லரிகிணையும்;

1. ஒழிந்த - பூவும் புள்ளும் ஒழிந்த.
2. முதிரை - எள்ளுக் கொள்ளுப் பயறு உழுந்து அவரை துவரை கடலை மொச்சை என்னு மெண்வகை முதிரைக் கூலம் என்பர் அடியார்க்குநல்லார்.
3. தளவு - முல்லையின் பேதம். செம்முல்லையுமாம்.
4. பாடி முதலியன முல்லைநிலத் தூர்களின் பேதம் போலும். இக்காலத்துத் தரங்கம்பாடி எனவும், புதுச்சேரி எனவும், திருச்சினாப்பள்ளி, ஆலைப்பள்ளி எனவும் வழங்குவன அக்காலத்து இடையர் வாழ்ந்த இடங்கள் போலும்.

*செய்தி*, நடுதலுங் களைகட்டலும் அரிதலுங் கடாவிடுதலும்; **யாழ்**, மருதயாழ். பிறவுமென்றதனால் **பூ**, தாமரையுங் கழுநீரும்; **நீர்**, யாற்றுநீரும் மனைக்கிணறும் பொய்கையும்; **ஊர்**, ஊர்க ளென்பனவேயாம்.

நெய்தற்கு **உணா**, மீன்விலையும் உப்புவிலையும்; **மா**, உமண் பகடு போல்வன; முதலையுஞ் சுறாவும் மீனாதலின் மாவென்றல் மரபன்று. **மரம்**, புன்னையும் ஞாழலுங் கண்டலும்; **புள்**, அன்ன மும் அன்றிலும் முதலியன; **பறை**, மீன்கோட்பறை; **செய்தி**, மீன் படுத்தலும் உப்புவிளைத்தலும் அவைவிற்றலும்; **யாழ்**, நெய்தல் **யாழ்**, பிறவுமென்றதனால் **பூ**, கைதையும் நெய்தலும்; **நீர்**, மணற் கிணறும் உவர்க்குழியும்; **ஊர்**, பட்டினமும் பாக்கமும்.

இனிப் பாலைக்கு **உணா**, ஆறலைத்தனவுஞ் சூறைகொண் டனவும்; **மா**, வலியழிந்த யானையும் புலியுஞ் செந்நாயும்; **மரம்**, வற்றின இருப்பையும் ஓமையும் உழிஞையும் ஞெமையும்; **புள்**, கழுகும் பருந்தும் புறாவும்; **பறை**, சூறைகோட்பறையும் நீரை கோட்பறையும்; **செய்தி**, ஆறலைத்தலுஞ் சூறைகோடலும்; **யாழ்**, பாலையாழ். பிறவுமென்றதனால் **பூ**, மராவுங் குராவும் பாதிரி யும்; **நீர்**, அறு நீர்க் கூவலுஞ் சுனையும்; **ஊர்**, பறந்தலை.

இன்னும் பிறவுமென்றதனானே இக் கூறியவற்றிற்குரிய மக்கள் பெயருந் தலைமக்கள் பெயருங் கொள்க. அவை 'பெயரும் வினை யும்' (20) என்னுஞ் சூத்திரத்துட் காட்டுதும். பிறவு மென்றதனாற் கொள்வன சிறுபான்மை [1]திரிவுபடுதலின், பிறவுமென்று அடக் கினார். (18)

**(ஒரு நிலக் கருப்பொருள் ஒழிந்த நிலத்து மயங்குமெனல்)**

**19.** **எந்நில மருங்கிற் பூவும் புள்ளு**
**மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்**
**வந்த நிலத்தின் பயத்த வாகும்.**

இது முற்கூறிய கருப்பொருட்குப் புறனடை.

**இ — ள்:** எந்நில மருங்கிற் பூவும் புள்ளும் - எழுதிணை நிகழ்ச்சி யவாகிய நால்வகை நிலத்துப் பயின்ற பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும் - தத்தமக்கு உரியவாகக் கூறிய

---

1. திரிவுபடுதல் - வேறுபடல்.

நிலத்தொடுங் காலத்தொடும் நடவாமற் பிறநிலத்தொடுங் காலத் தொடும் நடப்பினும், வந்த நிலத்தின் பயத்த ஆகும் - அவை வந்த நிலத்திற்குக் கருப்பொருளாம் என்றவாறு.

ஒடு 'அதனோடியைந்த ஒருவினைக் கிளவி' யாதலின் உடன் சேறல் பெரும்பான்மையாயிற்று. "வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தின்" என்பதனான் [1]நிலத்தின் பயத்தவாமெனப் பொழு தினையும் நிலமென்று அடக்கினார். பூவைக் கருவென ஓதிற்றில ரேனும் முற்கூறிய மரத்திற்குச் சினையாய் அடங்கிற்று. [2]ஒன்றென முடித்தலான் நீர்ப்பூ முதலியனவும் அடங்கும். இங்ஙனம் வரு மிடஞ் செய்யுளிடமாயிற்று. உதாரணம்:

தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின். (கலி. 52)

இது மருதத்துப்பூ, குறிஞ்சிக்கண் வந்தது.

உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல
விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை
கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன. (கலி. 3)

இது மருதத்துப்பூ, பாலைக்கண் வந்தது.

கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூ ற்றத்
தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க
வொன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்.
(கலி. 27)

இது குறிஞ்சிக்குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற் கண் வருதலிற் பொழுதொடு புள்ளு மயங்கிற்று. கபிலர் பாடிய [3]பெருங்குறிஞ்சியில் (குறிஞ்சிப்பாட்டு) வரைவின்றிப் பூ மயங்கிய வாறுகாண்க. பிறவும் இவ்வாறு மயங்குதல் காண்க. ஒன்றென முடித் தலாற் பிறகருப்பொருள் மயங்குவன உளவேனுங் கொள்க. (19)

**(திணைப்பெயருந் திணைநிலைப்பெயரு மிருவகையவெனல்)**

**20.** பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே.

இது 'பிறவும்'(18) என்றதனால் தழுவிய பெயர்ப்பகுதி கூறு கின்றது.

---

1. காலமும் இடப்பொருளில் வருதலின் நிலத்துட் காலமுமடங்குமென்பார், நிலமென்று அடக்கினார் என்றார்.

2. ஒருத்தி.

3. பத்துப்பாட்டுள் ஒன்று.

இ – ள்: திணைதொறும் மரீஇய பெயர் - நால்வகை நிலத்தும் மரீஇப்போந்த குலப்பெயரும், திணைநிலைப்பெயர் - உரிப் பொருளிலே நிற்றலையுடைய பெயரும், பெயரும் வினையுமென்று ஆயிருவகைய -[1]பெயர்ப்பெயரும் வினைப்பெயருமென்று அவ்விரண்டு கூற்றையுடையவாம் என்றவாறு.

நால்வகை நிலத்தும் மருவிய குலப்பெயராவன:

குறிஞ்சிக்குக் கானவர் வேட்டுவர் குறவர் இறவுளர் குன்றுவர் வேட்டுவித்தியர் குறத்தியர் குன்றுவித்தியர்; [2]ஏனைப் பெண்பெயர் வருமேனும் உணர்க.

முல்லைக்குக் கோவலர் இடையர் ஆயர் பொதுவர் இடைத்தியர் கோவித்தியர் ஆய்த்தியர் பொதுவியர்.

நெய்தற்கு நுளையர் [3]திமிலர் பரதவர் நுளைத்தியர் பரத்தியர்; ஏனைப் பெண்பெயர் வருமேனும் உணர்க.

மருதத்திற்குக் களமர் உழவர் கடையர் உழத்தியர் கடைச்சியர்; ஏனைப் பெண்பெயர் வருமேனும் உணர்க.

முன்னர் 'வந்த நிலத்தின் பயத்த' (19) என்புழிக் காலத்தையும் உடன்கோடலின் ஈண்டுந் திணைதொறு மருவுதலும் பொழுதொடு மருவுதலும் பெறப்படுதலிற் பொழுது முதலாக வரும் பாலைக்குத் திணைதொறுமரீஇய பெயருந் திணைநிலைப் பெயருங் கொள்க. எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர் எனவும் மீளி விடலை காளை எனவும் வரும்.

இனி உரிப்பொருட்குரிய தலைமக்கள் பெயராவன, பெயர்ப் பெயரும் நாடாட்சிபற்றி வரும் பெயருமாம். குறிஞ்சிக்கு வெற்பன் சிலம்பன் பொருப்பன், கொடிச்சி; [4]இஃது ஆண்பாற்கேலாத பெயராயினும் நிலையென்றதனாற் கொள்க. முல்லைக்கு அண்

1. பெயர்ப்பெயர், பொருள்பற்றி வரும் பெயர். வினைப்பெயர் - தொழில்பற்றி வரும் பெயர்.
2. ஏனைப் பெண்பெயர் என்றது கூறாத ஆண்பாற்கேற்ற பெயரை.
3. இக்காலத்துத் திமிலிச்சி எனப் பெண்பாற்பெயர் ஒருமையாய் வழங்குகின்றது.
4. இஃது என்றது கொடிச்சி என்னும் பெயரை. இதற்கு ஏற்ற ஆண்பாற்பெயர் இல்லையென்பது கருத்து.

ணல் தோன்றல் குறும்பொறைநாடன், மனைவி. நெய்தற்குக் கொண்கன் துறைவன் சேர்ப்பன் மெல்லம்புலம்பன், தலைவிபெயர் வந்துழிக் காண்க. மருதத்திற்கு மகிழ்நன் ஊரன், மனையோள் என வரும். இக்காட்டிய இருவகையினும் 'பெயர்ப்பெயரும் வினைப் பெயரும் பாடலுட்பயின்ற வகையாற் பொருணோக்கியுணர்க.

ஈண்டுக்கூறிய திணைநிலைப்பெயரை 'ஏவன் மரபின்' (24) என்னுஞ் சூத்திரத்து அறுவகையரெனப் பகுக்குமாறு ஆண் டுணர்க. (20)

**(திணைதொறுமரீஇய பெயரினருள்ளும் தலைவராக வழங்கப்படுவாருமுளர் எனல்)**

**21.** ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய
ராவயின் வரூஉங் கிழவரு முளரே.

இது முன்னர்த் திணைதொறுமரீஇய பெயருடையோரி லுந் திணைநிலைப் பெயராகிய தலைமக்களாய் வழங்குவாரும் உளரென முல்லைக்குங் குறிஞ்சிக்கும் எய்தாததெய்வித்தது.

**இ — ள்:** ஆடூஉத் திணைப்பெயர் - முற்கூறிய ஆண்மக்களா கிய திணைதொறுமரீஇய பெயர்களுள், ஆயர் வேட்டுவர் வரூஉங் கிழவரும் உளர் - ஆயரிலும் வேட்டுவரிலும் வருங் கிழவரும் உளர் -ஆயரிலும் வேட்டுவரிலும் வருங் கிழவரும் உளர், ஆவயின் (வரூஉங் கிழவியரும் உளர்) - அவ்விடத்து வருந் தலைவியரும் உளர் என்றவாறு.

ஆயர் வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதி னாரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலங்கட்கு உரிய ஏனைப் பெயர்களான் வருவனவுங் கொள்க.

தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு
முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம்
புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் [2]பொதுவன்மற் றென்னை
முற்றிழை யேஎர் மட நல்லாய் நீயாடுஞ்

---

1. வெற்பன் சிலம்பன் அண்ணல் தோன்றல் என்பன போல்வன பெயர்ப்பெயர். குறும்பொறைநாடன் கானகநாடன் என்பன போல்வன நாடாட்சி பற்றி வரும் பெயர்.

2. பொதுவன், இது திணைதொறுமரீஇய பெயரால் திணைநிலைப் பெயர் வந்தது. பிறவுமிவ்வாறு கொள்க.

சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லா நீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்றதிலை மன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ
யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா
யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவ்வைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன். (கலி. 111)

[1]ஆயர் மகனையுங் காதலை கைம்மிக
ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து. (கலி. 107)

தோழிநாம்
காணாமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க வுரைத்தார்க்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
புல்லினத் [2]தாயர் மகன். (கலி. 115)

என்றாற்போல்வன பிறவும் வருவன கொள்க.

இன்னும் 'ஏனலு மிறங்குகதி ரிறுத்தன' என்னும் அகப்பாட்டி னுள் 'வானிணப் புகவிற் கானவர் தங்கை' எனவும், 'மெய்யீற்றீரா' என்பதனுள் 'வேட்டுவற் பெறலோ டமைந்தனை' எனவும் வரு வனவும் பிறவுங் கொள்க. வேட்டு என்னுந் தொழிலுடையானை வேட்டுவ னென்றலிற் குறிப்பு வினைப்பெயர்.

குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையண் முளைவா ளெயிற்ற
ளிளைய ளாயினு மாரணங் கினளே. (ஐங்குறு. 256)

இது வருத்தும் பருவத்தளல்லள் என்ற தோழிக்குக் கூறியது. இப்பத்தினுள் 'குறவன்... மகள்' எனக் கூறுவன பல பாட்டுக்கள் உள; அவையுங் கொள்க. இவ்வாற்றான் இந்நிலத்து மக்கள் பெய ரும் பெற்றாம். ஏனைய பெயர்களில் வந்தனவுளவேற் கொள்க. (21)

1. 2. ஆயர்மகன் என்பதும் திணைதொறுமரீஇய பெயர் திணை நிலைப் பெயரானது.

### (ஒழிந்த திணைதொறுமரீஇய பெயரினருள்ளும் தலைவராக வழங்கப்படுவாருமுளரெனல்)

22. ஏனோர் பாங்கினு மெண்ணுங் காலை
யானா வகைய திணைநிலப் பெயரே.

இது முல்லையுங் குறிஞ்சியும் ஒழிந்தவற்றுள் திணைதொறு மரீஇய பெயருடையோரிலுந் திணைநிலைப் பெயராகிய தலை மக்களாய் வழங்குவாரும் உளரென எய்தாததெய்துவித்தது.

இ – ள்: ஏனோர் பாங்கினுந் திணைநிலைப்பெயர் எண்ணுங் காலை - ஒழிந்த பாலைக்கும் நெய்தற்கும் உரியராகக் கூறிய மக்கள் கூற்றினும் வருந் தலைமக்கள் பெயரை ஆராயுங்காலத்து, ஆனாவகைய - அவை பெரும்பான்மையாகிய கூறுபாட்டினை யுடைய என்றவாறு. உதாரணம்:

[1]சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
கொலைவி லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென நினைதி நீயே
யணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே. (ஐங்குறு.363)

இவ் வைங்குறுநூறு உடன்போகின்றான் நலம்பாரட்டிய கூற்றாம்.

[2]முளவுமா வல்சி யெயினர் தங்கை
யிளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வென்வேல் விடலை விரையா தீமே. (ஐங்குறு. 364)

இவ் வைங்குறுநூறு கொண்டுடன்போங் காலத்திற்குக் கொண்டுடன் போக்கு ஒருப்படுத்துவலென்றது.

கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நலமா ணெயிற்றி போலப் பலமிக
நன்னல நயவர வுடையை
யென்னோற் றனையோ மாவீன் றளிரே. (ஐங்குறு. 365)

இவ் வைங்குறுநூறு வரைவிடை வைத்துப் போகின்றான் மாவினை நோக்கிக் கூறியது. ஏனைப் பெயர்க்கண் வருவன வந்துழிக் காண்க.

---

1. இதனுள் எயினர் தங்கை என்பது பாலையுள் திணைதொறு மரீஇய பெயர் திணைநிலைப்பெயரானதற்குதாரணம்.

2. இதனுள் எயிற்றி என்பதும் மேற்குறித்தவாறு வந்தது.

[1]முற்றா மஞ்சட் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி யிறவின்
கணங்கொள் குப்பை யுணங்குதிற நோக்கிப்
புன்னையங் கொழுநிழன் முன்னுய்த்துப் பரப்புந்
துறைநணி யிருந்த பாக்கமு முறைநனி
யினிதும னளிதோ தானே துனிதுறந்
தகன்ற வல்கு லைதமை நுசுப்பின்
மீனெறி பரதவர் மடமகண்
மானோர் நோக்கங் காணா வூங்கே. (நற்றிணை. 101)

*இது வரைதற்பொருட்டுத் தலைவி வேறுபாட்டிற்கு ஆற்றாத தோழி சிறைப்புறமாகக் கூறியது.*

அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லைக்
குறுக லோம்புமின் சிறுகுடிச் செலவே
யிதற்கிது மாண்ட தென்னா ததற்பட்
டாண்டொழிந் தன்றே மாண்டகை நெஞ்ச
மயிற்க ணன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மட மகள்
கண்வலைப் படூஉங் கான லானே. (குறுந். 184)

*இது கழறிய பாங்கற்குக் கூறியது.*

கடுந்தே ரேறியுங் காலிற் சென்றுங்
............ .......... .......... .............
என்னினை யுங்கொல் பரதவர் மகளே. (நற்றிணை. 349)

*இது நற்றிணை.*

*'இவளே, கான னண்ணிய' என்னும்* **நற்றிணைப்** *(45) பாட்டினுள், 'கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே' என்றது அருமை செய்தயர்த்தலின் அவனை இகழ்ச்சிக் குறிப்பால் தலைமையாகக் கூறினாள். ஏனைப் பெண்பெயர்க்கண் வருவனவும் வந்துழிக் காண்க.*

*'ஏனோர் பாங்கினும்' எனப் பொதுப்படக்கூறிய அதனான் மருதநிலத்து மக்களுள் தலைமக்கள் உளராகப் புலனெறி வழக்கஞ் செய்த செய்யுட்கள் வந்தன உளவேற் கண்டுகொள்க. (22)*

**(அடியோரும் வினைவலரும் தலைமக்களாதற் குரியரெனல்)**

**23. [2]அடியோர் பாங்கினும் [3]வினைவலர் பாங்கினும்**
**கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்.**

---

1. இதனுள் "பரதவர் மடமகள்" என்பது நெய்தற்கண் திணை தொறு மரீஇய பெயர் திணைநிலைப் பெயரானதற்குதாரணம். மேல் வருவனவுமன்ன.
2. அடியோர் என்றது ஒருவர் இல்லத்திருந்து அவர் இல்லத்துக்குரிய குற்றேவல் செய்வோரை.
3. வினைவலர் என்பது பிறர்க்குரிய புறத்தொழில்களை அவர் ஏவலின்படி செய்வோரை. வினைவலபாங்கினும் எனவும் பாடம்.

இது, மேல் நால்வகை நிலத்து மக்களுந் தலைமக்களாகப் பெறுவரென்றார். அவரேயன்றி இவருந் தலைமக்களாகுப கைக்கிளை பெருந்திணைக்கணென்கின்றது.

இ – ள்: அடியோர் பாங்கினும் - பிறர்க்குக் குற்றேவல் செய் வோரிடத்தும், வினைவலர் பாங்கினும் - பிறர் ஏவிய தொழிலைச் செய்தல் வல்லோரிடத்தும், கடிவரை யிலபுறத்து என்மனார் புலவர் - தலைமக்களாக நாட்டிச் செய்யுட் செய்தல் நீக்கப் படாது நடுவணைந்திணைப் புறத்துநின்ற கைக்கிளை பெருந் திணைகளுள் என்றவாறு.

கூன்பாட்டினுள்,

நம்மு னகுதற் றொடீஇயர் நம்முணா
முசாவுவங் கோனடி தொட்டேன்

எனவும்,

பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாமை வேண்டுவல் (கலி. 94)

எனவும் பெருந்திணைக்கண் அடியோர் தலைவராக வந்தது. என்னை? கோன் அடிதொட்டேன் என்றமையானுங் கோயில் என்றமையானும் இவர்கள் குற்றேவன் மாக்களாயிற்று.

'ஏஎ யிஃதொத்தன்' என்னும் குறிஞ்சிக்கலியுள்,

போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயி னல்லதை நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண் பவர். (கலி. 62)

தீயகாமம் இழிந்தோர்க்குரிமையின், இதுவும் அடியோர் தலைவராக வந்த கைக்கிளை. 'அடியோர்' எனவே இருபாற் றலைமக்களும் அடங்கிற்று. கடிவரையில'என்றதனான் அவருட் பரத்தையரும் உளரென்று கொள்க.

'இகல்வேந்தன்' என்னும் முல்லைக்கலியுள்,

மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ
ராயனை யல்லை பிறவோ வமரருண்
ஞாயிற்றுப் புத்தேண் மகன் (கலி. 108)

என்பதனால் தலைவன் வினைவல பாங்கனாயினவாறு காண்க. இதனுள்,

புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
வினத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ

என்றவழி, 'எமரேவலான் யாஞ் செய்வதன்றி யாங்கள் ஏவ நின்னெஞ்சம் இத்தொழில்கள் செய்கின்றனவில்லை' என்றலின் வினைவல பாங்கினளாய தலைவி கூற்றாயிற்று.

'யாவரின்' என்னும் முல்லைக்கலியுள்,

வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே லெம்மை
யிகந்தாரே யன்றோ வெமர். **(கலி. 112)**

இதுவும் வினைவல பாங்கினளாய தலைவியை நோக்கி அத்தலைவன் கூறினது.

"நலமிக நந்திய" என்னும் முல்லைக்கலியுள்,

பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற தின்னுங் குரல்போற் பொருமுர
றுருமி னதிருங் குரல்போற் பொருமுர
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே. **(கலி. 113)**

இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற் போகல் வேண்டுமென்றமையானும், நல்லேறும் நாகும்போல நாமுங் கூடப்போகல் வேண்டுமென்றமையானும், தலைவன் வினைவல பாங்கினனாயிற் றென்க. வினைவல்லானென்னாது பாங்கினென்றதனால் தமரேவல் செய்வது பெறுதும். இஃது அவ்வந்நிலத்து இழிந்தோர்க்கு எஞ்ஞான்றுந் தொழிலேயாய் நிகழுமென்றும்[1] புனங்காவலும் படுபுள்ளோப்புதலும் இவ்வா றன்றி உயர்ந்தோர் விளையாட்டாகி இயற்கைப் புணர்ச்சிப் பின்னர்ச் சின்னாளிற் றவிர்வரென்றும் வேறுபாடுணர்க. இக் கூறிய இருதிறத்தோருந் தமக்குரிய ரன்மையான் அறம்பொரு ளின்பம் வழாமை நிகழ்த்துதல் அவர்க்கரிதென்பது பற்றி இவற்றை அகப்புறமென்றார். (123)

---

1. ஐந்திணைக்குரிய உயர்ந்த தலைமக்களுள் தலைவியும் புனங்காவலும் படுபுள்ளோப்பலுமாகிய தொழில் செய்கின்றாளாதலின் அவளும் வினை வலருளடங்கி இழிந்தோளாவள் கொல்லோ என ஓர்ஐய நிகழுமன்றே. அவ்வையத்தை நீக்கற்கு உயர்ந்தோர் விளையாட்டென்றார். புனங்காவல் - குறிஞ்சிக்குரியது. படுபுள்ளோப்பல் - இதற்கு தினைக்கதிரில் வீழும் பறவை களை ஓப்பல் என்று கூறலாமெனினும் தினைக்காவல் என்பதனுள் காவல் என்றதனால் அதுவும் அடங்குமாதலின் நெய்தற்கண் வெயிலில் உணங்க வைக்கும் புலான் மேல் வீழும் புள்ளோப்பலையே கூறினார் என்று கூறல் பொருட் பயனுடைத்தாம். அதற்கு இலக்கியம், "கடும்புலால் புன்னை கடி யுந் துறைவ, படும்புலாற் புட்கடி வாள்புக்க - தடம்புலாந், தாழைமா நீழற் றதைந்துயர்ந்த தாழ்பொழி, லேழைமா னோக்கி யிடம்" (திணைமாலை நூற் - 44) என்னுஞ் செய்யுள். "கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி - எக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇ" (அகம். உ0) என்பதுமாம்.

(*தலைமக்களாதற்குச் சிறந்தாரிவரெனல்*)

**24.** [1]**ஏவன் மரபி னேனோரு முரிய**
**ராகிய நிலைமை யவரு மன்னர்.**

*இது முன்னர்ப் 'பெயரும் வினையும்' (20) என்பதனுள் திணைதொறு மரீஇய பெயருந் திணைநிலைப்பெயருமெனப் பகுத்த இரண்டனுள் திணைதொறுமரீஇய பெயருள் தலைவ ராதற்குரியாரை அதிகாரப்பட்டமையிற்கூறி அங்ஙனந் தலை வராதற்குரிமையின் அடியோரையும் வினைவல பாங்கினோரை யும் அதன்பிற்கூறிப் பின்னர்நின்ற திணைநிலைப்பெயராதற்குச் சிறந்தார் அறுவகையரெனப் பகுக்கின்றது.*

**இ — ள்:** *மரபின் - வேதநூலுட் கூறிய இலக்கணத்தானே, ஏவல் ஆகிய நிலைமை யவரும் - பிறரை ஏவிக்கொள்ளுந் தொழில் தமக்குளதாகிய தன்மையையுடைய அந்தணர் அரசர் வணிகரும், அன்னர் ஆகிய அவரும் - அம்மூவரையும் போலப் பிறரை ஏவிக்கொள்ளுந் தன்மையராகிய குறுநிலமன்னரும் அரசராற் சிறப்புப் பெற்றோரும், ஏனோரும் - நால்வகை வருண மென்று எண்ணிய வகையினால் ஒழிந்துநின்ற வேளாளரும், உரியர் - உரிப்பொருட்டலைவராதற்கு உரியர் என்றவாறு.*

*ஆகிய என்பதனை ஏவலொடும் அன்னரொடுங் கூட்டுக. எனவே திணைநிலைப்பெயர் அறுவகையாயிற்று. 'வேந்துவிடு தொழிலிற் ... பொருளே' (637) என்பதனான் வேளாளரே அரச ராற் சிறப்புச்செய்யப்பெறுவ ரென்றுணர்க. இனி 'வில்லும் வேலுங் கழலு...முரிய' (639) என்பதனான் ஏனோருஞ் சிறுபான்மை சிறப்புப்பெறுவரென்றுணர்க. உரிப்பொருட்டலைவர் இவரே யாதலைத்தான் மேற்பிரிவிற்குக் கூறுகின்றவாற்றானுமுணர்க.*

[2]**தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை**
**நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்**

---

1. இதற்கு வேறுபொருள் கூறுவர் இளம்பூரணர். ஆயினும் இவர் கூறும் பொருளே பின்வருஞ் சூத்திரங்களுக்குப் பொருத்தமாகின்றது. எனினும் இவ்வாறு நலிந்து பொருள் கொள்ளாது நேர்பொருள் கொள்வதே நலம்.

2. தாமரைக்கண்ணியை என்பதனானே அந்தணன் தலைவனாதல் பெறப்படு மென்பது நச்சினார்க்கினியர் கருத்து. தாமரைமாலை அந்தணர்க்குரியது.

மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே
[1]ஈர்ந்த ணாடையை யெல்லி மாலையை. (கலி. 52)

*எனவரும்.*

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
[2]கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக
ரினிதெனக் கணவ னுண்டலி
னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே. (குறுந். 167)

*இது குறுந்தொகை. இது பார்ப்பானையும் பார்ப்பனியை யுந் தலைவராகக் கூறியது. கடிமனைச் சென்ற செவிலிகூற்று. வாயினேர்வித்தலுமாம்.*

வருது மென்ற நாளும் பொய்த்தன
வரியே ருண்க ணீரு நில்லா
தண்கார்க் கீன்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான்முகை யவிழ்ந்த கோதை
பெய்வனப் பிழந்த கதுப்பு முள்ளா
ரருள்கண் மாறலோ மாறுக வந்தி
லறனஞ் சலரே யாயிழை நமரெனச்
சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்
பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு
துனிதீர் முயக்கம் பெற்றோள் போல
வுவக்குநள் வாழிய நெஞ்சே விசும்பி
னேறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்குங்
கடாஅ யானை கொட்கும் பாசறைப்
போர்வேட் டெழுந்த மள்ளர் கையதைக்
கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி
மானடி மருங்கிற் பெயர்த்த குருதி
வான மீனின் வயின்வயி னிமைப்ப
வமரகத் தட்ட செல்வந்
தமர்விரைந் துரைப்பக் கேட்கு ஞான்றே. (அகம். 144)

*மீண்டவன் நெஞ்சிற்கு உரைப்பானாய்ப் பாகற்கு உரைத்தது.*

1. ஈர்ந்தணாடையை என்பதனால் அந்தணர் வருணத்தான் தலைவனாதல் பெறப்படும். என்னை? கழுவியுடுப்பது அவன்கண்ணதாகலின். இதுவும் நச்சினார்க்கினியர் கருத்து.

2. 'கழுவுறு கலிங்கம்' என்பதனால் பார்ப்பனி யென்பதும், பார்ப்பனி என்பதனால் தலைவனும் பார்ப்பான் என்பதும் பெறப்படும் என்பது இவ்வுரையாசிரியர் கருத்தாகும். விரலைக்கழுவாது உடுத்து என்க. விரலைத்துடைத்த ஆடை என்று பொருள் கொள்வர் டாக்டர் சாமிநாதையர். அவர் தாங் கொண்ட பொருட் கேற்ப இப் பாட்டிற் கூறிய உணவால் பிராமணவருணம் எனக்கொண்டனர்.

இம் மணிமிடைபவளத்து வேந்தன் தலைவனாயினவாறும் தான் அமரகத்து அட்ட செல்வத்தையே மிக்க செல்வமாகக் கருது தற்குரியாள் அரசவருணத்திற்றலைவியே என்பதூஉம் உணர்க.

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ. (கலி. 31)

இதனுள் வேந்தன் தலைவனாயினவாறும், வகைகொண்ட தலைமையின் அழகை நுகர விரும்பினாள் என்றலின் தலைவியும் அவ்வருணத்தாளாயவாறும் உணர்க.

[1]'உலகுகிளர்ந்தன்ன' என்னும் (255) அகப்பாட்டுள் வணிகன் தலைவனாகவுங் கொள்ளக் கிடத்தலின் தலைவியும் அவ்வருணத் தலைவியா மென்றுணர்க.

தடமருப் பெருமை மடநடைக் குழவி
தூண்டொறும் யாத்த காண்டகு நல்லிற்
கொடுங்குழை பெய்த செழுஞ்செவிப் பேதை
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
வாளை யீர்ந்தபடி வல்லிதின் வகைஇப்
புகையுண் டமர்த்த கண்ண டகைபெறப்
பிறைநுதற் பொறித்த சிறுநுண் பல்விய
ரந்துகிற் றலையிற் றுடையின ணப்புலந்
தட்டி லோளே யம்மா வரிவை
யெமக்கே வருகதில் விருந்தே சிவப்பான்று
சிறியமுள் ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் கம்மே. (நற்றிணை. 120)

விருந்தொடு புக்கோன் கூற்று; செவிலி கூற்றுமாம். இந் நற்றிணை[2] 'வாளை யீர்ந்தடி வகைஇ' என்றலின் வேளாண் வருணமாயிற்று.

மலைமிசைக் குலைஇய வுருகெழு திருவிற்
பணைமுழங் கெழிலி பௌவம் வாங்கித்
தாழ்பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ
மாதிரம் புதைப்பப் பொழிதலிற் காண்வர
விருநிலங் கவினிய வேமுறு காலை
நெருப்பி னன்ன சிறுகட் பன்றி
யயிர்க்கட் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய

1. கலத்திற்சென்ற பொருள்வயிற் பிரிவாதலின் வணிகன் தலைவனாகவுங் கொள்ளக் கிடத்தலின் என்றார்

2. 'வாளையீர்ந்தடி' என்றமையான் வேளாண் வருணமென்பது கருத்து வாளை - வாளைமீன். 'வாழையீர்ந்தடி' என்று பாடங்கொண்டு 'வாழை யிலையை ஈர்ந்து' என்று பொருள்கொள்வர், நற்றிணையுரை யாசிரியர். வாழைநடுதல் வேளாளர்க்குரியதாகும்.

நறுவீ முல்லை நாண்மல ருதிரும்
புறவடைந் திருந்த வருமுனை யியவிற்
சீறூ ரோளே நன்னுதல் யாமே
யெரிபுரை பன்மலர் பிறழ வாங்கி
யரிஞர் யாத்த வலங்குதலைப் பெருஞ்சூடு
கள்ளர் களமர் களந்தொறு மறுகுந்
தண்ணடை தழீஇய கொடிநுடங் காரெயி
லருந்திறை கொடுப்பவுங் கொள்ளான் சினஞ்சிறந்து
வினைவயிற் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறை யேமே. (அகம். 84)

*இது தூதுகண்டு வருந்திக் கூறியது. இக் களிற்றியானை நிரையுள் தன்னூரும் 'அருமுனையிய விற் சீறூர்' என்றலின் தான் குறுநிலமன்னனென்பது பெற்றாம்.*

*'அகலிரு விசும்பகம்' என்னும் அகப்பாட்டும் (214) பொருணோக்கினால் [1] இதுவேயாமாறுணர்க.*

இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத்
தொருபடை கொண்டு வருபடை பெயர்க்குஞ்
செல்வ முடையோர்க்கு நின்றன்று விறலெனப்
பூக்கோ ளேய தண்ணுமை விலக்கிச்
செல்வே மாத லறியாண் முல்லை
நேர்கான் முதுகொடி குழைப்பநீர் சொரிந்து
காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ
முழங்குதொறுங் கையற் றொடுங்கிநப் புலந்து
பழங்கண் கொண்ட பசலை மேனியள்
யாங்கா குவள்கொ றானே வேங்கை
யூழுறு கிளர்வீ கடுப்பக் கேழ்கொள
வாகத் தரும்பிய மாசறு சுணங்கினள்
நன்மணல் வியலிடை நடந்த
சின்மெல் லொதுக்கின் மாஅ யோளே. (அகம். 174)

*இது மீள்வான் நெஞ்சிற் குரைத்தது. இதனுள் 'பூக்கோளேய தண்ணுமை விலக்கிச் செல்வேம்' என்றலின் அரசனாற் சிறப்புப் பெற்ற தலைவனாயிற்று. இன்னுஞ் சான்றோர் செய்யுட்களுள் இங்ஙனம் வருவனவற்றை அவற்றின் பொருணோக்கி உணர்க. (24)*

1. 'வேந்தனும் ... பாசறை ... கண்படையிலனே' என்று கூறலின், தலைவன் உதவிக்குச் சென்ற குறுநிலமன்னன் என்பது கருத்துப் போலும். அன்றியும் 'அமருந்தம் வயினதுவே' என்பதனானும் பெறப்படும்.

(பாலை என்னும் பிரிவின் வகை)

**25. ஓதல் பகையே தூதிவை பிரிவே.**

இத்துணையும் அகத்திற்குப் பொதுவாகிய முதல் கரு வுரிப் பொருளே கூறி, இனி இருவகைக் கைகோளுக்கும் பொதுவாகிய பாலைத்திணை கூறிய எழுந்தது.

**இ — ள்:** பிரிவே - பாலையென்னும் பிரிதற்பொருண்மை, ஓதல்பகையே தூது இவை - ஓதற்குப் பிரிதலும், பகைமேற் பிரிதலும், பகைவுரைச் சந்துசெய்தன் முதலிய தூதுபற்றிப் பிரிதலுமென மூன்றுவகைப்படும் என்றவாறு.

ஒரோவொன்றே அறமுந் துறக்கமும் பொருளும் பயத்தற் சிறப்பு நோக்கி இவற்றை 'இவை'யென விதந்தோதினார். 'இவை' யென்றதனை எடுத்தலோசையாற் கூறவே, அறங்கருதாது அரச ரேவலால் தூதிற்பிரிதலும் போர்த்தொழில் புரியாது திறை கோடற்கு இடைநிலத்துப் பிரிதலுஞ் சிறப்பின்மை பெறுதும். அறங்கருதாது பொருள் ஈட்டுதற்குப் பிரிதலும் பொருள்வயிற் பிரிவிற்கு உண்மையின் இவற்றோடு ஓதாது பிற்கூறினார். அந்தணர்க்குரிய ஓதலுந் தூதும் உடன் கூறிற்றிலர், [1]பகை பிறந்தவழித் தூது நிகழ்தலின். (25)

(பிரிவுள் ஓதலுந் தூதும் இவர்க்குரியவெனல்)

**26. அவற்றுள்**
**ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன.**

இது முற்கூறியவற்றுள் அந்தணர் முதலிய மூவர்க்கும் இரண்டு பிரிவு உரித்தென்கின்றது.

**இ — ள்:** அவற்றுள் - அம்மூன்றனுள், ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன - ஓதற்பிரிவுந் தூதிற்பிரிவும் அந்தணர் முதலிய மூவரிடத்தன என்றவாறு.

எனவே ஒழிந்த பகைவயிற்பிரிவு அரசர்க்கே உரித்தென மேலே கூறுப. உயர்ந்தோரெனக் கூறலின் வேளாளரை யொழிந் தோரென்றுணர்க. உதாரணம் :

1. இதனால் பகையை இடைவைத்து. தூதை அதன் பின் வைத்தமைக்குக் காரணங் கூறப்பட்டது.

[1] அரம்போ ழவ்வளை தோணிலை ஞெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
ஈர்ங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை
யாலி யன்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅ மாறிய யானை போலப்
பெய்து வறிதாகிய பிறங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை துக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
வொன்பது குடையும் நன்பக லொழித்த
பீடின் மன்னர் போல
வோடுவை மன்னால் வாடைநீ யெமக்கே. (அகம். 125)

*இதனுட் பலருங் கைதொழும் மரபினையுடைய கடவுட் டன்மையமைந்த செய்வினையெனவே ஓதற்பிரிதலென்பது பெற்றாம். 'சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே' (192) என்பதனாற் கிழவனுங் கிழத்தியும் இல்லறத்திற் சிறந்தது பயிற்றாக்கால் இறந்ததனாற் பயனின்றாதலின் இல்லறம் நிரம்பாதென்றற்கு நிரம்பா வாழ்க்கையென்றார். இல்லறம் நிகழ்கின்ற காலத்தே மேல்வருந் துறவறம் நிகழ்த்துதற்காக அவற்றைக்கூறும் நூல்களையுங் கற்று அவற்றின் பின்னர்த் தத்துவங்களையுமுணர்ந்து மெய்யுணர்தல் அந்தணர் முதலிய மூவர்க்கும் வேண்டுதலின் ஓதற்பிரிவு அந்தணர் முதலியோர்க்கே சிறந்ததென்றார்.*

பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ (கலி. 15)

---

1. நிரம்பா - முடிவுபோகாத. வேண்டிச்சென்றார் என இயையும். ஈர்ங்காழ் - ஈரியகொட்டை. ஆலி - ஆலங்கட்டி. தாய் - உதிர்ந்து. ஓதி - ஓந்தி. மையணல் - கருநிறமானதாடி. படா - உறங்காத. கயவாய் - பெரிவாய். கொண்மூ - மேகம். மதுகை - வலி முரண் - மாறுபாடு. சூடாவாகை - வாகை என்னுமூர் ஆடு - வெற்றி. குடை ஒன்பது என்றதனால் மன்னரும் ஒன்பதின்மர் என்பது பெறப்படும்.

என்பது அது. 'மையற்ற படிவம்' அந்தணர் முதலியோர் கண்ண தாதலின். 'விருந்தின் மன்னர்' என்னும் (54) அகப்பாட்டில், வேந்தன் பகைமையைத் தான் தணிவித்தமை கூறலின் அந்தணன் தூதிற் பிரிந்தமை பெற்றாம்.

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்" (புறம். 305) என்னும் புறப்பாட்டில் அந்தணன் தூது சென்றவாறு உணர்க.

அரசன் தூதுசேறல் பாரதத்து [1]வாசுதேவன் தூதுசென்ற வாற்றானுணர்க.

**தொடர்ந்தா ரணமுழுங்கப் பஞ்சவர்க்குத் தூது**
**நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே**
**(சிலப்பதி. ஆய்ச்சியர் குரவை)**

என்பதனானுணர்க.

வணிகன் சென்ற தூதும் வந்துழிக் காண்க. (26)

### (பகைவயிற் பிரிவு அரசர்க்குரித்தெனல்)

**27. தானே சேறலுந் தன்னொடு சிவணிய**
**வேனோர் சேறலும் வேந்தன் மேற்றே.**

இது பகைவயிற்பிரிவு அரசர்க்கே உரித்தென்கின்றது.

**இ – ள்:** தானே சேறலும் - தன்பகைக்குத் தானே செல்லுத லும், தன்னொடு சிவணிய ஏனோர் சேறலும் - அவனொடு நட்புக் கொண்ட ஒழிந்தோர் அவற்குத் துணையாகிச் செல்லுதலுமாகிய இவ்விரு பகுதியும், வேந்தன்மேற்று - அரசன்கண்ணது என்றவாறு.

எனவே வணிகர்க்கு உரித்தன்றாயிற்று. 'தானே' என்று ஒருமை கூறிய அதனானே முடியுடைவேந்தர் தாமே சேறலும், 'ஏனோர்' எனப் பான்மை கூறிய அதனானே பெரும்பான்மையுங் குறுநில மன்னர் அவர்க்காகச் சேறலும், முடியுடைவேந்தர் அவர்க்காகச் சிறுபான்மை சேறலும் உணர்க. முடியுடை வேந்தர் உள்வழிக் குறுநில மன்னர் தாமே செல்லாமை யுணர்க. இதனை 'வேந்தற் குற்றுழி' யென்ப ஏனையோர். அவ்வேந்தர் இல்வழிக் குறுநில மன்னருந் தாமேசேறல் 'வேந்து வினை யியற்கை' (32) என்பதன் கட் கூறுப. இதனானே தன்பகைமேலும் பிறர்பகை மேலும் ஒரு காலத்திற் சேறலின்றென்றார்.

---

1. வாசுதேவன் - கண்ணன்

'கடும்புனல் கால்பட்டு' என்னும் பாலைக்கலியுள்,

[1]மயங்கமர் மாறட்டு மண்வெளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேற் றகைகாண விடுவதோ (கலி. 31)

எனவும்,

[2]பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர் (கலி. 31)

எனவும் மண்கோடலுந் திறைகோடலும் அரசர்க்கே உரித்தாகக் கூறியது,

[3]நீளுயர் கூட னெடுங்கொடி யெழவே (கலி. 31)

எனச் சுரிதகத்துக் கூறியவாற்றானுணர்க.

பொருபெரு வேந்தர்க்குப் போர்ப்புணை யாகி
யொருபெருங் காதலர் சென்றார் – வருவது
காணிய வம்மோ கன்குழை கண்ணோக்கா
னீணகர் முன்றின்மே னின்று

இது வேந்தர்க்குற்றுழி வேந்தன் பிரிந்தது.

கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட்டி யானைப் போஒர் கிழவோன்
[4]பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய விவட்கே. (நற்றிணை. 10)

இது குறுநிலமன்னர் போல்வார் சென்றமை தோன்றக் கூறியது. 'மலைமிசைக் குலைஇய' (அகம். 84) என்பதும் அது.

இனி வேட்டைமேற் சேறலும் நாடுகாணச் சேறன் முதலியனவும் பாலையாகப் புலனெறிவழக்கஞ் செய்யாமை உணர்க.

வேந்தனென்று ஒருமையாற் கூறினார், "மெய்ந்நிலை மயக்கினா அகுநவும்"[5] என்னும் விதிபற்றி. சிவணியவென்பதனை வினையெச்சமாக்கி நட்பாடல் வேண்டியென்றுமாம். (27)

---

1. இது மண்கோடல் கூறியது.
2. இது திறைகோடல் கூறியது.
3. நெடுங்கொடி எழ வந்தார் என்றமையான் அரசராதல் பெறப்படும் என்பது கருத்து.
4. பழையன் ஒரு குறுநிலமன்னன் என்பது நச்சினார்க்கினியர் கருத்துப் போலும் நற்றிணை உரைகாரர் சேனாபதி என்பர்.
5. தொல் - சொல் - எச்ச - 53.

### (ஏனைப்பிரிவு இவையெனல்)

28. [1]மேவிய சிறப்பி னேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியு
மிழைத்த வொண்பொருண் முடியவும் பிரிவே.

இது, முறையானே தன்பகைமேற் சென்ற அரசன்திறை பெற்ற நாடுகாத்து அதன்கண் தன்னெறிமுறை அடிப்படுத்துதற்குப் பிரிதலும், ஏனை வணிகர் பொருட்குப் பிரிதலும் கூறுகின்றது.

இ – ள்: முல்லை முதலாச் சொல்லிய மேவிய சிறப்பின் - தானே சென்ற வேந்தன் தனக்கு முல்லை முதலாக முற்கூறப்பட்ட நால்வகை நிலனுந் திறையாக வந்து பொருந்திய தலைமையானே, பிழைத்தது - முன்னர் ‘ஆள்பவர் கலக்குறுத்த அலைபெற்று’ நெறிமுறைதப்பிய அந்நாடு, முறையாற் பிழையாதாகல் வேண்டியும் பிரிவே - தனது பழைய நாடுகளை ஆளும் நெறிமுறையினாலே தப்பாமல் ஆக்கம் பெறக் காத்தலை விரும்பிப் பிரிதலும் பிரிவே, ஏனோர் படிமைய இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே - முற்கூறிய அந்தணர் அரசரை ஒழிந்த வணிகர் தமக்கு விரதங்களுடையவாக வேதநூலிற் கூறிய ஒள்ளிய பொருள்தேடி முடியும் படி பிரிதலும் பிரிவே என்றவாறு.

பிரிவை இரண்டற்குங் கூட்டுக. சிறப்பிற்பிரிதலும் எனச் சேர்க்க. சொல்லிய என்பதும் பிழைத்ததென்பதுந் தொழிற் பெயர் முறையாற் காக்கவென முடிக்க.

விரதமாவன ‘கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது - பல்பண்டம் பகர்ந்து வீசல்’ முதலியன. உதாரணம் :

ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு
மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியு
மேனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலு
மானேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமும், ஆங்கத்
தீதுதீர் சிறப்பி னைவர்க ணிலைபோலப்
போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றா லிளவேனின் மேதக;

---

1. இதற்கு வேறுபொருள் கூறுவர் இளம்பூரணர்.

பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் றொலைந்தவென் றடமென்றோ ளுள்ளுவா
ரொல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர்;
திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்த
மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர்;
அறல்சாஅய் பொழுதோடெம் மணிநுதல் வேறாகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவா
ரூறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
யாறின்றிப் பொருள்வெஃகி யகன்றநாட் டுறைபவர்;
என நீ,
தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே. (கலி. 26)

இதனுள் 'ஒல்குபு நிழல் சேர்ந்தார்க்கு' எனவே, முன்னர் ஆள்பவர் கலக்குறுத்த அலைபெற்றுப்பின் தன்னை நிழலாகச் சேர்ந்தாரென்பதூஉம், அவர்க்குப் பின்னர் உலைவு பிறவாமற் பேணிக் காத்தானென்பதூஉம், "விருந்துநாட்டு" என்பதனால் திறைபெற்ற புதியநாடு என்பதூஉம் பெற்றாம். ஏனையவற்றிற் கும் இவ்வாறே கூறிக்கொள்க.

ஏதினாடு, புதியநாடு, ஆறின்றிப் பகைவர் பொருளை விரும் பின நாட்டென்றும் அவரையகன்ற நாட்டென்றும் பொருள் கூறுக. செருவின் மேம்பட்ட என்றது நாடுகளை. அதனாற் பெற்ற வென்றியெனவே நாடு திறைபெற்றமை கூறிற்று.

'படைபண்ணிப் புனையவும்' (17) என்னும் பாலைக்கலியுள் 'வல்வினை வயக்குதல் வலித்திமன்' என்பதற்கு வலிய போர் செய்து அப்பகைவர் தந்த நாட்டை விளக்குதற்கு வலித்தியென வும், 'தோற்றஞ்சா றொகுபொருள்' என்பதற்குத் தோற்றம் அமைந்த திரண்ட பொருளாவன அந்நாடு காத்துப்பெற்ற அறம் பொருள் இன்பம் எனவும், 'பகையறுபயவினை' என்பதற்குப் பகையறு தற்குக் காரணமாகிய நாடாகிய அப்பயனைத் தரும் வினையென வும், 'வேட்ட பொருள்' என்பதற்கு அறம்பொருளின்ப மெனவும் பொருளுரைத்துக் கொள்க.

பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்ந்து பொருள் கூறுக.

இனி,

> [1]கேள்கே டுன்றவுங் கிளைஞ ராரவுங்
> கேளல்கேளிர் கெழீஇயின ரொழுகவு
> மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்து (அகம். 93)

என வணிகர் பொருள்வயிற் பிரிந்தவாறுணர்க.

> நட்டோ ராக்கம் வேண்டியு மொட்டிய
> நின்றோ ளணிபெற வரற்கு
> மன்றோ தோழியவர் சென்ற திறமே (நற்றிணை. 286)

என்பதனுள் அணியென்றது பூணினை.

பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்ந்துகொள்க.(28)

**(பொருட்பிரிவு நால்வர்க்கு முரித்தெனல்)**

**29. மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே.**

இஃது எய்தாததெய்துவித்தது.

**இ – ள்:** மேலோர் முறைமை - மேல் அதிகாரப்பட்டு நின்ற வணிகர்க்கு ஓதிய அறந்தலைப் பிரியாப் பொருள்செயல்வகை, நால்வர்க்கும் உரித்து - அந்தணர் அரசர் இருவகை வேளாளர் என்னும் நால்வர்க்கும் உரித்து என்றவாறு.

இதற்கு வணிகர்க்கு வேதநூலுள் இழைத்த பொருண்முடிவானே இந் நால்வரும் பெருண்முடிப்பரெனிற் பிரிவொன்றாகி மயங்கக் கூறலென்னுங் குற்றந் தங்குமாகலின் அது கருத்தன்று; இந்நால்வருள் அந்தணர் ஓதலும் தூதும்பற்றிப் பொருண்முடித் தலும், அரசர் பகைவயிற்பிரிவுபற்றிப் பொருண் முடித்தலும் உயர்ந்த வேளாளர் பகைவயிற்பிரிவுபற்றிப் பொருண் முடித்த லும் உழுதுண்பார் வாணிகத்தாற் பொருண்முடித்தலுங் கருத்து.

இவற்றுள் வேள்விக்குப் பிரிந்து [2] சடங்கிற்கு உறுப்பாகியும் அதற்குக் குரவனாகியும் நிற்றல் உரிமையின் ஆண்டு வேள்வி செய்தான் கொடுத்த பொருள்கோடல் வேண்டுதலானும், அறங் கருதித் தூதிற் பிரியினும் அவர்செய்த பூசனை கோடல் வேண்டு

---

1. கேள் - உறவினர். கேளல்லாத கேளிர் - நொதுமலாளர் (அயலவர்). ஆள்வினை - பொருளீட்டும் முயற்சி.

2. சடங்கு - கிரியை. உறுப்பு - அங்கம்.

மாகலானும், அவை அந்தணர்க்குப் பொருள்வருவாயாயிற்று. வேள்விக்குப் பிரிதல் ஓதற்பிரிவின் பகுதியாயிற்று. உதாரணம்:

நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனைகாத் தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெஞ்
செய்பொருண் முற்று மளவென்றா ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலமாயிற்
றொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று கொல்லென் னுயிர். (கலி. 24)

இதனுள் 'நடுநின்று' என்றதனான், இருபெரு வேந்தரையுஞ் சந்து செய்வித்தற்கு யான் நடுவே நிற்பலென்றும், 'எஞ்செய் பொருள் முற்றுமளவு' என்றதனான் அது முடித்த பின்னர் யாம் பெறுதற்குரியவாய் அவர் செய்யும் பூசனையாகிய பொருண் முடியுமளவு மென்றும், அந்தணன் பொருள்வயிற் பிரியக் கருதிக் கூறிய கூற்றினை அவன் தலைவி கூறியவாறுணர்க. இதனுள். 'கடிமனை காத்து' என்றதனை இல்லறமாகவும், 'ஓம்ப' என்றதனைச் செந்தீயோம்ப வென்றுங் கொள்க. இனி,

நன்கலங் களிற்றொடு நண்ணாரேந்தி
வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து (அகம். 124)

என்புழி, நன்கலந்திறை கொடுத்தோரென்றலிற் பகைவயிற் பிரிவே பொருள் வருவாயாயிற்று. ஒழிந்தனவும் இவ்வாறே உய்த்துணர்க.

மேலோர் முறைமை ஏனோர்க்கு முரித்தே என்னாது நால்வர்க்கு முரித்தே என்றது முற்கூறிய வணிகரை யொழிந்த இருவகை வேளாளரையுங் கூட்டியென்றுணர்க. அவர் பொருள்வயிற் பிரிந்தனவுஞ் சான்றோர் செய்யுட்களை நோக்கி உய்த்துணர்ந்து கொள்க. அவர்களுள் உழுதுண்பார்க்குக் கலத்திற்பிரிவும் உரித்து. ஏனையோர்க்குக் காலிற்பிரிவே உரித்தென்றுணர்க. (29)

### (வேளாளர்க்கு இப்பிரிவும் உரித்தெனல்)

**30.** மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப.

இஃது இறுதிநின்ற வேளாளர்க்கு இன்னுமோர் பிரிவுவிகற்பங் கூறுகின்றது.

இ — ள்: மன்னர் பாங்கின் -அரசரைச் சார்ந்து வாழும் பக்கத்தராகி நிற்றல் காரணமாக, பின்னோர் ஆகுப - பின்னோர் எனப்பட்ட வேளாளர் வரையறையின்றி வேந்தன் ஏவிய திற மெல்லாவற்றினும் பிரிதற்கு ஆக்கமுடையராகுப என்றவாறு.

மன்னர் பின்னோரென்ற பன்மையான் முடியுடையோரும், முடியில்லாதோரும், உழுவித்து உண்போரும், உழுது உண்போரு மென மன்னரும் வேளாளரும் பலரென்றார். 'வேளாண் மாந் தர்க்கு' (635) 'வேந்துவிடு தொழிலில்' (636) என்னும் மரபியற் சூத்திரங்களான் வேளாளர் இருவகையரென்ப.

அரசரேவுந் திறமாவன:- பகைவர்மேலும், நாடுகாத்தன் மேலும், சந்துசெய்வித்தன்மேலும், பொருள்வருவாய் மேலுமாம்.

அவருள் உழுவித்துண்போர் மண்டிலமாக்களுந் தண்டத் தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங் கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமுங் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும் அரசெனவும் உரிமையெய்தினோரும், பாண்டிநாட்டுக் காவிதிப்பட்ட மெய் தினோரும், குறுமுடிக்குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடி யுடை வேந்தர்க்கு மகட்கொடைக்கு உரிய வேளாளராகுப. 'இருங்கோ வேண்மா னருங்கடிப் பிடவூர்' (புறம் 395) எனவும் ஆலஞ்சேரி மயிந்தன்... ஊருண் கேணிநீ ரொப்போன் எனவுஞ் சான்றோர் செய்யுட்செய்தார். உருவப்பஃறோர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும் அவன் மகனாகிய கரிகாற் பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலும் கூறுவர். இதனானே,

> [1]பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
> குடிபுறந் தருகுவை யாயின் (புறம். 35)

எனவும்,

---

1. பகடுபுரந்தருநர் - ஏரைப் பாதுகாப்போர் = வேளாளர். பகடு - ஆகுபெயர். குடிபுறந்தரல் - குடிகளைப் பாதுகாத்தல்.

............ ......... ........ ஞாலத்துக்
[1] கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி (பதிற்று. 13)

*எனவுஞ் சான்றோர் கூறியவாறுணர்க. உதாரணம்:*

வேந்தன் குறைமொழிந்து வேண்டத் தலைப்பிரிந்தார்
தாந்தங் குறிப்பின ரல்லரா – லேந்திழாய்
கண்பனி வாரக் கலங்கல் பிரிவரோ
தண்பனி நாளே தனித்து

*என வரும்* *(30)*

**(வேதத்தினாற் பிறந்த நூல்களும்
நால்வகை வருணத்தார்க்கு முரியவெனல்)**

**31. [2]உயர்ந்தோர்க் குரிய வோத்தி னான.**

*இது நான்குவருணத்தோர்க்கு மெய்தாததெய்துவித்தது*

*இ – ள்:* **ஓத்தின் ஆன** *- வேதத்தினாற் பிறந்த வடநூல்களுந் தமிழ் நூல்களும்,* **உயர்ந்தோர்க்கு உரிய** *- அந்தணர் அரசர் வணிகர்க்கும், உயர்ந்த வேளாளர்க்கும் உரிய என்றவாறு.*

*அவை சமயநூல்களும் ஒன்றற்கொன்று மாறுபாடு கூறுந் தருக்க நூல்களும் தருமநூல்களும் சோதிடமும் வியாகரணம் முதலியனவும் அகத்தியம் முதலாகத் தோன்றிய தமிழ்நூல்களுமாம். வேதந் தோன்றிய பின்னர் அதுகூறிய பொருள்களை இவையும் ஆராய்தலின் 'ஓத்தினான' என்று அவற்றிற்குப் பெயர் கூறினார்; ஓத்தென்பது வேதத்தையேயாதலின். (31)*

**(வேந்தன்றொழில் வேளிர்க்கு முரித்தெனல்)**

**32. வேந்துவினை யியற்கை வேந்தனி னொரீஇய
வேனோர் மருங்கினு மெய்திட னுடைத்தே.**

*இது [3]மலையமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்க் கும் வேந்தன்றொழில் உரித்தென்கின்றது.*

1. கூலம்பகர்நர் - கூலவாணிகர். கூலம் - பலசரக்கு என்பாருமுளர் என்றும், ஈரெண்வகைக் கூலம் என்றும், பதினெட்டுவகை என்று கூத்தநூலார் கூறுவர் என்றும் சிலப்பதிகாரவுரை கூறுகின்றது. குடிபுறந்தருநர் - தங்கீழ்க் குடிகளைப் பாதுகாக்கும் வேளாளர்.

2. வேறுபொருள் கூறுவர் இளம்பூரணர்

3. மலையமாதவன் - பொதியமுனி = அகத்தியன் நிலங்கடந்த நெடுமுடியண்ண லுழை என்பது அண்ணல் வழிக்கண் என எழுத்ததிகாரப் பாயிரத்திலுள்ளது.

**இ – ள்:** வேந்துவினை இயற்கை - முடியுடை வேந்தர்க்குரிய தொழிலாகிய இலக்கணங்கள், வேந்தனின் ஒரீஇயஏனோர் மருங்கினும் எய்து இடன் உடைத்து - அம்முடியுடை வேந்தரை யொழிந்த குறுநிலமன்னரிடத்தும் பொருந்தும் இடனுடையது என்றவாறு.

அவர்க்குரிய இலக்கணமாவன: தன்பகைவயிற்றானே சேறலும், தான் திறைபெற்ற நாடுகாக்கப் பிரிதலும், மன்னர் பாங்கிற் பின்னோரெனப்பட்ட வேளாளரை ஏவிக்கொள்ளுஞ் சிறப்புமாம். உதாரணம்:

**விலங்கிருஞ் சிமயக் குன்றத் தும்பர்**
**வேறுபன் மொழிய தேஎ முன்னி**
**வினைநசைஇப் பரிக்கு முரன்மலி நெஞ்சமொடு**
**புனிமா ணெஃகம் வலவயி னேந்திச்**
**செலன்மாண் புற்ற** **(அகம். 215)**

என்புழி [1] வேறு பன்மொழிய தேஎத்தைக் கொள்ளக் கருதிப் போர்த்தொழிலைச் செலுத்தும் உரன்மிக்க நெஞ்ச மென்றலின், இது குறுநிலமன்னன் தன்பகைவயின் நாடுகொள்ளச் சென்ற தாம்; வேந்தனெனப் பெயர்கூறாமையின். 'பசைபடு பச்சை நெய் தோய்த்து' (244) என்னும் **அகப்பாட்டினுள்** 'முடிந்தன் றம்ம [2]நா முன்னிய வினையே' என்றலின் தானே குறுநிலமன்னன் சென்ற தாம். ஏனைய வந்துழிக்காண்க. (32)

## (வேளிர்க்குப் பொருட்பிரிவு முரித்தெனல்)

**33. பொருள்வயிற் பிரிதலு மவர்வயி னுரித்தே**
**யுயர்ந்தோர் பொருள்வயி னொழுக்கத் தான.**

இஃது அக் குறுநில மன்னர்க்குப் பொருள்வயிற்பிரிதலும் ஓதற்பிரிதலும் உரியவென்கின்றது.

**இ – ள்:** பொருள்வயினும் - தமக்குரிய திறையாகப் பெறும் பொருளிடத்தும், உயர்ந்தோர் ஒழுக்கத்து ஆன பொருள்வயினும்

---

அவ்வாறு ஈண்டுமிருப்பதே பொருத்தம். நரபதியர் - அரசர்கள். நிலங்கடந்த நெடுமுடியண்ணல் - "ஓரரசன் கண்ணனன்று" என்பது ஆராய்ச்சியாளர் கருத்து அவர் கடந்த என்பதற்கு வென்ற எனப் பொருள் கொள்வர். நிலங்கள் தந்த எனப் பகுப்பாருமுளர்.

1. வேறுபன்மொழி - தமிழ்மொழியல்லாத வேறுபலமொழி. என்றது வேறு பல பாஷையை.

2. நாம் முன்னியவினை என்றதனால் தானே சென்றதென்றார்

- உயர்ந்த நால்வகை வருணத்தார்க்குரிய ஒழுக்கத்திலேயான ஓத்திடத்தும், பிரிதல் அவர்வயின் உரித்து - பிரிந்துசேறல் அக்குறு நில மன்னரிடத்து உரித்து என்றவாறு.

பொருள்வயிற்பிரிதல் பொருள் தேடுகின்ற இடத்தின் கண்ணென வினைசெய்யிடமாய் நின்றது. 'உயர்ந்தோர்க் குரிய வோத்தினான' (31) என்று அவ்வோத்தினை அவரொழுக்கத் திலேயான பொருளென்றார். அச்சூத்திரத்திற் கூறிய ஓதற்பிரிவே இவர்க்கும் உரித்தென்று கொள்க. இவற்றுக்குச் சான்றோர் செய் யுட்களுள்வழிப் பொருள்படுமாறு உய்த்துணர்ந்து கொள்க. (33)

### (பொருட்பிரிவு முதலியவற்றில் தலைவியொடு பிரிதல் இல்லையெனல்)

**34.** முந்நீர் வழக்க மகடூஉவோ டில்லை.

இது முற்கூறிய ஓதல் பகை தூது காவல் பொருள் என்ற ஐந்தனுட் பகையுங் காவலும் ஒழிந்தவற்றிற்கு ஓரிலக்கணங் கூறுகின்றது.

இ – ள்: ஓதலுந் தூதும் (25) பொருளுமாகிய (28) மூன்று நீர்மையாற் செல்லுஞ் செலவு தலைவியோடு கூடச் சேறலின்று என்றவாறு.

தலைவியை உடன்கொண்டு செல்லாமை முற்கூறிய உதார ணங்களிலும் ஒழிந்த சான்றோர் செய்யுட்களுள்ளுங் காண்க. இதுவே ஆசிரியர்க்குக் கருத்தாதல் தலைவியோடு கூடச் சென்றா ராகச் சான்றோர் புலனெறிவழக்கஞ் செய்யாமையான் உணர்க.

இனி, தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன் கொண்டு சென்மினெனக் கூறுவனவுந் தோழி கூறுவனவுஞ் செல வழுங்குவித்தற்குக் கூறுவனவென்றுணர்க. அக்கூற்று தலைவன் மரபு அன்றென்று மறுப்பன 'மரபுநிலை திரியா' (45) என்பதனுள் அமைந்தது.

இனி இச்சூத்திரத்திற்குப் 'பொருள்வயிற் பிரிவின்கட் [1]கலத்திற் பிரிவு தலைவியுடன் சேறலில்லை; எனவே, காலிற்பிரிவு தலைவி யுடன் சேறல் உண்டு' என்று பொருள் கூறுவார்க்குச் [2] சான்றோர்

1. இவ்வாறு பொருள் கூறுபவர் இளம்பூரணர். அவர் பொருளே நேர் பொருளாம்.
2. சிலப்பதிகாரக் கதையுள் இவ்வாறு வருகின்றது. சான்றோர் என இவர் கருதியது சங்கப்புலவரை.

செய்த புலனெறி வழக்கம் இன்மை உணர்க. இனி, உடன்கொண்டு போகுழிக் கலத்திற்பிரிவின்று காலிற்பிரிவே யுளதென்பாரும் உளர். (34)

**(தலைவி மடலேறினாளாகக் கூறும் புலனெறி வழக்கம் இன்றெனல்)**

**35.** எத்திணை மருங்கினு மகடூஉ மடன்மேற்
பொற்புடை நெறிமை யின்மை யான.

இஃது, இத்துணையும் பாலைக்குரிய இலக்கணங்கூறி, மகடூஉ அதிகாரப்படுதலிற் பெருந்திணைக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ – ள்: எத்திணைமருங்கினும் - கைக்கிளைமுதற் பெருந் திணையிறுவாய் ஏழன்கண்ணும், மகடூஉ மடல்மேல் நெறிமை - தலைவி மடலேறினாளெனக் கூறும் புலனெறி வழக்கம், பொற் புடைமை இன்மையான - பொலிவுடைமையின்று, ஆதலான் அது கூறப்படாது என்றவாறு.

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில் (குறள். 311)

என வரும்.

கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர்
மடலூரார் மைந்தர்மே லென்ப – மடலூர்தல்
காட்டுகேன் வம்மின் கலிவஞ்சி யார்கோமான்
வேட்டமா மேற்கொண்ட போழ்து.

என்றாராலோவெனின், இது மடலேற்றன்று; ஏறுவலெனக் கூறிய துணையேயாம். (35)

**(உடன்போக்கின்கண் நற்றாயிரங்கற்பகுதி இவையெனல்)**

**36.** தன்னு மவனு மவளுஞ் சுட்டி
மன்னு நிமித்த மொழிப்பொரு டெய்வ
நன்மை தீமை யச்சஞ் சார்தலென்
றன்ன பிறவு மவற்றொடு தொகைஇ
முன்னிய கால மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலு
மாகிய கிளவியு மவ்வழி யுரிய.

இது பிரிவிலக்கணம் அதிகாரப்பட்டு வருதலிற் கொண்டு தலைக்கழிந்துழி வருந்துவோர் தாயரென்பதூஉம் அதனது பகுதியுங் கூறுகின்றது.

இ — ள்: போகிய திறத்து நற்றாய் - தலைவியுந் தலைவனும் உடன்போய காலத்து அம்மகட்பயந்த நற்றாய், தன்னும் அவனும் அவளுஞ் சுட்டிக் காலம் மூன்றுடன் மன்னும் நன்மை தீமை முன்னிய விளக்கிப் புலம்பலும் - தன்னையுந் தலைவனையுந் தன் மகளையுங் குறித்துக் காலம் மூன்றுடன் நிலைபெற்றுவரும் நல்வினை தீவினைக்குரிய காரியங்களைத் தன் நெஞ்சிற்கு விளக்கி வருந்திக்கூறுதலும், அச்சஞ் சார்தல் என்று அன்ன பிறவும் நிமித் தம் மொழிப்பொருள் தெய்வம் என்று அவற்றொடு தொகை இப் புலம்பலும் - அச்சஞ்சார்தலென்று கூறப்பட்டவற்றையும் அவை போல்வன பிறவற்றையும் பல்லி முதலியசொல் [1]நற்சொல் தெய்வங் கட்டினுங் கழங்கினும் இட்டு உரைக்கும் அத்தெய்வப் பகுதி யென்றவற்றோடு கூட்டி வருந்திக் கூறலும், தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும் புலம்பலும் - தோழியது ஆற்றாமையைக் கண்டுழியும் தலைவியைத் தேடிப்போய்க் காணாது வந்தாரைக் கண்டுழியும் வருந்திக் கூறலும், அவ்வழி ஆகிய கிளவியும் - அவ்வுடன்போக்கிடத்துச் சான்றோராற் புலனெறி வழக்கஞ் செய்தற்குரியவாய் வருங் கிளவிகளும், உரிய - உடன்போகிய திறத்து உரிய என்றவாறு.

நற்றாய் புலம்பலுங் கிளவியும் போகிய திறத்து உரியவென முடிக்க. என்றென்பதனையும் புலம்பலென்பதனையும் யாண்டுங் கூட்டுக. இங்ஙனம் உடன்போக்கி வருந்துதல்நோக்கித் தாயை முற்கூறித் தலைவன் கொண்டுபோயினமை நோக்கித் தலைவி முன்னர் அவனைக் கூறினார்.

அவளும் அவனும் என்னு பாடம் ஓதுவாரும் உளர்.

> மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலு
> முயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
> சுரநனி யினிய வாகுக தில்ல
> [2]வறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
> பிறை நுதற் குறுமகள் போகிய சுரனே. (ஐங்குறு. 371)

1. நற்சொல் - நற்சொல்நிமித்தம். நல்வாய்ப்புள் என்பது மது. இதனைப் பறவாப்புள் என்றுங் கூறுவர்.

2. அறநெறி என்றதனால் நல்வினையாதல் பெறப்படும்.

*இதனுள் 'அறநெறி யிதுவெனத் தெளிந்த என் ... மகள்' என்று தாய் கூறவே உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்து கூறி அங்ஙனம் கூட்டிய நல்வினையைத் தன்னெஞ்சிற்கு விளக்கிப் புலம்பியவாறு காண்க.*

நாடொறுங் கலுழு மென்னினு மிடையின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்ந்த [1]வறனில் பாலே. (ஐங்குறு. 376)

*இது தீவினையை வெகுண்டு புலம்பியவாறு காண்க. பால் - பழவினை. இவை* ஐங்குறுநூறு.

*இனிஅச்சம் இருவகைத்து; தலைவி ஆண்டை விலங்கும் புள்ளும் ஆறலைப்போரும் முதலிய கண்டு அஞ்சும் அச்சமும், தந்தை தன்னையர் [2] பின்சென்றவர் இஃதறமென்னாது தீங்கு செய்கின்றாரோ என்று அஞ்சும் அச்சமுமென.*

நினைத்தொறுங் கலுழு மிடும்பை யெய்துக
புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுர மென்மக ளுய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே. (ஐங்குறு. 373)

*இஃது ஐங்குறுநூறு.*

கேளாய் வாழியோ மகளைநின் றோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப வவனொடு
பெருமலை யிறந்தது நோவே னோவல்
கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
முடங்குதா ளுதைத்த பொலங்கெழு பூழி
பெரும்புலர் விடியல் விரிந்துவெயி லெறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையொடு குடையு மாங்க
ணஞ்சுவரத் தகுந கான நீந்திக்
கன்றுகா ணாது புன்கண்ண செவிசாய்த்து
மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்
கறவை தந்த கடுங்கான் மறவர்
கல்லென் சீறூ ரெல்லி னசைஇ
முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை
மடமயி லன்னவென் னடைமெலி பேதை

1. அறனில்பால் - தீவினை
2. வினையாலணையும்பெயர்.

தோட்டுணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட்
சேக்கோ ளறையுந் தண்ணுமை
கேட்குநள் கொல்லெனக் கலுழுமென் னெஞ்சே. (அகம். 63)

*இவை அச்சங் கூறின.*

*[1] தந்தை தன்னையர் சென்றாரென்று சான்றோர் செய்யுட் செய்திலர், இது புலனெறி வழக்கம் அன்மையின்.*

*இனிச் சார்தலும் இருவகைத்து; தலைவி சென்று சாரும் இடனும், மீண்டு வந்து சாரும் இடனுமெனெ. உதாரணம்:*

[2] எம்வெங் காம மியைவ தாயின்
மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாக லார்கைப் பறைக்கட் பீலித்
தோகைக் காவிற் றுளுநா டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மன் மூதூ
ரறிந்த மாக்கட் டாகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
சூழி யானைச் சுடர்ப்பூ ணன்னன்
பாழி யன்ன கடியுடை வியனகர்ச்
செறிந்த காப்பிகந் தவனொடு போகி
யத்த விருப்பை யார்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகணிலம் பரக்கக்
கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை யெண்கின் வயநிரை பரக்கு
மின்றுணைப் பிரிந்த கொள்கையொ டொராங்குக்
குன்ற வேயிற் றிரண்டவென்
மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே. (அகம். 15)

அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமக
டிருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே
புனைமா ணிஞ்சி பூவ லூட்டி
மனைமண லடுத்து மாலை நாற்றி
யுவந்தினி தயரு மென்ப யானு
மான்பிணை நோக்கின் மடநல் லாளை
யீன்ற நட்பிற் கருளா னாயினு

1. சான்றோர் என்றது ஈண்டுச் சங்கப்புலவர்களை. கலித்தொகையில் தாய் அறத்தோடு நின்றவிடத்து, "அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கி ... தெருமந்து சாய்த்தார் தலை" எனக் கூறலின் சென்றாரென்று செய்யுட் செய்திலர் என்று கூறினார் போலும்.

2. இதனுள் 'ஆறு அறிந்த மாக்கட் டாகுக' என்பது தெய்வத்தொடு படுத்தது.

மின்னகை முறுவ லேழையைப் பன்னாட்
கூந்தல் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய
நலம்புனை யுதவியோ வுடையேன் மன்னோ
வஃதறி கிற்பினோ நன்றுமற் றில்ல
வறுவை தோயு மொருபெருங் குடுமிச்
சிறுபைந் நாற்றிய பஃறலைக் கருங்கோ
லாகுவ தறியு முதுவாய் [1]வேல
கூறுக மாதோநின் கழங்கின் றிட்ப
மாறாது வருபனி கலுழுங் கங்குலி
னானாது துயருமென் கண்ணினிது படீஇய
ரெம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே. (அகம். 195)

*இவ் வகப்பாட்டு இரண்டும் தெய்வத்தொடு படுத்துப் புலம்பியது.*

இல்லெழும் வயலை யலையு மூழ்த்தன
சொல்வன் மாக்களிற் செல்லு மஃகின
மயிலடி யிலைய மாக்குர னொச்சிப்
பயிலிணர் நறும்பொழிற் பாவையுந் தமிய
ளேதி லாளன் பொய்ப்பப் பொய்மருண்டு
பேதை போயினள் பிறங்குமனை யிறந்தென
மான்ற மாலை மனையோர் புலம்ப
வீன்ற தாயு மிடும்பைய ளெனநினைந்
தங்கண் வானத் தகடூர்ந்து திரிதருந்
திங்களங் கடவு டெளித்துநீ பெயர்த்தரிற்
கடிமலர்க் கொன்றைக் காவலன் சூடிய
குடுமியஞ் செல்வங் குன்றினுங் குன்றாய்
தண்பொழில் கவித்த தமனிய வெண்குடை
யொண்புகழ்த் தந்தைக் குறுதி வேண்டித்
தயங்குநடை முதுமை தாங்கித் தான்றனி
யியங்குநடை யிளமை யின்புற் றீந்த
மான்றே ரண்ண றோன்றுபுகழ் போலத்
துளங்கிரு ளிரவினு மன்ற
விளங்குவை மன்னாலிவ் வியலிடத் தானே. (தகடூர் யாத்திரை)

*இது தெய்வத்தை நோக்கிக் கூறியது.*

மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
யன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்தினை வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேல் விடலையொ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே. (ஐங்குறு. 391)

*இவ் வைங்குறுநூறு நிமித்தத்தொடு படுத்துப் புலம்பியது. நற்சொல்லொடுபடுத்தன வந்துழிக் காண்க.*

1. இதனுள் வேல! திட்டபம் கூறுக என்றதுமது.

*இனி, 'அன்னபிறவும்' என்றதனால்,*

ஈன்றுபுறந் தந்த வெம்மு முள்ளாள்
வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி யிரட்டுந் தாளுடைக் கடிகை
நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிபடுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிற ளாயின ளாயினு மணிந்தணிந்
தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇத்தன்
மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா முழவிற் கோவற் கோமா
னெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கு
நெறியிருங் கதுப்பினென் பேதைக்
கறியாத் தேஎத் தாற்றிய துணையே. (அகம். 35)

*இவ் வகம் தலைவன் மிகவும் அன்பு செய்கவென்று தெய்வத் திற்குப் பராஅயது.*

நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை
யியம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தஞ்
சென்றனண் மன்றவென் மகளே
பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே. (ஐங்குறு. 377)

*இவ் வைங்குறுநூறு யாம் [1]இவற்றைக்கண்டு வருந்த இவற்றை எமக்கு ஒழித்துத் தான் நீரிலா [2]ஆரிடைப் போயினாளென்றது.*

என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையோ
டழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே. (ஐங்குறு. 372)

*இஃது என்னை நினைப்பாளோ வென்றது.*

*இன்னும் இதனானே செய்யுட்களுள் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் அமைத்துக்கொள்க.*

செல்லிய முயலிற் பாஅய சிறகர்
வாவ லுகக்கு மாலையாம் புலம்பப்
போகிய வவட்கோ நோவேன் றேமொழித்

---

1. இவற்றை - பந்து முதலியவற்றை.
2. ஆரிடை - அருவழி.

துணையிலள் கலுழு நெஞ்சி
னிணையே ருண்க ணிவட்குநோ வதுவே. (ஐங்குறு. 378)

*இது தோழி தேஎத்துப் புலம்பல். இஃது ஐங்குறுநூறு.*

*'தோழி தேஎத்தும்' எனப் பொதுப்படக் கூறியவதனால் தோழியை வெகுண்டு கூறுவனவுங்கொள்க.*

[1]வரியணி பந்தும் வாடிய வயலையு
மயிலடி யிலைய மாக்குர னொச்சியுங்
கடியுடை வியனகர்க் காண்வரத் தோன்றத்
தமியேன் கண்டதன் றலையுந் தெறுவர
நோயா கின்றே மகளைநின் றோழி
யெரிசினந் தணிந்த விலையி லஞ்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொ டெள்விளி
யுருப்பவி ரமையத் தமர்ப்பன ணோக்கி
யிலங்கிலை வெள்வேல் விடலையை
விலங்குமலை யாரிடை நலியுங்கொ லெனவே (நற். 305)

*என வரும்.*

இதுவென் [2]பாவைக் கினியநன் [3]பாவை
யிதுவென் பைங் [4] கிளி யெடுத்த பைங்கிளி
யிதுவென் [5]பூவைக் கினியசொற் பூவையென்
றலம்வரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
நீங்கின ளோவென் பூங்க ணோளே. (ஐங்குறு. 375)

*இவ் வைங்குறுநூறு தேடிக்காணாது வந்தாரைக்கண்டு புலம்பியது.*

*இனி அவ்வழியாகிய கிளவிகளுட் சில வருமாறு:*

ஒருமக ளுடையேன் மன்னே யவளுஞ்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு
பெருமலை யருஞ்சுர நெருநற் சென்றனள்
இனியே
தாங்குநி னவல மென்றனி ரதுமற்
றியாங்கன மொல்லுமோ வறிவுடை யீரே
யுள்ளி னுள்ளம் வேமே யுண்கண்

---

1. இதனுள் தோழியை வெகுண்டு கூறியதாகப் பொருள் தோன்றவில்லை.
2. பாவை - பாவைபோல்வாள்.
3. பாவை - விளையாட்டுப்பாவை
4. கிளி - கிளிபோல்வாள்.
5. பூவை - பூவைபோல்வாள். இவற்றின் பின்வருங் கிளியும் பூவையும் அவள் வளர்த்தவை. நோக்கினையும் நுதலையும் உடைய என் கண் போல்வாள் என இயையும். உடைய என்பது கணோள் என்பதில் விகுதியோடு முடியும். என்று யான் கலங்க என் பூங்கணோள் நீங்கினளோ என முடிக்க.

மணிவாழ் பாவை நடைகற் றன்னவெ
னணியியற் குறுமக ளாடிய
மணியோர் நொச்சியுந் தெற்றியுங் கண்டே. (நற்றிணை. 184)

*இந் நற்றிணை தெருட்டும் அயலிலாட்டியர்க்கு உரைத்தது.*

கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
கிளிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ
யொய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதூ ராங்க
ணெருமை நல்லான் பெருமுலை மாந்து
நாடுபல விறந்த நன்ன ராட்டிக்
காயமு மணியிழந் தழுங்கின்று தாயு
மீன்றோட் டாரா யிறீ இயரென் னுயிரெனக்
கண்ணு நுதலு நீவித் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழ லசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூடித்
தருமணற் கிடந்த பாவையென்
மருமக ளேயென முயங்கின ளழுமே. (அகம். 164)

*இம் மணிமிடைபவளத்துத் தாய்நிலையும் ஆயத்துநிலை யுங் கண்டோர் கூறியவாறுணர்க.*

மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த
வன்பி லறனு மருளின்று மன்ற
வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதி
பெருமட மான்பிணை யலைத்த
சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே. (ஐங்குறு. 394)

*இவ் வைங்குறுநூறு தலைவி மீண்டு வந்துழித் தாய் சுற்றத் தார்க்குக் காட்டியது.*

நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினு
மெம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வென்வேன்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே. (ஐங்குறு. 399)

*இவ்வைங்குறுநூறு தலைவன் மீண்டு தலைவியைத் தன் மனைக் கட் கொண்டுவந்துழி அவன் தாய் [1]சிலம்புகழீஇ நோன்பு செய்கின் றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டுநின்றும் வந்தார்க்குக் கூறியது.*

*இன்னுஞ் சான்றோர் செய்யுட்களுள் வேறுபட வருவன வெல்லாம் இதனான் அமைக்க.* *(36)*

1. சிலம்புகழீஇ - சிலம்பு கழித்து. இது மிக முற்பட்டகால வழக்காயிருக்கலாம். இளமையிலே காலுக்குக் காப்பு அணிந்து பின் வதுவைக்காலத்துக் கழிக்கும் வழக்கு இப்போதும் சில சாதியாரிடம் அருகி வழங்குகின்றது. வேறு கூறு வாருமுளர்.

**(சேரியுஞ் சுரத்துந் தாயர் தேடிச்செல்வர் எனல்)**

**37. ஏமப் பேரூர்ச் சேரியுஞ் சுரத்துந்**
**தாமே செல்லுந் தாயரு முளரே.**

*இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.*

*இ — ள்: ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும் - [1] பதியெழு வறியாப் பேரூரிற் றெருவின் கண்ணும் அருவழிக்கண்ணும், தாமே செல்லுந் தாயரும் உளர் - தந்தையுந் தன்னையரும் உணராமுன்னம் எதிர்ப்பட்டு மீட்டற்குத் தாமே போகுந் தாயரும் உளர் என்றவாறு.*

*உம்மை எண்ணும்மை. 'தாயர்' எனப் பன்மைகூறித் 'தாமே' யெனப் பிரித்ததனாற் சேரிக்கு நற்றாய் சேறலும், சுரத்திற்குச் செவிலித்தாய் சேறலும் புலனெறிவழக்கிற்குச் சிறந்ததென்றுணர்க. உதாரணம்:*

வெம்மலை யருஞ்சுர நம்மிவ ணொழிய
விருநில முயிர்க்கு மின்னாக் கான
நெருநற் போகிய பெருமடத் தகுவி
யைதக லல்குற் றழையணிக் கூட்டுங்
கூழை நொச்சிக் கீழ தென்மகள்
செம்புடைச் சிறுவிரல் வரித்த
[2]வண்டலுங் காண்டிரோ கண்ணுடை யீரே. (அகம். 275)

*வண்டலைக் காணார் தேஎத்து நின்று காணில் ஆற்றீரெனக் கூறினமையின் ஆயத்திற்கன்றிப் புறஞ்சென்று சேரியோர்க்கு உரைத்தாயிற்று.*

நிலந் [3] தொட்டுப் புகாஅர் வான மேறார்
பிறங்கிரு முந்நீர்க் காலிற் செல்லார்
நாட்டி னாட்டி னூரி னூரிற்
குடிமுறை குடிமுறை தேரிற்
[4] கெடுநரு முளரோநங் காத லோரே. (குறு. 130)

---

1. பதியெழு வறியாப்பேரூர் - பதியிலுள்ள குடிகள் வறுமை பற்றி வேற்றூர் சென்றறியாத செல்வமிக்க பேரூர். இதனை "பதியெழுவறியாப் பண்பு" (சிலப். 15-5) எனவும், "பதியெழு வறியாப் பழங்குடி" (சிலப். 1-5) எனவும் "பதியெழ லறியாப் பழங்குடி" (மலைபடுகடாம். 479) எனவும் வருவனவற்றாலறிக.
2. வண்டல் - மணல்விளையாட்டு. அவை சிற்றில் கோலல், சிறுசேறாடல் முதலியன; விளையாட்டுப் பாவையுமாம்.
3. தொடுதல் - அகழ்தல் = தோண்டல்.
4. கெடுநர் - அகப்படாமற்றப்புவார்.

இது செவிலி தேடத் துணிந்தது, இக் குறுந்தொகையுள் நம்மாற் காதலிக்கப்பட்டோரென்றது அவ்விருவரையும். 'தாயருமுளர்' என்றதனால் தந்தையும் தன்னையரும் வந்தால் இன்னது செய்வலென்றலும் உளவென்று கொள்க. உதாரணம் :

[1] நுமர்வரி னோர்ப்பி னல்ல [2] தமர்வரின்
முந்நீர் மண்டில முழுது மாற்றாது.

என்றாற் போல்வன. அடி புறத்திடாதாள் புறம் போதலும் பிரிவென்றற்குச் சேரியுங் கூறினார், அஃது ஏமமிலிருக்கையன்றாதலின். (37)

**(மனை அயற் பிரிதலும் பிரிவு ளடங்குமெனல்)**

**38.** அயலோ ராயினு மகற்சி மேற்றே

இதுவும் பாலைக்கு ஓர் வேறுபாடு கூறுகின்றது.

**இ – ள்:** அயலோர் ஆயினும் - முற்கூறிய சேரியினுஞ் சுரத்தினுமன்றித் தம்மனைக்கு அயலே பிரிந்தாராயினும், அகற்சி மேற்று - அதுவும் பிரிவின்கண்ணதாம் என்றவாறு.

எனவே, நற்றாய் தலைவியைத் தேர்ந்து இல்லிற் கூறுவனவுஞ் சேரியிற் கூறுவனவும் பிரிந்தாரைப் பின்சென்றதேயாயிற்று. இக்கருத்தான் 'ஏமப்பேரூர்' (37) என்றார். [3]இதனானே மனையயற்கட்பரத்தையிற்பிரிவும் பாலையென்று உய்த்துணர்க. (38)

**(உடன் போக்கின்கண் தோழி கூற்றுக்கள் இவையெனல்)**

**39.** தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணு
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்
வாய்மையும் பொய்மையுங் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினு
நோய்மிகப் பெருகித்தன் னெஞ்சுகலுழ்ந் தோளை
யழிந்தது களைஇய வொழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் றிறத்தோ
டென்றிவை யெல்லா மியல்புற நாடி
னொன்றித் தோன்றுந் தோழி மேன.

1. நுமர் - நுமது சுற்றத்தார்.

2. அமர் - போர்.

3. பரத்தையிற் பிரிவும் பிரிவு (பாலை)என்பது ஆசிரியர்க்குக் கருத்தென்பது 41-ம் சூத்திரத்தாற் பெறப்படுமென்பது எமது கருத்து.

இது தாயர்க்கு உரியன கூறித் தோழிக்குக் கூற்று நிகழுமாறு கூறுகின்றது.

**இ — ள்:** தலைவரும் விழுமநிலை எடுத்து உரைப்பினும் - தலைவன் கொண்டு தலைக்கழியாவிடின் தலைவிக்கட்டோன்றுந் துன்பநிலையைத் தலைவற்கும் தலைவிக்கும் விளங்கக்கூறினும், போக்கற்கண்ணும் - அது கேட்டு இருவரும் போகற்கொருப்பட்டுழித் தலைவியைப் போகவிடும் இடத்தும், விடுத்தற்கண்ணும் - தலைவியை அவனோடு கூட்டி விடுக்குங்கால் தலைவற்குப் பாதுகாவலாகக் கூறும் இடத்தும், நீக்கலின் வந்த தம் உறு விழுமமும் - தாயரை நீக்குதலால் தமக்குற்ற வருத்தத்திடத்தும், வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித் தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும் - மெய்யும் பொய்யும் உணர்ந்த அறிவரது தருமநூற்றுணிபும் இதுவெனக்கூறிப் பின் சென்று அவரைமீட்டற்கு நினைந்த தாயரது நிலைமை அறிந்து அவரை மீளாதபடி அவளை மீட்டுக் கொளினும், நோய்மிகப் பெருகித் தன்நெஞ்சு கலுழ்ந்தோளை அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு - தலைவி போக்கு நினைந்து நெஞ்சு மிகப் புண்ணுற்றுத் தடுமாறுந் தாயை அவ் வருத்தம் தீர்த்தல்வேண்டி உழுவலன்பு காரணத்தாற் பிரிந்தாளென்பது உணரக்கூறி அவளை நெருங்கிவந்து ஆற்றுவித்தற் கூற்றோடே, என்றிவையெல்லாம் இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழி மேன - என்று இச் சொல்லப்பட்டன வெல்லா வற்றுக்கண்ணும் இலக்கணவகையான் ஆராயுங்காலத்துத் தான் அவள் என்னும் வேற்றுமையின்றி ஒன்றுபடத்தோன்றும் தோழி மேன கிளவி என்றவாறு. உதாரணம்:

வெல்போர்க் குருசினீ வியன்சுர னிறப்பிற்
பல்கா ழல்கு லவ்வரி வாடக்
குழலினு மினைகுவள் பெரிதே
விழவொலி கூந்தனின் மாஅ யோளே. (ஐங்குறு. 306)

இவ் வைங்குறுநூற்றுட் குழலினும் இரங்குவளென்று பிரிந்தவள் இரங்குதற் பொருள்படத் தோழி தலைவரும் விழுமந் தலைவற்குக் கூறினாள்.

உன்னங் கொள்கையோ டுளங்கரந் துறையு
மன்னை சொல்லு முய்க மென்னதூஉ
மீரஞ் சேரா வியல்பிற் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையு மொழிக
நாடுக ணகற்றிய வுதியஞ் சேரற்

பாடிச் சென்ற பரிசிலர் போல
வுவவினி வாழி தோழி யவரே
பொம்ம லோதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரா லின்றே மலைதொறு
மால்கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமி னளிசுடர்
வான்றோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅவுயர் நனந்தலை
யுயவல் யானை வெரிநுச்சென் றன்ன
கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்த
லாறுகடி கொள்ளு மருஞ்சுரம் பணைத்தோ
ணாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிரையித ழுண்கண் மகளிர்க்
கரிய வாலென வழுங்கிய செலவே. (அகம். 65)

*இதனுள் அன்னை சொல்லும் பெண்டிர் [1]கௌவையுந் தலைவரும் விழுமமென்று தலைவிக்குக் கூறினாள்.*

*இனிப் போக்கற்கட் கூறுவன பலவுமுள:*

இலங்குவீங் கெல்வளை யாய்நுதல் கவினப்
பொலந்தேர்க் கொண்கன் வந்தன னினியே
யிலங்கரி நெடுங்க ணனந்த றீர்மதி
நலங்கவர் பசலையை நகுகம் யாமே. (ஐங்குறு. 200)

*இவ் வைங்குறுநூற்றின்கண் 'கண் அனந்தறீர்' என்றதனானே உடன்கொண்டு போதற்கு வந்தானெனப் [2]பாயலுணர்த்திக் கூறிற்று.*

வேலும் விளங்கின வினைஞரு மியன்றனர்
தாருந் தையின தழையுந் தொடுத்தன
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇ யுலவையிலை நீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
றேம்படப் பொதுளின பொழிலே கானமு
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்
போதுவந் தன்றாற் றூதே நீயுங்
கலங்கா மனத்தை யாகி யென்சொ
னயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி
தெற்றி யுலறினும் வயலை வாடினு
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினு
நின்னினு மடவ ணனிநின் னயந்த
வன்னை யல்ல றாங்கி நின்னையர்

1. கௌவை - அலர்.
2. பாய லுணர்த்தல் - படுக்கையிற் றுயிலுணர்த்தல்.(உணர்த்தல் - தெளிவித்தல்) துயிலெழுப்பல் என்பது கருத்து.

புலிமருள் செம்ம னோக்கி
யலமர லின்னுந் தோய்கநின் முலையே. (அகம். 259)

*இவ் வகம் போக்குதற்கண் [1] முயங்கிக் கூறியது.*

அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்த னரையொடு முடிப்பினு
நீத்த லோம்புமதி பூக்கே ழூர
வின்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட் டியானைப் போஒர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய விவட்கே. (நற்றிணை. 10)

*இந் நற்றிணை தலைவியைப் பாதுகாக்கவெனத் தோழி [2] கையடுத்தது.*

*'புதல்வனீன்ற' (நற். 335) என்பதும் அது.*

இவளே நின்னல திலளே யாயுங்
குவளை யுண்க ணிவளல திலளே
யானு மாயிடை யேனே
மாமலை நாட மறவா தீமே.

*இதுவும் அது.*

விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளின்முதன் முழங்கும்
வைகுபுலர் விடியன் மெய்கரந்து தன்கா
லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு வைஇய செல்வோ
ளிவைகாண் டோறு நோவர் மாதோ
வளியரோ வளியரென் னாயத் தோரென
நும்மொடு வரவுதா னயரவுந்
தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே. (நற்றிணை. 12)

*இந் நற்றிணை [3]போக்குதல் தவிர்ந்ததாம்.*

அவளே, உடனம ராயமொ டோரை வேண்டாது
மடமான் பிணையியன் மதர்த்த நோக்கமொ
டென்னினு நின்னினுஞ் சிறந்த மென்மொழி
யேதி லாளன் காதலி னானாது
பால்பாற் படுப்பச் சென்றன ளதனான்
முழவிமிழ் பந்தர் வினைபுனை நல்லில்
[4]விழவயர்ந் திருப்பி னல்லதை யினியே

---

1. முயங்கல் - தழுவல்.
2. கையடுத்தல் - கையடைகொடுத்தல். கையடை - அடைக்கலம்.
3. போக்குதல் - உடன்போக்குதல். தவிர்தல் - ஒழிதல்
4. விழவு - கொண்டாட்டம்.

நீயெவ னிரங்குதி யன்னை
யாயினுஞ் சிறந்த நோய்முந் துறுத்தே.

*என்னினும் நின்னினுஞ் சிறந்தோன் தலைவனென்றது அவர் தருமநூல்விதி என்பது. இனி 'விழவயர்ந்திருப்பினல்லதை' எனவே மீட்டற்குச் சேறல் அறனன்றென்று மீட்டாளாயிற்று.*

அன்னை வாழியோ வன்னை நின்மக
ளென்னினும் யாயினு நின்னினுஞ் சிறந்த
தன்னம ரிளந்துணை மருட்டலின் முனாது
வென்வேற் புல்லி வேங்கட நெடுவரை
மழையொடு மிடைந்த வயக்களிற் றருஞ்சுரம்
விழைவுடை யுள்ளமொ டுழைவயிற் பிரியாது
வன்கண் செய்து சென்றனள்
புன்கண் செய்தல் புரைவதோ வன்றே.

*இது தாயை வற்புறுத்தியது.*

*'இயல்புற' என்றதனானே, தலைவன் கரணவகையால் வரைந் தானாக எதிர்சென்ற தோழிக்கு யான் வரைந்தமை நுமர்க்குணர்த் தல் வேண்டுமென்றாற்கு அவள் உணர்த்தினே னென்றலும், தலைவி மீண்டு வந்துழி ஊரது நிலைமை கூறுதலுங் கொள்க.*

கருவிரன் மந்திக் கல்லா விளம்பார்ப்
பிருவெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோன்
மதிபுடைப் பதுபோற் றோன்று நாட
வரைந்தனை நீயெனக் கேட்டியா
னுரைத்தனெ னல்லனோ வஃதென் யாய்க்கே. (ஐங்குறு. 280)

புள்ளு மறியாப் பல்பழம் பழுனி
மடமா னறியாத் தடநீர் நிலைஇச்
சுரநனி யினிய வாகுக வென்று
நினைத்தொறுங் கலுழு மென்னினு
மிகப்பெரிது கலங்கின்று தோழிநம் மூரே. (ஐங்குறு. 398)

*இன்னும் இதனானே செய்யுட்கண் வேறுபட வருவன வெல் லாம் அமைத்துக்கொள்க.*

ஊஉ ரலரெழச் சேரி கல்லென
வானா தலைக்கு மறனி லன்னை
தானே யிருக்கத்தன்மனையே யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
வுணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு
விண்டொட நிவந்த விலங்குமலைக் கவாஅற்
கரும்புநடு பாத்தி யன்ன
பொருங்களிற் றடிவழி நிலைஇய நீரே. (குறு. 262)

*இது போக்கு [1]நேர்ந்தமை தோழி கூறியது; பிறவுமன்ன. (39)*

---

1. நேர்தல் -உடன்படல்.

**(கொண்டுதலைக்கழிந்துழிக் கண்டோர் கூற்றுக்க ளிவையெனல்)**

40. பொழுது மாறு முட்குவரத் தோன்றி
வழுவி னாகிய குற்றங் காட்டலு
மூரது சார்வுஞ் செல்லுந் தேயமு
மார்வ நெஞ்சமொடு செப்பிய கிளவியும்
புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமோ
டழிந்தெதிர் கூறி விடுப்பினு மாங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினுஞ்
சேய்நிலைக் ககன்றோர் செலவினும் வரவினுங்
கண்டோர் மொழிதல் கண்டதென்ப.

*இது, கொண்டுதலைக் கழிந்துழி இடைச்சுரத்துக் கண்டோர் கூறுவன கூறுகின்றது.*

*இ – ள்: பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவின் ஆகிய குற்றம் காட்டலும் - உடன்போயவழி மாலைக்காலமுஞ் சேறற்கரிய வழியும் அஞ்சுவரக்கூறி அவற்றது தீங்கு காரண மாகப் போகிறார்க்கு வரும் ஏதம் அறிவித்தலும், ஊரது சார்வும் செல்லும் தேயமும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய கிளவியும் - எம்மூர் அணித்தெனவும் நீர் செல்லுமூர் சேய்த்தெனவும் அன் புடை நெஞ்சத்தாற் கூறும் கூற்றுக்களும், புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு அழிந்து எதிர் கூறிவிடுப்பினும் - புணர்ந்து உடன் போய இருவர் கண்ணுந் தணவா நெஞ்சினராகி ஆற் றாமை மீதூர ஏற்றுக்கொண்டு நின்று இனி 'இதினூங்குப் போதற் கரிது நும்பதிவயிற் பெயர்தல் வேண்டுமென்று உரைத்து மீட்ட லும், ஆங்கு அத்தாய்நிலைகண்டு தடுப்பினும் விடுப்பினும் - அவ்விடத்துத் தேடிச் சென்ற அச் செவிலியது நிலைகண்டு அவ ளைத் தடுத்து மீட்பினும் அவர் இன்னுழிச் செல்வரென விடுத் துப் போக்கினும், சேய் நிலைக்கு அகன்றோர் செலவினும் - சேய்த்தாகிய நிலைமைக்கண்ணே நீங்கின அவ்விருவருடைய போக்கிடத்தும், வரவினும் - செவிலியது வரவிடத்தும், கண் டோர் மொழிதல் கண்டது என்ப - இடைச்சுரத்துக் கண்டோர் கூறுதல் உலகியல் வழக்கினுட் காணப்பட்டதென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

---

1. இதினூங்கு - இதின்மேல்.

எம்மூ ரல்ல தூர்நணித் தில்லை
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப
விளையண் மெல்லியன் மடந்தை
யரிய சேய பெருங்க லாறே. (சிற்றெட்டகம்)

*இதனுள் [1]'கதிரும் ஊழ்த்தனன்' எனவே பொழுது சேறலும் 'பெருங்கலாறு' எனவே [2]ஆற்றதருமையும் பற்றிக் குற்றங் காட்டியவாறு காண்க.*

*'எல்லுமெல்லின்று' (390) என்னுங் குறுந்தொகைப் பாட்டும் அது.*

நல்லோண் மெல்லடி நடையு மாற்றாள்
பல்கதிர்ச் செல்வன் கதிரு மூழ்த்தன
னணித்தாத் தோன்றுவ தெம்மூர்
மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே. (பொருளியல்)

*இஃது எம்மூர் அணித்தென்றதனாற் சார்வும், அதனானே செல்லுந் தேயஞ் சேய்த்தெனவும் கூறிற்று.*

*மகட்பயந்து வாழ்வோர்க்கு இவளைக்கண்டு அருள் வருதலின் 'ஆர்வநெஞ்சம்' என்றார்.*

இது நும் மூரே யாவருங் கேளிர்
பொதுவறு சிறப்பின் வதுவையுங் காண்டு
மீன்றோ ரெய்தாச் செய்தவம்
யாம் பெற்றனமான் [3]மீண்டனை சென்மே.

*இஃது அழிந்தெதிர்கூறி விடுத்தது. இது 'கொடுப்போரின்றிக் கரணமுண்மை (141) கூறிற்று. மீட்டுழி இன்னுழிச்சென்று இன்னது செய்ப என்றல் புலனெறி வழக்கன்று.*

பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி
சிலம்புகெழு சீறடி சிவப்ப
விலங்குவேற் காளையோ டிறந்தனள் சுரனே.

சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா ணும்மக ணுமக்குமாங் கனையளே. (கலி. 9)

கடன்மேய சங்கங் கழியடைந்த பெண்ணை
மடன்மேய வாழ்குர லன்றில் – கெடலருஞ்சீர்
வாமா நெடுங்கோதை வான்றீண்டு கொல்லிமேற்
றேமாவின் மேய கனி.

*இவை செவிலியைத் தடுத்தன.*

1. கதிர் - ஞாயிறு
2. ஆறு- வழி,
3. மீண்டனைசெல் - எம்மூர்க்கு மீண்டுவருதி.

சிலம்புஞ் சிறுநுதலுஞ் சில்குழலும்
　　பல்வளையு மொருபாற் றோன்ற
வலங்கலந் திண்டோளு மாடெருத்து
　　மொண்குழையு மொருபாற் றோன்ற
விலங்க லருஞ்சுரத்து வேறுருவி
　　னோருடம்பாய் வருவார்க் கண்டே
யலங்க லவிர் [1]சடையெம் மண்ணல்
　　விளையாட்டென் றகன்றேம் பாவம்.

*இது தெய்வமென யாங்கள் போந்தேம், நுமக் [2]கெய்தச் சேறலாமென்று விடுத்தது.*

நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்த வரிநிழ லசைஇச்
சிறுவரை யிறப்பிற் காண்டி செறிதளிர்ப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வே லண்ணல் முன்னிய சுரனே. (ஐங்குறு. 388)

*இவ் வைங்குறுநூறும் அது.*

அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா
வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண் – டஞ்சி
யொருசுடரு மின்றி யுலகுபா ழாக
விருசுடரும் போந்தனவென் றார். (திணைமாலை. 71)

*இஃது இடைச்சுரத்துக் கண்டோர் கூறிய வார்த்தையைக் கேட்டோராகச் சிலர் கூறியது.*

அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்
தொலிவ லீந்தி னுலவை யங்காட்
டாறுசென் மாக்கள் சென்னி யெறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மரனோக்கு மிண்டிவ ரீங்கைய சுரனே
வையெயிற் றையண் மடந்தை முன்னுற்
றெல்லிடை நீங்கு மிளையோ னுள்ளங்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கு முருமினுங் கொடிதே. (நற்றிணை. 2)

காண்பா னவாவினாற் காதலன் காதலிபின் னடவா நிற்ப
நாண்பால ளாதலா னன்னுதல் கேள்வன்பின் னடவா நிற்ப
வாண்பான்மை குன்றா வயில்வே லவன்றனக்கும் மஞ்சொ லாட்கும்
பாண்பால வண்டினமும் பாட வருஞ்சுரமும் பதிபோன் றன்றே.

மடக்கண் டகரக் கூந்தற் பணைத்தோள்
வார்ந்தவா லெயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கிற்
பிணைய லந்தழை தைஇத் துணையிலள்

1. சடையெம்மண்ணல் - சிவன். அவன் விளையாட்டென்றது, அர்த்தநாரீசுர வடிவாய் வருதலை.
2. எய்த - அடைய.

விழவுக்களம் பொலிய வந்துநின் றோளே
யெழுமினோ வெழுமினங் கொழுநர்க் காக்க
மாரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த வொள்வாண் மலையன
தொருவேற் கோடி யாங்குநம்
பன்மைய தெவனோவிவ ணன்மைதலைப் படினே.

(நற்றிணை. 170)

*இஃது இடைச்சுரத்துக் குறும்பினுள்ளோர் இவரைக் கண்டு [1]கோளிழைப்புற்றாக்கு அவர்பெண்டிர் கூறியது.*

*இவை செலவின்கட் கூறியன.*

வில்லோன் காலன கழலே தொடியோண்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே யாரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயி லழுவ முன்னி யோரே (குறுந். 7)

*என்பதும் அது.*

கடியான் கதிரெறிப்பக் கல்லளையில் வெம்பியவக் கலங்கற் சின்னீ
ரடியா னுலகளந்த வாழியா னாக்கிய வமிழ்தென் றெண்ணிக்
கொடியான் கொடுப்பக் [2]குடங்கையிடங் கொண்டிருந்து குடித்துச் சென்ற
வடியோர் தடங்கணவ் வஞ்சிக்கொம் பீன்றாரிவ் வருவார் போலும்.

நமரே யவரெனி னண்ணினீர் சொன்மி
னமர்வி லொராவவதி யாய்நின் – றமரோ
விளக்கி னனையாளைத் தான்கண்டாள் கண்டேன்
களக்கனி வண்ணனை யான்.

அறம்புரி யருமறை நவின்ற நாவிற்
றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டனெ மம்ம சுரத்திடை யவளை
யின்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே. (ஐங்குறு. 387)

*இவை செவிலி வரவின்கட் கூறியன.*

எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ
லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்

---

1. கோளிழைத்தல் - தலைவியைக் கவர்தல். நற்றிணையுள் இச்செய்யுள் "தோழி விறலிக்கு வாயின்மறுத்தல்" என்னுந் துறை எனக் கூறப்பட்டுள்ளது. அவ்வுரைநோக்கியறிக.
2. குடங்கை - உள்ளங்கை.
3. தேடிச்சென்ற செவிலி சுரத்தின்கண் புணர்ந்துடன் வந்தாரிருவரைக் கண்டு வினாவியவிடத்து அவருள் தலைவன் செவிலியை நோக்கிக் கூறியது.

குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணிர்
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத் தீரிவ்விடை
யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும;
காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவர றாயிர்நீர் போறிர்;

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கணையளே;

சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே;

ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கா னும்மக ளுமக்குமாங் கணையளே;

எனவாங்கு,
இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றன
னறந்தலை பிரியா வாறுமற் றதுவே. (கலி 9)

*என்னும் பாலைக்கலியும் அது.*

*இக் கூறியவாறன்றி இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இச் சூத்திரத்தான் அமைக்க.* *(40)*

**(உடன்போக்கின்கண்ணும் பிறாண்டுந் தலைவன் கூறுங் கூற்றுக்கள் இவையெனல்)**

41. ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்து
மொன்றிய தோழியொடு வலிப்பினும் விடுப்பினு
மிடைச்சுர மருங்கி னவடம ரெய்திக்
கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கஞ ரெய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட
வப்பாற் பட்ட வொருதிறத் தானு
நாளது சின்மையு மிளமைய தருமையுந்
தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியு
மின்மைய திளிவு முடைமைய துயர்ச்சியு
மன்பின தகலமு மகற்சிய தருமையு
மொன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும்

வாயினுங் கையினும் வகுத்த பக்கமொ
டூதியங் கருதிய வொருதிறத் தானும்
புகழு மானமு மெடுத்துவற் புறத்தலுந்
தூதிடை யிட்ட வகையி னானு
மாகித் தோன்றும் பாங்கோர் பாங்கினு
மூன்றன் பகுதியு மண்டிலத் தருமையுந்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலு முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினுங்
காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்
பரத்தையி னகற்சியிற் பரிந்தோட் குறுகி
யிரத்தலுந் தெளித்தலு மெனவிரு வகையோ
டுரைத்திற நாட்டங் கிழவோன் மேன.

*இஃது உடன்போக்கினுள் நற்றாயுந் தோழியுங் கண்டோருங் கூறுவன கூறித் தலைவன் ஆண்டும் பிறாண்டுங் கூறுங் கூற்றுங் கூறுகின்றது.*

*'தமரினும் பருவத்துஞ் சுரத்து' மென்னும் மூன்றற்கும் [1]'ஒன்றா' வென்பதனையும் 'ஒன்றிய' வெண்பதனையுங் கூட்டி ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க.*

*இ — ள்:* ஒன்றாத் தமரினும் - உடன்போக்கிற்கு ஒன்றாத் தாயர் முதலியோர்க் கண்ணும், பருவத்தும் - இச்செறிப்பாற் புறம் போகற்கு ஒன்றாமையானுந் தலைவனொடு கூட்டம் பெறாது ஆற்றியிருக்கும் பருவம் ஒன்றாத தானும் ஒன்றாப் பருவத்தின் கண்ணும், சுரத்தும் - 'அரியசேய கல்லதர்' ஆதலிற் போதற்கு

1. ஒன்றா என்பதனை மூன்றற்குங் கூட்டடல் - ஒன்றாத்தமர், ஒன்றாப்பருவம், ஒன்றாச்சுரம் எனக் கூட்டடல்.

ஒன்றல் - ஒருப்படல்" இயைதல். இதனைத் தமர்க்கண் ஒன்றல், பருவத்தின் கண் ஒன்றல், சுரத்தின்கண் ஒன்றல் என இயைத்துக் கொள்க.

தமர் ஒன்றாமை - உடன்போக்கிற் கொன்றாமை. பருவம் ஒன்றாமை - இற்செறிப்பானே புறம்போதற்குரிய காலமும் ஆற்றியிருக்கும் பருவமும் ஒன்றாமை. சுரம் ஒன்றாமை - அரியசேயகல்லதராதலின் உடன்போதற்கு ஒன்றாமை. தமர்க்கண் ஒன்றல் - அவர் கூறுங் கடுஞ்சொற்கேட்டற்கு ஒருப்படல். பருவத்தின்கண் ஒன்றல் - நொதுமலர் வரைவிற்காற்றாமையால் உடன்போக்கிற்கேலாத கடுங்கோடையெனக் கருதாது உடன்படல். சுரத்தின்கண் ஒன்றல் - அரியசேயகல்லதர் எனக் கருதாது கொண்டுதலைக்கழிதற்கு (உடன் போக்கிற்கு)ஒருப்படல்.

ஒன்றாச் சுரத்தின்கண்ணும், ஒன்றிய தோழியொடு வலிப்பினும் - தலைவிவேண்டியதே தான் வேண்டுதலிற் பின் தமர்கூறும் கடுஞ் சொற்கேட்டற்கும் ஒருப்பட்டு நொதுமலர் வரைவிற்காற்றாது உடன் போக்கிற் கேலாத கடுங்கோடையெனக் கருதாது கொண்டு தலைக்கழிதற்கு ஒன்றிய தோழியொடு தலைவன் ஆராய்ந்து உடன்போக்கினைத் துணியினும், விடுப்பினும் - தலைவியை ஆற்றியிருப்பாளெனக் கருதி உடன்கொண்டு போகாது தலைவன் விடுப்பினும், இடைச்சுரமருங்கின் அவள் தமர் எய்திக் கடைக் கொண்டு பெயர்த்தலிற் கலங்கு அஞர் எய்திக் கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட அப்பால்பட்ட ஒருதிறத்தானும் - தந்தையுந் தன்னையரும் இடைச் சுரத்திடத்தே பின்சென்று பொருந்தித் தலைவியப் பெயர்த்தல் வேண்டுதலில் தலைவி மிகவருந்தித் தமர்பாற்பட்டு உரையாடாது தலைவன் பாற்படுதலின் அவள் கற்பொடு புணர்ந்தமை சுற்றத்தாருஞ் சுரத்திடைக் கண்டோ ரும் உணர்ந்த வெளிப்பாடு உளப்படக் கொண்டுதலைக்கழிதற் கூற்றின்கட்பட்ட பகுதிக்கண்ணும்.

கடைக்கொண்டெய்தியென்க. கடை - பின். 'தமர்' எனவே, தந்தை தன்னையரை உணர்த்திற்று. முன்னர் 'தாய்நிலைகண்டு தடுப்பினும்' (40) என்றலின், தாயர்தாமே சென்றமை முன்னத்தால் தமர் உணர்ந்து வலிதிற்கொண்டு அகன்றானோவென்று கருதி யும் அவ்வரைவு மாட்சிமைப்படுத்தற்கும் பின்சென்று அவள் பெயராமற் கற்பொடுபுணர்ந்தமைகண்டு தலைவன் [1]எடுத்துக் கொண்ட வினை முடித்தலும் [2]ஒருதலையென்றுணர்ந்து பின்னர் அவரும் போக்குடன் பட்டு மீள்பவென்று கொள்க. அவ்வெளிப் பாடு கற்பாதலிற் கற்பென்றார் 'உளப்பட' என்றதனால் வலித்த லும் விடுத்தலும் அகப்பட வென்றாராயிற்று.

[3]நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும் இன்மையது இளிவும் உடைமை யது உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்

---

1. எடுத்துக்கொண்டவினை - தலைவியை உடன்கொண்டு போதல்.
2. ஒருதலை - நிச்சயம்.
3. நாளது சின்மை முதலிய நான்கும் பொருள் செய்தற்கு ஊக்கப்படுத்துவன. ஏனைய நான்குந் தடுப்பன என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இளம் பூரணர் எட்டும் ஒன்றா என்பர் அவருரை நோக்கியறிக.

ஒன்றாய் பொருள்வயின் ஊக்கியபாலினும் - வாழ்க்கைநாள் சிலவாதல் ஏதுவாகப் பொருள்செய்தல் குறித்தாரை இளமையது அருமை இன்பத்தின்கண்ணே ஈர்த்து ஒன்றாமையும், மடி யின்மை ஏதுவாகப் பொருள் செயல் குறித்தாரை யாதானும் ஓர் ஆற்றாற் பொருள் செய்யலாகாது தத்தநிலைமைக்கேற்பச் செயல் வேண்டு மென்னுந் தகுதியமைதி ஒன்றாமையும், இன்மையான் வரும் இளிவரவு நினைத்துப் பொருள்செய்ய நினைந்தாரைப் பொருளுடைமைக் காலத்து நிகழும் உயர்ச்சி அதற்கு இடை யூறாகிப் பொருணசையுள்ளத்தைத் தடுத்து ஒன்றாமையும், பிரிந்துழி நிகழும் அன்பினது அகலங்காரணமாகப் பொருள் செய்யக் குறித்தாரைப் பிரிவாற்றாமையிடைநின்று தடுத்து ஒன் றாமையுமாய், ஒன்று ஒன்றனோடு ஒன்றாது வரும் பொருட்டிறத் துப் பிரிதற்குத் தலைவன் உள்ளம் எடுத்த பகுதிக்கண்ணும்,

எனவே, நாளது சின்மையுந் தாளாண்பக்கமும் இன்மைய திளிவும் அன்பின தகலமும் பொருள் செயல்வகைப்பால ஆத லும், இளமையதருமையும் தகுதியதமைதியும் உடைமையது யர்ச்சியும் அகற்சியதருமையும் இன்பத்தின்பால ஆதலுங் கூறி னார். இவ் வெட்டும் பொருள் செயற்கு ஒன்றாவென்னாமோ எனின், வாழ்நாள் சிறிதென்றுணர்ந்து அதற்குள்ளே பொருள் செய்து அறமும் இன்பமும் பெறுதற்குக் கருதியவழி ஆண்டு முயற்சியும் இன்மையால்வரும் இளிவரவும் அதற்கு ஒருப்படுத் துங் கருவியாதலானும், பொருள் பின்பு அன்பிற்குப் பெருக்கந் தருமாதலானும் இந்நான்கும் பொருள் செய்தற்கு வேண்டுமென மறுக்க. இவ்வெட்டற்குந் தலைவன் கூற்றாக உதாரணம் வருவன உளவேற் கண்டுகொள்க.

ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக்
கம்மா வரிவையும் வருமோ
வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே. (குறுந். 63)

இக் குறுந்தொகையுள் இன்மையதிளிவு நெஞ்சிற்குக் கூறிய வாறு காண்க.

'பகுதி' என்றதனானே, தலைவன் பிரிவலெனக் கூறுவனவும் பிறவுங் கொள்க.

இன்றே சென்று வருது நாளைக்
குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக
விளம்பிறை யன்ன விளங்குசுடர் நேமி
விசும்புவீசு கொள்ளியிற் பைம்பயிர் துமியக்

காலியற் செலவின் மாலை யெய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மா ணாக மணந்துவக் குவமே (குறு. 189)

எனவரும். இது குறுந்தொகை. இவை வணிகர்க்கே உரியன.

இனித் தலைவன் கூற்றினைத் தலைவியுந் தோழியுங் கொண்டு கூறுவன பெரும்பான்மை. அவையெல்லாம் 'நிகழ்ந்தது கூறி நிலை யலுந் திணையே' (44) என மேல்வருஞ் சூத்திரத்துட் காட்டுதும்.

வாயினுங் கையினும் வகுத்த பக்கமொடு ஊதியம் கருதிய ஒரு திறத்தானும் - உண்மைப் பொருளிடத்தும் அதற்கேற்ற ஒழுக்கத் திடத்துங் கூறுபடுத்துக் கூறிய நூல்களாற் பெறும் பயனைக் கருதிய ஒரு கூற்றின்கண்ணும்,

என்றது, வீடுபேற்றிற்கு உதவியாகிய நூல்களை ஓதற்குப் பிரிவுழியு மென்றதாம். இதற்குத் தலைவன் கூற்றாக உதாரணம் வருவன உளவேற் கொள்க.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் -[1] 'போகம் வேண் டிப் பொதுச் சொற் பொறுத்தல்' (புறம் - 8) அரசியலன்றாதலின் தமக்கேற்ற புகழும் பெருமையும் எடுத்துக்காட்டி இதனாற் பிரிதுமெனத் தலைவியையுந் தோழியையும் வற்புறுத்தற்கண்ணும்,

இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

தூது இடையிட்டவகையினானும் - இருபெருவேந்தர் பொருவது குறித்துழி இருவரையுஞ் சந்து செய்வித்தற்பொருட் டுக் கூட்டத்திற்கு இடையிட்ட பிரிதற்பகுதிக்கண்ணும்,

ஒருவனுழை ஒருவன் [2]மாற்றங்கொண்டுரைத்தலின் தூதா யிற்று 'வகை' என்றார், வணிகரில் அரசர்க்கும் அரசரில் அந்த ணர்க்குந் தூது சிறந்ததென்றற்கும், குறுநில மன்னர்க்குப் பெரும் பான்மை யென்றற்கும், வேந்தர் தம்மின் இழிந்தாருழைத் தூதுசேறல் உரித்தென்றற்கும். இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

1. பொதுச்சொல் - நிலம் பிற அரசர்க்கும் பொது என்னுஞ் சொல் புறம் 8 -ம் செய்யுளுரை நோக்குக.

2. மாற்றம் - சொல்,

ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் - தனக்கு ஆக்கஞ் சிறந்த நட்புடையோராகித் தோன்றும் நட்புடையோர்க்கு உற்றுழி உதவச் சேறற் கண்ணும்,

இதற்கு 'மலைமிசைக் குலைஇய' (அகம். 84) என்பதூஉம் 'இருபெரு வேந்தர் மாறுகொள்' (அகம். 174) என்பதூஉம் முன்னர்க் காட்டினாம். அவற்றை உதாரணமாகக் கூறிக்கொள்க.

மூன்றன் பகுதியும் - அறத்தினாற் பொருளாக்கி அப்பொருளாற் காமநுகர்வலென்று பிரிதற்கண்ணும்,

மண்டிலத்து அருமையும் - அங்ஙனம் பொருள்வருவாய்க்கு ஏதுவாகிய வேற்றுப் புலங்களின் அருமைகூறிப் பிரிதற்கண்ணும்,

இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக்காண்க.

தோன்றல்சான்ற மாற்றோர் மேன்மையும் - தோற்றஞ்சான்ற புகழினராகிய வேற்றுவேந்தர் தமது மீக்கூற்றங்கருதிப் பிரிதற் கண்ணும்,

இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக்காண்க.

'தோன்றல் சான்ற' என்றதனால் தெவ்வர் தன்னின் மிக்காரெனக் கேட்டுழி அழுக்காறு தோன்றலின் அதுவும் பிரிதற்கு ஏதுவாமென்றுணர்க. இஃது அரசர்க்கே யுரித்து.

பாசறைப் புலம்பலும் - தலைவன் பாசறைக்கண் இருந்து தனக்கு வெற்றி தோன்றிய காலத்துந் தான் அவட்குக் கூறிப் போந்த பருவம் வந்துழியுந் தூது கண்டுழியும் அவள் வருந்துவளென நினைத்துத் தனிமைகூறும் இடத்தும்,

இதனைக் 'கிழவிநிலையே' (186) என்னுஞ் சூத்திரத்தான் விலக்குவரெனின், அதற்கு உம்மை விரித்துக் கிழவிநிலையை வினைசெய்யா நிற்றலாகிய இடத்து நினைந்து கூறினானாகக் கூறார்; வெற்றி நிகழுமிடத்துந் தான் குறித்த பருவம் வந்துழியும் தூது கண்டுழியும் வருத்தம் விளங்கிக் கூற்றுத் தோன்றுமென்று பொருளாமென்றுணர்க.

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும் - வகையின் வினைத்திறமுமென மாற்றுக. வேந்தன் எடுத்துக் கொண்ட வினை முடிந்தகாலத்துத் தான் போக்கொருப்

*பட்டு நின்று பாகனொடு விரும்பிக் கூறிய வகையின்கண் தோன்றிய வேறோர் வினைத்திறத்திடத்தும்,*

*என்றது, அரசனுக்குப் பின்னும் ஓர் பகைமேற் சேறல் உளதாதலை.*

*காவற்பாங்கின் பக்கமும் - வேந்தன் தன்னாற் காக்கப்படுவனவாகிய பகுதிகளின் கூற்றிற் பிரியுமிடத்தும்,*

*பகுதி ஆகுபெயர்: அவை யானை குதிரை முதலியவற்றைக் காத்தலும் அரசர்க்குத் தருமமாகிய வேட்டையிற் சென்று கடுமா கொன்று ஏனையவற்றைக் காத்தலும் முதலியன.*

*ஆங்கோர் பக்கமும் - அவன் காத்தற்குரிய பகுதிக்கண்ணே நிற்பார் கூற்றிற் பிரியுமிடத்தும்,*

*அவர் தாபதர் முதலியோர் பலருமாம்.*

*பரத்தையின் அகற்சியிற் பரிந்தோட்குறுகி இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு - பரத்தையிற் பிரிதல் காரணத்தாற் பரிபுலம்பெய்திய தலைவியை எய்தி இரத்தலும், இரந்த பின்னர் ஊடலுணர்த்தலும் என்ற இருபகுதியோடே,*

*உரைத்திற நாட்டம் கிழவோன் மேன - முற்கூறிய இடங்களிற் கூற்று நிகழுங் கூறுபாட்டை நிலைபெறுத்துதல் தலைமகனிடத்தனவாம் என்றவாறு. உதாரணம்:*

ஆறுசெல் வருத்தத்துச் சீறடி சிவப்பவுஞ்
சினைநீங்கு தளிரின் வண்ணம் வாடவுந்
தான்வர றுணிந்த விவளினு மிவளுடன்
வேய்பயி லழுவ முவக்கும்
பேதை நெஞ்சம் பெருந்தக வுடைத்தே.

*இது தோழியோடு வலித்தது.*

*'அப்பாற்பட்ட ஒருதிறத்தானும்' என்றதனானே தலைவியிடத்துத் தலைவன் கூறுவன பலவுங்கொள்க. உதாரணம்:*

வாள்வரி வயமான் கோளுகி ரன்ன
செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின்
சிதரற் செம்ம றாஅய மதரெழின்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
முகைபிணி யவிழ்ந்த கோங்கமொ டசைஇநனை
யதிரல் பரந்த வந்தண் பாதிரி
யுதிர்வீ யஞ்சினை தாஅ யெதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅ

மணங்குடை நகரின் மணந்த பூவி
னன்றே கான நயவரு மம்ம
கண்டிசின் வாழியர் குறுமக ளுந்தை
யடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற்
பிடிமிடை களிற்றிற் றோன்றுங்
குறுநெடுந் துணைய குன்றமு முடைத்தே.

*இவ் வகப்பாட்டு தலைவியை [1]மருட்டிக் கூறியது.*

உயர்கரைக் கானியாற் றவிரற லகன்றுறை
வேனிற் பாதிரி விரைமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் [2]கதவநின் றடமென் றோளே. (ஐங்குறு. 361)

*இவ் வைங்குறுநூறு உடன்போயவழித் தலைவன் புகழ்ச்சிக்கு நாணித் தலைவி கண்புதைத்துழி அவன் கூறியது.*

அழிவில முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே (நற்றிணை. 9)

*என வரும். இது புணர்ச்சிமகிழ்ந்தபின் வழிவந்த நன்மைகூறி வருந்தாது ஏகென்றது. இது நற்றிணை.*

*பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.*

இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு
நாட்டயிர் கடைகுரல் கேட்டொறும் வெரூஉ
மாநிலைப் பள்ளி யல்க நம்மொடு
மானுண் கண்ணியும் வருமெனின்
வாரார் யாரோ பெருங்க லாறே.

*[3] இது விடுத்தற்கட் கூறியது.*

வினையமை பாவையி னியலி நுந்தை
மனைவரை யிறந்து வந்தனை யாயிற்

1. மருட்டிக்கூறல் - உடன்போகுழி மருட்டிக்கூறல்.(இதுவும் பாலை.)
2. கதவ - கோபத்தினையுடையன.
3. விடுத்தல் - தோழி உடன்கூடி விடுத்தல்.

றலைநாட் கெதிரிய தண்பத வெழிலி
யணிமிகு கானத் தகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டு
நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞிய பராரை வேங்கை
மணலிடு மருங்கி னிரும்புறம் பொருந்தி
யமர்வரி னஞ்சேன் பெயர்க்குவெ
னுமர்வரின் மறைகுவென் மாஅ யோயே. (நற்றிணை. 362)

*இது நற்றிணை.*

நுமர்வரி னோர்ப்பி னல்ல தமர்வரின்
முந்நீர் மண்டில முழுது மாற்றா
தெரிகணை விடுத்தலோ விலனே
யரிமதர் மழைக்கண் கலுழ்வகை யெவனே.

*இவை தமர் வருவரென ஐயுற்றுக் கூறியன. அவர் வந்து கற்பொடு புணர்ந்தன வந்துழிக் காண்க.*

அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் பெயர்ந்தநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழா அய் வலிப்பல்யான் கேளினி. (களி. 11)

*இதனுள் 'என' என்றதனால் தலைவன் கூற்றுப் பெற்றாம். இது [1]"மூன்றன் பகுதி'.*

புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்துவந் தோயே யருந்தொழிற் கட்டூர்
நல்லேறு தழீஇ நாகுபெயர் காலை
யுள்ளுதொறுங் கலிழு நெஞ்சம்
வல்லே யெம்மையும் வரவிழைத் தனையே. (ஐங்குறு. 445)

*இது பகைவயிற் பிரிந்தோன் பருவங்கண்டு தலைவியை நினைந்து நெஞ்சொடு புலம்பியது.*

முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள
நல்ல காண்குவ மாஅ யோயே
பாசறை யருந்தொழி லுதவிநங்
காதனன் னாட்டுப் போதரும் பொழுதே. (ஐங்குறு. 446)

*இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் பருவவரவின்கண் [2]உருவு வெளிப்பட்டுழிப் புலம்பியது. 'உதவி' யென்றலின் வேந்தற்குற்றுழி யாயிற்று.*

---

1. மூன்றன்பகுதி - அறத்தினாற் பொருளாக்கிப் பொருளால் இன்பநுகர்தல்.
2. உருவு - தலைவியுருவு.

வந்தாற்றான் செல்லாமோ வாரிடையாய் வார்கதிரால்
வெந்தாற்போற் றோன்றுநீள் வேயத்தந் – தந்தார்
தகரக் குழல்புரளத் தாழ்துகில்கை யேந்தி
மகரக் குழைமறித்த நோக்கு. (திணைமாலை. 77)

*இஃது உருவு வெளிப்பட்டுழி, நின்னொடு போதுவேனென்று அவளை ஆற்றுவித்தது. திணைமாலையிற் பாலை.*

நனிசேய்த் தென்னாது நற்றே ரேறிச் சென்
றிலங்கு நிலவி னிளம்பிறை போலக்
காண்குவெந் தில்லவவள் கவின்பெறு சுடர்நுதல்
விண்ணுய ரரண்பல வௌவிய
மண்ணுறு முரசின் வேந்துதொழில் விடினே. (ஐங்குறு. 443)

*இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் தான் குறித்த பருவத்து வினைமுடியாமையிற் புலம்பியது.*

தழங்குரன் முரசங் காலை யியம்பக்
கடுஞ்சின வேந்தன் றொழிலெதிர்ந் தனனே
மெல்லவன் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயற் கனைதுளி காரெதிர்ந் தன்றே
யஞ்சி லோதியை யுள்ளுதொறுந்
துஞ்சா தலமர னாமெதிர்ந் தனமே. (ஐங்குறு. 448)

*இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் பருவம் வந்துழி மீளப் பெறாது அரசன் செய்தியும் பருவத்தின் செய்தியுந் தன்செய்தியுங் கூறிப் புலம்பியது.*[2] *இப் பாசறைப்புலம்பல் பத்தினுள்ளும் வேறு பாடு காண்க. தூதிற் பிரிந்துழிப் புலம்பியன வந்துழிக் காண்க.*

நீடின மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல ளாகிப் பிறிது நினைந்
தியாம்வெங் காதலி நோய்மிகச் சா அய்ச்
சொல்லிய துரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே. (ஐங்குறு. 478)

*இது தூதுகண்டு அவள் கூறிய திறங் கூறெனக் கேட்டது.*

பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குயவுத்துணை யாகச்
சிறுவரைத் தங்குவை யாயிற்
காண்குவை மன்னாற் பாணவெந் தேரே. (ஐங்குறு. 477)

*இது தலைவி மாட்டுப் பாணனைத் தூதாகவிடுத்த தலைவன் கூறியது.*

---

1. நீ வந்தால் யாம் போகேமோ அரிய இடையினையுடையாய்! நீயிரங்கல் வேண்டா. நோக்குடனே வந்தால் என இயைக்க. தந்து ஆர்தகரம் எனப் பிரிக்க. தந்து - கொண்டணிந்தது. தகரம் - மயிர்ச்சாந்து.

2. இப் பாசறைப் புலம்பல் பத்து என்றது - ஐங்குறு நூற்றிலுள்ள பாசறைப் புலம்பல் பத்துச் செய்யுளையும்.

[1]படுந்தடங்கட் பல்பணைபோல் வாள்முழங்கன் மேலுங்
கொடுந்தடங்கட் கூற்றிமின் னாக – நெடுந்தடங்க
ணீர்நின்ற நோக்கி னெடும்பணைமென் றோளாட்குத்
தேர்நின்ற தென்னாய்நீ சென்று. (திணைமாலை. 115)

இஃது இளையோரைத் தூதுவிட்டது.

[2]ஐய வாயின செய்யோள் கிளவி
கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென
நோய்நன்கு செய்தன வெமக்கே
யாமுறு துயரமவ ளறியினோ நன்றே. (ஐங்குறு. 441)

இது வினைமுடியாமையிற் பருவங்கண்டு மீளப்பெறாத தலைவன் தூதர் வார்த்தை கேட்டு வருந்தியது.

பிறவும் வேறுபடவருவன கொள்க.

[3]முரம்புகண் ணுடையத் திரியுந் திகிரியொடு
பணைநிலை முனைஇய வயமாப் புணர்ந்து
திண்ணிதின் மாண்டன்று தேரே
யொண்ணுதற் காண்குவம் வேந்துவினை விடினே. (ஐங்குறு 449)

இது வேந்தன் திறைகொண்டு மீள்வுழித் தானுஞ் சமைந்த தேரை அழைத்துக் கண்டு 'திண்ணிதின் மாண்டன்று தேர்' எனப் பாகனொடு கூறியவழி அவ்வேந்தன் திறைவாங்காது வினைமேற் சென்றானாகப் பாகனை நோக்கிக் கூறியது.

இவை ஐங்குறுநூறு.

'மலைமிசைக் குலைஇய' என்னும் (84)அகப்பாட்டும் அது.

கலித்தொகையுள் 'புத்தியானை வந்தது காண்பான்யான் றங்கினேன்' (97) என்பன முதலியவற்றான் யானை முதலியவற்றையும், கடவுட்பாட்டால் (93) தாபதரையுங் காத்தற்குப் பிரிந்தேனெனக் கூறினானென்பது பெற்றாம்.

ஒருஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்றா தவர்;

கடியர்தமக், கியார்சொல்லத் தக்கரா மற்று;

வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து;

---

1. படுதல் - ஒலித்தல். பனை - முரசு மின்கூற்றமாக என்க. கூற்றம் - இயமன்.
2. ஐயவாயின - வியக்கத்தக்கவாயின. கிளவி ஆயின என்க.
3. முரம்பு - வன்னிலம். பருக்கைக் கல்லுமாம். திகிரி - உருளை,

ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு;

இஃதொத்தன், புள்ளிக் கள்வன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவு
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்பும்
தவறாதல் சாலாவோ கூறு;

அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டீயாய் தெளிக்கு;

இனித் தேற்றேம் யாம்;

தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீகூறும் பொய்ச்சூ ளணங்காயின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு. (கலி. 88)

*இதுனுள் [1]இரத்தலுந் தெளித்தலும் வந்தவாறு காண்க. பிறவும் இவ்வாறு வருவன கொள்க. (41)*

**(உடன்போக்கின் கண் செவிலி முதலியோருங் கூறப்பெறுவர் எனல்)**

**42.** எஞ்சி யோர்க்கு மெஞ்சுத லிலவே.

*இது முன்னர்க் கூற்றிற்கு உரியரெனக் கூறாதோர்க்குங் கூற்று விதித்தலின் எய்தாததெய்துவித்தது.*

*இ — ள்: எஞ்சியோர்க்கும் - முன்னர்க்கூறாது நின்ற செவிலிக்கும் தலைவிக்கும் ஆயத்தோர்க்கும் அயலோர்க்கும், எஞ்சுதல் இலவே - கூற்றொழிதல் இல என்றவாறு.*

*செவிலிகூற்று நிகழுமாறு:*

கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோ
ளளியு மன்புஞ் சாயலு மியல்பு
முன்னாட் போலா ளிறீஇயரென் னுயிரெனக்
கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
கடுங்கட் கறவையிற் சிறுபுற நோக்கிக்
குறுகச் சென்று குவவுநுத னீவி
மெல்லெனத் தழீஇயினெ னாக வென்மக
ளன்ன ராகத் திடைமுலை வியர்ப்பப்
பன்மாண் முயங்கினண் மன்னே யன்னோ
விறன்மிகு நெடுந்தகை பலபா ராட்ட
வறனிழ லசைஇ வான்புலந்து வருந்திய
மடமா னசாவினந் திரங்குமரல் சுவைக்குங்

1. ஊடிய தலைவியை இரத்தலும் தெளித்தலும் என்க. இச்சூத்திர நோக்குக.

காடுடன் கழித லறியிற் றந்தை
யல்குபத மிகுத்த கடியுடை வியனகர்ச்
செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழற் போலக்
கோதை யாயமே டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்பவ
ளாடுவழி யாடுவழி யகலேன் மன்னே. (அகம். 49)

*இவ் வகப்பாட்டு உடன்போன தலைவியை நினைந்து செவிலி மனையின் கண் மயங்கியது.*

அத்த நீளிடை யவனொடு போகிய
முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவர
றாய ரென்னும் பெயரே வல்லா
றெடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே. (ஐங்குறு. 380)

*இவ் வைங்குறுநூறு செவிலி தெருட்டுவார்க்குக் கூறியது.*

*'முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின' என்னும் அகப்பாட்டு மகட்போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப் பின் சென்று [1]நவ்விப்பிணையைக்கண்டு சொற்றது. செவிலி [2]கான வர்மகளைக் கண்டு கூறியதுமாம்.*

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
யகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே. (குறுந் 44)

*இக் குறுந்தொகை செவிலி கடத்திடைத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

இடிதுடிக் கம்பலையு மின்னாத வோசையு மிசையி னாராக்
கடுவினை யாளர் கடத்திடைப் பைங்குரவே கவன்று நின்றாய்
கொடுவினை மேற்செய்த வெம்மேபோ னீயும்
படுசினைப் பாவை பறித்துக்கோட் பட்டாயோ பையக் கூறாய்

*இது செவிலி குரவொடு புலம்பியது.*

தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப
வீன்றாய்நீ பாவை யிருங்குரவே – யீன்றாண்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டா யீதென்று வந்து. (திணைமாலை. 65)

*இது குரவே வழிகாட்டென்றது.*

குடம்புகாக் கூவற் குடிகாக்குஞ் சின்னீ
ரிடம்பெறா மாதிரியு மேறாநீ ளத்த
முடம்புணர் காத லுவப்ப விறந்த
தடம்பெருங் கண்ணிக்கு யான்றாயர் கண்டீர்.

1. நவ்விப்பிணை - மான்பிணவு
2. கானவர்மகள் - வேட்டுவர்மகள்.

*இது நீயாரென்று வினாயினார்க்குச் செவிலி கூறியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க.*

*இனித் தலைவி கூற்று நிகழுமாறு:*

பையப் பசந்தன்று நுதலுஞ் சாஅ
யைதா கின்றென் றளிர்புரை மேனியும்
பலரு மறியத் திகழ்தரு மவலமு
முயிர்கொண்டு கழியி னல்லதை நினையி
னெவனோ வாழி தோழி பொரிகாற்
பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற
வாலி யொப்பின் றூம்புடைத் திரள்வீ
யாறுசெல் வம்பலர் நீளிடை யழுங்க
வீன லெண்கி னிருங்கிளை கவருஞ்
சுரம்பல கடந்தோர்க் கிரங்குப வென்னார்
கௌவை மேவல ராகி யிவ்வூர்
நிரையப் பெண்டி ரின்னா கூறுவ
புரைய வல்லவென் மகட்கெனப் பரைஇ
நம்முணர்ந் தாறிய கொள்கை
யன்னை முன்னர்யா மென்னிதற் படலே. (அகம். 95)

*இது போக்குடன் பட்டமை தலைவி தோழிக்குரைத்தது; அகம்.*

அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீந்துக் காங்குத்
தாங்கு மளவை தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே (குறு: 149)

*இக் குறுந்தொகை நாண்நீங்கினமை கூறியது.*

சிலரும் பலருங் கடைக்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டி ரம்ப றூற்றச்
சிறுகோல் வலத்த ளன்னை யலைப்ப
வலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்
கடுமான் பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉ மியறேர் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
யலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே. (நற்றிணை. 149)

*இந் நற்றிணை அலரச்சம் நீங்கினமை கூறியது.*

சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்த்
தாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின
வாரிடை யிறந்தன ளென்மி
னேரிறை முன்கையென் னாயத் தோர்க்கே. (ஐங்குறு. 384)

[1]இவ் வைங்குறுநூறு யான் போகின்றமை ஆயத்திற்கு உரைமின் என்றது.

கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்
கோள்வல் வேங்கைய மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்க
ணற்றோ ணயந்து பாராட்டி
யெற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே. (ஐங்குறு. 385)

[2]இவ் வைங்குறுநூறு இன்று யான் தேரேறி வருத்தமின்றிப் போகின்றமை யாய்க்கு உரைமின் என்றது.

கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ்
சுரநனி வாரா நின்றன ளென்பது
முன்னுற விரைந்தனி ருரைமி
னின்னகை முறுவலெம் மாயத் தோர்க்கே. (ஐங்குறு. 397)

[3]இவ் வைங்குறுநூறு மீள்கின்றாளென்று என் வரவு ஆயத்தார்க்குக் கூறுமின் என்றது.

வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற
வாய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
பரியல் வாழி தோழி பரியி
னெல்லையி லிடும்பை தரூஉ
நல்வரை நாடனொடு வந்த வாறே. (ஐங்குறு, 392)

இவ் வைங்குறுநூறு மீண்டுவந்த தலைவி வழிவரல் வருத்தங் கண்டு வருந்திய தோழிக்குக் கூறியது.

அன்னாய் வாழிவேண் டன்னை நம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர்நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலுழி நீரே. (ஐங்குறு. 203)

இஃது [4]உடன்போய் மீண்ட தலைவி நீ சென்றநாட்டு நீர் இனிய வல்ல; எங்ஙனம் [5]நுகர்ந்தாயென்ற தோழிக்குக் கூறியது.

அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வரு [6]மென்னையை மறைத்த குன்றே. (ஐங்குறு 312)

---

1. இது வழிச்செல்லும் அந்தணரை விளித்துக் கூறியது.
2. இது வழிச்செல்வோரை விளித்துக் கூறியது.
3. இது தன்னூர்க்குச் செல்கின்றாரை நோக்கிக் கூறியது.
4. உடன் - தலைவனுடன்.
5. நுகர்தல் - பருகல்.
6. என்னையை - என் தலைவனை.

*இவ் வைங்குறுநூறு நின் ஐயன்மார் வந்துழி நிகழ்ந்தது என் னென்ற தோழிக்குத் தலைவி தலைவனை மறைத்த மலையை வாழ்த்தியது.*

*பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.*

*இனி ஆயத்தார்கூற்று நிகழுமாறு:*

மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
தான்வரு மென்ப தடமென் றோளி
யஞ்சின ளஞ்சின ளொதுங்கிப்
பஞ்சின் மெல்லடி பரல்வடுக் கொளவே.

*இனி அயலோர் கூற்று நிகழுமாறு:*

துறந்ததற் கொண்டுந் துயரடச் சாஅ
யறம்புலந்து பழிக்கு மங்க ணாட்டி
யெவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே. **(ஐங்குறு. 393)**

*செய்யுளியலுள் 'பார்ப்பான் பாங்கன்' (501) 'பாணன் கூத்தன்' (502) என்னுஞ் சூத்திரங்களாற் பார்ப்பான் முதலியோர் கூற்றுக் கூறுமாறு உணர்க.* *(42)*

***(தமக்குள் முன்னிகழ்ந்தவற்றைப் பின் தலைவனுந் தலைவியும் நினைப்பரெனல்)***

**43.** நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்.

*இதுவும் பாலையாவதோர் இலக்கணங் கூறுகின்றது.*

**இ – ள்:** *முன்னர் நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி பின்னர் நினைத்தற்கு முரிய நிமித்தமாம் என்றவாறு.*

*என்றது முன்னர்த் தலைவன்கண் நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி பின்னர்த் தலைவி நினைத்தற்கும் ஏதுவுமாம். முன்னர்த் தலைவி கண் நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி பின்னர்த் தலைவன் நினைத்தற்கும் ஏதுவுமாமென்றவாறாம்.*

*[1]உம்மை எச்சவும்மையாதலிற் கூறுதற்குமாம் என்றுகொள்க.*

நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்
னொன்னுதல் நீவுவர் காதலர் மற்றவ
ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும். **(கலி. 4)**

---

1. உம்மை என்றது ஏதுவும் என்றதிலுள்ள உம்மையை. இது நினைத்தற்கும் என மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது என்பது இவ்வாக்கியத்தால் விளங்குகின்றது. உரையிலுள்ள ஏதுவுமாம் - ஏதுவாம் என்றிருத்தல் வேண் டும். தலைவன் கூறுதற்கு விதி வருஞ் சூத்திரத்தாற் கொள்ளலாம். ஆய்க.

*இது தலைவன்கண் நிகழ்ந்த [1]மிகுதித்தலையளி வஞ்சமென்று தலைவி உட்கொண்டு பிரியுங்கொல்லென நினைத்தற்கு நிமித்த மாயிற்று.*

*இதனானே தலைவன் செய்திகளாய்ப் பின்னர்த் தலைவி கூறுவனவற்றிற்கெல்லாம் இதுவே [2]ஒத்தாக அமைத்துக்கொள்க.*

*இனி,*

அளிநிலை பொறாஅது தமரிய முகத்தள்
விளிநிலை கொள்ளா டமியண் மென்மெல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள்
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த வோமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
வுதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கு நிரைநிலை யதர
பரன்முரம் பாகிய பயமில் கான
மிறப்ப வெண்ணுதி ராயி றைத்தா
றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
யன்ன வாக வென்னுநள் போல
முன்னங் காட்டி முகத்தி னுரையா
வோவச் செய்தியி னொன்றுநினைந் தெற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையன்
மோயின ளுயிர்த்த காலை மாமலர்
மணியுரு விழந்த வணியழி தோற்றங்
கண்டே கடிந்தனஞ் செலவே யொண்டொடி
யுழைய மாகவு மினைவோள்
பிழையலண் மாதோ பிரிதுநா மெனினே. (அகம். 5)

இருங்கழி முதலை மேஎந்தோல்... ...ஞான்றே (அகம். 3)

வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை
கந்துபிணி யாணை யயாவுயிர்த் தாஅங்
கென்றூழ் நீடிய வேய்பயி லழுவத்துக்
குன்றூர் மதிய நோக்கி நின்றுநினைந்
துள்ளினெ னல்லனோ யானேமுள் ளெயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுத

1. மிகுதித் தலையளி - மிகுதியான தலையன்பு. அவை தொடுத்தென நோக்க லும் நீவலும்.
2. ஒத்து - விதி.

லெமது முண்டோர் மதிநாட் டிங்க
ளூரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழறப
வுலவை யாகிய மரத்த
கல்பிறங்கு மாமலை யும்பரஃ தெனவே. (நற்றிணை. 62)

*[1]இவை தலைவிகண் நிகழ்ந்தனவும் அவள் தன்மையும் பின்னர்த் தலைவன் நினைந்து செலவழுங்குதற்கு நிமித்தமாயவாறு காண்க.*

*'அறியாய் வாழி தோழி யிருளற' (அகம் 53) என்பது தலைவன் கண் நிகழ்ந்தது தலைவி நினைந்து தோழிக்குக் கூறியது. 'நெஞ்சு நடுக்குற' (23) என்னும் பாலைக்கலியும் அது.*

உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரொடும் விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த் [2]துருத்திசூழ்ந்
தறல்வாரும் வையையென் றறையுந ருளராயின். (கலி. 30)

*இதுவும் அது.*

ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
[3]கட்டளை யன்ன [4]வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் [5]நெல்லிவட் டாடும்
வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த [6]வுரன்மாய் மாலை
யுள்ளினெ னல்லனோ யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன வினியோண்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே (நற்றிணை. 3)

*என்ற நற்றிணையும் அது.*

*இவ்வாறன்றி வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க. (43)*

**(தலைவியும் தோழியும் தலைவன்கண் நிகழ்ந்த கூற்றைக் கூறிநிற்றலும் பாலையெனல்)**

**44.** நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே.

*இஃது 'ஒன்றாத் தமரினும்' (41) என்னுஞ் சூத்திரத்திற்கோர் புறனடை கூறுகின்றது.*

---

1. இம்மூன்று உதாரணத்தினுள்ளும் முந்திய இரண்டும் தலைவிகண் நிகழ்ந்ததை நினைத்தலையும், பிந்திய ஒன்றும் அவள் தன்மையை நினைத்தலையும் உணர்த்தியவாறு. காண்க.
2. துருத்தி - ஆற்றிடைக்குறை.
3. கட்டளை - கட்டளைக்கல்.
4. வட்டு - உண்டை.
5. நெல்லி - நெல்லிக்காய்.
6. உரன் - அறிவு.

இ — ள்: நிகழ்ந்தது கூறி - 'ஒன்றாத் தமரினும்' என்னுஞ் சூத்திரத்துத் தலைவன்கண் நிகழ்ந்த கூற்றினைத் தலைவியுந் தோழியுங் கூறி, நிலையலுந் திணையே - அதன்கண்ணே நிலை பெற்று நிற்றலும் பாலைத்திணை யாம் என்றவாறு.

உதாரணம் :

அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா
தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா
ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ வுளநா
ளொரோஒகை தம்முட் டாீஇ யொரோஒகை
யொன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினு
மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற விளமை தரற்கு. (கலி. 18)

இதனுள், 'உளநாள்' என்றது நாளது சின்மை; அரிதரோ சென்ற இளமை தரற்கு' என்றது இளமையதருமை 'உள்ளந் துரப்ப' என்றது உள்ளத்தான் உஞற்றுதலால் தாளாண்பக்கம்; 'சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது' என்றது தகுதியது அமைதி, தத்த நிலைமைக்கேற்பப் பொருள்செய்ய வேண்டுதலின் அது பாணிக்கு மென்றலின் 'ஒரோஒகை தம்முட் டழீஇ ஒரோ ஒகை ஒன்றன்கூறாடை உடுப்பவரே யாயினும்' என்றது இன்மைய திளிவு; 'வளமை விழைதக்கதுண்டோ' என்றது உடைமைய துயர்ச்சி; 'பிரிந்திறை சூழாதி ஐய' என்றது அன்பினதகலம்; பிரிந்துறைந்தன்பு பெருக்கல் வேண்டா 'தம்மு ளொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை' என்றலின்; 'தொய்யிலும்... ...சுணங்கு நினைத்துக்காண்' என்றது அகற்சிய தருமை. இவ்வெட்டுந் தாமே கூறல்வேண்டினமையின் முன்னொருகால் தலைவன் கூறக்கேட்டுத் தோழியுந்தலைவியும் உணர்ந்தமை கூறியவாறு காண்க.

பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ (கலி. 15)

என்பது ஓதற்குப் பிரிவலெனத் தலைவன் கூறியது கேட்ட தோழி கூறியது.

நோற்றோர் மன்ற தாமே கூற்றங்
கோளுற [1]விளியார்பிறர் கொளவிளிந் தோரெனத்

---

1. விளியார் - விளியாராய்.

[1]தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்
நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்
[2]தாழல் வாழி தோழி தாழா
துருமெனச் சிலைக்கு மூக்கமொடு பைங்கால்
வரிமர னோன்ஞாண் வார்சிலைக் கொளீஇ
யருநிறத் தழுத்திய வம்பினர் பலருட
னண்ணல் யானை வெண்கோடு கொண்டு
நறவுநொடை நெல்லி னாண்மகி ழயருங்
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ வரிதே[3] முனாஅது
முழவுறழ் திணிதோ ணெடுவே ளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி யன்னநின்
னொண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூ ணாகம் பொருந்துதன் மறந்தே (அகம். 61)

இவ் வகப்பாட்டில் மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தாரே துறக்கம் பெறுவரெனத் [4]தன் சாதிக் கேற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலைத் தோழி கூறினாள்.

வேந்தன் குறைமொழிந்து வேண்டத் தலைப்பிரிந்தார்
தாந்தங் குறிப்பின ரல்லரா – லேந்திழாய்
கண்பனி வாரக் கலங்கல் பிரிவரோ
தண்பனி நாளே தனித்து

என்பது [5]குறைமொழிந்து வேண்டினமை தலைவன் கூறக் கேட்ட தோழி கூறியது.

'அரிதாய வறனெய்தி' (கலி. 11) என்றது "மூன்றன் பகுதி" (41) தலைவன் கூறக்கேட்ட தலைவி கூறியது.

யானெவன் செய்கோ தோழி பொறிவரி
[6]வானம் வாழ்த்தி பாடவு மருளா
துறைதுறந் தெழிலி நீங்கலிற் பறையுடன்
மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை
யரம்போழ் நுதிய வாளி யம்பி

---

1. தாள் - முயற்சி
2. ஆழல் - அழுந்தாதே. அழற்க எனினுமாம். நீட்டல் விகாரம்.
3. முனாது - பழையதான. மறந்து பழகுவாராதல் அரிது என்க.
4. தன் சாதிக்கேற்ப - தன் குலத்திற்கேற்ப.
5. அரசன் குறைமொழிந்து வேண்டினமை என்க. அவ்வாறு பாடமிருப்பது நலம்.
6. வானம்வாழ்த்தி - வானம்பாடி என்னும் புள்.

னிரம்பா நோக்கி னிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை யெல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடு மெழுதி யதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கு
[1]மொழிபெயர் தேஎந் தருமார் மள்ளர்
கழிப்பிணிக் கறைத்தோ னிரைகண் டன்ன
[2]வுவலிடு பதுக்கை யாளுகு பறந்தலை
[3]யுருவில் பேஎ யூராத் தேரொடு
நிலம்படு மின்மினி போலப் பலவுட
னிலங்கு பரலிமைக்கு மென்பதந்
நலந்துறந் துறைநர் சென்ற வாறே. (அகம். 67)

*இது மண்டிலத்தருமை தலைவன் கூறக்கேட்ட தோழி கூறியது.*

நந்நிலை யறியா ராயினுந் தந்நிலை
யறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக்
காய்சின யானை கங்குற் சூழ
வஞ்சுவர விறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே. (அகம். 264)

*இது தலைவன் பாசறைப் புலம்பினமை கூறக்கேட்ட தலைவி 'நந்நிலை அறியாராயினும் எனக் கூறினாள்.*

*'திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை' (கலி. 26) என்பது காவற் பாங்கின்கண் தலைவன் கூறியது கேட்ட தலைவி கூறியது.*

*பிறவும் வருவனவெல்லாம் இதனான் அமைக்க. (44)*

## *(மரபு திரியாமல் சில பொருள் திணைகளின்கண் விரவுமெனல்)*

**45.** மரபுநிலை திரியா மாட்சிய வாகி
விரவும் பொருளும் விரவு மென்ப.

*இது மரபியலுட் கூறப்படும் மரபன்றி அகத்திணைக்கு உரிய மரபுகள் கூறுகின்றது.*

**இ – ள்:** *மரபுநிலை திரியா மாட்சிய ஆகி - புலனெறி வழக்கஞ் செய்து வருகின்ற வரலாற்று முறைமை திரியாத மாட்சியவாகி, விரவும் பொருளும் விரவும் என்ப - பாலைத்திணைக்குங்*

---

1. மொழிபெயர்தேம் - வேற்றுமொழிநாடு.
2. உவல் - காய்ந்த இலை. பதுக்கை - கற்குவியல்.
3. பேய்த்தேர் - கானல். ஊராத்தேர் - ஒருவரால் ஊரப்படாத தேர். இது வெளிப்படை குறித்தது, தேரை ஈரிடத்துங் கூட்டுக.

*கைக்கிளை' பெருந்திணைக்கும் உரியவாய் விரவும் பொருளும் ஏனைத் திணைக்கு உரியவாய் விரவும் பொருளும் விரவிவரு மென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

*அவை தலைவி ஆற்றாமை கண்டுழிப் பிரிந்த தலைவன் மீண்டுவந்தானெனத் தோழி கூறுவனவும், வரைவிடைவைத்துப் பிரிந்தோன் தலைவியை நினைந்து வருந்திக் கூறுவனவும், உடன் போயவழி இடைச்சுரத்து நிகழ்ந்ததனை மீண்டு வந்துழித் தலை வன் தோழிக்குக் கூறுவனவும், யானினைத்த வெல்லையெல் லாம் பொருள் முடித்து வாராது நின்னல நயந்து வந்தேனெனத் தலைவன் கூறலும், பொருள்வயிற் பிரிந்தோன் தலைவியை நினைந்து வருந்துவனவும், இடைச்சுரத்துத் தலைவன் செலவு கண்டோர் கூறுவனவும் அவன் மீட்சிகண்டோர் கூறுவனவும், ஊரின்கட்கண்டோர் கூறுவனவும் பிறவுமாம். அவை பாலைத் திணைக்கு விரவும் பொருளா மென்றுணர்க. உதாரணம்:*

கோடுயர் பன்மலை யிறந்தன ராயினு
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
யுடைத்தரும் வெள்ள மாகிய கண்ணே. (ஐங்குறு. 358)

*இவ் வைங்குறுநூறு தலைவன் மீண்டானென்றது.*

*'பாடின்றிப் பசந்தகண்' என்பதும் (கலி. 16) அது.*

வளைபடு முத்தம் பரதவர் பகருங்
கடல்கெழு கொண்கன் காதன் மடமகள்
கெடலருந் துயர நல்கிப்
[1]படலின் பாயல் வௌவி யோளே. (ஐங்குறு. 195)

*இவ் வைங்குறுநூறு வரைவிடைவைத்துப் பிரிந்தோன் தனிமைக்கு வருந்திக் கூறியது.*

புறந்தாழ் பிருண்ட கூந்தற் போதி
னிறம்பெறு மீரிதழ்ப் பொலிந்த வுண்க
ணுள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ்
செல்ல றீர்க்கஞ் செல்வா மென்னுஞ்
செய்வினை முடியா தெவ்வஞ் செய்த
லெய்யா மையோ டிளிவுதலைத் தருமென
வுறுதி தூக்கத் தூங்கி யறிவே
சிறிதுநனி விரைய லென்னு மாயிடை
யொளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய

1. பாயல் இன் படல் - படுக்கையிடத்துள்ள இனிய துயில். படல் - கண்படை - துயில்.

தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே. (நற்றிணை. 284)

*இந் நற்றிணையும் அது.*

கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேன லதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்த லழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅ மடைச்சி வான்கோ
விலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்
சின்மெல் லொதுக்கமொடு மென்மெல வியலிநின்
னணிமாண் சிறுபுறங் காண்டுஞ் சிறுநனி
யேகென வேக னாணி யொய்யென
மாகொ ணோக்கமொடு மடங்கொளச் சாஅய்
நின்றுதலை யிறைஞ்சி யோளே யதுகண்
டியாமுந் துறுதல் செல்லே மாயிடை
யருஞ்சுரத் [1]தல்கி யேமே யிரும்புலி
களிறட்டுக் குழுமு மோசையுங் களிபட்டு
வில்லோர் குறும்பிற் றதும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் [2]பாணியுங் கேட்டே. (அகம். 261)

*இது மீண்டுவந்தோன் தோழிக்கு உரைத்தது.*

[3]திருந்திழை யரிவை நின்னல முள்ளி
யருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரு
நெறிவிலங் கதர கானத் தானே. (ஐங்குறு. 355)

*இவ் வைங்குறுநூறு பெற்ற பொருள்கொண்டு நின்னலம் நயந்து வந்தேன் என்றது.*

அளிதோ தானே நாணே யாள்வினை
யெளிதென [4]லோம்பன்மி னறிவுடை யீரே
கான்கெழு செலவின் னெஞ்சுபின் வாங்கத்
தாள்சென் றனனே தமிய னதாஅன்
றென்னா வதுகொ றானே பொன்னுடை
மனைமாண் டடங்கிய கற்பிற்
புனையீ ரோதி புலம்புறு நிலையே.

*இது [5]செலவுகண்டோர் கூறியது.*

1. அல்கல் - தங்கல்.
2. பாணி - தூங்கலோசை.
3. நலம் - அழகு, இன்பம். பொருட்பிணி - பொருட்பற்று. பெருந்திரு - பெரிய செல்வம். சொல்லாது பெயர்தந்தேன் - நண்பர்க்குஞ் சொல்லாது மீண்டு வந்தேன்.
4. ஓம்பன்மின் - பாதுகாவாதீர். நிலை என்னாவதுகொல் என இயைக்க.
5. செலவு - தலைவன் செலவு.

மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்
தலந்தலை [1]ஞெமையத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனி னினிய தெளிர்ப்பப்
பெய்ம்மணி யார்க்கு மிழைகிளர் நெடுந்தேர்
வன்பான் முரம்பி னேமி யதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
யிடைச்சுரத் தெழிலி யுறைத்தென மார்பிற்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுங்கண் ணியன்கொ னோகோ யானே. (நற்றிணை. 394)

*இந் நற்றிணை வரவுகண்டோர் கூறியது.*

இனைந்துநொந் தழுதன ணினைந்துநீ டுயிர்த்தன
ளெல்லையுமிரவுங் கழிந்தன வென்றெண்ணி யெல்லிரா
நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்தநீர் போலத் துணிவாய்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போற் றெளிந்து நலம் பெற்றா
ணல்லெழின் மார்பனைச் சார்ந்து. (கலி. 142)

*இது பெருந்திணைக்கண் கண்டோர் கூறியது.*

குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர் வளைஇய தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே. (கலி. 103)

*இச் சுரிதகத்துக் குரவையாடல் ஏறுகோடற் கைக்கிளையுள் விராய்வந்தவாறுங் குரவைக்குரிய தெய்வத்தையன்றி அரசனை வாழ்த்திய வாழ்த்து விராய்வந்தவாறுங் கொள்க. 'விரவும் பொருளும் விரவும்' எனவே, ஆய்ச்சியர் குரவைக்கூத்தல்லது வேட்டுவவரிக்குரிய வெறியாடல் விரவாதென்றுணர்க. [2]இஃது எண்வகைச் சுவையான் வரும் மெய்ப்பாடுங் கூத்தொடும் படுதலின் அச்சுவை பற்றி வரும் மெய்ப்பாட்டிற்கும் உரித்தாயிற்று.*

*இனி, 'காவற்பாங்கின் ஆங்கோர் பக்க'த்தில் (41) தலைவன் கூறியவற்றைக் கற்பியலுள் தலைவன் 'பகுதியினீங்கிய தகுதிக் கண்' (147) தலைவி பரத்தையராகக் கூறுவனவும் இச் சூத்திரத் தான் அமைக்க. அவை மருதக்கலியுட் கடவுட்பாட்டு முதலியன. அவற்றை ஆண்டுக் காட்டுதும்; கண்டுணர்க.*

---

1. ஞெமை - ஒருமரம். குடிஞை - பேராந்தை. தெளிர்த்தல் - ஒலித்தல். நேமி - உருள். நோகோ - நோவேனோ.
2. இஃது - இக்குரவை.

*இனி, தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன் கொண்டு சென்மி னென்பனவும் அவன் அவட்கு மறுத்துக் கூறுவனவும் இதனான் அமைக்க; உதாரணம் :*

மரையா மரல்கவர வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றா
லென்னீ ரறியாதீர் போல விவைகூறி
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு. (கலி. 6)

*இது கலி; எம்மையும் உடன்கொண்டு சென்மி னென்றது.*

*'செருமிகு சினவேந்தன்' என்னும்* பாலைக்கலியுள்,

எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை
யல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ. (கலி. 13)

*இது தலைவிக்குத் தலைவன் [1]உடன்போக்கு மறுத்துக் கூறியது. இதன் சுரிதகத்து,*

அனையவை காதலர் கூறலின் வினைவயிற்
பிரிகுவ ரெனப்பெரி தழியாதி (கலி. 13)

*என வினைவயிற் பிரிவு கூறலின் இது கற்பிற் கூறியதாயிற்று.*

*இன்னும் இச்சூத்திரத்தான் அமைத்தற்குரிய கிளவிகளாய் வருவனவெல்லாம் அமைத்துக் கொள்க.* *(45)*

**(உவமைகளும் அகத்திணைப் பொருளை உணரவரும் எனல்)**

**46.** [2]உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே.

*இஃது உவமவியலுள் அகத்திணைக் கைகோள் இரண்டற்கும் பொதுவகையான் உரியதொன்று கூறுகின்றது.*

---

1. உடன்போக்கு மறுத்துக்கூறுதல் என்றது, தலைவி பொருள் வயிற்பிரிவு முதலிய பிரிவின்கண் யானும் உடன்வருவேன் என்றாட்கு அவ்வுடன் போதலை மறுத்துக்கூறலை. இது வினைவயிற்பிரிவில் மறுத்துக் கூறியது.

2. இதற்கு இளம்பூரணருரையே நேர்பொருளும் பொருத்தமுமாகும்.

**இ — ள்:** உள்ளுறை உவமம் ஏனை உவமம் என - மேற்கூறும் உள்ளுறை உவமந்தான் [1]ஏனையுவமமென்று கூறும்படி உவமையும் உவமிக்கப்படும் பொருளுமாய் நின்றது, திணை உணர்வகை தள்ளாது ஆகும் - அகத்திணை உணர்தற்குக் கருவியாகிய உள்ளுறை உவமம் போல எல்லாத்திணையையும் உணருங் கூற்றைத் தள்ளாதாய் வரும், நல்லிசைப்புலவர் செய்யுட்செய்யின் என்றவாறு.

எனவே ஏனையோர் செய்யின் தானுணரும் வகைத்தாய் நிற்கும் என்றவாறாம். உதாரணம்:

விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தரப்
புரிதலை தளைவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி
வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுட்
டுனிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார
வினிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு
நனிவிரைந் தளித்தலி னகுபவண் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடுஉந் தண்டுறை நல்லூர (கலி. 71)

என்பது விரியுங் கதிரையுடைய இளஞாயிறு விசும்பிலே பரவா நிற்க, விடியற்காலத்தே இதழ்கண் முறுக்குண்ட தலைகள் அம்முறுக்கு நெகிழ்ந்த செவ்விப் பூவிடத்துக் கள்ளை வண்டு நுகர்ந்து விளையாடி, அதனானும் அமையாது பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரியும் அச் செல்வமிக்க பொய்கையுள் பசிய இலைகளுடனின்ற தாமரைத் தனிமலர் தனக்கு வருத்தஞ் செய்யும் பனி ஒரு கூற்றிலே வடியாநிற்கத் தான் மிகச் செவ்வியின்றி அலருந்துறையினையுடைய ஊர என்றவாறு.

இதனுள், வைகறைக் காலத்து மனைவயிற் செல்லாது இளைய செவ்வியையுடைய பரத்தையரைப் புணர்ந்து விளையாடி அதனானும் அமையாது பின்னும் அவரைப் புணர்தற்குச் சூழ்ந்து திரிகின்ற இவ்வூரிடத்தே, நின்னைப் பெறாது சுற்றத்திடத்தேயிருந்து கண்ணீர் வாராநிற்க நீ ஒருகால் அளித்தலிற் சிறிது செவ்விபெற்றாளாயிருக்கும்படி வைத்த தலைவியைப் போல், எம்மையும் வைக்கின்றாயென்று காமக்கிழத்தி உள்ளுறையுவமங் கூறினாள். துனிமிகுதலாலே பெருக்கு மாறாது வீழ்கின்ற

---

1. ஏனையுவமமாய் நின்று உள்ளுறைப் பொருள் தருவதையே ஈண்டு உள்ளுறை உவமந்தான் ஏனையுவமமென்று கூறும்படி நின்றது என்றார். இதுவே கருத்தாதல் பின் விரிவுரையில், இவ்வேனை யுவமம் ... நின்றவாறு காண்க என்று கூறுதலானுணர்க. இதனை 242ம் சூத்திர உரையானுமறிக.

*கண்ணீர் காமத்தீயாற் சுவறி அறுதலையுடைத்தாயொழுக அவ் வருத்தத்தைக் கண்டு விரைந்து கணவன் அருளுதலிற் சிறிது மகிழ்பவள் முகம்போல என்ற ஏனையுவமந் தாமரைமலர் பனி வாரத் தளைவிடுமென்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றது. இஃது,*

உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே (தொல். பொரு. 242)

*என்ற பொருளியற் சூத்திரத்திற் சிறப்பென்ற உள்ளுறை. இவ் வேனையுவமம் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக் கொடுத்து உள்ளுறையுவமம் போலத் திணையுணர்தலைத் தள்ளாது நின்ற வாறு காண்க. இஃது,*

இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியு
முவம மருங்கிற் றோன்று மென்ப (தொல். பொரு. 303)

*என [1]உவமப்போலிக்குக் கூறுதலின் அவ்விரண்டுந் தோன்றி நின்றது.*

ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே (தொல். பொரு. 302)

*என்று உவமப்போலியிற் கூறுதலாற் காமக்கிழத்தியும் உள்ளுறை யுவமங் கூறினாள்.*

*குறிஞ்சியிலும் மருதத்திலும் நெய்தலிலும் இவ்வாறு வரும் கலிகளும்,*

[2]யானே ஈண்டை யேனே யென்னலனே
யேனல் காவலர் கவணொடு வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கானக நாடனொ டாண்டொழிந் தன்றே (குறுந். 54)

*என்னும் இக் குறுந்தொகை போல வருவனவும், இச் சூத்திரத் தான் அமைக்க. பேராசிரியரும் இப்பாட்டில் 'மீனெறி தூண்டில்' என்றதனை ஏனையுவமமென்றார்.*

*இனி, 'தள்ளாது' என்றதனானே, 'பாஅ லஞ்செவி' (கலி. 5) என்னும் பாலைக்கலியுள் தாழிசை மூன்றும் ஏனையுவமமாய் நின்று கருப்பொருளொடு கூடிச் சிறப்பியாது தானே திணைப் பொருள் தோன்றுவித்து நிற்பனபோல் வனவும், 'கரைசேர் வேழங்*

1. உவமப்போலி என்றது உள்ளுறையுவமையை.
2. ஏனல் - தினை. கழை - மூங்கில். இது நிவக்கும் என்பதனோடு முடியும்.

கரும்பிற் பூக்குந், துறைகே ழூரன்' (ஐங். 12) என்றாற்போலக் [1]கருப் பொருள்தானே உவமமாய்நின்று உள்ளுறைபொருள் தருவன வும், பிறவும் வேறுபட வருவனவும் இதனான் அமைக்க. இது புறத்திற்கும் பொது.

இதனான் உள்ளுறையுவமமும், ஏனையுவமமுமென உவமம் இரண்டேயென்பது கூறினார். (46)

**(உள்ளுறையுவமம் தெய்வமொழிந்த கருப்பொருளிடமாகப் பிறக்குமெனல்)**

**47. உள்ளுறை தெய்வ மொழிந்ததை நிலனெனக்**
**கொள்ளு மென்ப குறியறிந் தோரே.**

இது முறையே உள்ளுறையுவமங் கூறுகின்றது.

**இ – ள்:** உள்ளுறை - உள்ளுறையெனப்பட்ட உவமம், தெய் வம் ஒழிந்ததை நிலன் எனக் கொள்ளும் என்ப - தெய்வ முதலிய கருப்பொருளுள் தெய்வத்தை ஒழித்து ஒழிந்த கருப்பொருள் களே தனக்குத் தோன்றுநிலனாகக் கொண்டு புலப்படுமென்று கூறுப, குறி அறிந்தோரே - இலக்கணம் அறிந்தோர் என்றவாறு.

எனவே உணவு முதலிய பற்றிய அப்பொருணிகழ்ச்சி பிறி தொன்றற்கு உவமையாகச் செய்தல் உள்ளுறையுவமமாயிற்று.

உதாரணம் :

**ஒன்றே னல்லே னொன்றுவென் குன்றத்துப்**
**பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை**
**குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்**
**நின்றுகொய மலரு நாடனொ**
**டொன்றேன் றோழிமற் றொன்றி னானே. (குறு. 208)**

இக் குறுந்தொகை [2]பிறிதொன்றின் பொருட்டுப் பொருகின்ற யானையான் மிதிப்புண்ட வேங்கை நசையறவுணங்காது மலர்

---

1. கருப்பொருள் உவமமாய் நின்றது என்றது, வேழத்திற்குக் கரும்பு உவமமாய் நின்றதை. வேழமும் கரும்பும் கருப்பொருள்கள்.

2. பிறிதொன்றன் பொருட்டு - புலியின் பொருட்டு. பூத்த வேங்கை புலிபோற லின் புலியென்று கருதிப் பொருதலின் பிறிதொன்றன் பொருட்டு என்றார். பூத்த வேங்கையைப் புலியொன்று பொருதலை, கலி 38-ம் செய்யுள் நோக்கி யறிக. நசையறவோங்காது என்று பாடமிருக்க வேண்டும். குறுந்தொகையுள் இச் செய்யுளுரையில் வரும் மேற்கோளாட்சி என்னும் பகுதியை நோக்கி யறிக. பூக்கொய்வாரின் விருப்பங்கெட உயராது நின்று கொய்யமலரும் எனப்

கொய்வார்க்கு எளிதாகி நின்று பூக்கும் நாடனென்றதனானே, தலைவன் நுகருங் காரணத்தானன்றி வந்து எதிர்ப்பட்டுப் புணர்ந்து நீங்குவான் நம்மை இறந்துபாடு செய்வியாது ஆற்றுவித்துப் போயினானெனவும், அதனானே நாமும் உயிர்தாங்கியிருந்து பலரானும் அலைப்புண்ணா நின்றனம் வேங்கைமரம்போல எனவும், உள்ளத்தான் உவமங்கொள்ள வைத்தவாறு காண்க.

ஒழிந்தனவும் வந்துழிக் காண்க.

இனி அஃது உள்ளத்தான் உய்த்துணர வேண்டுமென மேற் கூறுகின்றார். (47)

**(உள்ளுறை யுவமையாவது இதுவெனல்)**

**48. உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருண் முடிகென**
**வுள்ளுறுத் திறுவதை யுள்ளுறை யுவமம்.**

இதுவும் அங்ஙனம் பிறந்த உள்ளுறையுவமத்தினைப் பொருட்கு உபகாரம்பட உவமங் கொள்ளுமாறு கூறுகின்றது.

**இ – ள்:** இதனோடு ஒத்துப் பொருள் முடிகென - உள்ளுறுத் துயான் புலப்படக் கூறுகின்ற இவ்வுவமத்தோடே புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாகவென்று புலவன் தன் உள்ளத்தே கருதி, உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை யுவமம்-தான் அங்ஙனம் கருதும் மாத்திரையேயன்றியுங் கேட்டோர் மனத்தின் கண்ணும் அவ்வாறே நிகழ்த்துவித்து அங்ஙனம் உணர்த்துதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக்கொண்டு முடிவது உள்ளுறை யுவமம் என்றவாறு.

இதனானே புலவன் தான் [1]கருதியது கூறாதவழியுங் கேட்டோர்க்கு இவன் கருதிய பொருள் ஈதென்றாராய்ந்து கோடற்குக் கருவியாகிய சிலசொற் கிடப்பச் செய்தல் வேண்டுமென்பது கருத்தாயிற்று. அது,

**வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட**
**ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்**
**டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற**

---

பொருளுரைக்க. உணங்காது என்று கொள்ளின் நசையற என்பது பசையற என்றிருத்தல் வேண்டும். பசையற - ஈரமற. உணங்காது - காயாது.

1. கருதியது - உள்ளுறைப்பொருள்.

மாங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்
வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லை
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர. (கலி. 66)

*இதனுள், 'வீங்குநீர்' பரத்தையர் சேரியாகவும், அதன்கண் அவிழ்ந்த நீலப்பூக் காமச்செவ்வி நிகழும் பரத்தையராகவும், பகர்பவர் பரத்தையரைத் தேரேற்றிக்கொண்டுவரும் பாணன் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானையின் கடாத்தை ஆண்டுறைந்த வண்டுகள் வந்த வண்டுக்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப் பரத்தையர் தமது நலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலின் வண்டு முல்லையை ஊதுதல் இற்பரத்தையருடன் இரவு துயிலுறுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும், பொருள் தந்து ஆண்டுப் புலப்படக்கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத்திணைப் பொருட்கு உவமமாய்க் கேட்டோனுள்ளத்தே விளக்கி நின்றவாறு காண்க.*

*பிறவும் இவ்வாறு வருவனவெல்லாம் இதனான் அமைக்க. இங்ஙனங் கோடலருமை நோக்கி, 'துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே' (298) என்றார். (48)*

**(ஏனை உவமம் இதுவெனல்)**

**49. ஏனை யுவமந் தானுணர் வகைத்தே.**

*இஃது ஒழிந்த உவமங் கூறுகின்றது.*

*இ — ள்: ஒழிந்த உவமம் உள்ளத்தான் உணரவேண்டாது சொல்லிய சொற்றொடரே பற்றுக்கோடாகத் தானே உணர நிற்குங் கூறுபாட்டிற்று என்றவாறு.*

*'பவளம் போலும் வாய்' என்றவழிப் பவளமே கூறி வாய் கூறாவிடின் உள்ளுறை உவமமாம். அவ்வாறின்றி உவமிக்கப்படும் பொருளாகிய வாயினையும் புலப்படக்கூறலின் ஏனை உவமமாயிற்று. அகத்திணைக்கு உரித்தல்லாத இதனையும் உடன் கூறினார்; உவமம் இரண்டல்ல தில்லையென வரையறுத்தற்கும், இதுதான் உள்ளுறை தழீஇ அகத்திணைக்குப் [1]பயப்பட்டு வருமென்றற்கும். (49)*

1. பயப்பட்டு - பிரயோசனப்பட்டு.

(கைக்கிளைக்குச் சிறந்தபொருள் இதுவெனல்)

50. காமஞ் சாலா விளமை யோள்வயி
னேமஞ் சாலா விடும்பை யெய்தி
நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே.

இது முன்னர் அகத்திணை ஏழென நிறீஇ, அவற்றுள் நான்கற்கு நிலங்கூறி, பாலையும் நான்குநிலத்தும் வருமென்று கூறி, உரிப்பொருளல்லாக் கைக்கிளை பெருந்திணையும் அந்நிலத்து மயங்கும் மயக்கமுங்கூறி, கருப்பொருட் பகுதியுங்கூறி, பின்னும் பாலைப் பொருளாகிய பிரிவெல்லாங்கூறி, [1]அப்பகுதியாகிய [2]கொண்டுதலைக் கழிவின்கட் கண்ட கூற்றுப்பகுதியுங்கூறி அதனோடொத்த இலக்கணம்பற்றி முல்லை முதலியவற்றிற்கு மரபுகூறி, எல்லாத் திணைக்கும் உவமம்பற்றிப் பொருள் அறியப் படுதலின் அவ்வுவமப் பகுதியுங்கூறி, இனிக் கைக்கிளையும் பெருந் திணையும் இப்பெற்றியவென்பார் இச்சூத்திரத்தானே கைக்கிளைக் குச் சிறந்தபொருள் இதுவென்பது உணர்த்துகின்றார்.

இ — ள்: காமம் சாலா இளமையோள்வயின் - காமக்குறிப் பிற்கு [3]அமைதியில்லாத இளமைப்பருவத்தாள் ஒருத்திகண்ணே, [4]ஏமஞ்சாலா இடும்பை எய்தி - ஒரு தலைவன் (இவள் எனக்கு மனைக்கிழத்தியாக யான் கோடல்வேண்டுமெனக் கருதி) மருந்து பிறிதில்லாப் பெருந்துயரெய்தி, நன்மையும் தீமையும் என்று இரு திறத்தால் தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து - தனது நன்மையும் அவளது தீமையும் என்கின்ற இரண்டு கூற்றான் மிகப்பெருக்கிய சொற்களைத் தன்னொடும் அவளொடுங் கூட்டிச்சொல்லி, சொல் எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல் - அச் சொல்லுக்கு எதிர்மொழி பெறாதே பின்னுந் தானே சொல்லி

1. அப்பகுதி - பிரிவின்பகுதி.
2. கொண்டுதலைக்கழிதல் - தலைவியை உடன்கொண்டு போதல். உடன் போக்கு என்றபடி.
3. அமைதி - பொருத்தம்.
4. ஏமம் - காவல்; இஃது ஆகுபெயராய் மருந்தையுணர்த்திற்று.

*இன்புறுதல், புல்லித்தோன்றும் கைக்கிளைக் குறிப்பே - பொருந்தித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பு என்றவாறு.*

*அவளுந் தமரும் தீங்கு செய்தாராக அவளொடு தீங்கைப் புணர்த்தும், தான் [1]ஏதஞ்செய்யாது தீங்குபட்டானாகத் தன்னொடு நன்மையைப் புணர்த்தும் என நிரனிறையாக உரைக்க. இரு திறத்தாற் றருக்கிய எனக் கூட்டுக.*

*உதாரணம் :*

வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் பிணையெழின் மரனோக்கிற்
காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரை நுசும்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடி வீசினை
யாருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்;

உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு
மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

அல்லல்கூர்ந் தழிபுக வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு
மொல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்

என வாங்கு,

ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் புனையிழாய்
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே. **(கலி. 58)**

*எனத் தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மைகூறி அவளது தீங்கெல்லாங் கூறுவான் மடலேறுவேன்போலுமென்று ஐயுற்றுக் கூறியவாறு காண்க. அவளைச் சொல்லுதலே தனக்கின்பமாதலிற் 'சொல்லியின்புறல்' என்றார். இது 'புல்லித்தோன்றுங் கைக்கிளை' எனவே, [2]காமஞ்சான்ற இளமையோள்கண் நிகழுங் கைக்கிளை இத்துணைச் சிறப்பின்றாயிற்று.*

---

1. ஏதம் - குற்றம், தீங்கு.
2. காமஞ்சான்ற - காமக்குறிப்பிற்கு அமைந்த.

*அஃது, எல்லா விஃதொத்தன்' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,*

இவடந்தை,
காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டி யது;
பேதாஅய்
பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி னின்றோழி யென்னை
யருளீயல் வேண்டுவல் யான் (கலி. 61)

*எனவரும். [1]இது கைகோளிரண்டினுங் கூறத்தகாத வாய் பாட்டாற் கூறலிற் 'கைக்கிளை' என்றார். 'குறிப்பு' என்றதனாற் சொல்லியின்புறினுந் தலைவன்றன் குறிப்பின் நிகழ்ந்தது புறத் தார்க்குப் புலனாகாதென்பதூஉம் [2]அகத்து நிகழ்ச்சி அறியும் மனைவியர்க்காயின் அது புலனாமென்பதூஉங் கொள்க. அது, 'கிழவோள் பிறள்குணம்' (234) என்னும் பொருளியற் சூத்திரத்து ஓதுப.*

*'காமஞ் சாலா இளமை யோள்வயின்' எனப் பொதுப்படக் கூறிய அதனால் வினைவல பாங்காயினார் கண்ணும் [3]இவ்விதி கொள்க. இதனைக் 'காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்து' (109) என்னும் முல்லைக்கலியான் உணர்க. (50)*

### (பெருந்திணை இவையெனல்)

51. ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிற
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

*இது முறையானே இறுதிநின்ற பெருந்திணை இலக்கணங் கூறுகின்றது.*

*இ — ள்: ஏறிய மடற்றிறம் - மடன்மா கூறுதலன்றி மடலேறு தலும், இளமை தீர்திறம் - தலைவற்கு இளையாகாது ஒத்த பருவத்தாளாதலும், தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் -*

---

1. இது என்றது காமஞ்சாலா இளமையோள்வயிற் கைக்கிளை யுணர்த்தும் இச்சூத்திரத்தை.

2. அகத்து - மனத்து.

3. இவ்விதி என்றது இச் சூத்திரத்துட் கூறிய கைக்கிளைக்குரிய ஏமஞ்சாலா விடும்பை எய்தன் முதலியவற்றை.

[1]இருபத்துநான்காம் மெய்ப்பாட்டில் நிகழ்ந்து ஏழாம் அவதி முதலாக வரும் அறிவழிகுணன் உடையளாதலும், மிக்க காமத்து மிடலொடு தொகைஇ - காம மிகுதியானே எதிர்ப்பட்டுழி வலிதிற் புணர்ந்த இன்பத்தோடே கூட்டப்பட்டு, செப்பிய நான்கும் - கந்தருவத்துட்பட்டு வழீஇயிற்றாகச் செப்பிய இந் நான்கும், பெருந்திணைக் குறிப்பே - பெருந்திணைக் கருத்து என்றவாறு.

மடன்மாக் கூறுதல் கைக்கிளையாம். 'மடற்றிறம்' என்றதனான் அதன் திறமாகிய வரைபாய்தலுங் கொள்க. 'இளமை தீர் திறம்' என்றதனால் தலைவன் முதிர்ச்சியும், இருவரும் முதிர்ந்த பருவத்துந் துறவின்பாற் சேறலின்றிக் காமநுகர்தலுங் கொள்க. 'காமத்து மிகுதிறம்' என்றதனாற் சிறிது தேறப்படுதலுங் கொள்க.

இவை கந்தருவத்துட் படாஅ வழீஇயின. இவற்றுள் ஏறிய மடற்றிறமுங் காமத்து மிகுதிறமும் புணர்ச்சிப்பின் நிகழ்வனவாம்; அது, 'மடன்மாக் கூறு மிடனுமா ருண்டே' (102) என்பதனால் ஏறுவலெனக் கூறிவிடாதே ஏறுதலாம். உதாரணம்:

சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனானா லிவ்விருந்த
சான்றீர் நுமக்கொன் றறிவுறுப்பென் மான்ற
துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டு துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தெ னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவென் பாய்மா நிறுத்து;

யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;

உய்யா வருநோய்க் குயலாகு மைய
லுறீஇயா ளீத்த விம் மா
காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை;

1. இக்கருத்தை மெய்ப்பாட்டியல் 18ம் சூத்திரத்து வரும் விரிவுரையானுணர்க.

காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா;

அகையெரி யானாதென் னாருயி ரெஞ்சும்
வகையினா லுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு;
அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா;

ஆங்கதை,
யறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே. (கலி. 139)

*இஃது ஏறிய மடற்றிறம்.*

[1]உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
புக்கத்துப் புல்லச் சிறிது. (கலி. 94)

*இதனுள், 'கொக்குரித்தன்ன' என்பதனால் தோல் திரைந்தமை கூறலின் இளமை தீர்திறமாயிற்று.*

[2]உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம் – விளைத்த
பழங்கள் ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கும் புனலூரற் மூப்பு. (பு, வெ, 12, 14)

அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல் – சுரும்போ
டதிரும் புனலூரற் காரமிர்த மன்றோ
முதிரு முலையார் முயக்கு (பு. வெ. 12, 13)

*என்பனவும் அது.*

*'புரிவுண்ட புணர்ச்சி' என்னும் (25) நெய்தற்பாட்டுக் காமத்து மிகுதிறம். இதனைப் பொருளியலுட் காட்டுவதும். ஆண்டோதும் இலக்கணங்களுந் தோன்ற [3]இதனுட் டெளிந்து கூறுவனவும் ஆண்டுக் காண்க.*

---

1. உக்கம் - தலை. உரித்தன்ன மடுப்பு என்க. அம் மடுப்புத் தோல் திரைந்துள்ள மையின். கொக்குரித்தன்ன என்றார்.
2. இவ்விரண்டும் இளமைதீர் திறத்திற்கு உதாரணம். உளைத்தவர் - வெறுத்தவர். படுகளி - மிக்ககளி. பிணங்கல் - பிணங்காதே.
3. இதனுள் தெளிந்து கூறுவது என்றது காமத்து மிகுதிறத்துத் தெளிந்து கூறுவது என்றபடி. அதனை, பொருளியல் 42ம் சூத்திரவுரை நோக்கியறிக.

ஏஎ யிஃதொத்த னாணிலன் றன்னொடு
மேவேமென் பாரையு மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மவையெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லியென னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று. (கலி. 62)

*இது மிக்ககாமத்து மிடல்.*

*'செப்பிய நான்கு' எனவே செப்பாதனவாய் அத்துணைக் கந்தருவமாகக் கூறுகின்ற 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்' (105) என்ற பெருந்திணையும் நான்கு உளதென்று உணர்க. 'குறிப்பு' என்றதனான் அந்நான்கும் பெருந்திணைக்குச் சிறந்தன வெனவும், ஈண்டுக் கூறியன கைக்கிளைக்குச் சிறந்தனவெனவுங் கொள்க. (51)*

**(இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழும் கைக்கிளை இவையெனல்)**

**52.** முன்னைய நான்கு முன்னதற் கென்ப.

*இது, முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே' (105) எனக் களவியலுட் கூறுஞ் சிறப்பில்லாக் கைக்கிளை போலன்றிக் காமஞ் சாலா விளமை யோள்வயிற் கைக்கிளைபோல இவையுஞ் சிறந்தனவென எய்தாததெய்துவித்தது.*

*இ — ள்: இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னிகழ்ந்த காட்சியும் ஐயமுந் தெரிதலும் தேறலும் என்ற குறிப்பு நான்கும் நற்காமத் துக்கு இன்றியமையாது வருதலின் முற்கூறிய சிறப்புடைக் கைக் கிளையாதற்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.*

*களவியலுட் கூறுங் கைக்கிளை சிறப்பின்மையின் 'முன்னதற் குரிய' எனச் சிறப்பெய்துவித்தார். களவியலுள் 'ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப' (93) என்றது முதலாக இந்நான்குங் கூறுமாறு ஆண்டுணர்க. இவை தலைவி வேட்கைக் குறிப்புத் தன்மேனிகழ் வதனைத் தலைவன் அறிதற்கு முன்னே தன் காதன் மிகுதியாற் கூறுவனவாதலிற் கைக்கிளையாயிற்று. இவை தலைவற்கே உரியவென்பது. 'சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப' (94) என்னுஞ் சூத்திரத்திற் கூறுதும். இவையும் புணர்ச்சி நிமித்தமாய்க் குறிஞ்சி யாகாவோவெனின், காட்சிப்பின் தோன்றிய ஐயமும் ஆராய்ச்சி*

யுந் துணிவும் நன்றெனக் கோடற்கும் அன்றெனக் கோடற்கும் பொதுவாகலின் இவை ஒருதலையாக நிமித்தமாகா; [1]வழிநிலைக் காட்சியே நிமித்தமாமென்றுணர்க. (52)

**(புலனெறி வழக்கம் கலிப்பாவின்கண்ணும் பரிபாடற்கண்ணும் நடக்குமெனல்)**

**53.** நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கங்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினு
முரிய தாகு மென்மனார் புலவர்.

இது புலனெறி வழக்கம் இன்னதென்பதூஉம், அது நடுவணைந் திணைக்கு உரிமையுடைத் தென்பதூஉம் இன்ன செய்யுட்கு உரித்தென்பதூஉம், உணர்த்துதல் நுதலிற்று.

**இ – ள்:** நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் - புனைந்துரை வகையானும் உலகவழக்கத்தானும், பாடல்சான்ற புலனெறி வழக்கம் - புலவராற் பாடுதற்கமைந்த புலவராற்று வழக்கம், கலியே பரிபாட்டு அ இரு பாங்கினும் உரியது ஆகும் என்மனார் புலவர் - கலியும் பரிபாடலுமென்கின்ற அவ் விரண்டும் கூற்றுச் செய்யுளிடத்தும் நடத்தற்கு உரியதாமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

இவற்றிற்கு உரித்தெனவே, அங்ஙனம் உரித்தன்றிப் புலனெறி வழக்கம் [2]ஒழிந்தபாட்டிற்கும் வருதலும், புலனெறி வழக்கம் அல்லாத பொருள் [3]இவ்விரண்டற்கும் வாராமையுங் கூறிற்று. இவை தேவபாணிக்கு வருதலும், கொச்சகக்கலி பொருள் வேறுபடுதலும் செய்யுளியலுள் வரைந்து ஓதுதும். 'மக்க ணுதலிய வகனைந் திணையும்' (54) என மேல்வரும் அதிகாரத்தானும் இதனை அகத்திணை யியலுள் வைத்தமையானும் அகனைந் திணையாகிய காமப் பொருளே புலனெறி வழக்கத்திற்குப் பொருளாமென்றுணர்க.

'பாடல்சான்ற' என்றதனாற் பாடலுள் அமைந்தனவெனவே, பாடலுள் அமையாதனவும் உளவென்று கொள்ளவைத்தமையிற்

---

1. வழிநிலைக் காட்சி என்றது குறிப்பறிதலை.
2. ஒழிந்த - கலியும் பரிபாடலு மல்லாத. எனவே ஆசிரியம் முதலியன என்பதாயிற்று.
3. இவ்விரண்டு - கலியும் பரிபாடலும்.

கைக்கிளையும் பெருந்திணையும் பெரும்பான்மையும் உலகியல் பற்றிய புலனெறி வழக்காய்ச் சிறுபான்மை வருமென்று கொள்க. செய்யுளியலுட் கூறிய முறைமையின்றி ஈண்டுக் கலியை முன் னோதியது கலியெல்லாம் ஐந்திணைப் பொருளாய புலனெறி வழக்கிற் காமமும், கைக்கிளை பெருந்திணையாகிய உலகியலே பற்றிய புலனெறிவழக்கிற் காமமும் பற்றி வருமென்றற்கும், பரிபாடல் தெய்வவாழ்த்து உட்படக் காமப்பொருள் குறித்து உலகியலேபற்றி வருமென்றற்கும் என்றுணர்க.

ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறமென்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந்தொகையும் புறமுங் கீழ்க்கணக்கும் மதுரைக் காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பன வற்றுட் காண்க. மருட்பாத் 'தானிதுவென்னுந் தனிநிலை, (397) இன்மையின் [1]வரை நிலையின்று.

மனைநெடு வயலை வேழஞ் சுற்றுத்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே. (ஐங்குறு. 11)

இதனுள் முதல் கரு வுரிப்பொருளென்ற மூன்றுங் கூறலின் நாடக வழக்கும், தலைவனைத் தலைவி கொடுமைகூறல் உலகிய லாகலின் உலகியல்வழக்கும் உடன் கூறிற்று. இவ் விரண்டுங் கூடிவருதலே பாடலுட்பயின்ற புலனெறி வழக்கமெனப்படும். [2]இவ்விரண்டினும் உலகியல் சிறத்தல் 'உயர்ந்தோர் கிளவி' (217) என்னும் பொருளியற் சூத்திரத்தானும் மரபியலானும் பெறுதும்.

முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக
ரினிதெனக் கணவ னுண்டலி
னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே (குறுந். 167)

இனி உலகியலே வந்தது.

இனி அவ்வந்நிலத்து மக்களே தலைவராயக்கால் அவை உலகியலேயாம்.

---

1. வரைநிலையின்று - இப்பொருளில் வருமென வரைவு செய்யும் நிலைமை யில்லை.

2. இவ்விரண்டினும் - நாடகவழக்கு உலகியல்வழக்கு என்னும் இவ்விரண்டி னும். உலகியல் சிறத்தல் - உலகியல் மிக்குவருதல்.

இனிக் கைக்கிளையுள் அசுரமாகிய ஏறுகோடற் கைக்கிளை காமப்பொருளாகிய புலனெறி வழக்கில் வருங்கால் முல்லை நிலத்து ஆயரும் ஆய்ச்சியருங் கந்தருவமாகிய களவொழுக்கம் ஒழுகி வரையுங் காலத்து அந்நிலத் தியல்புற்றி ஏறு தழுவி வரைந்து கொள்வரெனப் புலனெறி வழக்காகச் செய்தல் இக்கலிக்குரித் தென்று கோடலும் பாடலுள் அமையாதன என்றதனாற் கொள்க. 'மலி திரையூர்ந்து' (104) என்னும் முல்லைக்கலியுள் 'ஆங்க ணயர்வர் தழூஉ' என்னுந் துணையும் ஏறு தழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, 'பாடுகம் வம்மின்' என்பதனால் தலைவனைப் பாடுகம் வாவென்றாட்கு அவளும் 'நெற்றிச் சிவலை...மகள்' 'ஒருக்கு நாமாடு... மகன்' என்பனவற்றான் அலரச்சம் நீங்கினவாறும் அவற்றான் வருத்தியவாறுங் கூறிய பாடியபின்னர், தோழி

> கோளரி தாக நிறுத்தகொலை யேற்றுக்
> காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
> யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
> வூராரை யுச்சி மிதித்து (கலி 104)

என எமர்கொடை நேர்ந்தாரெனக் கூறியவாறுங் காண்க.

இவ்வாறே இம் முல்லைநிலத்து அகப் பொருளோடு கலந்து வருங் கைக்கிளை பிறவுமுள. அவையெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க.

[1]புனைந்துரைவகையாற் கூறுப வென்றலிற் புலவர் இல்லனவுங் கூறுவாரோ எனின், உலகத்தோர்க்கு நன்மைபயத்தற்கு நல்லோர்க்கு உள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி அந்நல்லோர்க்குள்ளனவற்றிற் சிறிது இல்லனவுங் கூறுதலன்றி யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறாரென்றற் கன்றே நாடகமென்னாது வழக்கென்பாராயிற்றென்பது.

இவ்வதிகாரத்து நாடகவழக்கென்பன, புணர்ச்சியுலகிற்குப் பொதுவாயினும் மலைசார்ந்து நிகழுமென்றும், காலம் வரைந்தும், உயர்ந்தோர் காமத்திற்குரியன வரைந்தும், மெய்ப்பாடு தோன்றப் பிறவாறுங் கூறுஞ் செய்யுள் வழக்காம்.[2]இக்கருத்தானே 'முதல் கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே - நுவலுங்காலை' (3) என்று புகுந்தார் இவ்வாசிரியர்.

---

1. புனைந்துரைத்தல் நாடகவழக்கு.
2. இக்கருத்து என்றது நாடக வழக்கு என்ற கருத்தை. முதல் கரு உரி என்னும் வகுப்பு உலகியலன்று; நாடக வழக்காகும்.

இப் புலனெறி வழக்கினை [1]இல்லது இனியது புலவரானாட்டப்பட்ட தென்னாமோ வெனின், இல்லது என்று கேட்டோர்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பஞ்செய்யாதாகலானும் உடன்கூறிய உலகியல் வழக்கத்தினை ஒழித்தல் வேண்டுமாகலானும் அது பொருந்தாது. அல்லதூஉம் அங்ஙனம் கொண்ட இறையனார் களவியலுள்ளும்,

வேந்துவினை யியற்கை பார்ப்பார்க்கு முரித்தே (இறையனார். 37)

அரச ரல்லா வேனை யோர்க்கும்
புரைவ தென்ப வோரிடத் தான (இறையனார். 38)

எனவும்,

வேந்தற் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென்
றாங்கவ் விரண்டு மிழிந்தோர்க் குரிய (இறையனார். 39)

எனவும் நான்கு வருணமுங்கூறி [2]நால்வகைத் தலைமக்களையும் உணர்த்தலின் இல்லதென்பது தொல்லாசிரியர் தமிழ்வழக்கன் றென மறுக்க. இக்கருத்தானே மேலும் 'மக்க ணுதலிய வகனைந் திணையும்' (54) என்பர். (53)

**(அகனைந்திணைக்கண்ணும் தலைவன் முதலியோர் இயற்பெயராற் கூறப்பெறார் எனல்)**

**54.** மக்க ணுதலிய வகனைந் திணையுஞ்
சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்.

இது முற்கூறிய புலனெறி வழக்கிற்குச் சிறந்த ஐந்திணைக் காவதோர் வரையறை கூறுகின்றது.

**இ — ள்:** மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும் - மக்களே தலைமக்களாகக் கருதுதற்குரிய நடுவணைந்திணைக்கண்ணும், சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார் - திணைப்பெயராற் கூறி னன்றி ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறி அவரது இயற் பெயர் கொள்ளப் பெறார் என்றவாறு.

இது நாடகவழக்குப் பற்றி விலக்கியது. அவைவெற்பன் துறைவன் கொடிச்சி கிழத்தி யெனவரும்.

'மக்கள் நுதலிய' என்பதனானே மக்களல்லாத தேவரும் நரகருந் தலைவராகக் கூறப்படாரெனவும், 'அகனைந்திணையும்'

---

1. இல்லது இனியது என்று கூறுவது களவியலுரை.

2. நால்வகைத் தலைமக்கள் என்றது நிலம் நான்காதல் பற்றி. தொல்பொருள். 93ம் சூத்திர உரை நோக்கியறிக.

என்றதனானே கைக்கிளையும் பெருந்திணையுஞ் சுட்டி ஒருவர் பெயர்கொண்டுங் கொள்ளாதும் வருமெனவுங் கொள்க. அக னைந்திணை' எனவே அகமென்பது நடுவுநின்ற ஐந்திணையாத லிற் கைக்கிளையும் பெருந்திணையும் [1]அவற்றின் புறத்து நிற்ற லின் அகப்புறம் என்று பெயர் பெறுதலும் பெற்றாம்.

இனி, அவை வரையறையுடைமை மேலைச் சூத்திரத்தான் அறிக.

**கன்றுமுண் ணாது கலத்தினும் படாது**
**நல்லான் றீம்பா னிலத்துக்... கவினே** **(குறு. 27)**

இது வெள்ளிவீதியார் பாட்டு.

**மள்ளர் குழீஇய விழவி னானும்**
**.............. ........... மகனே.** **(குறு. 31)**

இது [2]காதலற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு.

இவை தத்தம் பெயர் கூறித் புறமாமென்றஞ்சி வாளாது கூறினார்.

ஆதிமந்தி தன்பெயரானுங் காதலனாகிய ஆட்டனத்தி பெயரானுங் கூறிற் [3]காஞ்சிப்பாற்படும்.

**ஆதி மந்தி போல**
**வேதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே** **(அகம் 236)**

எனவும்,

**வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்**
**செலவயர்ந் திசினால் யானே** **(அகம் 147)**

எனவும், அகத்திணைக்கட் [4]சார்த்துவகையான் வந்தனவன்றித் தலைமை வகையாக வந்தில என்பது.

வருகின்ற சூத்திரத்துப் "பொருந்தின்" (55) என்னும் இலேசானே இச் சார்த்துவகை கோடும்.

---

1. அவற்றின் - ஐந்திணையின். புறத்து நிற்றல் - ஐந்திணையின் புறத்து நிற்றல். அகத்து நிற்பன ஐந்திணை எனவே ஏனையிரண்டும் அவற்றின் புறத்து நிற்றல் பெறப்படலின் அகமாகாது அகப்புறமாயின என்பது கருத்து.

2. காதலற்கெடுத்த - நாயகனைக் கெடுத்த. கெடுத்தல் - போக்குதல். (-காணா மற் போகவிடல்)

3. காஞ்சி - புறப்பொருட் டிணையுளொன்று; நிலையின்மை கூறுவது.

4. சார்த்துவகையான் வருதலாவது: உரிப்பொருட் பெயரைத் தன்னொடு சார்த்திக்கூறும் வகையான் வருவது.

*இது பெயரெனப்பட்ட கருப்பொருளாதலிற் கூற்றிற்கு உரிய தோழியும் பாங்கனும் முதலிய வாயிலோரையும் பொதுப் பெயரா னன்றி இயற்பெயர்த் தொடக்கத்தன கூறப்பெறாரென்று கொள்க.*

*உதாரணம் :*

முகிழ்முகிழ்த் தேவர வாயினு முலையே
யரவெயிற் றொடுக்கமொ டஞ்சுதக் கனவே
கள வறி வாரா வாயினுங் கண்ணே
நுழை நுதி வேலி னோக்கரி யவ்வே
யிளைய ளாயினு மணங்குதக் கிவளே
முளையின நெருப்பின் முதுக்குறைந் தனளே
யதனா னோயில ளாகுக தில்ல
சாயிறைப் பணைத்தோ ளீன்ற தாயே.

*இது சுட்டி ஒருவர் பெயர்கொள்ளாக் கைக்கிளை*

ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய விராம னவனொடு
மிதிலை மூதூரெய்திய ஞான்றை
மதியுடம் பட்ட ம(ட)க்கட் சீதை
கடுவிசை வின்ஞா ணிடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
துயிலெழுந்து மயங்கின ளதா அன்று மயிலென
மகிழ் ................ ................. ............... ..............

*[1]இது சுட்டி ஒருவர் பெயர்கொண்ட கைக்கிளை.*

*இஃது அசுரமாகலின், 'முன்னைய மூன்றுக் கைக்கிளை' என்றதனாற் கோடும். 'யாமத்து மெல்லையும்' (கலி. 139) என்றது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாப் பெருந்திணை.*

பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான்
பாண்டியன் மடமகள் பணைமுலைச் சாந்தம்
வேறு தொடங்கிய விசய னெஞ்சத்
தாரழ னாற்றா தைஇ யோகியிற்
பொதியிற் சாந்த மெல்லாம் பொருதிரை
முத்தினு முழங்கழற் செந்தீப்
பொத்துவது போலும் புலம்புமுந் துறுத்தே.

*[2] இது சுட்டி ஒருவர் பெயர்கொண்ட பெருந்திணை.*

*இவை சான்றோர் செய்யுளுட் பெருவரவிற் றன்மையினன்றே முற்சூத்திரத்து முன்னும் பின்னும் [3]இவற்றை வைத்ததென்பது.*

---

1. இதில் சீதை என இயற்பெயர் வந்தது.
2. இதில் விசயன் என இயற்பெயர் வந்தது
3. இவற்றை - கைக்கிளை பெருந்திணைகளை.

முட்காற் காரை முதுகனி யேய்ப்பத்
தெறிப்ப விளைந்த தீங்கட் டார
நிறுத்த வாயந் தலைச்செல வுண்டு
பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த
வெச்சி லீர்ங்கை விற்புறத் திமிரிப்
புலம்புக் கனனே புல்லணற் காளை
யொருமுறை யுண்ணா வளவைப் பெருநிரை
யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுத லோம்புமதி முதுகட் சாடி
யாதரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே. (புறம். 258)

*இது வெட்சித்திணை பெயர்கொள்ளாது வந்தது.*

முலைபொழி தீம்பான் மண்சேறு படுப்ப
மலர்தலை யுலக மோம்பு மென்ப
பாசிலைத் தொண்டைப் பல்லவ னாணையின்
வெட்சித் தாயத்து வில்லே ருழவர்
பொருந்தா வடுவர் முனைச்சுரங்
கடந்து கொண்ட பல்லா னிரையே.

*[1]இது வேந்துவிடு தொழிற்கண் வேந்தனைப் பெயர் கூறிற்று. ஒழிந்தனவும் புறத்திணையியலுட் காண்க.* *(54)*

**(இயற்பெயர் புறத்திணையோடு பொருந்தி அகத்திணைக்கண்ணும் வருமெனல்)**

55. புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல
தகத்திணை மருங்கி னளவுத லிலவே.

*இது புறத்திணைக்குத் தலைவர் ஒருவராதலும் பலராதலும் உரிப்பொருட்குத் தலைவர் பலராகாமையுங் கூறலின் எய்தாத தெய்து வித்து எய்தியது விலக்கிற்று.*

**இ – ள்:** *அகத்திணை மருங்கிற் பொருந்தின் - ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறும் இயற்பெயர் அகத்திணைக்கண்ணே வந்து பொருந்துமாயின், புறத்திணை அளவுதல் மருங்கின் அல்லது இல - ஆண்டும் புறத்திணை கலத்த விடத்தினல்லது வருதலில்லை என்றவாறு.*

*எனவே, புறத்திணை கருப்பொருளாயும், அதுதான் உவம மாயும் அகத்திணையுட் கலக்கு மென்பதூஉம் இதனானே விரித்தா ராயிற்று. அளவுமெனவே ஒரு செய்யுட்கண்ணும் அப் புறத் திணையாகிய இயற்பெயர்களும் சிறப்புப்பெயர்களும் ஒன்றே*

1. இதில் பல்லவன் என வேந்தன்பெயர் வந்தது.

யன்றிப்பலவும் வருதலுங்கொள்க. ஒருவரென்பது அதிகாரப் பட்டமையின் அகத்திற்கு வரும் உரிப்பொருட்பெயர் ஒன்றாதல் கொள்க.

உதாரணம்: 'வண்டுபடத் ததைந்த என்னும் அகப்பாட்டி னுள்,

முருக னற்போர் நெடுவே ளாவி
.......... ......... ............ யாங்கண் (அகம். 1)

எனவே புறத்திணைத் தலைவன் இயற்பெயர் ஒன்றே வந்தவாறும் அவன் நிலக் கருப்பொருளாய் அகத்திற்கு வந்தவாறும் உரிப் பொருட்டலைவன் ஒருவனேயானவாறுங் காண்க.

எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று (குறு. 19)

என்பது கருபொருளுவமமாய் வந்தது.

'கேள்கே டூன்றவும்' (93) என்னும் அகப்பாட்டுப் புறத்திணைத் தலைவர் பலராய் அகத்திணைக்கண் அளவிவந்தது. புறத்திணைக் கண் இயற்பெயர் அளவிவரும் என்பதனானே 'முரசு கடிப்பிகுப் பவும் வால்வளை துவைப்பவும்' (158) என்னும் புறப்பாட்டு 'எழுவர் மாய்ந்த பின்றை' எனப் புறத்திணைத் தலைவர் பலராய் வந்தது.

பிறவும் இவ்வாறு வருவன இதனான் அமைக்க.

இன்னும் இதனானே அகப்புறமாகிய கைக்கிளை பெருந் திணைக்கும் இப்பன்மை சிறுபான்மை கொள்க. உதாரணம்:

ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
நாளிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவாரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு. (கலி. 101)

'பொருந்தின்' எனவே தானும் தன்னொடு பொருந்துவதூஉம் என இரண்டாக்கிச் சார்த்துவகையான் வரும் பெயர்க்குங் கொள்க. நாடகவழக்கி னுளது முன்னர்ச் சூத்திரத்துட் காட் டினவாம்.

பெயர்கள் பலவாதலின் இலவெனப் பன்மை கூறினார். (55)

**அகத்திணையியல் முற்றிற்று.**

# இரண்டாவது: புறத்திணையியல்

### (வெட்சித்திணை குறிஞ்சிக்குப் புறனெனவும் அது பதினான்கு துறைத்தெனவும்)

56. அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
யுட்குவரத் தோன்று மீரெழ் துறைத்தே.

*இவ்வோத்து முற்கூறிய அகத்திணை ஏழற்கும் புறமாகிய புறத்திணை யிலக்கணம் உணர்த்தினமையிற் புறத்திணையிய லென்னும் பெயர்த்தாயிற்று. புறமாகிய திணையெனப் பண்புத் தொகையாம். அதனை 'முற்படக் கிளந்த'* [1]*என்புழிப் பிற்படக் கிளந்தனவும் உளவெனத் தோற்றுவாய் செய்து போந்து அவற்றது இலக்கணங்களும் பெயரும் முறையுந் தொகையும் வருகின்ற சூத்திரங்களால் 'திறப்படக் கிளப்பின், எனக்கூறலின்* [2]*மேலத னோடு இயைபுடைத்தாயிற்று.*

*இச் சூத்திரம் முற்கூறிய குறிஞ்சித்திணைக்குப் புறன் வெட் சித்திணை என்பதூஉம், அதுதான் இப்பகுதித் தென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.*

**இ – ள்:** *அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர் புறத் திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின் - அகத்திணை யென் னும் பொருட்கட்* [3]*பிணக்கற அறிந்தோர் கூறிய புறத்திணையது இலக்கணத்தைக் கூறுபட ஆராய்ந்து கூறின், வெட்சிதானே குறிஞ்சியது புறனே - வெட்சியெனப்பட்ட புறத்திணை குறிஞ்சி யெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாம், உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே - அதுதான்* [4]*அஞ்சுதகத் தோன்றும் பதினான்கு துறையினையுடைத்து என்றவாறு.*

---

1. தோற்றுவாய் - தொடக்கம்.
2. மேலதனோடு - மேலையோத்தோடு.
3. பிணக்கு - மாறுபாடு. அகத்திணையிலக்கணத்தோடு மாறுபாடற என்பது கருத்து.
4. அஞ்சுதல் - பார்ப்பார் முதலியோர் அஞ்சுதல். அதனைப் பின்வரும் இவருரையானறிக.

அகத்திணைக்கண் முதல் கரு வுரிப்பொருள் கூறிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பவற்றிற்கு வெட்சி வஞ்சி உழிஞை தும்பை யென்பன அவ்வவ் விலக்கணங்களோடு [1]ஒருபுடையொப் புமை பற்றிச் சார்புடையவாதலும், நிலமில்லாத பாலை பெருந் திணை கைக்கிளை யென்பவற்றிற்கு வாகையும் காஞ்சியும் பாடாண்டிணையும் பெற்ற இலக்கணத்தோடு ஒருபுடை யொப் புமை பற்றிச் சார்புடையவாதலும் கூறுதற்கு 'அறிதப உணர்ந் தோர்' என்றார். [2]ஒன்று ஒன்றற்குச் சார்பாமாறு அவ்வச் சூத்தி ரங்களுட் கூறுதும். 'தானே' யென்றார் புறத்திணை பலவற்றுள் [3]ஒன்றை வாங்குதலின். பாடாண்டிணை யொழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும்.

களவொழுக்கமும் கங்குற்காலமும் காவலர் கடுகினுந் தான் கருதிய பொருளை இரவின்கண் முடித்து மீடலும் போல் வன ஒத்தலின் வெட்சி குறிஞ்சிக்குப் புறனென்றார். வெட்சித் திணையாவது களவின்கண் நிரைகொள்ளும் ஒழுக்கம். இதற்கு அப்பூச் சூடுதலும் உரித்தென்று கொள்க. வேற்றுப்புலத்து வாழும் பார்ப்பார் முதலியோர் அஞ்சி [4]அரணசேர்வதோர் உபாயமாதலின் 'உட்கு வரத் தோன்றும்' என்றார்.

மக்களும் மாவும் முதலியன சென்று நீருண்ணும் துறை போலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குத லாகு [5]மார்க்கமாதலின் 'துறை' யென்றார்; எல்லாவழியு மென்ப தனை 'எல்லாத் துறையுங் காவல் போற்றினார்' என்பவாகலின். எனவே, திணையுந் துறையுங் கொண்டாராயிற்று. [6]அகத்திணைக் குத் துறையுட் பகுதிகளெல்லாம் விரித்துக்கூறிய பின்னும் பன் முறையாற் பரந்துபட்டு வரம்பிகந்தனவற்றையுந் தொகுத்துத்

---

1. ஒருபுடையொப்புமை - ஒருபகுதி ஓத்துவரல். அவ்வொப்புமையை அடுத்து வரும் வாக்கியத்தானறிக.
2. ஒன்று - ஓரொழுக்கம்.
3. ஒன்றை வாங்கல் - ஒன்றைப் பிரித்தெடுத்தல்.
4. அரண் - பாதுகாவலான இடம்.
5. மார்க்கம் - வழி.
6. அகத்திணைக்கண் துறையுட்பகுதிகளை விரித்துக்கூறி அவற்றையும் இன் னும் வரம்பிகந்து வருவனவற்றையுந் தொகுத்துத் துறைப்படுத்துக் கூறுக என்றற்கு ஆண்டுத் துறையெனக் கூறாது செய்யுளியலிற் றுறையெனக் கூறினார். புறத்திணைக்கண் விரித்துக் கூறாது தொகுத்துத் துறையெனப் பெயர்கொடுத்து. அத்துறையுள டங்கும் பகுதிகளையும் விரித்துக் கொள்ள வைத்தார் என்பது கருத்து.

துறைப்படுத்துக் கிளவிகூறுக என்றற்குச் செய்யுளியலுள் (313) துறையென்பது உறுப்பாகக் கூறினார். புறத்திணைக்கு அங்ஙனம் பரந்துபட விரித்தோதாது தொகுத்து இலக்கணஞ் செய்தாரா யினும் அவையும் அவ்வாறே பல பொருட்பகுதியும் உடையன வென்பது உணர்த்துதற்குத் துறையெனப் பெயராகக் கொடுத் தார். இதனானனே அகப்பொருட்பகுதி பலவாயினும் ஒரு செய் யுளுட் பலபொருள் விராஅய் வரினும் ஒரு துறையாயினாற் போலப் புறத்திணைக்கும் அவ்வப்பொருட்பகுதியும் ஒருதுறை யாதலும் ஒரு செய்யுளுட் பலதுறை ஒருங்கு வந்தும் ஒருதுறைப் படுதலுங் கொள்க.

இன்னும் இதனானே அகத்திணைக்கு உரியனவெல்லாம் புறத்திணைக்குங் கொள்க. (1)

**(வெட்சித் திணையின் பொதுவிலக்கண மிதுவெனல்)**

57. வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி
னாதந் தோம்பன் மேவற் றாகும்.

இது வெட்சியெனக் கூறிய புறத்திணைக்குப் பொதுவிலக் கணங் கூறுகின்றது.

**இ — ள்:** வேந்துவிடு முனைஞர் - வேந்தனால் விடப்பட்டு [1]முனைப்புலங் காத்திருந்த [2]தண்டத்தலைவர், வேற்றுப்புலக் களவின் - பகைநிலத்தே சென்று களவினாலே, ஆதந்தோம்பல் மேவற்றாகும் - ஆநிரையைக்கொண்டு போந்து பாதுகாத்தலைப் பொருந்துதலை யுடைத்தாகும் வெட்சித்திணை என்றவாறு.

களவு நிகழ்கின்ற குறிஞ்சிப் பொருளாகிய கந்தருவமணம் வேதவிதியானே இல்லறமாயினாற்போல, இருபெரு வேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர்நாட்டு வாழும் அந்தண ரும் ஆவும் முதலியன தீங்குசெய்யத் தகாத சாதிகளை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருகவெனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமே கொண்டுவந்து பாதுகாத்தலுந் தீதெனப்படாது அறமே யாம் என்றற்கு 'ஆதந்தோம்பல்' என்றார் அது,

---

1. முனை - போர்முனை.
2. தண்டத்தலைவர் - சேனைத்தலைவர்.

ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின். (புறம். 9)

எனச் சான்றோர் கூறியவாற்றானுணர்க. மன்னுயிர்காக்கும் அன்புடை வேந்தற்கு மறத்துறையினும் [1]அறமே நிகழும் என்றற்கு [2]'மேவற்றாகும்' என்றார். அகநாட்டன்றிப் [3]புறஞ்சிறைப்பாடியில் ஆநிரை காக்குங் காவலரைக் கொன்றே நிரைகொள்ள வேண்டுதலின் ஊர்கொலையுங் கூறினார். வேந்துவிடு வினைஞர் என்னாது முனைஞர் என்றதனானே, முனைப்புலங் காத்திருந்தோர் தாமே சென்று நிரைகோடலுங் குறுநிலமன்னர் நிரைகோடலும் ஏனை [4]மறவர் முதலியோர் நிரைகோடலுமாகிய வேத்தியல் அல்லாத பொதுவியலுங் கொள்க. முன்னர் (56) வெட்சி குறிஞ்சிக்குப் புறனெனக் களவுகூறிய அதனானே, அகத்திற்கு ஏனைத் திணைக்கண்ணுங் களவு நிகழ்ந்தாற் போலப் புறத்திணை யேழற்குங் களவு நிகழுங்கொலென்று ஐயுற்ற மாணாக்கற்கு வெட்சிக்கே களவுள்ளதென்று துணிவுறுத்தற்கு மீட்டுங் [5]"களவின்' என்று இத்திணைக்கே களவு உள்ளதாக வரைந்தோதினார். 'வேந்து விடு முனைஞர்' என்றமையான் இருபெரு வேந்தருந் தண்டத்தலைவரை ஏவி விடுவரென்றும், 'ஆதந் தோம்பல்' என்றதனாற் களவின்கட் கொண்ட ஆவினை மீட்டுத் தந்தோம்பலென்றும் பொருள்கூறுமாறு சூத்திரஞ் செய்தாராகலின் இருபெருவேந்தர் தண்டத்தலைவரும் அவரேவலான் நிரைகோடற்கும் மீட்டற்கும் உரியராயினார்; ஆகவே இருவர்க்குங் கோடற்றொழில் உளதாயிற்றாதலின் அடித்துக் கோடலும் மீட்டுக்கோடலும் வெட்சியாயின.

ஆயின் [6]'மீட்டல் கரந்தை' என்பரால் எனின் அதனையும் இச்சூத்திரத்தானும் வருகின்ற சூத்திரத்தானும் வெட்சியென்றே

1. அறம் - பசுவைக்கொண்டு வந்து பாதுகாத்தல்.
2. மேவல் - பொருந்துதல். என்றது அறத்தொடு பொருந்தலை.
3. புறஞ்சிறை - புறமதில். பாடி - சேரி.
4. மறவர் - பாலைநிலமாக்களு ளொருபகுதியார்.
5. களவின் - (நிரைகோடற்கு) களவினான் என்றும், (மீட்டற்கு) களவின்கண் என்றும் விரியும்.
6. பன்னிருபடல நூலார்.

*ஆசிரியர் கொண்டார். மீட்டலை [1]வெட்சிக்கரந்தை என்பாரு முளர். மீட்டலைக் கரந்தை என்பார்க்கு அது திணையாயிற் குறிஞ்சிக்குப் புறனாகாமை உணர்க.*

*'களவின்' என்பதற்குக் களவினானெனவும் களவின்க ணெனவும் இருபொருட்டாகக் கூறுதல் உய்த்துக் கொண்டு ணர்தல் (665) என்னும் உத்தியாம். புறப்பொருட்குரிய அறனும் பொருளுங் கூறத் தொடங்கி ஈண்டு [2]அறத்தாற் பொருளீட்டு மாறுங் கூறினார்.* *(2)*

***(வெட்சித்திணை பதினான்கு மிருபத்தெட்டாமெனல்)***

**58.** **படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி**
**புடைகெடப் போகிய செலவே புடைகெட**
**வொற்றி னாகிய வேயே வேய்ப்புற**
**முற்றி னாகிய புறத்திறை முற்றிய**
**வூர்கொலை யாகோள் பூசன் மாற்றே**
**நோயின் றுய்த்த னுவலுழித் தோற்றந்**
**தந்துநிறை பாதீ டுண்டாட்டுக் கொடையென**
**வந்த வீரேழ் வகையிற் றாகும்.**

*இது முன் ஈரேழாமென்ற துறை இருவகைப்பட்டு இருபத் தெட்டாமென்கின்றது.*

*இ – ள்: படை இயங்கு [3]அரவம் - நிரைகோடற்கு எழுந்த படை பாடிப் புறத்துப் பொருந்தும் அரவமும், நிரை மீட்டற்கு எழுந்தபடை விரைந்து செல்லும் அரவமும்: உதாரணம்:*

**வெவ்வாண் மறவர் மிலைச்சிய வெட்சியாற்**
**செவ்வானஞ் செல்வதுபோற் செல்கின்றா – ரெவ்வாயு**
**மார்க்குங் கழலொலி யாங்கட் [4]படா அலியரோ**
**போர்க்குந் துடியோடு புக்கு.**

**(பெ. பொ. விளக்கம்; புறத்திரட்டு 752)**

---

1. வெட்சிக்கரந்தையென்பார் இளம்பூரணர்.

2. ஆவைக் கவர்ந்து பாதுகாத்தல் அறம். அவ்வாறு பாதுகாத்த ஆ, அறத்தா லீட்டிய பொருளாதலின் அறத்தாற் பொருளீட்டுமாறுங் கூறினார் என்றார்.

3. அரவம் - ஒலி.

4. படாஅலியர் - போகாதொழிக. 'மறாஅலியரோ வவருடைக் கேண்மை' (அகம். 40) என்பதில் மறாஅலியர் என்பதுபோல எதிர்மறையாய் நின்றது. எனவே ஒலி (அரவம்) பாடியிலுள்ளார்க்குக் கேளாதொழிக என்றபடி.

அடியதி ரார்ப்பின ராபெயர்த்தற் [1]கன்னாய்
கடிய மறவர் கதழ்ந்தார் – மடிநிரை
மீளாது மீளார் விறல்வெய்யோர் யாதாங்கொல்
வாளார் துடியர் வலம். (மேற்படி 763)

*இவை கண்டோர் கூற்று.*

*பாக்கத்து விரிச்சி - நிரைகோடற்கு எழுந்தோர் [2]போந்து விட்ட பாக்கத்துக் கங்குலில் நல் [3]வாய்ப்புட்கேட்டலும், நிரை மீட்டற்கு எழுந்தோர் இடைப்புலத்துப் புறம்போந்தோர் கூறிய வற்றை வாய்ப்புள்ளாகக் கேட்டலும்: உதாரணம்:*

திரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் தாடி
நரைமுதியோ னின்றுரைத்த நற்சொ – னிரையன்றி
யெல்லைநீர் வைய மிறையோர்க் களிக்குமால்
வல்லை நீர் சென்மின் வழி.
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 756)

வந்தநீர் காண்மினென் றாபெயர்ப்போர் மாட்டிசைத்த
பைந்தொடியார் கூறும் [4]பறவாப்பு – ளுய்ந்த
நிரையளவைத் தன்றியு நீர்சூழ் கிடக்கை
வரையளவைத் தாவதா மண்.

*இவை விரிச்சியை வியந்தன.*

*[5]புடைகெடப்போகிய செலவே - நிரைகோடற்கு எழுந் தோர் ஆண்டு நின்று மீண்டுபோய்ப் [6]பற்றார்புலத்து ஒற்றர் உணராமற் பிற்றைஞான்று சேறலும், நிரைமீட்டற்கு எழுந் தோர் ஆண்டு ஒற்றப்படாமற் சேறலும்: உதாரணம்:*

[7]பிறர்புல மென்னார் தமர்புல மென்னார்
விறல்வெய்யோர் வீங்கிருட்கட் சென்றார் – நிரையுங்
கடாஅஞ் செருக்குங் கடுங்களி யானைப்
படாஅ முகம்படுத் தாங்கு.
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு. 757)

---

1. கண்ணா எனவும் பாடம்.
2. போந்து விட்ட - சென்று இறுத்த
3. வாய்ப்புள் - சொல்நிமித்தம்.
4. பறவாப்புள் - வாய்ப்புள். நிரை - ஆனிரை. நீர்சூழ்கிடக்கை - பூமி. மண் - நிலம்.
5. புடை - மாற்றார் புலம். அஃது அங்குள்ள ஒற்றரையுணர்த்திற்று. புடை - மாற்றார் பக்கம் என்பர் இளம்பூரணர்.
6. பற்றார் - பகைவர்.
7. புலம் - இடம். கடாஅம் - மதம். படாஅம் - வஸ்திரம் யானைமுகம் படாஅம் படுத்தாங்கு என இயைக்க.

[1]கங்கை பரந்தாங்குக் கானப் பெருங்கவலை
யெங்கு மறவ ரிரைத்தெழுந்தார் – தங்கிளைக்கண்
மன்றுகாண் வேட்கை மடிசுரப்ப வேதோன்றுங்
கன்றுகாண் மெய்குளிர்ப்பீர் கண்டு (ஷ.764)

இவை கண்டோர் கூற்று.

புடைகெட ஒற்றின் ஆகிய [2]வேயே - நிரைகோடற்கு எழுந்தோர் பகைப்புலத்து ஒற்றர் உணராமற் சென்று ஒற்றி அவ்வொற்றுவகையான் அவர் உணர்த்திய குறளைச் சொல்லும், நிரை மீட்டற்கு எழுந்தோர் அங்ஙனம் ஒற்றிய ஒற்றுவகையான் வந்து ஓதிய குறளைச் சொல்லும்: உதாரணம்:

ஒருவ ரொருவ ருணராமற் சென்றாங்
கிருவரு மொப்ப விசைந்தார் – வெருவர
வீக்குங் கழற்கால் விறல்வெய்யோர் வில்லோடு
கோக்குஞ் சரந்தெரிந்து கொண்டு.

நெடுநிலை [3]யாயத்து நிரைசுவ டொற்றிப்
படுமணி யாயம் பகர்ந்தோய் – நெடிது
மனக்குரிய காதல்[4]வயவேந்த னென்று
நினக்குரிய வாக நிரை.

இவை கண்டோர் கூற்று.

வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத் திணை - நிரைகோடற்கு எழுந்தோர் வேயுரைத்தோரிடத்துச் செய்யுஞ் சிறப்புக்கள் முடிந்த பின்னர் உளதாகிய நிரைப்புறத்து ஒடுங்கிய இருக்கைப் பகுதியும், நிரைமீட்டற்கு எழுந்தோர் தமது நிரைப்புறத்துச் சென்று விரைவொழிந்து இருக்கின்ற இருக்கையும்: உதாரணம் :

கரந்தியல் காட்டுத்தீப் போலப் பெரிதும்
பரந்துசென் மள்ளர்[6] பதிந்தா – ரரந்தை
விரிந்தவியு மாறுபோல் விண்டோயத் தோன்றி
யெரிந்தவியும் போலுமிவ் வூர்.

இது கண்டோர் கூற்று.

---

1. கவலை - கவர்வழி. மன்று - தொழுவம்.
2. வேய் - ஒற்றர் ஒற்றி உணர்த்துங் குறளைச் சொல்.
3. ஆயம் - பசுக்கூட்டம்.
4. வேந்தன் காதலும் நிரையும் என்றும் நினக்குரியவாக என இயைக்க.
5. இறை - ஒடுங்கியிருக்கும் இருப்பு என்பது நச்சினார்க்கினியர் கருத்து.
6. பதிதல் - ஒடுங்கித்தங்குதல். பதிவிருத்தல் என்பதுமிது.

இருநில மருங்கி னெப்பிறப் பாயினு
[1]மருவின் மாலையோ வினிதே யிரவி
னாகோண் மள்ளரு மருள்வரக் கானத்து
நாம்புறத் திறுத்தென மாகத் தாந்தங்
கன்றுகுரல் கேட்டன போல
நின்றுசெவி [2]யோர்த்தன சென்றுபடு நிரையே.
(தகடூர் யாத்திரை: புறத்திரட்டு 765)

*இது மறவர் கூற்று.*

*முற்றிய ஊர் கொலை - நிரைகோடற்கு எழுந்தோர் அவர் புறஞ்சேரியை வளைத்துக்கொண்டு ஆண்டுநின்ற நிரைகாவலரைக் கொன்று பகையறுத்தலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் அவ்வூரை விட்டுச் சிற்றூரைக் காத்துக் கோறலும்; உதாரணம்:*

அரவூர் மதியிற் கரிதூர வீம
விரவூ ரெரிகொளீஇக் கொன்று – நிரைநின்ற
பல்லான் [3]றொழுவும் பகற்காண்மார் போர்கண்டோர்
கொல்வார்ப் பெறாஅர் கொதித்து.

சென்ற நிரைப்புறத்துச் சீறூர்த் [4]தொடைகொண்டு
நின்ற மறவர் நிலஞ்சேர்ந்தார் – கொன்றாண்
டிகலுழந்த வல்வில் விளையோர்புண் டீரத்
துகளெழுங்கொல் பல்லான் றொழு.

*இவை கண்டோர் கூற்று.*

*ஆகோள் - நிரைகோடற்கு எழுந்தோர் எதிர்விலக்குவோர் இலராக நிரையகப்படுத்தி மீட்டலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் தமது நிரையை [5]அற்றமின்றி மீட்டலும்.*

*உதாரணம் :*

கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தா
னொடுவரை நீள்வேய் நரலு – நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை. (பு. வெ. 1, 9)

[6]கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின்
மிடல்பெரி தெய்தின மாதோ – தொடலைக்

---

1. மருவின்மாலை - பழகிய நண்பின் இயல்பு.
2. ஓர்த்தல் - ஆராய்ந்தறிதல் (= உற்றுக்கேட்டறிதல்).
3. தொழு - பசுத்தொழுவம்.
4. தொடைகொண்டு - ஒருவரோடொருவர் தொடுத்துக் கொண்டு. புறத்து நின்ற மறவர் என்க. அம்பைக் கொண்டுமாம்.
5. அற்றம் - சோர்வு.
6. கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோடு - திருமாலாகிய பன்றியின் கோடு.

கரந்தை மறவர்க் கருதார் குழாஅந்
துரந்து நிரைமீட்ட தோள்.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 767)

*இவை கண்டோர் கூற்று.*

*'தொடலைக் கரந்தை' யெனக் கரந்தை சூடினமை கூறினார் [1]தன்னுறு தொழிலான் நிரைமீட்டலின். இது பொதுவியற் கரந்தையிற் (60) கூறுதும்.*

*பூசல்மாற்று - நிரைகொண்டு போகின்றார் தம்பின்னே [2]உளைத்தற் குரலோடு தொடர்ந்து சென்று ஆற்றிடைப் போர் செய்தோரை மீண்டு பூசலை மாற்றுதலும், நிரையை மீட்டுக் கொண்டு போகின்றோர் தம்பின்னர் வந்து போர்செய்தோரை மீண்டுநின்று பூசலை மாற்றுதலும்: உதாரணம்:*

[3]ஒத்த வயவ ரொருங்கவிய நாண்படரத்
தத்த மொலியுந் தவிர்ந்தன – வைத்தகன்றார்
தம்பூசன் மாற்றி நிரைகொள்வான் றாக்கினார்
வெம்பூசன் மாற்றிய வில்.

[4]இரவூ ரெறிந்து நிரையொடு பெயர்ந்த
வெட்சி மறவர் வீழவு முட்காது
கயிறியல் பாவை போல வயிறிரித்
துளைக்குரற் குணர்ந்த வளைப்புலி போல
முற்படு பூசன் கேட்டனர் பிற்பட
நிணமிசை யிழுக்காது தமர்பிண மிடறி
நிலங்கெடக் கிடந்த கருந்தலை நடுவண்
மாக்கட னெருப்புப் போல நோக்குபு
வெஞ்சிலை விடலை வீழ்ந்தன
னஞ்சுதக் கன்றாற் செஞ்சோற்று நிலையே.

*இவை கண்டோர் கூற்று.*

*வெட்சி மறவர் வீழ்ந்தமை கேட்டு விடாது பின்வந்தோன் பாடு கூறினமையிற் பூசன்மாற்றாயிற்று.*

---

1. தன்னுறுதொழில் - தண்டத்தலைவர் அரசனேவலாலன்றித் தாமே சென்று மீட்டல்.
2. உளைத்தல் - ஒருவகை ஒலி.
3. அவிய - இறக்க. நாண் தவிர்ந்தன என இயைக்க. படர - ஏற்றப்படாவாய். பூசல் - போர். நிரைகொள்வான் தாக்கினார் - நிரையை மீட்டுக்கொள்ளும் படி பொருதார். வில் வைத்தகன்றார் என முடிக்க.
4. கயிறு இயல்பாவை - கயிற்றால் இயங்குஞ் சூத்திரப்பாவை, உழை - மான். இழுக்கல் - வழுக்கல். பூசல் - போர். அஞ்சுதக்கன்று - அஞ்சத்தக்கது.

*நோய் இன்று உய்த்தல் - நிரை கொண்டோர் அங்ஙனம் நின்று நின்று சிலர் பூசன்மாற்றத் தாங்கொண்ட நிரையினை இன்பு றுத்திக் கொண்டு போதலும், மீட்டோரும் அங்ஙனம் நின்று நின்று சிலர் பூசன்மாற்றத் தாம் மீட்ட நிரையினை இன்புறுத்திக் கொண்டு போதலும்: உதாரணம்:*

[1]புள்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வின்மே லசைஇயகை வெல்கழலான் – றன்மேற்
கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு
நெடுவரை நீழ னிரை. (பு. வெ. 1, 11)

[2]கல்கெழு சீறூர்க் கடைகாண் விருப்பினான்
மெல்ல நடவா விரையுநிரை – யொல்லெனத்
தெள்ளறற் கான்யாற்றுந் தீநீர் பருகவு
மள்ளர் நடவா வகை.
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 768)

*இவை கண்டோர் கூற்று.*

*[3]நுவலுழித் தோற்றம் - பாடிவீட்டுள்ளோர் மகிழ்ந்துரைத் தற்குக் காரணமான நிரைகொண்டோர் வரவும், ஊரிலுள் ளோர் கண்டு மகிழ்ந்துரைத்தற்குக் காரணமான நிரைமீட் டோர் வரவும்: உதாரணம் :*

[4]மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லு
மையணற் காளை மகிழ்துடி – கையணல்
வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனாட
வுய்த்தன் றுவகை யொருங்கு. (பு. வெ. 1, 12)

[5]காட்டகஞ் சென்றுயிர் போற்றான் கடுஞ்சுரையா
மீட்ட மகனை வினவுறா –[6]னோட்டந்து
தன்னெதிர் தோன்றும் புனிற்றாத் தழீஇக்கலுழு
மென்னெதிர்ப் பட்டாயோ வென்று.
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 769)

*இவை கண்டோர் கூற்று.*

---

1. அசைஇ - இளைப்பாறி. புணர்ந்து - சேர்ந்து. அசைஇய (அசைத்த) வைத்த. கழலான்நிலை - செல்க என்னும் என இயைக்க. கடுவரை - செங்குத்தான மலை.
2. கடை - வாயில். நிரைவிரையும் என மாற்றி முடிக்க. அறல் - மணல். நட வாவகை - நடத்தாதபடி.
3. நுவலுழி - நுவலுதற்கு; உருபுமயக்கம். தோற்றம் - வரவு.
4. அணல் - தாடி; வீசை என்பாருமுளர். அணல் - கீழ்க்கதுப்பு.
5. சுரை - முலைமடி.
6. ஒட்டந்து - ஓடிச்சென்று, ஆவைத்தழுவிக் கலுழும் என்க.

[1] *தந்துநிறை - நிரைகொண்டோர் தாங்கொண்ட நிரையைத் தம் ஊர்ப்புறத்துத் தந்துநிறுத்தலும், நிரைமீட்டோர் தாம் மீட்ட நிரையினைத் தந்து நிறுத்தலும்: உதாரணம்:*

> [2]குளிறு குரன்முரசங் கொட்டின் வெரூஉங்
> களிறொடுதேர் காண்டலு மாற்றா – நளிமணி
> நல்லா னினநிரை நம்மூர்ப் புறங்கான
> மெல்லாம் பெறுக விடம்.

> [3]கழுவொடு [4]பாகர் கலங்காமல் யாத்துத்
> தொழுவிடை யாயந் தொகுமி – னெழுவொழித்தாற்
> போமே யிவையிவற்றைப் போற்றுமின் புல்லொடுநீர்
> தாமேய் புலம்போலத் தந்து.

*இவை கண்டோர் கூற்று.*

*பாதீடு - ஈத்தலும் ஈதலும் போலப் [5]பாத்தலும் பாதலும் ஒன்றாதலிற் பாதீடாயிற்று: வேந்தனேவலால் தாங்கொண்ட நிரையைப் பகுத்துக்கோடலும், மீட்டொருந் தத்தநிரையைப் பகுத்துக் கோடலும், நிரையை இழந்தோர்க்குப் பகுத்துக் கொடுத்தலும்:*

*உதாரணம் :*

> [6]ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
> புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் – விள்வாரை
> மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
> கூறிட்டார் கொண்ட நிரை. (பு வெ. 1, 14)

> யாமே பகுத்திடல் வேண்டா வினநிரை
> தாமே தமரை யறிந்தனகொ – லேமுற
> வன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப்பச்
> சென்றீண்டு மாங்கவர்பாற் சேர்ந்து.
> (பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 770)

*இவற்றுள் முன்னையது கண்டோர் கூற்று; ஏனையது மறவர் கூற்று.*

---

1. தந்துநிறை - தந்து நிறுத்தல்.
2. குளிறுதல் - ஒலித்தல். கொட்டல் - அடித்தல். நளி - செறிவு. மணி - ஆவுக்குக் கட்டும் மணி. நிரை இடம்பெறுக என இயைக்க.
3. கழு - பால்கறக்க விடாத பசுக்களுக்குக் கழுத்திலிடுவது.
4. பாகர் - இதுவும் ஆக்களின் கழுத்திற் கட்டுவதொன்று போலும். மேய்ப்போர் என்று கூறுதல் பொருந்துமோ என ஆராய்க.
5. பாத்தல் - பகுத்தல்.
6. மலைதல் - பொருதல். புள் - நிமித்தம். விள்வார் - பகைவர். கூறு - பங்கு.

*உண்டாட்டு - நிரைகொண்டார் தாங்கொண்ட நிரையைப் பாத்துத் தாங்கொண்ட மகிழ்ச்சியாற் சுற்றத்தொடு கள்ளுண்டு மகிழ்ந்து விளையாடுதலும், நிரைமீட்டார் வென்று நிரை மீட்ட கொற்றத்தான் உண்டாடுதலும்: உதாரணம்:*

[1]நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவ லிட்ட பைங்காற் பந்தர்ப்
புனறரு மிளமண னிறையப் பெய்ம்மி
னொன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வருவ மென்னைக்
குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே. (புறம். 262)

[2]பகைவர் கொண்ட படுமணி யாய
மீட்டிவட் டந்த வாட்டிறற் குரிசின்
முழவுத்துயின் மறந்த மூதூ ராங்கண்
விழவுத்தலைக் கொண்ட விளையாட் டாயத்
தூன்சுடு கொழும்புகைக் கருங்கொடி யும்பர்
மீன்சுடு புகையின் விசும்புவாய்த் தன்றே
கைவல் கம்மியர் பல்கூட் டாரமொடு
நெய்பிழி நறுவிரை நிலம்பரந் தன்றே
காவிற் காவிற் கணங்கொள் வண்டெனப்
பூவிலை மகளிர் புலம்படர்ந் தனரே
சந்தியுஞ் சதுக்கமும் பந்தர் போகிய
வாடுறு நறவின் சாடி தோறுங்
கொள்வினை மாற்றாக் கொடையொடு
கள்விலை யாட்டியுங் கைதூ வாளே

*இவை கண்டோர் கூற்று.*

*கொடை - தாங்கொண்ட நிரையை இரவலர்க்கு வரையாது கொடுத்து மனமகிழ்தலும், நிரைமீட்டோர்க்கு வென்றிப் பொருட்டு விளைந்த கொடைப்பகுதியும்: உதாரணம்:*

இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள்
[3]கொல்லன் றுடியன் கொளைபுணர் சீர்வல்ல
நல்லியாழ்ப் பாணர்த முன்றி னிறைந்தன. (சிலப். வேட்டுவவரி)

---

1. நறவு - கள். விடை - ஆட்டுக்கடா. பாசு உவல் - பசிய தழை, உழையோர் - பக்கமறவர். தன்னினும் - அவனினும். சாயல் - இளைப்பு.

2. புகைக்கருங்கொடி - கரிய புகை ஒழுங்கு. உம்பர்மீன் - விண்மீன் = நட்சத்திரம். கம்மியர் - தொழில் செய்வோர். கை தூவாள் - கையொழிவாள்.

3. கொல்லனுக்குப் படைகள் செய்து கொடுத்தமை பற்றிக் கொடுத்தனராதலின், அவன் முன்றிலும் நிறைந்தன என்றார்.

கொடைத்தொழி லெல்லாங் குறைவின்றிப் பண்டே
முடித்தன னென்றிருந்த மூத்தோன் – கொடைக்கு
[1]வரம்பில னென்றே மருண்டா னிரைகோட்
கரந்தையங் கண்ணியாற் கண்டு.

*இவை கண்டோர் கூற்று.*

*என ஈரேழ் வந்த வகையிற்றாகும் - என்று கூறப்பட்ட பதி னான்கும் மீட்டுமொருகால் விதந்த இருகூற்றை யுடைத்தாகும் வெட்சித்திணை யென்றவாறு.*

*எனவே ஒன்று இரண்டாய் இருபத்தெட்டாயிற்று.*

*இனித் துறையென முற்கூறினமையின [2]இது காரியமாக இதற்குக் காரணமாயினவெல்லாம் படையியங்கரவமெனவேபடும். அவை இருபெருவேந்தரும் போர் தொடங்குங்காற் [3]பூக்கோ ளேவி நிரை கோடல் குறிதோன் படைத்தலைவரைத் தருக வென் றலும் அவர் வருதலும், அவர் வந்துழி இன்னது செய்கவென் றலும், அவர் வேந்தர்க்கு உரைத்தலும், அவர் படையைக் கூஉய் அறிவித்தலும், படைச்செருக்கும், அதனைக் கண்டோர்கூறலும், அவர் பகைப்புலக்கேட்டிற்கு இரங்கி வருந்தலும், நாட்கோட லும், அவர் கொற்றவைக்குப் பரவுக்கடன் பூண்டலும் பிறவுமாம். களவிற் செல்வோர்க்கும் அரவங் கூறினார், அவர் பாக்கத்தே தங்கி விரிச்சி பெற்றுப் போதலின். அவற்றுட் சில வருமாறு:*

கடிமனைச் சீறூர்க் கருங்கட் கறவை
வடிநவில் வேலோன் மறுத்தோம்ப லோட்டா
[4]னடிபுனை தோலி னரண்சேர்ந்து மள்ளர்
வருகமன் வாயிற் கடை.

*இது படைத்தலைவர் படையாளரைக் கூறினது.*

வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலாற்
றாள்வ லிளையவர் தாஞ்செல்லி – னாளைக்
கனைகுர னல்லாத்தன் கன்றுள்ளப் பாலா
னனைவது போலுநம் மூர். (பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 753)

*இது படைச்செருக்கு: கண்டோர் கூறியது.*

1. கோள் - கொள்ளுதல். கண்ணி - மாலை.
2. இது என்ற சுட்டு படை இயங்கரவத்தைச் சுட்டி நின்றது.
3. பூக்கோள் ஏவி - பரிசாகக் கொடுக்கும் பொற்பூவைக் கொள்ளும்படி ஏவி.
4. அடிபுனை தோல் - செருப்பு.

[1]வந்த நிரையி னிருப்பு மணியுட
னெந்தலை நின்றலை யாந்தருது – முந்துநீ
மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக்
கொற்றவை கொற்றங் கொடு.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு 754)

*இது தெய்வத்திற்குப் [2] பராஅயது.*

*பிறவும் வருவனவெல்லாம் இதனான் அடக்குக.*

*இனிப் பாக்கத்து விரிச்சிக்குக் காரணங்களாவன: பாக்கத்துச் சென்றுழி இருப்பு வகுத்தலும், பண்டத்தொடு [3]வல்சி ஏற்றிச் சென்றோரை விடுத்தலும், விரிச்சி வேண்டாவென விலக்கிய வீரக் குறிப்பும், விரிச்சிக்கு வேண்டும் நெல்லும் மலரும் முதலியன தருதலும், பிறநிமித்தப்பகுதிகளும், அவை அறிந்தோர்க்குச் சிறப்புச் செய்தலும் பிறவுமாம். உதாரணம்:*

[4] நாளும் புள்ளுங் கேளா வூக்கமொ
டெங்கோ னேயின னாதலின் யாமத்துச்
செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
வெயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே.

(தகடூர் யாத்திரை: புறத்திரட்டு 755)

*இது விரிச்சி விலக்கிய வீரக்குறிப்பு.*

*பிறவும் வந்துழிக் காண்க.*

*அரசன் ஏவலாற் போந்தோரும் விரிச்சி கேட்டார் இன்னஞான்று வினைவாய்க்குமென்று அறிதற்கு.*

*இனி வேய்க்குக் காரணங்களாவன வேய்கூறினார்க்குச் சிறப்புச் செய்தல் போல்வன. உதாரணம் :*

[5]மாற்றருந் துப்பின் வயவேந்த ஈல்லனே
யேற்ற பெருஞ்சிறப் பின்றீதும் – வேற்றூரிற்

---

1. இருப்புமணி - இரும்பாற் செய்த மணி. நின்றலை - நின்னிடம் கொற்றவை - விளி.
2. பராவல் - நேர்தல்.
3. வல்சி - உணவு.
4. நாள் - பிறந்த நாண்மீன். அந்நாள்பற்றி வருந் தீமை முதலியன கேளாமையையே நாள் கேளான் என்றார். புள் - புதுப்புள் வருதலும் பொழுதின்றிக் கூகை குழறன் முதலியனவும். இவற்றை இவ்வதிகாரம் 91ம் சூத்திரநோக்கியறிக. மறி - ஆடு. மன்று - தொழுவம். விரிச்சி - நற்சொல்.
5. துப்பு - வலி. வேய் - ஒற்றர் ஒற்றிச்சொல்லும் குறளைச் சொல். நாம் ஈதும் என முடிக்க.

புல்வேய் குரம்பைப் புறஞ்சிறைவாய் நின்றொற்றி
நல்வே யுரைத்தார்க்கு நாம்.

என வரும்.

இனி ஏனைய ஒன்று பலவாய்த் துறைப்பாற்படுவன வந்துழிக் காண்க.

[1]இங்ஙனம் புறத்திணைக்குச் சிறுவரவிற்றாதலினன்றே 'பாடல் சான்ற புலனெறி வழக்கம்' (53) என்று அகத்திற்குக் கூறி யது. நிரைமீட்குங்கால் அறிந்தார் அறிந்தவாற்றானே விரைந்து சென்று மீட்பாராதலின் அரசனை உணர்த்தாதே மீட்டல் பெறுதும். இவற்றிற்குந் துறைப்பகுதி கொள்க. (3)

**(இவையும் வெட்சித்திணையெனல்)**

59. மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையு மத்திணைப் புறனே.

இவையும் வெட்சித்திணையா மென்கின்றது.

இ — ள்: மறங்கடைக்கூட்டிய துடிநிலை - போர்க்களத்து மறவரது மறத்தினைக் [2]கடைக்கூட்டிய துடிநிலையும், சிறந்த கொற்றவை நிலையும் - அத்தொழிற்குச் சிறந்த கொற்றவைக்குப் பரவுக்கடன் கொடுக்குங்கால் அவளது நிலைமை கூறுதலும், அத்திணைப்புறனே - அவ்விருவகை வெட்சிக்கும் புறனடையா மென்றவாறு.

[3]நித்திலஞ்செய் பட்டமு நெற்றித் திலகமு
மொத்திலங்க மெய்பூசி யோர்ந்துடீஇத் – தத்தந்
துடியரோ டூர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர்
குடிநிரை பாராட்டக் கொண்டு.

இஃது இருவகை வெட்சிக்கும் பொது: நிரைகொண்டோர்க் கும் மீட்டோர்க்குந் துடிகொட்டிச் சேறலொத்தலின்.

அருமைத் தலைத்தரு மானிரையு ளையை
யெருமைப் பலிகோ ளியைந்தா – ளரசனும்
வேந்தன்மேற் செல்வான் விறல்வஞ்சி சூடானென்
றியாந்தன்மேற் சீறாம லின்று.

---

1. இங்ஙனம் - இப்படி; மேற்கூறியபடி என்பது கருத்து.

2. கடைக்கூட்டடல் - சேர்த்தல். கடைக்கூட்டடல் - ஒருசொல். முடிவுபோக்கிய எனினுமாம்.

3. மெய்பூசல் - நீரில் மூழ்கல்; வாய்பூசல் என்பதுபோல. மெய்ப்பூசி எனவும் பாடம். அதற்கு மெய்யிற் பூசவேண்டியவற்றைப் பூசி என்க. துடியர் - துடிகொட்டுவோர்.

*இதனானே வருகின்ற வஞ்சித்திணைக்குங் கொற்றவைநிலை காரணமாயிற்று. தோற்றோர்க்குக் கொற்றம் வேண்டியும் வென்றோர்க்கும் மேற்செல்லுங்காற் கொற்றம் வேண்டியும் வழிபடு வராதலின்.*

*இனிக் கொற்றவை நிலைப்பகுதியுட் சில வருமாறு:*

**நச்சிலைவேற் காளைக்கு நாளையே கொற்றவை**
**கைச்சிலையு நல்கும்யாங் காணேங்கொள் –மிச்சில்கூர்**
**[1]வாளின்வாய்த் தீண்டாத வார்குருதி மெய்சாய்ப்பத்**
**தாளின்வாய் வீழ்த்தான் றலை.**

*இஃது உயிர்ப்பலி. இது பொதுவகையான் இருவகை வெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது.*

ஆடிப்பண் பாடி யளவின்றிக் கொற்றவை
[2]பாடினி பாடற் படுத்துவந்தா – ணாடிய
தோளுழலை யாடுவோன் றோளினுந் தூக்கமைத்த
தாளுழலை யாடுவேன் றான்.

*இது [3]குருதிப்பலி. இது பொதுவகையான் [4]இருவகை வெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது. (4)*

**(புறத்திணை வழுவேழு மிவையெனல்)**

**60.** வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளு முறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்
போந்தை வேம்பே யாரென வரூஉ
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவ ரேத்திய
வோடாக் கழனிலை யுளப்பட வோடா
வுடல்வேந் தடுக்கிய வுன்ன நிலையு
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்

---

1. வாளின் வாயால் (துர்க்கை) தாளில் தலைவீழ்த்தான் எனவும் தலை யொழிந்த மெய்குருதி சாய்ப்ப வீழ்த்தான் எனவும் இயையும். மிச்சில் - சேடம். பகைவர் தீண்டாத மெய் என ஒட்டுக.

2. பாடினி - விறலி. கொற்றவைபாடல் என இயையும். தோளுழலையாடல் - தோளை வெட்டி இரத்தங் கொடுத்துச் சுழலச் செய்தல் என்று பொருள் கொள் ளலாம். இஃது குருதிப்பலி என்று கூறலால். வேறு பொருளுளவேனுங் கொள்க.

3. குருதி - இரத்தம்.

4. இருவகை வெட்சி - நிரைகவர்தலும் மீட்டலும்.

றாவா விழுப்புகழ்ப் பூவை நிலையு
மாரம ரோட்டலு மாபெயர்த்துத் தருதலுஞ்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலுந்
தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்த்தலு
மனைக்குரி மரபினது கரந்தை யன்றியும்
வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்
றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்
வாண்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க
நாடவற் கருளிய பிள்ளை யாட்டுங்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுதல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட வெழுமூன்று துறைத்தே.

இது முன் இருபெரு வேந்தர்க்கும் போர் செயத் தொடங்குதற்குரிய பொதுநிலைமை கூறிய அதிகாரத்தானே புறத்திணைக்கெல்லாம் பொதுவாகிய வழுவேழும் உணர்த்துதல் நுதலிற்று.

இவை வேத்தியலின் வழீஇத் தன்னுறு தொழிலாய் வருதலின் வழுவாயின. இவை அகத்திற்கும் புறத்திற்கும் உரியவாய் வருவனவும் புறத்திற்கெல்லாம் பொதுவாய் வருவனவுமாதலிற் பொதுவியலுமாயின.

இ – ள்: வெறி அறி சிறப்பின் - தெய்வத்திற்குச் செய்யுங் கடன்களை அறியுஞ் சிறப்பினையும், வெவ்வாய் வேலன் - உயிர்க்கொலை கூறலின் வெவ்வாயினையும் உடையனாகிய வேலன், வெறியாட்டு அயர்ந்த காந்தளும் - தெய்வமேறியாடுதலைச் செய்த காந்தளும்:

செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின் 'வேலன்' என்றார். காந்தள் சூடியாடுதலிற் 'காந்தள்' என்றார். வேலனைக் கூறினமையிற் [1]கணிக்காரிகையுங் கொள்க. காந்தளையுடைமையானும், பனந்தோடுடைமையானும், மகளிரை வருத்துதலானும், 'வேலன் வெறியாட்டயர்ந்த' என்றதனாலும், வேலன் ஆடுதலே பெரும்பான்மை; ஒழிந்தோராடுதல் சிறுபான்மை யென்றுணர்க. உதாரணம்:

1. கணிக்காரிகை - சோதிடஞ்சொல்லும் பெண்.

[1]அமரகத்துத் தன்னை மறந்தாடி யாங்குத்
தமரகத்துத் தன்மறந் தாடுங் – குமரன் முன்
கார்க்காடு நாறுங் களனிழைத்துக் காரிகையா
ரேர்க்காடுங் காளை யிவன்.

*இது சிறப்பறியா மகளிராடுதலிற் புறனாயிற்று. வேலனாடுதல் அகத்திணைக்குச் சிறந்தது. உதாரணம் :*

அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங்
கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்ல
லிதுவென வறியா மறுவரற் பொழுதிற்
[2]படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென
முதுவாய்ப் பெண்டி ரதுவாய்க் கூறக்
களனன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா
ளார நாற வருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கி
னொளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத்
தன்னசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப
வின்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கனெ னல்லனோ யானே யெய்த்த
நோய்தணி காதலர் வரவீண்
டேதில் வேலற் [3]குலந்தமை கண்டே. **(அகம். 22)**

*'பனிவரை நிவந்த' என்னும் அகப்பாட்டும் (98) அது.*

*இவற்றுட் சேயோன் கருப்பொருளாக மைவரையுலகத்துக் கூதிர்யாமம் பொழுதாகச் சிறப்பறியும் வேலன் ஆடுதலின், வெறியாடிய காந்தள் அகத்திற்கு வந்தது. இது வேத்தியற் கூத்தன்றிக் [4]கருங்கூத்தாதலின் வழுவுமாய், அகத்திற்கும் புறத்திற்கும் பொது*

1. அமர் - போர். தமர் - சுற்றம். குமரன் - வேலன். கார்க்காடு - கூந்தல். நாறுங் காரிகையார் என்க. ஏர்க்காடல் - ஏரின் பொருட்டாடல். இவன் ஏரின் மயங்கிய மங்கையர் பொருட்டுக் காரிகையார் களனிழைத்து வெறியாடுவர் என்க.

2. படியோர் - வணங்கார், பிரதியோர் என்னும் வடமொழித் திரிவென்பர் குறிப்பாசிரியர்.எதிரானவர் என்பது கருத்து.

3. உலத்தல் - தணிதல்.

4. கருங்கூத்து - படையாளர் தம்முறு தொழிலாய் ஆடுவது. கருங்கூத்து - தண்ணியநாடகம் எனக் கலித்தொகையுரையுட் (65) கூறப்பட்டுள்ளது.

*வாதலிற் பொதுவியலுமாயிற்று. 'வேலன் றைஇய வெறியயர் களனும்' என்றாற்போலச் சிறப்பறியும் வேலன் தானேயாடுதலுஞ் சிறுபான்மை புறத்திற்குங் கொள்க.*

*மாவரும் புகழ் ஏந்தும் பெருந் தானையர் - மாமுதலியன வற்றால் தமக்கு வரும் புகழைத்தாங்கும் மூவேந்தருடைய பெரும் படையாளர், உறுபகை வேந்திடை தெரிதல் வேண்டிப் போந்தை வேம்பே ஆர் என மலைந்த பூவும் - அப்புகழ் தான் உறும் பகை யிடத்து இன்ன வேந்தன் படையாளர் வென்றார் என்பதற்கு ஓர் அறிகுறி வேண்டிப் போந்தை வேம்பு ஆரென்று கூறிச் சூடின பூவும்:*

*இதன் கருத்து: [1]ஏழகத்தகரும் யானையும் நாயும் கோழியும் [2]பூழும் [3]வட்டும் [4]வல்லுஞ் [5]சொல்லும் முதலியவற்றால் தமக்கு வரும் வெற்றிப் புகழைத் தாம் எய்துதற்குத் தத்தம் வேந்தரறி யாமற் படைத்தலைவர் தம்முண் மாறாய் வென்று ஆடுங்கால் இன்ன அரசன் படையாளர் வென்றார் என்றற்கு அவரவர் பூச்சூடி ஆடுவர் என்பதூஉம், அக்கூத்தும் வேத்தியற்கூத்தின் வழீஇயின கருங்கூத்தென்பதூஉம், அது தன்னுறு தொழிலென்பதூஉம் உணர்த்தியதாம். இதனை இங்ஙனந் தன்னுறு தொழிலாக்காமல் வேந்துறு தொழிலாக்கின் அது தும்பையாம். புகழ்ந்து கூறிற் றெனிற் பாடாண்டிணையாம். ஆசிரியர் வெறிக்கூத்திற்கும் வள்ளிக்கூத்திற்கும் இடையே இதனை வைத்தது [6]இக்கருத் தானே என்றுணர்க. உதாரணம்:*

> [7]ஏழக மேற்கொண் டிளையோ னிகல்வென்றான்
> வேழ மிவனேற வேந்துளவோ – வேழுலகுந்
> தாந்தயங்கு நாகந் தலைதயங்க வாடாமோ
> போந்தையங் கண்ணி புனைந்து.

*இது போந்தை மலைந்தாடியது.*

---

1. ஏழகத்தகர் - ஆட்டுக்கடா.
2. பூழ் - காடை.
3. வட்டு - உண்டை.
4. வல் - சூது.
5. சொல் - தருக்கம்.
6. இக்கருத்து - தன்னுறுதொழில் என்ற கருத்து.
7. ஏழகம் - ஆட்டுக்கடா. வேழம் - யானை. நாகம் - பாம்பு = சேடன். போந்தை யங்கண்ணி - பனந்தோட்டுமாலை.

[1]குறும்பூழ்ப்போர் கையெறிந்து கொற்றம் பெறுத
லிறும்பூதென் றியாமாடல் வேண்டா – செறுங்கோன்
குலமதிக்கு மாறறியிற் கொற்றவன் வேம்பு
தலைமலையற் பாலதூஉ மன்று.

*இது வேம்பு தலைமலைந்தாடியது.*

[2]ஆர்வேய்ந்த கோலத்தோ டாடுவர் பாடுவர்
போர்வேந்தர் பெற்றநாள் போன்றுவப்பர் – சீர்சால்
பறைகெழு வாரணப்போர் பண்டிகழ்ந்தோ ரின்று
சிறைகெழு வாரணப்போர் செய்து.

*இஃது ஆர்மலைந்தாடியது.*

*இவை தன்னுறு தொழிலாயவாறு காண்க.*

*வாடாவள்ளி - வாடுங்கொடியல்லாத வள்ளிக்கூத்தும், அஃது இழிந்தோர் காணுங் கூத்து. உதாரணம் :*

மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக்
கண்ட முருகனுங் கண்களித்தான் – பண்டே
குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப்
பிறமக ணோற்றாள் பெரிது.

*இது பெண்பாற்குப் பெருவரவிற்று. இதனைப் பிற்கூறினார் வெறியறி சிறப்பன்மையானும் ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொதுவாவதல்லது அகத்திணைக்கண் வந்து பொதுவாகாமை யும் பற்றி.*

*வயவர் ஏத்திய ஓடாக்கழனிலை உளப்பட - முன்பு கழல் கால்யாத்த வீரர் இளமைப்பருவத்தானொருவன் களத்திடை ஓடாது நின்றமைகண்டு அவனைப்புகழ்ந்து அவற்குக்கட்டிய கழனிலைக் கூத்து:*

*ஓடாமையாற் கட்டின கழல், ஏத்திய நிலையாற் கட்டின கழல்.*

*இது வள்ளிப்பின் வைத்தலின் இருபாலரும் ஆடுதல் கொள்க. கொடி முதலியன அவனை வியந்து கொடுத்தல் அத்துறைப்பகு தியாம். உதாரணம் :*

[3]மீளாது பெற்ற விறற்கழலோன் வாளாட்டின்
வாளாடு கூத்திவந் தாடினாள் – வாளாட்டின்
மண்ணாளு மன்னரே பெண்ணாவார் வண்மைக்குப்
பெண்ணாடின் யாதாம் பிற.

---

1. குறும்பூழ் - காடை. இறும்பூது - அதிசயம். மதிக்குமாறு - மதிக்குந்தன்மை.
2. ஆர் - ஆத்திப்பூமாலை. வாரணம் - யானை. சிறைகெழு வாரணம் - கோழி.
3. வீறல் - வலி, வீரம். வாளாட்டு - வாட்போர். வாளாடு கூத்தி - வாளைப் பிடித்தாடுங் கூத்தி. வண்மை - கொடை.

ஓடா உடல் வேந்து அடுக்கிய உன்ன நிலையும் - [1]பிறக்கடி யிடா உடன்ற வேந்தனை உன்னமரத்துடன் அடுக்கிக் கூறப் பட்ட உன்னநிலையும்:

என்றது, வேந்தன் கருத்தானன்றி அவன் மறவன் வேந்தற்கு நீ வென்றி கொடுத்தால் யான் நினக்கு இன்னது செய்வலெனப் பரவுதலும், எம் வேந்தற்கு ஆக்கம் உளதெனின் அக்கோடு [2]பொதுளுக எனவும் பகைவேந்தற்கு ஆக்கம் உளதெனில் அக் கோடு படுவதாக எனவும் நிமித்தங்கோடலும் என [3]விருவகைத் தெய்வத்தன்மை அஃதுடைமையான் 'அடுக்கிய உன்ன நிலை யும்' என்றார். உதாரணம் :

[4]துயிலின் கூந்தற் றோளிணைப் பேதை
வெயினிழ லொழிய வெஞ்சுரம் படர்ந்து
செய்பொருட் டிறவீ ராகிய நும்வயி
னெனக்கொன்று மொழியின ளாகத் தனக்கே
யருநகை தோன்றிய வழுகுரற் கிளவியள்
கலுழ்கண் கரந்தன டானே யினியே
மன்னவற் பராஅய் முன்னியது முடித்தோ
ருன்னஞ் சிறக்கு மொள்வினை நினைஇத்
தலைசாய்த் திருந்த சிலைவலம் போற்றி
வேந்துவழக் கறுத்த கான
நீந்த லொல்லுமோ பூந்தொடி யொழிந்தே.

இதனுள்,

மன்னவற் பராஅய் முன்னியது முடித்தோ
ருன்னஞ் சிறக்கு மொள்வினை நினைஇ.

என்றது வேந்தனைப் பரவுக் கடனாக அடுக்கிய உன்னநிலை.

முன்னங் குழையவுங் கோடெலா மொய்தளிரீன்
றுன்னங் குழையொலித் தோங்குவாய் – மன்னரைக்
கொன்று களங்கொள்ளுங் கொல்யானை வேந்தனை
வென்றுகளங் கொள்ளுமேல் வேந்து.

இவை மறவர் செய்தலின் தன்னுறு தொழிலாம்.

பொன்னன்ன பூவிற் சிறிய விலைப்புன்கா
லுன்னத் தகையனெங் கோ. (பதிற்றுப்பத்து 61)

என்பதும் அது.

---

1. பிறக்கு - பின்.
2. பொதுளுதல் - தழைத்தல்.
3. இருவகை - பரவலும், நிமித்தங்கோடலும்.
4. துயில் இன் கூந்தல் - துயிலுதற்கு இனியகூந்தல், திறவீர் - திறமையை யுடையீர்.

[1]இரண்டுநிலையாற் பொதுவுமாயிற்று. மன்னவன் வெற்றியே கருதாது இங்ஙனம் [2]இரு நிலைமையுங் கருதுதலின் வழுவுமாயிற்று.

[3]மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற் றாவா விழுப்புகழ்ப் பூவைநிலையு மென்றது: மாயோன் விழுப்புகழ் - மாயனுடைய காத்தற் புகழையும், மேய பெருஞ் சிறப்பிற் றாவா விழுப்புகழ் - ஏனோர்க்கும் உரியவாய் மேவிய பெரிய தலைமையிற் கெடாத படைத்தல் அழித்த லென்னும் புகழ்களையும், மன்பூவை நிலையும் - மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவைநிலையும்:

என்றது ஒன்றனை ஒன்றுபோற் கூறுந்துறை. 'மன்' எனப் பொதுப்படக் கூறியவதனான் நெடுநில மன்னர்க்கும் குறுநில மன்னர் முதலியோர்க்குங் கொள்க. 'பெருஞ்சிறப்பு' என்றதனாற் படைத்தலுங் காத்தலும் அழித்தலுமன்றி அவரவர் தாமாகக் கூறலும் முருகன் இந்திரன் முதலியோராகக் கூறலுங் கொள்க. உதாரணம் :

[4]ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனுங்
கடல்வளர் புரிவளை புரையு மேனி
யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனு
மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனு
மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென
ஞாலங் காக்குங் கால முன்பிற்
றோலா நல்லிசை நால்வ ருள்ளுங்
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்
வலியொத் தீயே வாலி யோனைப்
புகழொத் தீயே யிகழுந ரடுநனை
முருகொத் தீயே முன்னியது முடித்தலி

---

1. இரண்டுநிலை - பரவலும் நிமித்தங்கோடலும்.
2. இருநிலைமை - வெற்றியும் தோல்வியும்.
3. இவ்வுரை பிற்கால இலக்கியம்நோக்கி வலிந்து கொள்ளப்பட்டது. இளம்பூரணருரை சிறந்தது.
4. ஏறு - இடபம். எரி - அக்கினி. கணிச்சி - மழு. மணி மிடறு - நீலமணிபோலும் மிடறு. வளை - சங்கு. நாஞ்சில் - கலப்பை. நாஞ்சிற்கொடியோன் - பலதேவன். மண்ணல் - கழுவல். புள் - கருடன். பிணிமுகம் - முருகனுடைய யானை. பிணிமுகம் - மயிலுமாம். முன்பு - வலி. கூற்று - சங்காரஞ் செய்வோனாகிய அரன். வாலியோன் - பலதேவன். முருகு - முருகன்.

னாங்காங் கவரவ ரொத்தலின் யாங்கு
மரியவு முளவோ நினக்கே.

*என்பதன்கண் அங்ஙனம் உவமித்தவாறு காண்க.*

[1]குருந்த மொசித்தஞான் றுண்டா லதனைக்
கரந்த படியெமக்குக் காட்டாய் – மரம்பெறாப்
போரிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட
மார்பிற் கிடந்த மறு.

*இது சோழனை மாயோனாகக் கூறிற்று.*

[2]ஏற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனு
மாற்றலு மாள்வினையு மொத்தொன்றி னொவ்வாரே
கூற்றக் கணிச்சியோன் கண்மூன் றிரண்டேயா
மாற்றல்சால் வானவன் கண். (முத்தொள்ளாயிரம்)

*இது சேரனை அரனாகக் கூறியது.*

[3]இந்திர னென்னி னிரண்டேக ணேறூர்ந்த
வந்தரத்தா னென்னிற் பிறையில்லை – யந்தரத்துக்
கோழியா னென்னின் முகனொன்றே கோதையை
யாழியா னென்றுணரற் பாற்று.

*இது சேரனைப்[4] பலதேவராகக் கூறிற்று.*

கோவா மலையாரங் கோத்த ... (சில 17. உள்வரி)

முந்நீ ருள்புக்கு மூவாக்... (சில 17. உள்வரி)

பொன்னிமையக் கோட்டுப் புலி ... (சில 17. உள்வரி)

*என்பனவும் அவை.*

தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
... சிறுகுடி யோரே. (கலி. 52)

*இஃது உரிப்பொருட்டலைவனை முருகனாகக் கூறியது. இங்ஙனம் புறத்தும் அகத்தும் வருதலிற் பொதுவாயிற்று. இறப்ப உயர்ந்த தேவரை மக்கட்கு உவமையாகக் கூறலின் வழுவுமாயிற்று.*

*'தாவா' என்றதனானே அரசர்புகழைக் காட்டு வாழ்வோர்க்குக் கூறுதலும் அவரை அரசர்பெயராற் கூறுதலுங் கொள்க.*

---

1. குருந்து - குருந்தமரம். கரத்தல் - மறைத்தல். போர் - நெற்போர். நீர்நாடன் - சோழன்.

2. வான்வன் - சேரன்.

3. ஏறு - இடபம். கோழியான் - கோழிக்கொடியையுடைய முருகன். கோதை - சேரன். ஆழியான் - திருமால்.

4. பலதேவர் - பலராகிய தேவர்கள்.

[1]வீங்குசெலற் பரிதி வெவ்வெயி லெறித்தலி
னாங்க ணோக்கா தாங்கு நீபோ
யரசு நுகம் பூண்ட பின்னர் நின்னிலை
முரசுடை வேந்தர் முகந்திரிந் தனரே
யஃதான்,
றுவவுமதி நோக்குநர் போலப் பாணரொடு
வயிரியர் பொருநர்நின் பதிநோக் கினரே
யதனா
னதளுங் கோடு முதலிய கூட்டுண்
டிகலி னிசைமேஎந் தோன்றிப்
பலவா கியநில நீபெறு நாளே.

இது முடியுங் குடையும் ஒழித்து அரசர்க்குரியன கூறி இழித்துக் கூறியும் புகழ்மிகுத்தது.

'பல்லிதழ் மென்மலர்' என்னும் அகப்பாட்டினுள் (109)

[2]அறனில் வேந்த னாளும்
வறனுறு குன்றம் பலவிலங் கினவே.

எனக் காட்டுத்தலைவனை நாட்டுத்தலைவன் பெயராற் கூறினார்.

ஆர் அமர் ஓட்டலும் - குறுநிலமன்னருங் காட்டகத்து வாழும் மறவரும் போர்த்தொழில் வேந்தரைப் பொருது புறங் காண்டலும்: உதாரணம்:

[3]பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த வேலே யென்னை
சாந்தா ரகல முளங்கழிந் தன்றே
யுளங்கிழி சுடர்ப்படை யேந்திநம் பெருவிற
லோச்சினன் றுரந்த காலை மற்றவன்
புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே. (புறம். 308)

இது சீறூர்மன்னன் வேந்தனைப் புறங்கண்டது.

---

1. பரிதி - சூரியன். அரசுநுகம் - அரசுபாரம். வயிரியர் - கூத்தர். பொருநர் - வைகறை பாடுவோர். ஒருவர்போல வேடம்பூண்டு ஆடுவோர் எனினுமாம். அதள் - மிருகத்தோல். கூட்டுணல் - கவர்தல்.

2. இதனுள், வேந்தன் என்றது காட்டுத்தலைவனை நாட்டுத்தலைவன் பெயராற் கூறியது.

3. பொன்வார்ந்தன்ன - பொன் ஒழுகினாற்போன்ற. (பொற் கம்பி போன்ற). புரி - முறுக்கு. பச்சை - தோல். மிஞிறு - வண்டு. சீறூர்மன்னன் என்றது சிற்றூர்க்கரசன் என்றபடி; என்றது குறுநில மன்னனை. உடன்று - பகைத்து. என்னை - எமது இறைவன்; என்றது சீறூர்மன்னனை. உளங்கழி சுடர்ப் படை - மார்பினகத்துச் சென்ற வேற்படை.

[1]கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றி
னாட்செருக் கனந்தர்த் துஞ்சு வோனே!
யவனெம் மிறைவன் யாமவன் பாணர்
நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்
கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
டீவதி லாள னென்னாது நீயும்
வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே. (புறம். 316)

*இது மறவன் ஆரமரோட்டல் கூறியது.*

*இவை தன்னுறு தொழில் கூறியன.*

*ஆரமரோட்டலென்பது பொதுப்படக் கூறவே வேந்தர்க்கு உதவியாகச் செல்வோரையுங் கொள்க. உதாரணம் :*

[2]வெருக்குவிடை யன்ன வெருணோக்குக் கயந்தலைப்
புள்ளூன் றின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் வேட்டுவன் வீழ்துணை மகாஅர்
சிறியிலை யுடையின் சுரையிடை வாண்முள்
ளூக நுண்கோற் செறித்த வம்பின்
வலாஅர் வல்விற் குலாவரக் கோலிப்
பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்
புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்க்
குமிழுண் வெள்ளை பகுவாய் பெயர்த்த
வெண்காழ் தாய வண்காற் பந்த
ரிடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே. (புறம். 324)

*இது வேந்தற்குத் துணையாகச் செல்வோரைக் கூறியது.*

---

1. கள்ளின் வாழ்த்தி - கள்ளினை வாழ்த்தி, சீயா - பெருக்காத (அலகிடாத). நாட்செருக்கு அனந்தர் - விடியலில் கள்ளைக் குடித்தலான் உண்டாய மயக்கம். மயக்கத்தால் முன்றிலில் துஞ்சுவோன் என இயைக்க. காட்டு - செத்தை. (குப்பை என்பது வழக்கு). பணையம் - ஈடு. வள்ளி மருங்குல் - கொடிபோலும் இடையையுடைய விறலி. வாய்சிவந்து - வாய்சிவக்கும்படி பாடி. செறுநர் சிவந்து எனவும் பாடம்.

2. வெருக்குவிடை - காட்டுப்பூனையின் ஆண். கயந்தலை - மெல்லியதலை. அது மகரஅிறொடுமுடியும். ஊகநுண்கோல் - ஊகம்புல்லின் ஈர்க்கு. வலார் - வளார். கருப்பை - காரெலி. குமிழ் - குமிழம்பழம். வெள்ளை - வெள்ளாடு. காழ் - கொட்டை. தாய - பரந்த. பொத்திய - மூட்டிய. உலக்கும் - இறக்கும்.

[1]இணைப்படைத் தானை யரசோ டுறினுங்
கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பி
னெருத்து வலிய வெறுழ்நோக் கிரலை
மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி
யுருத்த சுடுஞ்சினத் தோடா மறவர் (கலி. 15)

எனக் கலியகத்தும் வந்தது.

'வயங்குமணி பொருத' என்னும் அகப்பாட்டினுள்,

[2]சேக்குவங் கொல்லோ நெஞ்சே சாத்தெறிந்
ததர்கூட் டுண்ணு மணங்குடைப் பகழிக்
கொடுவி லாடவர் (அகம். 167)

எனச் சாத்தெறிதலும் அது. இங்ஙனம் பொதுவாதலிற் பொது வியலாயிற்று. வேந்தரொடு பொருதலின் வழுவுமாயிற்று.

ஆபெயர்த்துத் தருதலும் - வெட்சிமறவர் கொண்ட நிரையைக் குறுநில மன்னராயினுங் காட்டகத்து வாழும் மறவ ராயினும் மீட்டுத் தருதலும்: உதாரணம்:

[3]ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா
திலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ள
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே. (புறம். 259)

இது குறுநிலமன்னர் நிரைமீட்டல் கண்டோர் கூறியது.

[4]வளரத் தொடினும் வவ்வுபு திரிந்து
விளரி யுறுதருந் தீந்தொடை நினையாத்
தளரு நெஞ்சந் தலைஇ மனையோ
ளுளருங் கூந்த னோக்கிக் களர
கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்
பசிபடு மருங்குலை கசிபு கைதொழாஅக்

---

1. இணைப்படைத்தானை - வந்து கூடுதலையுடைத்தாகிய படைகளை யுடைய படை (சேனை). கணைத்தொடை - அம்பைத் தொடுத்தல். எருத்து - கழுத்து. எறுழ் - வலி. இரலை - ஆண்மான். மறிந்து - முறுக்குண்டு.

2. சேக்குதல் - தங்குதல். சாத்து - வணிகர்திரள். அதர் - வழி. கூட்டுணும் - கவரும். அணங்குதல் - வருத்துதல்.

3. ஏறு - ஆனேறு. பெயராது (தாம்) செல்லாது (போகாது). தலைகரந்து - மறைந்து. புனைகழலோய் காணாய் செல்லல் என இயைக்க. முருகு மெய்ப் பட்ட - தெய்வம் மெய்யின் கணேறிய.

4. வளர - ஓசைமிக. தொடினும் - (நரம்பை) எறியினும். விளரி - ஒருபண். தொடை - நரம்புத்தொடை. தலைஇ - தலைப்பட்டு. களர - களர்நிலத்

காணலென் கொல்லென வினவினை வரூஉம்
பாண கேண்மதி யாணரது நிலையே
புரவுத்தொடுத் துண்குவை யாயினு மிரவெழுந்
தெவ்வங் கொள்குவை யாயினு மிரண்டுங்
கையுள போலுங் கடிதண் மையவே
முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
நெடுவெறி தழீஇய மீளி யாளர்
விடுகணை நீத்தந் துடிபுணை யாக
வென்றி தந்து கொன்றுகோள் விடுத்து
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வையெயிற் றுய்ந்த மதியின் மறவர்
கையகத் துய்ந்த கன்றுடை பல்லா
னிரையொடு வந்த வுரைய னாகி
யுரிகளை யரவின் மானத் தானே
யரிதுசெ லுலகிற் சென்றன னுடம்பே
கானச் சிற்றியாற் றருங்கரைக் காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய விலக்கம் போல
வம்பொடு துளங்கி யாண்டொழிந் தன்றே
யுயரிசை வெறுப்பத் தோன்றிப் பெயரே
மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
யிடம்பிறர் கொள்ளாச் சிறுநெறிப்
படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே. (புறம். 260)

*இதனுள், தன்னூரென்றலிற் குறுநிலமன்னன் நிரைமீட்டுப் பட்ட நிலையைப் பாணர் [1]கையற்றுக் கூறியது.*

*இனிக் கண்டோரும் மறவரும் கூத்தரும் பாணரும் விறலியருங் கூறினும், அவர்தாங் கையற்றுக் கூறினும் அத்துறைப்பாற்படும்.*

[2]பெருங்களிற் றடியிற் றோன்று மொருக
ணிரும்பறை யிரவல சேறி யாயிற்
றொழாதனை கழிதலோம்புமதி வழாஅது
வண்டுமேம் படூஉமிவ் வறநிலை யாறே
பல்லாத் திரணிரை பெயர்தரப் பெயர்தந்து

துள்ள. பசிபடுமருங்குலை - பசிதங்கிய வயிற்றை யுடையயையாய்; முற்றெச்சம். கசிபு - இரங்கி. யாணரது நிலை - (நமது) செல்வம்பட்ட நிலைமை. புரவு - (எம்மைப்) புரக்கும்படி விட்டன. (இறையிலி நிலம்). தொடுத்து - கைப்பற்றி. இரவு - இரத்தல். எவ்வம் - வருத்தம். முன்ஊர் - ஊர்முன். கோள்விடுத்து - கொண்ட நிரையை மீட்டு. உரி - தோல். கம்பம் - நடுக்கம். இலக்கம் - குறி (இலக்கு). பெயர் கல்லது என இயைக்க.

1. கையறல் - துன்பத்தாற் செயலறல்.

2. ஒருகண் இரும்பறை - பெரிய ஒரு கட்பறை தொழாதனை கழிதல் - தொழா யாய்ப்போதல். ஓம்புமதி - பாதுகாப்பாய். இவ்வறநிலையாறு - இக்கொடிய வழி. கல்லாவிளையர் - போர்த்தொழிலை இயல்பாகவுடைய வீரர்; வேட்டை யன்றிப் பிறிதுதொழில் கல்லாத எனினுமாம். கல்தொழாதனை கழிதலோம்பு மதி என முடிக்க.

கல்லா மறவர் நீங்க நீங்கான்
வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புணற் சிறையின் விலங்கியோன் கல்லே. (புறம் 263)

இது கண்டோர் கையற்றுக் கூறியது.

ஏனைய வந்துழிக் காண்க.

'விசும்புற நிவந்த' என்னும் அகப்பாட்டும் (131) அது.

இதனுள் 'மறவர் நாளா வுய்த்த' என வேந்துறு தொழில் அல்லாத வெட்சித்திணையும் பொதுவியற் கரந்தைக்கண்ணே கொள்க இஃது [1]ஏழற்கும் பொதுவாகலின்.

'தருதல்' என்ற மிகையானே நிலையல்லாத கோடலும் அத்துறைப்பாற்படும். 'வலஞ்சுரி மராஅத்து' (83) என்னுங் களிற்றியானை நிரையுள்,

[2]கறையடி மடப்பிடி கானத் தலறக்
கறிற்றுக்கன் றொழித்த வுவகையர் கலிசிறந்து
கருங்கான் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொளி வெண்ணா ரழுந்துபடப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்
நறவுநொடை நல்லிற் புதவுமுதற் பிணிக்குங்
கல்லா விளையர் பெருமகன் புல்லி.

என யானைக்கன்றைக் கவர்ந்தவாறு காண்க.

இதுவும் வேத்தியலின் வழீஇயினவாறு காண்க.

வேந்தன் சீர்சால் சிறப்பு எடுத்து உரைத்தலும் - வேந்தர்க்கு உரிய புகழ் அமைந்த தலைமைகளை ஒருவர்க்கு உரியவாக அவன்றன் படையாளரும் பிறருங் கூறலும்:

இதுவும் வழு வேந்தர்க்குரிய புகழைப் பிறர்க்குக் கூறினமையின்.

[3]அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
களிற்றொடு நெடுந்தேர் வேண்டினுங் கடல

---

1. ஏழு - ஏழு திணை.
2. கறை - உரல். களிற்றுக்கன்று - யானைக்கன்று. கலி - ஒலி. பெரும்பொளி - பெரிதாக உரித்த. நியமம் - கோயில். அங்காடியுமாம். புதவு - வாயில். முதல் - இடம். பெருமகன் - தலைவன்.
3. அத்தம் - அரியவழி; காடு. பெருவிறல் - தலைவன். நச்சி - விரும்பி. உப்பொய் - உப்பைக்கொண்டு செலுத்துகின்ற. சாகாடு - பண்டி. ஒய்தல் - செலுத்தல். எள்ளமைவின்று - இகழ்தற்பாலதன்று.

வுப்பொய் சாகாட் டுமணர் காட்டக்
கழிமுரி குன்றத் தற்றே
யெள்ளமை வின்றவ னுள்ளிய பொருளே. (புறம் 313)

*இது படையாளர் கூற்று.*

*இதற்கு முடியுடைவேந்தன் சிறப்பெடுத்துரைத்தலென்று கூறின், அது பொதுவியலிற் கூறலாகாதென்றுணர்க.*

*தலைத்தாள் [1]நெடுமொழி தன்னொடு புணர்த்தலும் - தன்னிடத் துளதாகிய போர்த்தொழிலின் முயற்சியாலே வஞ்சினங் களைத் தன்னொடு கூட்டிக் கூறலும், உதாரணம்:*

[2]தானால் விலங்காற் றனித்தாற் பிறன்வரைத்தால்
யானை யெறித லிளிவரவால் – யானை
யொருகை யுடைய தெறிவலோ யானு
மிருகை சுமந்துவாழ் வேன்

*என வரும்.*

[3]பெருநீர் மேவற் றண்ணடை யெருமை
யிருமருப் புறழு நெடுமா நெற்றின்
பைம்பய றுதிர்த்த கோதின் கோலணைக்
கன்றுடை மரையா துஞ்சுஞ் சீறூர்க்
கோளிவண் வேண்டேம் புரவே நாரரி
நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்
துறைநனி கெழீஇக் கம்பு ளீனுந்
தண்ணடை பெறுதலு முரித்தே வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே. (புறம் 297)

*மடல்வன் போந்தைபோல் நிற்பலென் நெடுமொழி தன்னொடு புணர்த்தவாறு காண்க. சீறூர் புரவாகக் கொள்ளேன் தண்ணடை கொள்வேனெனத் தன்னுறுதொழில் கூறினான்.*

1. நெடுமொழி - வஞ்சினம்.

2. தானால் விலங்கால் - தானோ விலங்கு. தனித்தால் பிறன் வரைத்தால் - இனத்தைவிட்டுத் தனிக்குமாயின் பிறன் அளவினது. பிறன் - பாகன். தனித்து - தனிமையுடைத்து என்றுமாம். ஆல்கள் அசைநிலை. வேறுகருத் துளவேனுங் கொள்க. எறிதல் - கொல்லல். இளிவரவு - இகழ்ச்சி.

3. மேவல் - பொருந்தல். தண்ணடை - மருதநிலத்தூர். நெற்று - பயற்றநெற்று. கோள் - கொள்ளுதல். புரவு - இறையிலி நிலம். கம்புள் - நீர்வாழ் பறவையுள் ஒன்று. நிற்கும் - நிற்பேம்.

[1]இதுவும் பொது: புறம்

வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்று இருவகைப் பட்ட [2]பிள்ளைநிலையும் - தன்மேல்வரும் கொடிப்படையினைத் தானேதாங்குதல் வாட்டொழிலிற் பொய்த்தலின்றி மாற்றோரைக் கொன்று தானும் வீழ்தலென இரண்டுகூறுபட்ட போரிற் சென்றறியாத மறமக்கள் தாமே செய்யுந் தறுகணாண்மையும்,

வேந்தன் குடிப்பிறந்தோரும் அவன் படைத்தலைவருமாகிய இளையர் செய்யினும் தன்னுறு தொழிலாதலிற் கரந்தையாம்; தும்பையாகா தென்றுணர்க. உதாரணம்:

[3]ஏற்றெறிந்தார் தார்தாங்கி வேல்வருகென் றேவினாள்
கூற்றினுந் தாயே கொடியளே – போர்க்களிறு
காணா விளமையாற் கண்டிவனோ நின்றிலனேன்
மாணாருள் யார்பிழைப்பார் மற்று.

இது வருதார் தாங்கல்.

[4]ஆடும் பொழுதி னறுகயிற்றுப் பாவைபோல்

வீடுஞ் சிறுவன்றாய் மெய்ம்மகிழ்ந்தாள் – வீடுவோன்
வாள்வாயின் வீழ்ந்த மறவர்தந் தாயரே
கேளா வழுதார் கிடந்து.

இது வாள்வாய்த்துக் கவிழ்தல்.

'கெடுக சிந்தை கடிதிவ டுணிவே' என்னும் (279) புறப்பாட்டும் இதன்பாற்படும்.

இவை தன்னுறு தொழில் போரிற் சென்றறியாதவன் சேறலின் வழு.

வாண்மலைந்து எழுந்தோனை மகிழ்ந்து பறைதூங்க நாடவற்கு அருளிய பிள்ளையாட்டும் - வாளாற் பொருது உயர்ந்து அரசிளங்குமரனை அந்நாட்டிலுள்ளார் கண்டுவந்து பறை

---

1. பொது என்றது புறத்திணை ஏழற்கும் பொதுவாதலை. புறம் - புறத்திணை.
2. பிள்ளை - இளையோன்.
3. ஏற்று - எதிர்ந்து. தார் - தூசிப்படை. காணா - முன் காணாத. இளமையாற் கண்டு - இளமையோடு கண்டும். நின்றிலனேல் - அஞ்சிநில்லாது எதிர்ந்தானேல். காணாக்களிறு கண்டும் இளமையால் நின்றிலனேல் என மாற்றிப் பொருள் கொள்ளினு மமையும்.
4. வீடும் - இறந்த. வீடுவோன் வாள் - இறந்தவானகிய சிறுவனது வாள். வீழ்ந்த மறவர் தாயர் கிடந்து அழுதார் என இயைக்க.

தூங்கிசையாக ஒலிக்கும்படி அவற்கு அரசுகொடுத்த பிள்ளைப் பருவத்தோனைக் கொண்டாடிய ஆட்டும்.

இதுவும் நாட்டிலுள்ளார் கொடுத்தலின் தன்னுறு தொழிலாய் வழுவுமாயிற்று. உதாரணம்:

[1]வன்கண் மறமன்னன் வாண்மலைந்து மேம்பட்ட
புன்றலை யொள்வாட் புதல்வற்கண் – டன்புற்றுக்
கான்கெழு நாடு கொடுத்தார் கருதார்க்கு
வான்கெழு நாடு வர

என வரும்.

இதனைப் [2]பிள்ளைத் தன்மையினின்று பெயர்த்தலிற் பிள்ளைப் பெயர்ச்சியு மென்ப.

அனைக்குரி மரபிற் கரந்தையும் - ஆரமரோட்டல் முதலிய ஏழுதுறைக்கும் உரிய மரபினையுடைய கரந்தையும்.

கரந்தையாவது தன்னுறு தொழிலாக நிலைமீட்டோர் பூச்சூடுதலிற் பெற்ற பெயராதலின் வெட்சித்திணைபோல ஒழுக்கமன்று.

'அந்தோ வெந்தை' என்னும் புறப்பாட்டினுள்,

நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்டி
நிரையிவட்டந்து (புறம். 261)

என்றவாறு காண்க.

அது அன்றி - அக்கரந்தையே அன்றி,

காட்சி - கல்கெழு சுரத்திற்சென்று கற்காண்டலும், அது கொணர்ந்து செய்வன செய்து [3]நாட்டிப் பின்னர்க் கற்காண்டலும் என இருவகையாம். உதாரணம்:

தாழி கவிப்பத் தவஞ்செய்வர் மண்ணாக
வாழிய நோற்றனை மால்வரை – யாழிசூழ்
மண்டல மாற்றா மறப்புகழோன் சீர்பொறிப்பக்
கண்டனெ னின் மாட்டோர் கல்.'

இது கல் ஆராய்கின்றார் காட்சி.

---

1. மன்னன் புதல்வன் என இயைக்க. வான்கெழு நாடு - விண்ணுலகு.
2. அரசு கொடுத்தலிற் பிள்ளைத்தன்மையிற் பெயர்த்தலாயிற்று.
3. நாட்டல் - நிறுத்தல்.

ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
யோங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீ
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலர் படலை சூட்டக்
கல்லா யினையே கடுமான் றோன்றல்
வானேறு புரையுநின் றாணிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க்
கடும்பகட் டியானை வேந்த
ரொடுங்கா வென்றியு நின்னொடு செலவே. (புறம். 265)

*இது 'கோவலர் *படலைசூட்ட' என்றலிற் கடவுளாகியபின் கண்டது.*

கல்லாயு மேறெதிர்ந்து காண்டற் கெளிவந்த
வல்லான் படலைக்கு வம்மினோ – வெல்புகழாற்
சீரியல் பாடல் சிதையாமல் யாம்பாடத்
தூரிய மெல்லாந் தொட

*என்பது அது.*

*[1]கால்கோள் - கல்லுறுத்து இயற்றுதற்குக் கால்கோடலும், நாட்டியபின்னர் அவன் [2]ஆண்டு வருவதற்குக் கால்கோடலும் என இருவகையாம். உதாரணம்:*

வரையறை சூழ்கிடக்கை மாத்தாட் பெருங்கல்
[3]வரையறை செய்யிய வம்மோ – வரையறை
வாரப் பெரும்புகழ் வல்வேல் விடலைக்கு
மோராற்றாற் செய்வ துடைத்து.

*இது 'வரையறை செய்யிய வம்மே' என ஒருவனைத் தெய்வ மாக நிறுத்துதற்கு இடங்கொள்ளப்பட்டமையானும் அவ்விடத் துக் [4]கால்கோடலானுங் கால்கோள்.*

[5]காப்புநூல் யாத்துக் கடிகமழ் நீராட்டிப்
பூப்பலி பெய்து புகைகொளீஇ – மீப்படர்ந்த
காளை நடுகற் சிறப்பயர்ந்து கால்கொண்மி
னாளை வரக்கடவ நாள்.

*இது நட்டுக் கால்கொண்டது.*

---

1. கால்கோள் - தொடங்கல். (சிலப்பதி. 26 - 254).
2. ஆண்டு - அக்கல்லில். வருவது - பிரதிட்டை பெறுவது.
3. வரையறை செய்தல் - உருவெழுதல். வரையறை வாரா - எல்லையில்லாத.
4. கால்கோடல் - தொடங்குதல். தொடங்கல் என்னும் பொருள் கால்கோடல் (காலங்கோடல்) என்பதன் தாற்பரியம் போலும். நச்சினார்க்கினியர் "ஒருவனைத் தெய்வமாக நிறுத்தற்கு இடங் கொள்ளப்பட்டமையானும் அவ்விடத்துக் கால்கொள்ளுதலானுங் கால்கோள்" என்றலின் இரண்டு பொருளையும் அது தருகின்றது என்பது அவர் கருத்துப் போலும்.
5. காப்பு - காவல். புகை - தூபம். கால்கோடல் - தொடங்கல். வரக்கடவநாள் - வீரன் பிரதிட்டை பெறற்குரிய நாள். - *படலை - தழை

[1]இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்பலி யூட்டி
நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய
மங்குன் மாப்புகை மறுகுடன் கமழு
மருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே. (புறம். 329)

*இதன் கண்ணும் அது வந்தவாறு காண்க.*

*நீர்ப்படை- கண்டுகால்கொண்ட கல்லினை நீர்ப்படுத்துத் தூய்மை செய்தலும், பின்னர்ப் பெயரும் பீடும் எழுதி நாட்டிய வழி நீராட்டுதலுமென இருவகையாம். உதாரணம்:*

[2]வாளமர் வீழ்ந்த மறவோன்கல் லீர்த்தொழுக்கிக்
கேளி ரடையக் கிளர்ந்தெழுந்து – நீள்விசும்பிற்
கார்ப்படுத்த வல்லேறு போலக் கழலோன்க
ணீர்ப்படுத்தார் கண்ணீரி னின்று.

*இது நீர்ப்படை.*

[3]பல்லா பெயர்த்து நல்வழிப் படர்ந்தோன்
கல்சொரிந் தாட்டிய நீரே தொல்லை
வான்வழங்கு நீரினுந் தூய்தே யதனாற்
கண்ணீ ரருவியுங் கழீ இத்
தெண்ணீ ராடுமின் றீர்த்தமா மதுவே.

*இது நாட்டி நீராட்டியது.*

*நடுதல் - கல்லினை நடுதலும், அக் கல்லின்கண் மறவனை நடுதலு மென இருவகையாம். உதாரணம்:*

[4]சீர்த்த துகளிற்றாய்த் தெய்வச் சிறப்பெய்த
நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப் – போர்க்களத்து
மன்னட்ட வென்றி மறவோன் பெயர்பொறித்துக்
கன்னட்டார் கல்சூழ் கடத்து.

*இது கல் நாட்டியது.*

---

1. நெய்ந்நறை - நெய்யாலிட்ட நறும்புகை (தூபம்). முனை இருக்கைத்து - முதன்மை பொருந்திய இருப்பிடத்தையுடையது. மங்குல் - மேகம். ஊர் அரவுறைபுற்றத்தற்று எனமுடிக்க. புற்றம் - புற்று.
2. ஈர்த்து - இழுத்து. கேளிர் - உறவினர். அடைய - சேர. கார்ப்படுத்த வல்லேறு - மேகத்திலுண்டாக்கிய இடியேறு. கண்ணீரின் - கண்ணீரோடு.
3. நல்வழி - நற்கதி. அது - அந்நீர்.
4. சீர்த்ததுகள் - மணப்பொடி; திருநீறுமாம். நிலை - இடம். கடம் - காடு. கடந்து நட்டார் என முடிக்க.

[1]கோள்வாய்த்த சீயம்போற் கொற்றவர்தம் மாவெறிந்து
வாள்வாய்த்து வீழ்ந்த மறவேலோய் – நாள்வாய்த்
திடைகொள லின்றி யெழுத்துடைக் கல்வாய்
மடைகொளல் வேண்டு மகிழ்ந்து.

*இது மறவனை [2] நாட்டியது.*

*சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை - அவன் செய்த புகழைத் தகும்படி பொறித்தலும், அக்கல்லைத் தெய்வமாக்கி அதற்குப் பெருஞ் சிறப்புக்களைப் படைத்தலுமென இருவகையாம். உதாரணம்:*

[3]கைவினை மாக்கள் கலுழக்க ணோக்கிழந்து
செய்வினை வாய்ப்பவே செய்தமைத்தார் – மொய்போர்
மறவர் பிணம்பிறக்கி வாள்வாய்த்து வீழ்ந்தோன்
பிறபெயர்சூழ் கன்மேற் பெரியது.

*இஃது பெயர் முதலிய பொறித்தது.*

அன்றுகொ ளாபெயர்த் தாரமரில் வீழ்ந்தோன்கற்
கின்றுகொள் பல்லா னினமெல்லாங் – குன்றாமற்
செய்ம்மினோ சீர்ப்பச் சிறப்பாகத் தீபங்கள்
வைம்மினோ [4]பீடம் வகுத்து.

*இஃது அதற்குச் சிறப்புப் படைத்தது.*

*வாழ்த்தல் - கால்கொள்ளுங்கால் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்து வாழ்த்தலும், பின்னர் நடப்பட்ட கல்வினைத் தெய்வ மாக்கி வாழ்த்தலுமென இருவகையாம்; உதாரணம்:*

ஆவாழ் குழுக்கன்றுய் வித்துக் களத்தவிந்த
நீ வாழ வாழிய நின்னடுக – லோவாத
விற்கோட்ட நீண்டதோள் வேந்தன் புலிபொறித்த
பொற்கோட் டிமயமே போன்று.

*இது கல்வாழ்த்து.*

*'பெருங்களிற்றடியில்' என்னும் (263)* புறப்பாட்டில் *'தொழா தனை கழித லோம்புமதி' என வாழ்த்தியவாறு காண்க.*

*என்றிரு மூன்றுவகையிற் கல்லோடு புணர - என்று முன்னர்க் கூறப்பட்ட அறுவகை இலக்கணத்தையுடைய கல்லொடு பின் னரும் அறுவகை இலக்கணத்தையுடைய கற்கூட, சொல்லப்*

---

1. கோள் - கொலை. மா - குதிரை. இடைகொளல் - தடை கொளல்.
2. நாட்டடல் - பிரதிட்டை செய்தல்.
3. கைவினைமாக்கள் - எழுதுங் கைத்தொழின்மாக்கள் = சிற்பர். கலுழ - கலங்க. வீந்தோன் பெயர் என்க. பிற - அசைநிலை.
4. பீடம் - ஆசனம்.

பட்ட இக் கூறப்பட்ட பொதுவியல், எழுமூன்று துறைத்து - இருபத்தொரு துறையினையுடைத்து என்றவாறு.

ஆரமரோட்டல் முதலிய எழுதுறைக்குரிய மரபினையுடைய கரந்தையும், அக்கரந்தையேயன்றி முற்கூறிய கல்லோடே பிற் கூறிய கல்லுங்கூடக் காந்தளும் பூவும் வள்ளியும் கழனிலையும் உன்ன நிலையும் பூவை நிலையும் உளப்பட இச் சொல்லப்பட்ட பொதுவியல் இருபத்தொரு துறையினையுடைத்தெனக் கூட்டுக.

[1]மாயோ னிறம்போலும் பூவைப் பூநிற [2]மென்று பொருவுதல் பூவைநிலை யென்றால் ஏனையோர் நிறத்தொடு பொருந்தும் பூக்களையும் பொருவுதல் கூறல் வேண்டும்; ஆசிரியர் அவை கூறாமையின் அது புலனெறி வழக்கமன்மை யுணர்க.

இதனுட் கரந்தைப்பகுதி ஏழும் வேறு கூறினார், காட்ட கத்து மறவர்க்குங் குறுநிலமன்னர்க்கும் அரசன் படையாளர் தாமே செய்தற்கும் உரிமையின். கற்பகுதி வேத்தியற் புறத் திணைக்கும் பொதுவாகலின் வேறு கூறினார். ஏனைய அகத்திற் கும் புறத்திற்கும் பொதுவாகலின் வேறு கூறினார்.

இனித் 'துறை' யென்றதினால் ஒன்று பலவாம். கற்காணச் சேறலும் இடைப்புலத்துச் சொல்லுவனவும் கண்டுழியிரங்கு வனவும் கையறுநிலையும் பாணர் கூத்தர் முதலியோர்க் குரைப் பனவும் அவர், தமக்கு உரைப்பனவும் போல்வன கற்காண்டலின் பகுதியாய் அடங்கும்; கால்கொள்ளுங்காலத்து மாலையும் மல ரும் மதுவுஞ் சாந்தும் முதலியன கொடுத்தலும் அனையோற்கு இனையகல் தகுமென்றலும் தமர் பரிந்திரங்கலும் முதலியன கால் கோளின் பகுதியாய் அடங்கும்; நீர்ப்படுக்குங்கால் [3]ஈர்த்துக் கொண்டொழுக்கலும் ஏற்றிய [4]சகடத்தினின்று இழிந்தவழி ஆர்த்தலும் அவர் தாயங்கூறலும் முதலியன நீர்ப்படையாய் அடங்கும்; நடுதற்கண் மடையும் மலரும் மதுவும் முதலியன கொடுத்துப் பீலித் தொடையலும் மாலையும் நாற்றிப் பல்லியம்

1. இளம்பூரணருரையை மறுத்த பகுதி இது.
2. பொருவுதல் - ஒப்புக்கூறுதல்.
3. ஈர்த்துக்கொண்டு ஒழுக்கல் - இழுத்துக்கொண்டுபோய் நீரிலொழுக்கல். முன் "வாளாமர்வீழ்ந்த" என்னுஞ் செய்யுளில், ஈர்த்தொழுக்கி என வருதல் காண்க. இச்செய்யுள் முன் நீர்ப்படைக் குதாரணமாக வந்துள்ளது; ஆண்டு நோக்கியறிக.
4. சகடம் - பண்டி

இயம்ப விழவுச்செய்யுஞ் சிறப்பெல்லாம் நடுதலாய் அடங்கும்; பெயரும் பீடும் எழுதுங்காலும் இப்பகுதிகள் கொள்க; நாட்டப்படுங் கல்லிற்குக் கோயிலும் மதிலும் வாயிலும் ஏனைச் சிறப்புக்களும் படைத்தல் பெரும்படைப் பகுதியாய் அடங்கும்; வாழ்த்தற்கண்ணும் 'இதுதான் நெடிதுவாழ்க' எனவும் 'இதன் கண்ணே அவனின்று நிலாவுக' எனவும் பிறவுங் கூறுவனவெல்லாம் வாழ்த்துதலாய் அடங்கும்; ஏனையவற்றிற்கும் இவ்வாறே துறைப்பகுதி கூறிக்கொள்க.

இனி, 'பரலுடை மருங்கிற் பதுக்கை' என்னும் புறப்பாட்டினுள்,

> அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
> தினிநட் டனரே கல்லும் (புறம். 264)

எனக் கல்நாட்டுதல் பெரும்படைக்குப் பின்னாகக் கூறிற்றாலெனின், நீர்ப்படுத்தபின்னர்க் கற்படுத்துப் பெயர் பொறித்து நாட்டுதல் காட்டு நாட்டோர் முறைமை யென்பது 'சீர்த்தகு சிறப்பின்' என்பதனாற் கொள்க.

> பெயரும் பீடு மெழுதி யதர்தொறும்
> பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் (அகம். 131)

என அகத்திற்கும் வருதலிற் பொதுவியலாயிற்று.

இவை ஒரு செய்யுட்கண் ஒன்றும் பலவும் வருதலும் அகத்தின்கண் வருதலுஞ் சுட்டி யொருவர் பெயர் கோடலுங் கொள்ளாமையும் உடையவென்று உணர்க.

இப்பொதுவியலின்பின் வஞ்சிவைத்தார், வஞ்சிக்கண்ணும் பொதுவியல் வருவனவுளவென்றற்கு. அது, 'வேந்துவினை முடித்தனன்' என்னும் (104) அகப்பாட்டினுட் சுட்டி ஒருவர் பெயர் கூறா வஞ்சி பொதுவியலாய் வந்தவாறு காண்க. (5)

**(வஞ்சி இன்னதன் புறமெனல்)**

**61. வஞ்சி தானே முல்லையது புறனே.**

இது, தம்முள் மாறுபாடு கருதி வெட்சித்திணையை நிகழ்த்திய இருபெரு வேந்தருள் தோற்றோனொருவன் ஒருவன் மேற்செல்லும் வஞ்சித்திணை அகத்திணையுள் இன்னதற்குப் புறனாமென்கின்றது.

வஞ்சியென்றது ஒருவர்மேலொருவர் சேறலை. அதற்கு வஞ்சி சூடிச் சேறலும் உலகியல்.

*இ – ள்: வஞ்சிதானே - வஞ்சியெனப்பட்ட புறத்திணை, முல்லையது புறனே - முல்லையெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாமென்றவாறு.*

*ஏனை உழிஞை முதலியவற்றினின்று பிரித்தலின் ஏகாரம் பிரிநிலை. [1]பாடாண்டிணைக்கும் பிரிதலின்மையிற் [1]பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே' என்ப. ஏனைய பிரித்துக்கூறுவர்.*

*முதலெனப்பட்ட காடுறையுலகமுங் கார்காலமும் அந் நிலத்திற்கேற்ற கருப்பொருளும், அரசன் பாசறைக்கண் தலைவி யைப் பிரிந்து இருத்தலும் அவன் தலைவி அவனைப் பிரிந்து மனைவயினிருத்தலுமாகிய உரிப்பொருளும் ஒப்பச்சேறலின், வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று. வெஞ்சுடர் வெப்பம் நீங்கத் தண்பெயல் பெய்து நீரும் நிழலும் உணவும் பிறவும் உளவாகிய காட்டகத்துக் களிறுமுதலியவற்றோடு சென்றிருத்தல் வேண்டு தலின் வஞ்சிக்கும் அம்முதல் கருவுரியும் வந்தனவாம். முல்லைப் பாட்டினுள்,*

[2]கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
வீடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி (முல்லை. 24 – 28)

*என்பதனானுணர்க. (6)*

**(வஞ்சித்திணை இன்ன பொருட்டெனல்)**

**62. எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த
னஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே.**

*இது முல்லைக்குப் புறனென்ற வஞ்சித்திணை இன்ன பொருட்டென்கின்றது.*

*இ – ள்: எஞ்சா மண் நசை - இருபெருவேந்தர்க்கும் [3]இடையீடாகிய மண்ணிடத்து வேட்கையானே, அஞ்சுதகத் தலைச் சென்று - ஆண்டு வாழ்வோர்க்கு அஞ்சுதலுண்டாக அந்நாட்*

1. பாடாண்டிணை எழுதிணைக்கும் பொதுவாதலிற் பிரிதலில்லை என்றார். 80ம் சூத்திரவுரை நோக்கியறிக.
2. புறவு - காடு. சேணாறல் - தூரத்துக்குமணத்தல். எருக்கி - வெட்டி. வேடு - வேட்டுவச்சாதி. புழை - சிறுவாயில். முள் இடு புரிசை - முள்ளாலிடும் மதில். பாடி - பாசறை.
3. இடையீடு - இடையீடாயுள்ளது = தடை.

*டிடத்தே சென்று,வேந்தனை வேந்தன் அடல்குறித்தன்று - ஒரு வேந்தனை ஒரு வேந்தன் கொற்றங்கோடல் குறித்தல் மாத்திரைத்து வஞ்சித்திணை யென்றவாறு.*

*ஒருவன் மண்ணசையான் மேற்சென்றால் அவனும் அம் மண்ணழியாமற் காத்தற்கு எதிரே வருதலின் இருவர்க்கும் மண்ணசையான் மேற்சேறல் உளதாகலின் அவ்விருவரும் வஞ்சி வேந்தரவாரென்றுணர்க. எதிர்சேறல் காஞ்சி என்பாரலெனின், காஞ்சியென்பது எப்பொருட்கும் நிலையாமை கூறுதலிற் பெரிதும் ஆராய்ச்சிப்படும் [1]பொதுவியற் பொருண்மைப் பெயராற் கூறலாகாமையுணர்க. ஒருவன் மேற்சென்றுழி ஒருவன் எதிர் செல்லது தன்மதிற்புறத்து வருந்துணையும் இருப்பின் அஃது உழிஞையின் அடங்கும். அது சேரமான் செல்வுழித் தகடூரிடை அதிகமான் இருந்ததாம். இங்ஙனம் இருவரும் வஞ்சிவேந்தரெனவே மேற்கூறுந் துறை பதின் மூன்றும் இருவர்க்கும் ஒப்பக் கூறலாமென்றுணர்க.* *(7)*

***(வஞ்சி பதின்மூன்று துறைத்தெனல்)***

63. இயங்குபடை யரவ மெரிபரந் தெடுத்தல்
வயங்க லெய்திய பெருமை யானுங்
கொடுத்த லெய்திய கொடைமை யானு
மடுத்தூர்ந் தட்ட கொற்றத் தானு
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
பொருளின் றுய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
வொருவன் றாங்கிய பெருமை யானும்
பிண்ட மேய பெருஞ்சோற்று நிலையும்
வென்றோர் விளக்கமுந் தோற்றோர் தேய்வுங்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையு
மழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பிற் றுறைபதின் மூன்றே.

*இது முற்கூறிய வஞ்சித்திணை பதின்மூன்று துறைத்தென்கின்றது.*

---

1. பொதுவியற்பொருள் - எப்பொருட்கும் நிலையாமை கூறலாகிய பொது வியற்பொருள். ஆதலின் அப்பொருளை யுணர்த்தும் காஞ்சியென்னும் பெயரால் எதிர்சேறலைக் கூறலாகாமையுணர்க என்றபடி.

*இ – ள்: இயங்கு படை அரவம் - இயங்குகின்ற இருபடையெழுச்சியின் [1]ஆர்ப்பரவமும்: உதாரணம்:*

[2]விண்ணசைஇச் செல்கின்ற வேலிளையா ரார்ப்பெடுப்ப
மண்ணசைஇச் செல்கின்றான் வாள்வேந்த – னெண்ண
மொருபாற் படர்தரக்கண் டொன்னார்த முள்ள
மிருபாற் படுவ தெவன்.

(பெ. பொ விளக்கம்: புறத்திரட்டு 774)

*'சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்' என்னும் புறப்பாட்டும் (31) அது.*

[3]இறும்பூதாற் பெரிதே கொடித்தே ரண்ணல்
வடிமணி யணைத்த பணைமரு ணோன்றாட்
கடிமரத்தாற் களிறணைத்து
நெடுநீர துறைகலங்க
மூழ்த்திறுத்த வியன்றானை யொடு
புலங்கெட நெரிதரும் வரம்பில் வெள்ளம்
வாண்மதி லாக வேன்மிளை யுயர்த்து
வில்விசை யுமிழ்ந்த வைம்முள் ளம்பிற்
செவ்வா யெஃகம் வளைஇய வகழிற்
காரிடி யுருமி னுரறுபு முரசிற்
கால்வழங் காரெயில் கருதிற்
போரெதிர் வேந்த ரொரூஉப நின்னே."

(பதிற்று. 33)

*இப் பதிற்றுப்பத்தும் அது.*

[4]போர்ப்படை யார்ப்பப் பொடியா யெழுமரோ
பார்ப்புர வெண்ணான் கொல் பார்வேந்த – னூர்ப்புறத்து
நில்லாத தானை நிலனெளிய நீளிடைப்
புல்லார்மேற் செல்லும் பொழுது.

*இஃது எதிர்செல்வோன் படையரவம்.*

*எரிபரந்து எடுத்தல் - இருவகைப்பட்ட படையாளரும் இருவகைப் பகைப்புலத்துப் பரந்துசென்று எரியை எடுத்துச் சுடுதலும் :*

---

1. ஆர்ப்பரவம் - ஆர்த்தலா லுண்டாகுமொலி.
2. விண் - வீரசுவர்க்கம். ஒன்னார் - பகைவர்.
3. இறும்பூது - அதிசயம். வடிமணி - வடித்துச் செய்த மணி. பணை - முரசு. கடிமரம் - காவன்மரம். மூழ்த்து - மொய்த்து. புலம் - இடம். வரம்பில் வெள்ளம் - (வரம்பில்லாத) எல்லையில்லாத பேரணிப் பெரும்படை. மிளை - காவற்காடு, செவ்வாய் எஃகம் - (முனை முகத்திற் செல்லாத) கூர்வேற்கருவிகள். உரறல் - ஒலித்தல். எயில் - அரண். ஒருப - நீங்குப.
4. பொடி - துகள். செல்லும்பொழுது பார் பொடியாய் எழும் என்க. பார்ப்புரப்ப - பாரைப்புரப்ப. பார் - பூமி.

இவ்விரண்டற்கும் உம்மை விரிக்க. உதாரணம்:

[1]வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச் சென்றவர்
விளைவயல் கவர் பூட்டி
மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
யெல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கஞ்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட விறுக்கும் வரம்பி றானை (புறம் 16)

எனவும்,

களிறு கடை இயதாட்
கழலுரீ இய திருந்தடிக்
கணைபொருது கவிவண்கையால்
கண்ணொளிர்வரூஉங் கவின்சாபத்து (புறம். 7)

என்னும் புறப்பாட்டினுள்,

எல்லையு மிரவு மெண்ணாய் பகைவ
[2]ரூர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ள மேவலை யாகலின்

எனவும் வரும்.

இவை [3]கொற்றவள்ளைப் பொருண்மையவேனும் உட்பகுதி பலவுந் துறையாய் வருதலின் எரிபரந்தெடுத்தற்கும் உதாரண மாயின.

வயங்கலெய்திய பெருமையானும் - ஒருவர் ஒருவர்மேற் செல்லுங்காற் பிறவேந்தர் தத்தந் தானையொடு அவர்க்குத் துணையாய வழி அவர் விளக்கமுற்ற பெருமையும்: உதாரணம்:

மேற்செல்லுங் காலைத் துணைவந்த வேந்தர்தம்
பாற்செல்லச் செல்லும் பரிசினா – னாற்கடல்சூழ்
மண்மகிழுங் காட்சியான் மீன்பூத்த வானத்து
வெண்மதிபோன் மேம்பட்டான் வேந்து.

என வரும். இஃது இருவர்க்கும் பொது.

1. வினை - போர். தோல் - பரிசை. முனை - போர்முனை. கவர் பூட்டி - கொள்ளையூட்டி. கடிதுறை - காவற்பொய்கை. எல் - விளக்கம். சுடுதீ விளக்கம் - நாடுசுடு நெருப்பினது ஒளி. இது எரிபரந்தெடுத்தல்.

2. ஊர்சுடுவிளக்கம் - என்பதும் எரிபரந்தெடுத்தலாகும். அழுவிளிக் கம்பலை - அழுகின்ற கூவுதலையுடைய ஆரவாரம். மேவலை - விரும்புதலுடையை.

3. கொற்றவள்ளையாவது: தோற்றோனை விளங்கக்கூறும் வள்ளைப்பாட்டு. இது இச்சூத்திரத்துப் பின்வருகின்றது.

*கொடுத்தல் எய்திய கொடைமையானும் - மேற்செல்லும் வேந்தர் தத்தம் படையாளர்க்குப் படைக்கல முதலியனகொடுத்தலும் [1]பரிசிலர்க்கு அளித்தலும் ஆகிய கொடுத்தலைப் பொருந்திய கொடைத் தொழிலும்: உதாரணம்:*

[2]வேத்தமர் செய்தற்கு மேற்செல்வான் மீண்டுவந்
தேத்துநர்க் கீதுமென் றெண்ணுமோ – பாத்தி
யுடைக்கலி மான்றே ருடனீந்தா னீந்த
படைக்கலத்திற் சாலப் பல

*என வரும்.*

[3]சிறாஅஅர் துடியர் பாடுவன் மகாஅஅர்
தூவெள் ளறுவை மாயோற் குறுகி
யிரும்புட் பூச லோம்புமின் யானும்
விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவெ
னெம்போற் பெருவிதுப் புறுக வேந்தே
கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்றலை
மணிமருண் மாலை சூட்டி யவன்றலை
யொருகாழ் மாலை தான்மலைத் தனனே (புறம். 291)

*என்பதும் அது.*

*அடுத்து [4]ஊர்ந்து அட்ட கொற்றத்தானும் - எடுத்துச் சென்ற இருபெருவேந்தர் படையாளர் வரவறியாமல் இரவும் பகலும் பலகாலும் தாம் ஏறி அந்நாட்டைக் காவல் புரிந்தோரைக் கொன்ற கொற்றமும், உதாரணம்:*

நீணில வேந்தர் நாட்செல் விருப்பத்துத்
தோள் சுமந் திருத்த லாற்றா ராள்வினைக்
[5]கொண்டி மாக்க ளுண்டியின் முனிந்து
முனைப்புல மருங்கி னினைப்பருஞ் செய்வினை
வென்றியது முடித்தனர் மாதோ
யாங்குள கொல்லினி யூங்குப் பெறுஞ் செருவே

*என வரும்.*

---

1. பரிசிலர் - பரிசில் பெறுவோர், அவர் யாழ்ப் பாணர் முதலியோர்.
2. பாத்தி - பகுதி. "மருவின்பாத்தி" (தொல். எழுத். 172) என்பது நோக்குக. பல ஈந்தான் என முடிக்க.
3. சிறாஅஅர் - சிறுவர்களே! துடியர் - துடியர்களே! பாடுவன் மகாஅஅர் - பாடுதல் வல்ல பாண்மக்களே! புட்பூசல் - பறவைகளின் ஆரவாரம். விளரி - ஒருபண். கடிகுவென் - நீக்குவேன். விதுப்பு - நடுக்கம். கொன்னும் - ஒரு பயனின்றியும். வெய்யோன் - விரும்பினோன். மணிமருண்மாலை - பலவகை மணிமாலை. ஒருகாழ் - ஒற்றைவடம்.
4. ஊர்தல் - செல்லல்.
5. கொண்டி - கொள்ளை.

யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி
நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக்
கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர
வழல்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத்
தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின்
வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப்
பீரிவர்பு பரந்த நீரறு நிரைமுதற்
சிவந்த காந்தண் முதல்சிதை மூதிற்
புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பி
னறியா மையான் மறந்துதுப் பெதிர்ந்தநின்
பகைவர் நாடுங் கண்டுவந் திசினே
கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும்
வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு
விழவறு பறியா முழவிமிழ் மூதூர் (பதிற்று. 15)

என்னும் பதிற்றுப்பத்தும் [1]அழிவுகூறிய இடம் அப்பாற்படும்.

[2]மாராயம் பெற்ற [3]நெடுமொழியானும் - வேந்தனாற் சிறப் பெய்தியவதனால் தானேயாயினும் பிறரேயாயினுங் கூறும் மீக்கூற்றுச் சொல்லும்:

சிறப்பாவன - ஏனாதி காவிதி முதலிய பட்டங்களும் நாடும் ஊரும் முதலியனவும் பெறுதலுமாம். முற்கூறியது படை வேண் டியவாறு செய்க என்றது; இஃது அப்படைக்கு ஒருவனைத் தலை வனாக்கி அவன் கூறியவே செய்க அப்படையென்று வரையறை செய்தது. உதாரணம் :

[4]போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக்
கார்க்கடல் பெற்ற கரையன்றே – போர்க்கெல்லாந்
தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சே
ரேனாதிப் பட்டத் திவன்.

இது பிறர்கூறிய நெடுமொழி.

---

1. அழிவு கூறிய இடம் என்றது. தொல்கவினழிந்த கண்ணகன் வைப்பினையும், புல்லாள் வழங்கும் புல்லிலை வைப்பினையுமுடைய புலஞ்சிதை நாடு என்று நாட்டழிவு கூறிய இடத்தை.
2. மாராயம் - சிறப்பு.
3. நெடுமொழி - மீக்கூற்று (புகழ்ச்சி). வஞ்சினமுமாம்.
4. இவன் கரையன்றோ என இயைக்க.

[1]துடி யெறியும் புலைய
வெறிகோல் கொள்ளு மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கொண்டையின் வேல்பிறழினும்
பொலம்புனை யோடை யண்ணல் யானை
யிலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினு
மோடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளுந்
தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் மன்ற னன்று
முயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
யிம்பர் நின்றுங் காண்டிரோ வரவே. (புறம் 287)

இது தண்ணடை பெறுகின்றது. சிறிது, சுவர்க்கம் பெறுதல் நன்று என்று நெடுமொழி கூறியது. போர்க்களம்புக்கு நெடுமொழி கூறலும் ஈண்டு அடங்கும்.

பொருளின்று உய்த்த பேராண் பக்கமும் - பகைவேந்தரை யொரு பொருளாக மதியாது படையினைச் செலுத்தின [2]பேராண்மை செய்யும் பகுதியும்: உதாரணம்:

[3]மெய்ம்மலி மனத்தி னம்மெதிர் நின்றோ
னடர்வினைப் பொலிந்த சுடர்விடு பாண்டிற்
கையிகந் தமருந் தையணற் புரவித்
தளையவிழ் கண்ணி யிளையோன் சீறின்
விண்ணுயர் நெடுவரை வீழ்புயல் கடுப்பத்
தண்ணறுங் கடாஅ முமிழ்ந்த வெண்கோட்
டண்ணல் யானை யெறித லொன்றோ
மெய்ம்மலி யுவகைய னம்மருங்கு வருதல்
கடியமை கள்ளுண் கைவல் காட்சித்
துடிய னுண்க ணோக்கிச் சிறிய
கொலைமொழி மின்னுச்சிதர்ந் தனையதன்
வேறிரித் திட்டு நகுதலு நகுமே. (தகடூர் யாத்திரை)

1. எறிகோல் - குறுந்தடி. இழிசின - புலையா. கூட்டுமுதல் - நெற்கூட்டினிடம். தண்ணடை - மருதநிலத்தூர். நாடுமாம். யாவது - எத்தன்மையது. படின் - இறப்பின். உயர்நிலை யுலகம் - சுவர்க்கம்.

2. பேராண்மை - பெரிய ஆண்டகைமை.

3. எதிர்நின்றோனாகிய இளையோன் சீறின் யானை எறிதலொன்றோ நகுதலு நகும் என இயைக்க. நகுதலும் நகும் - நகுதலும் செய்யும். பாண்டில் - தேர்.

*இஃது [1]அதிகமானாற் சிறப்பெய்திய பெரும்பாக்கனை மதியாது சேரமான் முனைப்படை நின்றானைக் கண்டு அரிசில் கிழார் கூறியது.*

[2]பல்சான் றீரே பல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
வமரி னிட்ட வருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே
முரசுமுழங்க தானைநும் மரசு மோம்புமி
னொளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமி
னெனைநாட் டாங்குநும் போரே யனைநா
ளெறியா ரெறிதல் யாவண தெறிந்தோ
ரெதிர்சென் றெறிதலுஞ் செல்லா னதனா
லறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென் றிகழ்த லோம்புமி னுதுக்கா
ணிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி
வெல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் போலான்ற னிலங்கிலை வேலே. (புறம் 301)

*இதுவுமது.*

*வருவிசைப் புனலைக் கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமையானும் - தன்படை நிலையாற்றது பெயர்ந்தவழி விசையோடும் வரும் பெருநீரைக் கல்லணை தாங்கினாற்போலத் தன்மேல் வரும் படையினைத் தானே தடுத்த பெருமையும்: உதாரணம் :*

[2]கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
றார்ப்பற்றி யேர்தரு தோணோக்கித் – தார்ப்பின்னர்
ஞாட்பினுள் யானைக் கணநோக்கி யாடுப்பின்
றேர்க்குழா நோக்கித்தன் மாநோக்கி – கூர்த்த

---

1. அதிகமான் - இவன் தகடூரிலிருந்து அரசு செய்தவன் கடையெழு வள்ளலிலொருவன் அதிகமான் நெடுமானஞ்சி எனவும் படுவன். தகடூரிலிருந்து அரசு செய்தவ னென்பதை, சேரமான் செல்வுழித் தகடூரிடை அதிகமானிருந்த தாம் என்று முன் இவ்வுரையாசிரியர் கூறுதலானறிக. இவன் பெயர் அதியமான் என்று புறநானூற்றிலுள்ளது.

2. சான்றோர் - போர்வீரர். அது விளியேற்று நின்றது. “சான்றோர் மெய்ம்மறை” (பதிற்றுப் 14 - 12) என்பதனுரைநோக்கியறிக. குமரிமகளிர் கூந்தல் ஓராடவராலும் தீண்டப்படாமையின் அஃது பகைவரால் தீண்டப்படாத முள்வேலிக் குவமையாயிற்று. எனைநாள் - எத்தனைநாள். எறியார் - தன்னை எறியாதார். யாவணது - யாண்டுளது; இல்லை என்றபடி. பொருள் - காரியம். பலம் - பலராகவுள்ளேம். எல் - இரவு. ஏந்துவன் போலான் - ஏந்தான்.

3. காளை நோக்கி நோக்கி நகும் என இயைக்க. ஏர் - அழகு; எழுச்சி. ஞாட்பு - போர். கிணைவன் - துடிகொட்டுவோன்; துடி - போர்ப்பறை.

கணைவரவு நோக்கித்தன் வேனோக்கிப் பின்னைக்
கிணைவனை நோக்கி நகும்.
(தகடூர்யாத்திரை: புறத்திரட்டு 881)

இது பொன்முடியார் ஆங்கவனைக்கண்டு கூறியது.

[1]வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
வேந்துவாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மை யோனே (புறம். 330)

என்பதும் அது.

'வருகதில் வல்லே' என்னும் புறப்பாட்டும் (287) அதன் பாற்படும்.

முன்னர் மாராயம் பெற்றவனே பின்னர் இரண்டு துறையும் நிகழ்த்துவான் என்றுணர்க.

பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும் - வேந்தன் போர் தலைக்கொண்ட பிற்றைஞான்று போர்குறித்த படையாளருந் தானும் உடனுண்பான் போல்வதோர் முகமன் செய்தற்குப் [2]பிண்டித்து வைத்த உண்டியைக் கொடுத்தல்மேயின் பெருஞ் சோற்றுநிலையும்: உதாரணம்:

[3]இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினை குருகிறை கொள்ளு
மல்குறு கானலோங் கிருமண லடைகரைத்
தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல
விலங்குகதிர் முத்தமொடு வார்துகி ரெடுக்குந்
தண்கடற் படப்பை மென்பா லனவுங்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்குங்

1. முனை - சண்டை. நெரிதர - நெரிய. இறந்து - கடந்து. ஆழி - கரை. வாரி - வருவாய். புரவு - இறையிலிநிலம். சுட்டிய - குறித்த.
2. பிண்டித்தல் - குவித்து வைத்தல்.
3. இதன்பொருளைப் பதிற்றுப்பத்தில் உரைநோக்கியறிக. விரிவஞ்சி எழுதாது விட்டனம்.

குன்றுதலை மணந்த புன்புல வைப்புங்
கால மன்றியுங் கரும்பறுத் தொழியா
தரிகா லவித்துப் பல்பூ விழவிற்
றேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாய
முழவிமிழ் மூதூர் விழவுக்காணூஉப் பெயருஞ்
செழும்பல் வைப்பிற் பழனப் பாலு
மேன லுழவர் வரகுமீ திட்ட
காண்மிகு குளவிய வன்புசே ரிருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி
யரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்
டொண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்
பணைகெழு வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
கடலவுங் காட்டவு மரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்
தருந்தெறன் மரபிற் கடவுட்பேணிய
ருயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டங்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் துஉய நிறைமகி ழிரும்பலி
யெறும்பு மூசா விறும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார
வோடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
பெருஞ்சமந் ததைந்த செருப்புகன் மறவ
குருமுநில னதிர்க்கங் குரலொடு கொளைபுணர்ந்து
பெருஞ்சோ றுகுத்தற் கெறியுங்
கடுஞ்சின வேந்தேநின் றழங்குகுரன் முரசே. (பதிற்று. 30)

என வரும்.

'துறை யெனவே கள்ளும் [1]பாகும் முதலியனவும் அப்பாற்படும்.

[2]வெள்ளைவெள் யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டையென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே. (புறம். 286)

1. பாகு - வெல்லப்பாகு.

2. வெள்ளை - வெள்ளாட்டுச் சாதியிலுள்ள. வெள்ளாட்டுச் செச்சை - வெள்ளாட்டுக்கிடாய்; இதில் வெள்ளை என்பது வாளா அடையாய் நின்றது. கிடாய்போல விடாது பொரும் இளையரிருப்ப என்றபடி. போல இருப்ப என

[1]உண்டியின் முந்தா துடனுண்பான் றண்டேறன்
மண்டி வழங்கி வழீஇயதற்கோ – கொண்டி
மறவர் மறமிக் குளிர்நேர்ந்தார் மன்னர்க்
குறவிலர் கண்ணோடா தோர்ந்து

*என்பன கொள்க.*

*வென்றோர் விளக்கமும் - அங்ஙனம் பிண்டமேய இருபெரு வேந்தருள் ஒருவர் ஒருவர் [2]மிகைகண்டு அஞ்சிக் கருமச் சூழ்ச்சி யால் திறை கொடுப்ப அதனை வாங்கினார்க்கு உளதாகிய விளக் கத்தைக் கூறலும்: உதாரணம்:*

[2]அறாஅ யாண ரகன்கட் செறுவி
னருவி யாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த செழுஞ்செந் நெல்லி
னன்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தேற் றுறுகிளை மொசிந்தன துஞ்சுஞ்
செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகா அரி
னுலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே
யூரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த் தோன்ற லீயாத தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயி
லாரெயிற் றோட்டி வௌவினை யேற்றொடு
கன்றுடை யாயந் தரீஇப்புகல் சிறந்து
புலவுவி லிளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி றடா வைகற்பொழுது நினையூஉ
வான்பயம் வாழ்நர் கழுவுடலை மடங்கவப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு வற்றென
வருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பொருங்களிற் றியானையொ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூரா வணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்

---

இயைக்க. மண்டை போர்ப்பித்திலது என்றது. இவனை இயல்பா லிறவாதபடி பொருது இறக்கச் செய்தது என்றபடி. கால்கழிகட்டில் - பாடை. அறுவை - வஸ்திரம். மண்டை - கள்ளுண்ணும் பாத்திரம்.

1. உண்டி - உணவு. முந்தாது - முன்னுண்ணாது. உடன் உண்பான் - கூடவைத்து உண்பவனாகிய அரசன். தேறல் - கள். மண்டி வழங்கி - நிறையக் கொடுத்து. மண்டி - தானுண்டு எனினுமாம். வழீஇயதற்கோ - அறிவு வழுவ (மயங்க)ச் செய்ததனாற்போலும். கொண்டி - உயிர்க்கொள்ளை. மறவர் - வீரர். உறவிலராய் உயிர்நேர்ந்தார் என இயைக்க. கண்ணோடாது - இரங்காது.
2. இதன் பொருள் விரிவஞ்சி எழுதாது விடப்பட்டது. உரை நோக்கியறிக.

திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் னூழி
யுரவரு மடவரு மறிவு தெரிந் தெண்ணி
யறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே (பதிற்று. 71)

என வரும்.

இருங்கண் யானையோ டருங்கலந் தெறுத்துப்
பணிந்துகுறை மொழித லல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே. (பதிற்று)

இதுவும் அது

இவை பதிற்றுப்பத்து.

தோற்றோர் தேய்வும் - அங்ஙனந் திறை கொடுத்தோரது [1]குறைபாடு கூறுதலும்: உதாரணம்:

[2]வாஅன் மருப்பிற் களிற்றியானை நிரை
மாமலையிற் கணங்கொண்டவ
ரெடுத்தெறிந்த விறன்முரசங்
கார்மழையிற் கடிதுமுழங்கச்
சாந்துபுலர்ந்த வியன்மார்பிற்
றொடிசுடர்வரும் வலிமுன்கைப்
புண்ணுடை யெறுழ்த்தோட் புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வா
ளொடிவி றெவ்வ ரெதிர்நின் றுரைஇ
யிடுக திறையே புரவெதிர்ந் தோர்க்கென
வம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
வனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசை
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே (பதிற்று. 80)

என வரும்.

[3]குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளையும் - வேந்தனது குறையாத வெற்றிச் சிறப்பினாற் பகைவர் நாடழிதற் கிரங்கித் தோற்றோனை விளங்கக் கூறும் வள்ளைப்பாட்டும்:

வள்ளை - உரற்பாட்டு. கொற்றவள்ளை, தோற்ற கொற்றவன் கொடுக்குந் திறை என்று சொல்வாரும் உளர். உதாரணம்:

1. குறைபாடு - விளக்கக்குறைபாடு.
2. இதன்பொருள் விரிவஞ்சி விடப்பட்டது. பதிற்றுப்பத்து உரைநோக்கியறிக.
3. குன்றல் - குறைதல்.

[1]வேரறுகு பம்பிச் சுரைபரந்து வேளைபூத்
தூரறிய லாகா கிடந்தனவே – போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமா
னகையிலைவேல் காய்ந்தினார் நாடு.

(முத்தொள்ளாயிரம்: புறத்திரட்டு 798)

*அழிபடை [2]தட்டோர் [3]தழிஞ்சியொடு தொகைஇ - அங்ஙனம் வென்றுந் தோற்றும் மீண்ட வேந்தர் தம்படையாளர் முன்பு போர்செய்துழிக் கணையும் வேலும் முதலிய படைகளைத் தம்மிடத்தே தடுத்துக்கொண்டழிந்தவர்களைத் தாஞ்சென்றும் பொருள்கொடுத்தும் வினாவியுந் தழுவிக் கோடலுடனே முற் கூறியவற்றைத் தொகுத்து:*

*படைதட் டழிவோர் என்று மாறுக. தழிச்சுதல் தழிஞ்சி யாறிற்று; 'பொருகணை தழிச்சிய புண்டீர் மார்பின்' (பெரும் பொருள் விளக்கம்) என்றாற்போல. உதாரணம்:*

[4]தழிச்சிய வாட்புண்ணோர் தம்மில்லந் தோறும்
பழிச்சியசீர்ப் பாசறை வேந்தன் – விழுச்சிறப்பிற்
சொல்லிய சொல்லே மருந்தாகத் தூர்ந்தன
புல்லணலார் வெய்துயிர்க்கும் புண்

(பெரும்பொருள் விளக்கம்; புறத்திரட்டு. 793)

*என வரும்.*

[5]வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிபுறத் திட்ட மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா
யுருஞ்சேற்றுத் தெருவி னெறிதுளி விதிர்ப்பப்
புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ
வாட்டோட் கொத்த வன்கட் காளை
சுவன்மிசை யசைத்த கையன் முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப
நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரு வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே.

(நெடுநல்வாடை 176 – 188)

*இதுவுமது.*

---

1. பம்பி - நெருங்கி; பரம்பி. முசிறி - ஓரூர். நகை - ஒளி. காய்த்தினார் - கொல்லப்பட்டார். நாடு கிடந்தன என இயைக்க.
2. தட்டல் - தடுத்தல்.
3. தழிஞ்சி - தழுவுதல்.
4. தழிச்சிய - தழுவிய. பழிச்சல் - புகழ்தல். புண்தீர்ந்தன என இயைக்க.
5. வேம்பு - வேப்பமாலை. தாள் - அடி. பருமம் - பக்கரை (சேணம்). சுவல் - தோள்.

கழிபெருஞ் சிறப்பின் துறைபதின் மூன்றே - மிகப் பெருஞ் சிறப்பினை யுடையவாகிய துறை பதின்மூன்றாம் என்றவாறு.

வென்றோர் விளக்கம் முதலிய மூன்று மொழிந்தனவெல்லாம் இருவர்க்கும் பொதுவாய் வருமென்பது தோன்றக் 'கழி பெருஞ் சிறப்பு' என்றார்.

இனி 'இயங்குபடையரவம்' எனவே இயங்காத வின் [1]ஞாணொலி முதலியனவுங் கொள்க.

[2]இத்திணைக்கும் பலபொருள் ஒருங்குவந்து பல துறைப் படுதலுங் கொள்க. அவை - கொற்றவை நிலையும், குடைநாட் கோளும், வாணாட்கோளும், படையெழுச்சி கண்டோர் கூறுவனவும், பகைப் புலத்தார் இகழ்வும், இவை போல்வன பிறவும் இயங்குபடையரவமாய் அடங்கும்.

நிரைகோடற்கு ஏவிய அரசருள் நிரைகொண்டோர்க்கும் நிரைகொள்ளப்பட் டோர்க்கும் விரைந்து ஏகவேண்டுதலிற் குடை நாட்கோளும் வாணாட்கோளும் இன்றியமையாதன அன்மையின், ஈண்டுக் கூறாராயினார். அவை உழிஞைக்குக் கூறுப; அதற்கு இன்றியமையாமையின்.

இனி, துணை வந்த வேந்தருந்தாமும் பொலிவெய்திய 'பாசறை நிலை' கூறலும், [3]அவர் வேற்றுப்புலத்திறுத்தலின் ஆண்டு வாழ்வோர் பூசலிழைத்து இரிந்தோடப் புக்கிருந்த 'நல்லிசை வஞ்சி' முதலியனவும், 'வயங்கலெய்திய பெருமை'ப் பாற்படும்.

'துணைவேண்டாச் செருவென்றி' (புறம். 160) நாடகவழக்கு; துணைவேண்டுதல் உலகியல் வழக்கு. 'நீயே புறவினல்ல லன்றியும் பிறவும்' (46) என்னும் புறப்பாட்டும் 'வள்ளியோர்ப் படர்ந்து' (47) என்றும் புறப்பாட்டும் முதலியன 'துணைவஞ்சி' [4]என்பார்க்கு அவை மேற்செலவின்கண் அடங்காமையிற் பாடாண்டிணை யெனப் படுமென்றுரைக்க.

---

1. ஞாண் - நாண்.
2. இத்திணை என்றது வஞ்சித்திணையை.
3. அவர் - அத்துணை வேந்தர்.
4. என்பார் - இளம்பூரணர். மேற்செலவு - வஞ்சி.

இனி, மேற்செல்வான் மீண்டுவந்து பரிசில் தருமென்றல் வேத்தியலன்றாகலிற் பரிசிலர்க்குக் கொடுத்தலும் படைக்கல முதலியவற்றோடு கூறினார்.

இனி, [1]கடிமரந் தடிதலும் களிறும் மாவும் துறைப்படிவன வற்றைக் கோறலும் புறஞ்சேரியைச் சுடுதலும் முதலியனவும் 'அடுத்தூர்ந்தட்ட கொற்ற'த்தின் பாற்படும். அவை கருவூரிடைச் சேரமான் யானையை யெறிந்தாற் போல்வன.

இனி, புண்பட்டோரை முன்னர்ச் செய்த படைவலங்கூறி அரசராயினும் உழையராயினும் புகழ்வனபோல்வனவுந் தழிஞ் சிப் பாற்படும். இதனை 'முதுமொழிவஞ்சி' என்பர். ஆண்டுக் கொடுத்தல் முற்கூறிய கொடையாம். இத்தழிஞ்சியை,

> அழிகுநர் புறக்கொடை அயில்வா ளோச்சாக்
> கழிதறு கண்மை (பு. வெ. வஞ்சி 20)

எனின், அஃது ஒருவன்றாங்கிய பெருமைப்பாற்படுமென் றுணர்க.

இச்சூத்திரத்து 'ஆன்' எல்லாம் இடைச்சொல், [2]இது செவ்வெண்ணும்மை எண்ணினை இடையிட்டுக் கொண்டது.

இனி ஏனையவற்றிற்கும் ஆன் உருபு கொடுத்து அதற்கேற் பப் பொருள் கூறலும் ஒன்று. (8)

### (உழிஞை இன்னதன் புறமெனல்)

**64. உழிஞை தானே மருதத்துப் புறனே.**

இஃது உழிஞைத்திணைஅகத்திணையுண் மருதத்திற்குப் புறனாமென்கின்றது.

இ – ள்: உழிஞைதானே - உழிஞையென்று கூறப்பட்ட புறத்திணை, மருதத்துப் புறனே - மருதமென்று கூறப்பட்ட அகத்திணைக்குப் புறனாம் என்றவாறு.

இருபெருவேந்தர் தம்முண் மாறுகொண்டவழி எதிர் செலற்காற்றாது போய் மதிலகத் திருந்த வேந்தன் மதில் பெரும்

1. கடிமரந்தடியுமோசை (புறம் - 36)
2. தொல் - சொல். 290ம் சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியருரைத்த உரைநோக்கி யறிக.

பான்மையும் மருதத்திடத்த தாதலானும், அம்மதிலை முற்று வோனும் அந்நிலத்திருத்தலானும், ஒருவன் வாயில்வேண்டத் திறவாது அடைத்திருத்த லொப்புமையானும், உள்ளிருந்தவனும் புறப்பட விரும்புதலானும் மருதம்போல் இதற்கும் பெரும் பொழுது வரைவின்மையானும், சிறுபொழுதினும் விடியற் காலமே போர்செய்தற்குக் கால மாதலானும் உழிஞை மருதத் திற்குப் புலனாயிற்று. மருதநிலத்து மதிலாதல்,

அகநாடு புக்கவ ரருப்பம் வௌவி (முதுரைக் காஞ்சி 149)

எனப் பாட்டிற் கூறியவாற்றானும்.

பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
றுணங்குகல னாழியிற் றோன்று மோரெயின் மன்னன் (புறம். 338)

என்றதனானும்,

கொளற் கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண் (திருக்குறள்: அரண். 5)

என்றதனானு முணர்க.

மற்று எதிர்சென்றானை வஞ்சிவேந்தன் என்னுமெனின், ‘அஃது இருவருந் தத்தம் எல்லைக்கண் எதிர்சென்றிருப்ப ரென்றலின் வஞ்சியாகாதாயிற்று. (9)

**(உழிஞையின் பொது இலக்கணம் இதுவெனல்)**

65. முழுமுத லரண முற்றலுங் கோடலு
மனைநெறி மரபிற் றாகு மென்ப.

இது மேற்கூறிய உழிஞைத் திணையது பொதுவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள்: முழுமுதல் அரணம் - வேற்றுவேந்தன் குலத்துக் கெல்லாம் எஞ்சாது முதலாய் வருகின்ற முழு அரணை, முற்ற லும் கோடலும் - சென்ற வேந்தன் வளைத்தலும் இருந்த வேந்தன் கைக்கொண்டு காத்தலுமாகிய அனைநெறி மரபிற்று ஆகும் என்ப இரண்டு வழியாகிய இலக்கணத்தை உடைத்து அவ்வுழி ஞைத் திணை என்று கூறுவர் புலவர் என்றவாறு.

1. அஃது வஞ்சியாகாதாயிற்று என இயையும். எல்லை - நாட்டெல்லை.

முழு அரணாவது, மலையுங் காடும் நீருமல்லாத [1]அகநாட்டுச் செய்த அருமதில். அது வஞ்சனை பலவும் வாய்த்து, தோட்டி முண் முதலியன பதித்த காவற்காடு புறஞ்சூழ்ந்து, அதனுள்ளே [2]இடங்கர் முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்கு புறஞ்சூழ்ந்து, [3]யவனர் இயற்றிய பல [4]பொறிகளும் ஏனைய பொறிகளும் [5]பதணமும் [6]ஏப்புழை ஞாயிலும் ஏனைய பிறவும் அமைந்து, [7]எழுவுஞ்சீப்பு முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற்கோபுர மும் பிறவெந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாம்.

இனி மலையரணும் நிலவரணுஞ் சென்று சூழ்ந்து நேர்த லில்லா [8]ஆரதர் அமைந்தனவும், இடத்தியற்றிய மதில்போல [9]அடிச் சிலம்பின் அரணமை ந்தனவும், மீதிருந்து கணை சொரி யும் இடமும் பிறவெந்திரங்களும் அமைந்தனவாம். இனிக் காட்டரணும் நீரரணும் அவ்வாறே வேண்டுவனயாவும் [10]அமைந் தனவாம். இங்ஙனம் அடைத்திருத்தலும் அவனைச் சூழ்ந்தழி த்தலுங் கலியூழிதோறும் பிறந்த சிறப்பில்லா அரசியலாதலின் இவை வஞ்சமுடைத்தாயிற்று.

சிறப்புடை அரசியலாவன: மடிந்த உள்ளத்தோனையும் மகப் பெறாதோனையும் மயிர்குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோ னையும் பெண்பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்த படையெடா தோனையும் பிறவும் இத்தன்மையுடையோரையுங் கொல்லாது விடுதலுங் [11]கூறிப் பொருதலு முதலியனவாம்.

இனி 'ஆகும்' என்றதனான் எதிர்சென்ற வேந்தன் பொருது தோற்றுச் சென்று அடைத்திருத்தலும் உழிஞையாம். மற்றை வேந்தன் வளையாது மீளின் அவனடைத்தது உழிஞையாகா தென்றுணர்க. (10)

---

1. அகநாடு - மருதம்.
2. இடங்கர் - முதலை.
3. யவனர் - யவனதேசத்தார்.
4. பொறி - இயந்திரப் பொறி.
5. பதணம் - மதிலுளுயர்ந்த மேடை.
6. ஏப்புழைஞாயில் - அம்பெய்து மறையுஞ் சூட்டு.
7. எழுவுஞ் சீப்பு - எழுப்பப்படுஞ் சீப்பு = (தாழ்).
8. ஆர் அதர் - அருவழி.
9. அடிச்சிலம்பினரண் - மலையரண். வடிச்சிலம்பினரண் எனவும் பாடம்.
10. அமைந்தனவுமாம் என்றிருப்பது நலம்.
11. கூறி - வஞ்சினங் (சபதமிட்டு) கூறி.

### (உழிஞை எட்டுத் துறைத்தெனல்)

**66. அதுவே தானு மிருநால் வகைத்தே.**

இது முற்கூறிய முற்றலுங் கோடலும் [1]ஒருவன் றொழிலன் றென்பதூஉம் முற்கூறியதுபோல் ஒருதுறை இருவர்க்கு முரிய வாகாது, [2]ஒருவர்க்கு நான்கு நான்காக எட்டாமென்பதூஉங் கூறுகின்றது.

**இ – ள்:** அதுவேதானும் - அவ்வுழிஞைத் துறைதானும், இருநால்வகைத்து - மதில்முற்றிய வேந்தன்கூறு நான்கும் அகத் தோன் கூறு நான்குமென எட்டுவகைத்து என்றவாறு.

அது மேற்கூறுப. (11)

### (உழிஞையின் எட்டுத்துறையு மிவையெனல்)

**67. [3]கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமு**
**முள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்புந்**
**தொல்லெயிற் கிவர்தலுந் தோலின் பெருக்கமு**
**மகத்தோன் செல்வமு மன்றி முரணிய**
**புறத்தோ னணங்கிய பக்கமுந் திறப்பட**
**வொருதான் மண்டிய குறுமையு முடன்றோர்**
**வருபகை பேணா ராரெயி லுளப்படச்**
**சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே.**

இது முற்கூறிய நாலிரு துறைக்கும் பெயரும் முறையும் தொகையுங் கூறுகின்றது.

**இ – ள்:** கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும் - பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயுங் கொண்டான் போல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்த வெற்றியும்.

தன்னை இகழ்ந்தோரையும் தான் இகழ்ந்தோரையுங் கொள்ளாரென்ப. உதாரணம்:

**[4]மாற்றுப் புலந்தோறு மண்டில மாக்கள்செல**
**வேற்றுப் புலவேந்தர் வேல்வேந்தர்க் – கேற்ற**

1. ஒருவன் றொழில் என்பது இளம்பூரணர் கருத்து. இதுவே பொருத்தம்
2. ஒருவர்க்கு - ஒவ்வொருவர்க்கு என்றிருப்பது நலம்.
3. கொள்ளார் - கொள்ளப்படாதோர் = பகைவர்.
4. மாற்றுப்புலம் - பகைப்புலம். ஒன்னாருடையன - பகைவருடையன. அவை நாடு முதலியன. உவந்து பாண்சாதியினொலி பல்கின்று என இயைக்க.

படையொலியிற் பாணொலி பல்கின்றா லொன்னா
ருடையன தாம்பெற் றுவந்து.
(பெரும்பொருள் விளக்கம்: புறத்திரட்டு 791)

'கழிந்தது பொழிந்தென' என்னும் புறப்பாட்டினுள்,

........ ........... ........ .......... ஒன்னா
ராரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய் (புறம் 203)

என்பதும் அது.

'ஆனாவீகை யடுபோர்' (42) என்னும் புறப்பாட்டும் அது.

இராமன் இலங்கை கொள்வதன் முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது.

உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும் - அவ்வாறு குறித்த குறிப்பினை முடிக்கின்ற வேந்தனது சிறப்பினை அவன் படைத்தலைவன் முதலியோரும் வேற்றுவேந்தன்பால் தூது செல்லுவோரும் எடுத்துரைத்தலும் உதாரணம்:

[1]மழுவான் மிளைபோய் மதிலா னகழ்தூர்ந்
தெழுவாளோ னேற்றுண்ட தெல்லா – மிழுமென
மட்டவிழ் கண்ணி மறவேந்தன் சீற்றத்தீ
விட்டெரிய விட்ட மிகை
(தகடூர்யாத்திரை; புறத்திரட்டு – எயில்காத்தல்)

என வரும்.

மலையகழ்க் குவனே கடறூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற் றுவனெனத்
தான்முன்னிய துறைபோகலின் (பட்டின. 271 – 273)

என்பதும் அது, மாற்றார் மதிலும் அகழுஞ் சுட்டிக்கூறலின்.

அடுநை யாயினும் விடுநை யாயினும்
நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்ல னரஞ்செய் யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவு தொறுங்

1. மழு - கோடரி. மிளை - காவற்காடு. எழுவாள் - எழுப்படை. ஏற்றுண்ட தெல்லாம் மிகை என இயையும். ஏற்று - இரந்து. மிகை - எச்சம் = சேடம். இப்பாட்டில், 'எழுவாளோ னேற்றுண்டதெல்லாம்' என்பது 'எழுவாளா னெற்றுண்ட தெல்லாம்' என்றிருத்தல் வேண்டும். ஏற்றுணல் - அடிபடல்.

கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
வாங்கினி திருந்த வேந்தனோ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே. (புறம், 36)

*இது புறத்துழிஞையோன்கண் தூதன் அவன் சிறப்பு எடுத்துரைத்தது.*

[1]வயலைக் கொடியின் வாடிய மருங்கு
லுயவ லூர்திப் பயலைப் பார்ப்பா
னெல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
யேணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனவே. (புறம். 305)

*இது தூதருரை கேட்ட அகத்துழிஞையோன்திறங் கண்டோர் கூறியது.*

*தொல் எயிற்கு இவர்தலும் - ஒருகாலத்தும் அழிவில்லாத மதிலை இற்றைப் பகலுள் அழித்துமென்று கூறி அஃது அழித்தற்கு விருப்பஞ் செய்தலும்: உதாரணம்:*

[2]இற்றைப் பகலு ளெயிலகம் புக்கன்றிப்
பொற்றாரான் போனகங்கைக் கொள்ளானா – லெற்றாங்கொ
லாறாத வெம்பசித்தீ யாற வுயிர்பருகி
மாறா மறலி வயிறு (புறத்திரட்டு 847)

*என வரும்.*

[3]மறனுடை மறவர்க் கேறவிட னின்றி
நெய்யோ டையவி யப்பியெவ் வாயு
மெந்திரப் பறவை யியற்றின நிறீஇக்
கல்லுங் கவணுங் கடுவிசைப் பொறியும்
வில்லுங் கணையும் பலபடப் பரப்பிப்
பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலு
மென்றிவை பலவுஞ் சென்றுசென் றெறியு
முந்தை மகளிரை யியற்றிப் பின்றை
யெய்பெரும் பகழி வாயிற் றூக்கிச்
சுட்டல் போயின் றாயினும் வட்டத்
தீப்பாய் மகளிர் திகர்நலம் பேர

1. இதனுள் பார்ப்பான் என்றது தூதாகச் சென்ற பார்ப்பானை. உயவல் - வருந்தல். ஊர்தி - ஊர்ந்து செல்லுநடை. பயல் - சிறுவன். எல்லி - இரவு. சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியில் நிலத்தேவிழ இடுமரம்.
2. போனகம் - உணவு. உயிர்பருகியும் வயிறு (பசி) மாறா என இயைக்க.
3. ஐயவி - சிறுகடுகு. பொறி - இயந்திரம். புட்டில் - ஒருவகைப் பெட்டி.

நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்குந்
தாக்கருந் தானை யிரும்பொறை
பூக்கோட் டண்ணுமை கேட்டொறுங் கலுழ்ந்தே.

(தகடூர் யாத்திரை)

இப் பொன்முடியார் பாட்டும் அது.

[1]இதனாற் பூச்சூடுதல் பெற்றாம்.

தோலின் பெருக்கமும் -- அங்ஙனம் மதின்மேற்சென்றுழி மதிலகத்தோர் அப்புமாரி விலக்குதற்குக் [2]கிடுகுங் கேடகமும் மிடையக் கொண்டு சேறலும்: உதாரணம்:

[3]இருசுட ரியங்காப் பெருமூ திலங்கை
நெடுந்தோ ளிராமன் கடந்த ஞான்றை
யெண்கிடை மிடைந்த பைங்கட் சேனையிற்
பச்சை போர்த்த பல்புறத் தண்டை
யெச்சார் மருங்கினு மெயிற்புறத் திறுத்தலிற்
கடல்சூ ழரணம் போன்ற
துடல்சின வேந்தன் முற்றிய வூரே

(ஆசிரியமாலை: புறத்திரட்டு 852)

என வரும்.

நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி
யின்று நாம் வைக லிழிவாகும் – வென்றொளிரும்
[4]பாண்டி னிரைதோற் பணியார் பகையரணம்
வேண்டி லெளிதென்றான் வேந்து. (பு. வெ. உழிஞை. 12)

அரணத்தோர் [5]தத்தம் பதணத்து நிற்றலின் தோல் கூறிற்றிலர்.

இந்நான்கும் முற்றுவோர்க்கே உரியவெனக் கொள்க.

அகத்தோன் செல்வமும் - அகத்து உழிஞையோன் குறைவில்லாத பெருஞ்செல்வங் கூறுதலும்.

---

1. உதாரணச் செய்யுளில், 'பூக்கோட்டண்ணுமை கேட்டொறும்' என்று வருதலின் இதனாற் பூச்சூடுதல் பெற்றாம் என்றார்.
2. கிடுகு கேடகம் என்பன பரிசையின் பேதம், தோல் - கண்ணாடி தைத்த கிடுகுபடை என்பது, புறப்பொருள் வெண்பாமாலையுரை.
3. எண்கு - கரடி. பச்சை - தோல் = பரிசை. தண்டை - படைவகுப்பு.
4. பாண்டில் நிரைதோல் - கண்ணாடி தைத்த கிடுகுபடை. தோல் - ஆகுபெயர்.
5. பதணம் - மதிலுளுயர்ந்த மேடை.

*அவை, படை குடி கூழ் அமைச்சு நட்பும் நீர்நிலையும் [1]ஏமப் பொருண் மேம்படு பண்டங்களும் முதலியனவாம். உதாரணம்:*

பொருசின மாறாப் புலிப்போத் துறையு
மருவரை கண்டார்போ லஞ்சி – யொருவருஞ்
செல்லா மதிலகத்து வீற்றிருந்தான் றேர்வேந்த
னெல்லார்க்கு மெல்லாங் கொடுத்து

(தகடூர்யாத்திரை: புறத்திரட்டு 857)

*என வரும்.*

அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொண் முரசின் மூவிரு முற்றினு
முழவரு ழாதன நான்குபய னுடைத்தே
யொன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே
நான்கே அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளிற் கொள்ளலிர் வாளிற் றாரலன்
யானறி குவனது கொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தனும் விறலியர் பின்பட
வாடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே

(புறம். 109)

*என்னும் புறப்பாட்டும் அது.*

*[2]அன்றி முரணிய புறத்தோன் அணங்கிய பக்கமும் - மாறு பட்ட புறத்தோனை அகத்தோன் தன் செல்வத்தான் அன்றிப் போர்த்தொழிலான் வருத்திய [3]கூற்றும்: உதாரணம்:*

கலையெனப் பாய்ந்த மாவு மலையென
மயங்கம ருழந்த யானையு மியம்படச்
சிலையலைத் துய்ந்த வயவரு மென்றிவை
பலபுறங் கண்டோர் முன்னா ளினியே
யமர்புறங் கண்ட பசும்பூண் வேந்தே
மாக்களி றுதைத்த கணைசேர் பைந்தலை
மூக்கறு நுங்கிற் றூற்றயற் கிடப்பக்

---

1. ஏமப்பொருள் - இன்பப்பொருள்.
2. செல்வத்தான் அன்றி அணங்கிய பக்கமும் என மாற்றிக் கொள்ளப்பட்டது. அன்றி - பகைத்து என்றும் பொருள் கூறலாம். "அன்றினார் புரங்கள் செற்றார்" என்பது தேவாரம்.
3. கூறு - பகுதி, பக்கம்.

களையாக் கழற்காற் கருங்க ணாடவ
குருகெழு வெகுளியர் செறுத்தன ரார்ப்ப
மிளைபோ யின்று நாளை நாமே
யுருமிசை கொண்ட மயிர்க்கட்
டிருமுர சியங்க வூர்கொள் குவமே. (தகடூர்யாத்திரை)

*இது சேரமான் [1]பொன்முடியாரையும் அரிசில்கிழாரையும் நோக்கித் தன் படைபட்ட தன்மை கூறக் கேட்டோற்கு அவர் கூறியது.*

*திறப்பட ஒரு தான் மண்டிய [2]குறுமையும் - அகத்திருந் தோன் தன்னரணழிவு தோன்றிய வழிப் புறத்துப் போர்செய்யுஞ் சிறுமையும் : உதாரணம்:*

வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூடிக் காலிற்
றமியன் வந்த மூதி லாளன
னருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
வொருகை யிரும்பிணத் தெயிறு மிறையாகத்
திரிந்த வாய்வா டிருத்தாத் தனக்
கிரிந்(தே) தானை பெயர்புற நகுமே (புறம். 284)

*என வரும்.*

*உடன்றோர் வருபகை பேணார் ஆர் எயில் உளப்பட - புறத்தோன் அகத்தோன்மேல் வந்துழி அவன் பகையினைப் போற்றாது அகத்தோன் இகழ்ந்திருத்தற்கு அமைந்த மதிலரண் கூறுத லகப்பட: உதாரணம்:*

மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
தெவ்வழி யென்றி வியன்றார் மார்ப
வெவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவர்க் காணிற்
புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்
பைந்தலை யுரைத்த மைந்துமலி தடக்கை
யாண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்ட றகாது வேந்துறை யரனே. (தகடூர்யாத்திரை)

*இஃது அகத்தோன் செல்வம் போற்றுதற்கு ஏதுவாகிய முழுவரண் கூறுதலிற் [3]செல்வத்துள் அடங்காதாயிற்று.*

---

1. பொன்முடியாரும் அரிசில்கிழாரும் கடைச்சங்கப் புலவர்கள்.
2. குறுமை - சிறுமை.
3. செல்வம் என்றது 'அகத்தோன் செல்வமும்' என்று முற்கூறிய துறையை.

இது பொன்முடியார் தகடூரின் தன்மை கூறியது.

சொல்லப்பட்ட நாலிரு வகைத்தே - [1]மேலிரு நால்வகைத் தென்று சொல்லப்பட்ட இருநான்கு பகுதியதாம் உழிஞைத் திணை என்றவாறு.

முற்கூறிய தொகையேயன்றி ஈண்டுந் தொகை கூறினார், அந்நாலிரண்டுமேயன்றி அவை போல்வனவும் நாலிரண்டு துறை தோன்று மென்றற்கு. அவை புறத்து வேந்தன் தன் துணையாகிய அரசனையாயினும் தன் படைத்தலைவரையாயினும் ஏவி அகத்து வேந்தற்குத் துணையாகிய அரசரது முழு முதலரண் முற்றலும் அவன்றான் அதனைக் காவல்கோடலும் நிகழ்ந்த விடத்தும் இவ்விரு நான்கு வகையும் இருவர்க்கு முளவாதலாம்.

உதாரணம் முற்காட்டியவே; வேறுவேறு காட்டினும் அமை யும். இத்திணைக்குப் 'படையியங்கரவம்' (63) முதலியனவும் அதிகாரத்தாற் கொள்க. அது,

[2]இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து
நிலம்புடையூஉ வெழுதரும் வலம்படு குஞ்சர
மெரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல லிவுளி
கோன்முனைக் கொடியினம் விரவா வல்லோ
டுன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்விட் டனவே முரசங்கண் ணுற்றுக்
கதித்தெழு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதி னிரைஞாயிற்
கடிமிளைக் குண்டு கிடங்கின்
மீப்புடை யாரரண் காப்புடைத் தேஎ
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
யொல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றவிவண் வீங்கிய செலவே (பதிற்றுப்பத்து)

என வரும்.

இனித் தேவர்க்குரியவாக உழிஞையிற் றுறைகள் [3]பலவுங் கூறுவாருளராலெனின், அவை உலகியலாகிய அரசியலாய்

---

1. மேல் - அறுபத்தாறாஞ் சூத்திரத்துள்.

2. தொடி - வயிரம்; மருப்பிற்கிடுவது. குஞ்சரம் - யானை. இவுளி - குதிரை. வயிர் - கொம்பு. மிளை - காவற்காடு. குண்டு - ஆழம்.

3. கூறுவார் - ஐயனாரிதனார் (வெண்பாமாலை ஆசிரியர்).

எஞ்ஞான்றும் நிகழ்வின்றி ஒருகால் ஒருவர் வேண்டியவாறு செய்வனவாகலின் 'தமிழ்கூறு நல்லுலகத்'தன (தொல். பாயிரம்) அல்லவென மறுக்க. இனி முரசவுழிஞை [1]வேண்டுவாருளரெனின், முரசவஞ்சியுங் கோடல் வேண்டுமென மறுக்க.

இனி [2]ஆரெயிலுழிஞை முதலரணம் என்றதன்கண் அடங்கும்.

இனி இவற்றின் விகற்பிப்பனவெல்லாம் அத்துறைப்பாற் படுத்திக்கொள்க. (12)

**(உழிஞை வேந்த ரிருவர்க்கும் பொதுவான துறைகள் இவையெனல்)**

**68.** குடையும் வாளு நாள்கோ ளன்றி
மடையமை யேணிமிசை மயக்கமுங் கடைஇச்
சுற்றம ரொழிய வென்றுகைக் கொண்டு
முற்றிய முதிர்வு மன்றி முற்றிய
வகத்தோன் வீழ்ந்த நொச்சியு மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானு
நீர்ச்செரு வீழ்ந்த பாசியு மதாஅன்
றூர்செரு வீழ்ந்த மற்றதன் மறனு
மகமிசைக் கிவர்ந்தோன் பக்கமு மிகன்மதிற்
குடுமி கொண்ட மண்ணுமங் கலமும்
வென்ற வாளின் மண்ணோ டொன்றத்
தொகைநிலை யென்னுந் துறையொடு தொகைஇ
வகைநான் மூன்றே துறையென மொழிப.

இஃது எய்தாத தெய்துவித்தது; உழிஞைத்திணையுள் இருபெரு வேந்தர்க்கும் ஒன்றாய்ச் சென்று உரியவான துறை இதற்கு முன்னர்க் கூறாமையின்.

**இ – ள்:** குடையும் வாளும் நாள்கோள் அன்றி - தன் ஆக்கங் கருதிக் குடிபுறங்காத்து ஓம்பற்கெடுத்த குடைநாட்கொள்ளுத லும் அன்றிப் பிறன்கேடு கருதி வாணாட்கொள்ளுதலும் அன்றி, புறத்தோன் புதிதாக அகத்தே புகுதற்கு நாட்கொள்ளுமென்க,

1. வேண்டுவார் - ஐயனாரிதனார்.

2. இது கூறுவாரும் ஐயனாரிதனார்.

*தன்னாட்டினின்றும் புறப்படுதற்கு நாட்கோடல் உழிஞையெனப் படாதாகலின். அகத்தோனும் முற்றுவிடல்வேண்டி மற்றொரு வேந்தன் வந்துழித் தானும் புறத்துப் போதருதற்கு நாட்கொள் ளும். நாள்கொளலாவது [1]நாளும் ஓரையுந் தனக்கேற்பக் கொண்டு செல்வுழி அக்காலத்திற்கு ஓர் இடையூறு தோன்றிய வழித் தனக்கு [2]இன்றியமையாதனவற்றை அத்திசைநோக்கி அக் காலத்தே முன்னே செல்லவிடுதல்: உதாரணம்:*

பகலெறிப்ப தென்கொலோ பான்மதியென் றஞ்சி
யிகலரணத் துள்ளவ ரெல்லா – மகநலிய
[3]விண்டஞ்ச மென்ன விரிந்த குடைநாட்கோள்
கண்டஞ்சிச் சிம்பிளித்தார் கண்.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – எயில்கோடல்)

*இது புறத்தோன் குடைநாட்கோள்.*

குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று
நின்றுயர் வாயிற் புறநிவப்ப – [4]வொன்றார்
விளங்குருவப் பல்குடை விண்மீன்போற் றோன்றித்
துளங்கினவே தோற்றந் தொலைந்து.

(தகடூர்யாத்திரை: புறத்திரட்டு – எயில்காத்தல்)

*இஃது அகத்தோன் குடைநாட்கோள்.*

[5]தொழுது விழாக்குறைக்குத் தொல்கடவுட் பேணி
யழுது விழாக்கொள்வ ரன்னோ – முழுதளிப்போன்
வாணாட்கோள் கேட்ட மடந்தையர் தம்மகிழ்நர்
நீணாட்கோ ளென்று நினைந்து.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – எயில்கோடல்)

*இது புறத்தோன் வாணாட்கோள்.*

---

1. நாள் - நட்சத்திரம். ஓரை - இலக்கினம்.
2. இன்றியமையாதன என்றது குடை வாள் முதலியவற்றை.
3. விண்ணிடத்தைத் தனக்காக்குதல் எளிது என்னும்படி விரிந்தகுடை என்க. தஞ்சம் எளிது என்னும் பொருட்டாதலை, "தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே" என்பதனானறிக (தொல். இடை. 18) சிம்பிளித்தல் - கண்மூடல். கண்கூசலுமாம். இது சும்புளித்தல் எனவும் வழங்கும். 'சுமந்த நாகமுங் கண்சும் புளித்தவே' என்பர் கம்பரும்.
4. ஒன்றார் - பகைவர்.
5. தொழுது வீழாத குறை நீங்கப்பேணி என்க. முழுதளிப் போன் என்றது புறத்து அரண் முற்றினோனை. நினைந்து பேணி விழாக் கொள்வர் என்க.

முற்றரண மென்னு முகிலுருமுப் போற்றோன்றக்
கொற்றவன் கொற்றவா ணாட்கொண்டான் – புற்றிழிந்த
நாகக் குழாம்போ னடுங்கின வென்னாங்கொல்
வேகக் குழாக்களிற்று வேந்து.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – எயில்கோடல்)

*இஃது அகத்தோன் வாணாட்கோள்.*

*மடையமை ஏணிமிசை மயக்கமும் - மீதிடு பலகையோடும் மடுத்துச் செய்யப்பட்ட ஏணிமிசை நின்று புறத்தோரும் அகத் தோரும் போர்செய்தலும்: உதாரணம்:*

சேணுயர் ஞாயிற் றிணிதோளா னேற்றவு
மேணி தவிரப்பாய்ந் தேறவும் – [1]பாணியாப்
புள்ளிற் பரந்து புகல்வேட்டார் போர்த்தொழிலோர்
கொள்ளற் கரிய குறும்பு.

*இது புறத்தோர் ஏணிமயக்கம்.*

[2]இடையெழுவிற் போர்விலங்கும் யானையோர் போலு
மடையமை யேணி மயக்கிற் – படையமைந்த
ஞாயில் பிணம்பிறக்கித் தூர்த்தார் நகரோர்க்கு
வாயி லெவனாங்கொன் மற்று.

*இஃது அகத்தோர் ஏணிமயக்கம்.*

*இனி, இரண்டும் ஒருங்கு வருதலுங் கொள்க உதாரணம்:*

பொருவரு மூதூரிற் போர்வேட் டொருவர்க்
கொருவ ருடன்றெழுந்த காலை – யிருவரு
மண்ணொடு சார்த்தி மதில்சார்த் தியவேணி
விண்ணொடு சார்த்தி விடும்.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – எயில்கோடல்)

*[3]கடைஇச் சுற்று அமர் ஒழிய வென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வும் - புறத்தோன் தன்படையைச் செலுத்திப் புறமதிலிற் செய்யும் போரின்றாக அகத்தோன் படையைவென்று அப்புற மதிலைக் கைக்கொண்டு உண்மதிலை வளைத்த வினைமுதிர்ச்சி யும், அகத்தோன் தன்படையைச் செலுத்திப் புறமதிலிற் செய்யும் போரின்றாகப் புறத்தோன் படையைத் தள்ளி வென்று அப் புற மதிலைக் கைக்கொண்டு வளைத்த வினைமுதிர்ச்சியும்: உதாரணம்:*

1. பாணியா - தாமதியாத. குறும்பு - அரண்.
2. எழு - கணையமரம்.
3. கடைஇ - செலுத்தி. கடவல் - செலுத்தல்.

[1]கடல்பரந்து மேருச்சூழ் காலம்போற் சென்றோர்
கொடிமதில் காத்தோரைக் கொல்லக் – கடலெதிர்
தோன்றாப் புவிபோ லரண்மறவர் தொக்கடைந்தார்
மான்றேரான் மூதூர் வரைப்பு.

*இது புறத்தோன் முற்றிய முதிர்வு.*

ஊர்சூழ் புரிசை யுடன்சூழ் படைமாயக்
கார்சூழ்குன் றன்ன [2]கடைகடந்து – போர்மறவர்
மேகமே போலெயில் குழ்ந்தார் விலங்கல்போன்
றாகஞ்சேர் தோள்கொட்டி யார்த்து.

*இஃது அகத்தோன் முற்றிய முதிர்வு.*

*அன்றி முற்றிய அகத்தோன் [3]வீழ்ந்த நொச்சியும் - புறமதி லிலன்றி உண்மதிற்கட் புறத்தோனால் முற்றப்பட்ட அகத் தோன் விரும்பின மதில்காவலும், அவன் காத்தலின்றித் தான் சூழப்பட்ட இடத்திருந்த புறத்தோன் போர்செய்தலை விரும்பிய உள்ளகத்தைக் காத்தலும்:*

*நொச்சியாவது காவல்; இதற்கு நொச்சி ஆண்டுச் சூடுதலுங் கொள்க. அது மதிலைக்காத்தலும் உள்ளகத்தைக் காத்தலு மென இருவர்க்குமாயிற்று. இக்கருத்தானே [4]'நொச்சி வேலித் தித்தனுறந்தை' (அகம் 122) என்றார் சான்றோரும். உதாரணம்:*

இருகன்றி னொன்றிழந்த வீற்றாப்போற் சீறி
யொருதன் பதிசுற் றொழியப் – புரிசையின்
[5]வேற்றரணங் காத்தான் விறல்வெய்யோன் வெஞ்சினத்துக்
கூற்றரணம் புக்கதுபோற் கொன்று.

*இஃது அகத்துழிஞையோன் எயில்காத்த நொச்சி.*

தாய்வாங்கு கின்ற மகனைத் தனக்கென்று
பேய்வாங்கி யன்னதோர் பெற்றித்தே – வாய்வாங்கு
வெல்படை வேந்தன் [6]விரும்பாதா ரூர்முற்றிக்
கொல்படை வீட்டுங் குறிப்பு.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – எயில்கோடல்)

*இது புறத்தோன் [7]மனங்காத்த நொச்சி.*

---

1. சென்றோர் கொல்ல மறவர் வரைப்பின்கண் அரணுள் தொக்கடைந்தார் என இயையும். புலிபோல் எனவும் பாடம்.
2. கடை - கோபுரவாயில்.
3. வீழ்தல் - விரும்பல்.
4. நொச்சி - காவல். வேலி - மதில்.
5. வேற்றரண் என்றது உள்மதிலை. கூற்று - இயமன்.
6. விரும்பார் - பகைவர். குறிப்பு பெற்றித்து என இயையும்.
7. மனம் - போர் செய்ய விரும்பிய உள்ளம். அதனைக் காத்தலாவது அஞ்சி யொழியாது காத்தல்.

மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி புன்மர னுள்ளுஞ் சிறந்த
காத னன்மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
தொடியுணி மகளி ரல்குலுங் கிடத்திக்
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலி
னூர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே. (புறம். 272)

இது சூடின நொச்சியைப் புகழ்ந்தது.

மற்று அதன் புறத்தோன் வீழ்ந்த புதுமையானும் - இடை மதிலைக் காக்கின்ற அகத்துழிஞையோன் நின்ற இடத்தினைப் பின்னை அம்மதிலின் புறத்திருந்தோன் விரும்பிக்கொண்ட புதுக் கோளும், அங்ஙனம் புறத்தோன் கொண்ட அவ்விடத்தினைப் பின்னை யகத்தோன் தான் விரும்பிக் கொண்ட புதுக்கோளும்:

பிற்பட்ட துறைக்குப் புறத்தோன் அதனையென மாற்றிப் பொருள் கொள்க. முன்னர்ப் புறமதிலின் போர்போல இடை மதிலினும் போர் கூறினார். உதாரணம்:

வெஞ்சின வேந்த னெயில்கோள் விரும்பியக்கா
லஞ்சி யொதுங்காதார் யார்யாவர் – மஞ்சுசூழ்
வான்றோய் புரிசை பொறியு மடங்கின
[2]வான்றோ ரடக்கம்போ லாங்கு.
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – எயில்கோடல்)

இது புறத்தோன் வீழ்ந்த புதுமை

[3]தாக்கற்குப் பேருந் தகர்போன் மதிலகத்
தூக்க முடையோ ரொடுங்கியுங் – கார்க்க
ணிடிபுறப் பட்டாங் கெதிரேற்றார் மாற்றா
ரடிபிறக் கீடு மரிது.
(தகடூர்யாத்திரை: புறத்திரட்டு – எயில்காத்தல்)

இஃது அகத்தோன் வீழ்ந்த புதுமை.

நீர்ச் [4]செரு வீழ்ந்த பாசியும் - கொண்ட மதிலகத்தை விட்டுப் போகாத புறத்தோரும் அவரைக் கழியத்தாக்கல் ஆற்றாத அகத்தோரும் எயிற்புறத்து அகழின் இருகரையும் பற்றி நீரிடைப்

---

1. மணி - நீலமணி. நொச்சி ஈண்டு விளி. அல்குலுங்கிடத்தி என்றது மகளிர்க்குத் தழையுடை யாதல்பற்றி. கிழமை - உரிமை.

2. ஆன்றோர் - கல்வி ஒழுக்கங்களா னிறைந்தோர்.

3. பேர்தல் - பின்வாங்கல். தகர் - ஆட்டுக்கடா. மாற்றார் - பகைவர் அடிபிறக்கீடு - அடியைப் பின்வைத்தல்.

4. செரு - போர்.

படர்ந்த நீர்ப்பாசி போன்று அக்கிடங்கின்கட் போரை விரும் பினபாசியும்: பாசிபோல் நீங்காமல் நிற்றலிற் 'பாசி' யென்றார். உதாரணம்:

[1]பொலஞ்செய் கருவிப் பொறையுமிப் பண்ணாய்
நிலந்திடர் பட்டதின் றாயிற் – கலங்கமர்மேல்
வேத்தமர் செய்யும் விரகென்னாம் வேன்மறவர்
நீத்துநீர்ப் பாய்புலிபோ னின்று

இஃது இருவர்க்கும் ஒக்கும்.

வேறுவேறு வருமெனினுங் காண்க.

அதாஅன்று ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும் - அம் மதிற்புறத்தன்றி ஊரகத்துப் போரை விரும்பிய அப் பாசி மறனும்.

'பாசி' யென்றார், நீரிற் பாசிபோல இருவரும் ஒதுங்கியும் தூர்ந்தும் பொருதலின். உதாரணம்:

மறநாட்டுந் தங்கணவர் மைந்தறியு மாதர்
பிறநாட்டுப் பெண்டிர்க்கு நொந்தா – ரெறிதொறும்போய்
நீர்ச்செறி பாசிபோ னீங்காது தங்கோமா
னூர்ச்செரு வுற்றாரைக் கண்டு.

இது புறத்தோன் பாசிமறம்.

[2]தாந்தங் கடைதொறுஞ் சாய்ப்பவு மேல்விழுந்த
வேந்தன் படைப்பிணத்து வீழ்தலா – னாங்கு
மதுக்கமழுந் தார்மன்னற் குள்ளூர் மறுகிற்
பதுக்கையும் வேண்டாதாம் பற்று.

இஃது அகத்தோன் பாசிமறம்.

அகமிசைக்கு [3]இவர்ந்தோன் பக்கமும் - புறஞ்சேரி மதிலும் ஊரமர் மதிலும் அல்லாத கோயிற் புரிசைகளின்மேலும் ஏறி நின்று போர்செய்தற்குப் பரந்து சென்றோன் கூறுபாடும்:

---

1. பொலம் - இரும்பு. கருவிப்பொறை - படைப்பொறை. உமிப்பண்ணாய் - உமியினியல்பாகப்பெற்று. உமிப்பண்ணாய்த் திடர்பட்ட தின்றாயின் மறவர் நின்று வேந்தோடு அமர்செய்யும் விரகென்னாம் என இயைக்க.

2. பதுக்கை - திட்டை. பகைப்படையை வீரர் சாய்ப்பவும் மேல்வீழ்ந்த புறத்து வேந்தன் அப்படைப்பிணத்து வீழ்தலால். அம்மன்னற்கு அப்பிணமே திட்டையாகி அவனுக்கு நடுகல் அமைத்தற்கு வேறு திட்டை வேண்டா தாயிற்று என்பது கருத்து. பதுக்கை - திட்டை. பற்று - இடம். (புறம். 264 நோக்கியறிக) வீழ்தல் - எதிர்த்தல்; விழுதல்.

3. இவர்தல் - ஏறல்.

வாயிற் கிடங்கொடுக்கி மாற்றினார் தம்பிணத்தாற்
கோயிற் கிடங்கொடுக்கிக் கோண்மறவர் – ஞாயிற்
[1]கொடுமுடிமேற் குப்புற்றார் கோவேந்தர்க் காக
நெடுமுடிதாங் கோட னினைந்து.

*இது புறத்தோன் அகமிசைக் கிவர்தல்.*

புற்றுறை பாம்பின் விடநோக்கம் போனோக்கிக்
கொற்றுறை வாய்த்த கொலைவேலோர் – கொற்றவ
னாரெயின்மேற் றோன்றினா ரந்தரத்துக் [2]கூடாத
போரெயின்மேல் வாழவுணர் போன்று.

*இஃது அகத்தோன் அகமிசைக்கிவர்தல்.*

*இகன் [3]மதிற் குடுமி கொண்ட மண்ணு மங்கலமும் - அங்ஙனம் இகல் செய்த மதிற்கண் ஒருவன் ஒருவனைக் கொன்று அவன் முடிக்கலம் முதலியன கொண்டு, பட்ட வேந்தன் பெயரானே முடி புனைந்து நீராடும் மங்கலமும்: உதாரணம்:*

மழுவாளான் மன்னர் மருங்கறுத்த மால்போற்
பொழிலேழுங் கைக்கொண்ட போழ்தி – னெழின்முடி
சூடாச்சீர்க் கொற்றவனுஞ் சூடினான் [4]கோடியர்க்கே
கூடார்நா டெல்லாங் கொடுத்து.

*இது புறத்தோன் மண்ணு மங்கலம்.*

வென்றி பெறவந்த வேந்தை யிகன்மதில்வாய்க்
கொன்று குடுமி கொளக்கண்டு – தன்பால்
விருந்தினர் வந்தார்க்கு விண்விருந்து செய்தான்
பெருந்தகையென் றார்த்தார் பிறர்.

*இஃது அகத்தோன் மண்ணு மங்கலம்.*

*வென்றவாளின் மண்ணோடு ஒன்ற - இருபெரு வேந்தருள் ஒருவன் ஒருவனை வென்றுழி அங்ஙனம் வென்ற கொற்றவாளினைக் கொற்றவை மேனிறுத்தி நீராட்டுதலோடே கூட உதாரணம்:*

[5]செற்றவர் செங்குருதி யாடற்கு வாள்சேர்ந்த
கொற்றவை மற்றிவையுங் கொள்ளுங்கொன் – முற்றியோன்
பூவொடு சாந்தம் புகையவி நெய்ந்நறைத்
தேவொடு செய்தான் சிறப்பு.

*இது புறத்தோன் வாண்மங்கலம்.*

---

1. கொடுமுடி - சிகரம்.
2. கூடாத எயில் - ஒன்றுகூடாத மதில்; என்றது திரிபுரத்தை. இவை ஆகாயத்திற் பறந்து தனித்தனி திரிவன. போர் அவுணர் என இயைக்க.
3. மதிற்குடுமி - மதிற்சிகரம் என்பாரு முளர்.
4. கோடியர் - கூத்தர். கூடார் - பகைவர்.
5. செற்றவர் - பகைவர். இவை என்றது பின்வரும் பூ முதலியவற்றை.

[1]வருபெரு வேந்தற்கு வான்கொடுத்து மற்றை
யொருபெரு வேற்தற்கூ ரீந்தா – ளொருவன்வா
ளிவ்வுலகிற் பெற்ற விகற்கலையேற் றூர்தியா
ளவ்வுலகிற் போய்ப் பெறுங்கொ லாங்கு.

*இஃது அகத்தோன் வாண்மங்கலம்.*

*ஒன்றென முடித்தலான் இருவர் வேற்குஞ் சிறுபான்மை மண்ணுதல் கொள்க.*

[2]பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
யிரும்புற நீறு மாடிக் கலந்திடைக்
குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கு
மங்கல மகளிரொடு மாலை சூட்டி
யின்குர லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் செல்லினுஞ் செல்லு
மாஅங், கிருங்கடற் றாணை வேந்தர்
பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே. (புறம். 332)

*தொகைநிலை என்னுந் துறையொடு தொகைஇ - அவ் வாண் மங்கலம் நிகழ்ந்த பின்னர் இருவருள் ஒருவர் பரந்து பட்ட படைக்கடற்கெல்லாஞ் சிறப்புச் செய்வான் ஒருங்கு வரு கெனத் தொகுத்தல் என்னுந் துறையோடு முற்கூறியவற்றைத் தொகுத்து: உதாரணம்:*

[3]கதிர் சுருக்கி யப்புறம்போங் காய்கதிர்போல் வேந்தை
யெதிர்சுருக்கி யேந்தெயில்ப ழாக்கிப் – பதியிற்
பெயர்வான் றொகுத்த படைத்துகளாற் பின்னு
முயர்வான் குறித்த துலகு.

*இது புறத்தோன் தொகைநிலை.*

[4]தலைவன் மதில் சூழ்ந்த தார்வேந்தர்க் கொன்று
வலைவன் வலைசுருக்கி யாங்கு – நிலையிருந்த
தண்டத் தலைவர் தலைக்கூட வீற்றிருந்தா
னுண்டற்ற சோற்றா ரொழிந்து.

*இஃது அகத்தோன் தொகைநிலை.*

---

1. கலையேற்றூர்தியாள் - கொற்றவை. வாளையிடமாகப் பெற்ற கலையூர்தி யாள் என்க. கலையூர்தி - கலைமானூர்தி.
2. பெருந்தகை - தலைமை. நீறு - புழுதி. குரம்பை - சிறுகுடில். படு - மடு. அழுங்க - வருந்த. செலவு ஆனாது - செல்லுதல் தவிராது.
3. கதிர் - கிரணம். காய்கதிர் - ஞாயிறு. உயர்வான் - உயரும்படி. உலகு - பூமி.
4. வலைவன் - வலைஞன் = பரதவன். உண்டற்ற சோற்றார் ஒழிந்து - உண்ட சோற்றுக் கடன்கழிக்கப் போர்செய்து இறந்தோரொழிய. சோறு உண்டு அற்றார் என விகுதி பிரித்துக் கூட்டுக. ஒழித்து எனவும் பாடம்.

வகைநால் மூன்றே துறை என மொழிப - அங்ஙனம் ஒன்று இருவகைப்பட வந்து பன்னிரண்டேயாம் உழிஞைத் துறை என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

முற்றலையுங் கோடலையும் இருவகையென்றார். துறை யென்றதனான் அவற்றின் பகுதியாய் வருவனவும் அத்துறைப் பாற்படுத்துக. உழையரை அழைத்து நாட்கொள்க என்றலும், அவர் அரசர்க்கு உரைப்பனவுங், குடைச்சிறப்புக் கூறுவனவும் முரசு முதலியன நாட்கோடலும், பிறவும் குடைநாட்கோடலாய் அடங்கும். இது வாணாட் கோடற்கும் ஒக்கும். பொருவார்க்கும் அல்லுழிப் போவார்க்குங் குடை பொதுவாகலின் முற்கூறி மேல் வருகின்ற போர்த்தொழிற்கே சிறத்தலின் வாளினைப் பிற்கூறினார். இவை போர்த்தொழிற்கு ஏதுவாகலின் முற்கூறினார். எயிலுட் பொருதலும் புட்போல உட்பாய்தலும் ஆண்டுப் பட்டோர் [1]துறக்கம் புகுதலும் பிறவும் பாசிமறத்தின்பாற்படும். [2]ஏறுந் தோட்டியுங் கதவும் முதலியன கோடல் அகமிசைக்கு இவர்ந் தோன் பக்கத்தின் பாற்படும். [3]படிவம் முதலியன கூறல் குடுமி கொண்ட மண்ணு மங்கலத்தின் பாற்படும். புறத்தோன் இருப் பிற் றொகைநிலைப்பாற்படும். 'துறையென மொழிப' என எல்லா வற்றையுந் துறையென்று கூறுகின்றவர் தொகைநிலை யென்னுந் துறையெனத் தொகைநிலையை விதந்தோதினார், அது பலவா காது இரண்டு துறைப்பட்டு வேறுவேறு துறையாம் என்றற்கு. அது தும்பைத் தொகை நிலைபோல் இருபெருவேந் தரும் உடன்வீழ்தலுஞ் சிறுபான்மை உளதா மென்றுணர்க. எதிர் செல்லா தடைத்திருந்தோன் புறப்பட்டுப் படுதல் சிறு பான்மை யாதலின் இதனையும் வேறோர் துறையாக்கிப்பதின் மூன்றென்றா ராயினர். உதாரணம்:

> [4]அறத்துறைபோ லாரெயில் வேட்டவரசர்
> மறத்துறையு மின்னாது மன்னோ – நிறைச்சுடர்க
> ளொன்றி வரப்பகல்வா யொக்க வொறிதேய்த்தாங்
> கின்றிவர் வீழ்ந்தா ரெதிர்ந்து.

---

1. துறக்கம் - சுவர்க்கம்.
2. ஏறு - கதவுக்கிடும் ஒரு தடைபோலும். இதனைத் தோட்டிக் கடையாக்கினு மமையும். தோட்டி - கதவுபூட்டுங் கொளுக்கி தோட்டிமுள்ளுமாம்.
3. படிவம் - பிரதிமை. கூறல் கோடல் என்றிருத்தல் வேண்டும்.
4. நிறைச்சுடர்கள் - ஒளிநிறைவையுடைய சூரிய சந்திரர்கள். ஒன்றிவர - ஒன்றோடொன்று பொருந்திவர. இது கிரகண காலத்தைக் குறிக்கும் போலும். இதனை இல்பொருளுவமையாகக் கோடலுமாம்.

*இது வேறுவேறு வருதலுஞ் சிறுபான்மை. இன்னுந் துறை யென்றதனானே புறத்தோன் [1]'கவடிவித்தலுந் தொகைநிலைப் பாற்பட்டுழி அகத்தோர்க்குச் செல்லாமை கொள்க.*

*அது, 'மதியோர் வெண்குடை' என்னும் (392) புறப்பாட்டி னுள்,*

**வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்**
**வைக லுழவ வாழிய பெரிதெனச்**
**சென்றியா ளின்றெ னாக.**

*என வரும்.*

*'ஒன்ற' வென்றதனான் அகத்தோன் வாண்மண்ணுதல் சிறு பான்மை என்று கொள்க.*

*இனி மகண்மறுத்தோன் மதிலை முற்றுதன் மகட்பாற் காஞ்சிக் கண் அடங்கும். யானையுங் குதிரையும் மதிற்போர்க்குச் சிறந்தன அன்மையிற் கொள்ளாராயினார். [2]'ஈரடி யிகந்து பிறக்கடி யிடுதலுங் கேடு' என்று உணர்க.* (13)

**(தும்பை இன்னதன் புறமெனல்)**

**69. தும்பை தானே நெய்தலது புறனே.**

*இது தும்பைத்திணை அகத்திணையுள் இன்னதற்குப் புறனாமென்கின்றது. இதுவும் [3]'மைந்து பொருளாகப் பொரு தலின் மண்ணிடையீடாகப் பொரும் வஞ்சிக்கும் மதிலிடை யீடாகப் பொரும் உழிஞைக்கும் பிற்கூறினார்.*

*இ – ள்: தும்பை தானே நெய்தலது புறனே - தும்பை என்னும் புறத்திணை நெய்தலெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாம் என்றவாறு.*

*தும்பையென்பது சூடும் பூவினாற் பெற்றபெயர். நெய்தற் குரிய பெருமணலுலகம் போலக் காடும் மலையும் கழனியுமல் லாத [4]களரும் மணலும் பொருகளமாக வேண்டுதலானும், பெரும்பொழுது வரைவின்மையானும், [5]எற்பாடு போர்த் தொழில் முடியுங் காலமாதலானும், இரக்கமுந் தலைமகட்கே*

---

1. கவடி - வெள்வரகு.
2. பிறக்கு - பின்.
3. மைந்து - வலி.
4. களர் - களர்நிலம்.
5. எற்பாடு - ஒரு பகலுக்குரிய முப்பது நாழிகையை மூன்று கூறாக்குழிப் பிற் கூறாக வரும் பத்து நாழிகையாகிய காலம். அது ஞாயிறு படும்வரையுமுள்ள காலமாதலின் எற்பாடு எனப்பட்டது.

பெரும்பான்மை உளதாயவாறு போலக் கணவனை இழந்தார்க் கன்றி வீரர்க்கு இரக்கமின்மையானும் அவ் வீரக்குறிப்பின் அருள்பற்றி ஒருவர் ஒருவரை நோக்கிப் போரின்கண் இரங்குப வாகலானும் ஒருவரும் ஒழியாமல் பட்டுழிக் கண்டோர் இரங்கு பவாகலானும் பிற காரணங்களானும் நெய்தற்குத் தும்பை புறனாயிற்று. (14)

**(தும்பையின் பொது இலக்கண மிதுவெனல்)**

**70. மைந்து பொருளாக வந்த வேந்தனைச்**
**சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப.**

இஃது அத்தும்பைக்குப் பொதுவிலக்கணங் கூறுகின்றது.

இ — ள்: மைந்து பொருளாக வந்த வேந்தனை - தனது வலி யினை யுலகம் மீக்கூறுதலே தனக்குப் பெறுபொருளாகக் கருதி மேற்சென்ற வேந்தனை, சென்றுதலையழிக்குஞ் சிறப்பிற்றென்ப - அங்ஙனம் மாற்று வேந்தனும் அவன் கருதிய மைந்தே தான் பெறுபொருளாக எதிர்சென்று அவனைத் தலைமைதீர்க்குஞ் சிறப்பினை யுடைத்து அத் தும்பைத்திணை என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

[1]வரல் செலவாதல் 'செலவினும் வரவினும்' (தொல் - சொல். கிளவி - 28) என்பதன் பொதுவிதியாற் கொள்க. மைந்து பொரு ளாக என்பதனை வந்த என்பதற்குஞ் சென்று என்பதற்குங் கூட்டுக; அஃது இருவர்க்கும், ஒத்தலின்; எனவே இருவரும் ஒரு களத்தே பொருவாராயிற்று.

இது, வேந்தனைத் தலைமையாற் கூறினாரேனும் [2]ஏனை யோர்க்குங் கொள்க, அவரும் அதற்குரியராதலின்.

இதனைச் சிறப்பிற்றென்றதனான் அறத்திற்றிரிந்து வஞ்ச னையாற் கொல்வனவும், தேவராற் பெற்ற வரங்களாற் கொல் வனவும் கடையூழிக்கட்டோன்றிய ஆதலிற் சிறப்பிலவாம். அவை யுஞ் சிறுபான்மை கொள்க. (15)

---

1. செலவு - படர்க்கைக்குரியது. வரல் தன்மைக்குரியது. ஈண்டு வருதல் செலவுப் பொருட்டாய் நின்றது என்பது கருத்து. சூத்திரப் போக்கை நோக்குமிடத்து வந்த என்பதற்கு இளம்பூரணருரையே பொருத்தம்.

2. ஏனையோர் - குறுநிலமன்னர் முதலியோர் (அகத்திணை 32)

(தும்பைக்குரிய சிறப்புவிதி இதுவெனல்)

71. கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற வுயிரி னின்ற யாக்கை
யிருநிலந் தீண்டா வருநிலை வகையோ
டிருபாற் பட்ட வொருசிறப் பின்றே.

இது தும்பைக்காவதோர் இலக்கணங் கூறுதலின் எய்திய தன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ — ள்: கணையும் வேலுந் துணையுற மொய்த்தலின் - பலரும் ஒருவனையணுகிப் பொருதற்கஞ்சி அகலநின்று அம்பா னெய்தும் வேல்கொண்டெறிந்தும் போர்செய்ய அவ்வம்பும் வேலும் ஒன்றோடொன்று துணையாகத் தீண்டுமாறு செறிதலின், சென்ற உயிரின் நின்ற யாக்கை - சிறிதொழியத் தேய்ந்த உயிரானே துளங்காது நிலைநின்ற உடம்பு, இருநிலந்தீண்டா யாக்கை அருநிலை வகையோடு - வாளுந் திகிரியு முதலியவற்றால் ஏறுண்ட தலையே யாயினும் உடலேயாயினும் பெரிய நிலத்தைத் தீண்டாதெழுந்து ஆடும் உடம்பினது பெறற்கரும் நிலையுடைத்தாகிய கூறுபாட்டோடேகூடி, இருபாற்பட்ட ஒரு சிறப் பின்று - இரண்டு கூறுபட்ட ஒரு சிறப்பிலக்கணத்தை யுடைத்து முற்கூறிய தும்பைத்திணை என்றவாறு.

எனவே, முற்கூறிய மைந்து பொருளாகப் பொருதலினும் நின்ற யாக்கை சிறத்தலும் இருநிலந் தீண்டா யாக்கை அதனிற் சிறத்தலுங் கூறினார். இது திணைச் சிறப்புக் கூறியது. 'மொய்த்தலின்' என்றது யாக்கையற்று ஆடவேண்டுதலிற் கணையும் வேலுமன்றி வாள் முதலியன ஏதுவாகக் கொள்க. பிற்கூறியதற்கு அட்டை அற்றுழியும் உருமாறுபோல் அற்றுழியும் உடம்பாடுதலின் அட்டையாடலெனவும் இதனைக் கூறுப.

இனி மேற்றுறை கூறுகின்றது மைந்துபொருளாக வந்ததுஞ் சென்றதுமாகிய பொது இலக்கணத்திற்கே யென்றுணர்க. நிரை கொள்ளப்பட்டோன் பொருகளங் குறித்துப் போர்செய்தலும் அவன் களங் குறித்தது பொறாது நிரைகொண்டானுங் களங் குறித்துப் போர்செய்தலும் வெட்சிப்புறத்துத் தும்பையாம். வஞ்சியுள்ளும் [1]விழுப்புண்பட்ட வீரரை நோக்கி வேந்தற்குப் பொறாமை நிகழ்ந்து துறக்கம் வேண்டுழி நிகழ்ந்த தும்பையும்,

1. விழுப்புண் - முகத்தினும் மார்பினும் பட்ட புண்.

வஞ்சிப்புறத்துத் தும்பையாம். முற்றப்பட்டோனை முற்றுவிடுத் தற்கு வேறோர் வேந்தன் வந்துழி அவன் புறம்போந்து களங் குறித்துப் போர்செய்யக் கருதுதலும், அவன் களங்குறித்துழிப் புறத் தோனும் களங்குறித்துப் போர் செய்யக் கருதுதலும் உழிஞைப் புறத்துத் தும்பையாம். இவையெல்லாம் மண்ணசையும் அரண் கோடலு மன்றி மைந்து பொருளாகச் சென்று துறக்கம் வேட்டுப் பொருந் தும்பைச் சிறப்புக் கூறிற்று.

மேற்காட்டுந் துறைகளெல்லாம் [1]இச் சூத்திரத்துக் கூறிய இரண்டற்குமன்றி மைந்து பொருளாயதற்கேயா மென்றுணர்க. உதாரணம்:

> [2]நெடுவேல் பாய்ந்த மார்பின்
> மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே (புறம். 297)
>
> எய்போற் கிடந்தா னென்னேறு (பு. வெ. 176)

என வருவன கணையும் வேலும் மொய்த்து நின்றன.

கிடந்தானென்புழி, நிலந்தீண்டாவகையின் நின்ற யாக்கை யாயிற்று.

> [3]வான்றுறக்கம் வேட்டெழுந்தார் வாண்மறவ ரென்பதற்குச்
> சான்றுரைப்ப போன்றன தங்குறை – மான்றேர்மேல்
> வேந்து தலைபனிப்ப விட்ட வுயிர்விடாப்
> பாய்ந்தன மேன்மேற் பல
> (பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – அமர்.)

இது வஞ்சிப்புறத்துத் தும்பையாய் இருநிலந் தீண்டாவகை.

> பருதிவேன் மள்ளர் பலர்காணப் பற்றார்
> குருதிவாள் கூறிரண்டு செய்ய – வொருதுணி
> கண்ணிமையா முன்னங் கடிமதிலுள் வீழ்ந்ததே
> மண்ணெமதோ மண்ணெமதோ வென்று.

இஃது உழிஞைப்புறத்துத் தும்பையாய் இருநிலந் தீண்டா வகை.

---

1. இச் சூத்திர மென்றது. கணையும் வேலும் என்ற சூத்திரத்தை.
2. மடல் - பனங்கருக்கு மட்டை போந்தை - பனை. எய் - முட்பன்றி.
3. சான்று - சாட்சி. குறை - உடற்குறை. தேர்மேல் பாய்ந்தன என்க.

[1]இது [2]திணைக்கெல்லாம் பொதுவன்மையிற் றிணையென வும் படாது; திணைக்கே சிறப்பிலக்கணமாதலிற் துறையென வும்படாது; ஆயினுந் துறைப்பொருள் நிகழ்ந்து கழிந்தபிற் கூறியதா மென்றுணர்க. (16)

**(தும்பைத் துறை இத்துணைத் தெனல்)**

72. தானை யானை குதிரை யென்ற
நோனா ருட்கு மூவகை நிலையும்
வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி யொருவன்
றான்மீண் டெறிந்த தார்நிலை யன்றியு
மிருவர் தலைவர் தபுதிப் பக்கமு
மொருவ னொருவனை யுடைபடை புக்குக்
கூழை தாங்கிய வெருமையும் படையறுத்துப்
பாழி கொள்ளு மேமத் தானுங்
களிறெறிந் தெதிர்ந்தோர் பாடுங் களிற்றொடு
பட்ட வேந்தனை யட்ட வேந்தன்
வாளோ ராடு மமலையும் வாள்வாய்த்
திருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமு
மொருவரு மொழியாத் தொகைநிலைக் கண்ணுஞ்
செருவகத் திறைவன் வீழ்ந்தெனச் சினைஇ
யொருவன் மண்டிய நல்லிசை நிலையும்
பல்படை யொருவற் குடைதலின் மற்றவ
னொள்வாள் வீசிய நூழிலு முளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே.

இது மைந்து பொருளாகிய தும்பைத் திணைக்குத் துறை இணைத்தென்கின்றது.

இ – ள்; தானை யானை குதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும் - தானைநிலை யானைநிலை குதிரைநிலை என்று சொல்லப்பட்ட போர்செய்தற்கு ஆற்றா அரசர் தலை பனிக்கும் மூன்று கூறுபாட்டின் கண்ணும்,

1. இது - இவ்விலக்கணம்.
2. துறைக்கெல்லாம் என்றிருத்தல் வேண்டும்.

[1]நோனார் உட்குவரெனவே [2]நோன்றார் உட்காது நிற்பாரா யிற்று.[3]அவர் போர்கண்டு சிறப்புச் செய்யுந் தேவரும் பிணந்தின் பெண்டிரும் படையாளர் தாயரும் அவர் மனைவியருங் கூத்த ரும் பாணரும் பொருநரும் விறலியருங் கண்டோரும் பிறரும் என்று கொள்க.

துறக்கம்புகு வேட்கையுடைமையிற் காலாளை முற்கூறி, அதன் பின்னர் மதத்தாற் கதஞ்சிறந்து தானும் போர்செய்யும் யானையைக் கூறி, மதஞ் சிறவாமையிற் கதஞ்சிறவாத குதிரையை அதன் பிற்கூறினார். குதிரையானன்றித் தேர் தானே செல்லாமை யிற்றேர்க்கு மறமின்றென்று அது கூறாராயினார்.

நிலையென்னாது 'வகை' என்றதனான் அம் மூன்று நிலை யுந் தாமே மறஞ்சிறப்பப் பொருதுவீழ்தலும், அரசனேவலிற் றானே பொருது வீழ்தலும், யானையுங் குதிரையும் ஊர்ந்தாரே வலிற்பொருதலும், படையாளர் ஒருவரொருவர் நிலைகூறலும் அவர்க்கு உதவலுமென இப்பகுதியெல்லாங் கொள்க.

இனி, இவை தாமே கறுவுகொண்டு பொருவுழித் தானை மறம் யானைமறங் குதிரைமறமென்று வெவ்வேறு பெயர்பெறு மெனக் கொள்க.

இனித் தாயர் கூறுவன [4]மூதின் முல்லையாம்; மனைவியர் கூறுவன இல்லாண்முல்லையாம்; கண்டோர் கூறுவன வல்லாண் முல்லையாம்; பாணர் கூறுவன பாண்பாட்டாம் என்க.

இவை கூறி ஏனைக் கூத்தர் முதலியோர் கூறுவன கூறார் மனஞெகிழ்ந்து [5]போவாருமுளர். அவை ஓரோர் துறையாக முதனூற் கண் வழங்காமையினானும் அவற்றிற்கு வரையறை யின்மையானும்.

---

1. நோனார் - போர் செய்தற்கு ஆற்றாதவர்.

2. நோன்றார் - பொறுத்தலையுடையார். எனவே போரை அஞ்சாதவர் என்ற படி. நோன்றல் - பொறுதலாதலின் அதனடியாக (அஃதாவது நோன்மை என்ற அடியாக) நோனார் என்பதும் பிறந்தது நோன்றார் என்பதற்கு மடி அதுவே.

3. அவர் - நோன்றார் = அஞ்சாது போர் பார்ப்பார்.

4. மூதின்முல்லையாவது - பழைய மறக்குடியிற் பிறந்த வீரர்க்கன்றி அவர் மகளிர்க்கும் கோபமுண்டாதலை மிகுத்துச் சொல்லல்.

5. போவாருமுளர் என்றது வெண்பாமாலையாசிரியரை.

*இவர்தானை நிலையென அடக்கினார். இச் சிறப்பான் [1]இதனை முற்கூறினார். அத் தானை சூடிய பூக்கூறலும், அதனெ ழுச்சியும், அரவமும், அதற்கரசன் செய்யுஞ் சிறப்பும், அதனைக் கண்டு இடைநின்றோர் போரை விலக்கலும், அவர் அதற்குடம் படாமைப் போர்துணிதலும், அத்தானையுள் ஒன்றற்கிரங்கலும், அதற்குத் தலைவரை வகுத்தலும், வேந்தன் சுற்றத்தாரையுந் துணை வந்த அரசரையும் ஏத்துவனவும், நும்போர் ஏனைநாட்டென்றலும், இருபெரு வேந்தரும் இன்னவாறு பொருதுமென்று கையறிதலும் போல்வனவெல்லாம் இத்துறைப் பாற்படும். உதாரணம்:*

[2]கார்கருதி நின்றதிருங் கெளவை விழுப்பணையான்
சோர்குருதி சூழா நிலனனைப்பப் – போர்கருதித்
துப்புடைத் தும்பை மலைந்தான் றுகளறுசீர்
வெப்புடைத் தானையெம் வேந்து (பு.வெ. தும்பை. 1)

*இது பூக்கூறியது. இதனைத் திணைப்பாட்டுமென்ப.*

[3]வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தண் ணடையுங்
கொல்களிறு மாவுங் கொடுத்தளித்தான் – பல்புரவி
நன்மணித் திண்டேர் நயவார் தலைபனிப்பப்
பன்மணிப் பூணான் படைக்கு (பு. வெ. தும்பை. 2)

*இது சிறப்புச் செய்தது.*

[4]வயிர்மேல் வளைநரல வைவேலும் வாளுஞ்
செயிர்மேற் கனல்விழிப்பச் சீறி – யுயிர்மேற்
பலகழியு மேனும் பரிமான்றோர் மன்னர்க்
குலகழியு மோர்த்துச் செயின். (பு.வெ. தும்பை. 4)

*இது விலக்கவும் போர் துணிந்தது.*

[5]மின்னார் சினஞ்சொரிவேன் மீளிக் கடற்றானை
யொன்னார் நடுங்க வுலாய்நிமிரி – னென்னாங்கொ
லாழித்தேர் வெல்புரவி யண்ணன் மதயானைப்
பாழித்தோண் மன்னர் படை. (பு. வெ. தும்பை. 5)

*இஃது இரண்டனுள் ஒன்றற்கு இரங்கியது.*

---

1. இதனை - தானையை.
2. கெளவை - ஆரவாரம். பணை - முரசு. வெப்பு - வெம்மை = கொடுமை.
3. வெல்பொறி - போர் வெல்லும் அடையாளம். தண்ணடை - மருதநிலம்.
4. வயிர் - கொம்பு. உலகு - பூமி. ஓர்த்து - ஆராய்ந்து.
5. படை என்னாங்கொல் என இயைக்க. உலாய் நிமிரின் - நிலைபெயர்ந்து நடப்பின்.

[1]கங்கை சிறுவனுங் காய்கதிரோன் செம்மலு
மிங்கிருவர் வேண்டா வெனவெண்ணிக் – கங்கை
சிறுவன் படைக்காவல் பூண்டான் செயிர்த்தார்
மறுவந்தார் தத்த மனம்.

*இது பெருந்தேவனார் பாட்டு. (பாரதம் புறத்திரட்டு -அமர். 10) குருக்கள் தமக்குப் படைத்தலைவரை வகுத்தது.*

*இனி, போர்த்தொழிலாற் றானைநிலை வருமாறு.*

[2]குழாக்களிற் றரசர் குறித்தெழு கொலைக்களம்
விழாக்களம் போல மெய்ம்மலி யுவகைய
ராண்மை யுள்ளங் கேண்மையிற் றுரத்தலி
னழுந்துபடப் புல்லி விழுந்துகளம் படுநரு
நீர்ப்பெயற் பிறந்த மொக்குள் போலத்
தாக்கிய விசையிற் சிதர்ந்துநிலம் படுநருந்
தகருந் தகருந் தாக்கிய தாக்கின்
முகமுகஞ் சிதர முட்டு வோரு
முட்டியின் முறைமுறை குத்து வோருங்
கட்டிய கையொடு காறட் குநருங்
கிட்டினர் கையிற் றொட்டுநிற் போருஞ்
சுட்டிய பெயரற விட்டழிப் போருஞ்
சக்கரம் கோலச் சங்குவிட் டெறிநருஞ்
சிலைப்புடை முரசிற் றலைப்புடைக் குநரு
மல்லிற் பிடித்தும் வில்லி னெற்றியு
மூக்கியு முரப்பியு நோக்கியு நுவன்றும்
போக்கியும் புழுங்கியு நாக்கடை கவ்வியு
மெயிறுடன் றிருகியுங் கயிறுபல வீசியு
மினைய செய்தியின் முனைமயங் குநரும்
பிறப்பும் பெருமையுஞ் சிறப்புஞ் செய்கையு
மரசறி பெருமையு முறைசெல் லாண்மையு
முடையோ ராகிய படைகொண் மாக்கள்
சென்றுபுகு முலக மொன்றே யாதலி
னொன்றுபடு மனத்தொடு கொன்றுகொன் றுவப்பச்
செஞ்சோற்று விலையுந் தீர்ந்துதம் மனைவியர்
தம்பிணந் தழீஇ நொந்துகலுழ்ந் திரங்கவும்
புதுவது வந்த மகளிர்க்கு
வதுவை [3]சூட்டிய வான்படர்ந் தோரே. (புறத்திரட்டு. அமர். 10)

சென்ற வுயிர்போலத் தோன்றா துடல்சிதைந்தோ
னின்ற வடி [4]பெயரா நின்றவை – மன்ற

---

1. கங்கை சிறுவன் - வீடுமன். காய்கதிரோன் செம்மல் - கன்னன்.
2. மொக்குள் - குமிழி. தகர் - ஆட்டுக்கடா. முட்டி - கைப்பொத்து. தொட்டு - பிடித்து. கையறத்தொட்டு நிற்போரும் எனவும் பாடம் கையறல் - செயலறல். சிலைப்பு - ஒலி. சங்கு - ஒருவகைப் படை.
3. சூட்டிய - சூட்டும்படி.
4. பெயரா - அசையாது.

லரமகளிர் மங்கலத்திற் காங்காங்கு வைத்த
[1]மரவடியே போன்றன வந்து

[2]வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
கண்கூடி றுத்த கடன்மருள் பாசறைக்
குமரிப் படைதழீஇக் கூற்றுவினை யாடவர்
தமர்பிற ரறியா வமர்மயங் கழுவத்
திறையும் பெயருந் தோற்றி நுமரு
ணாண்முறை தபுத்தீர் வம்மி னீங்கெனப்
போர்மலைந் தொருசிறை நிற்ப யாவரு
மரவுமிழ் மணியிற் குறுகார்
நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே. (புறம். 294)

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். (குறள். படைச். 4)

[3]நறுவிரை துறந்த நரைவெண் கூந்த
லிரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறா அன்
மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தானா யினனே. (புறம். 276)

[4]தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற்
கொற்கத் துதவினா னாகுமாற் பிற்பிற்
பலர்புகழ் செல்வந் தருமாற் பலர்தொழ
வானக வாழ்க்கையு மீயுமா லன்னதோர்
மேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ
தானேயும் போகு முயிர்க்கு.
(தகடூர்யாத்திரை புறத்திரட்டு – படைச்செருக்கு. 9)

[5]கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலு
மொத்தன்று மாதோ விவற்கே செற்றிய
திணைநிலை யலறக் கூவை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
யோம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தெதிர் ந்ததன் றோழற்கு வருமே. (புறம். 275)

*இஃது உதவியது.*

---

1. மரவடி - மரக்கால். நின்றவை போன்றன என இயைக்க.
2. கண்கூடிறுத்த - சேர்ந்து தங்கின. குமரிப்படை - அழியாதபடை. கூற்று - இயமன். இறை - அரசன். மணியின் - மணியைக் குறுகாதவர் போல.
3. இரங்காழ் - இரமரத்தின் வித்து. சிறாஅன் - சிறுவன்.
4. ஒற்கம் - வறுமைக்காலம்.
5. கோட்டங்கண்ணி - வளைந்தமாலை. தொடர் - சங்கிலி.

*இனி யானைநிலைக்குங் குதிரைநிலைக்குந் துறைப்பகுதி யாய் வருவனவுங் கொள்க. அஃது அரசர்மேலும் படைத்தலைவர் மேலும் ஏனையோர்மேலும் யானைசேறலும், களிற்றின் மேலுந் தேரின்மேலுங் குதிரை சேறலும், தன்மேலிருந்து பட்டோருடலை மோந்து நிற்றலும் பிறவுமாம். உதாரணம்:*

மாயத்தாற் றாக்கு மலையு மலையும்போற்
காயத்தூ றஞ்சாக் களிற்றொடும்போய்ச் – சாயுந்
தொலைவறியா வாடவருந் தோன்றினார் வான்மேன்
மலையுறையுந் தெய்வம்போல் வந்து.

(பெ. பொ. விளக்கம் புறத்திரட்டு யானைமறம். 14)

[1]கையது கையோ டொருதுணி கோட்டது
மொய்யிலைவேன் மன்னர் முடித்தலை – பைய
வுயர்பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங்கோன்
வயவெம்போர் மாறன் களிறு.

*இவை யானை நிலை.*

[2]பல்லுருவக் காலின் பரியுருவத் தாக்கித்தன்
றொல்லை யுருவிழந்த தோற்றம்போ – லெல்லா
மொருகணத்துத் தாக்கி யுருவிழந்த பாய்மாப்
பொருகளத்து வீழ்ந்து புரண்டு.

[3]மாவா ராதே மாவா ராதே
எல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
யிருபேர் யாற்ற வொருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
வுலந்தன்று கொல்லவன் மலைந்த மாவே. (புறம். 273)

[4]பருத்தி வேலிச் சீறூர் மன்ன
னுழுத்தத ருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொள்சுவ லெருத்திற்

---

1. கையோடு ஒருதுணி கையது என மாற்றிக் கூட்டுக. தலைகோட்டது என்க. அவற்றை நீராட்டிச் செல்லும் என்க.

2. கால் - காற்று. பரி - வேகம் காற்றின் வேகம் என்றபடி. உருவ - ஊடுருவ. உரு - நிறம். புரண்டு உருவிழந்த என இயைக்க.

3. இது போர்க்குச் சென்ற தன் கணவனை வரக்காணாத மனைவி கூறியது. புதல்வற்றந்த செல்வன் என்றது கணவனை. கூடல் - இரண்டாறுங் கூடுமிடம். உலர்ந்தன்று - உலர்ந்தது.

4. உழுத்ததர் - உழுத்தஞ்சக்கை. கோட்டம் - கோயில், கவிமா இகழ்ந்து நின்ற என்க. கலம் - பாண்டம். தொடாமகளிர் - தொடுதற்குரிய தூய்மை யில்லாத மகளிர்.

றண்ணடை மன்னர் தாருடைக் கலிமா
வணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிர் னிகழ்ந்துநின் றவ்வே. (புறம். 299)

இவை குதிரைநிலை.

'நிலம்பிறக் கிடுவது போல' என்னும் (303) புறப்பாட்டுமது.

இவை தனித்து வாராது தொடர்நிலைச் செய்யுட்கண் வரும்; அவை தகடூர் யாத்திரையினும் பாரதத்தினுங் காண்க. புறநானூற்றுள் தனித்து வருவனவுங் கொள்க.

வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன் தான் மீண் டெறிந்த தார்நிலை - தன்படை போர் செய்கின்றமைகண்டு தானும் படையாளர்க்கு முன்னே சென்று வேலாற் போர்செய்து வென்றிமிகுகின்ற வேந்தனை மாற்றோர் சூழ்ந்துழி அதுகண்டு வேறோரிடத்தே பொருகின்ற தன்றானைத்தலைவனாயினும் தனக்குத் துணைவந்த அரசனாயினும் போரைக் கைவிட்டு வந்து வேந்தனோடு பொருகின்றாரை எறிந்த தார்நிலைக்கண்ணும்:

[1]"தார்' என்பது முந்துற்றுப் பொரும்படையாதலின் இது தார்நிலையாயிற்று. உதாரணம்:

[2]வெய்யோ னெழாமுன்னம் வீங்கிருள் கையகலச்
செய்யோ னொளிதிகழுஞ் செம்மற்றே – கையகன்று
போர்தாங்கு மன்னன்முன் புக்குப் புகழ்வெய்யோன்
றார்தாங்கி நின்ற தகை.
(பெ. பொ. விளக்கம்; புறத்திரட்டு – தானைமறம். 4)

'நிரப்பாது கொடுக்கும்' என்னும் (180) புறப்பாட்டினுள் 'இறையுறு விழுமந் தாங்கி' என்பதும் அது.

[3]இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போ
ரினக்களிற் றியானை யியறேர்க் குரிசி
னுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
யெடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்ச

---

1. தார் - இதனைக் கொடிப்படை என்பர்.

2. வெய்யோன் - சூரியன். செய்யோன் ஒளி - அக்கினியினொளி என்றது செவ்வொளியை. அச் சூரியனின் ஒளி எனினுமாம்.

3. ஞாட்பு - போர். தச்சன் ஆர் தைத்தற்கு அடுத்துத்துளைத்த வண்டியின் குடம் போல. வேல்கள் தைத்த மார்பிற்கு ஆர் தைத்த குறடு உவமை யாதலை, "ஆர்சூழ் குறட்டின் வேனிறத் திங்க" (புறம். 283) என்பதனானறிக. உறைத்தல் - துளித்தல். ஓலை - குடை. ஆகுபெயர்.

னடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே
மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனு
முறைப்புழி யோலை போல
மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே. (புறம். 290)

இதுவும் அதன்பாற்படும்.

அன்றியும் இருவர் தலைவர் தபுதிப்பக்கமும் - இரு பெரு வேந்தர் தானைத் தலைவருந் தத்தம் வேந்தர்க்காகித் தார்தாங் குதலேயின்றி அத் தலைவரிருவருந் தம்மிற் பொருது வீழ்தற் கண்ணும்:

'பக்கம்' என்றதனான் அவரு ளொருவரொருவர் வீழ்தலுங் கொள்க.

[1]ஆதி சான்ற மேதகு வேட்கையி
னாளுங் கோளு மயங்கிய ஞாட்பின்
மதியமு ஞாயிறும் பொருவன போல
வொருத்தி வேட்கையி னுடன்வயிற் றிருவர்
செருக்கூர் தண்டி னெருக்கின ரெனவு
மரவணி கொடியோற் கிளையோன் சிறுவனும்
பெருவிறல் [2]வீமற் கிளையோன் சிறுவனு
முடன்றமர் தொடங்கிய காலை யடங்கா
ருடங்குவருஞ் சீற்றத்துக் கைப்பட வழங்கி
யிழந்தவை கொடாஅர் கிடந்தன வாங்கித்
தேர்மிசைத் தமியர் தோன்றார் பார்மிசை
நின்றுசுடர் நோக்கியு மொன்றுபடத் திருகியுந்
தும்பியடி பிணங்கு மண்ணிற் றோற்றமொடு
கொடிகொடி பிணங்கி வீழ்வன போல
வொருவயின் வீழ்ந்தடு காலை
யிருபெரு வேந்தரும் பெரிதுவந் தனரே.

இப் பாரதப்பாட்டினுள் அவ்வாறாதல் கண்டுகொள்க.

இனித் தலைவரேயன்றிப் பிறரும் அவ்வாறு பொரினும் அதன் பாற் படுத்துக.

உடை படை ஒருவன் புக்கு ஒருவனைக் கூழை தாங்கிய [3]எருமையும் - தனது உடைந்த படைக்கண்ணே ஒரு படைத் தலைவன் சென்று நின்று அங்ஙனங் கெடுத்த மாற்று வேந்தன்

---

1. இருவர் - சுந்தோபசுந்தர். அரவணி கொடியோற் கிளையோன் - துச்சாதனன். அவன்மகன் துச்சனி.

2. வீமற்கிளையோன் - அருச்சுனன். அவன் சிறுவன் என்றது அபிமன்னுவை.

3. எருமை - எருமைமறம். அஃதாவது: முதுகிட்ட தன்சேனைக்குப்பின் பகை வர் சேனையை யஞ்சாது மிகுந்த கோபங் கொண்டு தாங்கிப்பின் நிற்றல். எருமைப்போலத் தாங்கி நிற்றலின் எருமைமறம் என்றாயிற்று. (பு. வெ. மாலை - தும்பை. 13)

*படைத்தலைவனை அவன் எதிர் கொண்டு நின்ற பின்னணி யோடே தாங்கின கடாப்போலச் [1]சிறக்கணித்து நிற்கு நிலைமைக் கண்ணும்:*

*ஒருவனொருவனைத் தாங்கின எருமையென முடிக்க. உதாரணம்:*

**சீற்றங் கனற்றச் சிறக்கணித்துச் செல்லுங்கா**
**லேற்றெருமை போன்றா னிகல்வெய்யோன் – மாற்றான்**
**படைவரவு காத்துத்தன் பல்படையைப் பின்காத்**
**திடைவருங்காற் பின்வருவார் யார்.**

*படையறுத்துப் பாழி கொள்ளும் ஏமத்தானும்* - *கைப்படை யைப் போக்கி மெய்யாற் போர்செய்யும் மயக்கத்தின்கண்ணும்:*

*பாழி - வலி; இஃது ஆகுபெயர். உதாரணம்:*

**கொல்லேறு பாய்ந்தழிந்த கோடுபோற் றண்டிறுத்து**
**மல்லேறு தோள்வீமன் [2]மாமனைப் – புல்லிக்கொண்**
**டாறாத போர்மலைந்தா னாங்கரசர் கண்டார்த்தார்**
**[3]ரேறாட லாய ரென. (பாரதம்)**

**நீலக் கச்சைப் பூந்துவ ராடைப்**
**பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்**
**மேல்வரும் களிற்றொடு வேறுரத் தினியே**
**தன்னுந் துரக்குவன் போலு மொன்னல**
**ரெஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்**
**கையின் வாங்கித் தழீஇ**
**மொய்ம்பி னூக்கி மெய்க்கொண் டனனே. (புறம். 274)**

*என்பதும் அது.*

*களிறெறிந் ததிர்ந்தோர் பாடும்* - *மாற்று வேந்தன் ஊர்ந்து வந்த களிற்றைக் கையெறிந்தானுங் [4]கடுக்கொண்டெறிந்தானும் விலக்கி அவனையும் அக்களிற்றையும் போர் செய்தோர் பெருமைக் கண்ணும்: உதாரணம்:*

**இடியா னிருண்முகிலு மேற்றுண்ணு மென்னும்**
**படியாற் [5]பகடொன்று மீட்டு – வடிவே**
**லெறிந்தார்த்தார் மள்ள ரிமையாத கண்கொண்**
**டறிந்தார்த்தார் வானோரு மாங்கு.**

---

1. சிறங்கணித்தல் - கண்ணைச் சுருக்கிப் பார்த்தல் சிறக்கணித்தல் - விகாரம்.
2. மாமன் என்றது - சகுனியை.
3. ஏறு - இடபம். ஏறாடல் ஆயர் - ஏறு கோடல் விழவைக் கண்டு மகிழும் ஆயர்.
4. கடுக்கொண்டெறிதல் - கோபங்கொண் டடித்தல். வேகங் கொண்டடித்தல் எனினுமமையும்.
5. பகடு - களிற்றியானை. மீட்டு - விலக்கி.

[1]வானவர் போரிற் றானவர்க் கடந்த
மான வேந்தன் யானையிற் றனாஅது
பல்படை நெரிவ தொல்லான் வீமன்
பிறக்கிடங் கொடானதன் முகத்தெறிந் தார்த்துத்
தானெதிர் மலைந்த காலை யாங்கதன்
கோடுழக் கிழிந்த மார்பொடு நிலஞ்சேர்ந்து
போர்க்கோள் வளாகந் தேர்த்துக ளனைத்தினு
மிடைகொள லின்றிப் புடைபெயர்ந்து புரண்டு
வருந்தா வுள்ளமொடு பெயர்ந்தனன்
பெருந்தகை யாண்மையொடு பெயர்த்தலோ வரிதே.

இப் பாரதப்பாட்டும் இதன்பாற்படும்.

இது களிறெறிந்தான் பெருமை கூறுதலின் யானைநிலையுள் அடங்காதாயிற்று.

களிற்றொடுபட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும் - அங்ஙனம் நின்று களிற்றொடுபட்ட வேந்தனைக் கொன்ற வேந்தன் படையாளர் வியந்து பட்டோனைச் சூழ்ந்து நின்று ஆடுந் திரட்சிக்கண்ணும்:

அமலுதல் நெருங்குதலாதலின், அமலையென்பதூஉம் அப்பொருட்டாயிற்று. உதாரணம்:

ஆனுங் குரிசி லுவகைக் களவென்னாங்
கோளன்றிக் கொன்றாரே கோளாகி – வாள்வீசி
யாடினா ரார்த்தா ரடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து.
[2]நான்மருப் பில்லாக் கானவில் யானை
வீமன் வீழ்த்திய துடன்றெதிர்ந் தாங்கு
மாமுது மதுரை மணிநிறப் பாகனோ
டாடமர் தொலைத்த லாற்றான் றேரொடு
மைத்துனன் பணியின் வலமுறை வந்து
கைத்தலங் கதிர்முடி யேற்றி நிற்றந்
திறைஞ்சின னைவர்க் கிடையோ னதுகண்டு
மறந்தீர் மன்னனு மிறைஞ்சித் தனாது
வேழம் விலக்கி வினைமடிந் திருப்பச்
சூர்மருங் கறுத்த நெடுவேள் போல
மலைபுரை யானையுந் தலைவனுங் கவிழிய

---

1. வானவர்... ... கடந்த வேந்தன் யானை என்றமையால் பகதத்தனது யானை என்று வில்லிபுத்தூரர் பாரதக் கதைப்படி கொள்ளல் வேண்டும். அவன் வானவர் ... தானவர்க் கடந்தானோ என்பது ஆராயத்தக்கது. மானவேந்தன் ஒல்லான் (ஒல்லானாக) என முடித்து, மானவேந்தன் - அர்ச்சுனன் என்பாருமுளர்.

2. கான் நவில் - காட்டிற் பயின்ற. மணிநிறப்பாகன் - கண்ணன். ஐவர்க்கிடையோன் - அருச்சுனன்.

வாளுகு களத்து வாள்பல வீசி
யொன்னா மன்னரு மாடினர் துவன்றி
யின்னா வின்ப மெய்தித்
தன்னமர் கேளிரு முன்னார்த் தனரே.

*இப் பாரதப்பாட்டும் அது.*

*வாள்வாய்த்து இருபெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக்கண்ணும் - இருபெருவேந்தர் தாமும், அவர்க்குத் துணையாகிய வேந்தரும் தானைத்தலைவருந் தானையும் வாட்டொழின் முற்றி ஒருவரும் ஒழியாமற் களத்து வீழ்ந்த தொகை நிலைக்கண்ணும்:*

[1]வருதார் தாங்கி யமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர்புண் டொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்த றீட்டி
நிறங்கிள ருருவிற் பேஎய்ப் பெண்டி
ரெடுத்தெறி யனந்தர்ப் பறைச்சீர் தூங்கப்
பருந்தருந் துற்ற தானையொடு செருமுனிந்து
மறத்தின் மண்டிய வீறற்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
யுரைசால் சிறப்பின் முரசொழிந் தனவே
பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞில
மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித் தெறுவர
வுடன்வீழ்ந் தன்றா லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னோரு மாற்ற
வரும்பெற லுலக நிறைய
விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே. (புறம். 62)

*செருவகத்து இறைவன் வீழ்ந்தெனச் சினைஇ ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும் - போரிடத்தே தன் வேந்தன் வஞ்சத் தாற் பட்டானாகச் சினங்கொண்ட மனத்தனாய்ப் பெரும் படைத்தலைவன் தலைமயங்கிப் பொருத நல்ல புகழைப்பெற்ற நிலைமைக்கண்ணும்:*

*அது குருகுல வேந்தனைக் [2]குறங்கறுத்தஞான்று இரவு ஊரெறிந்து பாஞ்சாலரையும் பஞ்சவர் மக்களைவரையுங் கொன்று*

---

1. யாவது - எத்தன்மையது. எறிதல் - அடித்தல். பைஞ்ஞிலம் - மக்கட்பரப்பு. மார்பகம் - தத்தங் கணவர் மார்பகம் அமைதல் - உயிர் அடங்கல். உடன் கிடந்தார் என்பர் புறநானூற்றுரைகாரர்.
2. குறங்கறுத்து என்றது, வீமன் தனது தண்டால் தொடையை அடித்து முரித்ததை.

*வென்றிகொண்ட அசுவத்தாமாவின் போர்த்தொழில் போல்வன. தன்னரசன் அறப் போரிடத்துப் படாது [1]வஞ்சனையாற் படுதலின் அவனுக்குச் சினஞ் சிறந்தது. இச் சிறப்பில்லாத தும்பையும் இக் கலியூழிக்காமென்பது 'சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற்று' (தொல். பொருள் - புற. 15) என்புழிக் கூறிற்று. உதாரணம்:*

[2]மறங்கெழு வேந்தன் குறங்கறுத் திட்டபி
னருமறை யாசா னொருமகன் வெகுண்டு
பாண்டவர் வேர்முதல் கீண்டெறி சீற்றமோ
டிரவூ ரறியாது துவரை வேந்தொடு
மாதுலன் றன்னை வாயிலி னிறீஇக்
காவல் பூட்டி யூர்ப்புறக் காவயி
னைவகை வேந்தரோ டரும்பெறற் றம்பியைக்
கைவயிற் கொண்டு கரியோன் காத்தலிற்
றொக்குடம் பிரீஇத் துறக்க மெய்திய
தந்தையைத் தலையற வெறிந்தவ னிவனெனத்
துஞ்சிடத் தெழீஇக் குஞ்சி பற்றி
வடாது பாஞ்சால னெடுமுதற் புதல்வனைக்
கழுத்தெழத் திருகிப் பறித்த காலைக்
கோயிற் கம்பலை யூர்முழு துணர்த்தலிற்
றம்பியர் மூவரு மைம்பான் மருகரு
முடன்சமர் தொடங்கி யொருங்கு களத்தவிய
வாள்வாய்த்துப் பெயர்ந்த காலை யாள்வினைக்
கின்னோ ரினிப்பிற ரில்லென வொராங்குத்
தன்முதற் றாதையொடு கோன்முத லமரர்
வியந்தனர் நயந்த விசும்பி
னியன்றலை யுலகமு மறிந்ததா லதுவே.

*இப் பாரதப்பாட்டினுள் அவ்வாறாதல் காண்க.*

*ஒருவற்குப் பல் படை உடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசிய நூழிலும் - அங்ஙனம் நல்லிசை எய்திய ஒருவற்கு வஞ்சத் தாற் கொன்ற வேந்தன் பல்படை புறங்கொடுத்தலின் அவரைக் கோறல் புரிதல் அறனன்றென்று கருதாது அவன் வாளாற் றடிந்து கொன்று குவித்தற்கண்ணும்:*

---

1. வஞ்சனை என்றது அரைக்குக் கீழடித்த வஞ்சனையை; அரைக்குக்கீ ழடித்தலாகாது என்பது விதி.

2. மறையாசான் - துரோணாசிரியன். அவன்மகன் - அசுவத்தாமா. துவரைவேந்து - கிருதவன்மன். மாமன் என்றது கிருபனை. தம்பி - சாத்தகி. கரியோன் - கிருஷ்ணன். தந்தையை - தந்தையாகிய துரோணாசாரியனை. துஞ்சிடத்து - துயிலுமிடத்து. பாஞ்சாலன் புதல்வன் - திட்டத்துய்மன். தம்பியர் மூவர் என்றது அவன் தம்பியராகிய உத்தமோசா. உதர்மன், சிகண்டி என்னும் மூவரையும் மருகர் ஐவர் என்றது அவன் மருகராகிய ஐவர் புதல்வரை.

வஞ்சத்தாற் கொன்ற வேந்தனைக் கொன்றமை பற்றித் தனக்குக் கெட்டோரையும் அடங்கக் கோறற்கு உரியானை நல்லிசை முன்னர்ப் பெற்றானென்றார். நூலிலாவது கொன்று குவித்தல்.

வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழி லாட்டு (மதுரை. 255 – 257)

என்றாற் போல. உதாரணம்:

அறத்திற் பிறழ வரசெறியுந் தானை
மறத்திற் புறங்கண்டு மாறான் – குறைத்தடுக்கிச்
செல்லுங்காற் காட்டுத்தீச் சென்றாங்குத் தோன்றுமே
பல்படையார் பட்ட படி.

புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே - பொருந்தித் தோன்றும் பன்னிரு துறையினையுடைத்துத் தும்பைத்திணை என்றவாறு.

இன்னும் உளப்படப் புல்லித்தோன்றும் பன்னிரு துறைத்து எனவுங் கூட்டிப் பன்னிரண்டன்கண்ணும் முற்கூறிய வெட்சித் திணை முதலியவாற்றான் நிகழுந் தும்பையும் வந்துகூடப் பின் அவற்றிற்கு முரியவாய்ப் பொருந்தித் தோன்றும் பன்னிரு துறை யினை யுடைத்து தும்பைத்திணை என்றும் பொருள் கொள்க. பொருள் இடமாகத் துறை இடத்தியல் பொருளாங்கால் ஏனைத் திணைக்கட் கூறினாற் போல ஒன்று நிகழ்ந்தபின் ஒன்று நிக ழாது இரண்டு படைக்கும் பொருந்த ஒரு காலத்து இத்திணை நிகழுமென்றற்குப் 'புல்லித் தோன்றும்' என்றார். பல் பெருங் காதமாகிய நெடுநெறியிடைத் துணிந்த இடத்தையும் உலகந் துறை யென்பது போல [1]இச் சூத்திரத்துத் துறையைத் [2]தொகுதி யுடன் [3]அறுதி காட்டிற்றென்றுணர்க. இவ்விலக்கணம் மேல் வருகின்ற திணைகட்கும் ஒக்கும். (17)

## (வாகை இன்னதன் புறமெனல்)

**73.** வாகை தானே பாலையது புறனே.

இது வாகைத்திணை பாலையெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாமென்கின்றது.

---

1. இச் சூத்திரத்துத் துறை என்றது துணிந்துவருந் துறையை. அஃதாவது தொடர்ந்து வாராது தனித்தனி வருந்துறை.

2. தொகுதி என்றது பன்னிரு துறை என்றதை.

3. அறுதி - முடிவு.

இ — ள்: வாகைதானே - இனிக் கூறாதுநின்ற புறத்திணையுள் வாகையெனப்பட்டது தானே, பாலையது புறனே - பாலை யென்னும் அகத்திணைக்குப் புறனாம் என்றவாறு.

என்னை? பாலைக்குப் புணர்ச்சியின் நீங்கி இல்லற நிகழ்த்திப் புகழெய்துதற்குப் பிரியுமாறு போலச் சுற்றத் தொடர்ச்சியின் நீங்கி அறப்போர் செய்து துறக்கம் பெறுங் கருத்தினாற் சேற லானும், வாளினுந் [1]தாளினும் நிறையினும் பொறையினும் வென்றி யெய்துவோரும் மனையோரை நீங்கிச் சேறலானும் பிரிவுள தாயிற்று.

பாலை தனக்கென ஓர் நிலமின்றி நால்வகை நிலத்தும் நிகழு மாறு போல முற்கூறிய புறத்திணை நான்கும் இடமாக வாகைத் திணை நிகழ்தலிற் றனக்கு நிலமின்றாயிற்று. 'நாளு நாளு மாள் வினை யழுங்க - இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லை யாற் புகழ்' என [2]ஆள்வினைச் சிறப்புக் கூறிப் பிரியுமாறுபோல இதற்குத் துறக்கமே எய்தும் ஆள்வினைச் சிறப்புக் கூறலுங் கொள்க. பாலை பெருவர விற்றாய்த் [3]தொகைகளுள் வருமாறு போல வாகையும் பெருவரவிற்றாய் வருதலுங் கொள்க. (18)

**(வாகையின் பொது இலக்கண மிது வெனல்)**

**74. தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்த லென்ப.**

இஃது அவ் வாகைத்திணைக்குப் பொதுவிலக்கணங் கூறு கின்றது.

இ — ள்: தாவில் கொள்கைத் தத்தங் கூற்றை - வலியும் வருத்தமுமின்றி இயல்பாகிய ஒழுக்கத்தானே நான்கு வருணத் தோரும் அறிவரும் தாபதர் முதலியோரும் தம்முடைய கூறுபாடு களை, பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப - இருவகைப்பட மிகுதிப் படுத்தலென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இருவகையாவன - தன்னைத்தானே மிகுதிப்படுத்தலும் பிறர் [4]மீக்கூறுபடுத்தலுமாம். இனி இருவகைக்குள் [5]உறழ்ச்சியாற்

---

1. தாளினும் - தோளினும் என்றிருத்தல் வேண்டும். இளம்பூரணம் 74ம் சூத்திர உரைநோக்கி அறிக.
2. ஆள்வினை - முயற்சி.
3. தொகை என்றது தொகை நூல்களை. அவை எட்டு.
4. மீக்கூறுபடுத்தல் - புகழ்ந்து கூறல்.
5. உறழ்ச்சி - மாறுபாடு போர். மற்போர் முதலியவுமடங்கும்.

பெற்ற வென்றியை வாகையெனவும், இயல்பாகப்பெற்ற வென்றியை முல்லை யெனவுங் கூறுவர். படுதலென்னாது படுத்தலெனப் பிறவினையாற் கூறினார், அவர் தம்மினுறழாத வழியும் ஒருவன் அவரை உறழ்ந்து உயர்ந்தோன் இவனென்றுரைத்தலும் வாகையென்றற்கு. ஒன்றனோடு 'ஒப்பு' [1]ஓரீஇக் காணாது மாணிக்கத்தினை நன்றென்றாற் போல உலகமுழுதும் அறியும் உயர்ச்சியுடைமையும் அது. தாவில் கொள்கையெனவே இரணியனைப்போல வலியானும் வருத்தத்தானுங் கூறுவித்துக்கோடல் வாகையன்றாயிற்று. (19)

**(வகையின் சிறப்பிலக்கணம் பொதுவகையாற் கூறல்)**

**75.** அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமு
மைவகை மரபி னரசர் பக்கமு
மிருமூன்று மரபி னேனோர் பக்கமு
மறுவில் செய்தி மூவகைக் காலமு
நெறியி னாற்றிய வறிவன் றேயமும்
நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்
பாலறி மரபிற் பொருநர் கண்ணு
மனைநிலை வகையோ டாங்கெழு வகையிற்
றொகைநிலை பெற்ற தென்மனார் புலவர்.

இது வாகைத் திணைக்குப் பொதுவிலக்கணங் கூறினார், இன்னும் அதற்கேயாவதோர் சிறப்பிலக்கணம் பொதுவகையாற் கூறுகின்றது; மேற்கூறி வருகின்றாற்போலத் துறைப்படுத்திக் கூறுதற் கேலாத பரப்புடைச் செய்கை பலவற்றையுந் தொகுத்து ஒரே வொன்றாக்கி எழுவகைப்படுத்திக் கூறுதலின்.

**இ – ள்:** அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் - ஆறு கூற்றினுட்பட்ட பார்ப்பியற்கூறும்.

ஆறு பார்ப்பியலென்னாது வகையென்றதனான் அவை தலை இடை கடையென ஒன்று மும்மூன்றாய்ப் பதினெட்டாமென்று கொள்க; அவை ஓதல் ஓதுவித்தல் வேட்டல். வேட்பித்தல் கொடுத்தல் கோடல் என ஆறாம். இருக்கும் எசுரும் சாமமும் இவை தலையாய ஓத்து; இவை வேள்வி முதலியனவற்றை விதித்தலின் இலக்கணமுமாய், வியாகரணத்தான் ஆராயப்படுதலின்

1. ஓரீஇ - நீக்கி. இயல்பானே நன்றென்றாற் போல என்பது கருத்து.

இலக்கியமுமாயின. அதர்வமும் ஆறங்கமுந் தருமநூலும் இடை யாய ஒத்து; அதர்வம் வேள்வி முதலிய ஒழுக்கங் கூறாது பெரும் பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடுஞ் சூழும் மந்தி ரங்களும் பயிறலின் அவற்றோடு கூறப்படாதாயிற்று.

ஆறங்கமாவன, உலகியற் சொல்லை ஒழித்து வைதிகச் சொல்லை ஆராயும் நிருத்தமும், அவ்விரண்டையும் உடனா ராயும் ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரத்துவாசம் ஆபத்தம்பம் ஆத்திரேயம் முதலிய கற்பங்களும், நாராயணீயம் வாராகம் முதலிய கணிதங்களும் எழுத்தாராயிச்சி யாகிய பிரமமும், செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம்.

தருமநூலாவன, உலகியல்பற்றி வரும் மனுமுதலிய பதி னெட்டும்; இவை வேதத்திற்கு அங்கமானமையின் வேறாயின.

இனி, இதிகாசபுராணமும் வேதத்திற்கு மாறுபடுவாரை மறுக்கும் உறழ்ச்சிநூலும் அவரவர் அதற்கு மாறுபடக் கூறும் நூல்களும் கடையாய ஓத்து. எழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்ந்து இம்மைப்பயன் தருதலின் அகத்தியந் தொல்காப்பி யம் முதலிய தமிழ் நூல்களும் இடையாய ஓத்தாமென்றுணர்க; இவையெல்லாம் இலக்கணம். இராமாயணமும் பாரதமும் போல்வன இலக்கியம்.

இனித் தமிழ்ச் செய்யுட் கண்ணும் இறையனாரும் அகத்தி யனாரும் மார்க்கண்டேயனாரும் வான்மீகனாருங் கவுதமனாரும் போல்வார் செய்தன தலையும், இடைச்சங்கத்தார் செய்தன இடையும், கடைச் சங்கத்தார் செய்தன கடையுமாகக் கொள்க.

இங்ஙனம் ஓத்தினையும் மூன்றாகப் பகுத்தது, அவற்றின் சிறப்புஞ் சிறப்பின்மையும் அறிவித்தற்கு. இவற்றுள் தருக்கமுங் கணிதமும் வேளாளர்க்கும் உரித்தாம்.

இனி ஓதுவிப்பனவும் இவையேயாகலின் அவைகட்கும் இப்பகுதி மூன்றும் ஒக்கும். ஓதுவித்தலாவது கொள்வோனுணர் வுவகை அறிந்து அவன் கொள்வரக் கொடுக்கும் ஈவோன்றன் மையும் ஈதலியற்கையுமாம். வேட்டலாவது, ஐந்தீயாயினும் முத்தீயாயினும் உலகியற்றீயாயினும் ஒன்றுபற்றி மங்கலமரபி னாற் கொடைச் சிறப்புத் தோன்ற அவி முதலியவற்றை மந்திர விதி யாற் கொடுத்துச் செய்யுஞ் செய்தி. வேளாண்மை பற்றி வேள்வி

யாயிற்று. வேட்பித்தலாவது வேள்வியாசிரியர்க்கோதிய இலக்கணமெல்லாம் உடையனாய் மாணாக்கற்கு அவன்செய்த வேள்விகளாற் பெறும் பயனைத் தலைப்படுவித்தலை வல்லனாதல்; இவை மூன்று பகுதிய வாதல் போதாயனீயம் முதலியவற்றானுணர்க். கொடுத்தலாவது, வேள்வியாசானும் அவற்குத் துணையாயினாரும் ஆண்டு வந்தோரும் இன்புறுமாற்றான் [1]வேளாண்மையைச் செய்தல். கோடலாவது, கொள்ளத்தகும் பொருள்களை அறிந்து கொள்ளுதல். உலகு கொடுப்பினும் [2]ஊண்கொடுப்பினும் ஒப்ப நிகழும் உள்ளம்பற்றியும், தாஞ்செய்வித்த வேள்வி பற்றியும், கொடுக்கின்றான் உவகைபற்றியும், கொள்பொருளின் ஏற்றிழிவு பற்றியும், தலைஇடை கடை என்பனவுங் கொள்க.

இனி வேட்பித்தன்றித் தனக்கு ஒத்தினாற் கோடலுங் கொடுப்பித்துக் கோடலுந் தான்வேட்டற்குக் கோடலுந், [3]தாயமின்றி, இறந்தோர்பொருள் கோடலும், இழந்தோர்பொருள் கோடலும், அரசுகோடலும் துரோணாசாரியனைப் போல்வார் படைக்கலங்காட்டிக்கோடலும் பிறவுங் கோடற்பகுதியாம்.

பார்ப்பியலென்னாது பக்கமென்றதனானே பார்ப்பார் ஏனை வருணத்துக்கட் கொண்ட பெண்பால்கட்டோன்றின வருணத்தார்க்குஞ் சிகையும் நூலும் உளதேனும் அவர் இவற்றிற்கெல்லாம் உரியரன்றிச் சிலதொழிற்கு உரியரென்பது கொள்க. உதாரணம்:

ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்த
லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு
மறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி (பதிற்று. 24)

இஃது அந்தணர்க்குக் கூறிய பொது.

[4]முறையோதி னன்றி முளரியோ னல்லன்
மறையோதி னானிதுவே வாய்மை – யறிமினோ
[5]வீன்றாள் வயிற்றிருந்தே யெம்மறையு மோதினான்
சான்றான் மகனொருவன் றான்.

இஃது ஓதல்.

1. வேளாண்மை - உபகாரம்.
2. ஊண் - உணவு.
3. தாயம் - உரிமைக்காரர்.
4. முளரியோன் - பிரமன்.
5. ஈன்றாள் வயிற்றிருந்தே யெம்மறையு மோதினான் - சுகன.

*இனி ஓதற் சிறப்பும், ஓதினாற்கு உளதாஞ் சிறப்புங் கூறு தலுங் கொள்க.*

இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் – கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து. (நாலடி 14 – 2)

ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு
வேற்றுநா டாகா தமவேயா மாதலா
[1]லாற்றுணா வேண்டுவ தில்.

ஒத்த முயற்சியா னொத்து வெளிப்படினு
நித்திய மாக நிரம்பிற்றே – யெத்திசையுந்
தாவாத வந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட்
டோவாத [2]வோத்தி னொலி.

*இஃது ஓதுவித்தல்.*

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. (குறள் – அறிவுடைமை. 4)

*இஃது ஓதுவித்தற் சிறப்பு.*

[3]நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டி
னாறுணர்ந்த வொருமுதுநூ
லிகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
வுரைசால் சிறப்பி னுரவோர் மருக
வினைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சைச்
சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த வருங்கற்பி
னறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குற்

---

1. ஆற்றுணா - வழியுணவு (கட்டுச்சோறு). இதனைத் தோட்கோப்பு என்ப.
2. ஓத்து - வேதம். ஒலி எத்திசையும் நிரம்பிற்று என்க.
3. ஆறு - ஆறங்கம். முதுநூல் - வேதம். இகல்கண்டோர் - மாறுபட்ட நூல்களைக் கண்ட (செய்த) புறச்சமயத்தார். மிகல் - மிகுதி; கருவம். சாய்மார் - அழிக்கவேண்டி. மெய்கொளீஇ - உண்மைப்பொருளை அவர்களுக்கு ஏற்பச் சொல்லி. மூவேழ்துறை - இருபத்தொரு வேள்வித்துறை. புல்வாய்க் கலைப்பச்சை - மான்றோல். பூண்ஞாண் - பூணூல். வலை - சாலகம் என்னு மணியாகப் பத்தினிகள் அணியும் அணிவிசேடம். செல்வல் - செல்வேன்.

சிலசொல்லிற் பலகூந்த
னினக்கொத்தநின் னுணைத்துணைவியர்
தமக்கமைந்த தொழில்கேட்பக்
காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட்டா அது
நீர்நாண நெய்வழங்கியு
மெண்ணாணப் பலவேட்டு
மண்ணாணப் புகழ்பரப்பியு
மருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை
யென்றுங் காண்கதில் யாமே குடாஅது
பொன்படுநெடுவரைப் புயலேறு சிலைப்பிற்
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந்
தண்புனற் படப்பை யெம்மூ ராங்க
ணுண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ்
செல்வ லத்தை யானே செல்லாது
மழையண் ணாப்ப நீடிய நெடுவரைக்
கழைவள ரிமயம் போல
நிலீஇய ரத்தைநீ நிலமிசை யானே. (புறம். 166)

*இதனுள் வேட்டவாறும் ஈந்தவாறுங் காண்க.*

ஈன்ற வுலகளிப்ப வேதிலரைக் காட்டாது
வாங்கியதா யொத்தானம் மாதவத்தோ – னீந்த
[1]மழுவா ணெடியோன் வயக்கஞ்சால் வென்றி
வழுவாமற் காட்டிய வாறு.

*இது பரசுராமனைக் காசிபன் வேட்பித்த பாட்டு.*

*'நளிகட லிருங்குட்டத்து' என்னும் (26) புறப்பாட்டினுள், அந்தணன் வேட்பித்தலும் அரசன் வேட்டலும் வந்தது.*

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. (குறள் – ஈகை.3)

*இஃது ஈதல்.*

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்கண் ணவர். (குறள் – ஈகை. 8)

*இஃது ஈதற் சிறப்பு.*

[2]நிலம்பொறை யாற்றா நிதிபல கொண்டுங்
குலம்பெறுதீங் கந்தணர் கொள்ளார் – நலங்கிளர்
தீவா யவிசொரியத் தீவிளங்கு மாறுபோற்
றாவா தொளிசிறந்த தாம்.
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – குடிமரபு.)

*இஃது ஏற்றல்.*

---

1. மழுவாள் நெடியோன் - பரசுராமன்.
2. நிதி - திரவியம். குலம் பெறு தீங்கு - குலம் அடையுந்தீமை.

> [1]தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
> வான்சிறிதாப் போர்த்து விடும். (நாலடி 48)

இஃது ஏற்றற் சிறப்பு.

ஓதுவித்தலும் வேட்பித்தலும் ஏற்றலும் அந்தணர்க்கே உரிய

ஐவகை மரபின் அரசர் பக்கமும் - ஓதல் வேட்டல் ஈதல் காத்தல் தண்டஞ் செய்தல் என்னும் ஐவகையிலக்கணத்தை யுடைய அரசியற் கூறும்:

'வகை' என்றதனான் [2]முற்கூறிய மூன்றும் பொதுவும் பிற் கூறிய இரண்டுஞ் சிறப்புமாதல் கொள்க.

பார்ப்பார்க்குரியவாக விதந்த வேள்வியொழிந்த வேள்வி களுள் [3]இராசசூயமுந் துரங்கவேள்வியும் போல்வன அரசர்க் குரிய வேள்வியாம். கலிங்கங் கழுத்து யாத்துக் குளம்புங் கோடும் பொன்னணிந்த புனிற்றா நிரையுங், [4]கனகமும், கமுகும் அன்ன முதலியனவுஞ் செறிந்தபடப்பை சூழ்ந்த மனையுந், [5]தண்ணடை யுங், கன்னியரும், பிறவுங் கொடுத்தலும் மழுவா ணெடியோ னொப்ப [6]உலகு முதலியன கொடுத்தலும் போல்வன அவர்க்குரிய ஈதலாம். படைக்கலங்களாலும் நாற்படை யானுங் கொடைத் தொழிலானும் பிறவாற்றானும் அறத்தின் வழாமற் காத்தல் அவர்க்குரிய காப்பாம். அங்ஙனம் காக்கப்படும் உயிர்க்கு [7]ஏதஞ் செய்யும் மக்களையாயினும் விலங்கை யாயினும் பகைத்திறத்தை யாயினம் அறஞ்செய்யா அரசையாயினும் விதிவழியால் தண்டித் தல் அவர்க்குரிய தண்டமாம். இஃது அரசர்க்கு அறமும் பொரு ளும் இன்பமும் பயக்கும்.

'வகை' என்றதனானே களவு செய்தோர் இருக்கையிற் பொருள் கோடலும், ஆறிலொன்று கோடலும், [8]சுங்கங்கோட லும், அந்தணர்க்கு இறையிலி கொடுக்குங்கால் இத்துணைப்

---

1. தான் என்றது கொடுக்கும் பொருளை.
2. முற்கூறிய மூன்று - ஐவகையிலக்கணத்துள் முற்கூறிய மூன்று. பொது - ஏனை வருணத்தோர்க்கும் பொதுவானது.
3. துரங்கவேள்வி - அசுவமேதயாகம்.
4. கனகம் - பொன்.
5. தண்ணடை - மருதநிலத்தூர்.
6. உலகு - பூமி.
7. ஏதம் - தீங்கு.
8. சுங்கம் - மரக்கலங்களி லேற்றும்பொருட்கும் இறக்கும் பொருட்கும் வேந்தர் வாங்கும் பொருள்.

பொருள் நும்மிடத்து யான் கொள்வலெனக் கூறிக்கொண்டு அதுகோடலும், மறம் பொருளாகப் பகைவர் நாடுகோடலும், தமரும் அந்தணரும் இல்வழிப் பிறன் [1]றாயங்கோடலும், பொருளில்வழி வாணிகஞ் செய்து கோடலும், அறத்திற்றிந்தாரைத் தண்டத்திற்றகுமாறு பொருள் கோடலும் போல்வன கொள்க. அரசியலென்னாது 'பக்கம்' என்றதனான் அரசர் ஏனைய வருணத்தார்கட் கொண்ட பெண்பாற்கட் டோன்றிய, வருணத்துப் பகுதியோருஞ் சில தொழிற்குரியரென்று கொள்க. உதாரணம்:

[2]சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்
றைந்துடன் போற்றி யவைதுணை யாக
வெவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
காலை யன்ன சீர்சால் வாய்மொழி
யுருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடரெழு தோறும்
விருப்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி (பதிற்று. 21)

[3]கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்பச்
சாயறல் கடுக்குந் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவி னின்வழி வாழியர்
கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
பந்தர்ப்பயந்த பலர்புகழ் முத்தம்
வரையக நண்ணி குறும்பொறை நாடித்
தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம்பொறிக்
சுவைமரங் கடுக்குங் கவலைய மருப்பிற்
புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்
தீதுகளைத் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
யெஃகுடை யிரும்பி னுள்ளமைத்து வல்லோன்
சூடுநிலை யுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
நலம்பெறு திருமணி கூட்டு நற்றோ
ளொடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவி
லெண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து
சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவுங்

---

1. தாயம் - உரிமைப்பொருள்.
2. சொல் - சொல்லிலக்கண நூல். பெயர் - பொருளிலக்கண நூல். நாட்டம் - சோதிட நூல். கேள்வி - வேதம். நெஞ்சம் - உடங்கிய மனம். காலை - ஞாயிறு.
3. படிவம் - விரதம். உயர்ந்தோர் - தேவர். குறும்பொறை - சிறுமலை. பொறி - புள்ளி. கவலையமருப்பு - கவர்த்த மருப்பு. பாண்டில் என்றது வட்டமாக அறுத்ததோலை. பருதி - வட்டம். கிளை - இனம். வல்லோன் - யாகம் பண்ணுவிக்க வல்லோன். ஈரறிவு - இம்மையறிவு, மறுமையறிவு, பெரிய அறிவுமாம். நரைமுதாளம் - புரோகிதன். எச்சம் - பிள்ளைப்பேறு.

காவற் கமைந்த வரசுதுறை போகிய
வீறுசால் புதல்வர்ப் பெற்றனை யிவணர்க்
கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப
வன்னவை மருண்டனெ னல்லே னின்வயின்
முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை
வண்மையு மாண்பும் வளனு மெச்சமுந்
தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென
வேறுபல நனந்தலை பெயரக்
வற்றினை பெருமநின் படிமை யோனே. (பதிற்று. 74)

*என வருவனவற்றுள் ஓதியவாறும் வேட்டவாறுங் காண்க.*

ஒருமழுவாள் வேந்த னொருமூ வெழுகா
லரசடு வென்றி யளவோ – வுரைசான்ற
வீட்டமாம் பல்பெருந்தூ ணெங்கும் புசுப்படுத்து
வேட்டநாள் பெற்ற மிகை.

*இதுவும் வேட்டல்.*

*'விசையந்தப்பிய' என்னும் பதிற்றுப்பத்து ஈகை கூறிற்று.*

ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

*இது காவல் கூறிற்று.*

*'கடுங்கண்ண கொல்களிற்றான்' என்னும் (14) புறப்பாட்டுட் படைக்கலங் கூறியவதனாற் காத்தல் கூறியவாறுங் காண்க.*

[2]தொறுத்தவய லாரல்விறழ்நவு
மேறு பொருதசெறு வுழாது வித்துநவுங்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்த
லிருங்க ணெருமையி னிரைதடுக் குநவுங்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா வாம்ப லார்நவு
மொலிதெங்கி னிமிழ் மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பி
னாடுகவி னழிய [3]நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்

---

1. மழுவாள்வேந்தன் - பரசுராமன். மிகை - மேம்பாடு. மிகை வென்றி அளவோ என இயைக்க.
2. தொறு - ஆடு. நெய்தல் தடுக்குநவு மென்றது - நெய்தல் தானே போதுமான வுணவாதலாலே வேற்றிரையிற் செல்லாமல் தடுப்பனவு மென்றபடி. புனல்வாயில் - வாய்ந்தலை (வாய்க்கால்)
3. நாம் - அச்சம். நாம என ஈறு திரிந்தது.

[1]விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
வூரிய நெருஞ்சி நீறாடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்
துள்ள மழிய வூக்குநர் மிடறபுத்
துள்ளுநர் பனிக்கும் பாழா யினவே
காடே கடவுண் மேன புறவே
யொள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
வாறே யவ்வனைத் தன்றியு ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி
யழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெருமநீ காத்த நாடே. (பதிற்று. 13)

*இதனுண் மறத்திற் சென்று நாட்டை அழித்தவாறும், அறத்திற் றிரிந்த வேந்தனையழித்து அவன் நாட்டைக் குடியோம்பிக் காத்தவாறுங் கூறிற்று.*

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். (குறள் – செங். 10)

*இது தண்டம்.*

*இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் - ஓதலும் வேட்டலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமுமாகிய அறுவகை இலக்கணத்தையுடைய வாணிகர்பக்கமும், வேதம்ஒழிந்தன ஓதலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமும் [2]வழிபாடுமாகிய அறுவகை இலக்கணத்தையுடைய வேளாளர் பக்கமும்:*

*வாணிகரையும் வேளாளரையும் வேறுகூறாது 'இருமூன்று மரபி னேனோர்' எனக் கூடவோதினார், வழிபாடும் வேள்வியும் ஒழிந்த தொழில் இருவர்க்கு மொத்தலின்.*

*இனி வேளாளர்க்கு வழிபாடு கொள்ளாது பெண்கோடல் பற்றி வேட்டல் உளதென்று வேட்டலைக்கூட்டி ஆறென்பாருமுளர்.*

---

1. விடத்தர் - ஒரு மரம், கார் உடை - கருவேல், கவை - பிளவுபட்ட. கழுது - பேய் ஊர்தல் - பரத்தல், பறந்தலை - பிணஞ்சுடும் காட்டிடம். அழல் - அங்காரகன் = செவ்வாய் என்னும் கிரகம். வெள்ளி - சுக்கிரன். நிற்ப - நிலைபெற.

2. வழிபாடு - மேற்குலத்தாரை வழிபடுதல்.

வழிபாடு இருவகை வேளாளர்க்கும் உரித்து. இனி வேட்டலைக் கூட்டுவார் அரசராற் சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிபாடு உரித்தென்பர்.

'புக்கம்' என்பதனான் வாணிகர்க்கும் வேளாளர்க்கும் அன்னியராகத் தோன்றினாரையும் அடக்குக. ஈண்டுப் பக்கத்தா ராகிய குலத்தோர்க்குந் தொழில்வரையறை அவர்நிலைகளான் வேறுவேறு படுதல்பற்றி அவர்தொழில் கூறாது இங்ஙனம் புக்கம் என்பதனான் அடக்கினார். [1]இவை ஆண்பால் பற்றி உயர்ச்சிகொண்டன. உதாரணம்:

[3]ஈட்டிய தெல்லா மிதன்பொருட் டென்பதே
காட்டிய கைவண்மை காட்டினார் – வேட்டொறுங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையுஞ் சங்கும்போற் றந்து.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – குடிமரபு)

இது வாணிகரீகை.

[3]உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு
மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு
மூத்தோன் வருக வென்னா தவரு
ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே. (புறம். 183)

இது வேளாளர் ஓதலின் சிறப்புக் கூறியது.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்கண் ணவர். (குறள் – ஈகை. 8)

இஃது இருவர்க்கும் ஈதற்சிறப்புக் கூறிற்று.

போர்வாகை வாய்த்த புரவலரின் மேதக்கா
[4]ரேர்வாழ்ந ரென்பதற் கேதுவாஞ் – சீர்சா

1. இவை என்றது, அடக்கப்படுவனவற்றை. அடக்கப்படுவனவும், பெண் இழிந்த வருணமாயினும் ஆண் உயர்ந்த நிலைமைபற்றி ஆண்பால் வருணத்துக் குரிய பக்கத்துள் அடக்கப்பட்டன என்பது கருத்து.

2. இது - ஈகை. சென்னி - சோழன். புகார் - காவிரிப்பூம்பட்டினம். தாமரை - பதுமநிதி. சங்கு - சங்கநிதி.

3. பிற்றைநிலை - தாழ்ந்துநிற்குநிலை = வழிபாட்டுநிலை. ஓரன்ன - ஒருதன்மையாகிய. ஆறு - வழி. அரசு - அரசன். செல்லும் - ஒழுகுவான்.

4. ஏர்வாழ்நர் - உழுதுண்டுவாழ்வார்.

**லுரைகாக்கு மன்னர்க் கொளிபெருகத் தாந்த**
**நிரைகாத்துத் தந்த நிதி.**

*இது வேளாளர் நிரைகாத்தது.*

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்**
**தொழுதுண்டு பின்செல் பவர். (குறள் – உழவு. 3)**

*இஃது உழவுத்தொழிற் சிறப்பு இருவர்க்குங் கூறியது.*

**வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவுந் தமபோற் செயின். (குறள் – நடுவு. 10)**

*இது வாணிகச் சிறப்பு இருவர்க்குங் கூறியது.*

**[1]இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை**
**விடுப்ப வொழிதலோ டின்ன – குடிப்பிறந்தார்**
**குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ**
**டொன்றா வுணரற்பாற் றன்று. (நாலடி – குடி. 3)**

*இது வழிபாடு கூறியது; ஏனைய வந்துழிக் காண்க.*

*மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்* - காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகலாற்றினை இறப்பும் நிகழ்வும் எதிர்வுமென்னும் மூவகைக் காலத்தினும் வழங்கும் நெறியான் அமைத்த முழுதுணர்வுடையோன் பக்கமும்:

[2]தேயத்தைக் 'கிழவோ டேஎத்து' (இறையனார். 8) என்றாற் போலக் கொள்க. உதாரணம்:

**[3]வாய்மை வாழ்ந மூதறி வாள**
**நீயே யொருதனித் தோன்ற லுறைபதி**
**யாருமி லொருசிறை யானே தேரி**
**னவ்வழி வந்தநின் னுணர்வுமுதற் றங்குந்**
**தொன்னெறி மரபின மூவகை நின்றன**
**காலமு நின்னொடு வேறென**
**யாரோஒ பெருமநிற் றேர்கு வோரே.**

**வாடாப் போதி மரகதப் பாசடை**
**மரநிழ லமர்ந்தோ னெஞ்சம் யார்க்கு**
**மருளின் றீந்தே னுரைத்துநனி நெகிழ்ந்து**
**மலரினு மெல்லி தென்ப வதனைக்**

---

1. இருக்கை - ஆசனம்.
2. தேயம் - இடம் (= பக்கம்) தேஎத்து - இடத்து.
3. ஒருசிறை - ஒரு பக்கம் = ஏகாந்தம். ஆன், ஏ அசைகள். வந்த - தோன்றிய உணர்வு - ஞானம். முதல்தங்கும் - முதன்மையிற் பொருந்தும். மூவகை நின்றன காலம் - மூவகையாக நின்றனவாகிய காலம்.

**காமர் செல்வி [1]மாரன் மகளிர்**
**நெடுமா மழைக்கண் விலங்கிநிமிர்ந் தெடுத்த**
**வாளும் போழ்ந்தில வாயின்**
**யாதோ மற்றது மெல்லிய வாறே.**

இதுவுமது.

[2]கலசயோனியாகிய **அகத்தியன்** முதலியோரும் அறிவ ரென்றுணர்க.

நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும் - அவ்வறிவர் கூறிய ஆகமத்தின் வழிநின்று வீடுபெற முயல்வார்க்கு உரியவாகிய எண்வகை மார்க்கத்துத் தவம்புரியுங் கூறும்:

'வழக்கு' என்றதனான் அந்நாலிரண்டுந் தவம்புரிவார்க்கு உரியனவுந் தவஞ்செய்து யோகஞ்செய்வார்க்கு உரியனவுமென இருவகையவென்று கொள்க.

அவற்றுள் தவஞ்செய்வார்க்கு உரியன:- ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம்பொறுத்தல், தட்பம்பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம்வரையறுத்தல், இடையிட்டு மொழி தல், வாய்வாளாமை என எட்டும்; இவற்றிற்கு உணவினும் நீரினுஞ் சென்ற மனத்தைத் தடுத்தலும், ஐந்தீநாப்பணும் நீர் நிலையினும் நிற்றலும், கடலுங் காடும் மலையும் முதலியவற்றில் நிற்றலும், தாமரையும் ஆம்பலும் யாமையும் முதலிய ஆசனத் திருத்தலும், உண்டற்காலை உரையாடாமையும், துறந்த காற் றொட்டும் வாய்வாளாமையும் பொருளென்றுணர்க.

இனி யோகஞ் செய்வார்க்குரியன, இயமம் நியமம் ஆசனம் வளிநிலை தொகைநிலை பொறைநிலை நினைதல் சமாதி என எட்டும்; இவற்றை,

**பொய்கொலை களவே காமம் பொருணசை**
**யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்.**

**பெற்றதற் குவத்தல் [3]பிழம்புநனி வெறுத்தல்**
**கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை**

---

1. மாரன் - மன்மதன். இவன் மகளிர் என்றது காமம், மோகம், பொறை யின்மை என்பவற்றை. மகளிர்கண்களாகிய வாளும் அதனைப் பிளக்க முடி யாது போயினவாயின் அதனை மெல்லிது என்று கூறுவது எத்தன்மையது என்பது கருத்து.

2. கலசயோனி - குடத்திற் பிறந்தவன்.

3. பிழம்பு - உடம்பு.

பூசனைப்பெரும்பய [1]மாசாற் களித்தலொடு
நயனுடை மரபி னியம மைந்தே

[2]நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென்
றொத்த நான்கி னொல்கா நிலைமையோ
டின்பம் பயக்குஞ் சமமே முதலிய
வந்தமில் சிறப்பி னாசன மாகும்.

[3]உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந்
தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை.

பொறியுணர் வெல்லாம் [4]புலத்தின் வழாம
லொருவழிப் படுப்பது தொகைநிலை யாமே

மனத்தினை யொருவழி நிறுப்பது பொறைநிலை.
நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற்
குறித்த பொருளொடு கொளுத்த னினைவே.

ஆங்கனம் குறித்த வாய்முதற் பொருளொரு
தான்பிற னாகாத் தகையது சமாதி.

என்னும் உரைச்சூத்திரங்களா னுணர்க.

'பக்கம்' என்றதனான், முட்டின்றி முடிப்போர் முயல்வோர் என்பனவும்,

நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி – யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி." (பு. வெ. வாகை. 14)

என்பனவுங் கொள்க.

ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளி
ரிழைநிலை நெகிழ்த்த [5]மள்ளற் கண்டிகுங்
கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ மாட்டிப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே. (புறம். 251)

---

1. ஆசான் - குரு
2. நிற்றல் முதலிய நான்கும் ஆசன விகற்பம். சில ஆசனம் நின்றும் சில ஆசனம் இருந்தும் இப்படிச் செய்யப்படும் என்றபடி. ஒல்கா நிலைமை - வேறுபாடான நிலை. சமமுதலியன என்றது சமாசன முதலியவற்றை.
3. உந்தி - கொப்பூழ் இருவகைவளி - இடை பிங்கலையால் வருங்காற்று = பிராணவாயு வளிநிலை - பிராணயாமம்.
4. புலம் - விடயம்.
5. மள்ளன் - வீரன். அவனைக்கண்டேம்; அவன் இப்பொழுது புறந்தாழ் புரிசடை புலர்த்தாநின்றான் என்க.

[1]வைததனை யின்சொலாக் கொள்வானு நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானு – மூறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். (திரிகடுகம் 48)

ஒருமையு ளாமைபோ [2]லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து. (குறள் –அடக்க. 6)

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும். (குறள் – அவா. 10)

நீஇ ராட னிலக்கிடை கோட
றோஒ லுடுத்த றொல்லெரி யோம்ப
லூரடை யாமை யுறுசடை புனைதல்
காட்டி லுணவு கடவுட் பூசை
யேற்ற தவத்தி னியல்பென மொழிப.

எனவரும். ஏனைய வந்துழிக் காண்க.

*அறிமரபிற் பொருநர்கட் பாலும்* - தாந்தாம் அறியும் இலக்கணங்களாலே போர்செய்வாரிடத்துக் கூறுபாடும்:

அவை சொல்லானும் பாட்டானுங் கூத்தானும் மல்லானுஞ் சூதானும் பிறவாற்றானும் வேறலாம். உதாரணம்:

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். (குறள் – சொல்வன். 8)

இது சொல்வென்றி.

வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக் – கண்டறியக்
[4]கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடையா
ழந்நரம்பு மச்சுவையு மாய்ந்து. (பு. வெ. ஒழிபு. 18)

இது பாடல்வென்றி.

[5]கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு – பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றாடுந்
தொடுகழன் மன்னன் றுடி. (பு. வெ. ஒழிபு. 17)

இஃது ஆடல்வென்றி.

---

1. வைதது - ஏசியது. கட்டி - வெல்லக்கட்டி.
2. ஐந்து - பஞ்சப்பொறி.
3. பேராவியற்கை - வீடு.
4. கின்னரம் - ஒருபறவை.
5. பாணி - தாளம். நடை - செலவு. தூக்கு - இசை. துடி - துடிக்கூத்து.

[1]இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
யொருகான் மார்பொதுங் கின்றே யொருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
நல்கினுந் நல்காஅ னாயினும் வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதி லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல
விருதலை யொசிய வெற்றிக்
களம்புகு மல்லர்க் கடந்தடு நிலையே. (புறம். 80)

*இது மல்வென்றி.*

[2]கழகத் தியலுங் கவற்றி னிலையு
மழகத் திருநுதலா ளாய்ந்து – புழகத்துப்
பாய வகையாற் பணிதம் பலவென்றா
ளாய வகையு மறிந்து. (பு. வெ. ஒழிபு. 16)

*இது சூதுவென்றி.*

*அனைநிலை வகையோடு ஆங்கு எழுவகையில் தொகை நிலை பெற்றது என்மனார் புலவர் - அக்கூறுபட்ட ஆறுபகுதியும் நிலைக்களமாக அவற்றுக்கண் தோன்றிய வேறுபட்ட கூறுபாட்டோடு முன்னைய ஆறுங் கூட்டி அவ்வெழுகூற்றால் துறைபல திரண்ட தொகை பெற்றது அவ்வாகைத்திணை என்று கூறுவாராசிரியர் என்றவாறு.*

*அனையென்றது சுட்டு. நிலை - நிலைக்களம், நிலையது வகை. ஆங்கென்றதனை அனைநிலைவகையொ டென்பதன்கண் வகைக்குமுன்னே கூட்டுக. ஓடு, எண்ணிடைச் சொல்லாதலின் முன்னெண்ணியவற்றொடு கூட்டி எழாயிற்று.*

*இனிப் பார்ப்பனப்பக்கத்து வகையாவன: பார்ப்பார்க்குப் பார்ப்பனக் கன்னியிடத்துக் கற்புநிகழ்வதற்குமுன்னே களவில் தோன்றினானும், அவள் பிறர்க்குரியளாகிய காலத்துக் களவில் தோன்றினானும், அவள் கணவனை இழந்திருந்துழித் தோன்றினானும், ஒழிந்த மூவகை வருணத்துப் பெண்பாற்கண்ணும் இவ்வாறே தோன்றினாரும், அவரவர் மக்கட்கண் அவ்வாறே பிறழத் தோன்றினாருமாகிய சாதிகளாம். இன்னோருந் தந்தந்*

1. வருதார் - செய்கின்ற உபாயம். பணை - மூங்கில்.

2. கழகம் - சூது. கவறு - சூதாடுங்கருவி. அளகம் - பனிச்சை; எதுகை நோக்கி ழகரமாயிற்று. புழகம் - புகழ்; அகம் எனப் பிரிப்பர் உரைகாரர். ககரந் தொக்கது என்பர். புளகத்தோடு என்றுங்கூறலாம்; எதுகை நோக்கி ழகரமாயிற்று. பணிதம் - ஒட்டப்பொருள். ஆயம் - ஆதாயம்.

*தொழில்வகையாற் பாகுபட மிகுதிப்படுத்தல் வாகைத்திணை யாம். ஒழிந்த பகுதி ஐந்தற்கும் இஃதொக்கும். இன்னும் பெண் பாலுயர்ந்து ஆண்பாலிழிந்த வழிப் பிறந்த சாதிகளும் அனை நிலைவகைப்பாற்படும். யோகிகளாய் உபாயங்களான் முக்காலமு முணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன்றேயத்து அனைநிலை வகையோராவர்; அவர்க்கு மாணாக்கராகித் தவஞ்செய்வோர் தாபதப் பக்கத்தாராவர். தகர்வென்றி பூழ்வென்றி கோழிவென்றி முதலியன பாலறி மரபிற் பொருநர்கண் அணைநிலைவகையாம்.*

*ஒரு வரையறைப்படாது பலதுறைப்படுவனவற்றையெல் லாந் தொகைநிலையெனத் தொகுத்து ஓரோவொன்றாக்கிக் கூறி னார், தொகுத்துக் கூறலென்னும் உத்திவகையான். [1]பார்ப்பன வாகை அரசவாகை யென்றோதினால் அவற்றின் பகுதி அடங் காமையிற் குன்றக் கூறலாமாதலின் இங்ஙனமோதினார். காட் டாதனவற்றிற்கு உதாரணங்கள் வந்துழிக் காண்க. (20)*

***(மறத்துறை ஒன்பதும் அறத்துறை யொன்பதுமாக வாகைக் குரிய துறை பதினெட்டெனல்)***

**76.** **கூதிர் வேனி லென்றிரு பாசறைக்**
**காதலி னொன்றிக் கண்ணிய மரபினு**
**மேரோர் களவழி யன்றிக் களவழித்**
**தேரோர் தோற்றிய வென்றியுந் தேரோர்**
**வென்ற கோமான் முன்றேர்க் குரவையு**
**மொன்றிய மரபிற் பின்றேர்க் குரவையும்**
**பெரும்பகை தாங்கும் வேலி னானு**
**மரும்பகை தாங்கு மாற்ற லானும்**
**புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமு**
**மொல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்**
**சொல்லிய வகையி னொன்றொடு புணர்ந்து**
**தொல்லுயிர் வழங்கிய வவிப்பலி யானு**
**மொல்லா ரிடவயிற் புல்லிய பாங்கினும்**
**பகட்டி னானு மாவி னானுந்**
**துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கமுங்**
**கட்டி னீத்த பாலி னானு**

---

1. பார்ப்பனவாகை என இவ்வாறு கூறுபவர் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர். இவரும் அவ்வாறு வகுத்துக்கூறினார் என்றபடி.

மெட்டுவகை நுதலிய வவையத் தானுங்
கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானு
மிடையில் வண்புகழ்க் கொடைமை யானு
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானு
மருளொடு புணர்ந்த வகற்சி யானுங்
காம நீத்த பாலி னானுமென்
றிருபாற் பட்ட வொன்பதிற்றுத் துறைத்தே.

இது மேல் தொகுத்துக்கூறிய எழுவகைத்திணையுள் அடங் காதவற்றிற்கு முற்கூறிய துறைகளேபோலத் தொடர்நிலைப் படுத்தாது மறத்திற்கு ஒன்பதும் அறத்திற்கு ஒன்பதுமாக இரு வகைப்படுத்துத் துறைகூறுகின்றது.

இ — ள்: கூதிர் வேனில் என்று இருபாசறைக் காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும் - கூதிரெனவும் வேனிலெனவும் பெயர்பெற்ற இருவகைப் பாசறைக்கண்ணுங் காதலால் திரி வில்லாத மனத்தனாகி ஆண்டு நிகழ்த்தும் போர்த்தொழில் கரு திய மரபானும்:

[1]கூதிர், வேனில் ஆகுபெயர். அக்காலங்களிற் சென்றிருக்கும் பாசறையாவது தண்மைக்கும் வெம்மைக்குந் தலைமைபெற்ற காலத்துப் போகத்திற் பற்றற்று வேற்றுப்புலத்துப் போந்திருத்தல். இக்காலங்களிற் பிரிதல் வன்மையின் இது வென்றியாயிற்று. தலைவிமேற் காதலின்றிப் போரின்மேற் காதல்சேறலின் ஒன்றி யென்றார். இக்காலத்துச் சிறப்புப்பற்றி இரண்டையும் ஓதினா ரேனும் [2]ஓர்யாட்டை எல்லைஇருப்பினும் அவற்று வழித் தோன்றிய ஏனைக் காலங்களும் இரண்டாகி அவற்றுள் அடங்கு மென்பது ஆசிரியர் கருத்தாயிற்று.

வினைவயிற் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறை யேமே (அகம். 84)

எனத் தலைவியை நினைவன வாகைக்கு வழுவாம். அகத்திற்கு வழுவன்றென்றற்கு மரபென்றார். ஏனையகாலங்களாற் பாசறைப்

1. கூதிர் - வேனில் என்பன அவ்வக்காலத்துப் பாசறையை உணர்த்தலின் ஆகுபெயரென்றார். கூதிர் - குளிர். வேனில் - வெய்யில், வெப்பம்.

2. ஓரியாண்டு - ஓர்யாட்டை என ஐ பெற்று வலிந்துநின்றது.

*பெயர் இன்றென்றற்கு இரண்டானும் பெயர் கூறினார். இங்ஙனங் கூறவே முற்கூறிய துறைபோலத் தொடர்நிலைப்படுத்தலின்றாய் இதனானே பலவாகி ஒரு துறைப்படுத்தலும் இன்றாயிற்று.*

*இனி இருத்தற்பொருண் முல்லையென்பதேபற்றிப் பாச றைக்கண் இருத்தலாற் பாசறை முல்லையெனப் பெயர் கூறு வாரும் உளர். உதாரணம்:*

**[1]மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடைய**
**மாதர்பாற் பெற்ற வலியளவோ – கூதிரின்**
**வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலா**
**னைங்கணை தோற்ற வழிவு.**
**(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – பாசறை. 4)**

**[2]கவலை மறுகிற் கடுங்கண் மறவ**
**ருவலைசெய் கூறை யொடுங்கத் – துவலைசெய்**
**கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்**
**மூதின் மடவாண் முயக்கு. (பு. வெ. வாகை. 15)**

*ஏரோர் களவழி (த் தேரோர் தோற்றிய வென்றி) யன்றிக் களவழித் தேரோர் தோன்றிய வென்றியும் - வேளாண் மாக்கள் விளையுட்காலத்துக் களத்துச் செய்யுஞ் செய்கைகளைத் தேரேறி வந்த திணைப்பொருநர் முதலியோர் போர்க்களத்தே தோற்று வித்த வென்றியன்றிக் களவழிச் செய்கைகளை மாறாது தேரேறி வந்த புலவர் தோற்றுவித்த வென்றியானும்:*

*என்றது நெற்கதிரைக்கொன்று களத்திற் குவித்துப் போர் [3]அழித்து, அதரிதிரித்துச் சுற்றத்தொடு நுகர்வதற்குமுன்னே கடவுட் பலிகொடுத்துப் பின்னர்ப் பரிசிலாளர் முகந்துகொள்ள*

---

1. மூதில் - பழையமனை; முதுகுடி. முல்லைசால்கற்பு - இருத்தல் ஒழுக்க மமைந்த கற்பு. வேந்தனுக்கு வேனிலான் தன் ஐங்கணையுந்தோற்ற அழிவு, மாதர்பாற் பெற்ற வலியளவோ அதினுங்கூட என்றபடி. எனவே, பாசறை யில் தங்கிய வேந்தனிடம் காமன் தன் செயல்புரியும் வலியின்றி அடைந்த தோல்வியளவு இல்லிடத்தில் வேந்தனைப் பிரிந்து தனித்திருந்த அவன் மனைவியிடம் தன் ஆற்றல் காட்டிப்பெற்ற வெற்றி அளவினுங் கூட என்பது கருத்து. வினைவலியின் மூண்டுநிற்றலாலே தலைவியின் பிரிவு தலைவனை வருத்தவில்லை என்பது இதன் சுருக்கமாகும்.

2. கவலை - கவர்த்தவழி. உவலை - தழை.

3. அழித்தல் - குலைத்தல். அதரிதிரித்தல் - எருதுகளைப்பூட்டி வளைத்து நெற்போரை மிதிப்பித்தல். இதனை இக்காலத்துச் சூடு மிதித்தல் என்பர்.

*வரிசையின் அளிக்குமாறுபோல அரசனும் நாற்படையையும் கொன்று களத்திற் குவித்து எருதுகளிறாக வாண்மடலோச்சி அதரிதிரித்துப் பிணக்குவையை நிணச்சேற்றொடு உதிரப் பேருலைக்கண் ஏற்றி 'ஈனாவேண்மாள் இடந்துழந்தட்ட' கூழ்ப் பலியைப் பலியாகக் கொடுத்து எஞ்சிநின்ற யானை குதிரைகளையும் ஆண்டுப் பெற்றன பலவற்றையும் பரிசிலர் முகந்து கொள்ளக் கொடுத்தலாம். உதாரணம்:*

இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் படைந்த
குருதிப் பல்லிய முரசுமுழக் காக
வரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
[1]கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
யீரச் செறுவிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்
கான நரியோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள

---

வாண்மடல்லூச்சி - வாளாகிய மடலைச் செலுத்தி நெற்போரை மிதிப்பிப் போர் எருதுகளைக் கோலோச்சி மிதிப்பித்தல் வழக்கு; கோலுக்குப் பதிலாக அக்காலத்துப் பனங்கருக்கைக் காட்டிச் செலுத்தி மிதிப்பித்தனர்போலும். மடல் என்பதற்குப் பனங் கருக்கு என்று பொருள் கூறினர். டாக்டர் சாமிநாதஐயரவர்கள். (புறம். 370ம் செய்யுட் கீழ்க்குறிப்புரை) - கருக்கைச் சீவிப் பனை மட்டையால் எருதுகளுக்கு அடிப்பது இக்காலத்தும் வழங்குகின்றது. வேறு பொருளுளதேனுங் கொள்க. "ஈனா வேண்மா ளிடந்துழந் தட்ட" என்பது புறம். 372ம் செய்யுளடியினுள் வருகின்றது. வேண்மாள் என்பது வேளாளர் குலத்துப் பிறந்த பெண்ணுக்குப் பெயராய்வருதல், பதிற்றுப்பத்தில் 2ம் பதிகச் செய்யுளில் "வெளியன் வேண்மா ணல்லினி யீன்றமகள்" என வருவதால் அறியலாம். ஈனாத என்பது மகப்பெறாத என்னும் பொருளையுணர்த்தி வேண்மாளை விசேடித்து நின்றது. 'வதுவை வேண்மாள்' எனச் சிலப்பதிகாரத்தினும் வருகின்றது. ஈனாவேண்மாள் என்பது கூழடும் பெண்ணைக் குறித்துக் கூறப்பட்டதுபோலும்.

1. கணை - அம்பு. மிளிர்த்தல் - கீழ்மேலாக மறித்தல் (உழுது புரட்டல்). கழுது - பேயில் ஒரு சாதி. பாடுநர்க்கு - பாடி வருபவர்களுக்கு ஈதற்பொருட்டு.

தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
வோடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே. (புறம். 369)

'நளிகட லிருங்குட்டத்து' என்னும் (26) புறப்பாட்டுப்பலி கொடுத்தது.

[1]களவழிநாற்பது புலவர் களவழியைத் தோற்றுவித்தது.

[2]ஓஒ வுவமை யுறழ்வின்றி யொத்ததே
காவிரி நாடன் கழுமலங் கொண்ட நாண்
மாவுதைப்ப மாற்றார் குடையெல்லாங் கீழ்மேலா
யாவுதை காளாம்பி போன்ற புனனாடன்
மேவாரை யட்ட களத்து. (களவழி.36 – 40)

தேரோர்வென்ற கோமான் முன்தேர்க் குரவையும் - தேரின் கண்வந்த அரசர்பலரையும் வென்ற வேந்தன் வெற்றிக்களிப் பாலே தேர்த்தட்டிலேநின்று போர்த்தலைவரோடு கைபிணைத் தாடுங் குரவையானும்: உதாரணம்:

சூடிய பொன்முடியும் பூணு மொளிதுளங்க
வாடிய கூத்தரின்வேந் தாடினான் – வீடிக்
[3]குறையாடல் கண்டுவந்து கொற்றப்போர் வாய்த்த
[4]விறையாட வாடாதார் யார்.

---

தேய்வை வெண்காழ் - சந்தனக்கட்டை விசிபிணி - விசித்த வார்க்கட்டு. வேய்வை - குற்றம். வந்திசின் - வந்தேன். முகவை - ஏற்றுக்கொள்ளும் பரிசில்.

1. களவழிநாற்பது - பதினெண்கீழ்க் கணக்கு நூலுளொன்று. இது போர்க் களத்தைப் பாடியது. களவழி - களத்தினிடம்.

2. உறழ்வு - மாறுபாடு. கழுமலம் - சீகாழி. ஆவுதை காளாம்பி - மேயும் ஆக்கள் காலாலிடறிய காளான். காளான் கீழ்மேலாயவாறுபோலக் குடைகளும் கீழ்மேலவாய்க் கிடந்தன என்க. காம்பு மேலாகவுங் குடை கீழாகவுங் கிடந்தன என்றபடி.

3. குறை - உடற்குறை.

4. இறை - அரசன்.

[1]விழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
திலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே. (பதிற்று. 56)

*ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும் - தேரோரைவென்ற கோமாற்கே பொருந்திய இலக்கணத்தானே தேரின்பின்னே கூழுண்ட கொற்றவை கூளிச்சுற்றம் ஆடுங்குரவையானும்: உதாரணம்:*

[2]வென்று களங்கொண்ட வேந்தன்றேர் சென்றதற்பின்
கொன்ற பிணநிணக்கூழ் கொற்றவை – நின்றளிப்ப
வுண்டாடும் பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டா டினகுரவைக் கூத்து
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – களம்.12)

*என வரும்.*

[3]களிற்றுக் கோட்டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை துயல்வரச் சூடிப் புணர்த்தின
மானாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
வுருகெழு பேஎய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களங்கிழ வோயே (புறம். 371)

*என்பதும் அது.*

*பெரும்பகை தாங்கும் வேலினாலும் - போர்க்கணன்றியும் பெரியோராகிய பகைவரை [4]அத்தொழிற்சிறப்பான் அஞ்சுவித்துத் தடுக்கும் வேற்றொழில் வன்மையானும்:*

---

1. வியலுள் - அகன்ற ஊர். கோடியர் - கூத்தர். வாழ்ச்சி - வெற்றிச்செல்வம். வாழ்ச்சிக் களமெனக் கூட்டுக. ஆடுங்கோவல்லனல்லன் என இயைக்க.

2. கொற்றவை யளிப்பக் கூழ்உண்டு (குரவை) ஆடும் பேய்கள் போர்க்களத்திலே அரசனளிக்கும் பரிசில் கொண்டு ஆடின குரவைக் கூத்துக்கண்டு உவந்தன என்பது பொருள். இதில் உண்டு ஆடும் என்பதே பேயாடற்குதாரணமாகும். பரிசில் பெறுவோர் வீரரும் பாணர் முதலியோருமாவர். இனி உண்டு கொண்டாடிய பேய்கள் பரிசில் கண்டு உவந்தனவாய்க் குரவைக் கூத்தைத் தொடங்கி ஆடின என்று கூறுவாருமுளர்.

3. யானைக்கோடுபோன்ற வெள்ளெயிறு. துயல்வர - அசைய, தலையிற்சூடி என்க. இச்செய்யுளின் முதல் (அகன்றலை வையத்து) என்பது.

4. அத்தொழில் - வேலாலெறியுந் தொழில். வேலைப் புகழ்தல் என்பர் இளம்பூரணர்.

*காத்தற்றொழிலன்றி அழித்தற்றொழில் பூண்ட முக்கட் கடவுட்குச் சூலவேல் படையாதலானும் முருகற்கு வேல் படையாதலானுஞ் சான்றோர் வேற்படையே சிறப்பப் பெரும்பான்மை கூறலானும் வேலைக்கூறி ஏனைப்படைகளெல்லாம், 'மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின், மொழியா ததனையு முட்டின்றி முடித்தல்' (666) என்னும் உத்தியாற் பெறவைத்தார். உதாரணம்:*

[1]குன்று துகளாக்குங் கூர்ங்கணையான் வேலெறிந்
தன்று திருநெடுமா லாடினா — னென்றும்
பனிச்சென்று மூளாத பல்கதிரோன் சேயோ
டினிச்சென் றமர்பொரா யென்று

*என்பது பாரதம்.*

[2]இரும்புமுகஞ் சிதைய நூறி யொன்னா
ரருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவு
மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
யுளனென வரூஉ மோரொளி
வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே (புறம். 309)

*என்பதும் அது.*

*'இவ்வே, பீலியணிந்து' என்னும் (95)* புறப்பாட்டும் *அது*

*அரும்பகை தாங்கும் ஆற்றலானும் - வெலற்கரும் பகைவர் [3]மிகையை நன்மதியாது எதிரேற்றுக்கொள்ளும் அமைதியானும்:*

*உதாரணம் :*

[4]எருது காலுறா திளைஞர் கொன்ற
சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ருண்டுகடை தப்பலி
னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
வரகுகட னீர்க்கு நெடுந்தகை
யரசுவரிற் றாங்கும் வல்லா ளன்னே. (புறம். 327)

*'களம்புக லோம்புமின்' என்னும் (87)* புறப்பாட்டும் *அது.*

---

1. கணையாலே வேலையெறிந்து மால் ஆடினான் என்க. கதிரோன் சேய் - கன்னன்.
2. புற்றம் - புற்று. மன்றம் - பொதுவில் (பொதுவிடம்) ஒளி என்னைக் கண்ணது என்க. என்னை - என்தலைவன்.
3. மிகை - மேம்பாடு.
4. கடவர் - கடன்காரரர். மிச்சில் - மிச்சவரகு. ஒற்கம் சொலிய - வறுமை நீங்க. கடை - வாயில். தப்பல் - நீங்கல். கடனீர்க்கும் - கடன் வாங்கும்.

*வாழ்க்கை புல்லா வல்லாண் பக்கமும் - உயிர்வாழ்க்கையைப் பொருந்தாத வலிய ஆண்பாலின் கூறுபாட்டானும்:*

*'பக்கம்' என்றதனாற் றாபதப்பக்கமல்லாத போர்த்தொழிலாகிய வல்லாண்மையே கொள்க. உதாரணம்:*

[1]கலிவர லூழியின் வாழ்க்கை கடிந்து
மலிபுகழ் வேண்டு மனத்த – ரொலிகடல்சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார்
புண்ணகலாப் போர்க்களத்துப் [2]பூண்டு. (புறத்திரட்டு. அமர் – 3)

*இப் பாரதத்துள் அது காண்க.*

*ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து தொல்லுயிர் வழங்கிய அவிப்பலியானும் - பகைவர் நாணும்படியாக உயர்ந்தோரான் நன்குமதித்தலைக் கருதி இன்னது செய்யேனாயின் இன்னது செய்வலெனத் தான் கூறிய பகுதி யிரண்டனுள் ஒன்றனோடே பொருந்திப் பலபிறப்பினும் பழகிவருகின்ற உயிரை அங்கியங்கடவுட்குக் கொடுத்த அவிப்பலியானும்.*

*நாணுதலாவது நம்மை அவன் [3]செய்யாதே நாம் அவனை அறப்போர் செய்யாது வஞ்சனையால் வென்றமையின் அவன் தன்னுயிரை அவிப்பலி கொடுத்தானென நாணுதல் உதாரணம்:*

[4]எம்பியை வீட்டுத லெம்மனைக்கா யான்படுதல்
வெம்பகன்முன் யான்விளைப்ப னென்றெழுந்தான் – றம்பி
புறவோரிற் பாணிப்பப் பொங்கெரிவாய் வீழ்ந்தா
னறவோன் மறமிருந்த வாறு.

*இப் பாரதத்துள் ஒருவன் இன்னது செய்வலென்று அது செய்ய முடியாமையின் அவிப்பலி கொடுத்தவாறு காண்க.*

[5]இழைத்த திகவாமற் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர் (குறள் – படைச். 9)

*இதுவும் அது.*

---

1. கலிவர லூழி - கலியுகம்.
2. போந்து எனவும் பாடம்
3. செய்யாது - வஞ்சனை செய்யாது.
4. எம்மனை - எங்குடி. விளைத்தல் - செய்தல். பாணித்தல் - தாமதப்படல். இச்சரிதம் புலப்படவில்லை. வில்லிபுத்தூரர் பாரதத்தில் அருச்சுனன் சயத்திரதனை வீட்டுவதாகக் கூறிய சபதக்கதையோடு இது ஒத்துவரவில்லை. கதை வேறுபாடோ? அல்லது வேறொருவர் கதையோ? ஆராய்க.
5. இழைத்தது - கூறியவஞ்சினம்.

*ஒல்லாரிடவயிற் புல்லியபாங்கினும் - பகைவராயினும் அவர் சுற்றமாயினும் வந்து உயிரும் உடம்பும் உறுப்பும் போல்வன வேண்டியக்கால் அவர்க்கு அவை மனமகிழ்ந்து கொடுத்து நட்புச் செய்தலானும்: உதாரணம்:*

**[1]இந்திரன் மைந்த னுயிர்வேட் டிரந்திரவி**
**மைந்தனை வெல்வான் வரங்கொண்டான் – றந்தநா**
**ளேந்திலைவேன் மன்னனே யன்றி யிதற்குவந்த**
**வேந்தனும் பெற்றான் மிகை.**

*இப் பாரதத்துப் பகைவனாற் படுதலறிந்துந் தன் கவசகுண் டலங் கொடுத்தமை கூறினமையிற் புல்லியபாங்காயிற்று. அது வீரம்பற்றிய கருணையாகலின் வாகையாயிற்று.*

*இத்துணையு மறத்திற்குக் கூறியன.*

*பகட்டினானும் மாவினானும் துகள்தபு சிறப்பிற் சான் றோர் பக்கமும் - எருதும் எருமையுமாகிய பகட்டினானும் யானையுங் குதிரையுமாகிய மாவினானும் குற்றத்தினீங்குஞ் சிறப்பினால் அமைந்தோரது கூறுபாட்டானும்:*

*இவற்றான் உழவஞ்சாமையும் பகையஞ்சாமையுமாகிய வெற்றி கூறினார். 'பக்கம்' என்றதனாற் புனிற்றாவுங் காலாளுந் தேருங் கொள்க. உதாரணம்:*

**[2]யானை நிரையுடைய தோரோ ரினுஞ்சிறந்தோ**
**ரேனை நிரையுடைய வேர்வாழ்நர் – யானைப்**
**படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டே**
**ருடையோர்க் கரசரோ வொப்பு**

**(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – குடிமரபு.9)**

**[3]எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறைய**
**னென்றனி ராயி னாறுசெல் வம்பலிர்**
**மன்பதை மருள வரசுகளத் தவியக்**
**கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை**
**மீபிணத் துருண்ட தேயா வாழிப்**
**பண்ணமை தேரு மாவு மாக்களு**

---

1. இந்திரன் வேட்டு இரந்து வரங்கொண்டனன் என இயைக்க. அவன் மைந்தன் - அருச்சுனன். இரவி மைந்தன் - கன்னன். மன்னன் - கன்னன்; மைந்தன் எனவும் பாடம். வேந்தன் - இந்திரன். மிகை - மேம்பாடு.

2. ஏனைநிரை - எருதும் எருமையும், பயக்கும் - பெயரெச்சம் அது பகட்டே ரோடுமுடியும்.

3. பொறையன் - சேரன். ஆறு - வழி. வம்பலிர் - புதியீர் மன்பதை - மக்கட் பரப்பு. ஆழி - உருளை. எண்ணிற்றோவிலன் - எண்ணிற்றிலன். எண்ணின் றோ-

மெண்ணற் கருமையி னெண்ணின்றோ விலனே
கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
யுகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்க
ராபரந் தன்ன செலவிற்பல்
யானை காண்பலவன் றானை யானே (பதிற்று. 77)

என்பதுமது.

[1]கட்டில் நீத்த பாலினானும் - அரசன் அரசவுரிமையைக் கைவிட்ட பகுதியானும்:

அது [2]பரதனும் பார்த்தனும் போல்வார் அரசு துறந்த வென்றி. உதாரணம்:

கடலு மலையுந் தேர்படக் கிடந்த
மண்ணக வளாக நுண்வெயிற் றுகளினு
நொய்தா லம்ம தானே யிஃதெவன்
குறித்தன னெடியான் கொல்லோ மொய்தவ
வாங்குசிலை [3]யிராமன் றம்பி யாங்கவ
னடிபொறை யாற்றி னல்லது
முடிபொறை யாற்றலன் படிபொறை குறித்தே.

இஃது அரசுகட்டினீத்தபால்.

[4]பரிதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநில
மொருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்து மாற்றா தாதலிற்
கைவிட் டனரே காதல ரதனால்
விட்டோரை விடாஅ டிருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே. (புறம். 358)

என்பதும் அது.

---

மெலித்தல் விகாரம். கந்துகோளீயாது - கட்டுத்தறியிலடங்காமல். நிழல் சாடி - நிழலைக்குத்தி. காண்பல் - காண்பன்.

1. கட்டில் - அரசுகட்டில். அது ஆகுபெயராய் அரசுரிமையை யுணர்த்திற்று.
2. பரதன் - இராமன்தம்பி. பார்த்தன் - அருச்சுனன்.
3. இராமன் தம்பி - பரதன். ஆங்கவனடி - இராமனடி. பொறையாற்றல் - பொறுத்தல் (தாங்கல்). படி - பூமி. பூமியைத் தாங்கலைக்குறித்து முடி சூடான் என்றபடி.
4. பரிதி - சூரியன். பகல் - நாள். நிலம் ஒருநாளில் எழுவரைத்தலைவராக எய்திய அத்தன்மையை யுடையது. அரசு நிலையில்லாதது என்றபடி. வையம் - பூமி. ஐயவி - வெண்சிறுகடுகு. விட்டோர் - பற்றுவிட்டோர். திரு - திருமகள். விடாதோர் - பற்று விடாதோர்

*எட்டுவகை நுதலிய அவையத்தானும் - எண்வகைக் குணத்தினைக் கருதிய அவையத்தாரது நிலைமையானும்:*

*அவை குடிப்பிறப்புக் கல்விஒழுக்கம் வாய்மை தூய்மை நடுவு நிலைமை அழுக்காறின்மை அவாவின்மை என விவையுடையராய் அவைக்கண் முந்தியிருப்போர் வெற்றியைக் கூறுதல். உதாரணம்*

[1]குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையிற்
காத லின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலு
மழுக்கா றின்மை யவாஅ வின்மையென
விருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை
யுடன்மரீஇ யிருக்கை யொருநாட் பெறுமெனிற்
பெறுகதில் லம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே
(ஆசிரியமாலை: புறத்திரட்டு – அவையறிதல்)

*என இதனுள் எட்டும் வந்தன.*

*கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும் - வேத முதலிய வற்றாற் கட்டுதலமைந்த ஒழுக்கத்தோடு பொருந்திய காட்சி யானும்:*

*கண்ணது தன்மை கண்மையெனப்படுதலின் அதனைக் கண்ணுமையென உகரங் கொடுத்தார், எண்மை வன்மை வல்லோர் என்பது எளுமை வலுமை வல்லுவோர் என்றாற்போல.*

*இவை மனத்தான் இவ்வொழுக்கங்களைக் குறிக்கொண்டு ஐம்பொறியினை வென்று தடுத்தலாம். அவை இல்லறத்திற்கு உரியவாக நான்கு வருணத்தார்க்குங் கூறிய அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நடுவுநிலைமை, பிறர்மனைநயவாமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை முதலியனவாம். உதாரணம்:*

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து (குறள் – அடக்க. 6)

1. பனுவல் - நூல். அது ஆகுபெயராய்ப் புலமையை யுணர்த்தி நின்றது. உடன் மரீஇ இருக்கை - உடன் பொருந்தி இருத்தல் (கூட இருத்தல்). கொட்கும் - சுழலும். பிறப்புப் பெறுதில் என இயையும்.

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும். (குறள் – ஒழுக்கம். 1)

சமன்செய்து சீர்தூக்குங் [1]கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. (குறள் – நடுவு. 8)

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு. (குறள் – பிறனில். 8)

[2]படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். (குறள் – வெஃகாமை. 2)

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது (குறள் – புறங். 1)

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. (குறள் – தீவினை. 1)

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு. (குறள் – அழுக்க. 1)

[3]மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல். (குறள் – பொறை. 8)

*பிறவும் இந்நிகரனவெல்லாங் கொள்க.*

[4]விழையா வுள்ளம் விழையு மாயினும்
என்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
கறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னிய முடித்த
லினைய பெரியோ ரொழுக்க மதனா
லரிய பெரியோர்த் தேருங் காலை (அகம். 286: 8 – 13)

*என இது தொகுத்துக் கூறியது.*

*இடையில் வண்புகழ்க் கொடைமையானும் - இடையீடில்லாத வண்புகழைப் பயக்குங் கொடைமையானும்.*

*உலகமுழுதும் பிறர்புகழ் வாராமைத் தன்புகழ் பரத்தலின் இடையிலென்றார்.*

---

1. கோல் - துலாக்கோல்.
2. படுபயன் - உண்டாகும் பயன். நடு - நடுநிலைமை.
3. மிகுதி - மனச்செருக்கு. தகுதி - பொறையுடைமை.
4. விழைதல் - விரும்பல். கேட்டவை - கேட்ட நூலறிவு. தோட்டி - களிற்றையடக்குங் கருவி. அறிவு தோட்டியாக உள்ளத்தை மீட்டு என்க. உள்ளமென்னும் யானை என உருவகியாமையின் ஏகதேசவுருவகம். அனைய - அத்தன்மைய. ஒழுக்கம் அரிய என வருவித்து முடிக்க.

*வண்புகழ் - வள்ளிதாகிய புகழ்; அது வளனுடையதென விரியும். இக் கொடைப் புகழுடையான் மூப்புப் பிணி சாக்காட்டுக்கு அஞ்சாமையின் அது வகையாம். உதாரணம்:*

[1]மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வ
ரின்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற்
றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே
தாடாழ் படுமணி யிரட்டும் பூநுத
லாடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
னாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெமக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையி
[2]னாடுமலி யுவகையொடு வருகுவ
லோடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே. (புறம். 165)

*பிழைத்தோர்த் தாங்குங் காவலானும் - தம்மைப் பிழைத்தோரைப் பொறுக்கும் பாதுகாப்பானும்:*

*காவலாவது இம்மையும் மறுமையும் அவர்க்கு ஏதம் வாராமற் காத்தலாதலால் இஃது ஏனையோரின் வெற்றியாயிற்று. உதாரணம்:*

[3]தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா – லும்மை
யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன். (நாலடி. 58)

[4]அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. (குறள் – பொறை. 1)

*பொருளொடு புணர்ந்த பக்கத்தானும் - அரசர்க்குரியவாகிய படை குடி கூழ் அமைச்சு நட்பு முதலியனவும் புதல்வரைப் பெறுவனவுமாகிய பொருட்டிறத்துப்பட்ட வாகைப் பகுதியானும்:*

*பக்கமென்றதனான் மெய்ப்பொரு ளுணர்த்துதலுங் கொள்க. உதாரணம்:*

---

1. மாய்தல் - இறத்தல். இன்மை - வறுமை. தொடர்பு - உலகத்தோடு தொடர்ந்து போதல். தோன்றல் - தலைவன்; என்றது குமணனை. இன்னாது - துன்பந்தருவது.

2. வருகுவல் - வந்தேன். பூட்கை - மேற்கோள். நின்கிழமை யோன் என்றது நின்றமையனை என்றபடி.

3. வினை - தீவினை. உம்மை - மறுமை, நிரயம் - நரகம். பரிவது - இரங்குவது; வருந்துவது.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு (குறள் – இறை. 1)

*நாடு அரண் முதலாகக் கூறுவன வெல்லாந் திருவள்ளுவப் பயனிற் காண்க.*

[1]படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே. (புறம். 188)

*'கேள்வி கேட்டுப் படிவ மொடியது' என்னும் (74) பதிற்றுப் பத்தும் அது.*

[2]ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு (குறள் – மெய்யு. 4)

*என வரும்.*

*அருளொடு புணர்ந்த [3]அகற்சியானும் - அருளுடைமை யோடு பொருந்திய துறவறத்தானும்:*

*அருளொடு புணர்தலாவது - ஒருயிர்க்கு இடர்வந்துழித் தன்னுயிரைக் கொடுத்துக் காத்தலும் அதன் வருத்தந் தனதாக வருந்துதலும் பொய்யாமை கள்ளாமை முதலியனவுமாம். இக் கருத்து நிகழ்ந்தபின்னர்த் துறவுள்ளம் பிறத்தலின் இதுவும் அறவெற்றியாயிற்று. உதாரணம்:*

[4]புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு தனாது
மூலைமறாக் குழவி வாங்கி வாய்மடுத்
திரையெனக் கவர்வுற நோக்கி யாங்க
வளரிளங் குழவியின் முன்சென்று தானக்
கூருகிர் வயமான் புலவுவேட்டுத் தொடங்கிய
வாளெயிற்றுக் கொள்ளையிற் றங்கினன் கதுவப்
பாசிலைப் போதி மேவிய பெருந்தகை
யாருயிர் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சியி னகலு மாறே.

---

1. இது புதல்வரைப் பெறுதற்குதாரணம்.
2. இது மெய்யுணர்விற்குதாரணம்.
3. அகற்சி - துறவு. அகலல் - பிரிதல்; நீங்கல்.
4. புனிறு - ஈன்றணிமை. ஈன்றணிமையாற் புறம்போக முடியாமையாலே பசி யுழந்த என்க. தனது குழவியைவாங்கி வாய்மடுத்து இரையாகக் கவர் தலைநோக்கி தான் குழவியினும் முன்சென்று எயிற்றுக்கொள்ளையாற் கதுவ அதன்கண் தங்கினன்; யாரெனின் போதிமேவிய பெருந்தகை என்க.

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். (குறள் – இன்னா. 8)

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். (குறள் – வாய்மை. 1)

[1]களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில். (குறள் – கள்ளாமை. 7)

யாதனின் யாதனி னீங்கியா னோதல்
லதனி லதனி னிலன். (குறள் – துறவு 1)

*ஏனையவும் இதன்கண் அடக்குக.*

*காமம் நீத்த பாலினானும் - அங்ஙனம் பிறந்த பின்னர் எப்பொருள்களினும் பற்றற்ற பகுதியானும்: உதாரணம்:*

[2]காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெடக்கெடு நோய். (குறள் – மெய்யு. 10)

*பாலென்றதனால் [3]உலகியலுணின்றே காமத்தினைக் கைவிட்ட பகுதியுங் கொள்க.*

[4]இளையர் முதியரென விருபால் பற்றி
விளையு மறிவென்ன வேண்டா – விளையனாத்
தன்றாதை காமம் நுகர்தற்குத் தான்காம
மொன்றாது நீத்தா னுளன்
(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – அறிவுடைமை. 15)

*என்று இருபாற்பட்ட ஒன்பதிற்றுத் துறைத்தே - முன்னர் ஒன்பானும் பின்னர் ஒன்பானுமாக இரண்டு கூறுபட்ட ஒன்பதாகிய பதினெட்டுத் துறையினையுடைத்து வாகை என்றவாறு.*

*இதனுள் ஏது விரியாதனவற்றிற்கும் ஏது [5]விரித்தவாற்றான் இருபாற்பட்ட பதினெட்டாதலுடைத்தென முடிக்க. (21)*

**(காஞ்சி இன்னதன் புறமெனல்)**

77. காஞ்சி தானே பெருந்திணைப் புறனே.

*இத்துணையும் உரிப்பொருள் பெற்ற அகத்திணைக்குப் புறங்கூறி இஃது உரிப்பொருளில்லாத பெருந்திணைக்குப் புறனிது*

---

1. கார் அறிவு - இருண்ட அறிவு; மயக்கவறிவு. அளவு - அளத்தல். என்றது, உயிர்முதலியவற்றை அளந்தறிதல்.
2. காமம் - விழைவு - பொருட்பற்று. நாமம் - பெயர்.
3. உலகியல் - உலகவொழுக்கம்.
4. இருபால் - இருபகுதி. விளைதல் - முதிர்தல். இளையனாய்த் தன்காமம் நீத்தான் என்றது வீடுமனை. பூருவுமாம். பாரதம் நோக்கியறிக.
5. விரித்து அவ்வாற்றான் எனப் பிரிக்க.

வென்கின்றது. இது வாகைக்குப் பின்வைத்தார், [1]வீரக்குறிப்பு நிலையாமைக் குறிப்போடு உறவுடைத்து என்றற்கு.

இ — ள்: காஞ்சிதானே பெருந்திணைப் புறனே - எழுதிணையுட் காஞ்சிதானேயெனப் பிரிக்கப்பட்ட புறத்திணை பெருந்திணைக்குப் புறனாம் என்றவாறு.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், எண்வகை மணத்தினும் நான்கு மணம்பெற்ற பெருந்திணைபோல இக் காஞ்சியும் அறமுதலாகிய மும்முதற்பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனுள்ளும் நிலையின்மை மூன்றற்கும் உரித்தாய் எல்லாத் திணைகட்கும் ஒத்த மரபிற்றாகலானும், 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்' (105) என்ற நான்குஞ் சான்றோர் இகழ்ந்தாற்போல அறம் முதலியவற்றது நிலையின்மையுணர்ந்து அவற்றை அவர் இகழ்தலானும். 'ஏறிய மடற்றிற' (51) முதலிய நான்குந் தீய காமமாயினவாறுபோல உலகியனோக்கி நிலையாமையும் நற்பொருளன்றாகலானும், உரிப்பொருளிடை மயங்கி வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணைபோல அறம் பொருளின்பம் பற்றியன்றி வேறுவேறு நிலையாமையென்பதோர் பொருளின்றாதல் ஒப்புமையானும், பெருந்திணைக்குக் காஞ்சி புறனாயிற்று. 'கைக்கிளை முதலாப் பெருந்திணையிறுவாய், (1) ஏழனையும் அகமென்றலின் அவ்வகத்திற்கு இது புறனாவதன்றிப் [2]புறப்புறமென்றல் ஆகாமையுணர்க. இது மேலதற்கும் ஒக்கும். (22)

**(காஞ்சியின் பொதுவிலக்கணம் இதுவெனல்)**

**78. பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானு**
**நில்லா வுலகம் புல்லிய நெறித்தே.**

இது முற்கூறிய காஞ்சிக்குப் பொது இலக்கணங் கூறுகின்றது.

---

1. வீரர்கள் வீரசுவர்க்கம் அடைதற்பொருட்டு யாக்கைநிலையாமை கருதிப் பொருது இறத்தலின், வீரக்குறிப்பு நிலையாமைக் குறிப்போடு உறவுடைத்தென்றார். கொடை வீரம் முதலியவும் யாக்கை நிலையாமை பொருள்நிலையாமை பற்றி நிகழ்தலின் அவையும் நிலையாமைக் குறிப்போடு உறவுடையன ஆதல் காண்க.

2. புறப்புறம் என்பார் புறப்பொருள்வெண்பா மாலைக்காரர்.

இ – ள்: பாங்கருஞ் சிறப்பின் - தனக்குத் துணையில்லாத வீட்டின்பம் ஏதுவாக, பல்லாற்றானும் - அறம் பொருள் இன்ப மாகிய பொருட்பகுதியானும் அவற்றுப் பகுதியாகிய உயிரும் யாக்கையுஞ் செல்வமும் இளமையும் முதலியவற்றானும், நில்லா உலகம் புல்லிய நெறித்து - நிலைபேறில்லாத உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியினை யுடைத்துக் காஞ்சி என்றவாறு.

எனவே, வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமை யைச் சான்றோர் சாற்றுங் குறிப்பினது காஞ்சியாயிற்று. பாங்கு - துணை.

உலகிற்கு நிலையாமை கூறுங்கால் அறமுதலாகிய பொருட் பகுதி ஏதுவாகக் கூறினானன்றி உலகென்பதற்கு வடிவு வேறின்மை யிற் பல்லாற்றானுமென்று [1]ஆன் உருபு கொடுத்தார். கெடுங்காற் [2]கணந்தோறுங் கெடுவனவுங் கற்பந்தோறுங் கெடுவனவுமா மென்றற்கு ஆறென்றார். நிலைபெற்ற வீட்டினான் இவற்றின் நிலையாமை யுணர்தலின் வீடு ஏதுவாயிற்று. பல்லாற்றானு மென் றதனாற் சில்லாற்றானும் வீடேதுவாகலின்றி [3]நிலையாமைக் குறிப்பு ஏதுவாகலுங் கொள்க. இஃது அறிவன் தேயமுந் தாபதப் பக்கமும்பற்றி நிலையின்மைக் குறிப்புப் பெற்றாம். உதாரணம்:

**மயங்கிருங் கருவிய விசும்பு முகனாக**
**வியங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய**
**வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்**
**வயிரக் குறட்டின் வயங்குமணி யாத்துப்**
**பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்**
**பொருநர்க் காணாச் செருமிகு மொய்ம்பின்**
**முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும்**
**விலைநலம் பெண்டிரிற் பலர்மீக் கூற**
**வுளனே வாழியர் யானெனப் பன்மா**
**ணிலமக ளழுத காஞ்சியு**
**முண்டென வுரைப்பரா லுணர்ந்திசி னோரே. (புறம். 365)**

---

1. ஆன்உருபு ஏதுப்பொருளில் வருவது மூன்றாவதற்காகும்; ஈண்டு ஏதுவைக் காட்டற்கு ஆனுருபு கொடுத்தார். எனவே உலகிற்கு நிலையாமை கூறுங்கால் அறமுதலிய பல்லாற்றானுமே கூறல்வேண்டுமென்றபடி.

2. கணந்தோறுங் கெடுவன இளமை செல்வம் முதலியன. கற்பம் - ஊழி. ஈண்டு ஒருவனுடைய ஆயுள்முடிவையுங் குறிக்கும். கற்பத்திற் கெடுவன. அறமும் உயிரும் யாக்கையும் முதலியன. சீவத்தன்மைகெடலின் உயிரையுங் கூறினார் போலும். உடம்பு விட்டுச் சேறல் பற்றிக் கூறினார் எனினும் அமையும்.

3. நிலையாமைக்குறிப்பு ஏதுவாதலை அடுத்த சூத்திர உரை நோக்கியறிக.

*இதனுள் உண்டெடன உரைப்பரால் உணர்ந்தோரென்றலின் வீடுபேறு ஏதுவாகத் தாபதர்போல்வார் நில்லாஉலகம் புல்லியதா யிற்று. வீடுபேறு நிமித்தமாகச் சான்றோர் பல்வேறுநிலையாமையை அறைந்த [1]மதுரைக்காஞ்சி இதற்கு உதாரணமாம்.* *(23)*

**(நிலையின்மைப் பொரு ளிவைடுயன வகுத்துக்கூறல்)**

79. மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையுங்
கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியு மறத்தி னானு
மேமச் சுற்ற மின்றிப் புண்ணோற்
பேஎ யோம்பிய பேஎய்ப் பக்கமு
மின்னனென் றிரங்கிய மன்னை யானு
மின்னது பிழைப்பி னிதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானு
மின்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற்
றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியு
நீத்த கணவற் றீர்த்த வேலிற்
பேஎத்த மனைவி யாஞ்சி யானு
நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானு
முலையு முகனுஞ் சேர்த்திக் கொண்டோன்
றலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
யீரைந் தாகு மென்ப பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்ற
மாய்ந்த பூசன் மயக்கத் தானுந்
தாமே யேங்கிய தாங்கரும் பையுளுங்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமு
நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையுங்
கழிந்தோர் தேஎத் தழிபட ருறீஇ
யொழிந்தோர் புலம்பிய கையறு நிலையுங்

1. மதுரைக்காஞ்சி பத்துப்பாட்டுள் ஒன்று.

காதலி யிழந்த தபுதார நிலையும்
காதல னிழந்த தாபத நிலையு
நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையு
மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வன் பெயரத்
தாய்பத வரூஉந் தலைப்பெய னிலையு
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பிற் றுறையிரண் டுடைத்தே.

*இது முற்கூறிய காஞ்சித்திணை வீடேதுவாகவன்றி வாளாது நிலையின்மை தோன்றக் கூறும் பகுதி கூறுகின்றது. இதுவும் வாகையைத் தொகுத்தோதிய பொதுச்சூத்திரம்போலத் துறை யொடும் படாது நிலையின்மைப்பொருளை வகுத்தோதிய சூத்திரமென்றுணர்க.*

**இ – ள்:** *மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமையும் - பிறராற் றடுத்தற்கரிய கூற்றம் வருமெனச் சான்றோர் சாற்றிய பெருங் காஞ்சியானும்:*

*[1]கூற்றாவது, வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத் தினைப் பொருள்வகையாற் கூறுபடுத்துங் கடவுள்; அதனைத் தான் பேரூர்க் கூற்றம்போலக் கொள்க. கூற்றத்திற்குக் காலமென் பது வேறன்மையிற் 'காலம் உலகம்' (தொல். சொல். கிளவி - 58) என முன்னே கூறினார். உதாரணம்:*

பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்புமி னதுதா
னெல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற் றுப்படூஉ நெறியுமா ரதுவே. (புறம். 195)

---

1. கூறு - கூற்று - கூற்றமென அம் சாரியை பெற்றுநின்ற பெயர்ச்சொல். கூறு படுத்துவது என்பது பொருள். பேரூர்க் கூற்றம் என்பதிலும் கூறு - கூற்று என்றாய் அம் பெற்று நின்றது; கூறு - பங்கு. கூற்றமுங் காலமும் வேறன்று என்றது 'காலமுலகமெ'ன்ற சூத்திரத்தாலே சொல்லதிகாரத்தில் முன்னே கூறப்பட்டபடி காலம் என்றது காலக்கடவுளையாதலின் காலமும் கூற்ற மும் ஒரு பொருளன என்றபடி.

இது வீடேதுவாகவன்றி வீடுபேற்று நெறிக்கட்செல்லும் நெறியேதுவாகக் கூறியது.

இருங்கடலுடுத்த' என்னும் (363) புறப்பாட்டும் அது.

கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும் - இளமைத்தன்மை கழிந்து அறிவுமிக்கோர் இளமைகழியாத அறிவின்மாக்கட்குக் காட்டிய முதுகாஞ்சியானும்:

முதுமை மூப்பாதலான் [1]அது காட்சிப்பொருளாக இளமை நிலையாமை கூறிற்றாம். உதாரணம்:

இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்யுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்த
நீர்நணிப் படுகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
[2]நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா விளமை
யளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சில்சொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே. (புறம். 243)

இது வீடுபெறுதற்கு வழிகூறியது.

பண்புற வரூஉம் பகுதி நோக்கிப் புண்கிழித்து முடியும் மறத்தினானும் - நன்றாகிய குணம் உறுநிலையாகப் பெறுகின்ற பகுதியாராய்ந்து பெறுதற்குப்பட்ட [3]விழுப்புண்தீர்ந்து வாழும் வாழ்க்கை நிலையின்மையின் அதனை வேண்டாது புண்ணைக் கிழித்து இறக்கும் மறக்காஞ்சியானும்:

இஃது யாக்கை நிலையின்மையை நோக்கிப் புகழ்பெறு தல் குறித்தது. இதனை வாகைத்திணைபின்னர் வைத்தார், இக் காஞ்சியும் வாகையொடு மயங்கியுங் காஞ்சியாதல்பற்றி. உதாரணம்:

---

1. அது காட்சிப்பொருளாக - அம்மூப்பே காட்சிப் பொருளாக. இளமை நிலை யாமையைக் காட்டுவது முதுமை ஆதலின் அது காட்சிப்பொருளாக என்றார்.

2. குட்டம் - ஆழம். இரும் - இருமல். எமக்கு இளமை யாண்டுண்டு கொல்லோ? அதுதான் இரங்கத்தக்கது எனக் கூட்டுக.

3. விழுப்புண் - முகத்திலும் மார்பிலும் பட்ட புண். தீர்ந்து - நீங்கி, ஆறி.

[1]பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக்
கொன்று முகந்தேய்ந்த வெஃகந் தாங்கிச்
சென்று களம்புக்க தானை தன்னொடு
முன்மலைந்து மடிந்த வோடா விடலை
நடுக னெடுநிலை நோக்கி யாங்குத்தன்
புண்வாய் கிழித்தனன் புகழ்ோ னந்நிலைச்
சென்றுழிச் செல்க மாதோ வெண்குடை
யரசுமலைந்து தாங்கிய களிறுமடி பறந்தலை
முரண்கெழு தெவ்வர் காண
விவன்போ லிந்நிலை பெறுகயா னெனவே.

இது போர்முடிந்தபின் களம்புக்கு நடுகல்லாயினானைக் கண்டு உடம்பினது நிலையின்மையினையும் பண்புறவருதலையும் நோக்கி இறந்தமை கூறலிற் காஞ்சியாயிற்று.

ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோற் பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும் - கங்குல் யாமத்துக் காத்தற்குரிய சுற்றக்குழாமின்மையின் அருகுவந்து புண்பட்டோனைப் [2]பேயானே காத்த பேய்க்காஞ்சியானும்:

பேய்காத்த தென்றலின் ஏமம் இரவில் யாமமாயிற்று. ஏமம் - காப்புமாம். ஓம்புதலாவது:- அவனுயிர்போந்துணையும் ஓரியும் நரியுங் கிடந்தவன் தசையைக் கோடலஞ்சிப் பாதுகாத்தலாம்.

இது சுற்றத்தாரின்மை கூறலிற் செல்வநிலையாமையாயிற்று. பக்கமென்றதனாற் பெண்டிர்போல்வார் காத்தலும் பேயோம்பாத பக்கமும் கொள்க. உதாரணம்:

[3]புண்ணனந்த ருற்றானைப் போற்றுந ரின்மையிற்
கண்ணனந்த ரில்லாப்பேய் காத்தனவே – யுண்ணு
முளையோரி யுட்க வுணர்வொடுசா யாத
விளையோன் கிடந்த விடத்து.

ஏனைய வந்துழிக் காண்க.

---

1. எஃகம் - வேல். ஓடா - புறங்கொடாத. நோக்கி, நாணி தாங்கி, பெறுக யானென ஆங்குத் தன் புண்வாய் கிழித்தனன் என்க.

2. பேயானே காத்த - பேய்தானே காத்த என்றிருக்கலாம் போலும். பேயானே காக்கப்பட்ட என்று பொருள் கொள்ளினு மமையும்.

3. புண்ணனந்தர் - புண் மயக்கம். கண் அனந்தர் - கண்டுயில். உளை - ஊளை = கூவிளி.

*இன்னன் என்று இரங்கிய [1]மன்னையானும் - ஒருவன் இறந்துழி அவன் இத்தன்மையோனென்று ஏனையோர் இரங் கிய கழிவு பொருட்கண்வந்த மன்னைக்காஞ்சியானும்:*

*இது பலவற்றின் நிலையாமைகூறி இரங்குதலின் மன்னைக் காஞ்சியென வேறுபெயர் கொடுத்தார். இது பெரும்பான்மை மன் என்னும் இடைச்சொற்பற்றியே வருமென்றற்கு மன் கூறி னார். இது மன்னையெனத் திரிந்து காஞ்சி யென்பதனோ டடுத்து நின்றது. இஃது உடம்பொடு புணர்த்தல்.*

**[2]சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே**
**பெரியகட் பெறினே யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே**
**சிறுசோற்றானு நனிபல கலத்தன் மன்னே**
**பெருஞ்சோற்றானு நனிபல கலத்தன் மன்னே**
**யென்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே**
**யம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே**

*என, இப் (235)* **புறப்பாட்டு** *மன் அடுத்து அப்பொருடந்தது.*

**[3]பாடுநர்க் கீத்த பல்புக ழினனே**
**யாடுநர்க் கீத்த பேரன் பினனே**
**யறவோர் புகழ்ந்த வாய்கோ லன்னே**
**திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே**
**மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து**
**துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கி**
**லனைய னென்னா தத்தக் கோனை**
**நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று**
**பைத லொக்கற் றழீஇ யதனை**

---

1. மன் என்பது கழிவிரக்கப் பொருட்கண் வருவதோ ரிடைச் சொல். அது, "கழிவேயாக்க... மன்னைச் சொல்லே" (சொல். 254) என்பதனானறிக. மன் மன்னை என ஈறு திரிந்து நின்றது. ஈண்டு மன்னைக்காஞ்சி என்றதனானே அச்செய்யுள் மன் என்னும் இடைச்சொற் பெற்றும் வரும் என்பதை உடம் பொடு புணர்த்துக் கூறினார் என்பார் இது உடம்பொடு புணர்த்தல் என்றார்: உடம்பொடு புணர்த்தல் என்றிருப்பதே பொருத்தம். பின்வரும் உதாரணத்து மன்வருதல் காண்க.

2. கட்பெறின் - கள் + பெறின். கலம் - உண்கலம். தடி - தசை.

3. ஆடுநர் - கூத்தர். சாயல் - மென்மை. மைந்து - வலி. துகள் - குற்றம். புக்கில் - புகலிடம் பைதல் - துன்பம். ஒக்கல் - சுற்றம் அரந்தை - துன்பம். கெடு - கேடு. வாய்மொழிப் புலவீர்! அத்தக்கோனைக் கூற்றம் இன்னுயிருய்த்தது; அத னால் புரவலன் கல்லாயினான் என ஒக்கலைத் தழீஇ அதனை வைகம் வம்மோ எனக் கூட்டி முடிபு செய்க. வைகம் வைவம் என்றிருப்பது நலம்.

வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவி னல்லிசை சூடி
நடுக லாயினன் புரவல னெனவே. (புறம். 221)

*இது மன் அடாது அப்பொருடந்தது.*

*'செற்றன்றாயினும்' என்னும் (222) புறப்பாட்டு முதலியனவும் அன்ன. இதனை [1]ஆண்பாற் கையறுநிலையெனினும் அமையும்.*

*இன்னது பிழைப்பின் இதுவாகியரெனத் துன்னருஞ் சிறப்பின் வருஞ்சினத்தானும் - இத்தன்மையதொன்றினைச் செய்த லாற்றேனாயின் இன்னவாறாகக் கடவேனெனக் கூறிய வஞ்சினக் காஞ்சியானும்.*

*அது தான்செய்யக் கருதியது பொய்த்துக் தனக்குவருங் குற்றத்தால் உயிர் முதலியன துறப்பனென்றல். சிறப்பு - வீடு பேறன்றி உலகியலிற் பெருஞ்சிறப்பு. உதாரணம்:*

[2]மெல்ல வந்தெ னல்லடி பொருந்தி
யீயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் தரசோ தஞ்ச
மின்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்
தாற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
வுய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளி
ரொல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே. (புறம். 78)

*'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்', 'மடங்கலிற் சினைஇ' என்னும் (72, 71) புறப்பாட்டுக்கள் உயிருஞ் செல்வமும் போல்வன நிலையும் பொருளென நினையாது வஞ்சினஞ் செய்தன.*

*இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற் றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும் - இனிதாகிய நகையினையுடைய மனைவி*

---

1. ஆண்பாற் கையறு நிலையாவது - ஆண்மக னிறந்துழி. அவனைக் குறித்து அவன் சுற்றத்தார் முதலியோர் செயலற்று இரங்கிக் கூறுவது.

2. அரசோதஞ்சம் - (என்) அரசு கொடுத்தலோ எளிது. சிதடன் - குருடன். முளை - மூங்கில் முளை. ஒல்லாமுயக்கு - பொருந்தாத முயக்கம்.

*தன் கணவன் புண்ணுற்றோனைப் பேய்தீண்டுதலை நீக்கித் தானுந் தீண்டாத காஞ்சியானும்:*

*என்றது, [1]நகையாடுங் காதலுடையாள் அவனைக் காத்து விடிவளவுஞ் சுற்றுதலன்றி முயங்குதற்கு உள்ளம் பிறழாதபடி அவன் நிலையாமையை எய்தினானென்றவாறு.*

*இதுவும் ஆண்பாற்காஞ்சியாம். இக் காஞ்சியென்பதனை முன்னும் பின்னுங் கூட்டுக.*

**[2]தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச்செரீஇ**
**வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்**
**கைபயப் பெயர்த்து மையிழு திழுகி**
**யையவி சிதறி யாம்ப லூதி**
**யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி**
**நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்**
**காக்கம் வம்மோ காதலந் தோழி**
**வேந்துறு விழுமந் தாங்கிய**
**பூம்பொறிக் சுழற்கா னெடுந்தகை புண்ணே. (புறம். 281)**

*நீத்த கணவற் றீர்த்த வேலிற் பேஎத்த மனைவி ஆஞ்சியானும் - உயிர்நீத்த கணவன் தன்னுறவை நீக்கின வேல்வடுவாலே மனைவி அஞ்சின ஆஞ்சிக்காஞ்சியானும்:*

*எஞ்ஞான்றும் இன்பஞ்செய்த கணவனுடம்பு அறிகுறி தெரியாமற் புண்பட்டு அச்சநிகழ்தலின் யாக்கைநிலையாமை கூறியதாம். [3]பேஎத்த என்பது - உரிச்சொல் முதனிலையாகப் பிறந்த பெயரெச்சம். [4]அஞ்சின, ஆஞ்சியென நின்றது.*

**[5]இன்ப முடம்புகொண் டெய்துவிர் காண்மினோ**
**வன்பி னுயிர்புரக்கு மாரணங்கு – தன்கணவ**
**னல்லாமை யுட்கொள்ளு மச்சம் பயந்ததே**
**புல்லார்வேன் மெய்சிதைத்த புண்.**
**(தகடூர்யாத்திரை: புறத்திரட்டு – மூதின்மறம். 8)**

---

1. நகையாடுங் காதலுடையாள் என்றது முன் புணர்ச்சிக் காலத்து அவனோடு நகையாடுங் காதலுடையாள் என்றபடி.
2. இரவம் - ஒருவகை மரம். மை யிழுது - மை. ஐயவி - வெண் சிறுகடுகு. காஞ்சி - காஞ்சிப்பண். நெடுந்தகை புண்ணை, செரீஇ, இழுகி, சிதறி, ஊதி, எறிந்து, பாடி, புகைஇ, காக்கம், வம்மோ எனக் கூட்டிமுடிக்க.
3. பேஎ - உரிச்சொல். இது அச்சப்பொருட்டு. "பேஎநாமுரு மென....... அச்சப் பொருள்" (365)
4. இது, அஞ்சின ஆஞ்சி என முடியும் என்றாதல் அஞ்சி, ஆஞ்சி என நின்றது என்றாதல் இருத்தல்வேண்டும்.
5. புண், கணவனல்லாமையை யுட்கொள்ளும் அச்சத்தைப் பயந்தது என இயைக்க.

*இனி 'வேலிற் பெயர்த்த மனைவி' யென்று பாடமோதி, அவ் வேலான் உயிரைப் போக்கின மனைவியென்று கூறி, அதற்கு,*

[1]கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ – னவ்வேலே
யம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று (பு. வெ. காஞ்சி. 23)

*என்பது காட்டுப.*

*நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும் - பெண்கோளொழுக்கத்தி னொத்து மறுத்தல் பற்றிப் பகைவனாய் வலிந்து கோடற்கு எடுத்துவந்த அரசனோடு முதுகுடித் தலைவராகிய வாணிகரும் வேளாளருந் தத்தம் மகளிரைப்படுத்தற்கு அஞ்சிய மகட்பாற் காஞ்சியானும்:*

*வேந்தியலாவது உயிர்போற்றாது வாழ்தலின் அவரது நிலையின்மை நோக்கி அவரோடொத்து மகளிரைப் படுத்தற் கஞ்சி மறுப்பாராதலின் 'அஞ்சிய' என்றும், 'மேல்வந்த' வென் றுங் கூறினார். அம்முது குடிகள் தாம் பொருதுபடக் கருது தலின் உயிரது நிலையாமை உணர்ந்த காஞ்சியாயிற்று. 'பால்' என்றதனான் முதுகுடிகளேயன்றி [2]'அனைநிலைவகை' (75) யெனப் பட்டார்கண்ணும் இத்துறை நிகழ்தல் கொள்க. உதாரணம்:*

[3]நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையு
நெடிய வல்லது பணிந்து மொழியலனே
யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்
றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே. (புறம். 349)

[4]களிறணைப்பக் கலங்கின, காஅு
தேரோடத் துகள்கெழுமின, தெருவு
மாமறுகலின் மயக்குற்றன, வழி
கலங்கழாஅலிற், றுறை, கலக்குற்றன
தெறன்மறவ ரிறைகூர்தலிற்

---

1. கௌவை - ஆரவாரம். வெய்யோன் - விரும்பினோன்.

2. அனைநிலை வகையோர் என்றது தத்தம் வருணமின்றி, ஏனை வருணத்துப் பெண்பாற்கட் பிறந்த புதல்வரை.

3. படிவம் - விரதம். அரிவை. தீப்போல, பிறந்தவூர்க்கு அணங்காயினள் என இயைத்து முடிக்க.

4. மறுகல் - சுழலல். மறவர் - வீரர். இறைகூர்தல் - தங்கியிருத்தல்.

[1]பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே வம்ப வேந்தர்
பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பி
னோவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
மைய னோக்கிற் றையலை நயந்தோ
ரளியர் தாமேயிவ டன்னை மாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்
குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலைய கருங்கடை நெடுவே
லின்ன மறவர்த் தாயினு மன்னோ
வென்னா வதுகொ றானே
பன்னல் வேலியிப் பணைநல் லூரே. (புறம். 345)

*இதனுள் [2]'நிரலல் லோர்க்குத் தரலோ வில்லென' என்றலின் அரசர்க்கு மகட்கொடைக்குரிய ரல்லாத அனைநிலை வகையோர்பாற்பட்டது.*

*முலையும் முகனுஞ் சேர்த்திக்கொண்டோன் தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ ஈரைந்தாகுமென்ப - தன் கணவன் தலையைத் தன் முகத்தினும் முலையினுஞ் சேர்த்திக்கொண்டு அத்தலையான் மனைவியிறந்த நிலைமையானுந் தொகைபெற்றுக் காஞ்சி பத்து வகைப்படுமென்று கூறுவாராசிரியர் என்றவாறு.*

*தலை, அவள் இறத்தற்கேதுவாகலின் அது வினைமுதலாயிற்று. மேல் துறை இரண்டென்பாராகலின் இவை பத்தும் ஒரு துறையாகுமென்றற்கும் இவை ஆண்பாற்குரிய வென்றற்கும் ஈரைந்தென வேறோர் தொகை கொடுத்தார். அவன் தலையல்லது உடம்பினை அவள் பெறாமையின் அவன் யாக்கைக்கு நிலை*

---

1. பொறை - பாரம். வம்பவேந்தர் - புதிய அரசர். செருப்புகல் வேண்டி - போரை விரும்பி. நிரல் - வரிசை. கதுவாய் - வடு. பன்னல் - பருத்தி.

2. நிரலல்லோர்க்கு - கொடுக்கு முறைமையுடைய ரல்லாதார்க்கு. நீரல் லோர்க்கு எனவும் பாடம். அதற்குக் கொடுக்குந் தன்மையுடையர் அல்லா தார்க்கு என்பது பொருள். நிகரல்லோர்க்கு என்று பாட மோதி ஒத்தகுல முடையரல்லார்க்கு என்று பொருளுரைப்பது நலம்போலும். புரையரல் லோர் வரையலளிவளென - தந்தையுங் கொடானாயின் என்னும் (புறம் - 323ம்) செய்யுள் நோக்கியறிக. முறைமை என்பதற்கு - ஒத்தகுலமுறைமை எனினுமமையும்.

*யின்மை யெய்தலின் [1]இதுவும் ஆண்பாற்கே சிறந்ததாம். மனைவி இறந்துபடுதலும் அதனாலெய்துதலின் மேல்வருகின்ற பெண் பாற்கும் இயைபுபடப் பின்வைத்தார். இதற்கியைபுபடத் தொடாக்காஞ்சியும் ஆஞ்சிக் காஞ்சியும் பெண்பாலொடுபட்ட ஆண்பாற் காஞ்சியாதலின் முன்வைத்தார். இவை ஒரு வகையாற் பெண்பாற்கண்ணு நிலையின்மை யுடையவாயினும் இரண் டிடத்தும் ஓதிச் சூத்திரம் பல்காமற் சிறப்புடைய ஆண்மகற்கே ஓதிப் பெண்பாற் பகுதியுந் தழீஇயினா ரென்றுணர்க. இனி வரு கின்ற பத்தும் பெண்பாற்கே யுரிமையின் அவற்றிற்கும் ஈரைந் தென்பதனைக் கூட்டிமுடிக்க. உதாரணம்:*

**[2]நிலையி லுயிரிழத்தற் கஞ்சிக் கணவன்**
**றலையொழிய மெய்பெறாள் சாய்ந்தா – டலையினால்**
**வண்ணம் படைத்தான் முழுமெய்யு மற்றத**
**லுண்ணின்ற தன்றோ வுயிர்.**

*பேரிசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் ஆய்ந்த பூசன் மயக் கத்தானும் - பெரும் புகழுடையனாகி மாய்ந்தானொரு வனைச் சுற்றிய பெண்கிளைச் சுற்றங் குரல் குறைவுபட்ட கூப்பீட்டு மயக்கத் தானும்:*

*என்றது, சுற்றத்தார் அழுகைக்குரல் விரவியெழுந்த ஓசையை. [3]ஆய்ந்தவென்பது, உள்ளதனுணுக்கம். 'மாய்ந்த பூசன் மயக்க' மென்று பாடமாயிற் சுற்றம் ஒருங்குமாய்ந்தவழிப் பிறரழுதபூசன் மயக்கமென்று கொள்ளினும் அமையும். ஈண்டு மாய்ந்தமக னென்றதூஉஞ் சுற்றப்படுவானை அறிவித்தற்கே; ஆண்பாலும் உடன் கூறியதன்று. மேலனவற்றிற்கும் இஃதொக்கும். உதாரணம்:*

**[4]இரவலர் வம்மி னெனவிசைத்த லின்றிப்**
**புரவலன் மாய்ந்துழியும் பொங்கு – முரைமயங்க**
**வேற்கண் ணியரழுத வெம்பூசல் கேட்டடங்காத்**
**தோற்கண்ண போலுந் துடி.**

**(தகடூர்யாத்திரை: புறத்திரட்டு – இரங்கல் 2)**

---

1. இது என்றது இறுதியிற் கூறிய இத்துறையை.
2. இதன் கருத்து நன்கு புலப்படவில்லை. படைத்தான் - படைத்தான் என்று பாடமிருக்கலாமோ?
3. "ஓய்தல் ஆய்தல் ... ... உள்ளதனுணுக்கம்" (சொல் - உரி - 230)
4. அடங்காத துடி இசைத்தலன்றியும் பொங்கும் என இயைக்க. போலும் - அசைநிலை.

'மீனுண் கொக்கின் றூவி யன்ன' என்னும் (277) புறப்பாட்டும் அது.

தாமே ஏங்கிய தாங்கரும் [1]பையுளும் - அச் சுற்றத்தாருமின்றி மனைவியர் தாமே தத்தங் கொழுநரைத் தழீஇயிருந்து அழுதது கண்டோர் பொறுத்தற்கரிய நோயானும்:

'தாமே' யெனப் பன்மை கூறினார், ஒருவருக்குத் தலைவியர் பலரென்றற்கு. ஏகாரம் சுற்றத்திற் பிரித்தலிற் பிரிநிலை.

இது செல்வமும் இன்பமும் ஒருங்கு நிலையாமை கூறியது.

[2]மழைகூர் பானாட் கழைபிணங் கடுக்கத்துப்
புலிவழங் கதரிடைப் பாம்புதூங் கிறுவரை
யிருள்புக்குத் துணிந்த வெண்குவரற் கல்லளை
யொருதனி வைகிய தனைத்தே பெருவளத்து
வேனின் மூதூர்ப் பூநாறு நறும்பக
லெழுதுசுவர் மாடத்துக் கிளையுடை யொருசிறை
யவரின்று நிகழ்தரு முறவே யதனா
லழுதுபனி கலுழ்ந்தவெங் கண்ணே யவ்வழி
நீர்நீந்து பாவை யசைவது நோக்கிச்
சேணிடை யகன்ற துயிலே யதுவினி
யவருடைக் கனவோ டிவ்வழி யொருநாள்
வாரா தாயினும் யாதாங் கொல்லோ
மெலிந்து மெலியுமென் யாக்கையிற்
கழிந்த கழியுமென் னாருயிர் நிலையே.

'கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்ப' என்னும் (349) புறப் பாட்டும் அது.

தாமே யேங்கிய என்பதற்குச் சிறைப்பட்டார் தாமே தனித் திருந்ததென்று கூறிக்,

[3]குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபத
மதுகை யின்றி வயிற்றுத் தீத்தணியத்

---

1. பையுள் - துன்பம்.

2. எண்கு - கரடி. அதர் - வழி. கல்லளை - குகை. அது (துயில்) வாராதாயினும் என வியைக்க. உயிர்நிலை யாதாங்கொல் என முடிக்க.

3. இறப்பினும் - இறந்து பிறப்பினும். ஊன்தடி - தசை. ஞமலி - நாய். சிறுபதம் - தண்ணீர். மதுகை - வலி.

தாமிரந் துண்ணு மளவை
யீன்ம ரோவிவ் வுலகத் தானே

என்னும் (74) புறப்பாட்டுக் [1]காட்டுவாரும் உளர்.

*கணவனொடு முடிந்த [2]படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும்* - மனைவி தன் கணவன் முடிந்த பொழுதே உடன் முடிந்துபோகிய செலவு நினைந்து கண்டோர் பிறர்க்குணர்த்திய மூதானந்தத்தானும்:

ஆனந்தம் - சாக்காடு. முதுமை கூறினார், உழுவலன்பு பற்றி. இப்படி யிறத்தலின் இஃது யாக்கை நிலையின்மை. உதாரணம்:

[3]ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க்
கீருயி ரென்ப ரிடைதெரியார் – போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கு
முடனே யுலந்த துயிர். (பு. வெ. சிறப்பிற்பொது 9.)

*நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலையும்* - மிகுதிமிக்க அருநிலத்தே தன் கணவனை இழந்து தனித்த தலைமகள் தன் தனிமையை வெளிப்படுத்தின [4]முதுபாலையானும்:

'புலம்பிய' எனவே அழுதல் வெளிப்படுத்தல் கூறிற்று. பாலையென்பது பிரிவாகலின் இது பெரும் பிரிவாகிய பிரிவாதல் நோக்கி 'முதுபாலை' யென்றார். நனிமிகு சுரமென்று இருகால் அதனருமை கூறவே பின்பனிப் பிரிவு அதற்குச் சிறந்த தன்றாயிற்று.

இதுவும் இன்பமுஞ் செல்வமும் ஒருங்கு நிலையின்மை கூறிற்று.

[5]இளையரு முதியரும் வேறுபுலம் படர
வெடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
விடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையு
ளின்ன னாயின னிளையோ னென்று
நின்னுரை செல்லு மாயின் மற்று
முன்னூர்ப் பழுனிய கோளியா லத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்

1. இளம்பூரணர்.
2. படர்ச்சி - கணவனொடு சேரல்.
3. இடை தெரியார் - நடுவாராயாதார். நடு - முறை. விடம் - நஞ்சு. அது போலியாய் விடன் என நின்றது.
4. முதுபாலை - பெரும்பிரிவு; என்றது இறப்பை.
5. வேறுபுலம் - வேற்றுநிலம். விளர்த்த - வெளுத்த. யாணர் - புதுவருவாய். அளியள் - இரங்கத்தக்கவள்.

வளனுஞ் செம்மலு மெமக்கென நாளு
மானாது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளிய டானே. (புறம். 254)

*கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும் - கணவனொடு மனைவியர் கழிந்துழி அவர் கட்பட்ட அழிவு பொருளெல்லாம் பிறர்க்கு அறிவுறுத்தித் தாம் இறந்துபடா தொழிந்த ஆயத்தாரும் பரிசில்பெறும் விறலியருந் தனிப் [1]படருழந்த செயலறுநிலைமையானும்:*

*ஒழிந்தோரென வரையாது கூறினமையிற் கழிந்தோராற் புரக்கப்படும் அவ்விருதிறத்தாரையும் உடன்கொள்க. கழிந் தோரென்ற பன்மையால் ஆண்பாலுந் தழீஇயினார், கையறு நிலை அவரையின்றி அமையாமையின். ஆண்பாற் கையறுநிலை மன்னைக் காஞ்சியுள் அடங்கும். அழிவாவன:- புனல்விளையாட் டும் பொழில்விளையாட்டுந் தலைவன்வென்றியும் போல்வன.*

[2]தேரோன் மகன்பட்ட செங்களத்து ளிவ்வுடம்பிற்
றீராத பண்பிற் றிருமடந்தை – வாரா
வுலகத் துடம்பிற் கொழிந்தனள் கொல்லோ
வலகற்ற கற்பி னவள். (பாரதம்)

*காதலி இழந்த தபுதார நிலையும் - தன் மனைவியைக் கணவனிழந்த தபுதார நிலையானும்:*

*என்றது தாரமிழந்தநிலை. தன் காதலியை இழந்தபின் வழி முறைத் தாரம் வேண்டின் அது காஞ்சிக் குறிப்பன்று என்றற் கும், எஞ்ஞான்றும் மனைவியில்லாதானுந் தபுதார நிலைக்கு உரியனாயினும் அது காஞ்சியாகாதென்றற்கும், தபுதார நிலை யென்றே பெயர் பெறுதன் மரபென்றற்கும், காதலியிழந்த நிலை யுமென்றே ஒழியாது பின்னுந் தபுதார நிலையுமென்றார். தலை வர் வழிமுறைத் தாரமும் எய்துவாராகலின் அவர்க்கு நிலை யாமை சிறப்பின்மையின் ஆண்பாற் காஞ்சியன்றாயிற்று.*

*இஃது யாக்கையும் இன்பமும் ஒருங்கு நிலையின்மையாம்.*

---

1. படர் - துன்பம்.

2. தேரோன் மகன் - கன்னன். மடந்தை - அவன் மனைவி. அவனது மெய் யிற்றீராத என்றதனால் அவனுடம்பைத் தழுவிக் கிடந்துயிர் நீத்த அவன் மனைவி என்பது பெறப்பட்டது. வாராஉலகம் - துறக்கம் துறக்கத்தை யடைந்து அவனுடம்பைத் தழுவுதற்கு இவ்வுடம்பைத் தழுவி உயிர் நீத்தாளோ என்பது கருத்து.

*உதாரணம்:*

[1]யாங்குப் பெரிதாயினு நோயள வெனைத்தே
யுயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையிற்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனண் மடந்தை
யின்னும் வாழ்வ லென்னிதன் பண்பே. (புறம். 245)

*காதலன் இழந்த தாபத நிலையும் - காதலனையிழந்த மனைவி தவம்புரிந்தொழுகிய நிலைமையானும்:*

இருவரும் ஒருயிராய் நிகழ்ந்தமையின் உயிரும் உடம்பும் இன்பமுஞ் செல்வமும் ஒருங்கிழந்தாள் தலைவியேயாம்.

இதனை இல்லறம் இழத்தலின் அறநிலையின் அமையுமென்ப.

*உதாரணம்:*

[2]அளிய தாமே சிறுவெள் ளாம்ப
லிளைய மாகத் தழையா யினவே
யினியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணும்
மல்லிப் படூஉம் புல்லா யினவே. (புறம். 248)

*நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடையிட்ட பாலைநிலையும் - கற்புடை மனைவி தன் கணவன் இறந்துழி அவனோடு எரிபுகுதல் வேண்டி எரியை விலக்கினாரோடு உறழ்ந்து கூறிய புறங்காட்டு நிலையானும்:*

எல்லா நிலத்தும் உளதாகி வேறு தனக்கு நிலனின்றி வருதலானும் நண்பகல்போல் வெங்கனலான் வெதுப்புதலானும் [3]புறங்காட்டைப் பாலையென்றார்; பாலைத்தன்மை எய்திற்று என்றற்கு நிலையென்றார்.

---

1. யாங்கு - எப்படி. எனைத்து - எவ்வளவிற்று. செகுக்கல்லா - போக்கமாட்டாத. மதுகைத்து - வலியையுடைத்து. களரியம் பறந்தலை - களர் நிலத்துள்ள சுடுகாடு. பொத்துதல் - மூட்டடல்.

2. அளிய - இரங்கத்தக்கன. இனி - இப்பொழுது. புல் - புல்லரிசி. சிறு வெள்ளாம்பல், நாம் இளையமாயிருந்தபோது தழையாயின; இப்பொழுது உண்ணும் புல்லரிசியாயின; ஆதலின் அவை அளிய என முடிக்க.

3. புறங்காடு - சுடுகாடு. இது முல்லைநிலம். அதுபற்றியே அதனைப் பாலை என்றதற்குக் காரணத்தை நச்சினார்க்கினியர் கூறினார்.

[1]பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
யணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்த் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடகிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்கோட்டுப் பண்ணிய கருங்கோட் டீம
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே. (புறம். 246)

மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பெயரத் தாய்தப வரூஉந் தலைப்பெயல் நிலையும் - பொருகளத்துப் பொருதுமாயும் பெருஞ்சிறப்பிற்றீர்ந்து தன்மகன் புறங்கொடுத்துப் போந்தானாக, அது கேட்டுத் தான் சாக்காடு துணிந்து சென்று மகனைக் கூடுங் கூட்டமொன்றானும்: இனி அவன் பிறர்சிறப்பு மாய்தற்குக் காரணமாகிய பெருஞ் சிறப்பொடு களப்பட்டுத் துறக்கத்துப் போயவழி அவனோடு இறந்துபடவரும், தாயது தலைப்பெயனிலைமை யொன்றானும்:

இவ்விரு கூறும் உய்த்துக்கொண்டுணர்தலென்னும் உத்தி. நிலையென்றதனால் அவள் இறந்துபடாது மீடலுஞ் சிறுபான்மை யாங் காஞ்சியென்று கொள்க. [2]அஃது அன்பிற்கு நிலையின்மை யாம். உதாரணம்:

[3]வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோவே னத்தை நின்னீன் றனனே
பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி
யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க

---

1. செல்கெனச் சொல்லாது - நின்கணவனோடு இறப்ப நீ போ என்று கூறாது. ஒழிக என - தவிர்க என்று. அணில்வரிக் கொடுங்காய் - வெள்ளரிக்காய். வாள் - அரிவாள். காழ் - விதை. பிண்டம் - சோற்றுத்திரள். வெந்தை - வேவை. வல்சி - உணவு. உயவல் - வருந்தல் = கைம்மைநோன்பால் வருந்தல். ஈமம் - பிணப்படுக்கை. ஓரற்று - ஒருதன்மைத்து.

2. அஃது - மீடல்.

3. வாதுவல் - கிழிப்பேன். எஃகம் - வேல். காளையை - காளையாகிய நின்னை.

புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃக
மதன்முகத் தொழிய நீபோந் தனையே
யதனா, லெம்மில் செய்யாப் பெரும்பழி செய்த
கல்லாக் காளையை யீன்ற வயிறே.

(புறத்திரட்டு: மூதின்மறம். 9)

*இத் தகடூர்யாத்திரை கரியிடைவேலொழியப் போந்ததற்குத் தாய் தப வந்த* [1]*தலைப்பெயனிலை*

[2]எற்கண் டறிகோ வெற்கண் டறிகோ
வென்மக னாத லெற்கண் டறிகோ
கண்ணே கணைமூழ் கினவே தலையின்
வண்ண மாலையும் வாளிவிடக் குறைந்தன
வாயே, பொங்குநுனைப் பகழி மூழ்கலிற் புலர்வழித்
தாவ நாழிகை யம்புசெறித் தற்றே
நெஞ்சே வெஞ்சரங் கடந்தன குறங்கே
நிறங்கரந்து பலசர நிரைத்தன வதனா
லவிழ்பூ வப்பணைக் கிடந்தோன்
கமழ்பூங் கழற்றீங் காய்போன் றனனே.

*இத் தகடூர்யாத்திரை துறக்கத்துப் பெயர்ந்த நெடுங்கேரளன் தாய் இறந்துபட்ட தலைப்பெயனிலை.*

[3]நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோண்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
முலையறுத் திடுவன் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

*இப் (278) புறப்பாட்டு மீண்டது.*

*'ஈன்று புறந்தருதல்' என்னும் (312) புறப்பாட்டும் அது.*

---

1. தலைப்பெயல் - கூடுதல்.

2. எற்கண்டு அறிகோ - எதனைக் கண்டு அறிவேனோ? எற்கொண்டு அறிகோ என்று பாடமிருக்கலாம் போலும். ஆவநாழிகை - அம்பறாத்தூணி. குறங்கு - தொடை. அம்பணை - பாணங்களாலாய சயனம். சூழமுட்கள் செறியவுள்ள கழற்காய். அம்புகளால் மொய்க்கப்பட்டுக்கிடக்கும் வீரற்குவமையாதலை. 'மொய்ப்படுசரங்கள்' எனவரும் சீவகசிந். 2287 செய்யுளாலறிக.

3. சினைஇ - கோபித்து. பெயரா - பெயர்த்து. துழவல் - கையாற்றடவிப் பார்த்தல். படுமகன் - இறந்த மகன்.

*மலர்தலை உலகத்து மரபு நன்கறியப் பலர்செலச் செல் லாக்காடு வாழ்த்தொடு - அகன்ற இடத்தினையுடைய உலகங் களிடத்து வரலாற்று முறையினைப் பலரும் பெரிதுணரும்படி யாகப் பிறந்தோரெல்லாரும் இறந்துபோகவும் எஞ்ஞான்றும் இறப்பின்றி நிலைபெற்ற புறங்காட்டினை வாழ்த்துதலானும். உதாரணம்:*

[1]உலகு பொதியுருவந் தன்னுருவ மாகப்
பலர்பரவத் தக்க பறந்தலை நன்காடு
புலவுங்கொ லென்போற் புலவுக் களத்தோ
டிகனெடுவே லானை யிழந்து.

(பெ. பொ. விளக்கம்: புறத்திரட்டு – இரங்கல். 19)

[2]களரி பரந்து கள்ளி போகிப்
பகலுங் கூஉங் கூகையொடு பிறழ்பல்
லீம விளக்கிற் பேஎய் மகளிரோ
டஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் காதல ரழுத கண்ணீ
ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
வெல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே. (புறம். 356)

*இதுவுமது.*

*தொகைஇ ஈரைந்து ஆகுமென்ப - தொகைபெற்றுக் காஞ்சி பத்துவகைப்படுமென்று கூறுவர் ஆசிரியர்; நிறையருஞ் சிறப் பிற்றுறை இரண்டு உடைத்தே - ஆதலான் அக்காஞ்சி நிறுத்தற்கு எதிர் பொருளில்லாத பெரிய சிறப்பினையுடைய ஆண்பாற் றுறையும் பெண்பாற்றுறையுமாகிய இரண்டு துறையினை யுடைத்து என்றவாறு.*

*எனவே முற்கூறிய பத்தும் இப்பத்துமாக இருபதென்பதுங் கூறினாராயிற்று. நிறையருஞ் சிறப்பென்றதனானே மக்கட்குந் தேவர்க்கும் உள்ள நிலையாமையே காஞ்சிச் சிறப்புடைத்தாகக் கூறப்படுவது; ஏனை அஃறிணைப்பகுதிக்கண்ணுள்ள நிலை யாமை காஞ்சிச்சிறப்பன்று என்றுணர்க.* *(24)*

---

1. நன்காடு இழந்து என்போற் புலவுங்கொல் என இயைக்க. புலவல் - தனித்தல். உலகு பொதி உருவம் - உலகு முழுவதையும் அடக்கிய வடிவம். பறந்தலை - பாழாகியவிடம்; சுடுகாடு.

2. ஈமவிளக்கு - பிணஞ்சுடும் விறகின் அழலாகிய விளக்கு. முதுகாடு - மயானம். நெஞ்சமர் காதலர் - மனத்திற் பொருந்திய காதலையுடைய மகளிர்; என்றது மனைவியரை. எல்லார் புறனும் - எல்லாருடைய பிற்காலத்தையும். தன்புறம் - தன் பிற்காலம்.

### (பாடாண்டிணை இன்னதன்புறனென்றலும் இத்துணைப் பொருளுடைத்தென்றலும்)

80. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே.

இது மேற் 'புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்' (56) என்புழிக் [1]கிடக்கைமுறை கூறியமுறையான் இறுதி நின்ற பாடாண்டிணைக்குப் பொதுவிலக்கணம் உணர்த்துவான் அதற்குப் பெயர் இன்னதெனவும் அது கைக்கிளைப் புறனாமென வும் அஃது இத்துணைப் பொருளுடைத்தெனவுங் கூறுகின்றது.

**இ — ள்:** பாடாண்பகுதி கைக்கிளைப்புறனே - பாடாணெனப் பட்ட புறத்திணையது கூறு கைக்கிளையென்று கூறப்பட்ட அகத்திணைக்குப் புறனாம்; நாடுங்காலை நாலிரண்டு உடைத்து - தன்னை நாடிச் சொல்லுவார் செய்யுளுண் முடிந்த பொருள் பாடாணாகவே நிறுப்ப நாடுங்காலத்து எண்வகைப் பொரு ளுடைத்து என்றவாறு.

[2] பாடாணென்பது பாடுதல் வினையையும் பாடப்படும் ஆண்மகனையும் நோக்காது அவனதொழுகலாறாகிய திணை யுணர்த்தினமையின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித்தொகை. ஒரு தலைவன் [3]பரவலும் புகழ்ச்சியும் வேண்ட ஒரு புலவன் வீடு பேறு முதலிய பரிசில் வேண்டலின் அவை தம்மின் வேறாகிய ஒரு தலைக்காமமாகிய கைக்கிளையோ டொத்தலிற் பாடாண்டிணை கைக்கிளைப்புறனாயிற்று. வெட்சி முதலிய திணைகளுஞ் சுட்டியொருவர்ப் பெயர்கொடுத்துங் கொடாதும் பாடப்படுதலிற் பாடாண்டிணையாயினும் ஒருவனை ஒன்று நச்சிக் கூறாமையின் அவர் பெறுபுகழ் பிறரைவேண்டிப் பெறுவதன்றித் தாமே தலைவராகப் பெறுதலின் அவை கைக் கிளைப்புறன் ஆகாமை உணர்க. இவ்விருகூறுந் தோன்றப் பகுதி

1. 'புறத்திணையிலக்கணம்' என்றதனானே அகத்திணைக்குப் புறத்திணை என்பதும், திறப்பட என்றதனானே அகத்திணை ஏழற்கும் புறத்திணை ஏழும் முறைப்படப் பகுத்துக் கூறப்படும் என்பதும் பெறப்படவைத்தமை யானே கிடக்கைமுறை கூறப்பட்டதென்க.

2. பாடாண் என்பது பாடப்படும் ஆண்மகன் ஒழுக்கம் என ஆண்மகன் ஒழுக்கத்தை யுணர்த்தி நின்றமையின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்றார்.

3. பரவல் - வாழ்த்தல்.

யென்றார். புகழை விரும்பிச் சென்றோர் வெட்சி முதலியவற்றைப் பாடின் அவை கைக்கிளைப்புறன் ஆகாதென உணர்க.

இதனானே புறத்திணை ஏழற்கும் பெயரும் முறையும் ஒருவாற்றாற் கூறினாராயிற்று. நாலிரண்டாவன இப் பாடாண்டிணைக்கு ஓதுகின்ற பொருட்பகுதி பலவுங்கூட்டி ஒன்றும், இருவகை வெட்சியும் பொதுவியலும் வஞ்சியும் உழிஞையுந் தும்பையும் வாகையுங் காஞ்சியுமாகிய பொருள்கள் ஏழுமாகிய எட்டுமாம்.

இனி இக்கூறிய ஏழு திணையும் பாடாண்டிணைப் பொருளாகுமாறு காட்டுங்கால் எல்லாத் திணையும் ஒத்ததாயினும் அவை பெரும்பான்மையுஞ் சிறுபான்மையுமாகி வருதலும் அவை இரண்டும் பலவும் ஒருங்கு வருதலும் பாடாண்டிணைக்கு மேற்கூறும் பொருளும் விராய் வருதலுமாமென்று உணர்க. உதாரணம்:

[1]முனைப்புலத்துக் கஃதுடை முன்னரைப் போல்வேந்தூர்
முனைப்புலம்பு முன்னிரையும் வீசி – யெனைப்புலத்துஞ்
சென்றதுநின் சீர்த்தி தேர்வளவ தெவ்வர்போ
னன்றுமுண் டாக நமக்கு.

இது கூற்றுவகையானன்றிக் குறிப்புவகையான் ஒன்று பயப்பானாக்கி நினைத்துரைத்தலின் வெட்சியும் வாகையும் வந்த பாடாண்டிணையாம்.

[2]அவலெறி யுலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யு
முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தா ணாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பு
மழியா விழவி னிழியாத் திவவின
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ

1. அஃது என்றது நிரையை. நிரையைத் தாம் முன் உடையார் போல. பகைவேந்தர் ஊர்முனையிலே புலம்புமுன் அவர்க்கே கவர்ந்து நிரையைக் கொடுத்து, வீசி - வீசுதலால், நின் சீர்த்தி எவ்விடத்துஞ் சென்றது. பகைவர்க்கு அவ்வாறு நன்மை உண்டாதல்போல நமக்கும் நன்மை பெரிதும் உண்டாகுக.

2. அவல்எறி - அவலை இடிக்கும். வள்ளை - வள்ளை இலை. அயிரை - ஒரு சாதி மீன். குழாஅலின் - குழுவுதலின். ஒப்பும் - துரத்தும். திவவு - யாழ். வயிரிய மாக்கள் - பாடுபவர். (யாழ்ப்பாடகர்). மறுகுசிறை - தெருவின் இருபக்க வீடு. வைப்பு - ஊர். அளிய - இரங்கத்தக்கன. பரவாஊங்கு - பரவுதற்குமுன்.

மன்ற நண்ணி மறுகுசிறை பாடு
மகன்கண் வைப்பி னாடும னளிய
விரவுவேறு கூலமொடு குருதி வேட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
வமர்கோ ணேரிகந் தாரெயில் கடக்கும்
பெரும்பல் யானைக் குட்டுவன்
வரம்பி றானை பரவா வூங்கே. (பதிற்று. 29)

*இதில் இமையவரம்பன் தம்பி* பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக்கௌதமனார் *துறக்கம் வேண்டினா ரென்பது குறிப்பு வகையாற் கொள்ள* [1]வைத்தலின் இது வஞ்சிப் *பொருள் வந்த பாடாணாயிற்று.*

*'இலங்கு தொடிமருப்பின்' என்னும்* பதிற்றுப்பத்து *உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாகிய உழிஞையாயினும் பதின்றுலாம் பொன் பரிசில் பெற்றமையிற் பாடாணாயிற்று.*

[2]பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகல
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினுங்
கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே
சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்று நிலைதளர்க்கு முருமிற் சீறி
யொருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
யாடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையே மென்றனர் நீயு
நுந்நுகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
காறிரை யெடுத்த முழுங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனி
னடையடுப் பறியா வருவி யாம்ப
லாயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே.

*இது வாகைத்துறைப் பாடாண்பாட்டு.*

---

1. வைத்தலின் பாடாணாயிற்று என்க.

2. பணிபு - பணிதல். மலர்ப்பு - மலர்த்தல். கொண்டி - கொள்ளை. தமிழ் - தமிழ்ப் படை. செறித்து - இடையறக்கொன்று. ஆடு - வென்றி; பிறரிடம் பெற்ற வென்றி. நீகண்டனையம் - நின்னாற் படைக்கப்பட்டாற் போலானோம். அருவீ ஆம்பல் - வீயரிய ஆம்பல். என்றது எண்ணாம்பலை. வீ - பூ. அருமை - இன்மை.

இப் (63) பதிற்றுப்பத்து நூறும் இவ்வாறே வருதலிற் பாடாண் டிணையேயாயிற்று. புறத்துள்ளும் இவ்வாறு வருவனவும் உணர்க. (25)

**(ஒன்றன்பகுதியுள் தேவர்பகுதி இவையெனல்)**

**81.** **அமரர்கண் முடியு மறுவகை யானும்**
**புரைதீர் காமம் புல்லிய வகையினு**
**மொன்றன் பகுதி யொன்று மென்ப.**

இது முன்னர் எட்டெனப் பகுத்த பாடாண்டிணையுள் ஏழொழித்துத் தன் பொருட்பகுதிகள் எல்லாங்கூடி ஒன்றா மென்ற பாடாண்டிணை தேவரும் மக்களுமென இருதிறத் தார்க்கே உரிய என்பார் அவ்விரண்டினுள் தேவர்பகுதி இவை யென்ப துணர்த்துகின்றது.

**இ — ள்:** அமரர்கண்முடியும் அறுவகையானும் - பிறப்பு வகையானன்றிச் சிறப்புவகையால் தேவர்கண்ணே வந்து முடி தலுடையவாகிய அறுமுறை வாழ்த்தின்கண்ணும், புரைதீர் காமம் புல்லிய வகையினும் - அத்தேவரிடத்தே உயர்ச்சி நீங்கிய பொருள்களை வேண்டுங் குறிப்புப் பொருந்தின பகுதிக்கண்ணும், ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப - மேற் பாடாண்பகுதியெனப் பகுத்து வாங்கிக் கொண்ட ஒன்றனுள் தேவரும் மக்களுமெனப் பகுத்த இரண்டனுள் தேவர்க்கு உரித்தாம் பகுதியெல்லாந் தொக்கு ஒருங்கு வருமென்று கூறுவார் ஆசிரியர் என்றவாறு.

அமரர்கண்ணே வந்து முடியுமெனவே அமரர் வேறென்ப தூஉம் அவர்கண்ணே வந்து முடிவன வேறென்பதூஉம் பெற் றாம். அவை முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை வேந்தரும் உலகுமாம். இவை தத்தஞ் சிறப்புவகை யான் அமரர்சாதிப் பாலவென்றல் வேதமுடிவு. இதனானே பிறப்பு முறையாற் சிறந்த அமரரை வாழ்த்தலுஞ் சொல்லாமையே முடிந்தது [1]தந்திரவுத்திவகையான். வகையென்றதனானே அம ரரை வேறு வேறு பெயர்கொடுத்து வாழ்த்தலும் ஏனைப் பொது வகையாற்கூறி வாழ்த்தினன்றிப் பகுத்துக் கூறப்படாமையுங் கொள்க. புரை உயர்ச்சியாதலின் உயர்ச்சியில்லாத காமமாவது மறுமைப் பயன்பெறுங் கடவுள் வாழ்த்துப்போல் உயர்ச்சியின்றி,

1. தந்திரவுத்தி - நூற்புணர்ப்பு.

இம்மையிற்பெறும் பயனாதலின் இழிந்த பொருள்களிற் செல்லும் வேட்கைக் குறிப்பு. புல்லிய வகையாவது அம்மனக்குறிப்புத் தேவர்கண்ணே பொருந்திய கூறாது தன்பொருட்டானும் பிறன்பொருட்டானும் ஆக்கத்துமேல் ஒருவன் காமுற்றவழி அவை அவற்குப் பயன்கொடுத்தலாம், இது ஒன்றனுடைய பகுதியென்க. இத்துணைப் பகுதியென்று இரண்டிறந்தன எனக் கூறாது வாளாதே பகுதியென்றமையின் தேவரும் மக்களுமென இரண்டேயாயிற்று. அத்தேவருட் [1]பெண்டெய்வங் 'கொடி நிலை கந்தழி' (88) என்புழி அடங்கும். மக்களுட் பெண்பால் பாடுதல் சிறப்பின்மையிற் 'செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ' (புறம் - 3) என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களோடு படுத்துப் பாடுப. 'வகை' யென்றதனான் வாழ்த்தின்கண் மக்கட் பொருளும் உடன்றழுவினும் அவை கடவுள் வாழ்த்தாமென்று கொள்க. உதாரணம்:

> [2]எரியெள் ளுவன்ன நிறத்தன் விரியிணர்க்
> கொன்றையம் பைந்தா ரகலத்தன் பொன்றா
> ரெயிலெரி யூட்டிய வில்லன் பயிலிருட்
> காடமர்ந் தாடிய வாடல னீடிப்
> புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
> வெண்மணி யார்க்கும் விழவின னுண்ணூற்
> சிரந்தை யிரட்டும் விரலனிரண்டுருவா
> யீரணி பெற்றவெழிற் றகைய னேரு
> மிளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
> மாறேர்க்கும் பண்பின் மறுமிடற்றன் றேறிய
> சூலம் பிடித்த சுடர்ப்படைக்
> காலக் கடவுட் குயர்கமா வலனே. (பதிற்று)

இது கடவுள் வாழ்த்து.

[3]தொகைகளிலுங் கீழ்க்கணக்கிலும் உள்ள கடவுள் வாழ்த்தெல்லாம் இதன்கண் அடக்குக.

இனி அறுமுறை வாழ்த்தும் வருமாறு:-

---

1. பெண்பாற்றெய்வம் கொடிநிலைகந்தழிவள்ளி என்றவற்றுள் வள்ளியுளடங்குமென்று இவ்வுரையாசிரியரே (நச்சினார்க்கினியரே) கூறுவதைச் சூத்திர உரையால் அறிக.

2. எரி - அக்கினி. அகலம் - மார்பு. பொன்றார்எயில் - பகைவர் மதில்; என்றது (திரிபுரத்தை) மூவெயிலை. ஆடல் - கூத்து. குறங்கு - தொடை. சிரந்தை - துடி (உடுக்கை) இரண்டுஉரு - அர்த்தநாரீசுரவடிவம். ஈரணி - இரண்டு நிறம். களங்கனி - களம் பழம். மறுமிடறு - நீலகண்டம். காலக்கடவுள் - ஊழித்தேவன்; உருத்திரன். மறைமொழி - மந்திரம்.

3. தொகை - எட்டுத்தொகை.

[1]நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (குறள் – நீத். 8)

[2]கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை (குறள் – வான். 5)

[3]நாகின நந்தி யினம்பொலியும் போத்தென
வாய்வா ளுழவர் வளஞ்சிறப்ப வாய
ரகன்றார் சுரைய கறந்தபால் சீர்சிறந்த
வான்பொருள் வட்டத் தயிராகு மத்தயிர்
மெல்லக் கடைவிடத்து நெய்தோன்று நெய்பயந்து
நல்லமு தன்ன வளையாகு நல்ல
புனிதமு மெச்சிலு நீக்கித் துனியின்றி
யன்ன பெரும்பயத்த வாகலாற் றொன்மரபிற்
காரார் புறவிற் கலித்த புதர்மாந்தி
யாவா ழியரோ நெடிது.

*ஏனைய வந்துழிக் காண்க*

[4]புயல்சூடி நிவந்த பொற்கோட் டிமயத்து
வியலறைத் தவிசின் வேங்கை வீற்றிருந்தாங்
கரிமான் பீடத் தாசுதொழ விருந்து
பெருநிலச் செல்வியொடு திருவீழ் மார்பம்
புதல்வருந் தாமு மிகலின்று பெறூஉந்
துகளில் கற்பின் மகளிரொடு விளங்கி
முழுமதிக் குடையி னமுதுபொதி நீழ
லெழுபொழில் வளர்க்கும் புகழ்சாய் வளவன்
பிறந்தது பார்த்துப் பிறர்வாய் பரவநின்
னறங்கெழு சேவடி காப்ப வுறந்தையோ
டூழி யூழி வாழி
யாழி மானில மாழியிற் புரந்தே.

*இது கடவுள் வாழ்த்தி ஒழியாது தனக்குப் பயன்படுவோன் ஒருவனையுங் கூட்டி வாழ்த்தலின் புரைதீர்காமம் புல்லிய வகையாயிற்று.* *(26)*

---

1. இது முனிவரை வாழ்த்தியது. நிறைமொழி - அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தே விடுமொழி.
2. இது மழையை வாழ்த்தியது.
3. இது ஆனை வாழ்த்திய செய்யுள். நாகு - கன்று. இனம் - பசு நிரை. நந்தி - பெருகி. போத்து - ஆனேறு. ஆயர் - இடையர். சுரைய - மூங்கிற்குழாயிடத்துள்ள வாள் உழவர் - படைவாளுழவர். படைவாள் - கலப்பையைக் குறிக்கும். அளை - வெண்ணெய். புனிதமுமெச்சிலும் நீக்கி என்றது. பால் முதலியவற்றில் சுத்தா சுத்தம் உலகு பார்ப்பதில்லை என்றபடி. துனி - வெறுப்பு. பயம் - பிரயோசனம். புதர் - புதல் = பற்றை. மாந்தி - உண்டு. சுரை - முலைமடி எனினும் ஆம்.
4. அறை - பாறை. வேங்கை - புலி. எழுபொழில் - ஏழுலகு. ஆழியின் - சக்கரத் தின். புரந்து வாழி என்க.

### (ஒன்றன்பகுதியுள் மக்கட்பகுதி இவையெனல்)

82. [1]வழங்கியன் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினு
முன்னோர் கூறிய குறிப்பினுஞ் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.

இது மேல் 'ஒன்றன்பகுதி' (81) என்புழித் தோற்றுவாயாகச் செய்த இருபகுதியுண் மக்கட்பகுதி கூறுகின்றது.

இ – ள்: பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினும் - ஒரு தலைவன், தன்னைப் பிறர் வாழ்த்துதலும் புகழ்ந்துரைத்தலுங் கருதிய பக்கத்தின்கண்ணும், வகைபட முன்னோர் கூறிய குறிப்பினும் - அறம் பொருள் இன்பங்களின் கூறுபாடு தோன்ற முன்னுள்ளோர் கூறிய குறிப்புப் பொருளின்கண்ணும், செந்துறை நிலைஇ - செவ்வன கூறுந்துறைநிலை பெற்று, வழங்கு இயல் மருங்கின் - வழங்குதல் இயலுமிடத்து, ஆங்கு வண்ணப் பகுதி வரைவின்று - அச்செந்துறைக்கண் வருணங்களின் கூறுபாடு நிகழ்ந்தன நீக்குநிலைமையின்று என்றவாறு.

பரவல் முன்னிலைக்கட் பெரும்பான்மை வரும். பரவலும் புகழ்ச்சியுந் தலைவன்கண்ணவாய்ப் பரிசில் பெறுதல் பாடுவான் கண்ணதாகலின் ஒருதலைக் காமமாகிய கைக்கிளைக்குப் புறனாயிற்று. முன்னோர் கூறிய குறிப்பும் பாடப்படுவோன்கண் வேட்கையின்மையிற் கைக்கிளையாம். குறிப்பென்றார், அறம் பொருள் இன்பம் பயப்பச் செய்த செய்யுளைக் கேட்டோர்க்கும் அஃது உறுதிபயத்தலைக் குறித்துச் செய்தலின். செந்துறையாவது விகாரவகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறை வாழ்த்தினைப் போலாது உலகினுள் இயற்கைவகையான் [2]இயன்ற மக்களைப் பாடுதல். இது செந்துறைப் பாடாண்பாட்டெனப்படும்.

'[3]வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணா' (குறிஞ்சி 31) என்பவாகலானும் ஐவகை நிறத்தினையும் வண்ணமென்பவாகலானும் வண்ணமென்பது இயற்சொல்; வருணமென்பது வடமொழித் திரிபு.

---

1. இதற்கு இளம்பூரணர் உரை பொருத்தமாகக் காணப்படுகின்றது.

2. இயன்ற - ஒழுகிய.

3. வண்ணம் குணமென்றும் "செந்துறை வண்ணப்பகுதி வரை வின்றாங்கே என்பதனால் வண்ணம் குணமென்றுணர்க" என்றும் குறிஞ்சிப்பாட்டுரை

ஆங்கு வண்ணப்பகுதி வரைவின்றெனவே வருகின்ற காமப் பகுதி யிடத்து வண்ணப்பகுதி [1]வரையப்படுமாயிற்று; கைக் கிளைக் கிழத்தியை உயர்ந்தோன் வருணத்துப்படுத்துக் கூறாதது, 'அனைநிலை' (75) வருணத்துப்படுத்துத் தோன்றக் கூறலின். உதாரணம்:

[2]நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி
னளப்ப ரியையே
நான்கோ டிங்கள் ஞாயிறு கனையழ
லைந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த வீரைம் பதின்மரொடு
துப்புத் துறைபோகிய துணிவுடை யாண்மை
யக்குர னனைய கைவண் மையையே
யமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த செருப்புகன் முன்ப
கூற்று வெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே
யெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரி தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பி
னொடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ
பல்களிற்றுத் தொகுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையே ருழவ பாடினி வேந்தே
யிலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பினிப் பொழின்முழ தாண்டநின்
முன்றிணை முதல்வர்போல நின்றுநீ
கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅ வியரோவிவ் வுலகமோ டுடனே (பதிற்று. 14)

[3]பரவற்கண் வந்த செந்துறைப் பாடாண்பாட்டு; இதனை வாழ்த்தியலென்பர்.

[4]வரைபுரையு மழகளிற்றின்மிசை
வான்றுடைக்கும் வகையபோல
விரவுருவின கொடிநுடங்கும்

---

யுள் கூறினர் நச்சினார்க்கினியர். வருணம் என்று ஈண்டு உரைகூறுவதனால் வருணத்தைக் குணம் என்பது ஆகுபெயரா யுணர்த்திற்றுப்போலும்.

1. வரைதல் - நீக்கல்.
2. நாள் - நட்சத்திரம். கோள் - எண்ணப்பட்ட ஞாயிறுந் திங்களும் விளக்க மில்லாத இராகு கேதுக்களு மொழித்தொழிந்த ஐந்தும். ஈரைம்பதின்மர் - நூற்றுவர். துப்பு - வலி. எழுமுடி - ஏழரசர் முடி. மெய்ம்மறை - மெய்யை மறைப்பது - சட்டை. முன்றிணை முதல்வர் - குலமுதல்வர்.
3. பரவல் - வாழ்த்தல்.
4. வான்துடைக்கும் - வானைத்துடைக்கும். விரவுஉரு - பலநிறம், போல நுடங்கும் கொடி என்க. பொலம்பூங்கா - கற்பகதரு. கடவது - செய்யக்

வியன்றானை விறல்வேந்தே
நீ, யுடன்று நோக்கும்வா யெரிதவழ
நீ, நயந்து நோக்கும்வாய் பொன்பூப்பச்
செஞ்ஞாயிற்று ணிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்
வேண்டியது விளைக்கு மாற்றலை யாகலி
னின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த
வெம்மள வெவனோ மற்றே யின்னிலைப்
பொலம்பூங் காவி னன்னாட் டோருஞ்
செய்வினை மருங்கி னெய்த லல்லதை
யுடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங்
கடவ தன்மையிற் கையற வுடைத்தென
வாண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலி
னின்னா டுள்ளுவர் பரிசில
ரொன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே (புறம். 38)

*இது புகழ்ச்சிக்கண் வந்த செந்துறைப் பாடாண்பாட்டு. [1]இயைபியன்மொழி யென்பதும் அது.*

[2]உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யரானே (புறம். 182)

*இது வகைபட முன்னோர்கூறிய குறிப்பின்கண்வந்த செந்துறைப் பாடாண்பாட்டு.*

*இது முனிவர் கூறுமாறுபோலக் [3]கூறிப் பரவலும் புகழ்ச்சி யுங்கூறாது மறுமைப்பயன் பிறர்க்குறுதி பயப்பக் கூறலிற் கைக்கிளைப் புறனாய்ப் பாடாணாயிற்று.*

---

கடவது. கையறவு - செயலறவு. ஆண்டு - சுவர்க்கம். நின்னுடைத்து - நின்னை யுடையது.

1. இயைபியன்மொழி - அரசனுக்குப்பொருந்திய இயல்புகளை எடுத்துக்கூறி வாழ்த்துவது. "அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்தும்" (புற 35) நோக்கியறிக.

2. உண்மையான் இவ்வுலகம் உண்டென இயைக்க. இயைவதாயினும் - பொருந்துவதாயினும்; தமியர் - தனித்தவராய். முனிவிலர் - வெறுப்பிலர். துஞ்சலுமிலர் - மடிந்திருத்தலுமிலர். அயர்விலர் - மனக்கவற்சியிலர். நோன்தாள் - வலிய முயற்சி.

3. கூறிக் கூறலின் என இயையும் பிறர்க்குறுதிபயத்தலைக் கவிஞன் விரும்பிப் பாடலின் பாடாணாயிற்று.

[1]இவை செந்துறை மார்க்கத்து வண்ணப்பகுதியாகிய பாடல் பற்றி வருமென்பதூஉம் வெண்டுறை மார்க்கமாகிய நாடகத்துள் அவிநயத்துக்கு உரியவாகி வருமென்பதூஉங் கூறின், அவை ஈண்டுக் கூறல் மயங்கக் கூறலாம். அன்றியும் ஏனை அறுவகைத் திணைக்கும் இங்ஙனம் கூறாது [2]இத் திணைக்கே உரித்தாகக் கூறதற்கோர் காரணமின்மையானும் அங்ஙனங் கூறாரென்ப. பரவலும் புகழ்ச்சியும் அவ்வப் பொருண்மை கருதினாரைத் தலை வராகவுடைமை யானும், ஏனையது அக்குறிப்பிற்று அன்றாக லானும், அதற்குப் பாட்டுடைத்தலைவர் பலராயினும் ஒருவ ராயினும் பெயர் கொடுத்துங் கொடாதுங் கூறலானும் வேறு வைத்தாரென்க. இத்துணை வேறுபாடுடையதனைப் பரவல் புகழ்ச்சியோடு கூடவைத்தார், [3]அவை முன்னோர் கூறிய குறிப் பினுள்ளும் விராய்வரும் என்றற்கு. இன்னும் அதனானே பாடாண்டிணைப் பொருண்மை [4]மயங்கிவரினும் முடிந்த பொருளாற் பெயர்பெறுமென்று கொள்க.

"நிலமிசை வாழ்நர்" என்னும் (43) புறப்பாட்டுப் புலவன் அரசனை வைது [5]ஆறி அது நன்குரைத்தல். அஃது இயற்கை வகையானன்றிச் செயற்கை வகையாற் பரவலும் புகழ்ச்சியுந் தொடர்ந்த முன்னோர் கூறிய குறிப்பு.

இன்னும் மயங்கி வருவனவெல்லாம் இதனான் அமைக்க. (27)

**(எய்தியதன்மேற் சிறப்புவிதி)**

**83. காமப் பகுதி கடவுளும் வரையா**
**ரேனோர் பாங்கினு மென்மனார் புலவர்.**

இது முற்கூறிய கடவுட்கும் மக்கட்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

---

1. செந்துறை - இசை.
2. இத்திணை - பாடாண்டிணை.
3. அவை - பரவலும். புகழ்ச்சியும்.
4. மயங்கல் - பரவல் புகழ்ச்சிகளொடு மயங்கல்.
5. ஆறி - தணிந்து. அது என்பதில் யாதோ பிழையுளது போலும். ஆறியது என்றுகொண்டு அரசன் பொறுத்தது என்று கொள்ளலுமாம். அரசனை நாடி நன்குரைத்தல் என்றும் பாடம் உளது.

இ — ள்: காமப்பகுதி - முன்னர்ப் 'புலைதீர்காம' (81) மென்ற தனுட் [1]பக்குநின்ற புணர்ச்சி வேட்கை, கடவுள் பாங்கினும் வரையார் - கட்புலனாகிய கடவுளிடத்தும் நீக்கார், ஏனோர் பாங்கினும் வரையார் என்மனார் புலவர் - மக்களிடத்தும் நீக்காரென்று கூறுவர் புலவர் என்றவாறு.

[2]பகுதி, ஆகுபெயர். அது, கடவுண்மாட்டுக் கடவுட்பெண் டிர் நயப்பனவும், அவர்மாட்டு மானிடப்பெண்டிர் நயப்பன வும் கடவுண் மானிடப்பெண்டிரை நயப்பனவும் பிறவுமாம்.

இன்னும் 'பகுதி' யென்றதனானே எழுதிணைக்குரிய காம மும் 'காமஞ் சாலா விளமை யோள்வயிற்' (50) காமமுமன்றி இது வேறோர் காமமென்று கொள்க. உதாரணம்:

[3]நல்கெனி னாமிசையா ணோமென்னுஞ் சேவடிமே
லொல்கெனி னுச்சியா ணோமென்னு — மல்கிரு
ளாட லமர்ந்தாற் கரிதா லுமையாளை
யூட லுணர்த்துவதோ ராறு. (பு.வெ. பாடாண்.48)

[4]பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால்
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீரேறுங்
கொல்லேற்றுக் கறுகிடினுங் கொள்ளுமோ கொள்ளாதோ.

[5]குடுமிப் பருவத்தே கோதை புனைந்தே
யிடுமுத்தம் பூத னிருப்பப் — படுமுத்தம்
புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையார்க்
கென்ன முறைய ளிவள். எ — ம்,

[6]களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
யளியா னளிப்பானே போன்றான் — றெளியாதே
செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தே
னென்காண்பே னென்னலால் யான். (முத்தொள். 63)

---

1. பக்குநின்ற - பிரிந்துநின்ற. இது உயர்ந்த காமம் என்பது இவர்க்குக் கருத்துப் போலும்.
2. பகுதி - ஈண்டுப் பக்குநின்றதாகிய காமவேட்கைக் காதலின் ஆகுபெயர் என்றார்.
3. நல்குக எனின் - அருள்செய்க எனின். ஒல்கு எனின் - வணங்குவேனெனின். இருள்ஆடலமர்ந்தான் - இருளிலே திருக்கூத்தை மேவின இறைவன். உணர்த்தல் - நீக்குதல். இது கடவுண் மாட்டுக் கடவுட்பெண்டிர் நயப்பு.
4. பல்லேற்றபரிகலம் - பிரமகபாலம். வல் - சூதாடுகருவி. இது கடவுளை மானிடப்பெண்டிர் நயந்தது.
5. குடுமிப்பருவம் - இளம்பருவம். புறம்பணையான் - மாசாத்தன் (ஐயனார்). சிலப். 9 - 13). இதன் கருத்து நன்கு புலப்படவில்லை.

[1]அணியாய செம்பழுக்காய் வெள்ளிலையோ டேந்திப்
பணியாயே யெம்பெருமா னென்று – கணியார்வாய்க்
கோணலங் கேட்பதூஉங் கொண்கர் பெருமானார்
தோணலஞ் சேர்தற் பொருட்டு எனவரும்.

[2]அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென்
றொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே
யடுதோண் முயங்க லவைநா ணுவலே
யென்போற் பெருவிதுப் புறுக வென்று
மொருபாற் படாஅ தாகி
யிருபாற் பட்டவிம் மைய லூரே. (புறம். 83)

*இது பெருங்கோழி நாய்கன் மகள் ஒருத்தி [3]ஒத்த அன்பினாற் காமமுறாத வழியுங் குணச் சிறப்பின்றித் தானே காம முற்றுக் கூறியது, இதனானடக்குக.*

*இன்னும் 'ஏனோர்பாங்கினும்' என்பதனானே [2]கிளவித் தலைவனல்லாத பாட்டுடைத் தலைவனைக் கிளவித் தலைவ னாகக் கூறுவனவுங் கொள்க. உதாரணம்:*

கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலந்
தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன். (கலி. 67)

*[4]இது குறிப்பினாற் பாட்டுடைத் தலைவனைக் கிளவித் தலைவனாகக் கூறியது.*

மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூட னெடுங்கொடி யெழவே (கலி. 31)

*என்பதும் அது.*

*இவ்வாறு வருவதெல்லாம் இதனானமைக்க. (28)*

---

1. பழுக்காய் - பாக்கு. வெள்ளிலை - வெற்றிலை. கணி - சோதிடன் கோள்நலம் - கிரகபலம்.

2. மையணல் - கருமைநிறம் பொருந்திய தாடி. கழித்திடுதல் - என்னைக் கைவிடுதல். இம்மையலூர் என்போற் பெருவிதுப்புறுக என இயைக்க. விதுப்பு - நடுக்கம்.

3. கந்தபுராணத்து வள்ளியம்மை திருமணப்படலத்தில் பாட்டுடைத்தலைவ ராகிய கந்தசுவாமியைக் கிளவித்தலைவனாகக் கூறியதுங்காண்க.

4. இச்செய்யுளுரையில், இவரே "புனலூரனென்றது பாண்டியனேயாதலிற் பாட்டுடைத்தலைவனையே கிளவித்தலைவனாகக் கூறிய அகப்புற மாயிற்று" என்று கூறல் காண்க.

(மக்கட் குழவிக்கண்ணும் புரைதீர்காம முரித்தெனல்)

84. [1]குழவி மருங்கினுங் கிழவ தாகும்.

இது முன்னிற் சூத்திரத்திற் பக்குநின்ற காமத்திற்கன்றிப் 'புரைதீர்காம' (81) த்திற்குப் புறனடை கூறுகின்றது.

இ – ள்: குழவி மருங்கினும் கிழவதாகும் - குழவிப் பருவத்துங் காமப்பகுதி உரியதாகும் என்றவாறு.

'மருங்கு' என்றதனான் மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்க; தெய்வக் குழவியின்மையின். இதனை மேலவற்றோ டொன்றாது வேறு கூறினார், தந்தையரிடத்தன்றி ஒரு திங்களிற் குழவியைப் பற்றிக் [2]கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டுமிடத்துச் செங்கீரையுந் தாலுஞ் சப்பாணியும் முத்த மும் வரவுரைத்தலும் அம்புலியுஞ் சிற்றிலுஞ் சிறுதேருஞ் சிறு பறையுமெனப் பெயரிட்டு வழங்குதலானு மென்பது.

இப்பகுதிகளெல்லாம் 'வழக்கொடு சிவணிய' (86) என்னுஞ் சூத்திரத்தாற் பெறுதும். இப்பருவத்துக்கு உயர்ந்தவெல்லை மூவகை வருணத்தாரும் இருபிறப்பாளராகின்ற பருவமாம். வேளாளர்க்கும் மூவகையோர்க்குரிய பருவமே கொள்க. குழ விப் பருவங் கழிந்தோர் அது வேண்டியக்காலும் அக் குழவிப் பருவமே கருதிப் பாடுக வென்றற்குக் 'கிழவதாகு' மென்றார். இதற்குப் பரிசில்வேட்கை அக்குழவிக்கணன்றி அவன் [3]தமர்க் கண்ணுமாமென்றுணர்க. உதாரணம்:

[4]அன்னா யிவனொருவ னந்தரத்தா னானென்றான்
முன்ன மொருகான் மொழியினான் – பின்னுங்
கலிகெழு கூடலிற் கண்ஞீடி வந்து
புலியாய்ப் பொருவான் புகும்.

---

1. இதற்கு இளம்பூரணர் வேறு கூறுவர்.
2. கடவுள் காக்க என்று கூறியது. பிள்ளைத்தமிழில் வரும் காப்புப் பருவத்தைக் குறிக்கின்றது. செங்கீரை முதலியன அதில் வரும் ஏனைப்பருவங்களாம்.
3. உம்மை, குழவிப்பருவங் கழிந்தோரைக் குழவிப்பருவமாக வைத்துப் பாடுங் கால் அவரிடம் பெறுதலும் குழவிக்கண் பெறுதலாக வைத்தலையுங் குறிக்கும்.
4. அந்தரத்தான் - வானிலுள்ளவன்; என்றது சந்திரனை இதன் கதை தெரி யாமையால் கருத்து நன்கு புலப்படவில்லை.

அந்தரத்தா னானென்றான் [1]அம்புலி வேறாயும் ஒரு காலத்தே விளையாட்டு நிகழ்த்துமென. இது, மதுரையிற் பிட்டுவாணிச்சி மகற்கு மங்கலக் குறிப்பாற் சான்றோர் கூறியது. (29)

**(ஊர்ப்பொதுமகளிரொடு பொருந்திவரக் கூறலும் பாடாண்டிணைக் குரித்தெனல்)**

**85. ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப.**

இது புரைதீர் காமத்திற்கன்றிப் பக்குநின்ற காமத்திற்குப் புறனடை கூறுகின்றது.

**இ — ள்:** பக்கு நின்ற காமம் ஊரிற் பொதுமகளிரொடு கூடி வந்த விளக்கமும் பாடாண்டிணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'தோற்றமு' மென்றது அக் காமந் தேவரிடத்தும் மக்களிடத் தும் விளங்கும் விளக்கத்தை. அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச் செய்யுளாம்.

[2]இச் சூத்திரத்திற்குத் தலைவர் பிறந்த ஊரும் அவர் பிறப்பு மென்று பொருள் கூறின் மரபியற்கண்ணே 'ஊரும் பெயரும்' (629) என்னுஞ் சூத்திரத்து ஊர் பெறுதலானும், முன்னர் 'வண் ணப் பகுதி' (82) என்பதனாற் பிறப்புப் பெறுதலானும் இது கூறியது கூறலாமென்றுணர்க. (30)

**(மேற்கூறிய ஐந்து சூத்திரங்கட்கும் புறனடை)**

**89. வழக்கொடு சிவணிய வகைமை யான.**

இஃது 'அமரர்கண் முடியும்' (81) என்னும் சூத்திர முதலிய வற்றுக்கெல்லாம் புறனடை.

**இ — ள்:** கடவுள் வாழ்த்தும் அறுமுறை வாழ்த்தும் முதலாக ஊரொடு தோற்ற மீறாகக் கிடந்தனவெல்லாஞ் சான்றோர் செய்த புலநெறிவழக்கோடே பொருந்திவந்த பகுதிக்கண்ணே யான பொருள்களாம் என்றவாறு.

---

1. அம்புலி - சந்திரன்
2. இவ்வாறு கூறுபவர் இளம்பூரணர் அவர் வண்ணம் என்பதற்கு வேறு பொருள் கொண்டனர்.

எனவே, புலநெறிவழக்கின் வேறுபடச்செய்யற்க என்பது கருத்து.

கடவுள் வாழ்த்துப் பாடுங்கால், முன்னுள்ளோர் பாடிய வாறன்றி முப்பத்து மூவருட் சிலரை விதந்துவாங்கிப் பாடப் பெறாது.

இனி அறுமுறை வாழ்த்துப் பாடுங்கால் முன்னுள்ளோர் கூறியவாறன்றி ஆவிற்கினமாகிய எருமை முதலியனவும் வாழ்த் தப் படா.

இனிப் புரைதீர்காமம் புல்லியவகையும், ஒருவன் றொழுங் குல தெய்வத்தை நோக்கியன்றி வரைவின்றிக் கூறப்படாது.

இனிச் செந்துறைப் பாடாண்பாட்டு முன்னுள்ளோர் கூறிய வாறன்றி இறப்ப இழித்தும் இறப்ப உயர்த்தும் கூறப்படாது.

இனிக் காமப்பகுதிக் கடவுளரைக் கூறுங்காலும் பெண்டெய் வத்தோடு [1]இயல்புடையாரைக் கூறினன்றி எண்வகைவசுக்கள் போல்வாரையும் புத்தர் சமணர் முதலியோரையுங் கூறப்படாது.

இனி மக்களுள் ஒருவனைத் தெய்வப் பெண்பால் காதலித் தமை கூறுங்காலும், மக்கட் பெண்பாற்குக் காதல்கூறுங்காலும் முன்னோர் கூறியவாறன்றிக் கூறப்படாது.

இனிக் குழவிப் பருவத்துக் காமங்கூறுங்காலும் முன்னர்க் காப்பும் பின்னர் ஏனையவுமாக முன்னுள்ளோர் கூறியவாறன் றிக் கூறப்படாது.

இனி ஊரொடு தோற்றமும் பரத்தையர்க்கன்றிக் குல மகளிர்க்குக் கூறப்படாது.

இன்னுஞ் 'சிவணிய வகைமை' என்றதனானே முற்கூறிய வற்றோடே நாடும் ஊரும் மலையும் யாறும் படையுங் கொடி யுங் குடையும் முரசும் நடைநவில் புரவியும் களிறும் தேரும் தாரும் பிறவும் வருவனவெல்லாங் கொள்க. உதாரணம்:

> **[2]முற்பற்றி னாரை முறைசெய்யிற் றானென்னைக்**
> **கைப்பற்றக் கண்டேன் கனவினு – ளிப்பெற்றித்**
> **தன்னைத் தனக்கே முறைப்படி னென்செய்யும்**
> **பொன்னம் புனனாட்டார் கோ.**

---

1. இயல்பு - தகுதி.
2. புனல்நாடு - சோழநாடு. இது நாடு. அடுத்துவந்தது.

ஏரியு [1]மேற்றத்தி னாலும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாந் – தேரி
னரிதாளின் கீழுகூஉ மந்நெல்லே சாலுங்
கரிகாலன் காவிரிசூழ் நாடு. (பொருநராற்றுப்படை)

*இவை நாடும் யாறும் அடுத்துவந்தன.*

[2]மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்மு
ளொலியும் பெருமையு மொக்கு – மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம் படும்.

*இஃது ஊர் அடுத்துவந்தது.*

[3]மிதியற் செருப்பிற் பூழியர் கோவே
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை
பல்பயந் தழீஇய பயங்கெழு நெடுந்தோட்டு
நீரறன் மருங்குவழிப் படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சரச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை யயிரைப் பொருந. (பதிற்று. 21)

*இது மலையடுத்தது.*

[4]ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும். (புறம். 14)

*இது படையடுத்தது.*

[5]பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்
பாம்புண் பறவைக் கொடிபோல – வோங்குக
பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்
கொல்யானை மன்னன் கொடி. (பு.வெ. பாடாண், 39)

*இது கொடியடுத்தது.*

[6]வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை யொக்குமா லெனவே. (புறம். 60)

*இது குடையடுத்தது.*

---

1. ஏற்றம் - நீரிறைத்தற்குரியது. வாரி - வருவாய் = விளைவு. உகும் - சொரியும். சாலும் - ஒக்கும். காவிரி என ஆறு வந்தது.
2. கச்சி - காஞ்சிபுரம். இது ஊர். படுவ - உண்டாவன.
3. மிதியற் செருப்பு - செருப்பல்லாத செருப்பு; என்றது செருப்பு என்னும் மலையை. மிதியல் என்னும் விசேடணம் வெளிப்படை குறித்து நின்றது. மழவர் - வீரர். மெய்ம்மறை - கவசம். பரிவேட்பு - சூழ்வு. அயிரை - ஒரு மலை. இது மலையடுத்தது.
4. ஆவம் - அம்புக்கூடு. அம்பும் வில்லும் படைகள்.
5. கொடி, கொடிபோல ஓங்குக என இயைக்க. பூவைப்பூமேனியன் - திருமால். பாம்புண்பறவை - கருடன்.
6. குடையொக்குமென மதிகண்டு தொழுதமை என மேலடிகளோடு சென்றியையும். உரு - அச்சம்.

முரசு முழங்குதானை மூவருங் கூடி
யரசவை யிருந்த தோற்றம் போல. (பொருந. 54.5)

*இது முரசடுத்தது.*

[1]சாலியரி சூட்டான் மடையடைக்கு நீர்நாடன்
மாலு மழைத்தடக்கை மாவளவன் – காலியன்மா
மன்னர் முடியுதைத்து மார்பகத்துப் பூணுழக்கிப்
பொன்னுரைகற் போன்ற குளம்பு.

*இது புரவியடுத்தது.*

[2]அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாற்றல்சால் மன்ன
ரெயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற் – பனிக்கடலுட்
பாய்தோந்த நாவாய்போற் றோன்றுமே யெங்கோமான்
காய்சினவேற் கிள்ளி களிறு. (முத்தொள். யானைமறம். 17)

*இது களிறடுத்தது.*

[3]நீயே, யலங்குளைப் பரீ இயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவு தோன்றி
மாக்கட னிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ. (புறம். 4)

*இது தேரடுத்தது.*

[4]மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப. (புறம். 10)

*இது தாரடுத்தது.*

*இவற்றுட் சிலவற்றை வரைந்துகொண்டு [5]சின்னப்பூவென்று பெயரிட்டு இக்காலத்தார் கூறுமா றுணர்க.* *(31)*

**(அகத்திணை, புறத்திணைக்குரிய மெய்ப்பெயரினிடமாக வருமெனல்)**

**87.** மெய்ப்பெயர் மருங்கின் [6]வைத்தனர் வழியே.

*இதுசுட்டி ஒருவர்ப் பெயர்கொள்ளும் பாடாண்டிணைக்குரிய மெய்ப்பெயர்களிடமாகவும் அகத்திணை நிகழுமென்கின்றது.*

---

1. சாலி - நெல். சூடு - போர். மடை - நீர்மடை. கால் - காற்று. மா குளம்பு உதைத்து உழக்கிப் போன்ற என இயைக்க. சினைவினை முதன்மேனின்றது.
2. களிறுகோட்டால் தோன்றும் என இயைக்க. அயிற்கதவம் - இரும்புக் கதவு (பெருந்தொகை விசேடக் குறிப்பு). எயில் - மதில்.
3. உளை - தலையாட்டம். பரி - கதி. கவின் - ஒளி.
4. மள்ளர் - வீரர். போதல் - ஒழிதல், இன்மையாதல். சிலை - இந்திரவில் (வானவில்) பலநிறம்பற்றி மாலைக் குவமையாயிற்று.
5. சின்னப்பூ - ஒரு பிரபந்தம்.
6. வைத்தனன் வழியே என்று பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இ — ள்: மெய்ப்பெயர் மருங்கின் - புறத்திணைக்குரிய [1]மெய்ப் பெயர்களின் மருங்கே, வழி வைத்தனர் - புறத்திணை தோன்று தற்கு வழியாகிய அகத்திணையை வைத்தார் முதனூலாசிரியர் என்றவாறு.

என்றது, எனக்கும் அதுவே கருத்தென்பதாம். வழியென்பது, ஆகுபெயர். மெய்ப்பெயராவன: - புறத்திணைக்குரிய பாட்டுடைத் தலைவர் பெயரும், நாடும் ஊரும் முதலியனவாம்.

இதன் கருத்துச் 'சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறா அர்' (54) என அகத்திணையியலுட் கூறினமையிற் கிளவித் தலைவன் பெயரை மெய்ப்பெயராகக் கொள்ளாது ஏனைப் புறத்திணையாற் கொண்ட மெய்ப்பெயரிடம்பற்றி அகத் திணைப் பொருணிகழவும் பெறுமென்பதாம்.

உதாரணம்: - 'அரிபெய் சிலம்பின்' என்னும் (6) அகப்பாட்டி னுள் தித்தனெனப் பாட்டுடைத்தலைவன் பெயரும், பிண்ட நெல்லினென நாடும், உறந்தையென ஊரும், காவிரியாடினை யென யாறுங்கூறிப் பின்னர் அகப்பொருள் நிகழ்ந்தவாறுங் கொள்க.

'மருங்கு' என்றதனாற் பாட்டுடைத்தலைவன் பெயர் கூறிப் பின்னர் நாடு முதலியன கூறன் மரபென்று கொள்க. அதுவும் அச்செய்யுளாற் பெற்றாம்.

நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த வணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானாக் கூடலு முள்ளார்கொல். (கலி. 27)

இதனுட் கூடலிடத்துத் தலைவியென்பது கூறினார்.

கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க
வொன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற
[3]வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும்
விரும்பார்கொல்.. (கலி. 27)

இதனுள் வென்வேலான் குன்றென மலைகூறினார்.

திசைதிசை தேனார்க்குந் [4]திருமருத முன்றுறை
வரைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார்

1. மெய்ப்பெயர் - இயற்பெயர்.
2. கூடல் - மதுரை
3. வென்வேலான்குன்று - திருப்பரங்குன்று.
4. திருமருதமுன்றுறை என்றதனால் ஆறு பெறப்பட்டது. ஏதினாடு - அயனாடு.

நசைகொண்டு தந்நீழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர்" (கலி. 26)

இதனுள் ஆறுகூறினார்.

'புனவளர் பூங்கொடி' என்னும் (92) மருதக்கலியும் அது.

கரியமலர் நெடுங்கட் காரிகைமுன் கடற்றெய்வங் காட்டிக் காட்டி
யரியசூள் பொய்த்தா ரறனிலரென் றேழையம்யாங் கறிகோ மைய
விரிகதிர் வெண்மதியு மீன்கணமு மாமென்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையு முத்துங்கண் டாம்பல் பொதியவிழ்க்கும் புகாரே யெம்மூர்.

இது முதலிய மூன்றும் (சிலப். - கானல் - 7) [1]புகாரிற் றலைவியெனக் கூறியவாறு காண்க.

இன்னுஞ் சான்றோர் செய்யுட்கள் இங்ஙனம் வருவன வெல்லாம் இதனால் அமைக்க. இக்கருத்தினாற் செய்யுள் செய்த சான்றோர் தமக்கும் பாடாண்டலைவர்கண் நிகழ்ந்த ஒரு தலைக் காமமேபற்றி அகத்திணைச் செய்யுள் செய்தாரேனும் "தம், மிசைபரந்துலகேத்த [2]வேதினாட்டுறைபவர்" (கலி. 26) என்று இவை பாடாண்டிணையெனப் பெயர்பெறாவென்றற்கு இது கூறினார். (32)

(பிறப்பில்லாத் தெய்வங்களும் பாடாண்டிணைக்குரியவெனல்)

88. [3]கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே.

இது தேவரும் மக்களுமெனப் பகுத்த முறைமையானே அப்பகுதியிரண்டுங்கூறி இன்னும் அத்தேவரைப்போல் ஒரு வழிப் பிறக்கும் பிறப்பில்லாத தெய்வங்களும் பாடாண்டிணைக்கு உரியரென்கின்றது.

இ — ள்: கொடிநிலை - கீழ்த்திசைக்கண்ணே நிலைபெற்றுத் தோன்றும் [4]வெஞ்சுடர் மண்டிலம், கந்தழி - ஒருபற்றுக்கோடின்றி அருவாகித் தானேநிற்குந் தத்துவங் கடந்த பொருள், வள்ளி - [5]தண்கதிர் மண்டிலம், என்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும் - என்று சொல்லப்பட்ட குற்றந்தீர்ந்த சிறப்பினையுடைய

1. புகார் - காவிரிப்பூம்பட்டினம்.
2. ஏதினாட்டுறைபவர் என்று தலைவி கூறலே அகப்பொருளைக் கருதிற்று. அதனால் பாடாண்டிணையெனப் பெயர்பெறா என்றார்.
3. இளம்பூரணர் வேறுரை கூறுவர்.
4. வெஞ்சுடர் மண்டிலம் என்றது சூரிய மண்டிலத்தை:
5. தண்சுடர்மண்டிலம் - சந்திர மண்டிலம்.

முற்கூறப்பட்ட மூன்று தெய்வமும், கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே - முற்கூறிய அமரரோடே கருதுமாற்றால் தோன்றும் என்றவாறு.

பொய்தீ ருலக மெடுத்த கொடிமிசை
மையறு மண்டிலம் வேட்டனள் வையம்
புரவூக்கு முள்ளத்தே னென்னை யிரவூக்கு
மின்னா விடும்பைசெய் தாள் (கலி. 141)

என்றவழிக் [1]கீழ்த்திசைக்கண்ணே தோன்றும் மண்டில மென்றாற் போலக் கொடிநிலையென்பதூஉம் அப்பொருள் தந்ததோர் ஆகுபெயர்.

இனி எப்புறமும் நீடுசென்று எறித்தலின் அந் நீண்ட நிலைமை பற்றிக் [2]கொடிநிலை யென்பாருமுளர்.

குவவுமென் முலையள் கொடிக்கூந் தலளே (குறுந். 132)

என்றாற்போல [3]வள்ளியென்பதுவுங் கொடியை; என்னை? பன்மீன்தொடுத்த உடுத்தொடையைக் கொடியெனப்படுதலின் அத்தொடையினை இடைவிடாதுடைத்தாதலின் அதனை அப்பெயராற் கூறினார்; 'முத்துக்கொடியெனவும் மேகவள்ளியெனவுங்' கூறுமது போல. கந்தழி அவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்றலின் இடையே வைத்தார்.

இனி அமரரென்னும் ஆண்பாற் சொல்லுள் அடங்காத பெண்பாற் றெய்வமும் வள்ளியென்னுங் கடவுள் வாழ்த்தினுட் படுவனவாயின பாடாணெனப்படாவாயினு மென்பது; என்னை? [4]ஞாயிறு நெருப்பின்றன்மையும் ஆண்டன்மையும் உடைமையானும், திங்கள் நீரின்றன்மையும் பெண்டன்மையும் உடைமையானு மென்பது. அல்லதூஉம், வெண்கதிர் அமிர்தந் தேவர்க்கு வழங்கலானும் வள்ளியென்பதூஉமாம், என்பது.

---

1. இச்செய்யு ளுரையிலும் கொடி என்பதற்குக் கீழ்த்திசை என்று பொருள் கூறினர் (கலி. 150). ஆதலின் ஈண்டுக் கொடிநிலை என்பதும் கீழ்த்திசையிற்றோன்றுஞ் சூரியமண்டிலத்தை ஆகுபெயராயுணர்த்திற்று என்பது அவர் கருத்தாகும்.

2. கொடி - நீட்சி.

3. வள்ளி (வல்லி) - கொடி (லகர ளகர ஒற்றுமை) முத்துக் கொடி என்றதில் கொடி என்றது தொடையைப்போலும் மேக வள்ளி - மேகத்தொடை போலும்.

4. சோதிட நூலாரும் சூரியனை ஆண்கிரகமாகவும் சந்திரனைப் பெண் கிரகமாகவுங் கூறுவர். பிரயோகவிவேகநூலார் சத்துவ முதலிய குணங்களின் மிகுதி குறையொப்புப்பற்றி ஒருபொருட்சொல்லே மூன்று லிங்கமுமாமென்பர். ஆராய்க. (திங்கு - 9ம் செய்யுளுரை நோக்குக.)

*உதாரணம் :*

[1]மேகத்தான் வெற்பா னிமையான் விழுப்பனியா
னாகத்தா னீமறைய நாட்கதிரே – யோகத்தாற்
காணாதார் நின்னை நிலையாமை கட்டுரைப்பர்
நாணாத கண்ணெனக்கு நல்கு.

*இது கொடிநிலை வாழ்த்து.*

[2]சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்
சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ
வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த
தூய்மையதா மைதீர் சுடர்.

*இது கந்தழி வாழ்த்து.*

[3]பிறைகாணுங் காலைத்தன் பேருருவ மெல்லாங்
குறைகாணா தியாங்கண்டு கொண்டு – மறைகாணா
தேய்ந்து வளர்ந்து பிறந்திறந்து செல்லுமென்
றாய்ந்தது நன்மாயை யாம்.

*இது வள்ளி வாழ்த்து.*

தனிக்கணிற் பாகமுந் தானாளு மாமை
பனிக்கண்ணி சாவு படுத்துப் – பனிக்கணந்
தாமுறையா நிற்குமத் தண்மதிக்குத் தாயிலளென்
றியாமுரையா நிற்கு மிடத்து.

*இது வள்ளிப்பாற்பட்ட பெண்பாற் கடவுள் வாழ்த்து.* *(33)*

### *(எய்தாததெய்துவித்தல்)*

**89. கொற்ற வள்ளை யோரிடத் தான.**

*இஃது எய்தாதது எய்துவித்தது. தேவர்க்கும் உரியவாம் ஒருசார் அப்பாடாண்டிணைக் கொற்றவள்ளை யென்றலின்.*

**இ – ள்:** *கொற்றவள்ளை - [4]அதிகாரத்தாற் கைக்கிளைக்குப் புறனாய் வெட்சிமுதல் வஞ்சியீறாகிய பாடாண் கொற்றவள்ளை.*

1. இமையான் - கண்ணிமைத்தலான் = கண்மூடலால். நாகம் - பாம்பு; கிரகண காலத்தில் பாம்பான் மறைதலை. இது சூரிய மண்டிலத்தை வாழ்த்தியது.
2. சார்பு - பற்றுக்கோடு. மைதீர் சுடர் என்றது பரஞ்சுடர் என்றபடி. இது அருவப் பொருள். கந்தழி = கந்து - பற்றுக்கோடு. அழி - இல்லாதது; தன்னை யெல்லாம் பற்றத் தானொன்றையும் பற்றாது நிற்கும் பொருள் என்றபடி.
3. குறைகாணாது - குறைதல் காணப்படாது; நிறைவுடையதாகி என்றபடி. அதனை யாம் கண்டுகொண்டு ஆய்ந்தது மாயையாம் என முடிக்க. மறைகாணா - மறைந்து. அமாவாசையில் மறையும்.
4. அதிகாரத்தால் தேவர்கண்ணதன்றி எனக் கூட்டுக. பின்வரும் விரிவுரை நோக்குக.

ஓரிடத்தான - மேற்கூறிநின்ற தேவர் பகுதிக்கண்ணதன்றி அவரின் வேறாகிய மக்கட்பகுதிக்கண்ணது என்றவாறு.

எனவே உழிஞைமுதலிய பாடாண்கொற்றவள்ளை நற்றிணை ஞருங் கூளிச்சுற்றமும் ஒன்றனை நச்சிப் புகழ்ந்து வாளாதே கூறுதலும், ஈண்டுக் கூறுகின்ற கொற்றவள்ளை புலவன் ஒன்றனை நச்சி வெட்சி முதலிய ஏழனானும் புகழ்ந்துரைத்தலுமாயிற் றாதலிற் 'படையியங் கரவம்' (58) முதலாக வஞ்சியிற் 'குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளை' யீறாகக் கிடந்த பொருட்பகுதியெல் லாம் பாடாண்டிணையாகப் பாடுங்கான் மக்கட்கேயுரிய என் பதூஉம் உழிஞை முதலியவற்றைப் பாடாண்டிணையாகப் பாடுங்கால் அவை மக்கட்கும் தேவர்க்கும் ஒப்ப உரியவென்ப தூஉங் கூறுதலாயிற்று. என்னை? அரசியலாற் போர்குறித்து நிரைகோடலும் மீட்டலும் மேற்செல்லும் வஞ்சியும் தேவர்க் கேலாமையாயினும், அவுணரான் முற்றப்பட்ட துறக்கத்தினை அகத்துழிஞை யரணாக்கி மனு வழித்தோன்றிய முசுகுந்தனோடு இந்திரன் காத்தாற்போல்வனவும் பிறவுந் தேவர்க்குக் கூறுதலான் அவரும் மதின் முற்றியவழிப்போர் தோன்றுதலும் ஆண்டு வென்றி யெய்துதலு முடையராதலிற் பாடாண் பொருட்கும் உரியாரென நேர்பட்டது.

இச்சூத்திரம் மக்கட்கெய்திய பொருண்மையை மீட்டுங் கூறி நியமித்ததாம்; ஆகவே, வெட்சிமுதல் வஞ்சியிற் கொற்ற வள்ளை ஈறாய பொருண்மை, உழிஞைமுதற் பாடாண்டிணைக் குரியராகி இடை புகுந்த தேவர்க் காகாவென விதிவகையான் விலக்கியதாம். எனவே, தேவர்க்கு உழிஞை முதலிய கொற்ற வள்ளை ஆமென்பதூஉங் கூறினாராயிற்று.

கொடிநிலை முதலிய மூன்றற்குமன்றிக் கடவுளெனப்பட் டாரை [1]அதிகாரங்கொண்ட அளவேயாமென்றுணர்க.

உதாரணம் :

[2]மாவாடியபுல னாஞ்சிலாடா
கடாஅஞ்சென்னிய கடங்கண்யானை
யினம்பரந்தபுலம் வளம்பரப்பறியா
நின்படைஞர், சேர்ந்த மன்றங் கழுதை போகி
நீ, யுடன்றோர் மன்னெயி றோட்டி வையா

1. இச்சூத்திரத்திற்கு அமரரை அதிகாரங்கொண்ட அளவே என்க.

2. மா - குதிரை. புலம் - வயல். நாஞ்சில் - கலப்பை. ஆடா - வழங்கா. மன்றம் - பொது. தோட்டி - காவல். அழல் - காட்டுத்தீ. கான் - காடு.

கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் துருத்துப்
பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கி
னாண்டலை வழங்குங் கானணங்கு கடுநெறி
முனையகன் பெரும்பா ழாக மன்னிய
வுருமுறழ் பிரங்கு முரசிற் பெருமலை
வரையிழி யருவியி னொளிறுகொடி நுடங்கக்
கடும்பரிக் கதழ்சிற கைகைப்பநீ
நெடுந்தே ரோட்டியபிற ரகன்றலை நாடே. (பதிற்று. 25)

*இது புலவன் பொருணச்சிக் கூறலிற் பாடாண்கொற்ற வள்ளை; 'வல்லா ராயினும் வல்லுந ராயினும்', 'காலுனுங் காலம்' என்னும் (57,41) புறப்பாட்டுக்களும் அது. (34)*

***(மக்கட் பாடாண்டிணைக்குரியதுறை இவையெனல்)***

**90.** கொடுப்போ ரேத்திக் கொடா அர்ப் பழித்தலு
மடுத்தூர்ந் தேத்திய வியன்மொழி வாழ்த்துஞ்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானுங்
கண்படை கண்ணிய கண்படை நிலையுங்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலி னோக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்துஞ் செவியறி வுறூஉ
மாவயின் வரூஉம் புறநிலை வாழ்த்துங்
கைக்கிளை வகையோ டுளப்படத் தொகைஇத்
தொக்க நான்கு முளவென மொழிப.

*இது முன்னிற் சூத்திரத்து [1]அதிகாரப்பட்டுநின்ற மக்கட் பாடாண்டிணைக்குரிய துறை கூறுகின்றது.*

*இ — ள்:* கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும் - *பிறர்க்கு ஈவோரைப் பிறரி னுயர்த்துக் கூறிப் பிறர்க் கீயாதாரை இழித்துக் கூறலும் :*

*சான்றோர்க்குப் பிறரை யிழித்துக் கூறற்கண்ணது தக்கதன் றேனும் நன்மக்கள் பயன்பட வாழ்தலுந் தீயோர் பயன்படாமல் வாழ்தலுங் கூறக்கேட்டு ஏனையோரும் பயன்பட வாழ்தலை விரும்புவரென்பது பயப்பக் கூறலின் இவர்க்கு இங்ஙனங்*

---

கடுநெறி - கடுவழி. சிறகு அகைப்ப - சிறகை உயர்த்த = பறக்க. என்றது விரைந்து சேறல்பற்றி.

1. ஓரிடத்தான என்றதனால் அதிகாரப்பட்டுநின்ற மக்கள் என்க.

*கூறுதல் தக்கதாயிற்று. இதனை ஏத்தலும் பழித்தலும் ஏத்திப் பழித்தலுமென மூவகையாகக் கொள்க. உதாரணம்:*

[1]தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
வடகின் கண்ணுறை யாக யாஞ்சில
வரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
யிருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்றா வீகையு முளதுகொல்
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே. (புறம். 140)

*இது கொடுப்போ ரேத்தியது.*

[2]பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே (புறம். 107)

*என்பதுமது.*

[3]ஒல்லுவ தொல்லு மென்றலு மியாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்வ தென்றலு மொல்லுவ
தில்லென மறுத்தலூ மிரண்டும் வல்லே
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை
யனைத்தா யெரினி யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணாது கண்டன மதனா
னோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதன்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கநின் னாளே. (புறம். 196)

---

1. பலவு - பலாமரம். நாஞ்சில் - ஒருமலை. பொருநன் - வேந்தன். மடவன் - அறிவுமெல்லியன். படப்பை - மனைப்பக்கத்திலுள்ள கொல்லை. அடகு - இலை. கண்ணுறை - மேல்தூவுவது. கடறு - காடு; சுரம். தேற்றா ஈகை - தெளியாக் கொடை. போற்றார் - பாதுகாத்துச் செய்யார். கடன் - முறைமை.
2. பாரி - ஒரு குறுநிலமன்னன். மாரி - மேகம். புரப்பது - பாதுகாப்பது.
3. ஒல்வது - இயல்வது. ஒல்லாதது - இயலாதது. ஆள்வினை - முயற்சி. கேண்மை - நட்பு. முனியேன் - வெறேன். மடியேன் - சோர்வுபடேன். வளிமறை - காற்றை மறைப்பதாகிய மனை.

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன். (குறள் – புகழ். 7)

இவை கொடாஅர்ப் பழித்தல்.

[1]களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
வீகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றேன்ப வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
யுரைசா லோங்குபுக ழொரீஇய
முரசுகெழு செல்வர் நகர்போ லாதே. (புறம். 127)

இஃது [2]ஆயைப் புகழ்ந்து ஏனைச் செல்வரைப் பழித்தது.

[3]மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு மொன்றாகிப்
பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே – கொன்னே
யொளிப்பாரு மக்களா யொல்லுவ தாங்கே
யளிப்பாரு மக்களா மாறு. (பெரும்பொருள்விளக்கம்)

இதுவும் அது.

[4]அடுத்து ஊர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்தும் - தலைவ னெதிர்சென்று ஏறி அவன் செய்தியையும் அவன் குலத்தோர் செய்தியையும் அவன்மேலே ஏற்றிப் புகழ்ந்த இயன்மொழி வாழ்த்தும்:

என்றது, இக்குடிப் பிறந்தோர்க்கெல்லாம் இக்குணங்கள் இயல்பென்றும், அவற்றை நீயும் இயல்பாக உடையையென்றும், அன்னோர்போல எமக்கு நீயும் இயல்பாக ஈயென்றும் உயர்ந் தோர் கூறி அவனை வாழ்த்துதலின் இயன்மொழி வாழ்த்தாயிற்று. இதனை உம்மைத்தொகையாக்கி இயன்மொழியும் வாழ்த்து மென இரண்டாக்கிக் கொள்க.

இஃது ஒருவர் செய்தியாகிய இயல்பு கூறலானும் வண்ணப் பகுதியின்மையானும் பரவலின் வேறாயிற்று. உதாரணம்:

---

1. களங்கனி - களாப்பழம் பனுவல் - பாட்டு. வெளில் - தறி. சாயின்று - சாய்ந்தது. குய் - தாளிப்பு.
2. ஆய் - ஒரு வள்ளல்.
3. தமனியம் - பொன். ஒளிப்பார் - கரப்பார் = உலோபிகள். ஒல்லுவது - கொடுக்க இயன்றது.
4. அடுத்தல் - சமீபத்திற் போதல்; எனவே எதிர்சேறலாயிற்று. ஏறல் - முன்னிலையிற் சென்று நிற்கப்பெறுதல்.

[1]மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
யறியா தேறிய வென்னைத் தெறுவர
விருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
யதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறித
லதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
விவணிசை யுடையோர்க் கல்ல தவண
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே. (புறம். 50)

*இவை போல்வன வெல்லாம் இயன்மொழி.*

[2]மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்கக்
கடல்போ றானைக் கடுங்கரன் முரசம்
காலுறு கடலிற் கடிய வுரற
வெறிந்து சிதைந்த வா
ளிலைதெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
வாய்ந்துதெரிந்த புகன்மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்
கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே
நின்போ, லசைவில் கொள்கைய ராகலி னசையா
தாண்டோர் மன்றவிம் மண்கெழு ஞால
நிலம்பயம் பொழியச் சுடசினந் தணியப்
பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப
விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர
நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த
விலங்குகதிர்த் திகிரி முந்திசி னோரே. (பதிற்று. 69)

---

1. வார்பு - வார்தல். வன்பு - வார். மை - கருமை. மருங்குல் - பக்கம். பொறி - புள்ளி. உழிஞை - கொற்றான். வேட்கை - விருப்பம். மண்ணி - நீராடி. சேக்கை - கட்டில்; முரசுவைக்கும் கட்டில். வீசல் - சாமரங்கொண்டு வீசல். உயர்நிலையுலகம் - சுவர்க்கம். உறையுள் - உறைதல், பொருந்தல். கேட்ட மாறு - கேட்ட பரிசு; கேட்டலால் எனினுமாம்.

2. நுடங்கல் - அசைதல். கால் - காற்று. உரற - ஒலிக்க. வாள் - வாள்வீரர். வேல் - வேல்வீரர். மா - குதிரைவீரர். வாள், வேல், மா - ஆகுபெயர். பயங்கெழு ஆநியம் - மழைவளம்பொருந்திய நல்ல நாள். முந்திசினோர் - முன்னோர்.

*இது முன்னுள்ளோர்க்கும் இயல்பென்பது படக் கூறிய இயன்மொழி வாழ்த்து.*

[1]முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவு
மரசுடன் பொருத வண்ண னெடுவரைக்
கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்
கொல்லி யாண்ட வல்வி லோரியுங்
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனு
மூரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியு
மீர்ந்தண் சிலம்பி னிருடுங்கு நளிமுழை
யருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்க னாடன் பேகனுந் திருந்துமொழி
மோசி பாடிய வாயு மார்வமுற்
றுள்ளி வருந ருலைவுநனி தீரத்
தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்
கெழுவர் மாய்ந்த பின்றை யளிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
யிரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவ
ணுள்ளி வந்தனென் யானே வீசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
யாசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
றுய்த்தலை மந்தியைக் கையீடுஉப் பயிரு
மதிரா யாணர் முதிரத்துக் கிழவ
விவண்விளங்கு சிறப்பி னியறேர்க் குமண
விசைமேந் தோன்றிய வண்மையொடு
பகைமேம் படுகநீ யேந்திய வேலே. **(புறம். 158)**

*இஃது இன்னோர்போல எமக்கு ஈயென்ற இயன்மொழி வாழ்த்து.*

[2]இன்று செலினுந் தருமே சிறுவரை
நின்று செலினுந் தருமே பின்னு
முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்
றான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப

---

1. கடிப்பு - குறுந்தடி. இகுப்ப - அறைய. அண்ணல் - தலைமை. பறம்பு - ஒருமலை. கொல்லி - கொல்லிமலை. காரி - காரியென்னும் பெயரையுடைய குதிரை. ஊராது ஏந்திய குதிரை - ஊரப்படாது உயர்ந்த குதிரை; என்றது குதிரை மலையை. கூவிளைவில்வம். கடவுள் - தெய்வம். மோசி - ஒரு புலவன். கொள்ளார் - பகைவர். கையிடுஉபயிரும் - கையாற்குறிசெய்தழைக்கும். முதிரம் - ஒரு மலை.
2. இன்று - இற்றைநாள். சிறுவரை - சிறிதுநாள். தன்னிறை

வருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்ற
னினமலி கதச்சேக் களனொடு வேண்டினுங்
களமலி நெல்லின் குப்பை வேண்டினு
மருங்கலங் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை
பிறர்க்கு மன்ன வறத்தகை யன்னே
யன்ன னாகலி னெந்தை யுள்ளடி
முள்ளு நோவ வுறாற்க தில்ல
வீவோ ரரியவிவ் வுலகத்து
வாழ்வோர் வாழவவன் றாள்வா ழியவே. (புறம். 171)

*இது படர்க்கையாகிய இயன்மொழி வாழ்த்து.*

[1]இம்மைச் செய்தது மறுமைக் காமெனு
மறவிலை வணிக னாயலன் பிறருஞ்
சான்றோர் சென்ற நெறியென
வாங்குப் பட்டன் றவன்கை வண்மையே. (புறம். 134)

*இது பிறருஞ் சான்றோர் சென்ற நெறி யென்றமையின், [2]அயலோரையும் அடுத்தூர்ந்தேத்தியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.*

*சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவலற்கு உரைத்த கடை நிலையானும் - [3]சான்றோர் சேணிடை வருதலாற் பிறந்த வருத் தந்தீர வாயில் காக்கின்றவனுக்கு என் வரவினை இசையெனக் கூறிக் [4]கடைக்கணின்ற கடைநிலையும்:*

*இது வாயிலோனுக்குக் கூறிற்றேனும் அவ் வருத்தம் தீர்க்கும் [5]பாடாண்டலைவனதே துறையென்பது பெற்றாம்.*

*இழிந்தோரெல்லாந் தத்தம் இயங்களை இயங்கிக் கடைக் கணிற்றல் 'பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்' (91) என் புழிக் கூறுதலின் இஃது [6]உயர்ந்தோர்க்கே கூறியதாம். உதாரணம்:*

---

- தன்னரசன். களம் - தொழு. உறாற்க - உறாதொழியல்வேண்டும். ஆங்கு - அவ்வழி.

1. அறவிலைவணிகன் - அறத்தை விலைக்குவாங்கும் வணிகன். ஆய் - ஒரு வள்ளல்.
2. அயலோர் என்றது பிறரை; என்றது சான்றோரை.
3. ஈண்டுச் சான்றோர் என்றது அறிவானிறைந்த புலவரை.
4. கடை - வாயில்.
5. பாடாண் தலைவன் என்றது பாடப்பட்ட தலைவனை. அவனே வழிவரு வருத்தம் தீர்ப்பான்.
6. உயர்ந்தோர் என்றது புலவரை.

[1]வேற்றுச் சுரத்தொடு வேந்தர்கண் வெம்மையு
மாற்றற்கு வந்தனேம் வாயிலோய் – வேற்றார்
திறைமயக்கு முற்றத்துச் சேணோங்கு கோயி
லிறைமகற்கெம் மாற்ற மிசை.

வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தா
முன்னியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொ
லறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மரங்கொஃ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
யெத்திசைச் செலினு மத்திசைச் சோறே. (புறம். 206)

இது தலைவனை எதிர்ப்பட்டுக் கூறாது வாயிலோனை நோக்கிக் கூறலிற் பரிசில் கடாயதின்றாம்.

ஆன், அசை; ஏழனுருபாக்கி எல்லாவற்றிற்கும் விரித்துரைத்தலுமொன்று.

[2]கண்படை கண்ணிய கண்படை நிலையும் - அரசரும் அரசரைப் போல்வாரும் அவைக்கண் நெடிது வைகியவழி மருத்துவரும் அமைச்சரும் முதலியோர் அவர்க்குக் கண்டுயில்கோடலைக் கருதிக் கூறிய கண்படை நிலையும்:

கண்படை கண்ணிய என்றார்; கண்படை முடிபொருளாக இடைநின்ற உண்டி முதலியனவும் அடக்குதற்கு. உதாரணம்:

வாய்வாட் டானை வயங்கபுகழ்ச் சென்னிநின்
னோவா வீகையி னுயிர்ப்பிடம் பெறாஅர்
களிறுகவர் முயற்சியிற் பெரிது வருந்தினரே
யுலகங் காவலர் பலர்விழித் திருப்ப
வறிது துயில்கோடல் வேண்டுநின்
பரிசின் மாக்களுந் துயில்கமா சிறிதே.

1. வேற்றுச் சுரத்தின் வழியாக யாம் வந்த வெம்மையையும், வேற்று வேந்தரிடத்துள்ள வெம்மையையும் மாற்றற்கு என்க. வெம்மை - வேற்று வேந்தரிடத்துள்ள பகை. வேற்று வேந்தரோடு சந்து செய்தற்கு வந்தனம் என்றபடி. இனி வேற்று வேந்தர்கண் வெம்மை என்றது தமக்கு ஈயாமை எனினுமாம்.

2. கண்படை - கண்டுயில் = நித்திரைகோடல்.

*கபிலை கண்ணிய வேள்வி நிலையும் [1]சேதாவினைக் கொடுக் கக் கருதிய கொடைநிலை கூறுதலும்:*

*இது வரையா ஈகையன்றி இன்னலுற்றாற் கொடுக்கவென உயர்ந்தோர் கூறு[2]நாட்காலையிலே கொடுப்பதாமாதலின்வேறு கூறினார். "கண்ணிய" என்றதனாற் கன்னியர் முதலோரைக் கொடுத்தலுங் கொள்க.*

**[3]பொன்னிறைந்த பொற்கோட்டுப் பொற்குளம்பிற் கற்றாதந்**
**தின்மகிழா னந்தணரை யின்புறுப்பச் – சென்னிதன்**
**மாநிலமே யானுலகம் போன்றது வான்றுகள் போர்த்**
**தானுலக மண்ணுலகா மன்று.**

*வேலின் ஓக்கிய விளக்கு நிலையும் - வேலும் வேற்றலையும் விலங்காதோங்கினவாறு போலக் கோலோடு விளக்கும் ஒன்று பட்டோங்குமாறு ஓங்குவித்த விளக்கு நிலையும்:*

*இனி, உவமப்பொருள்: இது கார்த்திகைத் திங்களிற் கார்த் திகை நாளின் ஏற்றிய விளக்குக் கீழு மேலும் வலமு மிடமுந் திரி பரந்து சுடர் ஓங்கிக் கொழுந்துவிட் டெழுந்ததென்று அறவோ [4]ராக்கங் கூறப்படுவதாம். உதாரணம்:*

**[5]மைமிசை யின்றி மணிவிளக்குப் போலோங்கிச்**
**செம்மையி னின்றிலங்குந் தீபிகை – தெம்முனையுள்**
**வேலினுங் கோடாது வேந்தன் மனைவிளங்கக்**
**கோலினுங் கோடா கொழுந்து.**

*[6]வேலின் வெற்றியை நோக்கி நின்ற விளக்கு நிலையெனப் பொருள் கூறி,*

**[7]வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி**
**யொளிசிறந்தாங் கோங்கி வரலா – லளிசிறந்து**
**நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு**
**வென்னெறியே காட்டும் விளக்கு** (பு.வெ. பாடாண். 12)

---

1. சேதா - கபிலைப் பசு. கபிலை - கபிலநிறமுடையது. ஆனுலகம் - கோவுலகம்.
2. நாட்காலை - விடியற்காலம்.
3. கற்றா - கன்றையுடைய பசு. இன்மகிழான் - இனிய மகிழ்ச்சியான். சென்னி - சோழன். ஆனுலகம் - கோவுலகம். சென்னிதொடையால் மண்ணுலகம் கோவுலகமாயிற்று. அக் கோக்களின் துகளால் கோவுலகம் மண்ணுலக மாயிற்று என்பது கருத்து.
4. ஆக்கம் - செல்வ வளர்ச்சி.
5. மை - திரியற் பற்றிய கரி. புகையுமாம். கொழுந்து கோயிலினுங் கோடாது என இயைக்க.
6. இதற்கு வேலின் நோக்கிய எனப் பிரித்தல் வேண்டும்.
7. வளி - காற்று. வலந்திரியா - வலமாகச் சுழன்று.

என்பது காட்டுவாருமுளர். அவர் இதனை நிச்சம் இடுகின்ற விளக்கென்பர்.

வாயுறை வாழ்த்தும் - 'வாயுறை வாழ்த்தே ... வேம்புங் கடு வும்' என்னும் (424) செய்யுளியற் சூத்திரப் பொருளை உரைக்க.

இதற்கு ஒரு தலைவன் வேண்டானாயினும் அவற்கு உறுதி பயத்தலைச் சான்றோர் வேண்டி வாய்மொழி [1]மருங்கினான் அவனை வாழ்ச்சிப் படுத்தலின் இதுவுங் கைக்கிளைப் புறனாகிய பாடாணாயிற்று. செவி யுறைக்கும் இஃதொக்கும். உதாரணம் :

எருமையன்ன கருங்கல் லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவ
லருளு மன்பு நீக்கி நீங்கா
[2]நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
யளிதோ தானேயது பெறலருங் குரைத்தே. (புறம். 5)

இதனுள் நிரயங்கொள்வாரோ டொன்றாது காவலை யோம்பென வேம்புங் கடுவும்போல வெய்தாகக்கூறி அவற்கு உறுதி [3]பயத்தலின் வாயுறைவாழ்த்தாயிற்று.

[4]காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகு
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே

என்னும் (184) புறப்பாட்டு மது.

---

1. மருங்கினான் என்பது மருந்தினான் என்றிருத்தல் வேண்டும். செய்யுளியல் "வாயுறை வாழ்த்தே" என்னும் 111ம் சூத்திர உரை நோக்கி யறிக.

2. நிரயம் - நரகம்.

3. பயத்தலின் - பயப்பித்தலின்.

4. மாநிறைவில்லது - ஒருமாவிற் குறைந்த நிலம்; அது ஆகுபெயராய்க் கதிரையுணர்த்தும். கால் - யானையின் கால். யாத்தல் - ஈட்டிக்கொடுத்தல். பரிவுதப - அன்புகெட. பிண்டம் - பொருட்டொகுதி.

[1]தத்தம் புது நூல் வழிகளாற் புறநானூற்றிற்குத் துறைகூறி னாரேனும், அகத்தியமுந் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூறவேண்டு மென்றுணர்க. 'செவியுறைதானே' (426) என்னுஞ் சூத்திரப் பொருண்மை இவ்வுதாரணங்கட்கு இன்மை யுணர்க.

செவியறிவுறூஉம் - இதற்குச் 'செவியுறைதானே' என்னும் செய்யுளியற் (426) சூத்திரப் பொருளை உரைக்க.

ஒருவுதலை ஒரூஉதலெனவும் ஒரூஉவெனவும் கூறுமாறு போல [2]உறுவும் உறூஉதலெனவும் உறூஉவெனவுங் கூறப்படும். உதாரணம்:

[3]அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே – முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை. (பு.வெ.பாடாண். 33)

[4]வடாஅது, பனிபடு நெடுவரை வடக்குந் தெனாஅ
துருகெழு குமரியின் றெற்குங் குணாஅது
கரைபொரு தொடுகடற் குணக்குங் குடாஅது
தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்குங் கீழது
முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டி
னீர்நிலை நிவப்பின் கீழு மேல
தானிலை யுலகத் தானு மானா
துருவும் புகழு மாகி விரிசீர்த்
தெரிகோன் ஞமன் போல வொருதிறம்
பற்ற லிலியரோ நிற்றிறஞ் சிறக்க
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி யடர்ப்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதி னேவிப்
பாசவற் படப்பை யாரெயில் பலதந்
தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கிப்
பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே

---

1. இது புறநானூற்று உரையாசிரியரை மறுத்துக் கூறியதாகும்.
2. செவியறிவுறு செவியறிவுறூஉ என நின்றது என்பது கருத்து.
3. முந்தைவழி - முன்னோர் செய்த வழி. இவர்க்கு வழிநின்று பின்னைக் கேட்டல் முறை என இயைக்க.
4. பனிபடுவரை - இமயம். குமரி - கன்னியாறு. பௌவம் - கடல். முப்புணரடுக்கிய கட்டில் - பூமி ஆகாயம் சுவர்க்கம் என்னும் மூன்றுங் கூடிப் புணர்ச்சியாக அடுக்கிய அடைவும் ஆனிலையுலகம் - கோலோகம். இது சுவர்க்கத்தின் மேலுள்ளது. உரு - உட்கு. ஞமன்கோல் - துலாக்கோல். எயில் - மதிலரண். முக்கட்

யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே
வாடுக விறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே
செலிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
யாங்க, வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா வீகைத் தகைமாண் குடுமி
தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுட
ரொண்கதிர் ஞாயிறு போலவு
மன்னிய பெருமநீ நிலமிசை யானே. (புறம். 6)

*இதனுள் இயல்பாகிய குணங் கூறி அவற்றோடு செவியுறை யுங் கூறினான், செவியுறைப் பொருள் சிறப்புடைத்தென்று அவன்கருதி வாழ்தல்வேண்டி.*

*ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும் - தெய்வ வழிபாடு உடைத்தாயினும் மக்கள் கண்ணதேயாகித் தோன்றும் பாட்டு டைத் தலைவன் முன்னிலையாகத் தெய்வம் படர்க்கையாக வாழ்த்தும் வாழ்த்தும்:*

*தெய்வஞ் சிறந்ததேனும் மக்கள் அதிகாரப்படுதலின் அவர் கண்ணதேயாதற்கு 'ஆவயின் வரூஉம்' என்றார். இதற்கு 'வழிபடு தெய்வம்' என்னும் செய்யுளியற் (422) சூத்திரப் பொருளையுரைக்க.*

*இதுவுந் தலைவன் குறிப்பின்றித் தெய்வத்தால் அவனை வாழ்விக்கும் ஆற்றலுடையார்கண்ணதாகலிற் கைக்கிளைப் புறனாயிற்று. உதாரணம்:*

[1]கண்ணுதலோன் காப்பக் கடன்மேனி மால்காப்ப
வெண்ணிருதோ ளேந்திழையா டான்காப்பப் – பண்ணியனூற்
சென்னியர்க் களிக்குந் தெய்வநீ
மன்னுக நாளுமிம் மண்மிசை யானே.

(பெரும்பொருள்விளக்கம் – கடவுள்வாழ்த்து)

*கைக்கிளை வகையோடு உளப்படத்தொகைஇ - மேற் காமப் பகுதியென்ற கைக்கிளையல்லாத கைக்கிளையின் பகுதியோடே வாயுறை வாழ்த்துஞ் செவியறிவுறூஉம் புறநிலை வாழ்த்துங் கூட நான்காகிய தொகைபெற்ற நான்கும் :*

---

செல்வர் - சிவபெருமான். ஏந்துகை - வாழ்த்தி உயர்த்திய கை. துனி - உணர்ச்சிவயின்வாராஊடல். குடுமி - முதுகுடுமிப் பெருவழுதி.

1. எண்ணிருதோள் - எட்டாகிய பெரிய தோள். எண்டோளாள் - துர்க்கை. சென்னியர்க்களிக்குந் தெய்வமென்றது - சோழவரசனை.

வாயுறை வாழ்த்து முதலிய மூன்றுந் தத்தம் இலக்கணத்திற் றிரிவுபடா, இக் கைக்கிளை திரிவுபடுமென்றற்கு எண்ணும்மை யான் உடனோதாது உளப்படவென வேறுபடுத்தோதினார். அகத்திணையியலுள் இருபாற்குங் கூறிய கைக்கிளையுங், 'காமஞ் சாலா இளமையோள்வயிற்' (50) கைக்கிளையும், "முன்னைய நான்கும்" (52) என்ற கைக்கிளையுங் 'காமப்பகுதி' (83) என்ற கைக் கிளையுங், களவியலுண் 'முன்னைய மூன்றும்' (105) என்ற கைக் கிளையும் போலாது எஞ்ஞான்றும் பெண்பாலார் கூறுதலின்றி இடைநின்ற சான்றோராயினும் பிறராயினும் கூறுதற்கு உரித்தாய் முற்காலத்து ஒத்த அன்பினராகிக் [1]கடைநிலைக்காலத்து ஒரு வன் ஒருத்தியைத் துறந்ததனால் துறந்த பெண்பாற் கைக்கிளை யாதலின் திரிபுடைத்தாயிற்று. இது முதனிலைக் காலத்துத் தான் குறித்தது முடித்துப் பின்னர் அவளை வருத்தஞ்செய்து இன்ப மின்றி யொழிதலான் ஒருதலைக் காமமாயிற்று. உதாரணம்:

[2]அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப
வினைத லானா ளாக விளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தண்
முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி
யெம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேக
னொல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே. (புறம். 144)

[3]இது, கண்ணகி காரணமாக வையாவிக் கோப்பெரும் பேகனைப் பரணர் பாடிய கைக்கிளைவகைப் பாடாண் பாட்டு.

'கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென' வினவ, யாங் கிளையல்லேம் முல்லைவேலி நல்லூர்கண்ணே வருமென்று சொல்வாளெனக் கூறுதலின் அஃது ஏனைக் கைக்கிளைகளின் வேறாயிற்று.

---

1. கடைநிலைக்காலம் - பிற்காலம்.
2. கானம் - காடு. நீல் - நீலநிறம். வார்தல் - வடிதல். அரிப்பனி - இடைவிட்ட துளி. கிளையை - கிளைமையுடையை. நல்லூரின்கண் ஒருத்தி நலம் நயந்து வரும் எனக் கூட்டுக.
3. கண்ணகி - பேகன் பத்தினி.

*'கண்முழை யருவி' என்னும் (147)* புறப்பாட்டும் *அது.*

*தொக்க நான்கும் உள என மொழிப - அந்நான்கும் முற் கூறிய ஆறனோடே தொக்குப் பத்தாய்ப் பாடாண் பகுதிக் கண்ணே உளவாய் வருமென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.*

*'தொக்க நான்கு' என்றதனான் இந்நான்கும் வெண்பாவும் ஆசிரியமுந் தொக்குநின்ற மருட்பாவானும் வருமென்பதூஉங் கொள்க. இவற்றை மேல்வருகின்றவற்றோடு உடன் கூறாரா யினார், அவை [1]இழிந்தோர் கூறுங் கூற்றாகலின். (35)*

**(இதுவுமது)**

91. தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூத ரேத்திய துயிலெடை நிலையுங்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமுஞ்
சிறந்த நாளணி செற்ற நீக்கிப்
பிறந்த நாள்வயிற்பெருமங் கலமுஞ்
சிறந்த சீர்த்தி மண்ணுமங் கலமு
நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு
மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமு
மன்னெயி லழித்த மண்ணுமங் கலமும்
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவள னேத்தி
நடைவயிற் றோன்று மிருவகை விடையு
மச்சமு முவகையு மெச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமுங்
காலங் கண்ணிய வோம்படை யுளப்பட
ஞாலத்து வரூஉ நடக்கையது குறிப்பிற்
கால மூன்றொடு கண்ணிய வருமே.

*இதுவுமது.*

---

1. இழிந்தோரென்றது சூதர் கூத்தர் முதலியோரை.

இ — ள்: தாவில் கிடந்தோர்க்கு நல்லிசை கருதிய சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் - தமது வலியாலே பாசறைக்கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசர்க்கு நல்ல புகழைக் கொடுத் தலைக் கருதிய சூதர் அத்[1]துயிலெடுப்பின் ஏத்தின துயிலெடை நிலையும்:

'கிடந்தோர்க்கு' எனப் பன்மை கூறவே, அவர் துயிலெடுப் புத் தொன்றுதொட்டு வருமென்பதூஉம், [2]சூதர் மாகதர் வேதா ளிகர் வந்திகர் முதலாயினோருட் சூதரே இங்ஙனம் வீரத்தால் துயின்றாரைத் துயிலெடுப்புவரென்பதூஉம், யாண்டும் முன்னுள் ளோரையும் பிறரையுங் கூறப்படுமென்பதூஉங் கொள்க. அவர் அங்ஙனந்துயின்றமை பிறர்க்கும் புலப்படப் புகழல் அவர் கருத் தாகலின் ஒருதலைக் காமம் உளதாயிற்று. உதாரணம்:

[3]கானம் பொருந்திய கயவாய் மகளிரின்
யானுறுந் துயர நந்திய பானா
ளிமையாக் கண்ணோ டமையாக் காத்தநின்
மூதின் முதல்வன் றுயில்கொண் டாங்குப்
போற்றா மன்னரை யெள்ளிச் சிறிதுநீ
சேக்கை வளர்ந்தனை பெரும தாக்கிய
வண்கை யவுண னுயிர்செல வாங்கவ
னன்றுணர்ந் தாங்கு வென்றி மேய
வாடா வஞ்சி மலைந்த சென்னிப்
போரடு தானைப் பொலந்தேர் வளவ
நின்றுயி லெழுமதி நீயு
மொன்றா வேந்தர் பொன்றுதுயில் பெறவே.

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் பெற்ற பெரு வளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும் ஆடன்மாந்தரும் பாடற்பாணரும் [4]கருவிப்பொருநரும்

1. துயிலெடுப்பு - துயிலெழுப்பல்.

2. சூதர் - நின்றேத்துவோர். மாகதர் - இருந்தேத்துவோர். வேதாளிகர் - வைதாளியாடுவார். வேதாளி யாடுவார் என்றுங் காணப்படுகின்றது. சூதர் மாகதர் வேதாளிகரொடு (சிலப் - இந்திரவிழ. 48) என்னு மடியுரை நோக்கி யறிக. சூத ரேதத் மாகதர் நுவல - வேதா ளியரொடு நாழிகை யிசைப்ப என் னும் (மதுரைக் காஞ்சி 670 - 71) அடிகளினுரையையு நோக்கியறிக. வந்திகர் - மங்கல பாடகர்; புகழ்ந்து பாடுவோர்.

3. நந்திய - கெட. பானாள் - இடையாமம். மூதில் - முதுகுடி. சேக்கை - படுக்கை (சயனம்). வளர்தல் - கண்வளர்தல் = துயிலல். ஆங்கவன் - முதுகுடி முதல்வன். அன்று - அந்நாள். உணர் - துயிலுணர்தல்.

4. கருவிப்பொருநர் - இசைக்கருவி ஒலிக்கும் பொருநர்.

இவருட் பெண்பாலாகிய விறலியுமென்னும் நாற்பாலாருந் தாம் பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று தாம்பெற்றவை எல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்:

கூத்தராயிற் [1]பாரசவரும் வேளாளரும் பிறரும் அவ்வாடற் றொழிற்கு உரியோரும் [2]பாரதிவிருத்தியும் விலக்கியற்கூத்துங் கானகக்கூத்துங் கழாய்க்கூத்தும் ஆடுபவராகச் சாதிவரையறை யிலராகலின் அவரை முன்வைத்தார்; பாணரும் பொருநரும் தத்தஞ் சாதியில் [3]திரியாது வருதலிற் சேரவைத்தார்; முற்கூறிய முப்பாலோருட் கூத்தராயினார் எண்வகைச் சுவையும் மனத் தின்கட்பட்ட குறிப்புக்களும் புறத்துப் போந்து புலப்பட ஆடு வார்; அது விறலாகலின் அவ்விறல்படஆடுவாளை விறலியென் றார். இவளுக்குஞ் சாதிவரையறையின்மையிற் பின்வைத்தார். பாணரும் [4]இசைப் பாணரும் யாழ்ப்பாணரும் மண்டைப் பாணரு மெனப் பலராம். பொருநரும் ஏர்க்களம்பாடுநரும் போர்க்களம்பாடுநரும் பரணிபாடு நருமெனப் பலராம். விற லிக்கு அன்னதோர் தொழில் வேறுபாடின்றித் தொழிலொன் றாகலின் விறலி என ஒருமையாற் கூறினார்.

ஆற்றிடைக் காட்சியுறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்க மும் - இல்லறத்தை விட்டுத் துறவறமாகிய நெறியிடத்து நிற்றல் நன்றென்றுங் கண்ட காட்சி தீதென்றும் மாறுபடத் தோன்று கையினாலே தான் இறைவனிடத்துப்பெற்ற கந்தழியாகிய செல்

---

1. பாரசவர் - பிராமணருக்குச் சூத்திரப் பெண் வயிற்றிற் பிறந்தவர்.
2. பாரதிவிருத்தி - கூத்திற்குரிய நால்வகை விருத்தியுளொன்று "விலக்கினிற் புணர்த்து" என்னும் (சிலப். - அரங்கே. - 13ம்) அடியுரை நோக்கியறிக. விலக்கியற்கூத்து - விலக்குறுப்போடு கூடிய கூத்து. இதனையும் மேற்படி அடியுரைநோக்கியறிக. கானகக்கூத்து - இது புலப்படவில்லை. கானகம் - காடு. கழாஅய்க் கூத்து - மூங்கிலிலேறி ஆடுவது. (கம்பங்கூத்து என்பது மிது). திரியாது - வேறுபடாது.
3. எண்வகைச் சுவை - "நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை" என்பன. விறல் - சத்துவம்.
4. இசைப்பாணர் - இசைபாடும் பாணர். மண்டைப்பாணர் - இரக்குங்கலத் தேற்கும் பாணர். யாழ்வாசிப்பவர் - யாழ்ப்பாணர்.

வத்தை யாண்டுத் திரிந்து பெறாதார்க்கு இன்னவிடத்தே சென்றாற் பெறலாமென்று அறிவுறுத்தி அவரும் ஆண்டுச்சென்று அக் கந்தழியினைப் பெறும்படி சொன்ன கூறுபாடும்:

'பக்கம்' என்றதனானே அச் செய்யுட்களைக் கூத்தராற்றுப் படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப் படை, முருகாற்றுப்படையென வழங்குதலும் ஆற்றினருமையும் அவனூர்ப் பண்புமுதலியனவுங் கூறுதலுங் கொள்க. உதாரணம்:

[1]வான்றோய் வெண்குடை வயமா வளவ
னீன்றோர் தம்மினுந் தோன்ற நல்கினன்
சுரஞ்செல் வருத்தமொ டிரங்கி யென்று
மிரந்தோ ரறியாப் பெருங்கலஞ் சுரக்குவன்
சென்மதி வாழிய நீயே நின்வயி
னாடலு மகிழான் பாடலுங் கேளான்
வல்லே வருகென விடுப்பி னல்லது
நில்லென நிறுக்குவ னல்ல னல்லிசைப்
பெருந்தகை வேந்தர் கோலமொடு
திருந்தா வாழ்க்கையின் வருந்து வோயே.

திருமழை தலைஇய விருணிற விசும்பின். (மலைபடு. 1)

இவை கூத்தராற்றுப்படை.

[2]பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரெ னொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே யென்று
முடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக
னெத்துணை யாயினு மீத்த னன்றென
மறுமைநோக் கின்றோ வன்றே
பிறர், வறுமைநோக் கின்றவன் கைவண் மையே. (புறம். 141)

மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை. (சிறுபாண். 1)

இவை பாணாற்றுப்படை.

---

1. வருந்துவோய் வளவன் எமக்கு நல்கினன்; நீ செல்; உனக்கும் பெருங்கலம் நிறையத் தருவன்; அவன் நின்வயின் மகிழான் கேளான் வருக என இருப் பினல்லது நிறுத்துவனல்லன் என இயைக்க.

2. அசைஇ - இளைப்பாறி. எம்மை வினவலான என ஒரு சொல் வருவிக்க. புல்லியேம் - வறியேம். உடாஅ - உடுக்கமாட்டா. போரா - போர்க்கமாட்டா. படாஅம் - வஸ்திரம். மஞ்ஞை - மயில்.

[1]சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பி
னொலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினு
முள்ள மோம்புமி னுயர்மொழிப் புலவீர்
யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
வகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்
துன்னரும் பரிசி றருமென
வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே. (புறம். 394)

அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட். (பொருந. 1 – 2)

*இவை பொருநராற்றுப்படை.*

[2]சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினு மருவி
கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரு
நீரினு மினிய சாயற்
பாரி வேள்பாற் பாடினை செலினே. (புறம். 105)

[3]மெல்லியல் விறலிநீ ... காணிய சென்மே. (புறம். 133)

*இவை விறலியாற்றுப்படை.*

*[4]கூத்தராற்றுப்படை தடுமாறுதொழிலாகாமற் கூத்தரை ஆற்றுப்படுத்ததென விரிக்க. ஏனையவும் அன்ன.*

---

1. சிலை - வில். குட்டுவன் என்றது சோழியஏனாதி திருக்குட்டுவனை. தெளிர்த்தல் - ஒலித்தல். ஒற்றி - ஒலிப்பித்து. வஞ்சி - பகைமேற்சேறல். பெயர்த்தல் - வேண்டாமெனக்கூறல். அதற்கொண்டு - அதனால்.
2. சேயிழை - சிவந்த அணி. தடவுவாய் - பெரிய இடத்தையுடைய சுனை. கலித்தல் - தழைத்தல். சிதர் - துளி. புலத்துழை - புலத்திடை. கால் - வாய்க்கால். கோடு - சிகரம். சாயல் - மென்மை.
3. விறலி - விறல்பட ஆடுபவள். விறல் - சத்துவம்.
4. கூத்தராற்றுப்படையை விரிக்க என இயைக்க. தடுமாறு தொழிலாக்கின் மூன்றாம்வேற்றுமையாகவும் விரிக்கலாம். அங்ஙனம் விரியாமல் கூத்தரை

[1]முருகாற்றுப்படையுட் ‘புலம்பிரிந் துறையுஞ் சேவடி’ (62-3) யெனக் கந்தழிகூறி, ‘நின்னெஞ்சத் தின்னிசை வாய்ப்பப் பெறுதி’ (65 - 6) எனவுங் கூறி, அவனுறையும் இடங்களும் கூறி, ஆண்டுச் சென்றால் அவன் ‘விழுமிய, பெறலரும் பரிசி னல்கும்’ (294 - 5) எனவுங் கூறி, ஆண்டுத் தான்பெற்ற பெருவளம் அவனும் பெறக் கூறியவாறு காண்க. இதனைப் புலவராற்றுப்படை என்று உய்த் துணராது பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படையென்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமையான் மறுக்க. இனி முருகாற் றுப்படை யென்பதற்கு முருகன்பால் வீடுபெறுதற்குச் சமைந் தான் ஓரிரவலனை ஆற்றுப்படுத்ததென்பது பொருளாகக் கொள்க. இனிக் கூத்தர் முதலியோர் கூற்றாகச் செய்யுட் செய் யுங்கால் அவர்மேல் வைத்துரைப்பினன்றிப் புலனுடை மாந்தர் தாமே புலனெறி வழக்கஞ் செய்யாமை யுணர்க.

இனி இசைப் புலவர்க்கும் நாடகப் புலவர்க்கும் இங்ஙனங் கூறலமையாது; அவருள் உயர்ந்தோரல்லாதாரும் அத்தொழிற் குப் பெரும்பான்மையும் உரியராய் நடத்தலின்.

நாளணி செற்ற நீக்கிச் சிறந்த பிறந்த நாள்வயிற் பெரு மங்கலமும் - நாடொறுந் தான் மேற்கொள்ளுகின்ற செற்றங் களைக் கைவிட்டுச் [2]சிறந்ததொழில்கள் பிறத்தற்குக் காரண மான நாளிடத்து நிகழும் வெள்ளணியும்:

அரசன் நாடோறும் தான் மேற்கொள்கின்ற செற்றமாவன:- சிறைசெய்தலுஞ் செருச்செய்தலுங் கொலைபுரிதலும் முதலியன. சிறந்த தொழில்களாவன:- சிறைவிடுதலுஞ் செருவொழிதலுங் கொலை யொழிதலும் [3]இறைதவிர்த்தலுந் தானஞ்செய்தலும் வேண்டின கொடுத்தலும் பிறவுமாம்.

---

ஆற்றுப்படுத்தது என இரண்டாவதாக விரிக்க என்றபடி (சொல் - 578). பாணாற்றுப்படை முதலிய ஏனையவும் அவ்வாறே விரியும்.

1. முருகாற்றுப்படை - திருமுருகன்கணாற்றுப்படுத்தல் என விரியும்.
2. சிறந்த தொழில்கள் நிகழும் வெள்ளணி என இயைக்க. அன்றிப் பிறத்தற்குக் காரணமான என்பதனோடு முடிக்கில் பிறந்த நாள் என்னும் பொருள் பெறப்படாது என்க.
3. இறை - இறைப்பொருள்.

மங்கலவண்ணமாகியவெள்ளணியும் அணிந்து எவ்வுயிர்க் கண்ணும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணியென்ப. ஆகுபெயரான் அப்பொருள் கூறிய செய்யுளும் வெள்ளணி யாயிற்று. உதாரணம்:

அந்தண ராவொடு பொன்பெற்றார் நாவலர்
மந்தரம்போன் மாண்ட களிறூர்ந்தா – ரெந்தை
யிலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா ளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு. (முத்தொள்ளாயிரம். 40)

இது [1]சிலம்பி கூடிழக்குந்துணை யடங்கலும் வெளியாயிற் றென்றலின் வெள்ளணியாயிற்று.

[2]செய்கை யரிய களவழிப்பா முன்செய்த
பொய்கை யொருவனாற் போந்தரமோ – சைய
மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக்
கொலைச்சிறைதீர் வேந்துக் குழாம்.

இது, சிறைவிடுதல் கூறிற்று.

கண்ணார் கதவந் திறமின் களிறொடுதேர்
பண்ணார் நடைப்புரவி பண்விடுமி – னண்ணாதீர்
தேர்வேந்தன் றென்னன் றிருவுத் திராடநாட்
போர்வேந்தன் பூச லிலன். (முத்தொள்ளாயிரம். 39)

இது செருவொழிந்தது.

[3]ஏமாரு மன்னீ ரெயிறிறமி னெங்கோமான்
வாமான்றேர்க் கோதை சதயநா – ளாமாறு
காம நகருமின் கண்படுமி னென்னுமே
யேம முரசின் குரல்.

இதனுள் இழிகுலத்தோன் பறைசாற்றினமை கூறுதலின் இழிந்தோர் கூறுதல் ஒழிந்த மங்கலங்கட்கும் ஒக்கும்.

---

1. சிலம்பி - ஒரு பூச்சி. இது வீடுகளில் தன் வாய்நூலாற் கூடுகட்டுவது. வீடு களைத் தூய்மைசெய்வோர் தூய்மைசெய்யுங் கருவியால் சிலம்பிக் கூடு களைக் களைந்து தூய்மை செய்வர்; அதனால் வீடுகள் வெளியாம்.

2. களவழிப்பா - களவழி என்னு நூல். இது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களு ளொன்று. இதனை இயற்றியவர் பொய்கையார். இவர் இதனைப் பாடி ஒரு அரசனைச் சிறை நீக்கினார். இன்று சிறை நீங்கினார் பலர். இச் சிறை நீக்கம் அவனாற் போந்தரமோ (முடியுமோ) என்பது கருத்து.

3. ஏமம் ஆரும் - இன்பமடையும்.

'பெருமங்கலம்' என்றதனானே [1]பக்கநாளுந் திங்கடோறும் வரும் பிறந்தநாளும் பாடலுட் பயிலாமை யுணர்க.

சிறந்த சீர்த்தி மண்ணும் மங்கலமும் - அரசர்க்குச் சிறப் பெய்திய மிக்க புகழை எய்துவிக்கும் முடிபுனைந்து ஆடும் நீராட்டு மங்கலமும்:

இதனைப் பிறந்தநாளின் பின்வைத்தார், பொன்முடி புனைந்த ஞான்று தொடங்கி யாண்டுதோறும் இது வருமென் றற்கு. குறு நில மன்னர்க்காயின் அவர்க்குரிய பட்டத்தோடு கூடிய மண்ணுமங்கலமுங் கொள்க. உதாரணம்:

[2]அளிமுடியாக் கண்குடையா னாகுதிநாள் வேய்ந்த
வொளிமுடி பொன்மலையே யொக்கு – மொளிமுடிமேன்
மந்திரத்தா லந்தணர் வாக்கியநீ ரம்மலைமே
லந்தரத்துக் கங்கை யனைத்து.

இதனானே [3]யாண்டு இத்துணைச் சென்றதென்று எழுதும் நாண் மங்கலமும் பெறுதும்.

நடைமிகுத்து ஏத்திய குடைநிழன் மரபும் - உலகவொழுக் கத்தை இறப்ப உயர்த்துப் புகழ்ந்து கூறப்பட்ட குடைநிழல திலக்கணமும்:

இங்ஙனம் புனைந்துரைத்தற்கு ஏதுவாயது நிழலாம்; என்னை? அந்நிழல் உலகுடனிழற்றியதாகக் கூறுதலும்பட்டுக் குடிபுறங்காத்தற்குக் குறியாகக் குடைகொண்டேனென்று அக் கொற்றவன் குறிக்கவும் படுதலின்.

'மரபு' என்றதனாற் செங்கோலுந் திகிரியும் போல்வனவற் றைப் புனைந்துரையாக்கலுங் கொள்க. உதாரணம்:

---

1. பக்கநாள் என்றது பிறந்தநாளின் பத்தாநாளும் அதன் பத்தாநாளுமாகிய இரண்டையும் இவற்றோடு பிறந்த நாளையுங் கூட்டிச் சென்மத்திரயம் என்பர். இனி பிறந்தநாளின் முன்னும் பின்னுமுள்ள நாளுமாம்.

2. அளிமுடியாக்கண் - அருளுதலில் முடிவடையாத கண் = அருட்கண். கண் ணையும் குடையையுமுடையான் என்க. இனி அளி முடியாக்கண் (கண் ணோட்டம்) குடையாக எனினுமாம். ஆகுதி நாள் - ஓமம் வளர்த்து முடிசூட்டு மங்கலநாள்.

3. யாண்டு இத்துணைச்சென்றது என்று எழுது மங்கலமென்றது அரசனுக்கு 50ம் ஆண்டு நிறைவு. 60ம் ஆண்டு நிறைவு. 80ம் ஆண்டு நிறைவு. 100ஆம் ஆண்டு நிறைவு என்று இப்படி எழுதி உலகிற்குத் தெரிவித்துக் கொண்டாடல்.

[1]மந்தரங் காம்பா மணிவிசும் போலையாத்
திங்க ளதற்கோர் திலதமா – வெங்கணு
முற்றுநீர் வைய முழுது நிழற்றுமே
கொற்றப்போர்க் கிள்ளி குடை. (முத்தொள்ளாயிரம். 35)

[2]அறநீர்மை தாங்கி யளப்பரிதாய் வானப்
புறநீர்போன் முற்றும் பொதியும் – பிறரொவ்வா
மூவேந்த ருள்ளு முதல்வேந்தன் முத்தமிழ்க்குக்
கோவேந்தன் கண்டன் குடை.

[3]ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பி னடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ. (புறம். 35: 17 – 1)

திங்களைப் போற்றதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான். (சிலப் – மங்கல.)

[4]திங்கள் மாலை வெண்குடையான் சென்னி செங்கோ
லதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி.
(சிலப் – கானல்.)

[5]ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான். (சிலப் – மங்கல.)

*இவை குடையையும் செங்கோலையும் திகிரியையும் புனைந்தன.*

*மாணார்ச் சுட்டிய வாண்மங்கலமும்* - பகைவரைக் குறித்த வாள் வென்றியாற் பசிப்பிணி தீர்ந்த பேய்ச்சுற்றமும் பிறரும் வாளினை வாழ்த்தும் வாண்மங்கலமும்:

*இது, பிறர் வாழ்த்தப்படுதலிற் கொற்றவையைப் பரவும் 'வென்ற வாளின் மண்' (68) ணென்பதனின் வேறாயிற்று. புகழ்ச்*

---

1. திலதம் (திலகம்) - குடைக்காம்பிற்கு இடுங் குமிழ் என்பர் சிலர். "திலக வெண்குடை" என்னுஞ் சீவகசிந்தா. 83ம் செய்யுளுரையில் திலகம் - மேலாதல் என்று நச்சினார்க்கினியர் கூறலின் நிழல்செய்வதில் திங்களாகிய அதற்கும் (அதனினும்) மேலானதாக என்றும் பொருள் கூறலாம். குவ்வுருபு ஐந்தாவதன் பொருட்டு (சிவக. 246 - 305).
2. அறநீர்மை தாங்கல் - வெண்ணிறமும் தட்பமுங் கோடல். குடை வானப் புறத்தின் தன்மைபோல உலகமுழுவதையும் கவிக்குமென்க. கண்டன் - சோழன்.
3. கொண்மூ - மேகம். வளவ! நின்குடை குடிமறைப்பதுவே என்க.
4. இது செங்கோலைப் புனைந்தது.
5. இது (திகிரி) ஆஞ்ஞாசக்கரத்தைப் புனைந்தது.

*சிக்கட்பகைவரை இகழ்ந்து புகழ்தலின் 'மாணார்ச் சுட்டிய' என்றார். உதாரணம்:*

[1]ஆளி மதுகை யடல்வெய்யோன் வாள்பாடிக்
கூளிகள் வம்மினோ கூத்தாடக் – காளிக்குத்
தீராத வெம்பசி தீர்த்துநாஞ் செங்குருதி
நீராட்டி யுண்ட நிணம்.

[2]அரும் பவிழ்தார்க் கோதை யரசெறிந்த வொள்வாட்
பெரும்புலவுஞ் செஞ்சாந்து நாறிச் – சுரும்பொடு
வண்டாடும் பக்கமு முண்டு குறுநரி
யுண்டாடும் பக்கமு முண்டு. (முத்தொள்ளாயிரம். 38)

*இது பிறர் கூறியது. இது பரணியிற் பயின்றுவரும்.*

*மன்னெயில் அழித்த மண்ணு மங்கலமும் - மாற்றரசன் வாழ்ந்த மதிலையழித்துக் [3]கழுதையேரான் உழுது வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தி (புறம் - 392) மங்கலமல்லாதன செய்தவன் மங்கலமாக நீராடு மங்கலமும்:*

*அழித்ததனான் மண்ணு மங்கலம். உதாரணம்:*

கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில் (புறம். 15)

*என எயிலழித்தவாறு கூறி,*

வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூபநட்ட (புறம். 15: 20 – 1)

*எனவே [5]ஒருவாற்றான் மண்ணியவாறுங் கூறியவாறு காண்க.*

*குடுமிகொண்ட மண்ணுமங்கலம் எயிலழித்தல் கூறாமையின் இதனின் வேறாயிற்று.*

*பரிசில் கடைஇய நிலையும் - பரிசிலரை நீக்குதலமையாது நெடிது கொண்டு ஒழுகிய தலைவற்குப் பரிசில் வேட்டோன் தன்*

---

1. ஆளி - சிங்கம். மதுகை - வலி. கூளி - பேய். செங்குருதி - இரத்தம்.
2. கோதை - சேரன். நாறி - நாறலால். புலவுஞ் சாந்தும் நாறலால் ஆடும் - பக்கமுமுண்டென்க. ஆடல் - பறத்தல், சூழ்தல்.
3. கழுதை ஏர் - கழுதை பூட்டிய கலப்பை.
4. ஞெள்ளல் - விதி. அவர் அரண்களைப் பாழ்செய்தனை என இயைக்க.
5. ஒருவாற்றான் மண்ணியதென்றது. வேள்வியில் நீராடல்பற்றி.

*[1]கடும்பினது இடும்பை முதலியன கூறித் தான் குறித்த பொருண் மையினைச் செலுத்திக் கடாவின நிலையும்:*

*கடைக்கூட்டு நிலையும் - வாயிலிடத்தே நின்று தான் தொடங் கிய கருமத்தினை முடிக்கும் நிலையும்:*

*இதுவும் இழிந்தோர் கூற்றாயிற்று, இருத்தலே அன்றிக் கடாவுதலின். 'நிலை' யென்றதனானே பரிசில் பெறப் போகல் வேண்டுமென்னுங் குறிப்பும், பரிசினிலையும் பல்வகையாற் கூறுதல் கொள்க. உதாரணம்:*

[2]ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பி
னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நிரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைக்
கொடுத்தி கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரிய
ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே. (புறம். 164)

*இது பரிசில் கடாநிலை.*

[3]மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
யொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே

1. கடும்பு - சுற்றம்.

2. அடு - ஆடு என நீண்டது. அடு - அடுதல். கோடு - புடை. ஆம்பி - காளான். இல்லி - முலைக்கண். எவ்வம் - துன்பம்.

3. அதியர்கோமானாகிய எழினி. கடை - வாயில். பசலை நிலவு - இளநிலவு. அடிவழிஅன்னகண் - அடியினிடத்தையொத்த கண் என்க. வழியின் மிதித்த அடிச்சுவடுபோலும் வட்டமாகிய கண் எனினுமாம். குருதிப்பெருபாட்டீரம் -

யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
யூண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே. (புறம். 392)

*இது கடைநிலை.*

[1]நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
விசும்பா டெருவைப் பசுந்தடி தடுப்பப்
பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே. (புறம். 64)

*இது போகல்வேண்டுங் குறிப்பு.*

[2]ஊனு மூனு முனையி னினிதெனப்
பாவிற் பெய்தவும் பாகிற் கொண்டவு
மளவுபு கலந்து மெல்லியது பருதி
விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மையி னெம்பிரி வஞ்சித்
துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
பயம்பகர் வறியா மயங்கரின் முதுபாழ்ப்
பெயல்பெய் தன்ன செல்வத் தாங்க
ணீயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
யூன்சுகிர் வலந்த தெண்க ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலைப் பாணியி
னிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் தீர்க்குவோ மதனா

---

இரத்தப்பெருக்கா லுளதாகிய ஈரம். கொள் - குடைவேல். பகட்டிலை - பெரிய இலை. சிதாஅர் - கந்தைத்துணி. பிறங்கடை - வழித்தோன்றல்.

1. ஆகுளி - சிறுபறை. பதலை - ஒருதலைமாக்கிணை. செல்லாமோ - போவேமல்லேமோ. எருவை - பருந்தின் பேதம்; கழுகுமாம். தடி - ஊன்தடி. நீத்து - கைவிட்டு (உண்டு வெறுத்து).

2. முனையின் - வெறுப்பின். அளவுபுகலந்து - நன்றாகக்கலந்து. விருந்து - புதிது. ஆற்றி - பசிதணித்து. சென்மோ - வருவாயாக. துணரியது - குலைகொண்டது. பகர்வு - கொடுத்தல். அரில் - பற்றை. முதுபாழ் - முதிய பாழ்நிலம்.

லிருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு
மிதற்கொண் டறிநை வாழியோ கிணைவ
சிறுநனி, யொருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மான மறப்பின்
றிருங்கோ ளீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே. (புறம். 381)

*இது, மேலும் இக்காலத்து இங்ஙனந் தருவலென்றானெனக் கூறினமையின் அவன் பரிசினிலை கூறிற்று.*

[1]குன்று மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே

*என்னும் (208)* புறப்பாட்டும் *அப்பரிசினிலையைக் கூறியது காண்க.*

*பெற்றபின்னரும் பெருவளன் ஏத்தி நடைவயின் தோன்றும் இருவகை விடையும் - அங்ஙனம் பரிசில் பெற்றபின் அவனும் அவன் கொடுத்த பெருவளனை உயர்த்துக் கூறி உலகவழக்கிய லால் தோன்றும் இரண்டுவகைப்பட்ட விடையும்:*

*இருவகையாவன - தலைவன் தானே விடுத்தலும் பரிசிலன் தானே போகல்வேண்டுமெனக் கூறி [2]விடுத்தலுமாம். உதாரணம்:*

[3]தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடமா கடைஇய விடுபரி வடிம்பி
னற்றார்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்

---

1. யாங்கு அறிந்தான் - எப்பரிசறிந்தான். தாங்குதல் - தடுத்தல். காணாது - என்னை நேரே பாராது. வாணிகப் பரிசிலன் அல்லன் - ஊதியங் கருதும் பரிசிலன் அல்லன். பேணி - விரும்பி வழிபட்டு. துணையளவு - தகுதியளவு.

2. விடுத்தல் - விடைபெறல் (விடுவித்தல்).

3. மிடல் - வலி. வடவடுகர் - வடநாட்டிலுள்ள வடுக வீரர். கடைஇய - செலுத்திய. வடிம்பு - காலின்விளம்பு. சுதை - சுண்ணச்சாந்து. அரிக்கூடுமாக்கினை -

பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
வெமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரு
மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்
கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே
யிருங்கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே. (புறம். 378)

*இது [1]தானே போவென விடுத்தபின் அவன் கொடுத்த வளனை உயர்த்துக் கூறியது.*

[2]உயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்
செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
யகறி ரோவெம் ஆயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்
டின்மை தீ வந்தனென். (பொருந. 119 – 29)

*இது, யான் போகல் வேண்டுமெனக் கூறி விடுத்தபின், அவன் தந்த வளனை உயர்த்துக் கூறியது.*

*'நடைவயின் தோன்று' மென்றதனாற் சான்றோர் புலனெறி வழக்கஞ் செய்துவரும் விடைகள் பலவுங் கொள்க. அவை பரிசில்*

---

அரித்தெழும் ஓசையையுடைய பெரிய தடாரிப்பறை. வஞ்சி - பகைவர்மேற் செலவு. கலம் - ஆபரணம். வெறுக்கை - செல்வம். ஒக்கல் - சுற்றம். பெற் றிகும் - பெற்றேம்.

1. தானே - தலைவன்தானே.
2. உயிர்ப்ப இடம்பெறாது - இளைப்பாற இடம்பொறது. துறை போகிய - முடியப்போன. ஆயம் - திரள் (கூட்டம்). சிரறல் - கோபித்தல். செயிர்த்தல் - குற்றஞ்செய்தல். பெட்டவை - விரும்பியவை.

*சிறிதென்று போகலும், பிறர்பாற்சென்று, பரிசில் பெற்றுவந்து காட்டிப்போகலும், இடைநிலத்துப் பெற்ற பரிசிலை இடை நிலத் துக் கண்டார்க்குக் கூறுவனவும், மனைவிக்கு மகிழ்ந்து கூறுவன வும் பிறவும் வேறுபட வருவனவெல்லாங் கொள்க. உதாரணம்:*

[1]ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிது
மீத லெளிதே மாவண் டோன்ற
லதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. (புறம். 121)

*இது சிறிதென்ற விடை.*

[2]இரவலர் புரவலை நீயு மல்லை
புரவல ரிரவலர்க் கில்லையு மல்ல
ரிரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தந் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே. (புறம். 162)

*இது, பிறன்பாற் பெரிதுபெற்றுச் சிறிது தந்தவற்குக் காட் டிய விடை.*

*'வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி' என்னும் (152) புறப் பாட்டு இடைநிலத்திற் பரிசுபெற்றமை கண்டார்க்குக் கூறியது.*

[3]நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்குங்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
னெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கு
மின்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயு
மெல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
றிருந்துவேற் குமண னல்கிய வளனே. (புறம். 163)

*இது [4]மனைக்குக் கூறியது.*

1. உள்ளி - நினைத்து. வரிசை - தகுதி. அது - வரிசை. பொதுநோக்கு - புலவர் யாரையும் ஒருதரமாக (சமமாக)நோக்கல்.

2. புரவலை - பாதுகாப்பாய். புரவலர் - பாதுகாப்போர். கடிமரம் - காவல்மரம். தந்து - கொணர்ந்து.

3. கடும்பு - சுற்றம். குறியெதிர்ப்பை - ஒரு குறித்த அளவு வாங்கிப் பின்வாங்கிய அவ்வளவு எதிர் கொடுத்தல்; (குறள். 221).

4. மனை - மனைவி.

நாளும் புள்ளும் பிறவற்று நிமித்தமும் அச்சமும் உவகையும் எச்சமின்றிக் காலங் கண்ணிய ஓம்படை உளப்பட - நாணிமித்தத்தானும் புண்ணிமித்தத்தானும் பிறவற்றினிமித்தத்தானும் பாடாண்டலைவர்க்குத் தோன்றிய தீங்குகண்டு அஞ்சிய அச்சமும் [1]அது பிறத்தற்குக் காரணமாகிய அன்பும் ஒழிவின்றிப் பரிசிலர்க்கு நிகழ்தலின் அவர் தலைவர் உயிர்வாழுங் காலத்தைக் கருதிய பாதுகாவன் முற்கூறியவற்றோடே கூட:

ஒருவன் [2]பிறந்தநாள்வயின் ஏனைநாள்பற்றிப் பொருந்தாமை பிறத்தலும், அவன் பிறந்த நாண்மீனிடைக் [3]கோண்மீன் கூடிய வழி அவன் நாண்மீனிடைத் தீது பிறத்தலும், வீழ்மீன் தீண்டிய வழி அதன்கண் ஒரு வேறுபாடுபிறத்தலும்போல்வன நாளின் கண் தோன்றிய நிமித்தம்; 'புதுப்புள் வருதலும் பழம் புட் போதலும்' (புற - 20) பொழுதன்றிக் கூகை குழறலும் போல்வன புள்ளின்கண் தோன்றி நிமித்தம்; ஓர்த்துநின்றுழிக் கேட்ட வாய்ப்புள்ளும் ஓரிக்குரலுள்ளிட்டனவுங் கழுதுடன் குழீஇய குரல் பற்றலும் வெஞ்சுடர் மண்டிலத்துக் கவந்தம் வீழ்தலும் அதன்கண் துளைதோன்றுதலுந் தண்சுடர் மண்டிலம் பகல் நிலவெறித்தலும் போல்வன பிறவற்றுக்கண் தோன்றிய நிமித்தம்.

உவகை - அன்பு. இந்நிமித்தங்கள் பிறந்துழித்தான் அன்பு நிகழ்த்தினான் ஒரு பாடாண்டலைவனது வாழ்க்கை நாளிற்கு ஏதம் வருங்கொலென்று அஞ்சி அவற்குத் தீங்கின்றாக ஓம்படை கூறுதலின் அது காலங்கண்ணிய ஓம்படையாயிற்று. எஞ்ஞான்றுந்தன் சுற்றத்து இடும்பைதீர்த்தானொருவற்கு [4]இன்னாங்கு வந்துழிக் கூறுதலின் இற்றைஞான்று பரிசிலின்றேனும் முன்னர்ப் பெற்ற பரிசிலை நினைந்து கூறினானாமாகவே கைக்கிளைக்குப்

---

1. அது - அவ்வச்சம்.
2. நாள் - நட்சத்திரம்.
3. கோள்மீன் - கிரகம். அவை வியாழன், சனி போல்வன. பொழுதன்றி - தனக்குரிய காலமன்றி. ஓர்த்தல் - செவிசாய்த்துக் கேட்டல், வாய்ப்புள் - சொல்நிமித்தம். ஓரி - நரி. கழுது - பேய். உடன் - ஒருங்கு. குழீஇய - கூடிய வாய். குரல் பற்றல் - குழறல். கவந்தம் - உடற்குறை போன்றதொரு களங்கம் போலும்.
4. இன்னாங்கு - துன்பம்.

*புறனாயிற்று. இவன் இறத்தலான் உலகு படுந்துயரமும் உளதாகக் கூறலிற் சிறந்த புகழுங் கூறிற்று.*

*'நெல்லரியு மிருந்தொழுவர்' என்னும் (24)* புறப்பாட்டினுள் *'நின்று நிலைஇயர்நின் னாண்மீன்' என அவனாளிற்கு முற்கூறிய வாற்றான் ஓரிடையூறு கண்டு அவன்கண் அன்பால் அஞ்சி ஓம்படை கூறியது. உதாரணம்:*

ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவின்
முடப்ப னையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனி உயரழுவத்துத்
தனிநாண்மீ னிலைதிரிய
நிலைகாண்மீ னதனெதி ரேர்தரத்
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னா
தளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
யொருமீன் வீழ்த்தன்றால் விசும்பி னானே
யதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந
னோயில னாயி னன்றுமற் றில்லென
வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
வஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவுந்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவுங்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவுங்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவு
மேலோ ருலக மெய்தின னாகலி
னொண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்ற னசைவர்க்
களந்துகொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே.

*இப் புறப்பாட்டும் (229) அது, இதனுட் பாடாண்டலை வனது நாண்மீனை வீழ்மீன் நலிந்தமைப்பற்றிற் கூறியது.*

---

1. ஆடு - மேடம். அழற்குட்டம் - கார்த்திகைநாள். முடப்பனை - அனுடநாள். வேர் - அடி. கயமாகியகுளம் - புனர்பூசம். தனிநாண்மீன் என்றது உத்திரத்தை. நிலைநாண்மீன் என்றது மூலத்தை. தொன்நாண்மீன் என்றது மிருகசீரிடத்தை. பாசி - கீழ்த்திசை. ஊசி - வடதிசை. அளக்கர்த்திணை - பூமி. பூமிக்கு விளக்காகத் தீப்பரக்க என்க.

[1]இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமு, மென்றாங்
கவையளந் தறியினு மளத்தற் கரியை
யறிவு மீரமும் பெருங்கண் ணோட்டமுஞ்
சோறுபடுக்குந் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
யம்புதுஞ்சுங் கடியரணா
லறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
யனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லாம் நின்னஞ் சும்மே. (புறம், 20)

*புதுப்புள் வந்ததும் பழம்புட் போயதுங் கண்டதீங்கின் பயன் நின்மேல் வாராமல் 'விதுப்புற வறியா ஏமக் காப்பினை யாக' என்று ஓம்படை கூறியது. அது மேல் நின்னஞ்சுமென்று அச்சங்கூறி வெளிப்படுத்தனான் உணர்க.*

[2]மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயுந்
தீமுரணிய நீரு, மென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலு மளியு முடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந
வான வரம்பனை நீயோ பெரும

1. முந்நீர் - கடல். குட்டடம் - ஆழம். ஞாலம் - உலகம். வளி - காற்று. வறிது நிலைஇய காயம் - வடிவின்றி நிலைபெற்ற ஆகாயம். ஈரம் - அன்பு. கண்ணோட்டம் - இரக்கம். தெறல் - வெம்மை. திருவில் - இந்திரவில். நாஞ்சில் - கலப்பை. செம்மல் - தலைவ. வயவு - வேட்கைநோய்.

2. மண் - மண்ணணு. ஏந்திய - உயர்ந்த. வளித்தலைஇய - காற்றோடு கூடிய போற்றார் - பகைவர். சூழ்ச்சி - விசாரிப்பு. தெறல் - அழித்தல்.

வலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
யீரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பாஅல்புளிப்பினும் பகலிருளினு
நாஅல்வேத நெறிதிரியினுந்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
யந்தி யந்தண ரருங்கட னிறுக்கு
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே

என்னும் (2) புறப்பாட்டுப் பகை நிலத்தரசற்குப் பயந்தவாறு கூறிப் பின்னர்த் திரியாச் சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பா யென அச்சந்தோன்றக் கூறி ஓம்படுத்தலின் ஓம்படை வாழ்த்தா யிற்று. 'காலனுங் காலம்' என்னும் (41) புறப்பாட்டும் அது.

ஞாலத்துவரூஉம் நடக்கையது குறிப்பிற் கால மூன்றொடு கண்ணிய வருமே - உலகத்துத் தோன்றும் வழக்கினது கருத் தினானே மூன்று காலத்தோடும் பொருந்தக் கருதுமாற்றான் வரும் மேற்கூறி வருகின்ற பாடாண்டிணை என்றவாறு.

என்றது, இவ்வழக்கியல் காலவேற்றுமைப்பற்றி வேறுபடு மாயின் அவையும் இப்பொருள்களின் வேறுபடா என்பது துணர்த் தியவாறு.

அவை, பகைவர் நாட்டுப் பார்ப்பார் முதலியோரை ஆண்டு நின்றும் அகற்றிப் பொருதல் தலையாய அறம்; அதுவன்றிப் பொருள் கருதாது, பாதுகாவாதான் நிரையைத் தான்கொண்டு பாதுகாத்தல் அதனினிழிந்த இடையாய அறம்; அதுவன்றிப் பிறர்க்கு அளித்தற்கு நிரைகோடல் நிகழினும் அஃது அதனினு மிழிந்த கடையாய அறமெனப்படும். இனிப் பகைவன் போற்றாத

---

அளி - அருள். யாணர் - புதுவருவாய். வைப்பு - ஊர். சினைஇ - மாறுபட்டு. ஈரைம்பதின்மர் - நூற்றுவர். அடுக்கம் - மலைப்பக்கம், பாறையுமாம். நவ்விப் பிணை - மான்பிணை போன்று நடுக்கின்றி நிலியர் என முடிக்க. நிலியர் - நிற்பாயாக.

நாட்டைக் கைக்கொண்டு தான் போற்றச் சேறலும் பொருள் வருவாய்பற்றிச் சேறலும் வஞ்சித்துச் சேறலும் போல்வன ஒன்றனி னொன் றிழிந்த ஞாலத்து நடக்கைக் குறிப்பு; மாற்றரசன் முற் கூறியவழி ஆற்றாதோன் அடைந்திருத்தலும் அரசியலாயினும் அவன் வென்றியுள்ளமொடு வீற்றிருத்தலுந் தனக்கு உதவி வர வேண்டியிருத்தலும் ஆற்றலன்றி ஆக்கங் கருதாது காத்தே இருத்தலும் ஒன்றனி னொன் றிழிந்த நடைக்குறிப்பு.

இனி வாகைக்குப் பார்ப்பன ஒழுக்க முதலியன நான்கற்கும் வேறுபட வருதலுங் கொள்க. காஞ்சிக்கும் அவரவர் அறிவிற் கேற்ற நிலையாமை கொள்க, உயிரும் உடம்பும் பொருளு மென்ற மூன்றும் பற்றி. இது பாடாண்டிணையிற் கூறினார், எல்லாத் திணைக்கும் புறனடையாதல் வேண்டி. இனிக் கடவுள் வாழ்த்திற்குத் தலை இடை கடை கோடலும் அறுமுறை வாழ்த் திற்கும் அவற்றின் ஏற்றிழிவுபற்றிக் கோடலும் பிறவுஞ் சான் றோர் செய்யுட்கண் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க. [1]முற்கூறியன வெல்லாம் ஓம்படையுளப்படக் கண்ணிய வருமென்பது. *(36)*

## புறத்திணையியல் முற்றிற்று.

1. முற்கூறியன - முற்கூறிய துறைகள்.

# மூன்றாவது: களவியல்

## (களவொழுக்கம் இவ்வியல்பினதெனல்)

92. இன்பமும் பொருளு மறனு மென்றாங்
கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட்
டுறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே.

*இவ் வோத்துக் களவு கற்பென்னுங் கைகோள் இரண்ட னுட் களவு உணர்த்தினமையிற் களவியலென்னும் பெயர்த் தாயிற்று; பிறர்க்குரித்தென்று இருமுது குரவாற் [1]கொடை யெதிர்ந்த தலைவி அவர் கொடுப்பக் கொள்ளாது இருவரும் [2]கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலின் இது பிறர்க்குரிய பொருளை [3]மறையிற் கொள்ளுங் களவன்றா யிற்று. இது வேதத்தை [4]மறைநூல் என்றாற்போலக் கொள்க.*

களவெனப் படுவ தியாதென வினவின்
வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தன்
முனையெயிற் றமர்நகை மடநல் லோளொடு
தனையவிழ் தண்டார்க் காம னன்னோன்
விளையாட் டிடமென வேறுமலைச் சாரன்
மானினங் குருவியொடு கடிந்துவிளை யாடு
மாயமுந் தோழியு மருவிநன் கறியா
[5]மாயப் புணர்ச்சி யென்மனார் புலவர்.

*இக்களவைக் 'காமப்புணர்ச்சியும்' (498) என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்திற் கூறிய [6]நான்குவகையானும் மேற் கூறுமாறு உணர்க.*

---

1. கொடையெதிர்ந்த - (கொடைநேர்ந்த) கொடுத்தற்கு நியமித்த.
2. கரந்த - மறைந்த.
3. மறையின் - அவர்க்குத் தெரியாமல்.
4. மறை - பிறராலறியப்படாத பொருளுடையது. அதுபோலப் பிறராலறியப்படாது நிகழ்ந்த புணர்ச்சியாதலின் இது களவு என்றாயிற்று என்பது கருத்து.
5. மாயப்புணர்ச்சி - வஞ்சப்புணர்ச்சி (களவுப்புணர்ச்சி).
6. நான்குவகையாவன:- இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப் பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியிற்கூட்டம்.

இன்பத்திற்குப் பொதுவிலக்கணம் அகத்திணையியலுட் கூறி, அதற்கினமாகிய பொருளும் அறனுங் கூறும் புறத்திணையை அதன் புறத்து நிகழ்தலிற் புறத்திணையியலுட்கூறி, ஈண்டு அவ் வின்பத்தினை விரித்துச் சிறப்பிலக்கணங் கூறுதலின் இஃது அகத் திணையியலோடு இயைபுடைத்தாயிற்று. 'வழக்கு... நாடி' என்ற லின் இஃது உலகியலெனப்படும்; உலகத்து மன்றலாவது குரவர் கொடுப்பதற்கு முன்னர் ஒருவற்கும் ஒருத்திக்குங் கண்ணும் மனமுந் தம்முள் இயைவதேயென வேதமுங் கூறிற்றாதலின்.

இச்சூத்திரங் களவெனப்பட்ட ஒழுக்கம் உலகத்துப் பொருள் பலவற்றுள்ளும் இன்பம் பற்றித் தோன்றுமெனவும் அஃது இன்னதாமெனவுங் கூறுகின்றது.

**இ — ள்:** இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு - இன்ப மும் பொருளும் அறனுமென்று முற்கூறிய மூவகைப் பொருள் களுள், அன்பொடு புணர்ந்த ஐந்திணைமருங்கின் - ஒருவனோடு ஒருத்தியிடைத் தோன்றிய அன்போடுகூடிய இன்பத்தின் பகுதி யாகிய புணர்தன் முதலிய ஐவகை ஒழுக்கத்தினுள், காமக்கூட் டங் காணுங்காலை - புணர்தலும் புணர்தனிமித்தமு மெனப்பட்ட காமப் புணர்ச்சியை ஆராயுங்காலத்து; மறைஓர்தேஎத்து மன் றல் எட்டனுள்-வேதம் ஓரிடத்துக் கூறிய மணமெட்டனுள்; துறை அமை நல் யாழ்த் துணைமையோர் இயல்பு - துறை அமைந்த நல்[1]யாழினையுடைய பிரிவின்மையோரது தன்மை என்றவாறு.

அன்பாவது :

[2]அடுமரந் துஞ்சுதோ ளாடவரு மாய்ந்த
படுமணிப் பைம்பூ ணவருந் — தடுமாறிக்
கண்ணெதிர்நோக் கொத்தவன் காரிகையிற் கைகலந்
துண்ணெகிழச் சேர்வதா மன்பு.

மன்றல் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன.

அவற்றுட் பிரமமாவது: ஒத்த [3]கோத்திரத்தானாய் நாற்பத் தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப்

1. யாழினையுடைய பிரிவின்மையோர் - கந்தருவசாதி ஆணும் பெண்ணும்.

2. அடுமரம் - வில்.

3. கோத்திரம் - மரபு.

*பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து (இரண்டா)ம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது:*

**கயலே ரமருண்கண் கன்னிப்பூப் பெய்தி**
**யயல்பே ரணிகலன்கள் சேர்த்தி – யியலி**
**னிரலொத்த வந்தணற்கு நீரிற் கொடுத்தல்**
**பிரமமண மென்னும் பெயர்த்து.**

*பிராசாபத்தியமாவது: மகட்கோடற்கு உரிய கோத்திரத் தார் கொடுத்த [1]பரிசத்து இரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது.*

**அரிமத ருண்க ணாயிழை யெய்துதற்**
**குரியவன் கொடுத்த வொண்பொரு ளிரட்டி**
**[2]திருவின் றந்தை திண்ணிதிற் சேர்த்தி**
**யரியதன் கிளையோ டமைவரக் கொடுத்தல்**
**பிரித லில்லாப் பிராசா பத்தியம்.**

*ஆரிடமாவது: தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற் கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து [3]அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது:*

**தனக்கொத்த வொண்பொரு டன்மகளைச் சேர்த்தி**
**மனைக்கொத்த மாண்புடையாற் பேணி – யினக்கொத்த**
**வீரிடத் தாவை நிறீஇயிடை யீவதே**
**யாரிடத்தார் கண்டமண மாம்.**

*தெய்வமாவது: பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் [4]ஒத்த ஒருவற்கு அவ்வேள்வித் தீமுன்னர்த் தக்கிணையாகக் கொடுப்பது:*

**நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த**
**வேள்வி விளங்கழன் முன்னிறீஇக் – கேள்வியாற்**
**கைவைத்தாம் பூணாளைக் காமுற்றாற் கீவதே**
**தெய்வ மணத்தார் திறம்.**

*ஆசுரமாவது: கொல்லேறுகோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்:*

---

1. பரிசம் - பெண் வீட்டுக்குக் கொடுக்கும் ஆடை ஆபரணம் முதலிய பொருள்கள்.
2. திரு - திருப்போல்வாள் = பெண். கிளை - சுற்றம்.
3. அவற்றிடை - அவற்றினடுவே இருவரையும் நிறுத்திப் போலும்; உதாரணச் செய்யுட் கருத்தை நோக்குக.
4. ஒத்த - இயைந்த, விரும்பிய காட்டுமுதாரணத்துக் காமுற்றாற்கு என வருதல் நோக்குக.

முகையவிழ் கோதையை முள்ளெயிற் றரிவையைத்
தகைநலங் கருதுந் தருக்கின ருளரெனி
[1]னிவையிவை செய்தாற் கெளியண்மற் றிவளெனத்
தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித்
தன்னவை யரற்றிய வளவையிற் றயங்க
றொன்னிலை யசுரந் துணிந்த வாறே.

*இராக்கதமாவது: தலைமக டன்னினுந் தமரினும் பெறாது வலிதிற் கொள்வது:*

மலிபொற்பைம் பூணாளை மாலுற்ற மைந்தர்
வலிதிற்கொண் டாள்வதே யென்ப – வலிதிற்
[2]பராக்கதஞ் செய்துழலும் பாழி நிமிர்தோ
ளிராக்கதத்தார் மன்ற லியல்பு.

*பைசாசமாவது: மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச் சியும் இழிந்தோரளை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம்:*

[3]எச்சார்க் கெளிய ரியைந்த காவலர்
பொச்சாப் பெய்திய பொழுதுகொ ளமையத்து
மெய்ச்சார் பெய்திய மிகுபுகழ் நண்பி
னுசாவார்க் குதவாக் கேண்மை
பிசாசர் பேணிய பெருமைசா லியல்பே.

[4]இடைமயக்கஞ் செய்யா வியல்பின னீங்கி
யுடைமயக்கி யுட்கறுத்த லென்ப – வுடைய
துசாவார்க் குதவாத வூனிலா யாக்கைப்
பசாசத்தார் கண்டமணப் பேறு.

*இனிக் கந்தருவமாவது: கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது:*

[5]அதிர்ப்பில்பைம் பூணாரு மாடவருந் தம்மு
ளெதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப – கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு.

*களவொழுக்கம் பொதுவாகலின் நான்கு வருணத்தார்க்கும் ஆயர் முதலியோர்க்கும் (21) உரித்து. மாலை சூட்டுதலும் இதன்*

---

1. இவை இவை என்றது - கொல்லேறு தழுவல், திரிபன்றி யெய்தல், வில்லேற் றன் முதலியவற்றை.
2. மால் - மயக்கம். பராக்கு - விளையாட்டாக. அதம் - கொலை. பாழி - பருமை.
3. இதன் கருத்து நன்கு புலப்படவில்லை.
4. உடைமயக்கல் - ஆடைமாறுதல். உட்கு - அச்சம்.
5. அதிர்ப்பு - நடுக்கம் = அச்சம். இது பூணாரைவி சேடித்தது.

பாற்படும். வில்லேற்றுதன் முதலியன பெரும்பான்மை அரசர்க் குரித்து. அவற்றுள் ஏறுதழுவுதல் ஆயர்க்கே சிறந்தது. இராக் கதம் அந்தணரொழிந்தோர்க்கு உரித்து; வலிதிற் பற்றிப் புணர்த லின் அரசர்க்கு இது பெருவரவிற்றன்று. பேய் இழிந்தோர்க்கே உரித்து. கந்தருவரின் மக்கள் சிறிது திரிபுடைமையிற் [1]சேட்படை முதலியன உளவாமென்றுணர்க.

அறத்தினாற் பொருளாக்கி அப்பொருளான் இன்ப நுகர் தற் சிறப்பானும் அதனான் இல்லறங் கூறலானும் இன்பம் முற் கூறினார். அறனும் இன்பமும் பொருளாற் பெறப்படுதலின் அதனை இடை வைத்தார். போகமும் வீடுமென இரண்டுஞ் [2]சிறத்தலிற் போகம் ஈண்டுக்கூறி வீடுபெறுதற்குக் காரணம் [3]முற்கூறினார். [4]ஒழிந்த மணங் கைக்கிளையும் பெருந்திணையு மாய் அடங்குதலின் இதனை ‘அன்பொடு’ என்றார். பொருளாற் கொள்ளும் மணமும் இருவர் சுற்றமும் இயைந்துழித் தாமும் இயைதலிற் கந்தருவப்பாற்படும். ஐந்திணைப்புறத்தவாகிய வெட்சி முதலியவற்றிற்கும் அன்பொடு புணர்தலுங் கொள்ளப்படும்.

அறத்திற்கே யன்புசார்பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை (குறள் 76)

என்றலின்.

கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற் பின்றிக் களவே அமையாதென்றற்குத் ‘துறையமை’ என்றார். (1)

**(காமக்கூட்டத்திற்குரியாரியல்பும் அவரெதிர்ப்பாட்டிற்குரிய காரணமும் இவையெனல்)**

**93.** **[5]ஒன்றே வேறே யென்றிரு பால்வயி**
**னொன்றி யுயர்ந்த பால தாணையி**
**னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப**
**மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே.**

---

1. சேட்படை - தோழி தலைவனைச் சேட்படுத்தல்.
2. போகம் - இன்பம்.
3. முன் என்றது - புறத்திணையியலுள்வரும் காஞ்சியானும் அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும் என்னுஞ் சூத்திரத்தானும் வீட்டுக்கு நிமித்தம் கூறியது.
4. ஒழிந்த - கந்தருவமொழிந்த.
5. இச்சூத்திரத்தின் முதலடிக்கு இளம்பூரணருரை நேரிது.

*இது, முற்கூறிய காமக்கூட்டத்திற்கு உரிய கிழவனுங் கிழத்தியும் எதிர்ப்படும் நிலனும் அவ்வெதிர்ப்பாட்டிற்குக் காரணமும் அங்ஙனம் எதிர்ப்படுதற்கு உரியோர் பெற்றியுங் கூறுகின்றது.*

**இ — ள்:** ஒன்றே வேறே என்று இரு பால்வயின் - *இருவர்க்கும் ஓரிடமும் வேற்றிடமும் என்று கூறப்பட்ட இருவகை நிலத்தின் கண்ணும்,* ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் - *உம்மைக் காலத்து எல்லாப் பிறப்பினும் இன்றியமையாது உயிரொன்றி ஒரு காலைக் கொருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய* [1]*பால்வரை தெய்வத்தின் (273) ஆணையாலே,* ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப - *பிறப்பு முதலியன பத்தும் ஒத்த தலைவனுந் தலைவியும் எதிர்ப்படுப,* மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே - *அங்ஙனம் எவ்வாற்றானும் ஒவ்வாது தலைவன் உயர்ந்தோனாயினுங் கடியப்படா என்றவாறு.*

*'என்றிரு பால்வயிற் காண்ப' எனப்* [2]*பால் 'வன்பால் மென்பால்' போல நின்றது. உயர்ந்த பாலை 'நோய்தீர்ந்த மருந்து' போற்கொள்க. ஒரு நிலம் ஆதலை முற்கூறினார், இவ்வொழுக்கத்திற்கு ஓதியது குறிஞ்சி நிலமொன்றுமே ஆதற் சிறப்பு நோக்கி. வேறுநிலம் ஆதலைப் பிற்கூறினார். குறிஞ்சி தன்னுள்ளும் இருவர்க்கும் மலையும் ஊரும் வேறாதலுமன்றித் திணைமயக்கத்தான் மருதம் நெய்தலென்னும் நிலப்பகுதியுள் ஒருத்தி அரிதின் நீங்கிவந்து எதிர்ப்படுதல் உளவாதலுமென வேறுபட்டபகுதி பலவும் உடன் கோடற்கு. ஒரு நிலத்துக் காமப்புணர்ச்சிப் பருவத்தாளாயினாளை ஆயத்தின் நீங்கித் தனித்து ஓரிடத்து எளிதிற் காண்டல் அரிதென்றற்குப் 'பாலதாணையிற் காண்ப' என்றார். எனவே, வேற்று நிலத்துக் காயின் வேட்டை மேலிட்டுத் திரிவான் அங்ஙனந் தனித்துக் காணுங்காட்சி அருமையாற் பாலதாணை வேண்டுமாயிற்று. உதாரணம் :*

இவனிவ ளைம்பால் பற்றவு மிவளிவன்
புன்றலை யோரி வாங்குநள் பரியவுங்
காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா
தேதில சிறுசெரு வுறுப மன்னோ
நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்
றுணைமலர்ப் பிணைய லன்னவிவர்
மணமகி ழியற்கை காட்டி யோயே. (குறுந். 229)

*இஃது ஒரூஉரென்றதாம்.*

---

1. பால் - ஊழ். 2. பால் - இடம்.

காமஞ் செப்பாது கண்டது மொழிமோ (குறுந். 2)

என்றது, என் நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாதே சொல் என்றலிற் குறிஞ்சிநிலம் ஒன்றாயிற்று.

இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை (கலி. 41)

என்புழிப் [1]பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்தென வியந்துகூறித் தமது மலைக்கு நன்றி இயல்பென்றலிற் குறிஞ்சி யுள்ளும் மலை வேறாயிற்று.

செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றா யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
கௌவைநோ யுற்றவர் காணாது கடுத்தசொல்
லொவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே யுரைத்ததை.
(கலி. 76)

இது, மருதத்துத் தலைவி களவொழுக்கங் கூறுவாள் பௌவ நீர்ச் சாய்ப்பாவை தந்தான் ஒருவனென நெய்தனிலத்து எதிர்ப் பட்டமை கூறியது. [2]ஆணைவிதி கைகோளின் முதற்கட் கூறுத லிற் கற்பின்காறும் ஒன்றும் வேறுஞ் செல்லும்பாலது. ஆணை யும் அவ்வாறாம்.

மிகுதலாவது: குலங் கல்வி பிராயம் முதலியவற்றான் மிகுதல். எனவே, அந்தணர், அரசர் முதலிய வருணத்துப் பெண் கோடற் கண் உயர்தலும், அரசர் முதலியோரும் அம்முறை உயர்தலுங் கொள்க. இதனானே அந்தணர் முதலியோர் அங்ஙனம் பெண் கோடற்கட் பிறந்தோர்க்கும் இவ்வொழுக்கம் உரித்தென்று கொள்க. கடி - மிகுதி.

---

1. பொய்த்தல் - நின்னைப் பிரியேனென்றுகூறிப் பிரிதல்; அதனாற் பொய்த்தவன் என்றாள். பொய் கூறினவனுடைய மலையில் மழைபெய்து அருவி பெருகல் கூடாதாகவும் பெருகல் வியப்பு என்றபடி. தனது நன்றியை மறந்து பொய்த் தவன் மலை எனவேதான் நன்றியுடையாள் என்று கருதினாளாயிற்று. அது பற்றித் தமது மலைக்கு நன்றி இயல்பென்றாள் என்றார்.

2. ஆணை - விதி என்றிருத்தல்வேண்டும். இது இவ்வாக்கியத்தின் பின்வருதல் நலம். ஒன்றையும் வேறையும் முதற்கட்கூறலின், அவை (ஒன்றும் வேறும்) கற்பின்காறும் செல்லும் என்பது கருத்தாதலின், செல்லும் என்பதில் முற்றுப் புள்ளியிடுதல் வேண்டும். பாலது என்பது ஆணையோடு சேருதல் வேண்டும். இது (பாலதாணை) சூத்திரத்து வந்த சொல். அவ்வாறாம் என்றது கற்பின் காறுஞ் செல்லும் என்றபடி.

அவர் அங்ஙனங் கோடற்கண் [1]ஒத்த மகளிர் பெற்ற புதல்வரோடு ஒழிந்த மகளிர் பெற்ற புதல்வர் ஒவ்வாரென்பது உணர்த்தற்குப் பெரிதும் வரையப்படாதென்றார். பதினாறு தொடங்கி [2]இருபத்துநான்கு ஈறாகக் கிடந்த யாண்டொன்பதும் ஒரு பெண் கோடற்கு மூன்றியாண்டாக அந்தணன் உயருங் கந்தருவ மணத்து; ஒழிந்தோராயின் அத்துணை உயரார். இருபத்து நான்கிரட்டி நாற்பத்தெட்டாதல் பிரம முதலியவற்றான் உணர்க. 'வல்லெழுத்து மிகுதல்' என்றாற்போல மிகுதலைக் கொள்ளவே பிராயம் இரட்டியாயிற்று. கிழத்தி மிகுதல் அறக்கழிவாம். 'கிழவன் கிழத்தி' எனவே பல பிறப்பினும் ஒருவர்க்கு ஒருவர் உரிமை எய்திற்று. இங்ஙனம் ஒருமை கூறிற்றேனும் 'ஒருபாற் கிளவி' (222) என்னுஞ் சூத்திரத்தான் நால்வகை நிலத்து நான்கு வருணத்தோர் கண்ணும் ஆயர் வேட்டுவர் முதலியோர் கண்ணுங் கொள்க.

இச்சூத்திரம் 'முன்னைய நான்கும்' (52) எனக் கூறிய காட்சிக்கு இலக்கணங் கூறிற்றென்றுணர்க. உதாரணம்:

**கருந்தடங்கண் வண்டாகச் செவ்வாய் தளிரா**
**வரும்பிவர் மென்முலை தொத்தாப்... பெரும்பணைத்தோட்**
**பெண்டகைப் பொலிந்த [3]பூங்கொடி**
**கண்டேங் காண்டலுங் களித்தவெங் கண்ணே. (பு. வெ. கைக். 1)**

இக் காட்சிக்கண் தலைவனைப்போல் தலைவி வியந்து கூறுதல் [4]புலனெறிவழக்கன்மை உணர்க. (2)

**(ஐயம் நிகழுமிட மிதுவெனல்)**

**94. [5]சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப**
**விழிந்துழி யிழிபே சுட்ட லான.**

இஃது எய்தாத தெய்துவித்து எய்தியதை விலக்கிற்று, 'முன்னைய நான்கும்' (52) என்றதனாற் கூறிய ஐயந் தலைவன்

1. ஒத்த - குலத்தாலொத்த.
2. இருபத்துநான்கு ஆண்டு உயர்ச்சிகொண்டது பெண்ணுக்குப் பன்னிரண்டு ஆண்டு கொண்டமையின். பெண்ணின் இரட்டி ஆணுக்குக் கொள்ளலாம் என்றபடி.
3. பூங்கொடி - பூங்கொடிபோல்வாள்.
4. புலனெறிவழக்கு - செய்யுள் வழக்கு.
5. இளம்பூரணர் வேறு கூறுவர்.

கண்ணதே எனவும், தலைவிக்கு நிகழுமோ என்னும் ஐயத்தை விலக்குதலும் கூறலின்.

இ – ள்: சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப - அங்ஙனம் எதிர்ப் பாட்டின் இருவருள்ளுஞ் சிறந்த தலைவன்கண்ணே ஐயம் நிகழ்தல் சிறந்ததென்று கூறுவார் ஆசிரியர், இழிந்துழி இழிபே சுட்டலான - அத்தலைவனின் இழிந்த தலைவிக்கண் ஐயம் நிகழுமாயின் இன்பத்திற்கு இழிவே அவள்கருதும் ஆதலான் என்றவாறு.

தலைவற்குத் தெய்வமோ அல்லளோவென நிகழ்ந்த ஐயம், நூன் முதலியவற்றால் நீக்கித் தெய்வமன்மை உணர்தற்கு அறிவுடையனாதலும், **தலைவிக்கு முருகனோ இயக்கனோ மகனோ வென ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவியிலள்** ஆகலானும் இங்ஙனம் கூறினார். தலைவிக்கு ஐயம் நிகழின் அச்சமேயன்றிக் காமக்குறிப்பு நிகழாதாம். மகடூஉவின் ஆடூஉச் சிறத்தல்பற்றிச் 'சிறந்துழி' என்றார். உதாரணம்:

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. (குறள். 1081) (3)

**(ஐய நீங்கித் தெளிதற்குரிய காரணம் இவையெனல்)**

**95.** **வண்டே யிழையே வள்ளி பூவே**
**கண்ணே யலமர லிமைப்பே யச்சமென்**
**றன்னவை பிறவு மாங்கவ ணிகழ**
**நின்றவை களையுங் கருவி யென்ப.**

இஃது ஐயுற்றுத் தெளியுங்கால் [1]இடையது ஆராய்ச்சியாதலின் ஆராயுங் கருவி கூறுகின்றது. வண்டு முதலியன வானகத்தனவன்றி மண்ணகத்தனவாதல் நூற்கேள்வியானும் உய்த்துணர்ச்சியானும் தலைமக்கள் உணர்ப.

இ – ள்: வண்டே - பயின்றதன்மே லல்லது செல்லாத தாது ஊதும் வண்டு, இழையே - ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலன்கள், [2]வள்ளி - முலையினுந் தோளினும் எழுதுந் தொய்யிற் கொடி, பூவே - கைக்கொண்டு மோந்து உயிர்க்கும் கழுநீர்ப்பூ,

1. இடையது - இடையில் நிகழ்வது.
2. வள்ளி - வல்லி = கொடி. லகரமும் ளகரமும் ஒற்றுமை பற்றி மாறிவரும்.

*கண்ணே - வான் கண்ணல்லாத ஊன்கண், அலமரல் - கண்டறி யாத வடிவுகண்ட அச்சத்தாற் பிறந்த தடுமாற்றம், இமைப்பே - அக்கண்ணின் இதழ் இமைத்தல், அச்சம் - ஆண்மகனைக் கண்டுழி மனத்திற் பிறக்கும் அச்சம், என்று அன்னவை பிறவும், - என்று அவ்வெண்வகைப் பொருளும் அவைபோல்வன பிறவும், அவண் நிகழ நின்றவை - அவ்வெதிர்ப்பாட்டின்கண் தான் முன்பு கண்ட வரையர மகள் முதலிய [1]பிழம்புகளாய் ஈண்டுத் தன் மனத்து நிகழ நின்ற அப்பிழம்புகளை, ஆங்குக் களையும் கருவி என்ப - முந்துநூற்கண்ணே அவ்வையம் நீக்குங் கருவியா மென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.*

*எனவே, எனக்கும் அது கருத்தென்றார். இவையெல்லாம் மக்கட்குரியனவாய் நிகழவே தெய்வப்பகுதிமேற்சென்ற ஐயம் நீக்கித் துணியும் உள்ளம் பிறத்தலின் துணிவும் உடன் கூறிற்றே யாயிற்றே.*

*இனி, 'அன்னபிற' ஆவன:- கால்நிலந்தோய்தலும் [2]நிழலீடும் வியர்த்தலும் முதலியன.*

[3]திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயு – மரிபரந்த
போகித ழுண்கணு மிமைக்கு
மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே. (பு. வெ. கைக். 3)

*இக்காட்சி முதலிய நான்கும் அகனைந்திணைக்குச் சிறப் புடைமையும் இவை கைக்கிளை யாமாறும் 'முன்னைய நான் கும்' (52) என்புழிக் கூறினாம். இங்ஙனம் ஐயந்தீர்ந்துழித் தலை வியை வியந்து கூறுதலுங் கொள்க. (4)*

### *(வழிநிலைக்காட்சி இதுவெனல்)*

**96.** **நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்**
**கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.**

*இஃது அங்ஙனம் மக்களுள்ளாளெனத் துணிந்துநின்ற தலை வர் பின்னர்ப் புணர்ச்சி வேட்கை நிகழ்ந்துழித் தலைவியைக்*

---

1. பிழம்பு - வடிவு.
2. நிழலீடு - நிழலிடுதல், மக்களுடம்புக்கு நிழலீடுளதாதலின் தெய்வயாக்கை அன்றென்பது துணியப்படும்.
3. வேர் - வியாவை. கோதை -மாலை. அரி - செவ்வரி கருவரி. போகு - நீண்ட. அகலிடம் - பூமி

கூடற்குக் கருதி உரை நிகழ்த்துங்காற் கூற்றுமொழியான் அன்றிக் கண்ணான் உரை நிகழ்த்துமென்பதூஉம் அதுகண்டு தலைவியும் அக்கண்ணானே தனது வேட்கை புலப்படுத்திக் கூறுமென் பதூஉங் கூறுகின்றது. எனவே இது புணர்ச்சிநிமித்தமாகிய வழி நிலைக்காட்சி கூறுகின்றதாயிற்று.

**இ – ள்:** அறிவு - தலைவன் அங்ஙனம் மக்களுள்ளாளென்று அறிந்த அறிவானே, உடம்படுத்தற்கு - தலைவியைக் கூட்டத்திற்கு உடம்படுத்தற்கு, நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்கும் - தன்னுடைய நோக்கம் இரண்டானுங் கூட்டி வார்த்தைசொல் லும், குறிப்புரை நாட்டம் இரண்டும் ஆகும் - அவ்வேட்கை கண்டு தலைவி தனது வேட்கைபுலப்படுத்திக் கூறுங் கூற்றுந் தன்னுடைய நோக்கம் இரண்டானுமாம் என்றவாறு.

'நாட்டமிரண்டும்' இரண்டிடத்துங் கூட்டுக. உம்மை விரிக்க. இங்ஙனம் இதற்குப் பொருள்கூறல் ஆசிரியர்க்குக் கருத்தாதல் 'புகுமுகம் புரிதல்' (261) என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத் தானுணர்க; அதற்குப் பேராசிரியர் கூறிய உரையானுமுணர்க. ஒன்று ஒன்றை ஊன்றி நோக்குதலின் நாட்டமென்றார். [1]நாட்டு தலும் நாட்டமும் ஒக்கும். உதாரணம்:

> [2]நோக்கினா ணோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு
> தானைக்கொண் டன்ன தடைத்து. (குறள். 1082)

இது புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடு கூறியது. (5)

**(புணர்ச்சியமைதி இவற்றான் நிகழுமெனல்)**

**97.** குறிப்பே குறித்தது கொள்ளு மாயி
னாங்கவை நிகழு மென்மனார் புலவர்.

இது புணர்ச்சியமைதி கூறுகின்றது.

இ - ள்: குறித்தது - தலைவன் குறித்த புணர்ச்சி வேட்கை யையே, குறிப்புக் கொள்ளுமாயின் - தலைவி கருத்துத் திரிவு படாமற் கொள்ளவற்றாயின், ஆங்கு - அக்குறிப்பைக் கொண்ட

---

1. நாட்டுதல் - நிலைநிறுத்தல் = ஊன்றிநோக்கல். அவள் நோக்கின்கண் தன்நோக்கை நிலைநிறுத்தல் எனவே ஊன்றி நோக்குதலாயிற்று.

2. தாக்கு அணங்கு - தானே தாக்கி வருத்துதெய்வம். தானை-படை.

*காலத்து, அவை நிகழும் என்மனார் புலவர் - புகுமுகம் புரிதன் முதலாய் இருகையுமெடுத்தல் ஈறாகக்கிடந்த மெய்ப்பாடு பன்னி ரண்டனுட் (261 - 263) பொறிநுதல் வியர்த்தல் முதலிய பதினொன் றும் முறையே நிகழுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

*'அங்கவை'யும் பாடம். பன்னிரண்டாம் மெய்ப்பாடாகிய இருகையு மெடுத்தல் கூறவே முயக்கமும் உய்த்துணரக் கூறிய வாறு காண்க. அம் மெய்ப்பாட்டியலுட் கூறிய மூன்று சூத்திரத் தையும் ஈண்டுக் கூறியுணர்க. உதாரணம்:*

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்செற்க
ளென்ன பயனு மில. (குறள். 1100)

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
[1]செம்பாக மன்று பெரிது. (குறள். 1092)

*இதனை நான்கு வருணம் ஒழிந்தோர்க்குங் கொள்க. உதாரணம்;*

[2]பானலந் தண்கழிப் பாடறிந்து தன்னைமார்
நூனல நுண்வலையா னொண்டெடுத்த – கானற்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் ணோக்கங்
கடிபொல்லா வென்னையே காப்பு. (திணை. நூற். 32)

*இனி, [3]முயங்கி மகிழ்ந்து கூறுவன:*

[4]கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையோ டிடைப்பட விரைஇ
யைதுதொடை மாண்ட கோதை போல
நறிய னல்லோண் மேனி
முறியினும் வாயது முயங்கற்கு மினிதே. (குறுந். 62)

தம்மி லிருந்து தமது[5]பாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு. (குறள். 1107)

*உரையிற் கோடலான் மொழிகேட்க விரும்புதலுங் கூட்டிய தெய்வத்தை வியந்து கூறலும் வந்துழிக் காண்க.* *(6)*

---

1. செம்பாகம் - சமபாகம்.
2. பானல் - நெய்தல். தன்னைமார் - தன் தமையன்மார். நொண்டு - முகந்து. கடிபுஒல்லா - காக்கமாட்டா. என்னையே காப்பு - என்னையே காக்கும் அத்துணை.
3. முயங்கி - புணர்ந்து; தழுவி
4. கோடல் - காந்தள். எதிர்தல் - தோற்றுதல். ஐது - அழகியது. தொடை - தொடுத்தல். முறி - தளிர். வாயது - வாய்த்தலுடையது - சிறந்தது.
5. பாத்து - பகுத்து. தமதுபாத்துஉண்டற்று - தம்பொருளைப் பகுத்துத் தமது கூற்றை உண்டாற்போலும். தமது - தம்முடைய பொருள்.

**(தலைவன்கண் உள்ளப்புணர்ச்சி மாத்திரை நிகழ்த்தலு முண்டென்றற்குக் காரணங் கூறல்)**

**98.** பெருமையு முரனு மாடூஉ மேன.

இத்துணை மெய்யுறு புணர்ச்சிக்கு உரியனவே கூறி, இனி உள்ளப் புணர்ச்சியே நிகழ்ந்துவிடும் பக்கமும் உண்டென்பதூ உம் இவ்விருவகைப் புணர்ச்சிப் பின்னர்க் களவின்றி வரைந்து கோடல் கடிதில் நிகழ்தலுண்டென்பதூஉம் உணர்த்துகின்றது.

**இ — ள்:** பெருமையும் - அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவமஞ்சுதலும் முதலியனவாய் மேற்படும் பெருமைப்பகுதியும், [1]உரனும் - கடைப் பிடியும் நிறையுங் கலங்காதுதுணிதலும் முதலிய வலியின் பகுதியும், ஆடூஉமேன - தலைவன் கண்ண என்றவாறு.

இதனானே உள்ளப் புணர்ச்சியே நிகழ்ந்து வரைந்து கொள்ளும் உலகவழக்கும், மெய்யுறு புணர்ச்சி நிகழ்ந்துழியுங் களவு நீட்டியாது வரைந்து கோடலும் உள்ளஞ் சென்றுழியெல்லாம் நெகிழ்ந்தோடாது ஆராய்ந்து ஒன்றுசெய்தலும் மெலிந்த உள்ளத்தானாயுந் தோன்றாமல் மறைத்தலுந், தீவினையாற்றிய பகுதியிற்சென்ற உள்ளம் மீட்டலுந் தலைவற்கு உரியவென்று கொள்க. உதாரணம் :

> சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
> நன்றின்பா லுய்ப்ப தறிவு. (குறள். 422)

பெருமை நிமித்தமாக உரன் பிறக்கும்; அவ்வுரனான் மெய்யுறு புணர்ச்சி இலனாதலும் உரியனென இதுவும் ஓர்விதி கூறிற்று. தலைவிக்கு மெய்யுறு புணர்ச்சி நடக்கும் வேட்கை நிகழாமைக்கும் காரணம் மேற்கூறுப. [2]இனி இயற்கைப்புணர்ச்சி இடையீடு பட்டுழி இடந்தலைப்பாட்டின்கண் வேட்கை தணியாது நின்று கூடுப வென்றும் ஆண்டு இடையீடுபட்டுழிப் பாங்கனாற் கூடுபவென்றும் உரைப்போரும் உளர். அவர் அறியாராயினார்; என்னை? அவ்விரண்டிடத்தும் இயற்கைப் புணர்ச்சிக்கு உரிய மெய்ப்பாடுகள் நிகழ்ந்தே கூடவேண்டுதலின் அவற்றையும் இயற்கைப் புணர்ச்சியெனப் பெயர் கூறலன்றிக் காமப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கொடு தழாஅலும் என ஆசிரியர் வேறு வேறு பெயர் கூறாரென்றுணர்க. (7)

---

1. உரன் - அறிவின்வலி. கடைப்பிடி - உறுதியாகப்பிடித்தல்.

2. இவ்வாறு கூறுபவர் இளம்பூரணர். தொல், களவியல் 1ம் சூத்திரத்து விரிவுரையுள் அவர் இவ்வாறு கூறுதல் காண்க.

**(தலைவிகண்ணும் அவ்வுள்ளப்புணர்ச்சியளவில் நிகழ்தற்குக் காரணங் கூறல்)**

**99.** அச்சமு நாணு மடனுமுந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப.

*இது, மேலதே போல்வதோர் விதியை உள்ளப்புணர்ச்சி பற்றித் தலைவிக்குக் கூறுகின்றது.*

**இ — ள்:** *அச்சமும் - அன்பு காரணத்திற்றோன்றிய உட்கும், நாணும் - காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப்படுவதோர் உள்ளவொடுக் கமும், மடனும் - செவிலியர் கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமையும், முந்துறுத்த - இம்மூன்று முதலியன; நிச்சமும் பெண்பாற்கு உரியவென்ப - எஞ்ஞான்றும் பெண்பாலார்க்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.*

'முந்துறுத்த' என்றதனாற் கண்டறியாதன கண்டுழி மனங் கொள்ளாத பயிர்ப்பும், செயத்தகுவது அறியாத பேதைமையும், நிறுப்பதற்கு நெஞ்சுண்டாம் நிறையுங் கொள்க. மடன் குடிப் பிறந்தோர் செய்கையாதலின் அச்சமும் நாணும்போல மெய் யுறுபுணர்ச்சியை விலக்குவதாம். தலைவி உடையளெனவே, தலைவன் பெருமையும் உரனும் உடையனாய் வேட்கைமீதூர வும் பெறுமாயிற்று. இவை இவட்கு என்றும் உரியவாயின் இயற் கைப் புணர்ச்சிக்கு உரியளல்லளாமாயினும் இவ்விலக்கணத்தில் திரியாது நின்றேயும் புணர்ச்சிக்கு உரியளாமென்றற்குப் பன்னி ரண்டு மெய்ப்பாடுங் கூறினார். இவற்றானே, புணர்ச்சி பின்னர்ப் பெறுதுமெனத் தலைவனைப்போல ஆற்றுவாளாயிற்று. இரு வர் கண்ணுற்றுக் காதல் கூர்ந்தவழியெல்லாங் கந்தருவமென்பது வேத முடிபாதலின் இவ்வுள்ளப்புணர்ச்சியுங் கந்தருவமாம். ஆதலான் அதற்கு ஏதுவாகிய பெருமையும் உரனும் அச்சமும் நாணும் போல்வன கூறினார். இச்சூத்திரம் இரண்டும் நாடக வழக்கன்றிப் பெரும்பான்மை உலகியல் வழக்கே கூறலின் இக் கந்தருவம் இக் களவியற்குச் சிறப்பன்று, இனிக் கூறுவன மெய் யுறுபுணர்ச்சிபற்றிய களவொழுக்கமாதலின். (8)

**(களவிற்குரிய பொதுவிலக்கணம் இவையெனல்)**

**100.** வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.

இது முதலாகக் களவிலக்கணங் கூறுவார் இதனான் இயற்கைப் புணர்ச்சிமுதற் களவு வெளிப்படுந்துணையும் இருவர்க்கும் உளவாம் இலக்கணம் இவ்வொன்பதுமெனப் பொதுவிலக்கணங் கூறுகின்றார்.

**இ – ள்:** [1]ஒருதலைவேட்கை - புணராத முன்னும் புணர்ந்த பின்னும் இருவர்க்கும் இடைவிட்டு நிகழாது ஒருதன்மைத்தாகி நிலைபெறும் வேட்கை, ஒருதலை உள்ளுதல் - இடைவிடாது ஒருவர் ஒருவரைச் சிந்தியாநிற்றல், மெலிதல் - அங்ஙனம் உள்ளுதல் காரணத்தான் உடம்பு வாடுதல், ஆக்கஞ் செப்பல் - யாதானும் ஓர் இடையூறு கேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக்கோடல், நாணுவரையிறத்தல் - ஆற்றுந்துணையும் நாணி அல்லாத வழி அதன்வரையிறத்தல், நோக்குவ எல்லாம் அவையே போறல் - பிறர் தம்மை நோக்கிய நோக்கெல்லாந் தம்மனத்துக் கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்றாரெனத் திரியக் கோடல், மறத்தல் - விளையாட்டு முதலியவற்றை மறத்தல், மயக்கம் - செய்திறன் அறியாது கையற்றுப் புள்ளும் மாவும் முதலியவற்றோடு கூறல், சாக்காடு - மடலேறுதலும் வரைபாய்தலும் போல்வன கூறல், என்று அச்சிறப்பு உடை மரபினவை களவு என மொழிப - என்று சொல்லப்பட்ட அந்தச் சிறப்புடைத்தான முறையினையுடைய ஒன்பதுங் களவொழுக்கமென்று கூறுப என்றவாறு.

இயற்கைப்புணர்ச்சிக்கு இயைபுடைமையின் வேட்கை முற்கூறினார்.

[2]சேட்படுத்தவழித் தலைவன் அதனை அன்பென்று கோடாலும், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கியவழித் தலைவி அதனை அன்பென்று கோடலும் போல்வன ஆக்கஞ்செப்பல். தலைவன் பாங்கற்குந் தோழிக்கும் உரைத்தலும், தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும் போல்வன நாணுவரைபிறத்தல். களவதிகாரமாதலின் [3]'அவை' யென்னுஞ் சுட்டுக் களவையுணர்த்தும், கையுறைபுனைதலும் வேட்கை மேலிட்டுக் [4]காட்டுத் திரிதலுந்

1. ஒருதலை - நிச்சயம் = உறுதி.
2. சேட்படை - தோழிக்குரியது.
3. அவை - நோக்குவவெல்லாம் அவையே போறல் என்பதில் அவை.
4. காட்டு - காட்டுள் என்றிருப்பது நலம்.

*தலைவற்கு மறத்தல்; கிளியும் பந்தும் முதலியனகொண்டு விளை யாடுதலைத் தவிர்ந்தது தலைவிக்கு மறத்தல். சாக்காடாவன:*

[1]அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப
விம்மை மாறி மறுமை யாயினு
நீயா கியரெங் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே. (குறுந். 49)

[2]நிறைந்தோர்த் தேரு நெஞ்சமொடு குறைந்தோர்ப்
பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉ
நயனின் மாக்கள் போல வண்டினம்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
மையின் மானின் மருளப் பையென
வெந்தாறு பொன்னி னந்தி பூப்ப
வையறி வகற்றுங் கையறு படரோ
டகலிரு வான மம்ம மஞ்சினம்
பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலைக்
காதலற் பிரிந்த புலம்பி னோதக
வாரகு ருறுந ரருநிறஞ் சுட்டிக்
கூரெஃ கெறிஞரி னலைத்த லானா
தெள்ளற வியற்றிய நிழல்காண் மண்டிலத்
துள்ளூ தாவியிற் பைப்பய நுணுகி
மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்
திதுகொல் வாழி தோழி யென்னுயிர்
விலங்குவெங் கடுவளி யெடுப்பத்
துலங்குமரப் புள்ளிற் றுறக்கும் பொழுதே. (அகம். 71)

*[3]இவை தலைவி சாக்கடாயின. மடலேறுவலெனக் கூறுதன் மாத்திரையே தலைவற்குச் சாக்காடு. இவை சிறப்புடையவெனவே*

---

1. முள் அணிற் பல்லையொத்தது ஆதலின் அணிற்பல்லன்ன என்றார். கொங்கு - பூந்தாது. முண்டகம் - முள்ளிச்செடி. மணி - நீலமணி. நின்நெஞ்சு நேர்பவள் - நின்மனத்திற்கொத்த காதலி. ஆகியர் - ஆகுக.

2. நிறைந்தோர் - செல்வநிறைந்தோர். ஒரூஉம் - நீங்கும். போலநீத்துப்படர என இயைக்க. மருள - மயங்க; வருந்த வெந்து - உலையிற் காய்ந்து. அந்தி - செவ்வானம். ஐஅறிவு - வியக்கத்தக்க அறிவு. கையறுபடரொடு - செயலற்ற துன்பத்தோடு. அம்மஞ்சு - அழகிய மேகம். பகலாற்றுப்படுத்த - ஞாயிற் றைப் போக்கிய. பழங்கண் - துன்பம். புலம்பின்நோதக - தனிமையால் வருந் தியிருப்ப. அருநிறம் சுட்டி - அரிய மார்பைக்குறித்து. எஃகு - வேல். வருந்த அலைத்தல் அமையது என இயைக்க. நிழல்காண்மண்டிலம் - கண்ணாடி. மதுகை - வலி. என்னுயிர் துறக்கும்பொழுது இதுகொல் என முடிக்க, கடுவளி - சூறாவளி. எடுப்ப - அலைப்ப.

3. இவை தலைவி சாக்காடு என்றது இச்செய்யுள்கள் தலைவி தன் சாக்காடு கூறும் பொருளுடைய என்றபடி. அவ்வாறாதல், இம்மை மாறி மறுமையினும் என்பதனானும், என்னுயிர் ... துறக்கும்பொழுது இதுகொல்' என்பதனானும் அறிக.

களவு சிறப்புடைத்தாம். இவை கற்பிற்கு ஆகா. இருவர்க்கும் இவை தடுமாறி வருதலின் 'மரபினவை' யெனப் பன்மை கூறினார். (9)

**(இயற்கைப் புணர்ச்சிப்பின் தலைவன்கண் நிகழ்வன இவையெனல்)**

101. முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்த
னன்னய முரைத்த னகைநனி யுறாஅ
தந்நிலை யறிதன் மெலிவுவிளக் குறுத்த
றந்நிலை யுரைத்த றெளிவகப் படுத்தலென்
றின்னவை நிகழு மென்மனார் புலவர்.

இஃது இன்பமும் இன்பநிலையின்மையுமாகிய [1]புணர்தல் பிரிதல் கூறிய முறையானே இயற்கைப்புணர்ச்சி முற்கூறி அதன் பின்னர்ப் பிரிதலும் பிரிதனிமித்தமுமாய் அத்துறைப் படுவன வெல்லாம் தொகுத்துத் தலைவற்கு உரியவென்கின்றது.

இ – ள்: முன்னிலையாக்கல் - முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கோடல், சொல் வழிப்படுத்தல் - அச்சொல்லாதவற்றைச் சொல்லுவனபோலக் கூறுதல், நன்னயம் உரைத்தல் - அவை சொல்லுவனவாக அவற் றிற்குத் தன் கழி பெருங்காதல் கூறுவானாய்த் தன்னயப்புணர்த்து தல், நகை நனி உறாஅது அந்நிலை அறிதல் - தலைவி மகிழ்ச்சி மிகவும் எய்தாமற் புணர்ச்சிக்கினமாகிய பிரிவுநிலைகூறி அவள் ஆற்றுந்தன்மை அறிதல், மெலிவு விளக்குறுத்தல் - இப்பிரிவால் தனக்குள்ள வருத்தத்தைத் தலைவி மனங்கொள்ளக் கூறுதலுந் தலைவி வருத்தங் குறிப்பான் உணர்ந்து அது தீரக் கூறுதலும், தம் நிலை உரைத்தல் - நின்னொடு பட்ட தொடர்ச்சி எழுமையும் வருகின்றதெனத் தமது நிலை உரைத்தல் தெளிவு அகப்படுத்தல் - நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேன், பிரியின் அறனல்லது செய் கேனாவலெனத் தலைவி மனத்துத் தேற்றம்படக் கூறுதல், என்று இன்னவை நிகழும் என்மனார் புலவர் - என்று இக்கூறிய ஏழும் பயின்றுவரும் இயற்கைப் புணர்ச்சிப்பின் தலைவற்கு என்றவாறு.

முற்கூறிய மூன்றும் நயப்பின்கூறு. இஃது அறிவழிந்து கூறாது தலைவி கேட்பது காரியமாக வண்டு முதலியவற்றிற்கு உவகை

1. 'புணர்தல் பிரிதல்' அகத்திணையியல் 14ம் சூத்திரம்.

பற்றிக் கூறுவது. 'நன்னயம்' எனவே எவரினுந் தான் காதலனாக உணர்த்தும். இதன் பயன்: புணர்ச்சியெய்தி நின்றாட்கு இவன் எவ்விடத்தான் கொல்லோ! இன்னும் இது கூடுங்கொல்லோ! இவன் அன்புடையன் கொல்லோ! என நிகழும் ஐய நீங்குதல். இது பிரிதனிமித்தம். இவன் பிரியாவிடின் இவ்வொழுக்கம் புறத் தார்க்குப் புலனாம்; ஆண்டு யாம் இறந்துபடுதலின் இவனும் இறந்து படுவனெனக் கருதப் பிரிவென்பதும் ஒன்று உண்டெனத் தலைவன் கூறுதல் அவட்கு மகிழ்ச்சியின்றென்பதுதோன்ற 'நகை நனியுறாது' என்றார். 'புணர்தல் பிரிதல்' (14) எனக் கூறிய சூத்திரத் திற் புணர்தலை முற்கூறி ஏனைப் பிரிவை 'அந்நிலை' என்று ஈண்டுச் சுட்டிக் கூறினார். இதனால் தலைவிக்குப் பிரிவச்சங் கூறினார். தண்ணீர்வேட்டு அதனை உண்டு உயிர்பெற்றான் இதனான் உயிர்பெற்றேமெனக் கருதி அதன்மாட்டு வேட்கை நீங்காதவாறுபோலத், தலைவிமாட்டு வேட்கையெய்தி அவளை அரிதிற்கூடி உயிர்பெற்றானாதலின், இவளான் உயிர்பெற்றே மென்றுணர்ந்து, அவண்மேல் நிகழ்கின்ற அன்புடனே பிரியு மாதலின் தலைவற்கும் பிரிவச்சம் உளதாயிற்று. இங்ஙனம் அன்பு நிகழவும் பிறர் அறியாமற் பிரிகின்றேனென்பதனைத் தலைவிக்கு மனங்கொள்ளக் கூறுமென்றற்கு 'விளக்குறுத்தல்' என்றார். இத னானே வற்புறுத்தல் பெற்றாம். அஃது அணித்து எம்மிட மென் றும் பிறவாற்றானும் வற்புறுத்தலாம். மேலனவும் பிரிதனிமித்தம். உதாரணம்:

> [1]கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
> காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
> பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
> செறியெயிற் றரிவை கூந்தலி
> னறியவு முளவோ நீயறியும் பூவே. (குறுந். 2)

இதனுள் 'தும்பி' என்றது முன்னிலையாக்கல்; 'கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல்; 'கூந்தலின் நறியவும் உளவோ' என்றது நன்னயமுரைத்தல்; 'காமஞ்செப்பாது' என்றது என்னிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாது மெய்கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித்தென்றது; 'பயிலியது நட்பு' என்றது தந்நிலை யுரைத்தல்.

1. கொங்கு - பூந்தாது. காமம் - விருப்பம். பயிலியது கெழீஇய - பயிலுதல் பொருந்திய, கூந்தலின் - கூந்தலினும்பார்க்க, நறிய - நறுமணமுடையன.

[1]பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொ
டுடனுயிர் போகுக தில்ல கடனறிந்
திருவே மாகிய வுலகத்
தொருவே மாகிய புன்மைநா முயற்கே. (குறுந். 57)

*'முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப் போந்தனம், இவ்வுலகிலே இப்புணர்ச்சிக்கு முன்னர் யாம் வெவ்வேறாயுற்ற துன்பத்தினின்று நாமே நீங்குதற்கு எய்திய பிரிவரிதாகிய காமத்துடனே இருவர்க்கும் உயிர் போவதாக. இஃதெனக்கு விருப்பமென்றான்' என்பதனால் தந்நிலையுரைத்தலும் பிரிவச்சமுங் கூறிற்று.*

குவளை நாறுங் குவையிருங் கூந்த
லாம்ப னாறுந் தேம்பொதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரைக் கொங்கி னன்ன
[2]நுண்பஃ றுத்தி மாஅ யோயே
நீயே, அஞ்ச லென்றவென் சொல்லஞ் சலையே
யானே, குறுங்கா லன்னங் குலவுமணற் சேக்குங்
கடல்சூழ் மண்டிலம் பெறினும்
விடல்சூ ழலன்யா னின்னுடை நட்பே. (குறுந். 300)

*இது நயப்பும் பிரிவச்சமும் வன்புறையுங் கூறிற்று.*

[3]யாயு ஞாயும் யாரா கியரோ
வெந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதுஞ்
செம்புலப் பெய்ந்நீர் போல
வன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே. (குறுந். 40)

*இது பிரிவரெனக் கருதிய தலைவி குறிப்புணர்ந்து தலைவன் கூறியது.*

---

1. மகன்றில் - நீர்வாழ் பறவையுளொன்று. தண்டா - குறையாத. உயற்குப் போகுக என இயைக்க. இதனைத் தலைவி கூற்றாக்குவர். குறுந்தொகைக்குத் துறை வகுத்தோர். ஆயின் நச்சினார்க்கினியர் கருத்துப் பொருத்தமாகும். என்னை? தலைவி தலைவனுயிரையும் கூட்டிக் கூறல் சிறப்பின்றாகலின். குறுந்தொகை யுரையுட் கீழ்க்குறிப்பு நோக்குக.

2. துத்தி - தேமல். மாயோய் - மாமைநிறமுடையோய். அஞ்சல் - பிரிவேனென்று அஞ்சாதேகொள். கூந்தலையும் வாயையும் கூறலினானும் மாயோய் என்றதனானும் நயப்பும், விடல்சூழலன் என்பதனான் பிரிவச்சமும், அஞ்சலை என்பதனான் வன்புறையுங் கூறினான் என்க.

3. யாய் - என்றாய். ஞாய் - நின்றாய். இவை இப்பொருளனவாதலை, (தொல். எச். 14) தெய்வச்சிலையாருரை நோக்கியறிக.

மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப
நிற்றுறந் தமைகுவெ னாயி னெற்றுறந்
திரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே. (குறுந். 137)

அறத்தா றன்றென மொழிந்த [1]தொன்றுபடு கிளவி
யன்ன வாக வென்னுநள் போல. (அகம். 5; 16 – 8)

இவை தெளிவகப்படுத்தல்.

அம்மெல் லோதி விம்முற் றழுங்க
[2]லெம்மலை வாழ்ந ரிரும்புனம் படுக்கிய
வரந்தி னவியறுத் துறுத்த சாந்தநும்
பரந்தேந் தல்குற் றிருந்துதழை யுதவும்
பண்பிற் றென்ப வண்மை யதனாற்
பல்கால் வந்துநம் பருவர றீர
வல்கலும் பொருந்துவ மாகலி
னொல்கா வாழ்க்கைத் தாகுமென் னுயிரே.

இதுவும் அணித்து எம்மிடமென ஆற்றுவித்தது. 'பயின்று' எனவே, பயிலாதுவரும் ஆயத்துய்த்தலும், யான் போவலெனக் கூறுதலும், மறைந்து அவட்காண்டலும், கண்டு நின்று அவணிலை கூறுவனவும், அவளருமை யறிந்து கூறுவனவும் போல்வன பிற வுங் கொள்க.

யான்றற் காண்டொறும்

என்னுஞ் செய்யுளுள்,

நீயறிந் திலையா னெஞ்சே
யானறிந் தேனது [3]வாயா குதலே

என மறைந்து அவட்கண்டு நின்று தலைவன் அவளொடு நிகழ்ந் தது நினைஇ நெஞ்சிற்குக் கூறியது.

காணா மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே
யாஅங் காண்டுமெம் மரும்பெற லுயிரே
சொல்லு மாடு மென்மெல வியலுங்
கணைக்கா னுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே.

ஆயத்தொடு போகின்றாளைக் கண்டு கூறியது. இதன்கண் ஆயத்துய்த்தமையும் பெற்றாம்.

---

1. தொன்றுபடு கிளவி என்றது இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் பிரியேனென்று சூளுரைத்தமையை.
2. எம்மலைச் சாந்தம் நும் அல்குலுக்குத் தழையுதவும் என்றதனால் அணிமை கூறினான்.
3. வாயாகுதல் - உண்மையாதல்.

இனி, 'வேட்கை யொருதலை' (100) என்னுஞ் சூத்திரத்திற் கூறியவற்றை மெய்யுறு புணர்ச்சி மேல் நிகழ்த்துதற்கு அவத்தை கூறினாரென்றும், இச்சூத்திரத்தைத் தலைவியை நோக்கி முன்னிலை யாக்கல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப்புணர்ச்சி புணரு மென்றுங் [1]கூறுவாருமுளர். அவர் அறியார்; என்னை? ஈண்டு அவத்தை கூறிப் பின்னர்ப் புணர்ச்சி நிகழுமெனின் [2]ஆண்டுக்கூறிய மெய்ப்பாடு பன்னிரண்டும் வேண்டாவாம். அன்றியும், ஆறாம் அவத்தை கடந்து வருவன அகமன்மை மெய்ப்பாட்டியலிற் கூறலிற் பத்தாம் அவத்தையாகிய சாக்காடெய்தி மெய்யுறுபுணர்ச்சி நடத்தல் பொருந்தாமை உணர்க. இனித் தலைவியை முன்னிலையாக்கன் முதலியன கூறிப் பின்னர்ப் புணருமெனின், முன்னர்க் 'கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்' (96) எனக் கண்ணாற் கூறிக் கூடுமென்றலும் 'இருகையு மெடுத்தல்' (263) எனப் பின்பு கூறுதலும் பொருந்தாவாம். அன்றியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையும் கூறிப் பிரியவேண்டுதலானும் அது பொருந்தாதாம். (10)

### (இடந்தலைப்பாடு முதலியன உணர்த்தல்)

102. மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்ட
லிடம்பெற்றுத் தழாஅ லிடையூறு கிளத்த
னீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்ற முளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பி னிருநான்கு கிளவியும்
பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலு
நிற்பவை நினைஇ நிகழ்பவை யுரைப்பினுங்
குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்
பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினு
மூரும் பேருங் கெடுதியும் பிறவு
நீரிற் குறிப்பி னிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியுந் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலுந்
தண்டா திரப்பினு மற்றைய வழியுஞ்

---

1. கூறுவார் என்றது இளம்பூரணரை.

2. ஆண்டு - மெய்ப்பாட்டியலில்.

சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினு
மறிந்தோ ளயர்ப்பி னவ்வழி மருங்கிற்
கேடும் பீடுங் கூறலுந் தோழி
நீக்கலி னாகிய நிலைமையு நோக்கி
மடன்மா கூறு மிடனுமா ருண்டே.

இது, மேல் இயற்கைப் புணர்ச்சிப் பகுதியெல்லாங் கூறி அதன் வழித் தோன்றும் இடந்தலைப்பாடும் அதன்வழித் தோன்றும் பாங்கற் கூட்டமும் அவற்றுவழித் தோன்றும் தோழியிற் கூட்டமும் நிகழுமிடத்துத் தலைவன் கூற்று நிகழ்த்துமாறும் ஆற்றாமை கையிகந்து கலங்கியவழி அவன் மடன்மா கூறு மாறுங் கூறுகின்றது. இதனுள் 'இருநான்கு கிளவியும்' என்னுந் துணையும் இடந்தலைப்பாடும், 'வாயில் பெட்பினும்' என்னுந் துணையும் பாங்கற்கூட்டமும் ஒழிந்தன தோழியிற் கூட்டமுமாம்.

**இ — ள்:** மெய்தொட்டுப் பயிறல் - தலைவன் தலைவியை மெய்யைத்தீண்டிப் பயிலாநிற்கு நிலைமை:

என்றால், இயற்கைப்புணர்ச்சிப் பின்னர்ப் பெருநாணின ளாகிய தலைமகள் எதிர்நிற்குமோவெனின், தான் பிறந்த குடிக் குச் சிறந்த வொழுக்கத்திற்குத் தகாதது செய்தாளாகலின், [1]'மறை யிற்றப்பா மறையோனொருவனை மறையிற்றப்பிய மறையோன்' போலவும் 'வேட்கைமிகுதியான் வெய்துண்டு புண் கூர்ந்தார்' போலவும் நெஞ்சும் நிறையுந் தடுமாறி இனிச் செயற்பால தியா தென்றும், ஆயத்துள்ளே வருவான்கொல் என்னும் அச்சங் கூர வும், வாரான்கொல் என்னும் காதல் கூரவும் புலையன் றீம்பால்

1. மறையோனை என்பது மறையோனைக் கண்ட என்றிருத்தல் வேண்டும். அச்சொல் தவறியதுபோலும். மறையொழுக்கிற்றவறாத மறையோனை மறையொழுக்கிற்றவறிய மறையோன் கண்டால் நெஞ்சு நிறையுந் தடுமாறுதல்போலவும். காமவேட்கையின் மிகுதியானே வெப்பமடைந்து இழிவுமிக்கார் பிறரைக்கண்டால் நெஞ்சு நிறையுந் தடுமாறுதல்போலவும் தடுமாறி என இயைக்க. இவ்வுவமைகளை நிரனிறையாகக் கொள்ளினும மையும். புண்கூர்ந்தார் என்னும் பாடத்திற்கு வருத்தமிக்கார் என்று பொருள் கொள்க. 'நெஞ்சுபுண்ணுறீஇ' (தொல். பொ. 147) என்பதுபோல. புலையன் றீம்பாலிற்போல மனங்கொள்ளா என்க. பால் என்பது பற்றிக் கொள்வேமோ என்ற கருத்தும், புலையன் றீண்டியது என்பதுபற்றி விடுவேமோ என்ற கருத்துமாய் ஒருவர்க்கு அப்பாலின்கண் மனம் ஒருவழிப்படாததுபோல மனம் ஒருவழிப்படாத என்பது கருத்து. மனங்கொள்ளா - மனம் ஒருவழிப் படாத. அனந்தர் - மயக்கம். தலைவிக்கு மனம் ஒருவழிப்படாமை எதனாலாய

போன் மனங்கொள்ளா அனந்தருள்ளம் உடையளாய், நாணு மறந்து காதலீப்பச் செல்லும்; சென்றுநின்றாளைத் தலைவன் இவ்வொழுக்கம் புறத்தார் இகழப் புலனாய் வேறுபட்டாள் கொல்லோ எனவும், அங்ஙனம் மறை புலப்படுதலின் இதனி னூங்கு வரைந்து கொள்ளினன்றி இம்மறைக்கு உடம்படாளோ வெனவுங் கருதுமாறு முன்பு போல் நின்ற தலைவியை மெய்யுறத் தீண்டி நின்று குறிப்பறியு மென்றற்குத் தொடுமென்னாது 'பயிறல்' என்றார்.

பொய்பாராட்டல் - அங்ஙனந் தீண்டி நின்றுழித் தலைவி குறிப்பறிந்து அவளை ஓதியும் நுதலும் நீவிப் பொய்செய்யா நின்று புனைந்துரைத்தல்:

[1]சிதைவின்றேனுஞ் சிதைந்தனபோல் திருத்தலிற் 'பொய்' என்றார்.

இடம்பெற்றுத் தழாஅல் - அவ்விரண்டனானுந் தலை வியை முகம்பெற்றவன் அவணோக்கிய நோக்கினைத் தன்னிடத் திலே சேர்த்திக்கொண்டு கூறல்.

இடையூறு கிளத்தல் - அவள் பெருநாணினளாதலின் இங்ஙனங் கூறக் கேட்டுக் கூட்டத்திற்கு இடையூறாகச் சில நிகழ்த்தியவற்றைத் தலைவன் கூறல்:

அவை கண்புதைத்தலுங், கொம்பானுங் கொடியானுஞ் சார்தலுமாம்.

நீடுநினைந்திரங்கல் - புணர்ச்சி நிகழாது பொழுது நீண்ட தற்கு இரங்கி இரக்கந் தோன்றக் கூறல்.

கூடுதல் உறுதல் - நீடித்ததென்று இரங்கினானென்பது அறிந்தோள் இவன் ஆற்றானாகி இறந்துபடுவனெனப் பெரு நாணுக் கடிது நீங்குதல்.

சொல்லிய நுகர்ச்சி வல்லேபெற்றுழி - தலைவன் தான் முற்கூறிய நுகர்ச்சியை விரையப் பெற்றவழி :

---

தெனின்? வருவானோ என்ற அச்சத்தானும், வராதொழிவானோ என்ற கருத்தானும் ஆயதென்க. ஒருமுறை வரல்வேண்டுமென்று கருதலானும், ஒருமுறை வராதிருத்தல் வேண்டுமென்று நினைத்தலானும் மனம் ஒருவழிப் படவில்லை என்பது கருத்து. புன்கூர்ந்தார் - துன்பமிக்கார் எனினுமாம்.

1. ஓதியு நுதலும் சிதைவிலவேனும் அவை சிதைந்தன போலத் திருத்தலின் என்க.

பெற்றவழி என்பதனைப் [1]பெறுதலெனப் பெயர்ப்படுத்தல் அக்கருத்தாற் பெறுதும்.

தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇ - எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல் அகப்படத் தொகுத்தது:

புணர்ச்சி நிகழ்ந்துழியல்லது தேற்றங்கூறல் ஆகாதென்றற்கு 'வல்லே பெற்றுழித் தீராத் தேற்றம்' என்றார். முன் தெளிவகப் படுத்தபின் நிகழ்ந்த ஆற்றாமை தீர்தற்குத் தெய்வத்தொடு [2]சார்த்திச் சூளுறுதலின் இத்தேற்றமும் வேண்டிற்று.

பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும் - குறையாச் சிறப் பினவாகிய இவ்வெட்டும்:

தாமேகூடும் இடந்தலைப்பாடும், பாங்கனாற் குறிதலைப் பெய்யும் இடந்தலைப்பாடும் [3]ஒத்த சிறப்பினவாதற்குப் 'பேராச் சிறப்பின்' என்றார்.

எனவே, இடந்தலைப்பாடு இரண்டாயிற்று. தோழியிற் கூட்டம்போலப் பாங்கன் உரையாடி இடைநின்று கூட்டா மையிற் பாங்கற் கூட்டம் என்பதனைத் தலைமகன் [4]பாங்கனைக் கூடுங் கூட்டமென்று கொள்க. உதாரணம்:

**[5]உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்**
**கமிழ்தி னியன்றன தோள். (குறள். 1106)**

இஃது என் கைசென்றுறுந்தோறும் இன்னுயிர் தளிர்க்கும் படி யான் தீண்டப்படுதலினெனப் பொருள்கூறவே மெய்தீண்ட லாயிற்று.

**[6]தீண்டலு மியைவது கொல்லோ மாண்ட**
**வில்லுடை வீளையர் கல்லிடு பெடுத்த**

---

1. பெறுதலையும் உடம்பொடு புணர்த்தலாற் பெறவைத்தார் என்பது கருத்து. எனவே பெறுதலும் தீராத்தேற்றமும் எனக் கிளவி இரண்டாம்.
2. சார்த்தி - பொருந்தவைத்து.
3. இப்பொருள் சிறப்பின்று. தானே இடந்தலைப்பட்டுக் கூடுங்கூட்டம் பாங்கற் கூட்டத்தினுஞ் சிறந்ததென்பதனை செய் - 187ஞ் சூத். பேராசிரிய ருரை நோக்கியறிக.
4. பாங்கனாற் கூடுங் கூட்டம் என்றனலம். என்னை? பாங்கனால் தலைவியை இடந்தலைப்பட்டு கூடலின். செய் 187ம் சூத் - பேராசிரியருரை நோக்கியறிக.
5. உறுதல் - முயங்குதல். இயன்றன - செய்யப்பட்டன.
6. கொடிச்சிதோள்தீண்டலு மியைவதுகொல்லோ என முடிக்க. வீளை - சீழ்க்கை. கல் இடுபு எடுத்த - கல்லைவீசி எழுப்பிய. இது மானோடு முடியும்.

நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த
புன்கண் மடமா னேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்திக்
குருதியொடு பறித்த செங்கோல் வாளி
மாறுகொண் டன்ன வுண்க
ணாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே. (குறுந். 272)

*கழறிய பாங்கற்குக் கூறுந் தலைவன், 'இவனான் இக்குறை முடியாது, நெருநல் இடந்தலைப்பாட்டிற் கூடியாங்குக் கூடுவல்; அது கூடுங்கொல்' என்று கூறுவான் அற்றைஞான்று மெய் தொட்டுப் பயின்றதே கூறினான்.*

[1]சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்
றிருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்
றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே [2]கதவ வல்ல நண்ணா
ராண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா லணங்கே. (நற்றிணை. 39)

*இஃது அங்ஙனம் மெய்தீண்டி நின்றவன் யான் தழீஇக் கொண்டு கூறில் அதனை ஏற்றுக்கொள்ளாயாய் இறைஞ்சி நின்று நாணத்தாற் கண்ணைப் புதைத்தியென 'இடையூறு கிளத்தல்' கூறிக், 'காமங் கைமிகிற் றாங்குத லெளிதோ' வென 'நீடுநினைந் திரங்கல்' கூறிப், 'புலியிடைத் தோய்ந்து சிவந்தகோடு' போல என்னிடைத் தோய்ந்து காமக்குறிப்பினாற் சிவந்த கண்ணெனக் கூடுதலுங் கூறிற்று.*

---

நனந்தலை - அகன்ற இடம். புன் கண் - துன்பம். நேர்பட - நேரே இருப்ப. தன்னையர் - தன் தமையன் மார். சிலைமாண் - சிலைத்தல் மாட்சிமைப் பட்ட. கலை நிறத்து - கலை மானின் மருமத்திலே. பறித்த - பிடுங்கிய. மாறு கொண்டன்ன - தம்முள் மாறுப்பட்டாற் போன்ற. அன்னகண் என இயையும்.

1. இறைஞ்சல் - தாழச் செய்தல்; கவிழச் செய்தல். நாணல் என்றது ஈண்டு நாணத்தால் கண்புதைத்தலை யுணர்த்திற்று புறம் - முதுகு. புலி நடுங்க அதன் முதுகிலே என்க. தலைமருப்பு - மருப்புன்றலை. கடைமணி - கருமணியின் கடை. கதவ - சினவாநின்றன. அல்ல - அவை மட்டுமல்ல. தோளும் அணங்கு உடைய - தோளும் வருத்துதலுடையன.

2. கதவ - கோபமுடையன.

*இனித் தனியே வந்தன:*

[1]கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னைய
ருடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயு
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பார
மிடர்புக் கிடுகு மிடையிழியல் கண்டாய். (சிலம்பு: கானல். 17)

*இது பொய்பாராட்டல்.*

[2]கொல்யானை வெண்மருப்புங் கோள்வல் புலியதளு
நல்யாணர் நின்னையர் கூட்டுண்டு – செல்வார்தா
மோரம்பி னானெய்து போக்குவர்யான் போகாமை
யீரம்பி னாலெய்தா யின்று. (திணை: நூற். 150 – 22)

*இஃது இடம்பெற்றுத் தழாஅல்.*

இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி
[3]முகம்புதை கதுப்பின ளிறைஞ்சிநின் றோளே
புலம்புகொண் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவ ளெனக்கே. (ஐங்குறு. 197)

*இது கூடுதலுறுதல்.*

[4]வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். (குறள். 1105)

*இது நுகர்ச்சிபெற்றது.*

[5]எம்மணங் கினவே மகிழ்ந முன்றி
னனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறுஞ்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
வெக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரொ டுற்ற சூளே. (குறுந். 53)

---

1. நின்னையர் - நின் ஐயன்மார். என்றது தந்தை முதலியோரை உடல் - உடம்பு. மிடல் - வலி. அடங்காத - கச்சுளடங்காத. இடுகும் - நுணுகும். இழியல் இழுவலுமாம்- முரிதலுறப் பெறாதே கொள். இடை முரியும் என்றது, பொய் பாராட்டல்.

2. கோள் - கொலை. கொல்வல் எனவும் பாடம். கூட்டுண்டு செல்வார் - கவர்ந்தொழுகுவார். (பிறர் வருவாரை) ஓரம்பினால் எய்து போக்குவர் என வருவித்துரைக்க. செல்வார் தாம் என்பது செல்வாரை என்று பாடமிருப்பினயம். நீ யான் போகாதபடி என்னை ஒன்றாலன்று ஈரம்பினாலெய்தாய் என்க.

3. கதுப்பு - கூந்தல். ஆகம் - மார்பு.

4. வேட்ட பொழுதின் - விரும்பிய பொழுதின்.

5. அணங்கின - வருத்தின. புன்கம்பூ நெற்பொரி போன் றிருத்தலின் சிதறியன்ன என்றார். எக்கர் - மணன்மேடு. சூரரமகளிர் - தெய்வமகளிர். சூள் (சத்தியம்) எம் அணங்கின என முடிக்க,

*இதனுள் 'தீராத்தேற்ற'த்தைப் பின்னொருகால் தலைவி தேர்ந்து தெளிவொழித்துக் கூறியவாறு காண்க.*

*இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவி கருத்தெல்லாம் உணர்ந் தானாயினுங் காவன்மிகுதியானுங் கரவுள்ளத்தானும் இரண் டாங் கூட்டத்தினும் அவள்நிலை தெளியாது ஐயுறுதலுங் கூறி, மூன்றாவதாய் மேல்நிகழும் பாங்கற் கூட்டத்தின் பின் நிகழும் இடந்தலைப்பாட்டினும் ஐயுறவு உரித்தென்று மெய்தொட்டுப் பயிறன் முதலியன அதற்குங் கூறினார். அன்றியும் மக்களெல்லாம் முதல் இடை கடையென மூவகைப்படுதலின் அவர்க்கெல்லாம் [1]இது பொதுவிதியாகலானும் அமையும்.*

**[2]எண்ணிய தியையா தாங்கொல் கண்ணி**
**யவ்வுறு மரபி னுகர்ச்சி பெறுகென**
**வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த**
**வண்ணல் யானை யெண்ணருஞ் சோலை**
**விண்ணுயர் வெற்பினெம் மருளி நின்னி**
**னகலி னகலுமெ னுயிரெனத் தவலி**
**வருந்துய ரவலமொ டணித்தெம் மிடமெனப்**
**பிரிந்துறை வமைந்தவெம் புலம்புநனி நோக்கிக்**
**கவர்வுறு நெஞ்சமொடு கவலுங் கொல்லோ**
**வாய நாப்பண் வருகுவன் கொல்லென**
**வுயவுமென் னுள்ளத் தயர்வுமிக லானே**

*இது வருவான்கொ லென்னும் அச்சமும், வாரான்கொ லென்னுங் காதலுங் கூர்ந்து தலைவி கூறியது.*

*இனிச், 'சொல்லிய' என்றதனானே இன்னும் இப்புணர்ச்சி கூடுங்கொலெனக் கூறுவனவும், இன்னுந் தெய்வந் தருமெனக் கூறுவனவுந், தலைவியை எதிர்ப்பட்ட இடங்கண்டுழி [3]அவளாகக் கூறுவனவுங், காட்சிக்கு நிமித்தமாகிய கிள்ளையை வாழ்த்து*

---

1. இது - இச்சூத்திரவிதி. பொதுவிதி எனவே கடைமக்களுக்குப் பல முறையும் ஐயமுண்டாம் என்று கருதினார் என்பது கருத்தாகும்.

2. நுகர்ச்சி பெறுக என எம்மருளித் தவலி என (என்று சொல்ல), அதனால் பிரிந்து உறைதலைப் பொருந்திய எம்புலம்பை நோக்கிக் கவலுங்கொல் எனவும் வருகுவன்கொல் எனவும் வருந்தும் என்னுள்ளத்து அயர்வுமிகலான் எண்ணியது இயைவதாகுங் கொல் என முடிக்க. தவலி - மனமழிந்து.

3. அவளாக - இடத்தை அவளாக

*வனவுந், தலைவி தனித்த நிலைமை கண்டு வியப்பனவும், முன்னர்த் தான் நீங்கியவழிப்பிறந்த வருத்தங்கூறுவனவும், அணியணிந்து விடுத்தலும், இவைபோல்வன பிறவும் இடந்தலைப்பாட்டிற்குக் கொள்க. உதாரணம்:*

**[1]வெள்ள வரம்பி னூழி போகியுங்**
**கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை**
**யிரும்பல் கூந்தற் கொடிச்சி**
**பெருந்தோட் காவல் காட்டி யவ்வே. (ஐங்குறு. 281)**

*இது கிள்ளைவாழ்த்து.*

**[2]நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்**
**தீயாண்டுப் பெற்றா ளிவள். (குறள். 1104)**

*இது நீங்கியவழிப்பிறந்த வருத்தங் கூறியது.*

**[3]அல்குபட ருழந்த வரிமதர் மழைக்கட்**
**பல்பூம் பகைத்தழை நுடங்கு மல்குற்**
**றிருமணி புரையு மேனி மடவோள்**
**யார்மகள் கொல்லிவ டந்தை வாழியர்**
**துயர முறீஇயின ளெம்மே யகல்வய**
**லரிவன ரரிந்துந் தருவனர் பெற்றுந்**
**தண்சேறு தாஅய மதனுடை நோன்றாட்**
**கண்போ னெய்தல் போர்விற் பூக்குந்**
**திண்டேர்ப் பொறையன் றொண்டி**
**தன்றிறம் பெறுகவிவ ளீன்ற தாயே. (நற்றிணை. 8)**

*என்பதும் அது. ஏனையவற்றிற்குச் சான்றோர் செய்யுட்கள் வருவன உளவேற் காண்க.*

*பெற்றவழி மகிழ்ச்சியும் - சொல்லிய நுகர்ச்சி வல்லேபெற் றுழி அவன் மனம் மகிழும் மகிழ்ச்சியும்:*

*'பேராச் சிறப்பின்' என்றதனாற் பாங்கனால் நிகழும் இடந் தலைப்பாட்டிற்கும் இது கொள்க. உதாரணம்:*

---

1. வெள்ள வரம்பினூழி - வெள்ளம் என்னும் அளவினெல்லைத்தாகிய ஊழி. தினைக்காவலைக் காட்டியன அதனால் கிள்ளைகள் ஊழி பல வாழிய என முடிக்க.

2. நீங்கல் - பிரிதல். குறுகல் - கூடல்.

3. அல்குபடர் - மிக்க துன்பம். பகைத்தழை - ஒன்றோ டொன்று மாறுபட்ட தழை; பலவகை நிறமுள்ள பூக்களாலும் தளிர்களாலும் தொடுத்தலின் அவ்வாறு கூறினார். மணி நீலமணி. உறீஇயினள் - உறுவித்தாள். போர்வு - நெற்போர். ஈன்றதாய் பெறுக என முடிக்க.

[1]ஒடுங்கீ ரோதி யொண்ணுதற் குறுமக
ணறுந்தண் ணீர ளாரணங் கினளே
யினைய ளென்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
யணைமெல் லியல்யான் முயங்குங் காலே. (குறுந். 70)

*பிரிந்தவழிக் கலங்கலும் - அங்ஙனம் புணர்ந்து பிரிந்துழி அன்புமிகுதியால் தான் மறைந்து அவட் காணுங்கால் ஆயத்திடையுஞ் சீறூரிடையுங் கண்டு இனிக் கூடுதல் அரிதென இரங்கலும். உதாரணம்:*

[2]குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
யயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
சேய ளரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே. (குறுந். 128)

இல்லோ னின்பங் காமுற் றாஅங்
கரிதுவேட் டனையா னெஞ்சே காதலி
நல்ல ளாகுத லறிந்தாங்
கரிய ளாகுத லறியா தோயே. (குறுந். 120)

*'வழி' என்றதனாற் பிரியலுறுவான் கூறுவனவுங் கொள்க.*

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. (குறள். 1124)

*[3]இது மூன்றாங் கூட்டத்தினையுங் கருதலின் ஈண்டுவைத்தார். இதுமுதலாகப் பாங்கற்கூட்டமாம்.*

*'கலங்கலும்' எனவே அக்கலக்கத்தான் நிகழ்வனவெல்லாங் கொள்க. அவை தலைவன் பாங்கனை நினைத்தலும் அக் கலக்கங் கண்டு பாங்கன் வினாவுவனவும் அதுவே பற்றுக்கோடாக உற்றதுரைத்தலும் பிறவுமாம். உதாரணம் :*

---

1. தண்ணியநீரளாயினும் பொறுத்தற்கரிய வருத்தத்தைத் தருபவள் என விரித்துரைக்க. இனையள் - இவ்வியல்பினள். முயங்குங்கால் - தழுவுங்கால். அணை மெல்லியல் - அணை போலும் மென்மைத் தன்மையை யுடையாள். மெல்லியள் எனவும் பாடம்.

2. பறைதபு - முதுமையால் சிறகுகள் நீங்கிய. பறத்தல் தவிர்ந்த எனினுமாம். அயிரை - ஒருமீன். அணவந்தாங்கு - தலையை மேலே உயர்த்தினாற்போல. சேயள் - தூரத்திலிருப்பவள். படர்தி - விரும்புகின்றாய். நோய்ப்பாலோய் - நோய்க்குக்காரணமாகிய ஊழினையுடையாய்.

3. இது என்றது பிரிந்தவழிக் கலங்கலை. மூன்றாங் கூட்டம் பாங்கற் கூட்டம்.

[1]பண்டையை யல்லைநீ யின்று பரிவொன்று
கொண்ட மனத்தை யெனவுணர்வல் – கண்டாயா
னின்னுற்ற தெல்லா மறிய வுரைத்தியாற்
பின்னுற்ற நண்பினாய் பேர்த்து.

[2]வஞ்சமே யென்னும் வகைத்தாலோர் மாவினாய்த்
தஞ்சந் தமியனாய்ச் சென்றேனென் – னெஞ்சை
நலங்கொண்டார் பூங்குழலா ணன்றாயத் தன்றென
வலங்கொண்டாள் கொண்டா ளிடம். (திணை: நூற். 9)

[3]எலுவ சிறாஅ ரெம்முறு நண்ப
புலவ தோழ கேளா யத்தை
மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே. (குறுந். 129)

*நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்* - நிற்பவை நினைஇ உரைப்பினும் நிகழ்பவை உரைப்பினும் என உரைப்பி னென்பதனை முன்னுங் கூட்டுக.

*அது கேட்ட பாங்கன் உலகத்து நிலைநிற்கின்ற நற்குணங் களை அவனை நினைப்பித்துக் [4]கழறிக் கூறினும், அக் கழறிய வற்றை மறுத்துத் தன் நெஞ்சின் நிகழும் வருத்தங்களை அவற் குக் கூறினும்: உதாரணம்:*

[5]குன்ற முருளிற் கொடித்தேரோய் குன்றியு
ளொன்று மொழிவ துளதாமோ – நன்றறிந்து
தாமுறையே செய்வார் தகவிலவே செய்தக்கால்
யார்முறை செய்பவோ மற்று

*எனவும்,*

[6]தேரோன் றெறுகதிர் மழுங்கினுந் திங்க
ளீரா வெம்மையொடு திசைநடுக் குறுப்பினும்
பெயராப் பெற்றியிற் றிரியாச் சீர்சால்

---

1. பரிவு - துன்பம். நின்னுற்றது - நின் கண் அடைந்த துன்பம் பின்னுதல் - கலத்தல். பேர்த்து - மனத்தினின்றும் பெயர்த்து.
2. வஞ்சம் - மாயம். மா - விலங்கு. தஞ்சம் - எளிமை. வலம் - வலி; வென்றி. கொண்டாள் - கொண்டாளாய். இடங்கொண்டாள் - என்னெஞ்சைத் தனக்கு இடமாக்கிக் கொண்டாள்.
3. எலுவ - ஏட. சிறார் - இளையோர். ஏமுறு நண்ப எனவும் பாடம். புலவர் - அறிவுடையோர். எம்மைப் பிணித்தது என மாற்றி இயைக்க.
4. கழறி - இடித்து.
5. குன்றம் - மலை. குன்றி - குன்றிமணி. நன்று - நன்மை தரும் நூல், பெரிது எனினுமாம். முறை - நீதி. தகவில - தகுதியற்றன. செய்ப - செய்வார்.
6. மழுங்குதல் - ஒளிகுறைதல். வெம்மை - வெப்பம். பெயரா - நிலைகுலையாத; அசையாத. நாட்டம் - நோக்கம்; எண்ணம். கிடக்கை - கிடத்தல், கலங்குதி எனின் நிலம் உளதென்று கருதேன் யான் என இயைக்க.

குலத்திற் றிரியாக் கொள்கையுங் கொள்கையொடு
நலத்திற் றிரியா நாட்டமு முடையோய்
கண்டத னளவையிற் கலங்குதி யெனினிம்
மண்டிணி கிடக்கை மாநில
முண்டெனக் கருதி யுணரலன் யானே

*எனவும் இவை நிற்பவை நினைஇக் கழறின.*

[1]காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா விளம்புன்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே. (குறுந். 204)

*இதுவுமது.*

[2]நயனுந் நண்புந் நாணுநன் குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலு
நும்மினு முடையேன் மன்னே கம்மென
வெதிர்த்த தித்தி யேரிள வனமுலை
விதிர்த்துவிட் டன்ன வந்நுண் சுணங்கி
னைம்பால் வகுத்த கூந்தற் செம்பொற்
றிருநுதற் பொலிந்த தேம்பா யோதி
முதுநீ ரிலஞ்சி பூத்த குவளை
யேதிர்மலர்ப் பிணைய லன்னவிவ
ளரிமதர் மழைக்கண் காணா வூங்கே. (நற்றிணை. 160)

[3]இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நொண்டுகொளற் கரிதே. (குறுந். 58)

*இவை நிகழ்பவை உரைத்தன.*

*இப்பன்மையான் வேறுபட வருவனவெல்லாங் கொள்க.*

---

1. அணங்கு - பிறர் வருத்த வருந்துவது. பிணி - நோய். முதை - பழங்கொல்லை. சுவல் - மேட்டுநிலம். தைவரல் - தடவல் (நாவால் தடவல்). விருந்து - புதிது (புதிதாகத் தோன்றுவது) எனவே நம் மன நினைவாற் றோன்றுவது என்றபடி.

2. தித்தி - வயிற்றிற் றோன்றுந் தேமல். சுணங்கு - முலை முதலியவற்றிற் றோன்றுந் தேமல். காணாவூங்கு - காணாதமுன், முன் உடையேன் எனவே கண்டபின் இலேன் என்பதாம்.

3. நொண்டுகொளல் - அள்ளிக்கொளல். "நோன்றுகொளற் கரிதே" என்பது சாமிநாதையர் பதிப்புப் பாடம் மொண்டு கொளற்கரிதே எனவும் பாடம்.

*குற்றங் காட்டிய வாயில் பெட்பினும் - அங்ஙனந் தலைவற்கு நிகழுங் குற்றங்களை வெளிப்படக் காட்டிய பாங்கன் அவன் ஆற்றாமை மிகுதிகண்டு அவனை நீக்குதற்கு விரும்பினும்:*

*அது, நின்னாற் காணப்பட்ட உரு எவ்விடத்து எத்தன் மைத்து என வினாவும். உதாரணம்:*

பங்கயமோ துங்கப் பனிதங்கு மால்வரையோ
வங்கண் விசும்போ வலைகடலோ – வெங்கோவிச்
செவ்வண்ண மால்வரையே போலுந் திருமேனி
யிவ்வண்ணஞ் செய்தார்க் கிடம்

*எனவரும்.*

*அதுகேட்டுத் தலைவன் கழியுவகை மீதூர்ந்து இன்ன விடத்து இத்தன்மைத்து என்னும். உதாரணம்:*

[1]கழைபா டிரங்கப் பல்லியங் கறங்க
வாடுமக ணடந்த கொடும்புரி நோன்கயிற்
றதவத் தீங்கனி யன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
கழைக்க ணிரும்பொறை யேறி விசைத்தெழுந்து
குறக்குறு மாக்க டாளங் கொட்டுமக்
குன்றகத் ததுவே குழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவேபிறர்
விடுத்தற் காகாது பிணித்தவென் னெஞ்சே. (நற்றிணை. 95)

*இஃது இடங்கூறிற்று.*

[2]கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
னெஞ்சுபிணிக் கொண்ட வஞ்சி லோதி
பெருநா ணணிந்த சிறுமெல் லாக
மொருநாள் புணரப் புணரி
னரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே. (குறுந். 280)

*இது தன்மை கூறிற்று.*

*மீட்டுங் 'குற்றங் காட்டிய' என்றதனானே இக்கூட்டத்திற் குரிய கூற்றாகிச் சான்றோர் செய்யுட்கண் வேறுபட வருவன வெல்லாங் கொள்க.*

---

1. கழை - குழல். பாடு - பக்கம். ஆடுமகள் - கழைக்கூத்தி. அதவம் - அத்தி. கயிற்று மந்திப்பறழ் தூங்க, குறக் குறுமக்கள் தாளங்கொட்டும் மலை என்க. துய் - பஞ்சு. பொறை - பாறை. என்னெஞ்சு கையகத்தது என முடிக்க. விடுத்தல் - விடுவித்தல்.
2. கேளிர் - நண்பரே, புணரப்புணரின் - புணரக்கூடுமாயின். வாழ்க்கை - உயிர்வாழ்வு.

[1]காயா வீன்ற கணவீ நாற்ற
மாயா முன்றில் வருவளி தூக்கு
மாகோள் வாழ்நர் சிறுகுடி யாட்டி
வேயேர் மென்றோள் விலக்குநர்
யாரோ வாழிநீ யவ்வயிற் செலினே.

*இது, பாங்கனை நீ யாண்டுச் செல்லவேண்டு மென்றது.*

என்னுறுநோய் தீர்த்தற் கிருபிறப்பி னான்மறையோன்
றன்னுறுநோய் போலத் தளர்கின்றா – னின்னினிய
சுற்றத்திற் றீர்ந்த சுடரிழையைச் செவ்வியாற்
றெற்றெனக் கண்ணுறுங்கொ [2]லென்று. (பாரதம்)

*இது குறிவழிச்சென்ற பாங்கன் அவ்விடத்துக் காணுங் கொலென்று ஐயுற்றது.*

[3]அளிதோ தானே யருண்மிக வுடைத்தே
களிவாய் வண்டினங் கவர்ந்துண் டாடு
மொளிதார் மார்பி னோங்கெழிற் குரிசிலைப்
பிரியாத் துயரமொடு பேதுறுத் தகன்ற
கிளியேர் மழலைக் கேழ்கிளர் மாத
ரார்ந்த சுற்றமொடு தமரி னீக்கத்
தானே தமியள் காட்டிய
வானோர் தெய்வம் வணங்குவல் யானே.

*இது குறிவழிச் சென்ற பாங்கன் தலைவியை எளிதிற் காட்டிய தெய்வத்தை வணங்கியது.*

[4]கண்ணென மலருங் குவளையு மடியெனத்
தண்ணெனுந் தடமலர் தயங்குதா மரையு
முலையென முரணிய கோங்கமும் வகையெழின்
மின்னென நுடங்கு மருங்குலு மணியென
வயின்வயி னிமைக்கும் பாங்குபல் லுருவிற்
காண்டகு கமழ்கொடி போலுமென்
னாண்டகை யண்ணலை யறிவுதொலைத் ததுவே.

*இஃது இவள்போலும் இறைவனை வருத்தினாளெனப் பாங்கனை ஐயுற்றது.*

---

1. வளி - காற்று. தூக்கும் - எடுக்கும். விலக்குநர் - தடுப்போர்.
2. என்று என்பது இன்று என்றிருத்தல் வேண்டும். ஐயுற்றது தலைவனாதலின்.
3. பேதுறுத்து - மயக்குதல் செய்து. தெய்வம் அருண் மிக வுடைத்து. ஆதலால் வணங்குவேன் யான் என்க இயைக்க.
4. வயின்வயின் - இடந்தொறும். இமைக்கும் - ஒளிவிடும். அறிவு தொலைத்தது இக்கமழ்கொடிபோலும் என முடிக்க.

[1]கண்ணே, கண்ணயற் பிறந்த கவுளழி கடாஅத்த
வண்ணல் யானை யாரியர்ப் பணித்த
விறற்போர் வானவன் கொல்லி மீமிசை
யறைக்கான் மாச்சுனை யவிழ்ந்த நீலம்

பல்லே, பல்லரண் கடந்த பசும்பூட் பாண்டியன்
மல்குநீர் வரைப்பிற் கொற்கை முன்றுறை
யூதை யீட்டிய வுயர்மண லடைகரை
யோத வெண்டிரை யுதைத்த முத்தம்

நிறனே, திறல்விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த
விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழ
னலனணி யரங்கிற் போகிய மாவி
னுருவ னீள்சினை யொழுகிய தளிரே

யென்றவை பயந்தமை யறியார் நன்று
மடவர் மன்றவிக் குறவர் மக்க
டேம்பொதி கிளவி யிவளை
யாம்பயந் தேமெம் மகளென் போரே.

*இது தலைவியை வியந்தது.*

[3]பண்ணாது பண்மேற்றேன் பாடுங் கழிக்கான
லெண்ணாது கண்டாருக் கேரணங்கா – மெண்ணாது
சாவார்சான் றாண்மை திரிந்திலார் மற்றிவளைக்
காவார் கயிறுரீஇவிட் டார். (திணைமாலை: நூற். 47)

*பாங்கன் தலைவனை வியந்தது.*

[3]பூந்த ணிரும்புனத்துப் பூசல் புரியாது பூழி யாடிக்
காந்தட் கமழ்குலையாற் காதன் மடப்பிடிதன் கவுள்வண் டோச்ச
வேந்தன்போ னின்ற விறற்களிற்றை வில்லினாற் கடிவார் தங்கை
யேந்தெழி லாக மியையா தியைந்நோ யியையும் போலும்.

*இது, தலைவற்கு வருத்தந் தருமென அவனை வியந்தது.*

---

1. கண்நீலம், பல்முத்தம், நிறம்தளிர். அவை என்றது நீல முதலியவற்றைத் தோற்றுவித்த இடங்களை. வானவன் - சேரன். கொல்லி - ஒரு மலை. சேரனுக் குரியது. கொற்கை - ஒரு நகர் இது கடற்கரையிலுள்ளது. இதில் முத்துப் பிறப் பது. என்போர் - என்று சொல்வார். ஆதலால் குறவர்மக்கள் மடவர் என மாற் றுக. ஊதை - காற்று. ஈட்டுதல் குவித்துவைத்தல். தூங்கெயில் - ஆகாயத்தில் தூங்குமெயில். தூங்கல் - தொங்கல், அசைதல். நன்று - பெரிது. மன்ற - தெளிவாக.

2. பண்ணாது - யாழினைப்பண்ணாது. தேன் - வண்டு. எண்ணாது கண்டார்க்கு - ஆராயாது வந்து கண்டார்க்கு. ஏரணங்கு - அழகிய தெய்வம். சாவார் - இறந்துபடுவார். சான்றாண்மை சலித்திலார். சான்றாண்மையின்கண் வேறுபாடில்லார். கயிறுரீ இவிடல் - கயிறுருவிவிடல் = கயிறுகழற்றிவிடல். கட்டி வையாது கழற்றிவிட்டார் என்றது இவளை இல்லிற்செறியாது புறம்போக விட்டார் என்றபடி. கயிறுரீஇவிடலைச் சிந்தாமணி இலக்கணை. 80ஞ் செய்யுள் நோக்கியறிக. (நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப் போதர விட்டநுமருந் தவறிலர் ... இறையே தவறுடையான்) என்பதும் ஈண்டு நோக்கத்தக்கது. தூண்டிவிட்டார் என்றுமாம்.

3. இயையாது - புணராமல்

[1]விம்முறு துயரமொடு வெந்நோ யாகிய
வெம்முறு துயரந் தீரிய சென்ற
நான்மறை நவிற்றிய நூனெறி மார்பன்
கண்டனன் கொல்லோ தானே தண்டாது
புருவக் கொடுவிற் கோலிப் பூங்கட்
செருவப் பகழியிற் சேர்த்தழி வுறீஇ
யேத்தொழி றொடங்கி யேமுறுத் தகன்ற
மடமா னோக்கிற் றடமென் றோளியைத்
தண்டழை ததும்பிய வின்னிழ லொருசிறை
யுடனா டாயத்து நீங்கி
யிடனா நின்ற வேமுறு நிலையே

என்னுஞ் செய்யுளுங் கொள்க.

இனிப் பாங்கன் தலைவி தன்மை தலைவற்குக் கூறுவனவும் இடங்காட்டுவனவுஞ் சான்றோர் செய்யுளுள் வரும்வழிக் காண்க. ஆண்டுச் சென்ற தலைவன் இடந்தலைப்பாட்டிற் கூறியவாற் றானே கூடுதல் கொள்க. அங்ஙனங் கூடி நின்று அவன் மகிழ்ந்து கூறுவனவும் பிறவுங் கொள்க.

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். (குறள். 1105)

[2]எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ
ளொண்ணுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே. (ஐங்குறு. 175)

இது, பாங்கற்கூட்டங் கூடி நீங்குந் தலைவன் நீ வருமிடத்து நின் தோழியோடும் வரல்வேண்டுமெனத் தலைவிக்குக் கூறியது.

நெய்வள ரைம்பா னேரிழை மாதரை
மெய்ந்நிலை திரியா மேதகு சுற்றமொ
டெய்துத லரிதென் றின்னண மிரங்கிக்
கையறு நெஞ்சமொடு கவன்றுநனி பெயர்ந்தவென்
பைத லுள்ளம் பரிவு நீக்கித்
தெய்வத் தன்ன தெரியிழை மென்றோ
ளெய்தத் தந்த வேந்தலொ டெம்மிடை
நற்பாற் கேண்மை நாடொறு மெய்த
லப்பாற் பிறப்பினும் பெறுகமற் றெமக்கே.

அங்ஙனங் கூடிநின்று தலைவன் பாங்கனை உண்மகிழ்ந்து உரைத்தது. இவன் பெரும்பான்மை பார்ப்பானாம்.

இத்துணையும் பாங்கற்கூட்டம்.

---

1. நூனெறிமார்பன் - பார்ப்பான். பார்ப்பான் தோளியை ஏமுறுநிலை கண்டனன் கொல் என முடிக்க.

2. அரிவை என்றது காதற்றோழியை. இயலி - நடந்து கொண்டு வந்திசின் என இயைக்க.

பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுப்பினும் - அங்ஙனம் அவனைப் புணைபெற்றுநின்ற தலைவன் தலைவிக்கு வாயிலா தற்கு உரியாரை யாராய்ந்து பலருள்ளுந் தலைவியாற் [1]பேணப் பாட்டாள் தனக்கு வாயிலாந் தன்மையை யுடைய தோழியை அவள் குறிப்பினான் வாயிலாகப் பெற்று இவளை இரந்து பின்னிற்பலென வலிப்பினும்:

மறைந்து தலைவியைக் கண்டு நின்றான் அவட்கு அவள் இன்றியமையாமை கண்டு அவளை வாயிலெனத் துணியும். உதாரணம்:

[2]தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளுங்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகி
னாண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
செவ்வரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே. (குறுந். 222)

இது, தலைவி அவட்கு இனையளென்று கருதி அவளை வாயிலாகத் துணிந்தது. அன்றித் [3]தோழி கூற்றெனில் தலைவியை அருமை கூறினன்றி இக்குறை முடிப்பலென ஏற்றுக்கொள்ளாள் தனக்கு [4]ஏதமாமென்று அஞ்சி; அன்றியுந்தானே குறையுறுகின் றாற்கு [5]இதுகூறிப் பயந்ததூஉமின்று.

[6]மருந்திற் றீராது மணியி னாகா
தருந்தவ முயற்சியி னகறலு மரிதே
தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய
தேனிமிர் நறவின் றேறல் போல
நீதர வந்த நிறையழி துயரநின்
னடுகொடி மருங்குனின் னருளி னல்லது

---

1. பேணப்பட்டாள் - விரும்பப்பட்டாளாகிய வாயில் - வழி வலித்தல் - துணிதல்.
2. புணை - தெப்பம். தளிரன்னோள் ஆண்டும் வருகுவள் போலும் என இயைக்க.
3. தோழி கூற்றாகக் கொள்வோர் களவியலுரைகாரர்.
4. ஏதம் - குற்றம் " குற்றேவன்மகளாகிய தன் தகுதிக்கடாதன கூறல் குற்றம்.
5. இது - நட்புமிகுதி. பயத்தல் - பயன்படல். நட்பு மிகுதி அறிந்து குறையுறுவானி டம் தனக்கும் தலைவிக்குமுள்ள நட்புமிகுதி கூறல் பயினின்றென்றபடி
6. மணி - இதுவும் பிணியை நீக்குவதொன்று. நோயை நீக்குவன: மணி மந்திர ஔஷதம் (மருந்து) என்பர் ஆன்றோர் நறவு - கள். தேறல் - தெளிவு.

பிறிதிற் றீரா தென்பது பின்னின்
றறியக் கூறுக மெழுமோ நெஞ்சே
நாடுவிளங் கொண்புகழ் நடுதல் வேண்டித்தன்
னாடுமழைத் தடக்கை யறுத்துமுறை நிறுத்த
பொற்கை நறுந்தாரப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கையம் பெருந்துறை குனிதிரை தொகுத்த
விளங்குமுத் துறைக்கும் வெண்பற்
பன்மாண் சாயற் பரதவர் மகட்கே

என்னுஞ் செய்யுள் இரவு [1]வலியுற்றது.

ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும் நீரிற் குறிப்பின் நிரம் பக் கூறித் தோழியைக் குறைவுறும் பகுதியும் - தோழியை இரந்து பின்னிற்றலை வலித்த தலைவன், தலைவியுந் தோழியும் ஒருங்கு [2]தலைப்பெய்த செவ்வி பார்த்தாயினும், தோழி தனித்துழியாயி னும், நும்பதியும் பெயரும் யாவையெனவும் ஈண்டு யான் [3]கெடுத் தவை காட்டுமினெனவும், அனையன பிறவற்றையும் அகத்தெழுந் ததோர் இன்னீர்மை தோன்றும் இக்கூற்று வேறோர் கருத்து உடைத்தென அவள் கருதுமாற்றானும் அமையச் சொல்லித் தோழியைத் தன் குறையறிவிக்குங் கூறுபாடும்:

வினாவுவான் [4]ஏதிலர்போல ஊரினை முன் வினாய்ச் சிறிது உறவு தோன்றப் பெயரினைப் பின்வினாய் அவ்விரண்டினும் [5]மாற்றம் பெறாதான் ஒன்று கெடுத்தானாகவும் அதனை அவர் கண்டார் போலவும் கூறினான். இவன் என்னினாயதோர் [6]குறை யுடையனென்று அவள் கருதக் கூறுமென்பார் 'நிரம்ப' என்றார்.

கெடுதியாவன:- யானை புலி முதலியனவும் நெஞ்சும் உணர்வும் இழந்தேன், அவை கண்டீரோவெனவும் வினாவுவன பலவுமாம்.

'பிறவும்' என்றதனால் வழிவினாதலுந் தன்னொடு அவரிடை உறவு தோன்றற்பாலனவுங் கூறுதலுங் கொள்க. உதாரணம் :

---

பின்னின்று - இரந்துபின்னின்று. நெஞ்சே எழு என்க. மகட்கு அறியக்கூறு கம் எழு என முடிக்க.

1. வலியுறல் - துணிதல்.
2. தலைப்பெய்தல் - கூடல். செவ்வி - சமயம்.
3. கெடுத்தவை - இழந்தவை.
4. ஏதிலார் - அயலார்.
5. மாற்றம் - வார்த்தை, விடை.
6. குறை - இன்றியமையாத காரியம்.

[1]அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழங்
குழவிச் சேதா மாந்தி யயலது
வேய்பயி லிறும்பினா மூறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென வெழுந்த
செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனங் காவலு நுமதோ
கோடேந் தல்கு னீடோ ளீரே. (நற்றிணை. 213)

*இஃது ஊரும் பிறவும் வினாயது.*

[2]கல்லுற்ற நோய்வருத்தக் காலு நடையற்றே
னெல்லுற் றியானும் வருந்தினேன் – வில்லுற்ற
பூங்க ணிமைக்கும் புருவ மதிமுகத்தீ
ரீங்கிதுவோ நும்முடைய வூர்.

*இஃது ஊர் வினாயது.*

செறிகுர லேனற் சிறுகிளி காப்பீ
ரறிகுவே னும்மை வினாஅ – யறிபறவை
யன்ன நிகர்க்குஞ்சீ ராடமை மென்றோளி
ரென்ன பெயரிரோ நீர்.

*இது பெயர்வினாயது.*

[3]நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற் – பிறையெதிர்ந்த
தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன வீண்டு. (திணை: மாலை – நூற். 1)

தங்குறிப்பி னோருந் தலைச்சென்று கண்டக்கா
லெங்குறிப்பி னோமென் றிகழ்ந்திரார் – நுங்குறிப்பின்
வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரோ
வன்றி படர்ந்த வழி.

*வன்றி - பன்றி.*

தண்டு புரைகதிர்த் தாழ்குரற் செந்தினை
மண்டுபு கவரு மாண்டகிளி மாற்று
மொண்டொடிப் பணைத்தோ ளொண்ணுத லிளையீர்
கண்டனி ராயிற் கரவா துரைமின்

---

1. மன்றம் - பொதுவில்; மரத்தடி. சேதா - சிவந்த பசு இறும்பு - சிறுகுன்று. ஆமூறல் - நீரூறல். குரல் - கதிர்.

2. எல் - ஞாயிற்றின் வெயில்: ஆகுபெயர். வில்லுற்ற புருவம் என இயைக்க. மதி - திங்கள்.

3. நறை - நறைக்கொடி. நாள் - நல்லநாள். உறை - மழை பிறையையேற்றுக் கொண்ட தாமரை இல்பொருளுவமை. ஏமரை - ஏவுண்டமரை. ஏ - அம்பு.

கொண்டன குழுவி னீங்கி மண்டிய
வுள்ளழி பகழியோ டுயங்கியோர்
புள்ளி மான்கலை போகிய நெறியே.

இவை கெடுதிவினாயின.

மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ (அகம். 110)

எனவும்,

[1]இல்லுடைக் கிழமை யெம்மொடு புணரிற்
றீது முண்டோ மாத ரீரே. (அகம் 230)

எனவும் வருவன 'பிறவும்' என்றதனாற் கொள்க.

குறையுறூஉம் பகுதி, குறையுறுபகுதி எனவுமாம்; எனவே குறையு.றுவார் சொல்லுமாற்றானே கண்ணி முதலிய கையுறை யோடு சேறலுங் கொள்க. பகுதியென வரையாது கூறலில் தனித் துழிப் பகுதி முதலியனவும் இருவருமுள்வழி இவன் [4]தலைப் பெய்தியுடையன் எனத் தோழி உணருமாறும் வினாவுதல் கொள்க. இவை குறையுறவுணர்தலும் இருவருமுள்வழி அவன் வரவுணர் தலுமாம். முன்னுறவுணர்தல் 'நாற்றமுந் தோற்றமும்' (114) என்பு ழிக் கூறுப: மதியுடம்பாடு மூவகையவென மேற் (127) கூறுப.

தோழி குறை அவட் சார்த்தி மெய்யுறக் கூறலும் - தோழி இவன் கூறுகின்ற குறை தலைவியிடத்தேயாய் இருந்ததென்று அவள்மேலே சேர்த்தி அதனை உண்மையென்று உணரத் தலைவன் கூறுதலும்: உதாரணம்:

கருங்கட லுட்கலங்க நுண்வலை வீசி
யொருங்குடன் றன்னைமார் தந்த கொழுமீ
னுணங்கல்புள் ளோப்பு மொழியிழை மாத
[5]ரணங்காகு மாற்ற வெமக்கு. (ஐந். ஐம். 47)

1. இல்லுடைக்கிழமை - இல்லறத்துக்குரிய உரிமை எனவே மனையாளாம் உரிமை என்றபடி.

2. குறை அறிவித்தாலாகிய பகுதி என்பதன்றிக் குறையுறுகின்ற பகுதி என்றும் பொருளாம். அதனால் கண்ணி முதலியவற்றொடு செல்லும் பகுதியுங் காண்க என்றபடி. கையுறை - கையிலுறுவிப்பது; காணிக்கை. கண்ணி - மாலை.

3. தனித்துழிப் பகுதி - தோழி தனித்திருந்தவிடத்துச் சென்று கூறும் பகுதி.

4. தலைப்பெய்தியுடைமை - (தலைவியோடு) கூட்டமுடைமை.

5. அணங்கு - வருத்துந்தெய்வம்.

பண்பும் பாயலுங் கொண்டன டொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி
யைதமர்ந் தகன்ற வல்குற்
கொய்தளிர் மேனி கூறுமதி தவறே. (ஐங்குறு. 176)

[1]*இவை வெளிப்பட்டன. இவற்றின் வேறுபாடு உணர்க.*

[2]குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையு
மஞ்சி லோதி யசையியற் கொடிச்சி
கண்போன் மலர்தலு மரிதிவ
டன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே. (ஐங்குறு. 299)

*இஃது இருவரும் உள்வழிவந்த தலைவன் தலைவிதன்மை கூறவே இவள் கண்ணது இவன் வேட்கையென்று தோழி குறிப்பான் உணரக் கூறியது.*

*குன்றநாடன் - முருகன்; அவள் தந்தையுமாம்.*

[3]உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்
றமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகி
லார நாறு மறல்போற் கூந்தற்
பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே. (குறுந். 286)

*இதுவும் அது.*

*இது முதலியவற்றைத் தலைவன் கூற்றாகவே கூறாது தோழி கூறினாளாகக் கூறி, அவ்விடத்துத் தலைவன் மடன்மா கூறு மென்று பொருள்கூறின் 'நாற்றமுந் தோற்றமும்' (114) என்னுஞ் சூத்திரத்துத் தோழி இவற்றையே கூறினாளென்றல் வேண்டா வாம், அது கூறியது கூறலாமாகலின்.*

*தண்டாது இரப்பினும் - இடந்தலைப்பாடு முதலிய கூட்டங் களான் -அமையாது பின்னும் பகற்குறியையும் இரவுக்குறியை யும் வேண்டினும்: உதாரணம் :*

கொண்டன் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்
வகைசே ரைம்பா றகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்
பெருங்கண் ணாய முவப்பத் தந்தை

1. இவை வெளிப்பட்டன என்றது களவு வெளிப்படக் கூறியன என்றபடி. வேறுபாடு - கருத்து வேறுபாடு.

2. கவான் - மலைப்பக்கம். மஞ்ஞை - மயில்.

3. நோக்கு, உள்ளி, காண்பேன் போலும் என முடிக்க. ஆரம் சந்தனம்.

நெடுந்தேர் வழங்கு நிலவுமணன் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
யருளினு மருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியன்மா நெஞ்சே யென்னதூஉ
மருந்துய ரவலந் தீர்க்கு
மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே. (நற்றிணை. 140)

*இதில் பரிவிலாட்டியையென இரண்டாவது விரிக்க.*

[1]கடுந்தே ரேறியுங் காலிற் சென்றுங்
கொடுங்கழி மருங்கி னடும்புமலர் கொய்துங்
கைதை தூக்கியு நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல வுணர்ந்த நெஞ்சமொடு
வைகலு மினைய மாகவுஞ் செய்தார்ப்
பசும்பூண் வேந்த ரழிந்த பாசறை
யொளிறுவே லழுவத்துக் களிறுபடப் பொருந
பெரும்புண் ணுறுநர்க்குப் பேஎய் போலப்
பின்னிலை முனியா நம்வயி
னென்னென நினையுங்கொல் பரதவர் மகளே. (நற்றிணை. 349)

*[2]தோழி நம்வயிற் பரதவர்மகளை யென்னென நினையுங் கொலென்க.*

[3]பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்
தாலொத்த வைவனங் காப்பாள்கண் – வேலொத்தென்
னெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பா ளெவன்கொலோ
வஞ்சாயற் கேநோவல் யான். (திணை: மாலை – நூற். 18)

*இவை பகற்குறி இரந்தன.*

[4]எல்லு மெல்லின் றசைவுபெரி துடையன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண வொருவன் (அகம். 110; 11–2)

*எனத் தலைவன் இரவுக்குறி வேண்டியதனைத் தோழி கூறியவாறு காண்க. இன்னும் 'இரட்டுற மொழிதல்' என்பதனால், 'தண்டாது'*

1. கைதைதூக்கியும் - தாழம்பூவைப் பறிக்குமாறு இவளைத் தூக்கிநின்றும். குற்றல் - கொய்தல். கொய்து கொடுத்தும் என்பது கருத்து. பேய்போல் - பேய் புண்ணைக் காத்துநின்றாற்போல். இது பேய்க்காஞ்சி என்னுந்துறை (தொல். பொரு. 79).

2. நற்றிணையுரையாசிரியர், தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்வதாகப் பொருள்கொள்வர் அவர் பரதவர் மகள் என்னென நினையுங்கொல் என முடிப்பர்.

3. ஐவனம் - மலை நெல். ஒழிவுகாண்பாள் - (என்னுயிரை) ஒழிவு காணுவாள். காண்பாளோ காண்கொடா எனவும் பாடம். காண்கொடா - புறம் போகாது அடங்கின.

4. எல் - பகல், எல்லின்று - ஒளியுன்று.

*என்பதற்குத் தவிராது இரப்பினுமெனப் பொருள் கூறிக் கையுறை கொண்டுவந்து கூறுவனவும், நீரேவுவன யான் செய்வேனெனக் கூறுவனவும், தோழி நின்னாற் கருதப்படுவாளை அறியேனென் றுழி அவன் அறியக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல் லாம் இதன்கண் அடக்குக. உதாரணம்:*

[1]கவளக் களியியன்மால் யானைசிற் றாளி
தவழத்தா னில்லா ததுபோற் – பவளக்
கடிகை யிடைமுத்தங் காண்டொறு நில்லா
தொடிகை யிடைமுத்தந் தொக்கு. (திணை: மாலை – நூற். 42)

*நின் வாயிதழையும் எயிற்றையுங் காணுந்தோறும் நில்லா என்கையிடத்தில் இருக்கின்ற பவளக்கொடியும் முத்தும் என்க.*

[2]நறவுக்கம ழலரி நறவு வாய்விரிந்
திறங்கிதழ் கமழு மிணைவாய் நெய்தற்
கண்ணித் தலையர் கருங்கைப் பரதவர்
நின்னைய ரல்லரோ நெறிதா ழோதி
யொண்சுணங் கிளமுலை யொருஞான்று புணரி
னுண்கயிற் றுறுவலை நுமரொடு வாங்கிக்
கைதை வேலி யிவ்வூர்ச்
செய்தூட் டேனோ செறிதொடி யானே.

[3]அறிகவளை யைய விடைமடவா யாயச்
சிறிதவள்செல் லாளிறுமென் றஞ்சிச் – சிறிதவ
ணல்கும்வாய் காணாது நைந்துருகி யென்னெஞ்ச
மொல்கும்வா யொல்க லுறும். (திணை: மாலை – நூற். 17)

*மற்றைய வழியும் - குறியெதிர்ப்பட்டுங் கையுறை மறுக்கப் பட்டுங் கொடுக்கப்பெற்றும் இரந்து பின்னின்றான் அங்ஙனங் குறியெதிர்ப்பாடின்றி, ஆற்றானாய் இரந்து பின்னிற்றலை* [4]*மாறுமவ்விடத்தும்: உதாரணம் :*

---

1. சிற்றாளி - சிங்கக்குட்டி. பவளக்கடிகை - பவளத்துண்டம் என்றது அதரத்தை; உவம ஆகுபெயர். அதனிடைமுத்தம் - எயிறு. தொடிகையிடை முத்தம் என் பதைக் கையிடைத் தொடியின் கணழுத்திய முத்தம் என மாற்றிப் பொருள் கொள்க. இது நயப்பு என்னுந் துறைக்குரிய உரை. நச்சினார்க்கினியருரைப் படி தொடி என்பது கொடியென்றிருக்கலாம். போலும்.

2. இது நீரேவிய செய்வேனென்றது.

3. இது அவளை அறியேனென்றாட் கறியக்கூறியது. அறிகு - அறிவேன். ஆய - வருந்த. செல்லாள் - சொல்லாளாக. நல்கும்வாய் - அருளும்நெறி. ஒல்கும் வாய் - ஒல்கிநடக்குந்தோறும். ஒல்கல் - தளர்தல்.

4. மாறுதல் - ஒழிதல்

[1]நின்செயல் செத்து நீபல வுள்ளிப்
பெரும்புன் பைதலை வருந்த லன்றியு
மலைமிசைத் தொடுத்த மலிந்துசெ னீத்தந்
தலைநாண் மாமலர் தண்டுறை தயங்கக்
கடல்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்
றகல்வாய் நெடுங்கயத் தருநிலை கலங்க
மாலிரு ணடுநாட் போகித் தன்னையர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்
கவ்வாலங் குந்தி யஞ்சொற் பாண்மக
ணெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகிற்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்
பயங்கெழு வைப்பிற் பல்வே லெவ்வி
நயம்புரி நன்மொழி யடக்கவு மடங்கான்
பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத வன்னி போல
விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்
சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய
கயலென வமர்த்த வுண்கட் புயலெனப்
புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பான்
மின்னேர் மருங்குற் குறுமகள்
பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே, (அகம். 126)

மாய்கதில் வாழிய நெஞ்சே நாளு
மல்லியற் குறுமக ணல்லக நசைஇ
யரவிரை தேரு மஞ்சுவரு சிறுநெறி
யிரவெ னெய்தியும் பெறாஅ யருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்
துள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமம் கைம்மிக வுறுதர
வானா வரும்படர் தலைத்தந் தோயே (அகம். 258)

என வருவன, தன்னெஞ்சினை [2]இரவு விலக்கியன.

சொல்லவற் சார்த்தலிற் புல்லிய வகையினும் - தான் வருந்திக் கூறுகின்ற கூற்றினைத் தலைவியைச் சார்த்தித் தலைவன் கூறலின் இவ்வாறு ஆற்றானாய் இங்ஙனங் கூறினானென்று அஞ்சித் தோழி உணராமல் தலைவிதானே கூடியபகுதியினும் :

---

1. செத்து - கருதி. நின்வாய் செத்து எனவும் பாடம். அதற்கு நின் எண்ணங்களை உண்மையாகக் கருதி என்பது பொருள். நெஞ்சே நீ பைதலையாய் (துன்பமுடையையாய்) வருந்தலன்றியும், அன்னி போல விளிகுவைகொல் என இயைக்க. அவ்வாங்கு உந்தி - அழகிய வளைந்த கொப்பூழ். வைப்பு - ஊர். பாண் மகள் கொள்ளாள். பெரும் வைப்பு என இயைக்க.
2. இரவு - இரந்து பின்னிற்றல்.

[1]களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும். (120)

என்பதனால் தலைவியாற் [2]குறிபெற்றுந் தோழியை இரக்கும். உதாரணம்:

[3]அயத்துவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வா
யாகத் தரும்பிய முலையள் பணைத்தோண்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயு மறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிர் புணர்வுபிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாடுஞ்செலற் கருமையிற்
கடும்புனன் மலிந்த காவிரிப் பேர்யாற்று
நெடுஞ்சுழி நீத்த மண்ணுநள் போல
நடுங்கஞர் பெதிர முயங்கி நெருந
லாக மடைதந் தோளே வென்வேற்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
யொளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
கடவு ளெழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே. (அகம். 62)

[4]அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கின ணுணங்கிடைப்
பொங்கரி பரந்த வுண்க
ணங்கலிழ் மேனி யசைஇய வெமக்கே. (ஐங்குறு. 174)

'வகை' என்றதனானே இதனின் வேறுபட வருவனவுங் கொள்க.

---

1. களம் - இடம். சுட்டுதல் - குறித்தல்.
2. குறி - குறிக்கப்படும் இடம்.
3. அயம் - நீர் பைஞ்சாய் - தண்டான்கோரை. முருந்து - வேரின் மேற்றண்டு (வெண்குருத்து). நகை - ஒளி. பேயு மறியா மறைமை புணர்ச்சி - பேயுமியங்காது வைகுங்காலத்துப் புணர்ந்த களவுப்புணர்ச்சி. துடியில் - துடிபோல. புணர்வு பிரிந்து இசைப்ப - தங்களிற் கூடியும் பிரிந்தும் அயலார் சொல்லுவன. நீத்தம் மண்ணுநீர் போல முயங்கி - நீத்தத்துக் குளிக்குமிடத்து அந்நீர் குளிருமாறுபோலக் குளிரமுயங்கி. மழைக்கண் மாயோள் - மழைபோலும் கண்கரியோள். மடவதுமாண்ட மாயோள் அடைதந்தாள் என இயைக்க. இது தோழிக்குத் தலைவி முன்குறிநேர்ந்தமை கூறி இரந்து பின்னின்றது அகத்துள் வேறுதுறை கூறப்பட்டது.
4. நச்சினார்க்கினியர் கருத்தின் படி மேனி (மேனியையுடையாள்) குறி நல்கினள் என இயையும். இது ஐங்குறுநூற்றுள் வேறு துறையாகக் கூறப்பட்டுளது. கூட்டமும் வேறு.

[1]தளிர்சேர் தண்டழை தைஇ நுந்தை
குளிர்வாய் வியன்புனத் தெற்பட வருகோ
குறுஞ்சுனைக் குவளை யடைச்சிநாம் புணரிய
நறுந்தண் சார லாடுகம் வருகோ
வின்சொன் மேவலைப் பட்டவெ னெஞ்சுணக்
கூறினி மடந்தைநின் கூரெயி றுண்கென
யான்றன் மொழிதலின் மொழியெதிர் வந்து
தான்செய் குறிநிலை யினிய கூறி
யேறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்
டுறுகழை நிவப்பிற் சிறுகுடிப் பெயருங்
கொடிச்சி செல்புற நோக்கி
விடுத்த நெஞ்சம் விடலொல் லாதே. (நற்றிணை. 204)

[2]இரண்டறி கள்வியநங் காத லோளே
முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கான நண்ணுற வந்து
நள்ளென் கங்கு னம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
யமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே. (குறுந். 312)

*அறிந்தோள் அயர்ப்பின் அவ்வழி மருங்கிற் கேடும் பீடுங் கூறலும் - மதியுடம்பட்ட தோழி நீர் கூறிய குறையை யான் மறந்தேனெனக் கூறுமாயின் அவ்விடத்துத் தன்னொடு கூடாமை யால் தலைவிமருங்கிற் பிறந்த கேட்டையும் அவள் அதனை ஆற்றியிருந்த பெருமையையுங் கூறுதலும்: உதாரணம்:*

[2]ஒள்ளிழை மகளிரொ டோரையு மாடாய்
வள்ளிதழ் நெய்தற் றொடலையும் புனையாய்
விரிபூங் கான லொருசிறை நின்றோ
யாரை யோநிற் றொழுதனம் வினவுதுங்
கண்டோர் தண்டா நலத்தை தெண்டிரைப்
பெருங்கடற் பரப்பி னமர்ந்துறை யணங்கோ

---

1. தைஇ - உடுத்து. குளிர் - கிளிகடிகருவியுளொன்று. எற்படபொழுதுபட. அடைச்சி - அணிந்து. ஆடுகம் - விளையாடுவேம். எயிறு உண்கு - நின் எயிற்றைச் சுவைப்பேன். என மொழிதலின் என இயையும். புறம் - பின்புறம். விடுத்த - கைவிட்ட. நெஞ்சம் என்பது விளி. விடல்ஒல்லாது - கைவிடல் ஆகாது.

2. இரண்டறிகள்வி - இரு வேறுபட்ட ஒழுகலாற்றை அறிந்த கள்ளத்தன்மை யையுடையள். முரண் - மாறுபாடு. துப்பு - வலி. நம் ஓரன்னள் - நம்மோடு ஒருதன்மையள் (ஒத்தவள்) ஆயினாள். அமரா - பொருந்தாத; மாறுபடாத. வைகறையான் - விடியற் காலத்தில். தமர் - சுற்றம்.

3. ஓரை - விளையாட்டு. தொடலை - மாலை. புனைதல் - அழகு பெறத் தொடுத்தல்; கட்டுதல். கண்டோர்தண்டா - கண்டோராற் கெடாத (திருட்டிதோஷம் உறாத). அணங்கு - தெய்வம்.

விருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை யென்றனெ னதனெதிர்
முள்ளெயிற்று முறுவலுந் திறந்தன
பல்லித ழுண்கணும் பரந்தவாற் பனியே. (நற்றிணை. 155)

[1]தண்டழை செரீஇயுந் தண்ணென வுயிர்த்துங்
கண்கலுழ் முத்தங் கதிர்முலை யுறைந்து
மாற்றின ளென்பது கேட்டன மாற்றா
வென்னினு மவளினு மிகந்த
வின்னா மாக்கட்டிந் நன்ன ரூரே.

தோளுங் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் றொண்டி யன்னவெற்
கண்டு நயந்துநீ நல்காக் காலே. (ஐங்குறு. 178)

*எனவரும் [2]அயர்த்தது அவள் அருமை தோன்றுதற்கு.*

*தோழி [3]நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி - தோழி இவ் விடத்துக்காவலர் [4]கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற் றனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து:*

*[5]உம்மை -சிறப்பு. இதுவே மடன்மா கூறுதற்கு ஏதுவாயிற்று.*

[6]நல்லுரை யிகந்து புல்லுரைத் தாஅய்ப்
பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல
வுள்ளந் தாங்கா வெள்ள நீந்தி
யரிதவா வுற்றனை நெஞ்சே நன்றும்
பெரிதா லம்மநின் பூச லுயர்கோட்டு
மகவுடை மந்தி போல
வகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே. (குறுந். 29)

---

1. இன்னாமாக்கட்கு - இன்னாதமாக்களையுடையது. தோழியையே முன்னிலைப் புறமொழியாக வைத்துக் கூறியது இச்செய்யுள் என்க.
2. அயர்த்தது - தோழி அயர்த்தது. அவள் - தலைவி.
3. நீக்கல் - நீக்கி நிறுத்தல்; என்றது சேட்படுத்தலை.
4. கடியர் - கொடியர்.
5. உம்மை - நிலைமையும் என்பதிலுள்ள உம்மை.
6. புல்லுரை - பயனற்ற உரை. தாஅய் - பரவப்பெற்று. பசுங்கலம் - சுடப்படாத கலம். தாங்கா - பொறுக்காத. வெள்ளம் - ஆசைவெள்ளம். அரிது அவா வுற்றனை - பெறுதற்கரியதை அவாவினாய். பூசல் - போராட்டம். பெறின் நன்றும் பெரிது என்க. பெறின் என்றமையாற் கேட்பாரில்லை என்றபடி. இல்லை என்பதனால் சேட்படுத்தாள் என்பது பெறப்படும்

[1]பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவ
ளுருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொய்யில் காப்போ ரறிதலு மறியார்
முறையுடை யரசன் செங்கோல வையத்
தியான்றற் கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை மன்ற
வளிதோ தானேயிவ் வழுங்க லூரே. (குறுந். 276)

[2]உரைத்தசிற் றோழியது புரைத்தோ வன்றே
துருக்கங் கமழு மென்றோ
டுறப்ப வென்றி யிறீஇயரென் னுயிரே. (சிற்றட்டகம்.)

*மடன்மாகூறும் இடனுமாருண்டே - அச்சேட்படையான் மடலேறுவலெனக் கூறும் இடனும் உண்டு என்றவாறு.*

*நோக்கி மடன்மா கூறுமென்க. உம்மையான் வரைபாய்வலெனக் கூறும் இடனும் உண்டு என்றவாறு. உதாரணம்:*

[3]விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்
மணியணி பெருந்தார் மார்பிற் பூட்டி
வெள்ளென் பணிந்துபிற ரெள்ளத் தோன்றி
யொருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித்
தெருவி னியலவுந் தருவது கொல்லோ
கலிங்கவி ரசைநடைப் பேதை
மெலிந்தில ணாம்விடற் கமைந்த தூதே. (குறுந். 182)

*இது நெஞ்சொடு கிளத்தல்.*

[4]நாணாக நாறு நனைகுழலா ணல்கித்தன்
பூணாக நேர்வளவும் போகாது – பூணாக
மென்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமே
னின்றேன் மறுகிடையே நேர்ந்து (திணை: நூற். 16)

*இது தோழிக்குக் கூறியது. இவை [5]சாக்காடு குறித்தன.*

---

1. தைஇயும் - செய்துகொடுத்தும். தைஇயும் சூழ்ந்தும் எழுதிய தொய்யிலையும் இவளைப் பாதுகாத்து நிற்போரறியார். எனவே தோழி சேட்படுத்தாள் என்பது பெறப்படும். இவ்வழுங்கலூர் யாங்காவதுகொல் என இயைக்க. அறிதலுமறியார் - அறிதலுஞ் செய்யார். அளிது - இரங்கத்தக்கது.

2. அது புரைத்தோ - அது உயர்ச்சியுடையதோ. அது - துறத்தல்.

3. தூது தருவதுகொல்லோ என இயையும். தூது என்றது தோழியை.

4. நாகம் - நாகப்பூ. தன் ஆகம் - தன் மார்பு. பூண் ஆகம் போகாது என்றேன் - எனும்பினாற்செய்த பூண் என் மார்பினின்றும் போகாது என்றேன். இரண்டாவது - இரண்டாவது வார்த்தை

5. சாக்காடு - சாக்காடு என்னு மெய்ப்பாடு. (தொல். பொரு. 100ஞ் சூத்திரம்)

மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே. (குறுந். 17)

இதனுட் 'பிறிதுமாகுப' என்றது வரைபாய்தலை.

'இடன்' என்றதனால் தோழி பெரியோர்க்குத் தகா தென்ற வழித் தலைவன் மறுத்துக் கூறுவனவும் பிறவும் வேறுபட வருவனவுங் கொள்க:

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். (குறள். 1133)

இனி, 'இடனும்' என்ற உம்மையைப் பிரித்து நிறீஇ இரு நான்கு கிளவியும் மகிழ்ச்சியுங் கலங்கலுங் கூறும் இடனும் உண்டு; உரைப்பினும் பெட்பினு முவப்பினு மிரப்பினும் வகையினும் கூறும் இடனும் உண்டு; பகுதிக்கண்ணும் மற்றைய வழிக்கண் ணுங் கூறும் இடனும் உண்டு; மெய்யுறக் கூறலும் பீடுங்கூறலும் உண்டென முடிக்க. (11)

**(இரந்து பின்னிற்புழித் தலைவன் கூற்று நிகழுமிடம் இவை எனல்)**

103. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினு
மன்புற்று நகினு மவட்பெற்று மலியினு
மாற்றிடை யுறுதலு மவ்வினைக் கியல்பே.

இதுவும் இரந்து பின்னிற்புழித் தலைவன் கூற்று நிகழுமாறு கூறுகின்றது.

**இ – ள்:** பண்பிற் பெயர்ப்பினும் - தோழி தலைவியது இளமை முதலிய பண்புகூறி அவ்வேட்கையை மீட்பினும்: உதாரணம்:

குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையண் முளைவா ளெயிற்ற
ளிளைய ளாயினு [1]மாரணங் கினளே. (ஐங்குறு. 256)

இஃது இளையளெனப் [2]பெயர்த்துழித் தலைவன் கூறியது.

---

1. ஆரணங்கினள் - நீக்குதற்கரிய வருத்தத்தைச் செய்யு மியல்பினள்.

2. பெயர்த்தல் - மீட்குதல்.

*பரிவுற்று மெலியினும் - [1]இருவகைக் குறியிடத்துந் தலைவியை எதிர்ப்படும் ஞான்றும் எதிர்ப்பட்ட ஞான்றும் எதிர்ப்படா நின்ற ஞான்றும் பலவாயவழி அவன் [2]பரிந்த உள்ளத்தனாய் மெலியினும்: உதாரணம்:*

[3]ஆனா நோயோ டழிபடர்க் கலங்கிக்
காமம் கைமிகக் கையறு துயரங்
காணவு நல்கா யாயிற் பாணர்
பரிசில் பெற்ற விரியுளை நன்மான்
கவிகுளம்பு பொருத கன்மிசைச் சிறுநெறி
யிரவலர் மெலியா தேறும் பொறைய
னுரைசா லுயர்வரைக் கொல்லிக் குடவயி
னகலிலைக் காந்த ளலங்குகுலைப் பாய்ந்து
பறவை யிழைத்த பல்க ணிறாஅற்
றேனுடை நெடுவரைத் தெய்வ மெழுதிய
வினைமாண் பாவை யன்னோள்
கொலைசூழ்ந் தனளா னோகோ யானே. (நற்றிணை. 185)

*இது பகற்குறியிற் பரிவுற்றது.*

[4]ஓதமு மொலியோ வின்றே யூதையுந்
தாதுளர் கானற் றவ்வென் றன்றே
மணன்மலி மூதூ ரகனெடுந் தெருவிற்
கூகைச் சேவல் குராலோ டேறி
யாரிருஞ் சதுக்கத் தஞ்சுவரக் குழறு
மணங்குகால் கிளரு மயங்கிரு ணடுநாட்
பாவை யன்ன பலராய் வனப்பிற்
றடமென் பணைத்தோண் மடமிகு குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்க லுள்ளி
மீன்கண் டுஞ்சும் பொழுதும்
யான்கண் டுஞ்சின் யாதுகொ னிலையே. (நற்றிணை. 319)

*இஃது இரவுக்குறியிற் பரிவுற்றது.*

---

1. இருவகைக்குறி - பகற்குறியும் இரவுக்குறியும்.
2. பரிதல் - வருந்துதல்.
3. ஆனா - அமையாத, நீங்காத. படர் - துன்பம். காணவும் - நீ கண்டுவைத்தும். பொறையன் - சேரன். கொல்லிக்குடவயின் - கொல்லிமலையின் மேற்குப் பக்கம். பறவை - வண்டு. தெய்வம் - தெய்வத்தச்சன் என்பர் உரைகாரர். 'பூதம் புணர்த்த புதிதியல் பாவை' எனவும் வருகின்றது. (நற். 192.) கொல்லிப் பாவையினியல்பை நற்றிணையுள் இதன்விரிவுரை நோக்கி யறிக. அது நகைத்துக் கொல்வது.
4. ஓதம் - கடல் ஊதை - காற்று. தவ்வென்றன்று - பொலிவழிந்தது. குராஅல் - கூகைப்பேடை சதுக்கம் - நாற்சந்தி. அணங்கு - பேய். கால்கிளரும் - உலாவும்.

[1]மழைவர வறியா மஞ்ஞை யாலு
மடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி
தானெம் மருளா ளாயினும்
யாந்த னுள்ளுபு மறந்தறி யேமே. (ஐங்குறு. 298)

[2]களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. (குறள். 1145)

*இன்னும் 'பரிவுற்று மெலியினும்'' என்றதனானே புணர்ந்து நீங்குந் தலைவன் ஆற்றாது கூறுவனவும், வறும் புனங்கண்டு கூறுவனவும், இற்செறிப்பறிவுறுப்ப ஆற்றானாய்க் கூறுவனவும், தோழி இற்புணர்ச்சிக்கண் தன்னிலைக் கொளீஇக் கூறுவன வும், இரவுக் குறிக்கண் வருகின்றான் தலைவியை ஐயுற்றுப் [3]பாங்கற்குக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அமைக்க.*

[4]என்று மினிய ளாயினும் பிரித
லென்று மின்னா ளன்றே நெஞ்சம்
பனிமருந்து விளைக்கும் பரூஉக்க ணிளமுலைப்
படுசாந்து சிதைய முயங்குஞ்
சிறுகுடிக் கானவன் பெருமட மகளே.

[5]கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
யாடா வடகினுளுங் காணேன்போர் – வாடாக்
கருங்கொல்வேன் மன்னர் கலம்புக்க கொல்லோ
மருங்குல்கொம் பன்னாண் மயிர். (திணை: நூற். 4)

[6]பெறுவ தியையா தாயினு முறுவதொன்
றுண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்
கைவள ரோரி கானந் தீண்டி
யெறிவளி கமழு நெறிபடு கூந்தன்
மையீ ரோதி மாஅ யோள்வயி

---

1. அறியா - அறிந்து. ஆலும் - ஏங்கும். அடுக்கல் - மலை.
2. வேட்டல் - விரும்பல். வெளிப்படல் - அலராதல்.
3. இது பாகன் என்றிருத்தல்வேண்டும்.
4. இது புணர்ந்து நீங்குந் தலைவன் ஆற்றாது கூறியது. இன்னாள் - துன்பஞ் செய்தலுடையள். நெஞ்சம் என்பது விளி. படு - பொருந்திய. சிதைய - அழிய. முயங்கல் - தழுவல்.
5. வறும்புனங்கண்டு கூறியது. ஆடாவடகு - அடாவடகு = விளையாட்டு. மன்னர்கலம் - மன்னரது மணிமுடி. எனவே கலம் புக்ககொல் என்பது முடி கூடினகொல் என்றபடி. மயிர்முடிகூடினகொல் என்றதனால், மயிர்முடிக்கும் பருவமுற்றாள்போலும் என்பது கருத்து. எனவே இற்செறிக்கப்பட்டாள் போலும் என்று கருதினான் என்றபடி.
6. இது தோழி இற்செறிப்பறிவுறுப்பத் தலைவன் ஆற்றாது நெஞ்சிற்குக் கூறியது.

னின்றை யன்ன நட்பி னிந்நோ
யிறுமுறை யெனவொன் றின்றி
மறுமை யுலகத்து மன்னுதல் பெறினே. (குறுந். 199)

[1]நோயு மகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப் புற்ற தோளை நீயே
யென்னுள் வருதியோ வெழினடைக் கொடிச்சி
முருகுபுணர்ந் தியன்ற வள்ளி போலநின்
னுருவுக்கண் ணெறிப்ப நோக்கலாற் றலனே
போகிய நாகப் போக்கருங் கவலை
சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்
சேறா டிரும்புற நீறொடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்பழீஇக்
கோணாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்கஞ் சிறுகுடி யானே. (நற்றிணை. 82)

[2]மயில்கொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர் – குயில்பயிருங்
கன்னி யிளஞாழற் பூம்பொழி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு. (திணை. ஐம். 49)

*அன்பு உற்று நகினும்* - *[3]தோழி குறைமறுப்புழி அன்பு தோன்ற நகினும்: உதாரணம்:*

நயனின் மையிற் பயனிது வென்னாது
பூம்பொறிப் பொலிந்த வழலுமி ழகன்பைப்
பாம்புயி ரணங்கி யாங்கு மீங்கிது
தகாஅது வாழியோ குறுமக ணகாஅ
துரைமதி யுடையுமென் னுள்ளஞ் சாரற்
கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப்
பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த மாயிதழ் மழைக்க
வுறாஅ நோக்க முற்றவென்
பைத னெஞ்ச முய்யு மாறே. (நற்றிணை. 75)

*இஃது அன்புற்று நக்குழித் தலைவன் கூறியது.*

*அவட் பெற்று மலியினும்* - *தோழி உடம்பாடுபெற்று மனம் மகிழினும்: உதாரணம்:*

---

1. இது தோழியிற் கூட்டத்தின்கண் தன்னிலை கொளீஇக் கூறியது. நற்றிணை யுரை பார்த்தறிக.

2. இது இரவுக்குறிக்கண் வருகின்றான் தலைவியை ஐயுற்றுப் பாங்கற்குக் கூறியது. கேளீர் - நண்பீர். இங்கே தோன்றும் இவ்வுருமயில்கொல் என வருவித்துரைக்க. பயிரும் - பெடையை அழைக்கும். என்னெஞ்சு கண்ணின் வருந்தும் என இயைக்க.

3. தோழி, தான் குறைமறுக்குமிடத்து நகினும் என்பது கருத்து.

எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ
ளொண்ணுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ [1]மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே. (ஐங்குறு. 175)

*இஃது அவட்பெற்று மலிந்து தலைவன் கூறியது.*

*இன்னும், 'அவட் பெற்று மலியினும்' என்றதற்கு 'இரட்டுற மொழிதல்' என்றதனாற் தலைவியைப் பகற்குறியினும் இரவுக் குறியினும் பெற்று மகிழினும் என்று பொருளுரைக்க.*

நன்றே செய்த வுதவி நன்றுதெரிந்
தியாமெவன் செய்குவ நெஞ்சே காமர்
மெல்லியற் கொடிச்சி காப்பப்
பல்குர லேனற் பாத்தருங் கிளியே. (ஐங்குறு. 288)

*இது பகற்குறிக்கட் கிளி புனத்தின்கட் படிகின்றதென்று தலைவியைக் காக்க [2]ஏவியதனை அறிந்த தலைவன் அவளைப் பெற்றேமென மகிழ்ந்து கூறியது.*

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று. (குறள். 1114)

*இஃது இரவுக்குறிக்கண் அவட்பெற்று மலிந்தது.*

[3]கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
யரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பி
னிளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூ

---

1. மடந்தை என்றது தோழியை. அரிவை - தலைவி. இச் செய்யுளை முன் பாங்கற் கூட்டங் கூடி நீங்குந் தலைவன் தலைவிக்குக் கூறியதாகவுங் கூறியுள்ளார் நச்சினார்க்கினியர்.

2. ஏவியது - தந்தை தாயர்.

3. கூறுவங்கொல் ... நன்மொழி என்பதற்கு, (இவட்குக்) கூறு வங்கொல் கூறலங்கொல் என எண்ணிக் கரந்த காமத்தைக் கைநிறுக்கல்லாது (அடக்க முடியாமையால்) நயந்து நாம்விட்ட நன்மொழி என உரைக்க. தூவினை நுண்ணூல் - தூய தொழிற் பாடமைந்த நுண்ணிய நூலாலாய ஆடை. பொருந்தினளாய் வந்து முயங்கினள் பெயர்வோள் அம்மா, அரிவையல்லள், சூர்மகள் என்னும் என்நெஞ்சு என இயைக்க. என்னெஞ்சு என்னும் என மாற்றி முடிக்க. வில்வகுப்புற்ற - வில்லை வகுத்தாற்போன்ற. நல்வாங்கு குடச்சூல் - நல்ல வளைந்த சூல் உற்றதுபோற் புடை பருத்திருக்கின்ற சிலம்பு

லஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோ
ளான்ற கற்பிற் சான்ற பெரிய
வம்மா வரிவையோ வல்ல டெனாஅ
தாஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய வுருகெழு கவாஅ
னேர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகண் மாதோ வென்னுமென் னெஞ்சே. (அகம். 198)

[1]விண்ணகம் விளக்கல் வேண்டி நம்மிற்
பிரியினும் பிரியுமோ பெருந்தோட் கொடிச்சி
வானஞ் சூடிய திலகம் போல
வோங்கிரு விசும்பினுங் காண்டு
மீங்குங் காண்டு மிவள்சிறு நுதலே.

*இதுவுமது.*

*ஆற்றிடை உறுதலும் - தலைவன் செல்லும் நெறிக்கண் இடையூறு தோன்றின இடத்தும்:*

*என்றது, தலைவியுந் தோழியும் வருவழியருமை கூறியவழித் தலைவன் கூற்று நிகழுமென்றவாறு. உதாரணம்:*

[2]குருதி வேட்கை யுருகெழு வயமான்
வலமிகு முன்பின் மழகளிறு பார்க்கு
மரம்பயில் சோலை மலியப் பூழிய
ருருவத் துருவி னாண்மேயலாரும்
மாரி யெண்கின் மலைச்சுர நீளிடை

குடைசூல் எனச் சிலப்பதிகாரத்து வரலின் அவ்வாறும் பாடங் கொள்ளலாம். கவிரம் பெயரிய கவாஅன் - கவிரம் என்று பெயர்பெற்ற மலைப்பக்கம்.

1. விண்ணகம் விளக்கல் வேண்டி - விண்ணிடத்தை விளக்கலை விரும்பி. கொடிச்சி வேண்டிப் பிரியினும் பிரியுமோ (பிரியாள்) என மாற்றிக் கூட்டுக. இவள் சிறுநுதலை விசும்பினுங் காண்டும் (ஆயினம்) ஈங்கும் (இப்பூமியினும்) காண்டும்; ஆதலின் பிரியுமோ பிரியாள் என்பது கருத்து. திலகம் - நெற்றித் திலகம்வானம் சூடிய - விண் அணிந்த. விண் அணிந்த ஒரு நெற்றித் திலகம் போல விண்ணினும் காண்டும் என இயைக்க இவள் சிறுநுதலை விசும்பினுங் காண்டும் என்றதில், சிறுநுதல் என்றது இவள் சிறுநுதல போன்ற பிறையை. விண்ணகம் விளக்கல்வேண்டி என்றது, தன் நுதலாகிய பிறையால் விண்ணிடத்தை விளக்கல்வேண்டி என்றபடி. இவள் நுதலை விசும்பிற் காண்டலால் விண்ணிடம் விளக்கல் வேண்டிப் பிரியினும் என்றான். ஈங்குக் காண்டலால் பிரியுமோ (பிரியாள்) என்றான். உவமையாகிய பிறையினியல்பை நுதலில் ஆரோபித்து (ஏற்றி) விசும்பினுங் காண்டும் என்றான் என்க.

2. குருதி - இரத்தம். உரு - அச்சம். வயமான் - வலிய புலி. வயமான் பார்க்கும் சோலை என இயைக்க. துரு - ஆடு. துருவைப் போல

நீநயந்து வருத லெவனெனப் பலபுலந்
தழுதன ளுறையு மம்மா வரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்
மாணல முள்ளி வரினெமக்
கேம மாகு மலைமுத லாறே. (நற்றிணை. 192)

எனத் தலைவி ஆற்றினதருமை கூறியதற்குத் தலைவன் கூறியது.

'இரட்டுறமொழிதல்' என்பதனான் [1]'ஆற்றிடையுறுதற்'கு வரைவிடைவைத்துப் பிரிந்தான் ஆற்றிடை வருத்தமுற்றுக் கூறுவனவுங் கொள்க. அது போகின்றான் கூறுவனவும் மீண்டவன் [2]பாங்கற்குக் கூறுவனவுமாம்.

[3]ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
றூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்
கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி
மரையின மாரு முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோ ளூரே. (குறுந். 235)

[4]கவலை கெண்டிய வகல்வாய்ச் சிறுகுழி
கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன
காரெதிர் புறவி னதுவே யுயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்
வரைகோ ளறியாச் சொன்றி
நிரைகோற் குறுந்தொடித் தந்தை யூரே. (குறுந். 233)

அவ்வினைக்கு இயல்பே - அத் தோழியிற் கூட்டத்திடத்துத் தலைவன் கூற்று நிகழ்வதாகிய இலக்கணமாம் என்றவாறு. (12)

---

மேயலாரும் (மேய்கின்ற) கரடி என இயைக்க. அரிவை - அரிவையே! நின் ஆய் நலன் உள்ளிவரின் ஆறு (வழி) ஏமமாகும் என முடிக்க. பூதம் புணர்த்த பாவை - கொல்லிப் பாவை.

1. ஆற்றிடை யுறுதற்குக் கொள்க என இயையும்.
2. பாங்கற்கு - பாகற்கு என்றிருத்தல்வேண்டும். குறுந்தொகையுரை நோக்கியறிக.
3. வாடை - வாடைக்காற்றே, நல்லோளூர் கல்லுயர் நண்ணியது ஓம்புமதி எனக் கூட்டி முடிக்க. கல் - மலை. உயர் - உயரம் (=உச்சி) தூங்குதோல் - நால்கின்ற தோல். தூங்குதோல் கடுக்கும் அருவி என இயையும்.
4. கவலை - கவலைக்கிழங்கு. கெண்டிய - அகழ்ந்தெடுத்த. தாஅய் - பரவப் பெற்று. மூய் - மூடி. கார் எதிர் - கார்காலத்தை ஏற்றுக்கொண்ட. புறவினது - முல்லை நிலத்தின்கண்ணது. ஊர்புறவினது என முடிக்க. சொரிந்த மிச்சில் - சொரிந்து எஞ்சிய பொருள். மிச்சிலையும் சோற்றையுமுடைய ஊர் உன முடிக்க.

**(உலகியலாற் புணர்க்கும் பாங்கனிமித்தம் இத்துணையவெனல்)**

**104. பாங்க னிமித்தம் பன்னிரண் டென்ப.**

இது, மேற் பாங்கிநிமித்தம் கூறிய அதிகாரத்தானே பாங்கனி மித்தங் கூறுகின்றார். ''வாயில் பெட்பினும்' (102) என்ற பாங்கனி மித்தம் போலாது இது வேறுபடக் கூறலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது; என்னை? பாங்கன் தலைவியை எதிர்ப் பட்டு வந்து தலைவற்கு உரைத்தலன்றிக் காளையரொடு கன்னி யரை உலகியலாற் புணர்க்குமாறு புணர்க்குந் துணையேயாகலின்.

இ – ள்: அகனைந்திணையும் அல்லாதவழிப் பாங்கன் கண்ணவாகிய நிமித்தம் பன்னிரு பகுதியவாம் என்றவாறு.

எண்வகை மணத்தினும் இடைநின்று புணர்க்கும் பார்ப் பான் இருவகைக் கோத்திரம் முதலியனவுந் தானறிந்து இடை நின்று புணர்த்தல் வன்மை அவர் புணர்தற்கு நிமித்தமாதலின் அவை அவன் கண்ணவெனப்படும். இவனைப் பிரசாபதியென்ப. நிமித்தமுங் காரணமும் ஒன்று. காரணம் பன்னிரண்டெனவே காரியமும் பன்னிரண்டாம். அவை எண்வகை மணனுமாதலின் அவற்றைக் கைக்கிளை முதலிய ஏழுதிணைக்கும் இன்னவாறு உரியவென வருகின்ற சூத்திரங்களாற் பன்னிரு பகுதியும் அடங் கக் கூறுப. அவ்வாற்றானே பிரமம் பிராசாபத்தியம் ஆரிடந் தெய்வம் எனவும், முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனவும், அசுரம் இராக் கதம் பேய் எனவும் பன்னிரண்டாம். பிரமம் முதலிய நான்கற்கும் பாங்கன் ஏதுவாகலின் இவ்வாறு பிரமசரியங் காத்தானெனவும், இவன் இன்ன கோத்திரத்தான் ஆகலின் இவட்கு உரியனெனவும், இவளை இன்னவாற்றாற் கொடுக்கத் தகுமெனவும், இன்னோனை ஆசாரியனாகக்கொண்டு வேள்விசெய்து மற்றிக் கன்னியைக்கொடுக்கத் தகுமெனவுஞ் சொல்லிப் புணர்க்குமென்பது. இனி, யாழோர் கூட்டத்துள் ஐந்திணையுமாயிற் பாடலுட் பயின்ற வகையானே முதல் கரு

1. 'வாயில் பெட்பினும்' என்றதனா லுணர்த்தப்படும் பாங்கனிமித்தம் புலனெறிவழக்காற் கூறப்படும் பாங்கனிமித்தம்; இது உலகியலாற் கூறப் படும் பாங்கனிமித்தமாதலின் இது வேறாகும். ஆதலின் இது முற்கூறிய பாங்கனிமித்தத்தை விலக்கி வேறு கூறலின் எய்தியது விலக்கலாயிற்று என்றபடி.

உரிப்பொருள் வரையறைபற்றி முறைசிறந்து வருதலும் பெயர் கொளப் பெறாமையும் உடையவன்றே, அவ்வாறன்றி ஈண்டுக் கொள்கின்ற யாழோர் கூட்டத்து ஐந்திணையுமாயின் அவ்வந் நிலத்தியல்பானும் [1]பிறபாடை ஒழுக்கத்தானும் வேறுபட்ட வேறுபாடுபற்றியுஞ் சுட்டியொருவர்ப் பெயர் கொடுத்தும் வழங்குகின்ற உலகியலான் எல்லாரையும் இடைநின்று புணர்ப் பாருள்வழி அவ்வந்நிமித்தங்களும் வேறு வேறாகி வரும் பாங்கன் நிமித்தங்களையுடைய எனப்பட்டன.

இங்ஙனம் ஐந்திணைப்பகுதியும் பாங்கனிமித்தமாங்கால் வேறுபடுமெனவே புலனெறிவழக்கிற்பட்ட [2]இருவகைக் கைகோளும் போலா இவை யென்பதூஉம், அவ்வந்நிலத்தின் மக்கட்குத் தக்க மன்றலும் வேறாகலின் அவர்க்கும் பாங்கர் உளரென்பதூஉம், இவ்வாற்றான் எண்வகைமணனும் உடனோ தவே இவையும் [3]ஒழிந்த எழுவகைமணனும்போல அகப்புற மெனப்படுமென்பதூஉங் கொள்க.

இனி, அசுரத்தன்மையாளைக் குரவர் இன்னவாறு கொடுப் பர் நீயுஞ் சேறியென்று ஒருவன் பாங்குபடக்கூறலும், இவனை அவட்குக் காட்டி இவன் இன்னனென்று ஒருவன் இடைநின்று கூறலும் உண்மையின், அதுவும் பாங்கனிமித்தமுடைத்து. இராக்கதத்திற்கும் இத்தன்மையாள் இன்னுழி இருந்தாளென்று பாங்காயினார் கூறக்கேட்டு ஒருவன் வலிதிற்பற்றிக் கோடலின் இதுவும் பாங்கனிமித்தமுடைத்து; பேய்க்கும் பொருந்துவது அறியாதான் இடைநின்று புணர்ப்பின் அதற்கும் அது நிமித்த மாம். இப்பன்னிரண்டும் தொன்மையுந் தோலு (550 - 1) மென்ற வனப்பினுள் வருவன. (13)

**(பன்னிரண்டெனப்பட்ட எண்வகை மணத்தினுள் ஏழும் இன்னதிணைப் பாற்படுமெனல்)**

105. முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே
பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே.

மேற் பன்னிரண்டெனப்பட்ட எண்வகை மணத்தினுள் ஏழனை எழுதிணையுள் இன்னதிணைப்பாற்படும் என்கின்றது.

---

1. பிறபாடை என்றது ஆரியமுதலியவற்றை.
2. இருவகைக் கைகோள் - களவும் கற்பும்.
3. ஒழிந்த - காந்தருவம் ஒழிந்த.

**இ – ள்:** முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே - இதற்கு [1]முன் நின்ற அசுரமும் இராக்கதமும் பைசாசமும் கைக்கிளை யென்றற்குச் சிறந்திலவேனுங் கைக்கிளையெனச் சுட்டப்படும், பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே - பின்னர் நின்ற பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வதமென்னும் நான்கினையும் பெருந் திணை தனக்கு இயல்பாகவே பெறுமெனவும் கூறப்படும் என்றவாறு.

மன்றல் எட்டு என்ற வரலாற்று முறையானே வாளாது பன்னிரண்டென்றா ரென்பதேபற்றி, ஈண்டும் அம்முறையானே இட வகையான் 'முன்னைய மூன்றும்' 'பின்னர் நான்கும்' என்றார்; எனவே, இனிக் கூறும் 'யாழோர் மேன' (106) ஐந்தும் ஒன்றாக அவ்விரண்டற்கும் இடையதெனப்படுவதாயிற்று. வில்லேற்றியாயினுங் கொல்லேறுதழீஇயாயினுங் கொள்வலென் னும் உள்ளத்தனாவான் தலைவனேயாதலின் அதனை முற்படப் பிறந்த அன்புமுறை பற்றி ஒருதலைக் காமமாகிய கைக்கிளை யென்றார். இராக்கதம் வலிதின் மணஞ்செய்தலாதலின் அதுவும் [2]அப்பாற்படும்; பேயும் அப்பாற்படும். இவை முன்னைய மூன் றுங் கைக்கிளையாயவாறு. 'காமஞ்சாலா விளமை யோள்வயிற்' (50) கைக்கிளை சிறப்புடைத்தென்றற்குப் 'புல்லித்தோன்றும்' (50) எனக் கூறி, இதனை வாளாது 'குறிப்பு' என்றார்; [3]ஆண்டுப் பிற்காலத்தன்றிக் காட்சிக்கண் மணம் அதற்கின்மையின் ஈண்டு மணங் கூறும்வழிக் கூறாது அகத்திணையியலுட் கூறினார். 'ஏறிய மடன்மா' முதலியவற்றைப் 'பெருந்திணைக் குறிப்பே' (51) எனக் கூறி ஈண்டுப் 'பெருந்திணை பெறுமே' என்றார், அவை சிறப்பில இவை சிறப்புடைய வென்றற்கு.

இந்நான்கும் ஒருதலைக்காமம் பற்றி நிகழாமையானும் ஒருவனோ டொருத்தியை எதிர்நிறீஇ அவருடம்பாட்டோடு புணர்க்குங் கந்தருவ மன்மையானும் அவற்றின் வேறாகிய பெருந் திணையாம். (14)

### (பன்னிரண்டனுள் இடையதாய ஐந்தும் இவையெனல்)

**106.** முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பி னைந்நிலம் பெறுமே.

இஃது அப்பன்னிரண்டனுள் இடையதாய் ஒழிந்த ஐந்தும் கூறு கின்றது.

---

1. முன்னின்ற - எண்வகை மணத்துள் முன்னின்ற.
2. அப்பால் - கைக்கிளைப்பால்
3. ஆண்டு - இளமையோள்வயிற் கைக்கிளைக்கண்.

இ — ள்: முதலொடு புணர்ந்த யாழோர் மேன - மேற்கூறிய நடுவணைந்திணையுந் தமக்கு முதலாக அவற்றொடு பொருந்தி வரும் கந்தருவமார்க்கம் ஐந்தும், தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே - கெடலருஞ் சிறப்பொடு பொருந்திய ஐவகை நிலனும் பெறுதலின் அவை ஐந்தெனப்படும் என்றவாறு.

எனவே, [1]முதற்கந்தருவம் ஐந்துமேயன்றி அவற்றோடு பொருத்தமுடைய கந்தருவம் இவ்வைந்துமென வேறுபடுத்தினார். இவை, அப் பன்னிரண்டனுட் கூறாநின்ற ஐந்தும், முதலொடு புணர்ந்தவென்றே ஒழியாது பின்னும் 'யாழோர் மேன' என்றார் இவையும் கந்தருவமே என்றற்கு. இவையும் ஒருவன் ஒருத்தி யெதிர்நின்று உடம்படுத்த லொப்புமையுடைய. 'தவலருஞ் சிறப்பு' எனவே முதல் கரு உரிப்பொருளானுங் களவென்னுங் கைகோளானும் பாங்கி புணர்த்தலின்மையானும் இலக்கணங் குறைப்பட்டதேனுஞ் சுட்டியொருவர் பெயர்கொள்ளப் பட்டுக் கற்பியலாகிய இல்வாழ்க்கையும் பெற்றுவருதற் சிறப்புடைய இவையும், ஐந்நிலம் [2]பெறுதலேயன்றி யென்றானாம். இது புலனெறியன்றி உலகியலாதலின் உலகியலாற் பாலைநிலனும் ஆண்டு வாழ்வார்க்கு மன்றலும் உளவாகலிற் பாலையுங் கூறினான். எனவே, ஐம்புலத்து வாழ்வார் மணமுஞ் செய்யுளுட் பாடியக்கால் இழுக்கின்றென்றான். (15)

### (தலைவிக்குரிய கிளவிகள் இவையெனல்)

107. இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்துங்
காணா வகையிற் பொழுதுநனி யிகப்பினுந்
தானகம் புகாஅன் பெயர்த லின்மையிற்
காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிய கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளா ணெதிரும் விருந்தின் கண்ணும்
வாளா ணெதிரும் பிரிவி னானு

1. முதற் கந்தருவமென்றது உள்ளதொடு இல்லதும் புணர்க்கும் புலனெறி வழக்காகிய கந்தருவத்தை.

2. பெறுதலேயன்றி யென்றானாம் என்பது, பெறுமென்றானாம் என்றிருத்தல் வேண்டும்.

நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய வெதிரும்
வரைவுடன் படுதலு மாங்கதன் புறத்துப்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோண் மேன வென்மனார் புலவர்

*இது, மேற்றலைவற்குரிய கிளவி கூறிப் பாங்கனிமித்தம் அவன் கண் நிகழும் பகுதியுங் கூறி அம்முறையானே தலைவிக் குரிய கிளவி கூறுகின்றது.*

*இ – ள்: இருவகைக் குறி பிழைப்பு ஆகிய இடத்தும் - இரவுக் குறியும் பகற்குறியும் பிழைத்தவிடத்தும்: உதாரணம்:*

[1]முழுவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்
கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை யகவும் பானாட் கங்குன்
மன்றம் போழு மினமணி நெடுந்தேர்
வாரா தாயினும் வருவது போலச்
செவிமுத லிசைக்கு மரவமொடு
துயிறுறந் தனவாற் றோழியென் கண்ணே. (குறுந். 301)

[2]கொன்னூர் துஞ்சினு மியாந்துஞ் சலமே
யெம்மி லயல தேழி லும்பர்
மயிலடி யிலைய மாக்குர னொச்சி
யணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே. (குறுந். 138)

[3]ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறாஅன்
மாறினெ னெனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப
கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப்
பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானாக." (கலி. 46)

---

1. முழவு - முழா - ஒரு வாச்சியம். அரை - அடிமரம். பெண்ணை - பனை. மடல் இழைத்த - ஓலையிற்கட்டிய. சிறுகோற் குடம்பை - சிறு சுள்ளிகளாலாகிய கூடு, அகவல் - கூவி அழைத்தல.

2. கொன் - பெருமை. எம் இல் - எம் வீடு. ஏழில் - ஒரு மலை. பாடு - ஒலி ஊர் துஞ்சினும் யாம் பாடு கேட்டுத் துஞ்சலம் என்க.

3. பதம் - காலம். குறிபார்த்து - குறியை நோக்கி. பாடு - ஒலி, பைதல் - துன்பம்.

[1]இருள்வீ நெய்த லிதழகம் பொருந்திக்
கழுதுகண் படுக்கும் பானாட் கங்கு
லெம்மினு முயவுதி செந்தலை யன்றில்
கானலஞ் சேர்ப்பன் போலநின்
பூநெற்றிச் சேவலும் பொய்த்தன்றோ குறியே.

*இது, தன்னுட் [2]கையாறெய்திடு கிளவி.*

புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழுவாய் துயிலப் பெறுதியா
லின்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ (சிலம்பு: கானம். 33)

*எனவும் இவை குறிபிழைத்துழித் தன்வயி னுரிமையும் அவன் வயிற் [3]பரத்தைமையும்படக் கூறியனவாம்.*

*குறி பிழைத்தலாவது:- புனலொலிப்படுத்தலும் புள்ளெடுப் புதலும் முதலியன. குறியெனக் குறித்தவழி, அவனானன்றி அவை வேறோர் காரணத்தான் நிகழ்ந்துழி அதனைக் குறியென நினைந்து சென்று அவை அவன்குறி யன்மையின் [4]அகன்று மாறுதலாம். பகற்குறிக்கும் உதாரணம் வந்துழிக் காண்க.*

*காணா வகையிற் பொழுது நனி இகப்பினும் - குறிவழிச் செல்லுந் தலைவனை இற்றை ஞான்றிற் காண்டல் அரிதென்று கையறுவ தோராற்றாற் பொழுது [5]சேட்கழியினும்:*

*என்றது, தாய் துஞ்சாமை ஊர்துஞ்சாமை காவலர் கடுகுதல் நிலவுவெளிப்படுதல் நாய்துஞ்சாமை போல்வனவற்றால் தலை வன் குறியின்கண் தலைவி வரப்பெறாமல் நீட்டித்தலாம். உதாரணம்:*

[6]இரும்பிழி மகாஅரிவ் வழுங்கன் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகு
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்
பிணிகோ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற்
றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவ
ரிலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழு

---

1. கழுது - பேய். பானாட்கங்குல் - இடையாமம். உயவுதி - வருந்துதி. அன்றிலே நின்சேவலுங் குறி பொய்த்ததோ? சொல் என்க.
2. கையறல் - செயலறல்.
3. பரத்தைமை - அயன்மை
4. அகன்றுமாறுதல் - அகன்றொழிதல்.
5. சேட்கழிதல் - நீட்டித்தல்
6. பிழி - கள். காவலர் - இடையாமத்து ஊர்க் காவலர். இளையர் என்றது காவலரை. தோகை - வால். ஞாளி - நாய். அரவம் - ஒலி. வல்சி - உணவு.

மரவவாய் ஞமலி குரையாது மடியிற்
பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பி
னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே
திங்கள்கல் சேர்பு கனையிருண் மடியி
னில்லெலி வல்சி வல்லாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பு
மெல்லா மடிந்த காலத் தொருநா
ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரே
யதனால், அரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்
தாதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றாற் றோழிநங் களவே. (அகம். 122)

[1]கருங்கால் வேங்கை வீயுகு துறுக
லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
யெல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே. (குறுந். 47)

[2]வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தி லெழால்வாழி வெண்டிங்காள்
கேள்வரும் போழ்தி லெழாதாய்க் குறாஅலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழிவெண்டிங்காள். (யா.வி.ப. 330)

தானகம் புகாஅன் பெயர்தலின்மையிற் காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி வேட்கையின் மயங்கிய கையறுபொழுதி னும் அங்ஙனங் காணாவகையிற் பொழுது நனியிகந்து தலைவி குறிதப்பியக் காலுந் தலைவன் குறியிடம் புகுந்தல்லது பெயரா னென்பது தான் அறியுமாதலின் ஆண்டுப் புகுந்தவன் தான் வந்து நீங்கினமை அறிதற்கு ஓர்குறி செய்தன்றி வாளாது பெயரானன்றே? அக்குறிகாணுங் காட்சிவிருப்பினாற் றலைவி பிற்றைஞான்று விடியலிற்சென்று ஆண்டைக் குறிகண்டு கலங்கி அவனை எதிர்ப் படுதல் வேட்கையளாகிச் செய்வதறியாது மயக்கத்தோடு கையறவு எய்தும்பொழுதின் கண்ணும்:

கழுது - பேய். புட்டில் - சதங்கை. பரி - வேகம். ஆதி - நாற்கதியுளொன்று. முட்டின்று - முட்டையுடையது. முட்டு - தடை.

1. எல்லி - இரா.

2. எழாஅல் - உதியற்க. திங்காள் எழாதாய்க்கு எயிறு உறாலியர் (எயிறு உறாதொழிக). கேள் - தலைவன்.

'தான்' என்றது தலைவனை. இரவுக்குறியினை 'அகம்' என்றார், இரவுக்குறி எயிலகத்தது என்பதனால். குறியிற்சென்று நீங்குவனெனவே காட்சி அவன்மேற்றன்றிக் குறிமேற்றாம். குறி: மோதிரம் மாலை முத்தம் முதலியன [1]கோட்டினுங் கொடியினும் இட்டு வைத்தனவாம்; இவை வருத்தத்துக்கு ஏதுவாம். இது விடியல் நிகழுமென்றற்குப் 'பொழுது' என்றார்; எனவே காண்பன விடியலிற் காணுமென்றார். 'மயங்கும்' என்றதனால் தோழியும் உடன்மயங்கும். அது,

> [2]இக்காந்தண் மென்முகைமேல் வண்டன்றஃ திம்முகையிற்
> கைக்காந்தண் மெல்விரலாய் காணிதோ – புக்குச்
> செறிந்ததுபோற் றோன்றுந் தொடுபொறி யாம்பண்
> டறிந்ததொன் றன்ன துடைத்து.

[3]புகாஅக் காலைப் புக்கு எதிர்ப்பட்டுழிப் [4]பகாஅ விருந்தின் பகுதிக்கண்ணும் - உண்டிக்காலத்துத் தலைவியில்லத்துத் தலைவன் புக்கெதிர்ப்பட்டவழி நீக்கி நிறுத்தாத விருந்து ஏற்றுக் கொள்ளும் பகுதிக்கண்ணும்:

எனவே, மனையகம் புகுதற்கு ஒவ்வாத மிக்க தலைவன் புகுந்தால் இஃதொன்றுடைத்தெனத் தேராது தாய் அவனை [5]விருந்தேற்று நீக்கிநிறுத்தற்பகுதியுந் தழீஇயினவாறாயிற்று.

புகாக்காலமாதலிற் பகாவிருந்தென்றான்; விடியற்காலமாயிற் றலைவன் புகானெனவும், புகாக்காலத்துப் புக்க [6]ஞான்றாயின் அவர் விருந்தேற்றுக்கோடல் [7]ஒருதலையென்று புகும் என்றுங் கொள்க. தலைவி காட்சியாசையிற் கலங்கியதற்கேற்பத் தலைவற்குங் காட்சி யாசை கூறிற்று; அது,

---

1. கோடு - மரக்கொம்பு.
2. இக்காந்தண் மென்முகைமேல், தொடுபொறிபுக்குச் செறிந்ததுபோல் இதோ தோன்றும். யாம் பண்டு அறிந்தது. அன்னதையே இம்முகையுடைத்து வண்டு அன்று, என மாற்றிப் பொருள்கொள்க. தொடுபொறி என்றது மோதிரத்தை.
3. புகாஅ - உணவு
4. பகா - நீக்கி நிறுத்தாத - நீக்கப்படாத
5. விருந்தேற்று நீக்கிநிறுத்தல் - விருந்தாக ஏற்றுப் பின் நீக்குதல். நீக்கி நிறுத்தல் - நீக்கி நிறுத்தாத என்றுமிருக்கலாமோ என்பது ஆராயத்தக்கது.
6. ஞான்று - பொழுது.
7. ஒருதலை - நிச்சயம்.

[1]சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா
ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிரே
யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா
யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
வன்னை யலறிப் படர்தரத் தன்னையா
னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன். (கலி. 51)

*இது, புகாக்காலத்துப் புக்கானை விருந்தேற்றுக்கொண் டமை பின்னொருகாலத்துத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க.*

[2]அன்னை வாழ்க பலவே தெண்ணீ
ரிருங்கடல் வேட்ட மெந்தை புக்கெனத்
தார்மணி நெடுந்தேர் நீவி யானுமோ
ரெல்லமை விருந்தினெ னென்ற
மெல்லம் புலம்பனைத் தங்கென் றோளே.

*இது தோழி கூற்றுமாம்.*

*'ஒன்றிய தோழி' யென்றதனால் தோழி கூற்று வந்துழிக் காண்க.*

[3]மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ வன்னை
யொருநா, ணகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே. (குறுந். 292)

---

1. ஆடும் சிற்றில் சிதையா என்க. சிதையா - சிதைத்து. அடைச்சிய - கூந்தலில் அடைவித்த = அணிந்த. கோதை - மாலை. பரிந்து - அறுத்து. பட்டி - நெறியின்றி வேண்டியவாறொழுகுபவன். இல்லிரே - விளி. தெருமரல் - சுழற்சி. அலறி - கூப்பிட்டு.

2. கடல்வேட்டம் - மீன்பிடித்தல். நீவி - விடுத்து. எல் - பகல். அன்னைதங் கென்றாள் வாழி - இது தலைவி கூற்று; தோழி கூற்றுமாம்.

3. மண்ணிய - நீராட: பசுங்காய் - பசிய மாங்காய்.

*இது புகாக்காலத்துத் தலைமைமிக்க தலைவன் புக்கதற்கு விருந்தேலாது செவிலி இரவுந் துயிலாதாளைத் தலைவி முனிந்து கூறியது.*

*வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும் - அங்ஙனம் விருந் தாதலேயன்றித் தலைவி [1]வேளாண்மைசெய்ய எதிர்கொள்ளக் கருதுதல் காரணத்தால் தோழி அவனை விருந்தேற்றுக் கோடற் கண்ணும்:*

*என்றது, தலைவி அவற்கு உபகாரஞ்செய்யக் கருதி அதனைக் குறிப்பாற் கூறத் தோழி அவனை விருந்தாய்த் தங்கென்னும். உதாரணம் :*

[2]நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்குமணை லாங்க ணுணங்கப் பெய்ம்மார்
பறிகொள் கொள்ளையர் மறுக வுக்க
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
யெல்லை தண்பொழிற் சென்றெனச் செலீஇயர்
தேர்பூட் டயர வேஎய் வார்கோற்
செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்
செல்லினி மடந்தைநின் றோழியொடு மனையெனச்
சொல்லிய வளவை தான்பெரிது கலிழ்ந்து
தீங்கா யினளிவ ளாயிற் றங்காது
நொதுமலர் போலப் பிரியிற் கதுமெனப்
பிறிதொன் றாகலு மஞ்சுவ லதனாற்
சேணின் வருநர் போலப் பேணா
யிருங்கலி யாணரெஞ் சிறுகுடித் தோன்றின்
வல்லெதிர் கொண்டு மெல்லிதின் வினைஇத்
துறையு மான்றின்று பொழுதே சுறவு
மோத மல்க கடலின் மாறாயினவே
யெல்லின்று தோன்றல் செல்லா தீமென
வெமர்குறை கூறத் தங்கி யேமுற
விளையரும் புரவியு மின்புற நீயு
மில்லுறை நல்விருந் தயர்த
லொல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே. (அகம். 300)

---

1. வேளாண்மை - உபகாரம்.

2. நாள் - விடியல். கோள் - கொள்ளுதல். உணங்க - உலர. பறி - மீன்பறி. மறுக - சுழல. உக்க - சொரிந்த. எல்லை - பகல். பொழில் - சோலை. சென்றென - கழிந்ததாக. பூட்டயர - பூட்டலைச்செய்ய. ஏஎய் - (பாகனை) ஏவி. கோல் - திரட்சி. தொடி திருத்தி - வளையலைத்திருத்தி. தான் என்றது - தலைவியை. கலிழ்ந்து - கண்ணீர்சொரிந்து. தங்காது - இங்கே தங்காது (தடைப்படாது). நொதுமலர் - அயலார் - பிறிதொன்றாதல் - தலைவி இறந்துபடல். இளையர் - ஏவலிளையர். புரவி - குதிரை. ஒல்லுதும் - பொருந்துதும்.

இதனுள், 'தான்பெரிது கலிழ்ந்து தீங்காயினள்' எனவே அக்குறிப்புத் தலைவன் போகாமற் றடுப்பக் கூறியதென்று உணர்ந்து தோழி கூறினாள்.

வாளாண் எதிரும் பிரிவினானும் - வாளாண்மை செய் தற்கு ஒத்த பிரிவு தோன்றியவழியும்:

ஆண்டுத் தலைவிமேற்றுக் கிளவி. மூவகைப்பிரிவினும் பகைவயிற் பிரிவை [1]விதந்தோதி ஓதலும் தூதும் வரைவிடை வைத்துப் பிரிவிற்குச் சிறந்திலவென்றானாம். அதிகாரப்பட்டு வருகின்ற களவினுள் அவை நிகழப்பெறா; இதுவாயின் வரை விடைவைத்துப் பிரியவும் பெறும்; அரசர்க்கு இன்றியமையாத பிரிவாகலின் என்பது கருத்து. இப்பிரிவு அரசர்க்கு உரித்தென் பது 'தானே சேறலும்' (27) என்னும் சூத்திரத்தாற் பெறுதும். வாளாண்மைக்கு ஏற்ற பிரிவெனவே முடியுடை [2]வேந்தரேவலிற் பிரியும் அரசர் கண்ணது இப்பிரிவென்க. சிறுபான்மை அவ் வேந்தற்கும் உரித்து, 'வெள்ளிப்படைதானே' (141) என்பதனுள் [3]இப்பிரிவில்லை என்பராதலின்; அது,

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்ப னுதிபொர முற்றிய கடும்பனி. (கலி. 31)

இதனுள் - [4]பனியெதிர் பருவங் குறிஞ்சியாகலிற் களவிற் பிரிந்தான் வாளாணெதிரும் வென்றி தோழிக்குத் தலைவி கூறிய வாறு. இஃது அவன்வயிற் பரத்தைமை கருதாதது.

நாணு நெஞ்சு அலைப்ப விடுத்தற்கண்ணும் - தலைவிக்கு இன்றியமையாத நாணுத்தான் அவள் நெஞ்சினை அலைத்த லின் அவள் அந்நாணினைக் கைவிடுத்தற்கண்ணும்: அஃது, உடன்போக்கினும் வரைவுகடாவும் வழியும் வேட்கைமீதூர்ந்து நாண்துறந்துரைத்தல் போல்வன:

---

1. விதந்தோதியது - இச்சூத்திரத்து இவ்வடியால் என்க. அவை என்றது ஓதலுந் தூதுமாகிய இரண்டையும். இதுவென்றது பகைவயிற்பிரிவை.
2. வேந்தரேவலிற் பிரிவதெனவே வேந்தற்குற்றுழிப் பிரிவாயிற்று.
3. இப்பிரிவு இல்லையென்பாராதலிற் சிறுபான்மை உரித்தென இயைக்க,
4. "பனியெதிர் பருவமு முரித்தென மொழிப" அகம்7.

[1]அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கொம்பி னோங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீந்துக் காங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே. (குறுந். 149)

*இஃது உடன்போக்கு வலித்தமையின் நாண்துறந்து கூறியது.*

*வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர் கிளவி புல்லிய எதிரும் - வரைதல் விருப்பினால் தோழி தலைவற்கு வரைவு கடாய்க் கூறிய புரைதீர் கிளவியைத் தலைவி [2]பொருந்திநின்றே இயற்பழித்தற்கு மறுத்தாள்போல் நிற்கும் எதிர்மறையையும்:*

*புரைதீர் கிளவி:- தலைவனுயர்பிற்கு ஏலாது இயற்பழித்து உரைக்குங் கிளவி. அது, 'பாடுகம் வாவாழி தோழி' என்னுங் குறிஞ்சிக் (41) கலியுள்,*

[3]இலங்கு மருவித் தேலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை

*எனத் தோழி இயற்பழித்த வாய்பாட்டான் வரைவு கடாவ அதனை உடம்பட்டுப் பழித்தற்கு உடம்படாதாள்,*

[4]பொய்த்தற் குரியனோ பொய்த்தற் குரியனோ
வஞ்சலோம் பென்றாரைப் பொய்த்தற் குரியனோ
குன்றக னன்னாடன் வாய்மையிற் பொய்தோன்றிற்
றிங்களுட் டீத்தோன்றி யற்று

*எனத் தலைவி இயற்பட மொழிந்து எதிர் மறுத்தவாறு காண்க.*

[5]அருவி வேங்கைப் பெருவரை நாடற்
கியானெவன் செய்கோ வென்றி யானது
நகையென வுணரே னாயி
னென்னா குவைகொ னன்னுத னீயே. (குறுந். 96)

---

1. அளிது - இரங்கத்தக்கது. உழந்தன்று - வருந்தியது. இனி - இப்பொழுது சிறுசிறை - சிறியகரை. நெரிதர - நெரித்தலால். கைந்நில்லாது - (நாண்) என்பால் நில்லாது.
2. பொருந்தி - உடன்பட்டு.
3. வானின் - மழைபெய்தலால். சூள் - சத்தியம்.
4. பொய்த்தல் - சூள்பொய்த்தல். வாய்மை - மெய்வாக்கு. திங்கள் - சந்திரன்
5. என்றி - என்று கூறுகின்றாய். நகை - விளையாட்டுமொழி. என்ஆகுவை - என்படுவாய்.

*இதுவும் இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது.*

*வரைவு உடன்படுதலும் - தலைவற்குத் தலைவி தமர்வரை வுடம்பட்டதனைத் தலைவி விரும்புதலையும்: உதாரணம்:*

[1]இலையமர் தண்குளவி யேய்ந்த பொதும்பிற்
குலையுடைக் காந்த ளினவண் டிமிரு
மலையக நாடனும் வந்தான்மற் றன்னை
யலையு மலைபோயிற் றின்று. (ஐந்: எழு. 3)

[2]ஒறுப்ப வோவலர் மறுப்பத் தேறலர்
தமிய ருறங்குங் கௌவை யின்றா
யினியது கேட்டின் புறுகவிவ் வூரே
முனாஅ, தியானையங் குருகின் கானலம் பெருந்தோ
டட்ட மள்ள ரார்ப்பிசை வெரூஉங்
குட்டுவன் மரந்தை யன்னவெங்
குழல்விளங் காய்நுதற் கிழவனு மவனே. (குறுந். 34)

*தமரான் ஒறுக்கப்பட்டு ஓவாராய்த் துயருழத்தல் ஆகா தென ஆற்றுவிக்குஞ் சொற்களான் மறத்துரைப்பவுந் தேறாராய்த் தனித்து இருப்பார் உறக்கங்காரணமாக எழுந்த கௌவை கேளாது வரைந்தெய்திய மாற்றங் கேட்டு இவ்வூரும் இன்புறுக என்பதாம்.*

*ஆங்கதன் புறத்துப் புரைபடவந்த மறுத்தலொடு தொகைஇ - அவன் வரைவு வேண்டினவிடத்து அவ்வரைவு [3]புறத்ததாகிய வழித் தலைவி தன்னுயர்பு உண்டாகத் தோன்றிய மறுத்தலோடே முற்கூறியவற்றைத் தொகுத்து:*

*'அதன்புறம்' எனவே அதற்கு அயலாகிய நொதுமலர் வரைவாயிற்று. தலைவி தன்குடிப்பிறப்புங் கற்பும் முதலிய உயர்ச்சிக்கு ஏற்ப அதனை மறுத்துத் தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் கூறுமென்றற்குப் 'புரைபட வந்த மறுத் தல்' என்றார்.*

---

1. குளவி - காட்டுமல்லிகை; மலைப்பச்சையுமாம். பொதும்பு - மரச்சோலை. இமிரும் - மொய்க்கும்.
2. ஒறுப்ப - தமர் ஒறுப்ப. ஓவலர் - நீங்கலர். தேறலர் - தெளியலர். கௌவை - வருத்தம். யானையங்குருகு - ஒரு பறவை. யானைபோல் பிளிற்றொலி செய்வது. தோடு - கூட்டம். அட்ட - பகைவரைக் கொன்ற. மள்ளர் - வீரர். மரந்தை - ஒரு நகர்.
3. புறத்தது - வேற்றுவரைவு.

[1]வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த
வோரிப் புதல்வ னழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று;
சென்றியா னறிவேன் கூறுக மற்றினி;
சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொரூஉ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு;
தருமணற் றாழப் பெய் தில்பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் தனித்தே யொழிய
வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த
விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் கூடுத லில்லியல் பன்றே. (கலி. 114)

மள்ளர் குழீஇய விழவி னானும். (குறுந். 31)

*இச் சூத்திரத்து உருபும் எச்சமுமாயவற்றைக் 'கிழவோண் மேன' என்பதனோடு முடித்து, முற்றிற்குக் கிளவியென ஒரு பெயர் வெளிப்படுத்து முடிக்க. புல்லிய எதிரையும் உடன்படு தலையும் மறுத்தலுடன் [2]தொகுத்தது.*

*கிழவோள் மேன என்மனார் புலவர் - தலைவியிடத்தன கிளவியென்று கூறுவர் புலவர் என்றவாறு. (19)*

***(காமப்புணர்ச்சிக்கண் நாணுமடனும் குறிப்பினுமிடத்தினும் வருமெனல்)***

**108.** காமத் திணையிற் கண்ணின்று வரூஉ
நாணு மடனும் பெண்மைய வாதலிற்
குறிப்பினு மிடத்தினு மல்லது வேட்கை
நெறிப்பட வாரா வவள்வயி னான.

---

1. வாரி - கோதி. ஓரி - மயிர். வதுவை அயர்வாரைக் கண்டும் - நொதுமலர் வரைவுக்குடன்படுவரைக்கண்டு வைத்தும் என்றபடி. ஏழையை - அறியாமையையுடையை. நக்குவந்தீயாய் - சிரித்துவாராய். ஒரூம் - அகலும். வியம்கொள - காரியமென்றே கொள்ள. பூவல் - செம்மண். கைவிட்டி ருக்கோ - கைவிட்டிருக்கவோ? இல் - குடிப்பிறப்பு.

2. தொகுத்தது - தொகுத்து என்றிருத்தல் வேண்டும். தொகுத்துக் கிழவோண் மேன என முடியும்.

இஃது உள்ளப்புணர்ச்சிக்கு உரியவாறு மெய்யுறு புணர்ச்சிக் கண்ணும் நிகழுமென்ற நாணும் மடனுங் குறிப்பினும் இடத்தி னும் வருமெனக் கூறுதலின் 'அச்சமு நாணும்' (99) என்பதற்குப் புறநடையாயிற்று. இதனை ஈண்டுக் கூறினான், [1]இடத்தின் கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை [2]திரிந்து வருமென்பதூஉம் [3]அது கூற்றின்கண் வருமென்பதூஉம் கூற்றுநிகழ்கின்ற இவ் விடத்தே கூறவேண்டுதலின். எனவே, இது முதலிய சூத்திரம் மூன்றும் முன்னர்த் தலைவிக்குக் கூற்று நிகழுமென்றற்குக் கூற்று நிகழுங்கால் நாணும் மடனும் நீங்கக் கூறும் என்று அக்கூற்றிற்கு இலக்கணங் கூறினவேயாயிற்று.

**இ — ள்:** அவள்வயின் ஆன நாணும் மடனும் பெண்மைய ஆதலின் - தலைவியிடத்து உளவாகிய நாணும் மடனும் பெண் மைப் பருவத்தே தோன்றுதலை யுடையவாதலின், காமத்திணை யிற் கண்ணின்று குறிப்பினும் வரூஉம் - அப்பருவத்தே தோன்றிய காமவொழுக்கங் காரணமாக அவை கண்ணின்கணின்று குறிப் பினும் வரும். வேட்கை நெறிப்பட இடத்தினும் வரூஉம் - அன்றி வேட்கை தன்றன்மை திரியாது வழிப்படுதலாலே கரும நிகழ்ச் சிக் கண்ணும் வரும், அல்லது வாரா - அவ்வீரிடத்துமல்லது அவை வாரா என்றவாறு.

இயற்கைப் புணர்ச்சிக்கண் உரியவாகக் கூறும் பன்னிரண்டு மெய்ப்பாட்டானுங் குறிப்பின்கண் நாணும் மடனும் நிகழ்ந்த வாறுணர்க.

ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்
கரும நிகழ்ச்சி யிடமென மொழிப

என்னுஞ் செய்யுளியற் (510) சூத்திரத்தான் இடமென்றதனைக் கரும நிகழ்ச்சி என்றுணர்க.

அஃதாவது இடந்தலைப்பாடும் பாங்கொடுதழாஅலும் தோழியிற் புணர்வுமாம். இவற்றின்கண்ணும் நாணும் மடனு நிகழுமென்றான். இனித் தோழியிற் புணர்வின்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென மேலிற் சூத்திரத்தாற் கூறுகின்றான். (17)

1. இடம் என்றது கரும நிகழ்ச்சியை.
2. திரிந்தும் வரும் என்றிருத்தல் வேண்டும்.
3. அது என்றது திரிந்து வருதலை.

### (கரும நிகழ்ச்சிக்கண் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்து வருமெனல்)

**109.** காமஞ் சொல்லா நாட்ட மின்மையி
னேமுற விரண்டு முளவென மொழிப.

[1]இது, கரும நிகழ்ச்சிக்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்து வருமென்கின்றது.

**இ — ள்:** சொல்லாக் காமம் இன்மையின் - கரும நிகழ்ச்சி யிடத்துக் கூற்று நிகழாத காமம் புலனெறி வழக்கின்கணின்மை யின், இரண்டும் ஏமுற நாட்டம் உளவென மொழிப - முற்கூறிய நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவர நாட்டுதல் உளவென்று கூறுவர் புலவர் என்றவாறு.

என்றது தோழியிற் கூட்டத்துத் தலைவி கூற்று நிகழ்த்துவ ளென்பதூஉம், நிகழுங்கால் நாணும் மடனும் பெரும்பான்மை கெட்டு அக்கூற்று நிகழுமென்பதூஉம், அங்ஙனங் கெடுதலை யும் முந்துநூற்கண் ஆசிரியர் நாட்டுதல் உளவென்பதூஉங் கூறியவாறாயிற்று.

[2]தேரே முற்றன்று நின்னினும் பெரிதே (கலி. 74)
[2]பேரேமுற் றாய்போல முன்னின்று விலக்குவாய் (கலி. 113)

என்றாற் போல [4]மயக்கம் உணர்த்திற்று.

இனி நாணும் மடனுங் கெட்ட கூற்றுத் தோழியை நோக் கிக் கூறுமென மேற்கூறுகின்றான்.

### (நாணு மடனும் பெரும்பாலும் நிகழாத கூற்றுத் தலைவி தோழிக்குக் கூறுமெனல்)

**110.** சொல்லெதிர் மொழித லருமைத் தாகலி
னல்ல கூற்றுமொழி யவள்வயி னான.

---

1. இது நாணும் மடனுந் திரிந்துவருதலும் உள; அங்ஙனந் திரிதலும் வழு வமைதியைக் கொள்ளப்படும் என்பது கருத்து.

2. ஏமுறல் - மயங்கல், பித்தேறல். தேர் ஆகுபெயர்; பாகனை யுணர்த்தலின்.

3. பேர் ஏமுற்றாய்போல - பெரிய பித்தேறினாய்போல. இவ்விரண்டுசெய்யுளி லும் தலைவி நாணுமடனுந்தணந்து கூறியவாறுகாண்க.

4. மயக்கம் உணர்த்திற்று என்றது, தலைவி நாணும்மடனுந் தன்றன்மை யிற்றிரிதலை உணர்த்தின என்றபடி. போல் ... உணர்த்திற்று என்பது போல் வன உணர்த்தின என்று இருத்தல்வேண்டும்.

இது, நாணும் மடனும் பெரும்பான்மை நிகழாத கூற்றுத் தோழிக்குத் தலைவி கூறுமென்கின்றது.

**இ – ள்:** எதிர் சொல் - அங்ஙனம் நாணும் மடனும் நீங்கிய சொல்லை, அவள் வயின் மொழிதல் அருமைத்து அல்ல ஆகலின் - தோழியிடத்துக் கூறுதல் அருமையுடைத்தல்ல வாகையினாலே, கூற்று மொழி ஆன - குறிப்பானன்றிக் கூற்றாற் கூறும் மொழி தலைவிக்குப் பொருந்தின என்றவாறு.

எதிர்தல் - தன்றன்மை மாறுபடுதல். 'ஒன்றிய தோழியொடு' (41) என அகத்திணையிற் கூறுதலானும், 'தாயத்தினடையா' (221) எனப் பொருளியலிற் கூறுதலானும் அவள் வயின் நாணும் மடனும் நீங்கிய சொல்லைக் கூறுதலும் பொருந்துமென்றான்: அவை முற்காட்டிய உதாரணங்களுள்,

**கூடுதல் வேட்கையாற் குறிபார்த்து (கலி. 46) எ – ம்,**

**வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு (கலி. 51) எ – ம்**

**காம நெரிதரக் கைந்நில் லாதே (குறுந். 149) எ – ம்**

கூறியவாற்றானும் மேற்கூறுகின்ற உதாரணங்களானும் நாணும் மடனும் நீங்கிக் கூற்று நிகழ்ந்தவாறுணர்க.

'சூத்திரத்துட்பொருளன்றியும் … படுமே' (658) என்பதனான் இவ்விலக்கணம் பெறுதற்கு இம்மூன்று சூத்திரத்திற்கும் மாட்டு றுப்புப்படப் பொருள் கூறினாம்.

இனிக் கூற்று நிகழுங்கால் நாணும் மடனும் பெண்மைய வாதலிற் குறிப்பினும் இடத்தினுமன்றி வேட்கை நெறிப்பட வாராவென்று பொருள் [1]கூறிற் காட்டிய உதாரணங்கட்கு மாறு பாடாகலானுஞ் சான்றோர் செய்யுட்களெல்லாங் குறிப்பும் இடனுமன்றிப் பெரும்பான்மை கூற்றாய் வருதலானும் ஆசிரி யர் தலைவன் கூற்றுந் தலைவி கூற்றுந் தோழி கூற்றுஞ் செவிலி கூற்றுமெனக் கூற்றுஞ் சேர்த்து நூல்செய்தலானும் அது பொரு ளன்மையுணர்க. (19)

---

1. இங்ஙனம் பொருள் கூறுபவர் இளம்பூரணர். அவர் காமத்திணையின் (108) என முதலாகவுள்ள மூன்று சூத்திரத்திற்கும் வேறு பொருள் கொள்வர்.

(இதுவுந் தலைவிகூற்று நிகழுமாறு கூறல்)

111. மறைந்தவற் காண்ட றற்காட் டுறுத
னிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தன் மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைப்பட்டுக் கலங்கினு நாணுமிக வரினு
மீட்டுப்பிரி விரங்கினு மருமைசெய் தயர்ப்பினும்
வந்தவழி யெள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினு
நொந்துதெளி வொழிப்பினு மச்ச நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்
வருந்தொழிற் கருமை வாயில் கூறினுங்
கூறிய வாயில் கொள்ளாக் காலையு
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற வருமறை யுயிர்த்தலு
முயிராக் காலத் துயிர்த்தலு முயிர்செல
வேற்றுவரைவு வரினது மாற்றதற் கண்ணு
நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
பொறியின் யாத்த யுணர்ச்சி நோக்கி
யொருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோ
ளருமை சான்ற நாலிரண்டு வகையிற்
பெருமை சான்ற வியல்பின் கண்ணும்
பொய்தலை யடுத்த மடலின் கண்ணுங்
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணுங்
குறியி னொப்புமை மருடற் கண்ணும்
வரைவுதலை வரினுங் களவறி வுறினுந்
தமர்தற் காத்த காரண மருங்கினுந்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தனன் பெயர்ந்த வறுங்கள நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
வழுவின்று நிலைஇய வியற்படு பொருளினும்
பொழுது மாறும் புரைவ தன்மையி
னழிவுதலை வந்த சிந்தைக் கண்ணுங்
காமஞ் சிறப்பினு மவனளி சிறப்பினு

மேமஞ் சான்ற வுவகைக் கண்ணுந்
தன்வயி னுரிமையு மவன்வயிற் பரத்தையு
மன்னவு முளவே யோரிடத் தான.

இதனுள் தலைவிகூற்று நிகழ்த்துமாறு கூறுகின்றான் சில கூற்றுக்களுள் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் பட நிகழ்த்தவும் பெறுமென்கின்றான். 'அவன்வயின்' எனவே 'தன்' என்றது தலைவியையாம்; உரிமை - களவிலே கற்புக் கடம் பூண்டொழுகல்; எனவே, [1]புலவியுள்ளத்தாளாகவும் பெறுங் களவி னென்பது கருதிப் பரத்தையுமுள என்றான், ஊடலும் உணர்த்தலும் வெளிப்பட நிகழாமையின் இவை புலவிப்போலி. பரத்தை - அயன்மை. அவன்கட் பரத்தைமையின்றேனுங் காதன் மிகுதியான் அங்ஙனங் கருதுதல் பெண்தன்மை. உம்மை, எதிர் மறையாகலின் இவ்விரண்டும் இலவாதலே பெரும்பான்மை.

இ — ள்: மறைந்து அவற் காண்டல் - தலைவன் புணர்ந்து நீங்குங்கால் தன் காதன்மிகுதியால் அவன் மறையுந்துணையும் நோக்கி நின்று அங்ஙனம் மறைந்தவனைக் காண்டற்கண்ணுந் தோழிக்குக் கூற்றாற் கூறுதலுள: உதாரணம்:

[2]கழிப்பூக் குற்றுங் கான லல்கியும்
வண்டற் பாவை வரிமண லயர்ந்து
மின்புறப் புணர்ந்து மிளிவரப் பணிந்துந்
தன்றுயர் வெளிப்படத் தவறி நந்துய
ரறியா மையி னயர்ந்த நெஞ்சமொடு
செல்லு மன்னோ மெல்லம் புலம்பன்
செல்வோன் பெயர்புறத் திரங்கிமுன் னின்று
தகைஇய சென்றவென் னிறையி னெஞ்ச
மெய்தின்று கொல்லோ தானே யெய்தியுங்
காமஞ் செப்ப நாணின்று கொல்லோ
வுதுவ காணவ ரூர்ந்த தேரே
குப்பை வெண்மணற் குவவுமிசை யானு
மெக்கர்த் தாழை மடல்வயி னானு
மாய்கொடிப் பாசடும் பரிய வூர்பிழிபு
சிறுகுடிப் பரதவர் பெருங்கடன் மடுத்த
கடுஞ்செலற் கொடுந்திமில் போல
நிவந்துபடு தோற்றமொ டிகந்துமா யும்மே. (அகம். 330)

1. புலவி - புலத்தல்.

2. குறுதல் - கொய்தல். அல்கல் - தங்கல். அயர்தல் - செய்தல். பணிதல் - வழி படல். பெயர்புறத்து - செல்லும் திசையில். தகைஇய - தடுக்க. குவவு - குன்று. அடும்பு - ஓர் கொடி. அரிய - அரிபட. ஊர்பு - ஏறியும். இழிபு - இழிந்தும். தேர் இகந்துமாயும் என்க.

'அறியாமையின் அயர்ந்தநெஞ்சமொடு' என்பது தன்வயி னுரிமை; [1]'இகந்துமாயும்' என்பது அவன்வயிற் பரத்தைமை.

தற்காட்டுறுதல் - தன்னை அவன் காணாவகை நாணான் மறைந்து ஒழுகினுந் தன் பொலிவழிவினை அவற்குக் காட்டல் வேண்டுதற் கண்ணும்: அது,

[2]இன்ன ளாயின ணன்னுத லென்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே. (குறுந். 98)

'இன்னளாயினள்' என்றது தற்காட்டுறுதல். [3]செப்புநர்ப் பெறினே' என்பதனாற் களவாயிற்று, கற்பிற்கு வாயில்கள் செப் புவார் உளராதலின். இதற்கு இரண்டும் உள.

நிறைந்த காதலிற் சொல் எதிர் மழுங்கல் - தலைவி காதன் மிகுதியால் தலைவன் பரத்தைமையை எதிர்கூற நினைந்து கூற்றெய்தாது [4]குறைபடுதற்கண்ணும்: உதாரணம்:

[5]பிறைவனப் பிழந்து நுதலும் யாழநி
னிறைவரை நில்லா வளையு மறையா
தூரலர் தூற்றுங் கௌவையு முள்ளி
நாணிட், டுரையவற் குரையா மாயினு மிரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவொடு கானலெய் தாது
கழனி யொழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடன்மீ னொய்யு
மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக்
கரப்பவுங் கரப்பவுங் கைம்மிக்
குரைத்த தோழி யுண்க ணீரே. (நற்றிணை. 263)

இஃது யாம் உரையாமாயினுங் கண் உரைத்தன என்றலின் இரண்டுங் கூறினாள்.

---

1. இகந்துமாயும் - கடந்து மறையும். என்றதனால் அவனயன்மை பெறப்படும் என்க.
2. அலர்சிலகொண்டு செப்புநர்ப்பெறின் நன்றுமன் என இயைக்க. படப்பை - கொல்லை.
3. செப்புநர்ப்பெறின் என்றாள்; நீ சென்று கூறு என்னுங் கருத்துடையளாய். இதனை முன்னிலைப் புறமொழி என்பர். கற்பிற்குப்போல இதற்குத் தூதுபோக்கும் வேறு வாயில் இல்லை; ஆதலால் களவு என்றபடி. இரண்டும் என்றது தன்வயி னுரிமையையும் அவன்வயின் பரத்தைமையையும்.
4. குறைபடுதல் - நாணால் நா எழாமை.
5. இறை - கையிறை. வரை - எல்லை. கௌவை - அலர், ஒய்யும் - கொண்டு போய்க் கொடுக்கும். கரப்ப - மறைப்ப.

*வழிபாடு மறுத்தல் - வருத்தமிகுதியால் தலைவனை வழிபடு தலை மறுத்துக் கூறுமிடத்தும்: உதாரணம்:*

[1]என்ன ராயினு மினிநிலை வொழிக
வன்ன வாக வுரைய றோழியா
மின்ன மாகநத் துறந்தோர் நட்பெவன்
மரனா ருடுக்கை மலையுறை குறவ
ரறியா தறுத்த சிறியிலைச் சாந்தம்
வறனுற் றார முருக்கிப் பையென
மரம்வறி தாகச் சோர்ந்துக் காஅங்
கறிவு முள்ளமு மவர்வயிற் சென்ற
வறிதா லிகுளையென் யாக்கை யினியவர்
வரினு நோய்மருந் தல்லர் வாரா
தவண ராகுக காதல ரிவணங்
காமம் படர்பட வருந்திய
நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே. (நற்றிணை. 64)

[2]உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா
திருப்பினெம் மளவைத் தன்றே வருத்தின்
வான்றோய் வற்றே காமஞ்
சான்றோ ரல்லர்யா மரீஇ யோரே. (குறுந். 102)

[3]நீயுடம் படுதலின் யான்றர வந்து
குறிநின் றனனே குன்ற நாட
னின்றை யளவை சென்றைக் கென்றி
கையுங் காலு மோய்வன வொடுங்கி
தீயுறு தளிரி னடுங்கி
யாவது மில்லையான் செயற்குரி யதுவே. (குறுந். 383)

*இத்தோழிகூற்றே 'சென்றைக்க' என்றதனால் தலைவி மறுத்தமை பெற்றாம்.*

*மறுத்து எதிர்கோடல் - அங்ஙனம் வழிபாடு மறுத்த தலைவியே அவனை ஏற்றுக் கோடலை விரும்பியக்கண்ணும்: அது,*

[4]கௌவை யஞ்சிற் காம மெய்க்கு
மெள்ளற விடினே யுள்ளது நாணே
பெருங்களிறு வாங்க முறிந்து நிலம்படாஅ
நாருடை யொசிய லற்றே
கண்டிசிற் றோழியவ ருண்டவென் னலனே. (குறுந். 112)

---

1. நத்துறந்தோர் - நம்மைத் துறந்தோர். உடுக்கை - உடை.
2. உள்ளல் - நினைத்தல். வான்தோய்வற்று - வானைத் தோய்ந்தாற் போன்ற பெருக்கத்தையுடைத்து. யாம் மரீஇயோர் - எம்மால் மருவப்பட்ட தலைவர்.
3. யான்தர - யான்கூற. சென்றைக்க - கழிக. என்றி - என்றுகூறினாய்.
4. கௌவை - பழிமொழி. எய்க்கும் - மெலிவடையும். எள்ளற - இகழ்ச்சியற. நார் - பட்டை. ஒசியல் - ஒசிந்த கொம்பு.

*இது, நாணேயுள்ளது கற்புப்போம் என்றலின் மறுத்தெதிர் கோடலாம்.*

*பழி தீர் முறுவல் சிறிதே தோற்றல் - தன் கற்பிற்குவரும் பழி தீர்ந்த தன்மையால் தன்கண் தோன்றிய மகிழ்ச்சியைச் சிறிதே தோழிக்குத் தோற்றுவித்தற்கண்ணும்:*

*தலைவனால் தோன்றிய நோயும் பசலையும் [1]முருகனால் தீர்ந்த தென்று அவன் கேட்பிற் கற்பிற்குப் பழியாமாதலிற் 'பழி' யென்றார். உதாரணம்:*

[2]அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங்
கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்ல
லிதுவென வறியா மறுவரற் பொழுதிற்
படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென
முதுவாய்ப் பெண்டி ரதுவாய் கூறக்
களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா
ளார நாற வருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கி
னொளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத்
தன்னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப
வின்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கனெ னல்லனோ யானே யெய்த்த
நோய்தணி காதலர் வரவீண்
டேதில் வேலற் குலந்தமை கண்டே. **(அகம். 22)**

*இதனுட் பழிதீர அவன் வந்து உயிர்தளிர்ப்ப முயங்கி நக்க நிலையைத் தோழிக்குத் தலைவி கூறியவாறு காண்க.*

---

1. முருகன் - முருகக்கடவுள்

2. அணங்கு - தெய்வம். அணங்கிய - வருத்திய. செல்லல் - துன்பம். மறுவரல் - சுழலல். படியோர் - எதிர்த்தோர் - பகைவர். நெடுவேள் - முருகன். போல - வழிபட. ஆற்றுப்படுத்த - வழிப்படுத்த. உரு - அச்சம். பார்வலொதுக்கின் - பார்வைக்கு ஒதுங்குதலோடு. ஒதுங்கிய பார்வையோடு எனினுமாம். எய்த்த - இளைத்த, உவந்தமை - நோய் தணிந்தமை. கண்டுநக்கனனல்லனோ என இயைக்க,

*கைப்பட்டுக் கலங்கினும்* - தலைவி குறிப்பினன்றி எதிர்ப் பட்ட தலைவன் ஒருவழி அவளை அகப்படுத்தவழிக் [1]காட்சி விரும்பினளாயினும் அப்பொழுது அவள் கலங்கினும்:

எனவே, காட்சி விரும்பினை மீதூர்ந்து கலக்கம் புலப்பட் டது தலைவன்வயிற் பரத்தைமை கருதி.

[2]கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாம்பூம் பொலங்கோதைத்
தொடிசெறி யாப்பமை யரி

என்னுங் குறிஞ்சிக் (54) கலியுள் 'அதனா, லல்லல் களைந்தனன் றோழி' எனக் கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைக் களைந்தே னெனத் தலைவி யுரையெனத் தோழிக்கு உரைத்தற்கட் கூறிய வாறு காண்க. இவ்வுதாரணம் ஆண்டுக் காட்டுதும்.

உறுகழி மருங்கி னோதமொடு மலர்ந்த (அகம். 230)

என்னும் பாட்டுத், தலைவன் இதனைக் கூறியது.

*நாணு மிகவரினும்* - தலைவனை எதிர்ப்பட்ட தலைவி தன் பெருநாணுடைமை கூறித் தலைவனை ஏற்றுக்கொள்ளாது நிற்பினும்: உதாரணம்:

[3]விளையா டாயமொடு வெண்மண லழுவத்து
மறந்தனந் துறந்த காழ்முளை யகைய
நெய்பெய் தீம்பால் பெய்தனம் வளர்த்து
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்
றன்னை கூறினள் புன்னையது சிறப்பே
யம்ம நாணுது நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலு மிலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கி
னிறைபடு நீழல் பிறவுமா ருளவே. (நற்றிணை. 172)

இதனுள் 'அம்ம நாணுதும்' எனப் புதிது வந்ததோர் நாணு மிகுதி தோன்ற மறுத்துரைத்தலின் தன்வயினுரிமையும் அவன் வயிற் பரத்தைமையுங் கூறினாள்.

---

1. காட்சி விரும்பினளாயினும் - அவனைக் காண்டலை விரும்பினளாயினும்.
2. பூவாப்பூ - பொற்பூ, கைப்பட்டு - தலைவன் கைப்பட்டு. இதனை - தலைவி தன்கைப்பட்டுக் கலங்கியதை.
3. அழுவம் - பரப்பு. காழ் - விதை. முளை அகைய - முளை தோன்ற. நுவ்வை - நுந்தங்கை.

*இட்டுப் பிரிவு இரங்கினும் - சேணிடையின்றி [1]இட்டிதாகப் பிரிந்துழித் தலைவி இரங்கினும்:*

*[2]கற்பினுட் சொல்லாத பிரிதலையும் இட்டுப் பிரிவென்ப, களவு போல நிகழ்பொருள் உணர்த்திப் பிரிதலருமையின். உதா ரணம்:*

[3]யானே யீண்டை யேனே யென்னலனே
யானா நோயொடு கான லஃதே
துறைவன் றம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே. (குறுந். 97)

*'தம்மூரான்' என்றலின் ஓதன் முதலிய பிரிவின்றி அணித்தாய வழிப் பிரிந்தானென அவ்விரண்டும் பயப்பக் கூறியவாறு காண்க.*

சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோ
டெறிதிரைத் திவலை யீர்ம்புற நனைப்பப்
பனிபுலந் துறையும் பல்பூங் கானல்
விரிநீர்ச் சேர்ப்ப னீப்பி னொருநம்
மின்னுயி ரல்லது பிறிதொன்
றெவனோ தோழி நாமிழப் பதுவே. (குறுந். 334)

*இதுவும் அது. [5]இவை களவினுட் புலவிப் போலியாம்.*

*அருமை செய்து அயர்ப்பினும் - முற்கூறிய இட்டுப் பிரிவே யன்றித் தலைவன் தன்னை அரியனாகச் செய்துகொண்டு [6]தம்மை மறப்பினும்:*

*அது தண்டாதிரத்தலை (102) முனிந்த மற்றையவழித் தலைவன் தானும் அரியனாய் மறந்தான்போன்று காட்டினும் அவ்விரண்டுங் கூறுதலாம். உதாரணம்:*

---

1. இட்டுப்பிரிவு - இட்டிதாகப்பிரிதல்; அணிமையாகப்பிரிதல். இதனைப் பின்னுள்ளோர் ஒருவழித் தணத்தல் என்ப. கலி. 53ஞ் செய்யுளுரை நோக்கியறிக.

2. பிரிதலருமையின் - பிரிதல்லாமையின். சொல்லாத பிரிதல் என்பது, சொல் லாது பிரிதல் என்று பாடமுள்ளது. சொல்லாது பிரிதல் என்றது, தலைவன் பொருள் முதலியவற்றிற் பிரியுங்கால் சொல்லியும் பிரிவன் சொல்லாதும் பிரிவன்; அவற்றுள் சொல்லாது பிரிதலை என்றபடி. இடுதல் - சொல்லாது விடல்.

3-4. இரண்டையும் வரைவிடைவைத்துப் பிரிதல் என்று குறுந்தொகையுட் கூறப்பட்டுளது.

5. புலவிப்போலி என்றார்; ஊடலு முணர்த்தலுமன்றித் தோன்றும் புலவியாதலின். இச் சூத்திர அவதாரிகையுரை நோக்கி இதனையறிக.

6. தம்மை என்றது தோழியையு முளப்படுத்திப்போலும். அல்லது தன்னை என்றுமிருக்கலாம்.

[1]தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந் துணர்க வென்ப மாதோ
வழுவப் பிண்ட நாப்ப ணேமுற்
றிருவெதி ரீன்ற வெற்றிலைக் கொழுமுளை
சூன்முதிர் மடப்பிணை நாண்மேய லாரு
மலைகெழு நாடன் கேண்மை பலவின்
மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம்
விடரளை வீழ்ந்துக் காங்குத் தொடர்பறச்
சேணுஞ் சென்றுக் கன்றே யறியா
தேக லடுக்கத் திருண்முகை யிருந்த
குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிரு
மின்னு மோவா ரென்றிறத் தலரே. (நற்றிணை. 116)

*தீங்குசெய்தாரையும் பொறுக்கிற்பார் நம்மைத் துறத்தலின் நாம் அரியேமாகியது பற்றித் தாமும் அரியராயினார் போலு மென அவ்விரண்டுங் கூறினாள்.*

[2]நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலிற் கண்டநாட் போலானாற்
செய்த குறியும்பொய் யாயினவாற் சேயிழா
யையகொ லான்றார் தொடர்பு. (திணை: ஐம். 41)

*இதுவுமது.*

*வந்தவழி எள்ளினும் - பெரிதாகிய இடையீட்டினுள் அரிதாகத் தலைவன் வந்தஞான்றும் பெறாதஞான்றைத் துன்ப மிகுதியாற் பெற்றதனையுங் கனவுபோன்று கொண்டு இகழ்ந் திருப்பினும்: உதாரணம்:*

[3]மானடி யன்ன கவட்டிலை யடும்பின்
றார்மணி யன்ன வெண்பூக் கொழுதி
யொண்டொடி மகளிர் வண்ட லயரும்
புள்ளிமிழ் பெருங்கடற் சேர்ப்பனை
யுள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே. (குறுந். 243)

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். (குறள். 1179)

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. (குறள். 1152)

---

1. தாம் அறிந்து - தாமே அறிந்து. பிண்டம் வழுவ - கருப்பம் அழிந்து புறம் போந்து விழ. வெற்றிலைக் கொழுமுளை - இலையில்லாத கொழுத்த முளை. வேற்றலை எனவும் பாடம். ஆரும் - உண்ணும். ஏ - பெருக்கம்.
2. படப்பை - கொல்லை. ஆன்று ஆர் தொடர்பு - அமைந்து நிறைந்த நட்பு. ஐய கொல் - செறிந்தன்றாகாதேயிருப்பது. ஐ - வியப்பின்கண் வந்தது.
3. கொழுதி - அலர்த்தி. வண்டல் அயரும் - விளையாட்டைச் செய்யும். படீஇயர் - துயில்க.

'வரிற்றுஞ்சா' எனவும் 'புன்கணுடைத்து' எனவும் வரவும் பிரிவும் அஞ்சி இரண்டும் நிகழக் கூறினாள். [1]இது முன்னிலைப் புறமொழி.

> [2]கண்டிரண் முத்தம் பயக்கு மிருமுந்நீர்ப்
> பண்டங்கொ ணாவாய் வழங்குந் துறைவனை
> முண்டகக் கானலுட் கண்டே னெனத்தெளிந்தே
> னின்ற வுணர்விலா தேன். (ஐந்: எழு. 61)

இது முன்பு இன்பந் தருவனென உணர்ந்துநின்ற உணர்வு ஈண்டில்லாத யான் புணர்ச்சி வருத்தந்தருமென்று தெளிந்தே னென்றாளென்க.

விட்டு உயிர்த்து அழுங்கினும் - கரந்த மறையினைத் தலைவி தமர்க்கு உரைத்தற்குத் தோழிக்கு வாய்விட்டுக்கூறி அக் கூறிய தனையே தமர் கேட்பக் கூறாது தவிரினும்:

உயிர்த்தல் - கூர்தல். உதாரணம்:

> [3]வலந்த வள்ளி மரனோங்கு சாரற்
> கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
> பொன்னேர் புதுமலர் வேண்டி குறமக
> ளின்னா விசைய பூசல் பயிற்றலி
> னேக லடுக்கத் திருளளைச் சிலம்பி
> னாகொள் வயப்புலி யாகுமஃ தெனத்த
> மலைகெழு சீறூர் புலம்பக் கல்லெனச்
> சிலையுடை யிடத்தர் போதரு நாட
> னெஞ்சமர் வியன்மார் புடைத்தென வன்னைக்
> கறிவிப் பேங்கோ லறியலங் கொல்லென
> விருபாற் பட்ட சூழ்ச்சி யொருபாற்
> சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
> யின்னுயிர் கழிவ தாயினு நின்மக

---

1. இது என்றது இச்செய்யுள் என்றபடி, இவை என்றிருத்தல் வேண்டும். முன்னிலைப்புறமொழி - முன்னிலையாக நிற்பப் படர்க்கையாக வைத்து (ப் பிறரைக் கூறுமாறுபோல)க் கூறல்.

2. பண்டம் - பொருள்கள். நாவாய் - தோணி. முண்டகம் - முள்ளி தாழையுமாம். கண்டேன் என - கண்டேனாக. கண்டேன்றனைத் தெளிந்தேன் எனவும் பாடம். கண்டேனாக (இன்பந் தருவனென) உணர்ந்துநின்ற உணர்வு இப்பொழுது இலாதேன் அப்புணர்ச்சி துன்பந் தருமென்பது தெளிந்தேன் என்க. வேறு உரை கூறுவாருமுளர்.

3. வலந்த - சுற்றிய. வள்ளி - கொடி. இன்னா இசைய பூசல் - புலி புலி என்னும் ஒலி. ஏகலடுக்கம் - பெருப்பமான கல்லையுடைய மலைப்பக்கம். சிலையுடை இடத்தர் - இடக்கையில் வில்லைத் தாங்கிய கானவர். போதரும் - செல்லும். உண்கட்பசலை மார்பினைக் காரணமாக உடைத்தென அறிவிப் பெங்கொல் என இயைக்க.

ளாய்மல ருண்கட் பசலை
காம நோயெனச் செப்பா தீமே. (அகம். 52)

*இது [1]சிறைப்புறம்.*

*நொந்து தெளிவு ஒழிப்பினும் - வரைவு நீட்டித்துத் தலைவன் [2]சூளுற்றவழி அதற்கு நொந்து தெளிவிடை விலக்கினும்: உதாரணம்:*

[3]மன்றத் துறுகற் கருங்கண் முசுவுகளுங்
குன்றக நாடன் றெளித்த தெளிவினை
நன்றென்று தேறித் தெளிந்தேன் றலையளி
யொன்றுமற் றொன்று மனைத்து. (ஐந். எழு. 9)

*'எம்மணங்கினவே' (குறுந். 53) என்பது தலைவி கூறக்கேட்டுத் தோழி கூறியது. அதுவும் [4]இதனாற் கொள்க.*

*அச்சம் நீடினும் - தெய்வம் அச்சூளுறவிற்கு அவனை வருத்துமென்றுந் தந்தை தன்னையர் அறிகின்றாரோ வென்றுங் கூட்டமுண்மை உணர்ந்த தோழிக்கும் உண்மை கூறுதற்கும் அஞ்சிய அச்சம் நீட்டிப்பினும்: உதாரணம்:*

[5]மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதுங்
கொடிய ரல்லரெங் குன்றுகெழு நாடர்
பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே. (குறுந். 87)

[6]மென்றினை மேய்ந்த சிறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாட
னெந்தை யறித லஞ்சிக்கொ
லதுவே தெய்ய வாரா மையே. (ஐங்குறு. 261)

[7]புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்து
மணிவரி தைஇயுநம் மில்வந்து வணங்கியு
நினையுபு வருந்துமிந் நெடுந்தகை திறத்திவ்வூ
ரினையளென் றெடுத்தோதற் கனையையோ நீயென
வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி;

---

1. சிறைப்புறம் - மதிற்புறம்.
2. சூள் - சத்தியம். ஒன்றும் - அவ்வொன்றும். அனைத்து - அத்தன்மையினது.
3. துறுகல் - உருண்டைக்கல். உகளும் - துள்ளி விளையாடும். தெளிவு - சூள் (சத்தியம்).
4. இதனால் - இவ்விதியால்.
5. இது தெய்வம் வருத்துமென்று அஞ்சியது.
6. இது தந்தை யறிதற்கு அஞ்சியது.
7. இது தோழிக்கு உண்மைகூறற்கஞ்சியது. நோக்குதல் - பார்த்துத்திருத்தல். வரி - தொய்யில். இனையள் - இத்தன்மையள்; என்றது களவொழுக்கத்தினள் என்றபடி சேண் சென்றாய் - நெடும் பொழுது நின்று வாங்கினாய். சாய் -

செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றா யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
கௌவைநோ யுற்றவர் காணாது கடுத்தசொல்
லொவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே யுரைத்ததை;

ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர வவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்நந் தனைத்தற்கோ
விடுந்தவர் விரகின்றி யெடுத்தசொற் பொய்யாகக்
கடிந்தது மிலையாய்நீ கழறிய வந்ததை;

வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித்
தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ
புரிபுநம் மாயத்தார் பொய்யாக வெடுத்தசொ
லூரிதென வுணராய்நீ யுலமந்தாய் போன்றதை;

எனவாங்கு,
அரிதினி யாயிழா யதுதேற்றல் புரிபொருங்
கன்றுநும் வதுவையு ணமர்செய்வ தின்றீங்கே
தானயந் திருந்ததிவ் வூராயி னெவன்கொலோ
நாஞ்செயற் பால தினி. (கலி. 76)

*பிரிந்தவழிக் கலங்கினும் - களவு அலராகாமல் யான் பிரிந் துழித் தலைவி கலங்குவளென்று அஞ்சித் தலைவன் பிரியாது உறைதலிற் பிரிவைக்கருதப் பெறாததலைவி அவ்வாறன்றிப் பிரிந்துழிக் கலங்கினும்: உதாரணம்:*

[1]மின்னுச்செய் கருவிய பெயன்மழை தூங்க
விசும்பா டன்னம் பறைநிவந் தாங்குப்
பொலம்படைப் பொலிந்த வெண்டே ரேறிக்
கலங்குகடற் றுவலை யாழி நனைப்ப
வினிச்சென் றனனே யிடுமணற் சேர்ப்பன்
யாங்கறிந் தன்றுகொ றோழியென்
றேங்கமழ் திருநுத லூர்தரும் பசப்பே. (குறுந். 205)

[2]குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉங் கவிப்பெறு காலை
யெல்வளை ஞெகிழ்த்தோர்க் கல்ல லுறீஇயர்
சென்ற நெஞ்சஞ் செய்வினைக் குசாவா
யொருங்குவர னசையொடு வருந்துங் கொல்லோ
வருளா னாதலி னழிந்திவண் வந்து

---

தண்டான்கோரை. கொழுதி - கிழித்து. அனைத்து - அவ்வளவு. நெறித்தல் - புறவிதழை ஒடித்தல். கழறுதல் - இடித்துக் கூறல். வரிதேற்றாய் - தொய்யில் எழுத அறியாய். இறை - முன்கை. தேற்றல் அரிது என்க எவள் - எக்காரியம்.

1. கருவி - தொகுதி. பறைநிவந்தாங்கு - பறத்தலில் உயர்ந்தாற்போல. பசப்பு நுதலில் ஊர்தரும் (பரக்கும்) என இயைக்க.

2. வளி - காற்று. ஈய - வீச. உசாவாய் - (சூழ்ச்சி சொல்லும்) உசாத்துணையாகி. ஏதிலாட்டி - அயலிலாட்டி = அயலவள்.

தொன்னல னிழந்தவென் பொன்னிற நோக்கி
யேதி லாட்டி யிவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே. (நற்றிணை. 56)

[1]வருவது கொல்லோ தானே வாரா
தவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை
யிருவி யிருந்த குருவி வெருவுறப்
பந்தாடு மகளிரிற் படர்தருங்
குன்றுகெழு நாடனொடு சென்றவென் னெஞ்சே. (ஐங்குறு. 295)

[2]பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை
வரிப்புற வார்மணன்மே லேறித் – தெரிப்புறத்
தாழ்கடற் றண்சேர்ப்பன் றாரகல நல்குமே
லாழியாற் காணாமோ யாம். (ஐந்: ஐம். 43)

*பெற்றவழி மலியினும்* - *தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்றஞான்று [3]புதுவது மலியினும்:*

*வரைவு நீட்டித்தகாலத்துப் பெற்றவழிமலிவை வெளிப் படக் கூறுதலும், வரைவு நீட்டியாதவழிப் பெற்றவழி மலிவை வெளிப்படுத்தாமையும் உணர்க. உதாரணம்:*

[4]இன்னிசை யுருமொடு கனைதுளி தலைஇ
மன்னுயிர் மடிந்த பானாட் கங்குற்
காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறாஅது
வரியதட் படுத்த சேக்கைத் தெரியிழைத்
தேனாறு கதுப்பிற் கொடிச்சியர் தந்தை
கூதிரிற் செறியுங் குன்ற நாட
வனைந்துவர லிளமுலை ஞெமுங்கப் பல்லூழ்
விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே
நும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியுந்
தண்வர லசைஇய பண்பில் வாடை
பதம்பெறு கல்லா திடம்பார்த்து நீடிய
மலைமர மொசிய வொற்றிப்
புலர்மடி கங்கு னெடும்புற நிலையே. (அகம். 58)

---

1. என் நெஞ்சு வருவதுகொல் வாராது அவணுறைவது கொல் என்க. கொள்ளியின் - கொள்ளியினால். புகுதலில்லாத மயில் என்க. இருவி - கதிர்கொய்தாள்.

2. பல்லிச்சினை - பல்லிமுட்டை; இங்கே பூவை உணர்த்திற்று; ஆகுபெயர். அகலம் - மார்பு. ஆழியால் - ஊடற் சுழியால். காணாமோ - காணமாட்டேமோ? காண்போம் என்றபடி.

3. புதுவது - புதியமகிழ்ச்சி.

4. தலைஇ - பெய்து. மடிதல் - துயிறல். விளிவிடம்பெறாது - உறங்குமிடம் பெறாது. வரியதள் - புலித்தோல். சேக்கையின் செறியும் என்க. ஞெமுங்க - அழுந்த. பல்லூழ் - பலமுறை. புறநிலை இனிதாகின்று என இயைக்க. புலம்பு - தனிமை.

*முயக்கம் இனிதென மகிழ்ந்து கூறுவாள் நும்மில் புலம்பால் வாடைக்கு வருந்தினேமென்றலின் இரண்டுங் கூறினாள்.*

[1]அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின வளியமென் றோள்கண்
மல்ல லிருங்கழி மல்கும்
மெல்லம் புலம்பன் வந்த மாறே. (ஐங்குறு. 120)

[2]அம்ம வாழி தோழி பன்மா
ணுண்மண லடைகரை நம்மோ டாடிய
தண்ணந் துறைவன் மறைஇ
யன்னை யருங்கடி வந்துநின் றோனே. (ஐங்குறு. 115)

*இவை தோழிக்குக் கூறியன. 'பெற்றவழி மலியினும்' எனப் பெறுபொருள் இன்னதெனவும் இன்னார்க்குக் கூறுவதெனவும் வரையாது கூறவே [3]பிறர் பெற்று மலிந்து பிறர்க்குக் கூறுவனவுங் கொள்க.*

அம்ம வாழி தோழி யன்னைக்
குயர்நிலை யுலகமுஞ் சிறிதா லவர்மலை
மாலைப் பெய்த மணங்கம ழுந்தியொடு
காலை வந்த காந்தண் முழுமுதன்
மெல்லிலை குழைய முயங்கலு
மில்லுய்ந்து நடுதலுங் கடியா தோட்கே. (குறுந். 361)

*இது பெற்றவழி மகிழ்ந்து தோழிக்கு உரைத்தது. இதற்கும் இரண்டுங் கூறினாள்.*

*வரும் தொழிற்கு அருமை வாயில் கூறினும் - தலைவன் இடைவிடாது வருதற்கு ஆண்டு நிகழும் ஏதம் பலவாற்றானும் உளதாம் அருமையை வாயிலாகிய தோழிகூறினுந் தலைவிக்குக் கூற்று நிகழ்தலுள; அது,*

[4]நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கண் முனிவின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சு
மோர்யான் மன்ற துஞ்சா தேனே. (குறுந். 6)

---

1. வந்தமாறு - வந்தமையால். தோள்கள் நல்லவாயின என்க.
2. மறைஇ - மறைந்து. கடி - காவலையுடைய இவ்விடம்.
3. பிறர் - என்பது பிற என்று இருத்தல் வேண்டும்; தலைவனைப் பெறுதலன்றி அவற்குரிய பொருளைப் பெறுதல் உதாரணச் செய்யுளாற் பெறப்படலின், இச் செய்யுளில் உந்தியொடுவந்த காந்தட் கிழங்கைப் பெற்று மலிந்தமை கூறலினாலே பிற என்றிருத்தல் வேண்டுமென்பது துணிபு.
4. சொல் அவிந்து - பேசுதல் ஒழிந்து. துஞ்சல் - துயிறல்.

இதனுட் பொழுது சென்றதில்லையென்றும் மாக்கள் இன்னுந் துயின்றிலரென்றும் அருமையை வாயில் கூறியவழித் தலைவி யாமமும் நள்ளென்றும் மாக்களுந் துயின்றும் வந்திலரென வருந்திக் கூறியவாறு காண்க.

நாம் ஏவிய தொழில் ஏற்றுக்கொண்டு வருகின்றவன் ஓர் காரணத்தானன்றி வாராதொழியுமோ வென்று தலைவி [1]கொள்ளுமாறு கூறுமென்றற்குத் தொழிலென்றார்.

கூறியவாயில் கொள்ளாக் காலையும் - தலைவற்குக் குறை நேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழியும் பிறவழியுந் தோழி கூற்றினைத் தலைவி ஏற்றுக்கொள்ளாத காலத்துக் கண்ணும். வாயில் - தோழி. உதாரணம்:

[2]தெருவின்கட், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்பெயர்த லேதில
நீநின்மேற் கொள்வ தெவன் (கலி. 60)

எனத் தோழிகூற்றினை மறுத்தது.

[3]தோளே தொடிநெகிழ்ந் தனவே கண்ணே
வாளீர் வடியின் வடிவிழந் தனவே
நுதலும் பசலை பாயின்று திதலைச்
சில்பொறி யணிந்த பல்கா ழல்குன்
மணியே ரைம்பான் மாயோட் கென்று
வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வை தூற்ற
நாமுறு துயரஞ் செய்யல ரென்னுங்
காமுறு தோழி காதலங் கிளவி
யிரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளிந்த
தோய்மடற் சின்னீர் போல
நோய்மலி நெஞ்சிற் கேமமாஞ் சிறிதே. (நற்றிணை. 133)

இது, தோழிகூற்றினை நன்கு மதியாது கூறினாள்.

மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும் - காப்பு மிகுதிக்கண் மனையகப்

---

1. கொள்ளல் - ஏற்றுக்கொள்ளல்.
2. வாரண வாசிப்பதம் பெயர்த்தல் என்றது, வாரணவாசியிலுள்ளார் பெறும் அருளுடைமையாகிய பதத்தை நீ அவரிற் பெயர்த்து உன்மேலாக்கல் என்றபடி.
3. வாளீர் வடி - வாளாற் பிளந்த மா வடு. திதலை - தித்தி. பொறி - புள்ளி. கிளவி ஏமமாம் என்க. ஏமம் - பாதுகாப்பு.

*பட்டுக் கலங்கி உணர்வு அழிந்தவழித் தலைவி ஆராய்ச்சியுடைத் தாகிய அரு[1] மறையினைத் தோழிக்குக் கூறுதலும் உள. உதாரணம்:*

[2]கேளா யெல்ல தோழி யல்கல்
வேணவா நலிய வெய்ய வுயிரா
வேமான் பிணையின் வருந்தினே னாகத்
துயர்மருங் கறிந்தனள் போல வன்னை
துஞ்சா யோவென் குறுமக ளென்றலிற்
சொல்வெளிப் படாமை மெல்லவெ னெஞ்சிற்
படுமழை பொழிந்த பாறை மருங்கிற்
சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்
கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக்
கண்ணும் படுமோ வென்றிசின் யானே. (நற்றிணை. 61)

*இதனுள், 'துஞ்சாயோ' எனத் தாய் கூறியவழி மனைப் பட்டுக் கலங்கியவாறும் 'படர்ந்தோர்க்கு' என மறையுயிர்த்த வாறுங் கண்படாக் கொடுமைசெய்தானெனப் பரத்தைமை கூறிய வாறுங் காண்க.*

[3]பொழுது மெல்லின்று பெயலு மோவாது
கழுதுகண் பனிப்ப வீசு மதன்றலைப்
புலிப்பற் றாலிப் புதல்வற் புல்லி
யன்னா யென்னு மன்னையு மன்னோ
வென்மலைந் தனன்கொ றானே தன்மலை
யார நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே. (குறுந். 161)

[4]பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவ
னெலவென் றிணைபயிரு மேகல்சூழ் வெற்பன்
புலவுங்கொ றோழி புணர்வறிந் தன்னை
செலவுங் கடிந்தாள் புனத்து. (திணை: ஐம். 10)

*இவையும் அது. இன்னும் 'மனைப்பட்டுக் கலங்கி' என்றத னாற் காப்புச்சிறைமிக்க கையறுகிளவிகளுங் கொள்க:*

---

1. மறை - களவுப் புணர்ச்சி. ஆராய்ச்சி - இவள் கலங்கற்குக் காரணம் யாதென்று பிறராலாராயப்படுதல். கூறுவேமோ விடுவேமோ எனத் தலைவி தன்னுள் ஆராய்தலுமாம்.

2. எல - ஏடீ. சிரல் - சிச்சிலிப் பறவை. வாயுற்ற - வாய்போன்ற. அவல் - பள்ளம். மெல்ல என்றிசின் யான் என்க.

3. பொழுது - ஞாயிறு. எல்லின்று - விளக்கமின்று. கழுது - பேய். என் மலைந் தனன்கொல் - எதனைச் செய்ய மேற்கொண்டானோ?

4. எல - ஏடீ. இணை என்றது தனக்கு இணையாகிய மந்தியை. ஏகல் - பெருப்ப மான கல். புலவுங்கொல் - புலப்பானோ (ஊடுவானோ). செலவு கடிந்தாள் என்றது. இற் செறிப்பை.

[1]சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே
துறைபோ கறுவைத் தூமடி யன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே
யெம்மூர் வந்தெ மொண்டுறைத் துழைஇச்
சினைக்கெளிற் றார்கையை யவரூர்ப் பெயர்தி
யனையவன் பினையோ பெருமற வியையோ
வாங்கட் டிம்புன லீங்கட் பரக்குங்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
னிழைநெகிழ் பருவரல் செப்பா தோயே. (நற்றிணை. 70)

[2]கூர்வாய்ச் சிறுகுருகே குண்டுநீ ருட்கிடந்த
வார விரைகருதி நித்தலும் நிற்றியா
னேரிணர்ப் புன்னைக்கீழ்க் கொண்கன் வருமெனப்
பேருண்க ணீர்மல்க நின்றாண்மற் றென்னாயோ.

[3]ஒண்டுவி நாராய்நின் சேவலு நீயுமாய்
வண்டூது பூங்கானல் வைகலுஞ் சேறிராற்
பெண்டூது வந்தே மெனவுரைத்தெங் காதலரைக்
கண்டீர் கழறியக்காற் கானல் கடிபவோ.

*இவை காப்புச்சிறைமிக்க கையறுகிளவி.*

*உயிராக் காலத்து உயிர்த்தலும் - தலைவனோடு தன்றிறத்து ஒருவரும் ஒன்று உரையாதவழித் தனதாற்றாமையால் தன்னோடும் அவனோடும் பட்டன சிலமாற்றந் தலைவி தானே கூறுதலும் உள:*

*தோழி மறைவெளிப்படுத்துக்கோடற்கு வாளாது இருந்துழித் தலைவன் தன்மேல்தவறிழைத்தவழி [4]இரண்டும்படக் கேட்போரின்றியுங் கூறுதலாம். உதாரணம்:*

[5]உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி
கானலஞ் சேர்ப்பன் கொடுமை யெற்றி
யானாத் துயரமொடு வருந்திப் பானாட்
டுஞ்சா துறைநரொ டுசாவாத்
துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்தே. (குறுந். 145)

---

1. அறுவை - ஆடை. மடி - மடிப்பு. துழைஇ - துழாவி. கெளிறு - ஒரு மீன். மறவி - மறதி. செப்பாதோய் - இதுகாறும் சொல்லாதோய்.

2. குண்டு - ஆழம். ஆரல் - ஒரு மீன். குருகே - என்னாயோ என்க.

3. கானல் - கடற்கரைச் சோலை. கழிக்கரையுமாம். கடிபவோ - கடிந்து நீக்குபவோ?

4. இரண்டும் - தன்வயினுரிமையும் அவன்மேற் பரத்தைமையும்.

5. இத்துறைகெழுசிறுகுடி எனப் பிரிக்க. எற்றி - நினைந்து. துஞ்சாது உறைநரொடு உசாவா - துயிலின்றிஇருப்பவரை ஏனென்று வினாவாத. துயிற்கண் - துயிலுதலையே இயல்பாகவுடைய கண்.

[1]தழையணி யல்கு றாங்கல் செல்லா
நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக
வம்மெல் லாக நிறைய வீங்கிக்
கொம்மை வரிமுலை செப்புட னெதிரின
யாங்கா குவள்கொல் பூங்குழை யென்னு
மவல நெஞ்சமொ டுசாவாக்
கவலை மாக்கட்டிப் பேதை யூரே. (குறுந். 159)

[2]*உயிராதாள் தோழியாயினாள், அவள் தலைவி கூறுவன கேட்டற்கும் பொய்த்துயில்கொள்ளும்.*

*'உயிர்த்தலும்' எனப் பொதுப்படக் கூறியவதனால் தோழிக் குக் கூறுவனவுங் கொள்க.*

[3]பேணுப பேணார் பெரியோ ரென்பது
நாணுத்தக் கன்றது காணுங் காலை
யுயிரோ ரன்ன செயிர்தீர் நட்பி
னினக்கியான் மறைத்தல் யாவது மிகப்பெரி
தழிதக் கன்றாற் றானே கொண்கன்
யான்யா யஞ்சுவ லெனினுந் தானெற்
பிரிதல் சூழான் மன்னே யினியே
கான லாய மறியினு மானா
தலர்வந் தன்றுகொ லென்னு மதனாற்
புலர்வது கொல்லவ னட்பெனா
வஞ்சுவ றோழியென் னெஞ்சத் தானே. (நற்றிணை. 72)

*உயிர்செல வேற்று வரைவு வரின் அது மாற்றுதற்கண்ணும் - இறந்துபாடுபயக்குமாற்றால் தன்றிறத்து நொதுமலர் வரையக் கருதியஞான்று அதனை மாற்றுதற்கண்ணும்: உதாரணம்:*

[4]அன்னை வாழிவேண் டன்னை புன்னை
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
யென்னை யென்று மியாமே யிவ்வூர்
பிறிதொன் றாகக் கூறு
மாங்கு மாக்குமோ வாழிய பாலே. (ஐங்குறு. 110)

---

1. தழை - தழையுடை. நுசுப்பு - இடை. எவ்வம் - துன்பம். கவலைமாக்கட்டு - கவலையில்லாத மாக்களையுடையது; குறிப்பு மொழி.

2. உயிராக்காலத்து என்றதில் உயிராதாள் தோழி என்றபடி.

3. பேணுப - விரும்பியொழுகவேண்டியன. நாணுத்தக்கன்று - நாணத்தக்கது. யாவது - எத்தன்மையது. அழிதக்கன்று - வருந்தத்தக்கது. ஆனாது அலர் வதன்றுகொல் - நீங்காது அலர்வதுகொல் (= வெளிப்படுவதுகொல்), புலர்வது கொல் - இல்லையாய்விடுமோ. நற்றிணையில் தோழி கூற்றாகவுள்ளது.

4. வேண்டு - விரும்பிக்கேள். யாம் என்னை என்றும் - யாம் எனது தலைவ னென்பேம். பால - ஊழ். ஐங்குறு நூற்றில் தோழி கூற்றாகவுள்ளது.

[1]பலவிற் சேர்ந்த பழமா ரினக்கலை
சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇச்
செருவுறு குதிரையிற் பொங்கிச் சார
லிருவெதிர் நீடமை தயங்கப் பாயும்
பெருவரை யடுக்கத்துக் கிழவோ னென்று
மன்றை யன்ன நட்பினன்
புதுவோர்த் தம்மவிவ் வழுங்க லூரே. (குறுந். 385)

*நெறிபடு [2]நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும் - தோழி கூட்டமுண்மை வழக்கியலால் நாடுகின்ற காலத்துக்கண் சிவப்பும் நுதல்வேறுபாடும் முதலிய மெய்வேறுபாடு நிகழ்ந்துழி அவற்றைத் தோழி அறியாமலுஞ் செவிலி அறியாமலுந் தலைவி தான் மறைப்பினும்: உதாரணம்:*

[3]கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பு
மொண்டொடி மகளிர் தண்டழை யல்குலுங்
காண்டொறுங் கவினை யென்றி யதுமற்
றீண்டு மறந்தனையாற் பெரிதே வேண்டாய்
நீயெவன் மயங்கினை தோழி
யாயினுஞ் சிறந்தன்று நோய்பெரி துழந்தே.

*காதன் மிகுதியாற் கவினையெனற்பாலாய், வேறுபட்டனை யென்று எற்றுக்கு மயங்கினையெனத் தலைவி தன்வருத்தம் மறைத்தாள்.*

[4]துறைவன் றுறந்தெனத் துறையிருந் தழுதவென்
மம்மர் வாண்முக நோக்கி யன்னைநின்
னவல முரையென் றனளே கடலென்
பைஞ்சாய்ப் பாவை கொண்டு
வண்டலஞ் சிறுமனை சிதைத்ததென் றேனே.

*இது செவிலிக்கு மறைத்தது.*

---

1. ஆர்தல் - உண்ணல். இனக்கலை - கூட்டமான ஆண் குரங்குகள். தொடை - அம்பு. பொங்கி - மேலெழுந்து. வெதிர் - மூங்கில். அமை - கோல். தயங்க - அசைய. அடுக்கம் - மலைப் பக்கம். அன்றையன்ன - யாம் நட்புக்கொண்ட அந்நாட் போன்ற. புதுவோர்த்து - புதுவோரையுடைத்து.

2. நாட்டம் - விசாரித்தல்; ஆராய்வு.

3. கதுப்பு - கூந்தல். கவினை - அழகுடையை.

4. துறை - நீர்த்துறை. அவலம் - துன்பம். பைஞ்சாய் - பசிய தண்டான்கோரை. சாய்ப்பாவை - கோரைப்புல்லைக் கிழித்துச் செய்த பாவை. வண்டல் - விளையாட்டு. சிறுமனை - மணலாற் கோலிய சிறுவீடு. கடல் சிதைத்தது என்று வேறு காரணங் கூறி மறைத்தேன்.

ஒருமைக் கேண்மையின் உறுகுறை - தான் அவளென்னும் வேற்றுமை யில்லாத நட்பினாலே தோழி தனக்கு வந்து கூறிய குறையை, [1]பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கித் தெளிந்தோள் - முன்னர்த் தெய்வப் புணர்ச்சி நிகழ்ந்தமை நோக்கி அது காரணத் தான் முடிப்பதாகத் தெளிந்த தலைவி, அருமை சான்ற நால் இரண்டு வகையில் - தான் முன் அருமை அமைந்துநின்ற நிலையால் தலை வன் தன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப்பயிறன் (102) முதலிய எட்டினாலே, பெருமைசான்ற இயல்பின் கண்ணும் - தனக்கு உள தாம் பெருமை கூறுதற்கு அமைந்ததோர் இயல்பின் கண்ணும்.

என்றது, தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன்பெருமை தோழிக்குக் கூறுதலாம். உதாரணம்:

[2]மின்னொளி ரவிரற லிடைபோழும் பெயலேபோற்
பொன்னகைத் தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை
யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதா னினக்கொன்று நவிலுவாங் கேளினி;
நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணு
மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
யைதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலும் மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று;

எனவாங்கு,
அனையன பலபா ராட்டிப் பையென
வலைவர் போலச் சோர்பத னொற்றிப்
புலையர் போலப் புன்க ணோக்கித்
தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான்
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
றொழூஉந் தொடூஉமவன் றன்மை
யேழைத் தன்மையோ வில்லை தோழி. **(கலி. 55)**

---

1. பொறி - ஊழ் - தெய்வம்.
2. அறல் - அறுதி (துண்டு). பெயல் - மேகம். பொன் அகை தகை வகிர் - பொன் னைக் கூறுபடுத்தின அழகிய வகிர் - (பிளந்ததுண்டு). போழ் - தாழம்பூவகிர். துவர் - இயல்பான சிவப்பு. ஐ - வியப்பு. வேய் - மூங்கில். அமன்றன்று - நெருங்கிற்று. சோர்பதன் - நெஞ்சழிந்த செவ்வி. புன்கண்நோக்கி - வருத்த முண்டாக நோக்கி. தொழலுந்தொழுதான் - தொழுதலுஞ் செய்தான். காழ் - குத்துக்கோல். ஏழை - அறியாமைக்குணம்.

இதனுட் 'பாராட்டி' எனப் பொய்பாராட்டலும், 'சோர்பத னொற்றி' என நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி கூறுதலிற் கூடுதலுறு தலும், 'புலையர்போல நோக்கி' என நீடுநினைந்திரங்கலும், 'தொழலுந் தொழுதான்' என இடம்பெற்றுத் தழாஅலும், 'தொடலுந் தொட்டான்' என மெய்தொட்டுப் பயிறலும், அவனிகழ்த் தியவாறுங் கூறி, மதத்தாற் பரிக்கோலெல்லையில் நில்லாத களிறுபோல வேட்கைமிகுதியான் அறிவினெல்லையில் நில்லாதவனெனத் தீராத்தேற்றமும் ஒருவாற்றாற் கூறித், தனக்குப் பெருமைசான்ற இயல்பைப் பின்னொருகால் தோழிக்குக் கூறிய வாறு காண்க.

இனித் தலைவற்குப் பெருமை அமைந்தன எட்டுக்குண மென்று கூறி, அவற்றை

**இளமையும் வனப்பு மில்லொடு வரவும்**
**வளமையுந் தறுகணும் வரம்பில் கல்வியுந்**
**தேசத் தமைதியும் மாசில் சூழ்ச்சியும்** **(பெருங். 1: 36–89–1)**

எனப் பொருள் கூறின், 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' (75) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய எண்கள் அவை கூறிய வடநூல் களில் வேறே எண்ணுதற்கு உரியன சில இல்லாமல் எண்ணி னாற்போல ஈண்டும் இளமை முதலிய எட்டும் ஒழிய வேறெண் ணுதற்கு உரியன எட்டுத் தலைவற்கின்றாகக் கூறல்வேண்டும்; ஈண்டு அவ்வாறன்றித் தலைவற்கு உரியனவாகப் பலவகைகளான் எவ்வெட்டுளவாகக் கூறக் கிடந்தமையின் அங்ஙனம் ஆசிரியர் இலக்கணங் கூறாரென மறுக்க. அன்றியும் எட்டும் எடுத்து ஓதுபவென்றும் உதாரணமின்றென்றும் மறுக்க.

இனி முட்டுவயிற்கழறன், முனிவு மெய்ந்நிறுத்தல், அச்சத் தினகறல், அவன் புணர்வுமறுத்தல், தூது முனிவின்மை, துஞ்சிச் சேர்தல், காதல் கைம்மிகல், கட்டுரையின்மை என்பன எட்டு மென்று (271) அவற்றை ஈண்டுக் கொணர்ந்து பொருள்கூறிற் கூற் றுக் கூறுகின்றவிடத்து மெய்ப்பாடு கூறின் ஏனை மெய்ப்பாடு களுங் கூற்றுக் கூறுகின்றவிடத்தே கொணர்ந்து கூற்றினுள் அடங் கக் கூறல் வேண்டுமென்று மறுக்க.

பொய்தலை அடுத்த மடலின்கண்ணும் - பொய்யினைத் [1]தலைக் கீடாகவுடைய மடலின் கண்ணும்:

---

1. தலைக்கீடு - சாட்டு

*அது, மடன்மா கூறியவழி அம்மடலினை மெய்யெனக் கொண்டாள்; அதனைப் பொய்யெனக் கோடலாம். உதாரணம்:*

[1]வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே
யவையினும் பலவே சிறுகருங் காக்கை
யவையினு மவையினும் பலவே குவிமட
லோங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த
தூங்கணங் குரீஇக் கூட்டுள சினையே.

*இது, மடன்மா கொள்ளக் குறித்தோனைப் பறவைக்குழாந் தம்மை மடலூர விடாவென விளையாட்டுவகையாற் பொய் யென்று இகழ்ந்தது.*

*கையறு தோழி கண்ணீர் துடைப்பினும் - தலைவியை ஆற்றுவித்துக் [2]கையற்ற தோழி தலைவி கண்ணீரைத் துடைப் பினும்: உதாரணம்:*

[3]யாமெங் காமந் தாங்கவுந் தாந்தங்
கெழுதகை மையினா னழுதன தோழி
கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
யேறா திட்ட வேமப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்புங்
குன்ற நாடற் கண்டவெங் கண்ணே. (குறுந். 241)

*இது தன் ஆற்றாமைக்கு ஆற்றாத தோழியை ஆற்றுவிக் கின்றாள் அவ்விரண்டுங் கூறியது.*

*வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும் - தலைவி வேறு பாடு எற்றினானாயிற் றென்று வேலனை வினாய் வெறியாட்டு எடுத்துழித் தலைவி அஞ்சும் அச்சத்தின்கண்ணும்: அது பண் டேயுந் தன்பரத்தைமையான் நெகிழ்ந்தொழுகுவான் இன்று நம் ஆற்றாமைக்கு [4]மருந்து பிறிதுமுண்டென்றறியின் வரைவு நீடுமென்று அஞ்சுதல்.*

---

1. வெள்ளாங்குருகு - வெண்ணிறக்குருகு. பிள்ளை - குஞ்சு.
2. கையறல் - செயலறல். சினை - முட்டை.
3. தாங்கவும் - பொறுக்கவும். கெழுதகை - உரிமை; நட்பு. ஆற்றுப்படுத்த - வழிப்படுத்த. பதம் - செவ்வி. ஏமம் - காவல். புலி புலி என்று ஆரவாரித்தலின் ஏமப்பூசல் என்றார். பிறர் தங்களைக் காக்கும் பூசல் என்றபடி. பூசல் - ஆரவாரம். கண் அழுதன என இயைக்க.
4. மருந்துபிறிதென்றது - ஆற்றாமையைத் தணிக்கும் வேறு மருந்தை. தனது அருளுதலன்றி இவள் ஆற்றாமையைத் தணித்தற்கு வேறு மருந்தும் உளதென் றறியின் வரைவை நீட்டிப்பான் என்று அஞ்சுதல் என்பது இதன் கருத்து.

*உதாரணம்:*

[1]பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற்
றுனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த
வினிய வுள்ள மின்னா வாக
முனிதக நிறுத்த நல்க லெவ்வஞ்
சூருறை வெற்பன் மார்புறத் தணித
லறிந்தன எல்ல ளன்னை வார்கோற்
செறிந்திலங் கெல்வளை ஞெகிழ்பத நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருக னாரணங் கென்றலி னதுசெத்
தோவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பறைஇக்
கூடுகொ ளின்னியங் கறங்கக் களனிழைத்
தாடணி யயர்ந்த வகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீ
ரைதமை பாணி யிரீஇக்கை பெயராச்
செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையிற் றூங்கல் வேண்டி
னென்னாங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக
வாடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயி னிம்மறை
யலரா காமையோ வரிதே யஃதான்
றன்றிவ ருறுவிய வல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவே ணல்குவ னெனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யானுயிர் வாழ்த லதனினு மரிதே. (அகம். 98)

*'இன்னாவாக்கி நிறுத்த எவ்வம்' என்பது அவன்பயிற் பரத்தைமை. 'உயிர் வாழ்தல் அரிது' என்பது தன்வயினுரிமை. அவை வெறியஞ்சியவழி நிகழ்ந்தன.*

*குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் - இரவுக்குறிவருந் தலைவன் செய்யுங்குறி பிறிதொன்றனான் நிகழ்ந்து தலைவன் குறியை ஒத்தவழி அதனை மெய்யாக உணர்ந்து தலைவி மயங்கிய*

---

1. கவாஅன் - மலைப்பக்கம். துனி - வெறுப்பு. நல்கல் - அருளுதல். எவ்வம் - வருத்தம். கோல் - திரட்சி. பிரப்பு - பிரப்பரிசி. ஆர் அணங்கு - அரிய வருத்தம். அது செத்து - அதனை அறிந்து. ஓவம் - சித்திரம். பறைஇ - பரவி. ஆடணி அயர்ந்த பந்தர் - ஆடுதற்கேற்ற அழகுசெய்த பந்தர். வெண்போழ் - வெள்ளிய பனந்தோடு. பாணி - தாளம். நொவ்வல் - துன்பம். பிறிது - பிறிதுகாரணம்.

*வழியும்: புனலொலிப் படுத்தன் [1]முதலிய அவன் செயற்கையானன்றி இயற்கையான் நிகழ்ந்துழிக் குறியி னொப்புமையாம். உதாரணம்:*

[2]மெய்யோ வாழி தோழி சாரன்
மைப்பட் டன்ன மாமுக முசுக்கலை
யாற்றப் பாயாத் தப்ப லேற்ற
கோட்டொடு போகி யாங்கு நாடன்
றான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனவென் றடமென் றோளே. (குறுந். 121)

*[3]கோடு ஆற்றப் பாயாது வேண்டியவாறு பாய்ந்து அதனை முறித்த முசுப்போல நாங் குறிபெறுங் காலத்து வாராது [4]புட்டாமே [5]வெறித்து இயம்புந்துணையும் நீட்டித்துப் பின்பு வருதலிற் குறிவாயாத்தப்பு அவன்மேல் ஏற்றி அதற்குத் தோள் பசந்தனவென்று பின்னொருநாள் அவன் வந்துழித் தோழியை நோக்கி இவ்வரவு மெய்யோவெனவே அவ்விரண்டும் பெற்றாம்.*

[6]அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன் – கணிவிரும்பு
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழா
யுள்ளுருகு நெஞ்சினேன் யான். (ஐந்: ஐம். 50)

*இதுவுமது.*

*வரைவு தலைவரினும் - களவு வெளிப்பட்ட பின்னராயினும் முன்னராயினும் வரைந்தெய்துதற் செய்கை தலைவன்கண் நிகழி னும்: ஆண்டு முற்காலத்து நிகழ்ந்த ஆற்றாமைபற்றி அவ்விரண் டுங் கூறும். உதாரணம்:*

[7]நன்னா டலைவரு மெல்லை நமர்மலைத்
தந்நாண்டாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல்;
புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ. (கலி. 39)

---

1. முதலிய - முதலியன.
2. மைப்பட்டன்ன மாமுகம் - மைபட்டாற் போன்ற கரியமுகம். ஆற்ற - (கொம்பு) தாங்க. தப்பல் - தவற்றின்பயன். கோட்டொடு போகியாங்கு - கொம்பினிடத் துச் சென்றாற்போல. பயன்சென்றாற்போல என்க. தோள்பசந்தன என்க.
3. கோடு - மரக்கொம்பு. ஆற்ற - தாங்க. முசு - குரங்குளொருசாதி.
4. புள் - பறவைகள்.
5. வெறித்தல் - வெருளல்; அஞ்சுதல். இயம்பல் - ஒலித்தல்.
6. மணியரவம் - மணியோசை. கணி - வேங்கை. போந்தேன் பெயர்ந்தேன் என்க.
7. உறைத்தல் - துளித்தல். அறை - பாறை. கடிதும் - நீக்குதும்.

*என நாண்தாங்கி ஆற்றுவாரும் உளரோவெனவுங் கனவிற் புணர்ச்சி கடிதுமெனவும் இரண்டுங் கூறினாள்.*

[1]கொல்லைப் புனத்த வகில்சுமந்து கற்பாய்ந்து
வானி னருவி ததும்பக் கவினிய
நாட னயமுடைய னென்பதனா னீப்பினும்
வாடன் மறந்தன தோள். (ஐந்: எழு. 2)

*'நயனுடையன்' என்பதனால் வரைவு தலைவந்தமையும், 'நீப்பினும்' என்பதனால் அவன்வயிற் பரத்தமையுங் கூறினாள்.*

*களவு அறிவுறினும் - தம் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகத் தலைவன் ஒழுகினும், ஆண்டும் அவ்விரண்டுங் கூறும்; உதாரணம்:*

[2]நாண்மழை தலைஇய நன்னெடுங் குன்றத்து
மால்கடற் றிரையி னிழிதரு மருவி
யகலிருங் கானத் தல்கணி நோக்கித்
தாங்கவுந் தகைவரை நில்லா நீர்சுழல்
போதெழின் மழைக்கண் கலுழ்தலி னன்னை
யெவன்செய் தனையோநின் னிலங்கெயி றுண்கென
மெல்லிய வினிய கூறலின் வல்விரைந்
துயிரினுஞ் சிறந்த நாணு நனிமறந்
துரைக்கலுய்ந் தனனே தோழி சாரற்
காந்த ளூதிய மணிநிறத் தும்பி
தீந்தொடை நரம்பி னிமிரும்
வான்றோய் வெற்பன் மார்பணங் கெனவே (நற்றிணை. 17)

*யான் அவனை எதிர்ப்பட்ட இடங்கண்டு அழுதேனாக அதனைக் கண்டு நீ எவன் செய்தனையென வினாய அன்னைக்கு இம்மறையினைக் கூறலுற்றுத் தவிர்ந்தேனெனத் தாய் களவறிவுற்றவாறு கூறக் கருதி அவன்வயிற் பரத்தைமை கூறிற்று.*

*தமர் தற்காத்த காரண மருங்கினும் - அங்ஙனங் களவறிவுற்ற அதன்தலைச் செவிலி முதலிய சுற்றத்தார் தலைவியைக் [3]காத்தற்கு ஏதுவாகிய காரணப்பகுதிக் கண்ணும்:*

---

1. சுமந்து பாய்ந்து ததும்பக் கவின்பெற்ற நாட்டையுடையோன் நயன் உடையன் என்பதனால் தோள் மறந்தன என்க. வாடல் - வாடுதல்.

2. தலைஇய - பெய்துவிட்ட. அல்குஅணி - தங்கியோடும் அழகு. தாங்கவும் - அடக்கவும். தகைவரை - அடக்கமளவு. கலுழுதல் - அழுதல். எணிறுண்கென் - நின் எயிற்றை முத்தங்கொள்வேன் என்று. உரைக்கல் உய்ந்தனன் - உரைத்தலிற் பிழைத்தேன்.

3. காத்தல் - புறம்போகாவண்ணம் இற்செறித்தல்.

*ஆண்டுந் தமரை நொந்துரையாது அவன்வயிற் பரத்தைமை கூறும்.*

*காரணமாவன:- தலைவி தோற்றப்பொலிவும் வருத்தமும் அயலார் கூறும் அலருமாம். உதாரணம்:*

[1]அடும்பி னாய்மலர் விரைஇ நெய்த
னெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்த
லோரை மகளி ரஞ்சியீர் ஞெண்டு
கடலிற் பரிக்குந் துறைவனொ டொருநா
ணக்குவிளை யாடலுங் கடிந்தன்
றைதேய் கம்ம மெய்தோய் நட்பே. (குறுந். 401)

*இது வேறுபாடு கண்டு இற்செறித்தமை தன்னுள்ளே கூறியது.*

[2]பெருநீ ரழுவத் தெந்தை தந்த
கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி
யெக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇச்
செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி
ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற் றூச றூங்கிக்
கொண்ட லிடுமணற் குரவை முனையின்
வெண்டலைப் புணரி யாயமொ டாடி
மணிப்பூம் பைந்தழை தைஇ யணித்தகைப்
பல்பூங் கான லல்கினம் வருதல்
கௌவை நல்லணங் குற்ற விவ்வூர்க்
கொடிதறி பெண்டிர் சொற்கொண் டன்னை
கடிகொண் டனளே தோழி பெருந்துறை
யெல்லையு மிரவு மென்னாது கல்லென
வலவ னாய்ந்த வண்பரி
நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே. (அகம். 20)

---

1. அடும்பு - ஒரு கொடி, தொடைமாலை. ஓரை - விளையாட்டு. ஈர - ஈரம். பரிக்கும் - ஓடும். ஐது - வியத்தற்குரியது. கம்ம என்பது அக்காலத்து வழங்கிய தோர் அசைநிலை யிடைச்சொற்போலும். இதற்குச் சாமிநாதையர், ஏகு - அசைநிலை. அம்ம - வியப்பிடைச் சொல் என்று கூறியுள்ளார். நற்றிணை யுரைகாரர் நற்றிணை 52ம் செய்யுளுரையில், ஐது, ஏகு என்று பிரித்து ஐது - மென்மையுடையது என்றும், ஏகு - நெஞ்சே நீயே ஏகுவாய் என்றும் முடித்துப் பொருள் கூறியுள்ளார். 240ஞ் செய்யுளுள்ளும் அவ்வாறு பொருள் கூறியுள்ளார்.

2. உணங்கல் - உலரவைத்த மீன். அசைஇ - இருந்து. அளை - புற்று. கெண்டி - அகழ்ந்து. தாழைவீழ்கயிற்றூசல் - தாழையிலுந் தொடுத்த தூங்குங் கயிற் றூசல். வீழாகிய கயிறென்றல் சிறப்பின்று. அகம் 20ம் செய்யுணோக்கியறிக. தாழைவீழ் - ஆலம்வீழ் போல நீண்டதன்று. கொண்டல் - மேல்காற்று. முனை யின் - வெறுப்பின். அல்கினம் - தங்கினேமாய். கௌவை - அலர். அணங்கு - பேய். கொடிதறி பெண்டிர் - கொடிதையே அறியும் பெண்டிர் என்க.

[1]பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை
களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கிப்
பனிக்கழித் துழவும் பானாட் டனித்தோர்
தேர்வந்து பெயரு மென்ப வதற்கொண்
டோரு மலைக்கு மன்னை பிறரும்
பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளி
ரிளையரு முதியரு முளரே
யலையாத் தாயரொடு நற்பா லோரே. (குறுந். 246)

*இவை பிறர் கூற்றால் தமர்காத்தன.*

[2]முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
யலமர லாயமொ டியாங்கணும் படாஅன்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென
வொண்சுடர் நல்லி லருங்கடி நீவித்
தன்சிதை வறித லஞ்சி யின்சிலை
யேறுடை யினத்த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையிற் போகி யீங்கோர்
தொலைவில் வெள்வேல் விடலையொ டென்மக
ளிச்சுரம் படர்தந் தோளே யாயிடை
யத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி யோடி
மெய்த்தலைப் படுதல் செய்யே னித்தனை
நின்னொடு வினவல் கேயாள் பொன்னொடு
புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்கு
லாய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉங்
கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே. (அகம். 7)

*என்றன தோற்றப் பொலிவாற் காத்தன. இதற்கும் அவ்விரண்டும் உள.*

*தன்குறி தள்ளிய தெருளாக்காலை வந்தனன் பெயர்ந்த வறுங் களம் நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத் தேறலும் - தலைவி*

---

1. பெயரும் - செல்லும். என்ப - என்று சொல்வர். அன்னை - அலைக்கும் என்க. ஓரும் - அசைநிலை. இளையரும் மடவரும் எனவும் பாடம்.

2. இலங்கின - விழுந்து முளைத்து விளங்கின. தலைமுடிசான்ற - தலைமயிரும் முடிகூடின. படாஅல் - படாதே = பொருந்தாதே. முதுபதி - பழையநகர். காப்பும் பூண்டிசின் - காவலும் பூண்டாய். கடை - வாயில். எனப்படர்தந்தோள் என இயைக்க. பிற்படு பூசல் - பிற்படச் சென்று மீட்கும் கரந்தையார்பூசல். தலைப் படுதல் - கூடுதல். காழ் - விதை = கொட்டை.

*தன்னாற் செய்யப்பட்ட குறியிடங்கள் இற்செறிப்பு முதலிய காரணங்களான் இழக்கப்பட்டனவற்றை இவை இழக்குமென முந்துறவே உணராத காலத்து முற்கூறிய குறியிடமே இடமாக வந்து தலைவன் கூடாது பெயர்தலால் தமக்குப் பயம்படாத வறுங்களத்தை நினைந்து அதனைத் தலைவற்கு முந்துறவே [1]குறிபெயர்த்திடப்பெறாத தவறு தன்மேல் ஏற்றிக்கொண்டு தோழியையும் அது கூறிற்றிலளெனத் தன்னொடு தழீஇக் கொண்டு தலைவி தெளிதற்கண்ணும்: ஆகவே அவன் தவற்றைத் தன் தவறு ஆக்கினளாம். தழீஇ - தோழியைத் தழீஇ. அத்தவறு அவன்கட் செல்லாமல் தனதாகத் தேறினாள். உதாரணம்:*

[2]விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
றெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தார
னஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற்
கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி
வருதல் வாய்வது வான்றோய் வெற்பன்
வந்தன னாயி னந்தளிர்ச் செயலைக்
காவி லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்
றூசன் மாறிய மருங்கும் பாய்புட
னாடா மையிற் கலுழ்பில தேறி
நீடிதழ்த் தலைஇய கவின்பெறு நீலங்
கண்ணென மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்
குலவுப்பொறை யிறுத்த கோற்றலை யிருவிக்
கொய்தொழி புனமு நோக்கி நெடிதுநினைந்து
பைதலன் பெயரலன் கொல்லோ வைதேய்
கயவெள் ளருவி சூடிய வுயர்வரைக்
கூஉங்க ணஃதெம் மூரென
வாங்கதை யறிவுறன் மறந்திசின் யானே. (அகம். 38)

*இதனுள் ஊசன்மாறுதலும் புனமுந் தன்குறி தள்ளிய இடன்; மறந்திசின் என்றது தெருளாக்காலை. கூஉங் கண்ணது ஊரென உணர்த்தாமையின், இடையீடு படுவதன்றி அவன்கண் தவறுண்டோவெனத் தன் பிழைப்பாகத் தழீஇயினாள். இது சிறைப்புறமாக வரைவு கடாயது.*

---

1. குறிபெயர்த்திடுதல் - முன் குறித்த குறியைநீக்கி வேறு குறிகூறல்; அது கூஉங்கணணது ஊரெனக் கூறல்.

2. கண்ணி - நெற்றியிலணிவது. தார் - மார்பிலணிவது (கழுத்துமாலை). தெரிந்து - ஆராய்ந்தெடுத்து. துணை - தலைவி. வாய்வது - வாய்ப்புடையது. வீழ்தல் - தாழ்தல். கலுழ்பில - கலங்காதனவாய். தேறி - தெளிந்து. தடக்குரல் - வளைந்து கதிர். பொறை - பாரம். கதிராகிய பாரத்தைக் கெடுத்த இருவி என்க. இருவி - கதிர் முறித்த தாள். பைதல் - துன்பம்.

வழுவின்றி நிலைஇய இயற்படு பொருளினும் - வழுப்படுத லின்றி நின்ற இயற்பட மொழிதற் பொருண்மைக் கண்ணும்:

'வழுவின்றி நிலைஇய' என்றதனால் தோழி இயற்பழித் துழியே இயற்பட மொழிவதென்க. தலைவன் வழுவைத் தோழி கூறியதற்குப் பொறாது தான் இயற்பட மொழிந்ததல்லது தன் மனத்து அவன் பரத்தைமை கருதுதலுடைமையிற் பொருள் வேறு குறித்தாளாம். உதாரணம்:

அடும்பம னெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப
வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன்
கொடிய னாயினு மாக
வவனே தோழியென் னுயிர்கா வலனே. (ஐங்குறு: ப. 144)

தொடிநிலை நெகிழச் சாஅய்த் தோளவர்
கொடுமை கூறின வாயினுங் கொடுமை
நல்வரை நாடற் கில்லை தோழியென்
னெஞ்சிற் பிரிந்ததூஉ மிலரே
தங்குறை நோக்கங் கடிந்ததூஉ மிலரே
நிலத்தினும் பெரிதே நேர்ந்தவர் நட்பே.

இஃது [1]அகன்று உயர்ந்து தாழ்ந்தவற்றுட் பெரிதாகிய நட்புடையவன் எனக் கூறியது. ஒருகாலைக்கு ஒருகாற் பெருகு மென்றுங் கூறினாளாயினும் நமது நட்புப்போல் ஒருகாலே பெருத்ததில்லையென இரண்டுங் கூறினாள்.

பொழுதும் ஆறும் புரைவது அன்மையின் அழிவு தலைவந்த சிந்தைக் கண்ணும் - தலைவியுந் தோழியுந் தலைவன் இரவுக்குறி வருங்காற் பொழுதாயினும் நெறியாயினும் இடையூறாகிப் பொருந்துதலின்மையின் அழிவு தலைத்தலை சிறப்ப வந்த ஆராய்ச் சிக்கண்ணும்: ஆண்டும் அவ்விரண்டும் நிகழும். உதாரணம்:

[2]மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
யெவன்கொல் வாழி தோழி மயங்கி
யின்ன மாகவு நன்னர் நெஞ்ச

1. அகன்று உயர்ந்து தாழ்ந்தவற்றுள் என்றது "நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று - நீரினுமாரளவின்றே ... நாடனொடு நட்பே" என்னுங் (3) குறுந்தொகைச் செய்யுட் கருத்தை நோக்கிய வாக்கியம். தாழ்ந்தவற்றின் என்றிருப்பது நலம்.

2. மன்று - ஊர்ப்பொதுவிடம் (அம்பலம்). பாடு - ஒலி. மனை - மனையிலுள்ளார். மடிதல் - துயிறல். யாமங் கொளவரின் - இடையாமம் முன்வரின். கனைஇ - மிக்கு. உரைஇ - பரந்து புறத்தன்ன சிறுநெறி என்க. கல் - மலை. வார்பு -

மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே. (அகம். 128)

*காமங் கரைபொழியா நிற்கவும் என்ன நன்றி கருதி இருவ ரொடுஞ் சூழாது சென்றது நெஞ்செனு இரண்டுங் கூறினாள். [3]மனை மடிந்தன்றென்பது பொழுது; சிறுநெறியென்பது ஆற்றின் னாமை; இதனைப் பொருளியலுட் (210) கூறாது தன்வயினுரி மையும் அவன் வயிற் பரத்தைமையும்பற்றி ஈண்டுக் கூறினான்.*

[1]குறையொன் றுடையேன்மற் றோழி நிறையில்லா
மன்னுயிர்க் கேமஞ் செயல்வேண்டு மின்னே
யரவழங்கு நீள்சோலை நாடனை வெற்பி
லிரவரா லென்ப துரை. (ஐந்: எழு. 14)

*'வளைவாய்ச் சிறுகிளி' என்னுங் (141) குறுந்தொகையும் அது.*

*காமஞ் சிறப்பினும் - தலைவி காமஞ் சிறந்துதோன்றினும்; உதாரணம்:*

[2]ஒலியவிந் தடங்கிய யாம நள்ளெனக்
கலிகெழு பாக்கந் துயின்மடிந் தன்றே
தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுண ரன்றி லுயவுக்குரல் கேட்டொறுந்
துஞ்சாக் கண்ண டுயரடச் சாஅய்
நம்வயின் வருந்து நன்னுத லென்ப
துண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வன்கைப் பரதவ ரிட்ட செங்கோற்
கொடுமுடி யவ்வலை பரியப் போக்கிக்
கடுமுர ணெறிசுறா வழங்கு
நெடுநீர்ச் சேர்ப்பன்ற னெஞ்சத் தானே. (நற்றிணை. 303)

---

நிறைந்து. இட்டருங்கண்ண - ஒடுக்கமான சேறற்கரிய இடத்திலுள்ள. இயவு - வழி. மனை மடிந்தது என்றமையான் இடையாமமாயிற்று என்பது கருத்து.

1. குறை - (நின்னால்) இன்றியமையாத காரியம். ஏமம் - காவல் (அரண்). இரவரால் - இரவில்வாரற்க.

2. ஒலிஅவிந்து - ஊரோசை தணிந்து. யாமம் - இரவு. நள்ளென - நடுவாக. பாக்கம் - கடற்கரைப் பட்டினம். மன்றப்பெண்ணை - ஊர்ப் பொதுவிடத் தில் நிற்கும் பனை. குடம்பை - கூடு. செங்கோல் - சிவந்தநிறம்; செவ்விய கோற்றுண்டுகளுமாம். கொடுமுடி - வலித்துக் கட்டிய முடி.

[1]ஞாயிறு பட்ட வகல்வாய் வானத்
தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை
யிறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் செரீஇய
விரைகொண் டவையும் விரையுமாற் செலவே. (குறுந். 92)

[2]கொடுந்தா ளலவ குறையா மிரப்பே
மொடுங்கா வொலிகடற் சேர்ப்ப – னெடுந்தேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காண
நடந்து சிதையாதி நீ. (ஐந்: ஐம். 41)

[3]முடமுதிர் புன்னைப் படுகோட் டிருந்த
மடமுடை நாரைக் குரைத்தேன் – கடனறிந்து
பாய்திரைச் சேர்ப்பன் பரித்தேர் வரக்கண்டு
நீதகா தென்றே நிறுத்து. (ஐந். எழு. 69)

*அவன் அளி சிறப்பினும்* - *தலைவிக்கும் காமமிக்க கழிபடர் சிறந்தாற் போல்வது தலைவன்கட் சிறந்துழி அது காரணத்தால் அவன் அளிசிறந்து தோன்றினும்: இவ்வாறு அரிதின் வருகின் றான் வரைகின்றிலனென அவ்விரண்டுந் தோன்றும்: உதாரணம்:*

[4]இருள்கிழிப் பதுபோன் மின்னி வானந்
துளிதலைக் கொண்ட நளிபெய னடுநாண்
மின்மினி மொய்த்த முரிவுவாய்ப் புற்றம்
பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்
குரும்பி கெண்டும் பெருங்கை யேற்றை
யிரும்புசெய் கொல்லெனத் தோன்று மாங்க
ணாறே யருமர பினவே யாறே
சுட்டுநர்ப் பனிக்குஞ் சூருடை முதலைய
கழைமாய் நீத்தங் கல்பொரு திரங்க
லஞ்சுவந் தமிய மெண்ணாது மஞ்சுமந்
தாடுகழை நரலு மணங்குடைக் கவாஅ
னீருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
விருங்களி றட்ட பெருஞ்சின வுழுவை
நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த
மேய்மணி விளக்கிற் புலாவ வீர்க்கும்

---

1. அளிய - இரங்கத்தக்கன. இறைஉற - தங்கும்படி. நெறி - வழி. செலவு விரையும் எனவே மாலை வந்தது என்றபடி.

2. அலவ - நண்டே! இரப்பேம் நீ நடந்து வழியைச் சிதையாதி என இயைக்க.

3. முடம் - வளைவு. தகாது - (வருதல்) தகாது. நிறுத்து - நிறுத்துவாய்.

4. நாளிபெயல் - செறிந்த மழை. புற்றம் - புற்று. சுடர - ஒளிவிட. குரும்பி - புற்றாஞ் சோறு. பெருங்கையேற்றை - பெரிய கையையுடைய ஆண் கரடி. வாங்கி - இடந்து. ஈருயிர்ப் பிணவு - சூற்பிணவு. அராவுமிழ்ந்த மணிவிளக்கில் ஈர்க்

வாணடந் தன்ன வழக்கருங் கவலை
யுள்ளுந ருட்கும் கல்லடர்ச் சிறுநெறி
யருள்புரி னெஞ்சமொ டெஃகு துணை யாக
வந்தோன் கொடியனு மல்லன் றந்த
நீதவ றுடையையு மல்லை நின்வயி
னானா வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே. (அகம். 72)

'வந்தோ' னென்பது அவனளி சிறத்தல், 'தவறுடையே' னென்பது தன்வயினுரிமை, 'கொடியனுமல்ல' னென்பது அவன் வயிற் பரத்தைமை,

[1]சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின்வயி னிமைக்கு
மோங்குமலை நாடன் சாந்துபுல ரகல
முள்ளி னுண்ணோய் மிகுமினிப்
புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய். (குறுந். 150)

இதுவும் அது.

ஏமஞ் சான்ற உவகைக்கண்ணும் - நால்வகைப் புணர்ச்சி யால் நிகழுங் களவின்கண் எஞ்ஞான்றும் இடையீடுபடாமற் றலைவன்வந்து கூடுதல் இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவமையினைத் தலைவி எய்தியக்கண்ணும்:

அஃது எஞ்ஞான்றும் கூட்டம் பெற்றமையான் மகிழ்ந்து கூறுதலாம். உதாரணம்:

[2]நோயலைக் கலங்கிய மதனழி பொழுதிற்
காமஞ் செப்ப லாண்மகற் கமையும்
யானென், பெண்மை தட்ப நுண்ணிதிற் றாங்கிக்
கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
மண்ணாப் பசுமுத் தேய்ப்பக் குவியிணர்ப்
புன்னை யரும்பிய புலவுநீர்ச் சேர்ப்ப
னென்ன மகன்கொ றோழி தன்வயி
னார்வ முடைய ராகிய
மார்பணங் குறுநரை யறியா தோனே. (நற்றிணை. 94)

---

கும் என்க. வழங்கல் அரும் - செல்லற்கரிய. கவலை - கவர்வழி. எஃகு - வேல். படர் - துன்பம்.

1. சேணோன் - மரஉச்சியிற்கட்டிய பரணிலிருப்பவன். ஞெகிழி - நெருப்புக்கொள்ளி. மாய்வது எவன் - இல்லையாதல் என்ன ஆச்சரியம்.

2. மதன் - வலி. தாங்கி - பொறுத்து. கழாஅ - கழுவாத. மார்பு அணங்குறுநரை - மார் பால் வருத்தமுறுகின்றோரை.

'மண்ணாப் பசுமுத்தேய்ப்ப நுண்ணிதிற் றாங்கிப் பெண்மை தட்ப'வென மாறிக் கழுவாத பசியமுத்தந் தனது மிக்க ஒளியை மறைத்துக் காட்டினாற்போல் யாமும் புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்க நலனைப் புலப்படாமல் அரிதாகத் தாங்கிப் பெண்மை யாற் றகைத்துக் கொள்ளும்படியாகத் தன் மார்பால் வருத்த முற்றாரைக் கண்டு அறியாதோனாகிய சேர்ப்பனை என்னமக னென்று சொல்லப்படுமென மகிழ்ந்து கூறினாள். ஆர்வமுடை யராகவேண்டி மார்பணங்குறுநரை அறியாதோனென்க. அலரா மற் குவிந்த கொத்தையுடைய புன்னைக் கண்ணே புலானாற் றத்தையுடைய நீர் தெறித்தரும்பிய சேர்ப்பனென்றதனால் புன்னையிடத்துத் தோன்றிய புலானாற்றத்தைப் பூ விரிந்து கெடுக்குமாறுபோல வரைந்துகொண்டு களவின்கண் வந்த குற்றம் வழிகெட- ஒழுகுவனென்பது உள்ளுறை. 'இரண்டறி 'கள்வி' (குறுந். 312) என்னும் பாட்டினுள் [1]தோற்றப் பொலிவை மறைப் பளௌனத் தலைவன் கூறியவாறும் உணர்க.

மறைந்தவற் காண்டன் முதலிய ஆறற்கும் உம்மையும் உருபும் விரித்து ஏனையவற்றிற்கு உம்மை விரிக்க; உம்மை விரிக்க வேண்டுவனவற்றிற்கு உம்மையும், [2]இரண்டும் விரிக்க வேண்டுவனவற்றிற்கு இரண்டும் விரித்து, அவற்றிற்கும் ஏனை வினையெச்சங்கட்கும் கூற்று நிகழ்த்தலுளவென முடிக்க. கூற்று அதிகாரத்தான்வரும். உயிராக் காலத்து உயிர்த்தலுமுளவென முடிக்க.

ஓரிடத்தான தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும் உள - இக்கூற்று முப்பத்தாறனுள் ஒரோவிடங்களிலே தன்னி டத்து அன்பிற்கு உரிமையுண்டாகவும் அவனிடத்து அயன்மை உண்டாகவுங் கூற்று நிகழ்தலுள: ஆன் - ஆனவென ஈறு திரிந்தது.

அன்னவும் உள - அவைபோல்வன பிறவும் உள என்றவாறு.

'அன்னபிற' என்றதனான் இன்னுந் தலைவிகூற்றாய் இவற் றின் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

---

* களவின் எனவும் பாடம்.

1. தோற்றப்பொலிவை மறைப்பளென்பதனால், அவள் எமஞ்சான்ற உவகை பெறப்படும் என்பது கருத்து.

2. இரண்டும் என்றது உம்மையும் உருபும் என்றபடி.

[1]பிணிநிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
வணிமலை நாடன் வருவான்கொ றோழி
கணிநிற வேங்கை கமழ்ந்துவண் டார்க்கு
மணிநிற மாலைப் பொழுது. (திணை: ஐம். 9)

*இது தலைவி இரவுக்குறி நயந்து கூறியது.*

[2]பெயல்கான் மறைத்தலின் விசும்புகா ணலரே
நீர்பரந் தொழுகலி னிலங்கா ணலரே
யெல்லை சேறலி னிருள்பெரிது பட்டன்று
பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
வேங்கை கமழுமெஞ் சிறுகுடி
யாங்கறிந் தனையோ நோகோ யானே. (குறுந். 355)

*இஃது இரவுக்குறி வந்த தலைவனை நோக்கிக் கூறியது.*

[3]கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி
யஞ்ச லோம்பி யார்பதங் கொண்டு
நின்குறை முடித்த பின்றை யென்குறை
சொல்லல் வேண்டுமாற் கைதொழு திரப்பல்
பல்கோட் பலவின் சார லவர்நாட்டு
நின்கிளை மருங்கிற் சேறி யாயி
னம்மலை கிழவோற் குரைமதி யிம்மலைக்
கானக் குறவர் மடமக
ளேனல் காவ லாயின ளெனவே. (நற்றிணை. 102)

[4]ஓங்க லிறுவரைமேற் காந்தன் கடிகவினப்
பாம்பென வோடி யுருமிடித்துக் கண்டிரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாட்போலா
வீங்கு நெகிழ்ந்த வளை. (திணை: ஐம். 3)

[5]மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழ
முண்டுவந்து மந்தி முலைவருடக் – கன்றமர்ந்
தாமா சுரக்கு மணிமலை நாடனை
யாமாப் பிரிவ திலம். (ஐந்: எழு. 4)

---

1. பிணி - நோய். பிணிநிறம் என்றதனால் பசலை என்பது பெறுதும். கணி - சோதிடஞ்செல்வோன். மணிநிறம் - நீல மணிபோலும் நிறம்; என்றதனால் இருளையுடைய என்பது பெறுதும்.
2. பெயல் - மழை. கண் - இடம். எல்லை - ஞாயிறு. நோகு - (அதற்கு) நோவேன்.
3. கொடுங்குரல் - வளைந்தகதிர். அஞ்சலோம்பி - அஞ்சுதலைப் பாதுகாத்து. ஆர்பதம் - உணவு. பல்கோள் - பலகாய்.
4. இறுவரை - தாழ்வரை = மலைப்பக்கம். உரும் - இடி. போலாது வளை நெகிழ்ந்த என்க. போல எனவும் பாடம். அது பொருத்தமின்று.
5. கன்று அமர்ந்து - கன்றுபோல விரும்பி. நாடனையாமுளேமாகும் வரைக்கும் பிரிந்துவாழ்தலை மேற்கொள்ளேம் என்க.

[1]அவருடை நாட்ட வாயினு மவர்போற்
பிரித றேற்றாப் பேரன் பினவே
யுவக்கா ணென்று முள்ளுவ போலச்
செந்தார்ச் சிறுபெடை தழீஇப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியே.

இது பகற்குறிக்கண் தலைவனீட ஆற்றாது தோழிக்குக் கூறியது. (20)

(தலைவிகூற்று இன்னவாறுமாமெனல்)

112. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
வரையா நாளிடை வந்தோன் முட்டினு
முரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணுந்
தானே கூறுங் காலமு முளவே.

இதுவும் அதிகாரத்தால் தலைவிகூற்று இன்னவாறுமாம் என்கின்றது.

இ – ள்: வரைவிடைவைத்த காலத்து வருந்தினும் - வரைவு மாட்சிமைப்படா நிற்கவும் பொருள் காரணத்தான் அதற்கு இடையீடாகத் தலைவன் நீக்கிவைத்துப் பிரிந்தகாலத்துத் தலைவி வருத்த மெய்தினும்:

ஆண்டுத் தோழி வினவாமலும் தானே கூறுமென்றான். ஆற்றுவித்துப் பிரிதல் களவிற்குப் பெரும்பான்மை இன்மையின். '[2]வைத்த' என்றது நீக்கற்பொருட்டு. வருந்துதல் - ஆற்றுவிப்பாரின்மையின் வருத்த மிகுதலாம்.

வரையா நாளிடை வந்தோன் முட்டினும் - வரையா தொழுகுந் தலைவன் ஒருஞான்று தோழியையானும் ஆயத்தையானும் செவிலியையானுங் கதுமென எதிர்ப்பினும்,

உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும் - நொதுமலர் வரைவிற்கு மணமுரசியம்பிய வழியானும் பிறாண்டானுந் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி அதனை நமரறியக் கூறல் வேண்டுமென்றுந் தலைவற்கு நம் வருத்தமறியக் கூறல்வேண்டுமென்றுங் கூறுதற்கண்ணும், தானே கூறுங் கால

1. நாட்ட - நாட்டிலுள்ள. உவக்காண் - உங்கேகாண். கிளி அன்பின என்க.
2. வைத்தல் = நீக்கிவைத்தல்.

*மும் உளவே - இம்மூன்று பகுதியினுந் தோழி வினவாமல் தலைவி தானே கூறுங்காலமும் உள என்றவாறு.*

*உம்மையால் தோழி வினவிய இடத்துக் கூறலே வலியுடைத்து. உதாரணம்:*

[1]அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழும் பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
றகாஅன் போலத் தான்றீது மொழியினுந்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
முத்துநிரை யொத்த முள்ளெயிற் றுவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தை
கடுவனு மறியுமக் கொடியோ னையே. (குறுந். 26)

[2]யாரு மில்லைத் தானே கள்வன்
றானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் காஅல
வொழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே. (குறுந். 25)

*இவற்றுள் துறந்தான் போலவும் மறந்தான்போலவுங் கருதித் 'தான் தீதுமொழியினும்' எனவும் 'யானெவன் செய்கோ' எனவுந் தோழி வினவாக்காலத்து அவன் தவற்றை வரைவிடை வைத்தலின் ஆற்றாமைக்கு அறிவித்தாள்.*

[3]பகலெரி சுடரின் மேனி சாயவும்
பாம்பூர் மதியி னுதலொளி கரப்பவு
மெனக்குநீ யுரையா யாயி னினக்கியா
னுயிர்பகுத் தன்ன மாண்பினே னாகலி
னீகண் டிசினால் யானே யென்றுநனி
யழுங்க லான்றிசி னாயிழை யொலிகுர
லேனல் காவலி னிடையுற் றொருவன்
கண்ணியன் கழலன் றாரன் றண்ணெனச்

---

1. மேக்குஎழும் - மேலெழுந்த. தகாஅன்போல - (இவளுக்குரியனாகும்) தகுதியில்லான்போல. தான் என்றது கட்டுவிச்சியை. தீது - தெய்வத்தாலாயது என்னுந் தீயவார்த்தை. தந்தையாகிய கடுவனும் என இயைக்க. (அக்கடுவன்) தன்கண்கண்டது பொய்க்குவதன்று என்க.

2. யாருமில்லை - (புணர்ந்தஞான்று) சான்றாவர் வேறொருவருமில்லை. கள்வன் தானே - கள்வனாகிய தலைவன்தானொருவனே இருந்தனன். கால - கால்களையுடைய. குருகும்உண்டு - நாரையும் இருந்தது.

3. சுடர் - விளக்கு. சாய்தல் - ஒளிமழுங்கல். உயிர்பகுத்தன்ன - ஓருயிரை இரண்டுடம் பிற் பகுத்துவைத்தாற்போன்ற (நட்பின் மாட்சி). அது யானே கண்டிசின் - அதனை யானே அறிந்துள்ளேன். அழுங்கல் ஆன்றிசின் - வருந்தாது அமைவாயாக.

சிறுபுறங் கவையின னாக வதற்கொண்
டஃதே நினைந்த நெஞ்சமொ
டிஃதா கின்றியா னுற்ற நோயே. (நற்றிணை. 128)

*இது, தோழி வினாவியவழித் தலைவி கூறியது.*

*'வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்' என்பதனைத் 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' (666) என்னுந் தந்திரவுத்தியாகக்கொண்டு அதன்கண் வேறுபட வருவனவெல் லாங் கொள்க.*

[1]உரைத்திசிற் றோழியது புரைத்தோ வன்றே
யருந்துய ருழத்தலு மாற்றா மதன்றலைப்
பெரும்பிறி தாக லதனினு மஞ்சுது
மன்னோ வின்னு நன்மலை நாடன்
பிரியா வன்பி னிருவரு மென்னு
மலரதற் கஞ்சினன் கொல்லோ பலருடன்
றுஞ்சூர் யாமத் தானுமென்
னெஞ்சத் தல்லது வரவறி யானே. (குறுந். 302)

*இது, வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கூறியது.*

[2]அதுகொ றோழி காம நோயே
வதிகுரு குறங்கு மின்னிலைப் புன்னை
யுடைதிரைத் துவலை யரும்புந் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லித ழுண்கண் பாடொல் லாவே (குறுந். 5)

*என்னும் பாட்டும் அது.*

[3]தோழி வாழி மேனாட் சாரற்
கொடியோர் குன்றம் பனிப்ப நெடிதுநின்று
புயறொடங் கின்றே பொய்யா வானக்
கனைவர லழிதுளி தலைஇ
வெம்முலை யாக நனைக்குமெங் கண்ணே.

*இது, வரைவிடைப் பருவங்கண்டு ஆற்றாது தோழிக்குக் கூறியது.*

---

1. புரைத்தோ - உயர்ச்சியுடையதோ? உழத்தல் - வருந்தல். பெரும்பிறிது - இறப்பு. அலர் - பழிமொழி. யாமத்தானும் - யாமத்தின்கண்ணும். நெஞ்சத்து வருதல் - கனாவில் வருதல்.

2. வதி - தங்கியிருக்கும். துவலை அரும்பும் - துளிப்பால் அரும்பும். பாடொல்லா - படுதலைப் பொருந்தா " துயிலா.

3. பனிப்ப - (இடியால்) நடுங்க; குளிர எனினுமாம். புயல் (- மேகம்) தொடங்கிற்று. அதனால் எங்கண் ஆகம் நனைக்கும் என்க. பொய்யா வானக் கனைவரல் அழிதுளி தலைஇப் புயல் தொடங்கின்று - பொய்யாத (தவறாத) மழையின் விரைந்துவருதலையுடைய மிக்க துளியைப் பொருந்தி மேகம் பெய்தலைத் தொடங்கியது.

[1]பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரைக்
கிளிவா யொப்பி னொளிவிடு பன்மலர்
வெருகுப்பல் லுருவின முல்லையொடு கஞலி
வாடை வந்ததன் றலையு நோய்பொரக்
கண்டிசின் வாழி தோழி தெண்டிரைக்
கடலாழ் கலத்திற் றோன்றி
மாலை மறையுமவர் மணிநெடுங் குன்றே. (குறுந். 240)

*இது பருவங்கண்டு ஆற்றாது தோழிக்குக் கூறியது.*

[2]நோயுங் கைம்மிகப் பெரிதே மெய்யுந்
தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே
பொய்யெனச் சிறிதாங் குயிரியர் பையென
முன்றிற் கொளினே நந்துவள் பெரிதென
நிரையே நெஞ்சத்தன்னைக் குய்த்தாண்
டுரையினி வாழி தோழி புரையி
னுண்ணே ரெல்வளை ஞெகிழ்த்தோன் குன்றந்
தண்ண னெடுவரை யாடித் தண்ணென
வியலறை முள்கிய வளியென்
பசலை யாகந் தீண்டிய சிறிதே. (நற்றிணை. 236)

*இது வரைவிடை ஆற்றாமை மிக்குழி அவன்வரையின் முள்கிய காற்று என்மெய்க்கட்படினும் ஆற்றலாமென்றது.*

[3]அம்ம வாழி தோழி யவர்போ
னம்முடை வாழ்க்கை மறந்தன்று கொல்லோ
மனையெறி யுலக்கையிற் றினைகிளி கடியுங்
கான நாடன் பிரிந்தெனத்
தானும் பிரிந்தன்றென் மாமைக் கவினே.

*இது வன்புறை யெதிரழிந்தது.*

[4]சிறுபுன் மாலை சிறுபுன் மாலை
தீப்பனிப் பன்ன தண்வளி யசைஇச்
செக்கர் கொண்ட சிறுபுன் மாலை
வைகலும் வருதியா லெமக்கே
யொன்றுஞ் சொல்லாயவர் குன்றுகெழு நாட்டே.

*இது மாலைப் பொழுதுகண்டு வருந்திக் கூறியது.*

*இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.*

---

1. புதல் - பற்றை. அவரைப் பன்மலர் என்க. பூனையின் பல் வடிவினவாகிய முல்லைப்பூ என்க. குன்று மறையும் என முடிக்க.
2. மெய்யும்வெய்தாகின்று - உடம்பும் வெப்பமுடைத்தாகின்றது. நந்துவள் - நோய்நீங்கப்பெறுவள். நிரையநெஞ்சம் - நரகம் போலு மனம். தீண்டிய - தீண்டும்படி.
3. கவின்அவர்போல் மறந்தன்றுகொல் என இயைக்க. மாமை - மாந்தளிர் போலும் நிறம்.
4. மாலை - மாலையே! தீப்பனிப்பு - தீயின் அசைவு. செக்கர் - செவ்வானம். நாட்டினின்றும் வருதி என இயைக்க. சொல்லாய் - சொல்லுகின்றிலை.

[1]கேட்டிசின் வாழி தோழி யல்கற்
பொய்வ லாளன் மெய்யுறன் மரீஇ
வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட வேற்றெழுந்
தமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியேன் மன்ற வளியேன் யானே. (குறுந். 30)

*இது வரைதற்குப் பிரிய வருந்துகின்றது என்னென்றாட்குக் கனவு நலிவுரைத்தது.*

[2]ஆடமை குயின்ற வவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை
தோடமை முழுவின் றுதைகுர லாகக்
கணக்கலை யிருக்குங் கடுங்குரற் றூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
வின்பல் விமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்
விழவுக்கள விறலியிற் றோன்று நாட
னுருவ வல்விற் பற்றி யம்புதெரிந்து
செருச்செய் யானை சென்னெறி வினாஅய்ப்
புலர்குர லேனற் புழையுடை யொருசிறை
மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி யவரு
ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி
யோரியா னாகுவ தெவன்கொ
னீர்வார் கண்ணொடு ஞெகிழ்தோ ளேனே. (அகம். 82)

*அவனை ஆயத்தார் பலருங் கண்டாரென வந்தோன் முட்டிய வாறும் அவருள் நெகிழ்தோளேன் யானேயெனத் தானே கூறிய வாறுங் காண்க.*

[3]தாழை குருகீனுந் தண்ணந் துறைவனை
மாழைமா னோக்கின் மடமொழி – நூழை
நுழையு மடமகன் யார்கொலென் றன்னை
புழையு மடைத்தாள் கதவு. (கைந்நிலை. 59)

---

1. அல்கல் - இராக்காலம். மரீஇ - பொருந்தி.வாய்த்தகை - மெய்போலுந் தன்மை யையுடைய. அமளி - படுக்கை. அளியேன் - அளிக்கத்தக்கேன்.
2. அமை - மூங்கில். குயின்ற - செய்யப்பட்ட. கோடை - மேல்காற்று. பாடுஇன் - ஓசை இனிதாகிய. தோடு - திரட்சி. இகுத்தல் - தாழ்த்தல். மந்தி நல்அவை - மந்தியாகிய நல்ல திரள்; மருளல் - ஆச்சரியப்படல். இயலி - உலாவி. விறலி - விறல்பட ஆடுபவள். நெகிழ்தோளேன் யானொருத்தியுமேயாதற்குக் காரணமென்? என இயைக்க.
3. பூவாகிய குருகு. குருகுபோலும் பூவெனினுமாம். நூழை - நுழையுஞ் சிறுவாயில் (பொட்டு என்பது வழக்கு). புழை - கொல்லைப்புற வாயில்.

[1]நகைநீ கேளாய் தோழி யல்கல்
வயநா யெறிந்து வன்புறழ் தழீஇ
யிளைய ரெய்துதன் மடக்கிளை யோடு
நான்முலைப் பிணவல் சொலிய கானொழிந்
தரும்புழை முடுக்க ராட்குறித்து நின்ற
தறுகட் பன்றி நோக்கிக் கானவன்
குறுகினன் றொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலன் முன்பிற்றன் படைசெலச் செல்லா
தருவழி விலக்குமெம் பெருவிறல் போன்மென
வெய்யாது பெயருங் குன்ற நாடன்
செறியரி னுடக்கலிற் பரீஇப் புரியவிழ்ந்
தேந்துகுவவு மொய்ம்பிற் பூச்சேர் மாலை
யெற்றிமிற் கயிற்றி னெழில்வந்து துயல்வர
வில்வந்து நின்றோற் கண்டன ளன்னை
வல்லே யென்முக நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே. (அகம். 248)

*இவை வந்தோன் செவிலியை எதிர்த்துழிக் கூறியன.*

[2]கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதைத்
தொடிசெறி யாப்பமை யரிமுன்கை யணைத்தோளா
யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென்ன
நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
விரன்முறை சுற்றி மோக்கலு மோந்தன
னறாஅவவிழ்ந் தனனவென் மெல்விரற் போதுகொண்டு

---

1. நகை - சிரிப்பு; சிரிப்பான நிகழ்ச்சி என்றபடி. எறிந்து - கொன்று. பறழ் - குட்டி. இளையர் எய்து தன்மடக்கிளையோடு - இளையர் போலெய்திய தன்இளங்கிளையோடு. தரீஇக் கிளையோடு பிணவல் சொலிய (நீங்க) என இயைக்க. எறிந்து கானொழிந்து ஆட்குறித்து நின்ற பன்றி என முடிக்க. இளைய ரெய்தன்மடக்கி என்னும் பாடத்திற்கு இளையராகிய வேட்டுவர். நெருங்குதலை விலக்கி என்று பொருள்கொள்க. புழை - வாயில்; முழைஞ்சு. முடுக்கர் - முடக்குவழி. மடை - மடுத்தல். தன்படை செலச் செல்லாது நின்ற எம் பெருவிறல் என இயையும். பன்றியைக் கானவன் எம்பெருவிறல் போலும் இது என்று வியந்து எய்யாது பெயரும் குன்ற நாடு என முடியும். பெருவிறல் என்றது தம் தலைவனைப் போலும். அரில் - சிறுதூறு. துடக்கல் - பற்றி யிழுத்தல். பரீஇ - அற்று. இமில் - முரிப்பு.

2. கொடியவும் - கொடியிலுள்ளனவும். கோட்டவும் - கொம்பிலுள்ளன வுமாக. அழல் - நெருப்பு. நெருப்பாற் பண்ணிய பொற்பூ என்க. பூவாப்பூ - பொற்பூ. கோதை - மாலை. யாப்பு - கட்டு. அரி - அழகு. அடியுறை அருளாமை - நின்னடியில் யானுறைதற்கு அருளாமை. நரந்தம் - நாரத்தம்பூ. மகரவாய் - மகரத்தின் அங்காந்த வாயாகப் பண்ணின தலைக்கோலம். நுங்கிய - விழுங்கிய. சிகழிகை - முடி. ஒரு காழ் - ஒருவடம் (ஒருமாலை). நறாஅ -

செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்
றொய்யி லிளமுலை யினியதை வந்து
தொய்யலந் தடக்கையின் வீழ்பிடி யளிக்கு
மையல் யானையின் மருட்டலு மருட்டினன்;

அதனா,
லல்லல் களைந்தனன் றோழி நந்நக
ரருங்கடி நீவாமை கூறி னன்றென
நின்னொடு சூர்வ றோழி நயம்புரிந்
தின்னது செய்தா ளிவளென
மன்னா வுலகத்து மன்னுவது புரைமே (கலி. 54)

*எனக் கைப்பட்டுக் கலங்கிப் புணர்ச்சிநிகழ்ந்தமை கூறி [1]"அருங் கடி நீவாமைக் கூறின் நன்' றெனத் தமர்க்குக் கூறுமாறு தோழிக்குத் தலைவி கூறினாள். சுரிதகத்து இருகாற்றோழி யென்றாள் நாணுத் தளையாக [2]மறைகரந்தவாறு தீரத் தோழிக்கு முகமனாக.*

[3]எரியகைந் தன்ன செந்தலை யன்றில்
பிரியின் வாழா தென்மோபா தெய்ய
துறைமேய் வலம்புரி துணைசெத் தோடிக்
கருங்கால் வெண்குருகு பயிறரும்
பெருங்கடற் படைப்பையெஞ் சிறுநல் லூரே.

*இஃது, அன்றில் பிரியின் வாழாதெனக் கூறென்றது.*

[4]ஐயோ வெனயாம் பையெனக் கூறிற்
கேட்குவர் கொல்லோ தாமே மாக்கடற்
பரூஉத்திரை தொகுத்த நுண்கண் வெண்மண
லின்னுந் தூரா காணவர்
பொன்னி னெடுந்தேர் போகிய நெறியே.

*இஃது, அவர் இன்னும் போவதற்கு முன்னே நம்வருத்தத்தை வெளிப்படக் கூறென்றது.*

---

நறவம்பூ, செறாஅ - செறாத; அருளையுடைய. என் விரற்போதால் தன்கண் மறையவைத்து என்க. பறாஅக்குருகு - கொல்லன் உலை மூக்கு.

1. அருங்கடி நீவாமை - அரிய மனம் அவனைவிட்டு நீங்காமல்.

2. மறை - களவுப்புணர்ச்சி. காத்தல் - மறைத்தல்.

3. எரி - நெருப்பு. அகைந்தன்ன - கப்புவிட்டாற்போன்ற. என்மோ - என்று சொல். மோ - முன்னிலையசை. துணைசெத்து - பெடை என்று கருதி. பயிறரும் - அழைக்கும். வலம்புரியைத் துணைசெத்து அழைக்கும் என்க.

4. பையென - மெல்லவாக. நெறி இன்னும் தூரா என இயைக்க.

[1]என்னைகொ றோழி யவர்கண்ணு நன்கில்லை
யன்னை முகனு மதுவாகும் – பொன்னலர்
புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோ
நின்னல்ல நில்லென் றுறை. (ஐந்: எழு. 58)

இது தலைவற்குக் கூறென்றது.

இவை தலைவி அறத்தொடு நிற்றற்பகுதி. தோழிக்கே உரைத்தற்குத் [2]தோழிக்கென்றார். (21)

**(தலைவி கூற்றிற் சிறப்பில்லன கூறி அவையும் அக6)மனல்)**

**113.** உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவ னுள்வழிப் படினுந்
தாவி னன்மொழி கிழவி கிளப்பினு
மாவகை பிறவுந் தோன்றுமன் பொருளே.

இது தலைவி கூற்றிற்குச் சிறப்பில்லன கூறி, அவையும் அகப் பொருளாம் என்கின்றது.

**இ – ள்:** உயிரினும் நாண் சிறந்தன்று - எல்லாவற்றினுஞ் சிறந்த உயிரினும் மகளிர்க்கு நாண் சிறந்தது, நாணினுஞ் செயிர் தீர் கற்புக் காட்சி சிறந்தன்று - அந்நாணினுங் குற்றந் தீர்ந்த கற்பினை நன்றென்று மனத்தாற் காணுதல் சிறந்தது, எனத் தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு - என்று முன்னுள்ளோர் கூறிய கூற்றினைப் பொருந்திய நெஞ்சுடனே, காமக் கிழவன் உள்வழிப் படினும் - தலைவன் இருந்தவிடத்தே தலைவி தானே செல்லினும், தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும் - மனவலி யின்றிச் செல்வாமெனக் கூறும் நன்மொழியினைத் தலைவி தானே கூறினும், பொருள் தோன்றும் - அவை அகப்பொருளாய்த் தோன்றும், ஆவகைபிறவும் மன்பொருள் தோன்றும் - அக்கூற்றின் கூறுபாட்டிலே பிறகூற்றுக்களும் மிகவும் அகப்பொருளாய்த் தோன்றும் என்றவாறு.

என்றது தலைவிகூற்று. சிறுபான்மை வேறுபட்டு வருவன வற்றைக் கற்புச் சிறப்ப நாண்துறந்தாலுங் குற்றம் இன்றென்

---

1. அவர்கண்ணும் - அவரிடத்தும். நன்கிலை - நன்மையில்லை. தக்கதோ - (வரைவு நீட்டிப்பது) தக்கதோ? நின்னல்லதில்லை - நின்னையல்லதிலள்.

2. தோழிக்கு என்பது சூத்திரச்சொல்.

*றற்குச் 'செயிர்தீர்' என்றார்; 'நன்மொழி' யென்றார் கற்பிற் றிரியாமை யின்; அவை இன்னோரன்னவழி நெஞ்சொடு கிளத்தல் போல்வன. இவள் கூற்றுத் தோழிக்குந் தலைவற்குமே தோன்றுவதென்க.*

*மன் - ஆக்கம்; இழிந்த பொருளும் உயரத் தோன்றலின்.*

[1]மள்ளர் குழீஇய விழவி னானு
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமொ ராடுகள மகளே யென்கைக்
கோடீ ரிலங்குவளை ஞெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமொ ராடுகள மகனே. (குறுந். 31)

*யாண்டுங் காணேனென அவனை வழிபட்டுக் கூறினமையிற் கற்பின்பாலதாய்த் தோழியுந் தலைவனும் பெண்டன்மையிற் றிரியக் கருதாது நன்கு மதித்தவாறு காண்க.*

[2]அருங்கடி யன்னை காவ னீவிப்
பெருங்கடை யிறந்து மன்றம் போகிப்
பகலே பலருங் காண நாண்விட்
டகல்வயற் படப்பை யவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி பன்னாட்
கருவி வானம் பெய்யா தாயினு
மருவி யார்க்குங் கழைபயின னந்தலை
வான்றோய் மாமலை நாடனைச்
சான்றோ யல்லை யென்றனம் வரற்கே. (நற்றிணை. 365)

[3]கோடீ ரிலங்குவளை ஞெகிழ நாடொறும்
பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
யீங்கிவ ணுறைதலு முய்குவ மாங்கே
யெழுகினி வாழியெ னெஞ்சே முனாஅது
குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசி னவருடை நட்பே. (குறுந். 11)

*இவை தோழிக்கும் நெஞ்சிற்கும் கூறியன.*

---

1. மள்ளர் - வீரர். விழவு - சேரிவிழா. தழீஇய - தழுவி ஆடுகின்ற. தக்கோனை - தகுதியையுடைய தலைவனை. கோடு - சங்கு. ஈர்தல் - அறுத்துச்செய்தல். ஆடுகளமகன் - ஆடுகின்ற களத்துக்குரிய மகன்.
2. நீவி - நீங்கி. கடை - வாயில். மன்றம் - பொதுவிடம். செல் - வருவாயாக. அயம் - நீர். என்றனம்வரற்கு - என்றுசொல்லிமீண்டு வரற்கு. வரற்குச்சென்மோ என இயைக்க.
3. பாடுஇல் - துயிலின்றி. கலிழும் - கலங்கி அழும். முனாஅது - பழையது. வடுகர் - வடுகநாட்டார். முனையது - இடத்திலுள்ளது. கட்டி - சேரனுடைய சேனாபதி. உம்பர் - அப்பாலுள்ள. மொழிபெயர்தேம் - வேற்றுமொழிநாடு.

[1]ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த
குரம்பி வல்சிப் பெருங்கை யேற்றை
தூங்குதோற் றுதிய வள்ளுகிர் கதுவலிற்
பாம்புமத னழியும் பானாட் கங்குலு
மரிய வல்லம னிகுளை பெரிய
கேழ லட்ட பேழ்வா யேற்றை
பலாவம லடுக்கம் புலர வீர்க்குங்
கழைநரல் சிலம்பி னாங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் ணசும்பிற்
படுகடுங் களிற்றின் வருத்தஞ் சொலியப்
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பு மவர்நாட்
டெண்ணரும் பிறங்கன் மானதர் மயங்காது
மின்னுவிடச் சிறிய வொதுங்கி மென்மெலத்
துளிதலைத் தலைஇய மணியே ரைம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயி ரிச்சுர
மறிதலு மறிதிரோ வென்னநர்ப் பெறினே

*என்னும் (8) அகப்பாட்டும் அது.*

*இங்ஙனம் வந்துழியுங் கற்புச் சிறந்ததாம்.*

*இனிப் பிறவாற் கொள்வன வருமாறு:*

[2]பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலு
ணன்மலை நாட னலம்புனைய – மென்முலையாய்
போயின சின்னாள் புனத்து மறையினா
லேயினா ரின்றி யினிது. (ஐந்: ஐம். 11)

[3]கானலஞ் சிறுகுடிக் கடன்மேம் பரதவர்
நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்
தண்பெரும் பரப்பி னொண்பத நோக்கி
யங்க ணரில்வலை யுணக்குந் துறைவனொ

---

1. ஈர்ம்புறம் - குளிர்ந்தபுறம். குரும்பிவல்சி - குரும்பியுணவு. குரும்பி - புற்றாஞ்சோறு. தோல்துதிய - தோலாகிய உறையிலுள்ள. கேழல் - பன்றி. அமலல் - நெருங்கல். புலர - ஈரம்புலர. பூசல் - ஒலி. விடரகம் - பிளப்பிடம். மானதர் - விலங்குகள் செல்லும் வழி. மான் - மானுமாம். ஒதுங்கி - நடந்து. குரல் - மயிர். விலங்கிய சுரம் என்க. அறிதலும் அறிதிரோ - (சென்று) அறிதலும் செய்துள்ளீரோ. புலாவ எனவும் பாடம்.

2. கவினிய - அழகுசெய்த. நலம்புனைய - நலம்செய்ய. மறை - களவு; நலம் புனையக் களவினாற் சின்னாள் இனிது போயின என இயைக்க. ஏயினார் - எதிர்ப்பட்டார். இனி எப்படியாமோ? என்பது எஞ்சிநின்றது. கவினிய என்றதனால் இற்செறிப்பு நிகழும் என்றபடி.

3. கடன்மேம் - கடலிற்செல்லும். அசைஇ - இருந்து. பதம் - காலம். அரில்வலை - முறுகுண்டு கிடந்த வலை. பின்னிக்கிடந்த வலை எனினுமாம். உமணர் - உப்பு

டலரே யன்னை யறியி னிவணுறை
வரிய வாகு நமக்கெனக் கூறிற்
கொண்டுஞ் செல்வர்கொ றோழி யுமணர்
வெண்க லுப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கு நெடுநெறிச் சகட
மணன்மடுத் துரறு மோசைக் கழனிக்
கருங்கால் வெண்குருகு வெரூஉ
மிருங்கழிச் சேர்ப்பிற்றம் மிறைவ னூர்க்கே. (நற்றிணை. 4)

[1]விழுந்தண் மாரிப் பெருந்தண் சாரற்
கூதிர்க் கூதளத் தலரி நாறு
மாதர் வண்டி னயவருந் தீங்குரன்
மணநாறு சிலம்பி னசுண மோர்க்கு
முயர்வரை நாடற் குரைத்த லொன்றோ
துயர்மருங் கறியா வன்னைக் கிந்நோய்
தணியுமா றிதுவென வுரைத்த லொன்றோ
செய்யா யாகலிற் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை யணிபெற நிவந்த
செயலை யந்தளி ரன்னவென்
மதனின் மாமெய்ப் பசலையுங் கண்டே. (நற்றிணை. 244)

*இஃது அறத்தொடு நிற்குமாறு தோழிக்குத் தலைவி கூறியது; இன்னும் அதனானே தோழியைத் தலைவி ஆற்றுவித்தலுங் கொள்க.*

[2]ஞெகிழ்ந்த தோளும் வாடிய வரியுந்
தளிர்வனப் பிழந்தநின் றிறனு நோக்கி
யாஞ்செய்வ தன்றிவ டுயரென வன்பி
னழாஅல் வாழி தோழி வாழைக்
கொழுமட லகலிலைத் தளிதலைக் கலாவும்
பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழும மாக வறியுந ரின்றெனக்
கூறுவை மன்னோ நீயே
தேறுவென் மன்யா னவருடை நட்பே (நற்றிணை. 309)

*என வரும்.*

---

அமைப்போர். கொள்ளைசாற்றி - விலைகூறி. கணநிரைகிளர்க்கும் - கூட்டமாகிய எருத்து நிரையை எழுப்புகின்ற (செலுத்துகின்ற). ஓசையைக் குருகு அஞ்சும் என்க. உறைவின் - உறைதலையுடைய.

1. விழுந்த - பெய்த. மாரி - மழை. கூதளம் - கூதாளி. ஓர்க்கும் - செவிகொடுத்துக் கேட்கும். கண்டும் - கண்டுவைத்தும். கண்டு வைத்துஞ் செய்யாயாதலிற் கொடியை என்க.

2. வரி - இரேகை, தேமலுமாம். நிறன் - மேனிநிறம். செய்தன்று - செய்தது. தளி - தாற்றிலுள்ள நீர். இலையிலே கலாவும் என்க. கலாவல் - கலந்து தங்கல். விழுமம் - துன்பம்.

[1]துறுக லயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவருங் குன்ற நாட
னெஞ்சுகள னாக நியலென் யானென
நற்றோண் மணந்த ஞான்றை மற்றவன்
றாவா வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே. (குறுந். 36)

*இதுவும் அது.* *(22)*

***(தோழிகூற்று நிகழுமிட மிவையெனத் தொகுத்துக் கூறல்)***

**114.** நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்
செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉ
முணர்ச்சி யேழினு முணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொரு ணாட்டத் தானுங்
குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினு முலகுரைத் தொழிப்பினு
மருமையி னகற்சியு மவளறி வுறுத்துப்
பின்வர வென்றலும் பேதைமை யூட்டலு
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலு
மஞ்சியச் சுறுத்தலு முரைத்துழிக் கூட்டமோ
டெஞ்சாது கிளந்த விருநான்கு கிளவியும்
வந்த கிழவனை மாயஞ் செப்பிப்
பொறுத்த காரணங் குறித்த காலையும்
புணர்ந்தபி னவன்வயின் வணங்கற் கண்ணுங்
குறைந்தவட் படரினு மறைந்தவ ளருக்த்
தன்னொடு மவளொடு முதன்மூன் றளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினு
நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினு
மெண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தும்
புணர்ந்துழி யுணர்ந்த வறிமடச் சிறப்பினு

---

1. துறுகல் - உருண்டைக்கல். மாணை - ஒரு கொடி. துஞ்சல் - துயிறல். இவரும் - படரும். நீயலன் - பிரியேன். வஞ்சினம் - உறுதிமொழி. நோயோ - வருத்த மாகுமோ? ஆகாது.

மோம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணுஞ்
செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினு
மென்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
யன்புதலை யெடுத்த வன்புறைக் கண்ணு
மாற்றது தீமை யறிவுறு கலக்கமுங்
காப்பின் கடுமை கையற வரினுங்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதன் மிகுதி யுளப்படப் பிறவு
நாடு மூரு மில்லுங் குடியும்
பிறப்புஞ் சிறப்பு மிறப்ப நோக்கி
யவன்வயிற் றோன்றிய கிளவியொடு தொகைஇ
யனைநிலை வகையான் வரைதல் வேண்டினு
மையச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினு
மவன்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினு மவன்வரைவு மறுப்பினு
முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோற் கடாவல் வேண்டினு
மாங்கதன் றன்மையின் வன்புறை யுளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையுந்
தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன.

இது, முறையானே தோழிகூற்று நிகழும் இடம் பலவுந் தொகுத்துக் கூறுகின்றது.

இ — ள்: நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும் செய்வினை மறைப்பும் செலவும் பயில்வும் - தலைவன் [1]பெட்டவாயில் பெற்று இரவு வலியுற்று முன்னுறு புணர்ச்சியை உரைப்பின் இன்னது நிகழுமென்று அறியாது அஞ்சிக் கரந்து [2]மதியுடம் படுப்பத் தோழி மதியுடம்படுங்கால் அவள் ஆராயும் ஆராய்ச்சி

1. பெட்டவாயில் - தலைவியாற் பேணப்பட்ட வாயில். பெற்று என்றது - அவ்வாயிலைத் தனக்கு வாயிலாகப்பெற்று என்றபடி. ஈண்டு வாயில் என்றது - வாயிலாக அமைந்த தோழியை. "பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுப் பினும்" களா. 10ம் சூத்திர அடி.

2. மதியுடம்படுத்தலாவது:- கவர்ந்து நின்ற தோழியுணர்வை ஒருப்படுத்தல் (துணிவுபெற வைத்தல்).

யெல்லாம் நாட்டமாம், அஃது எட்டாம்; அவற்றுண் முன்னுறு புணர்ச்சியை உணர்த்தற்குக் காரணம் எழுவகைய. அவை நாற்ற முதலிய ஏழும்.

**நாற்றமாவது**, [1]ஓதியும் நுதலும் பேதைப் பருவத்துக்குத் தகநாறாது தலைவன் கூட்டத்தான் மான்மதச்சாந்து முதலியன வும் பல பூக்களும் விரவி நாறுதல்.

[2]**தோற்றமாவது**, நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளை நோக்கின்றி உள்ளொன்று கொள்ள நோக்குங்கண் ணும், தந்நிலை திரிந்து துணைத்து மெல்கிப் பணைத்துக்காட்டுந் தோளும் முலையுமென்ற இன்னோரன்ன.

[3]**ஒழுக்கமாவது**, பண்ணையாயத்தோடு முற்றிலான் மணற் கொழித்துச் சோறமைத்தன் முதலியன முனிந்த குறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கு ஏற்ப ஒழுகுதல்.

[4]**உண்டியாவது**, பண்டு பான்முதலிய கொண்டு ஒறுத்து ஊட்ட உண்டு வருகின்றாள், இப்பொழுது ஆசாரமும் நாணுங் காதலும் மீதூர அதன்மேல் உவப்பு ஆண்டுஇன்றி மிகஒறுத்த உள்ளத்தளாதல்.

**செய்வினை மறைத்தலாவது**, முன்புபோலாது இக்காலத்து நினைவுஞ் செயலுந் தலைவனோடு பட்டனவேயாகலான் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல்; அஃது ஆயத்தோடு கூடாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கி நிற்றலாம்.

**செலவாவது**, பண்டுபோல் வேண்டியவாறு நடவாது சீர்பெற நடந்து ஓரிடத்துச் சேறல்.

**பயில்வாவது**, செவிலி முலையிடத்துத் துயில் வேண்டாது பெயர்த்து வேறோரிடத்துப் பயிறல், இன் - சாரியை.

---

1. ஓதி - கூந்தல்.
2. நீண்டும் பிறழ்ந்தும் நோக்குங்கண் என்க. வெள்ளைநோக்கு - காதலில்லாத நோக்கு. பணைத்தல் - பருத்தல்.
3. பண்ணை - விளையாட்டு. முற்றில் - சுளகு. முனிதல் - வெறுத்தல்.
4. ஒறுத்து - தண்டித்து; வருத்தி. ஆசாரம் - ஒழுக்கம். உவப்பு - விருப்பு. ஒறுத்த உள்ளம் - குறைத்த உள்ளம்; வெறுத்த உள்ளம் எனினுமாம்.

[1]புணர்ச்சி எதிர்ப்பாடு: எதிர்ப்பாட்டுப் புணர்ச்சி என மாறுக; அது கொடுப்பாரும் அடுப்பாருமின்றி இருவருந் தமியராய் எதிர்ப்பட்டுப் புணரும் புணர்ச்சி. இவ்வொழுக்கம் பாங்கற் கூட்டத்திற்கு ஏதுவாகா.

உள்ளுறுத்து வருஉம் உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை - அப்புணர்ச்சி யெதிர்ப்பாடுநிகழ்ந்ததனைத் தோழி தன்னுள்ளத் துள்ளே வினாவி வருகின்ற ஐயவுணர்வினை அவ்வேழனானுந் தெளிந்து புணர்ச்சியுண்டென்பதனை உணர்ந்த பின்றை:

இன்னதும் இன்னதுமாகிய ஏழென்க. அங்ஙனந் துணிந்த பின்னல்லது தலைவிமாட்டுத் தோழி சொன்னிகழ்த்தா ளென் றற்குப் பின்றை என்றார். உதாரணம்:

[2]காம்பிவர் தோளுங் கருமதர் மழைக்கணும்
வீங்கிள முலையும் வேறுபட் டனவே
தாங்கரு நாற்றந் தலைத்தலை சிறந்து
பூங்கொடிக் கிவர்ந்த புகற்சியென வாங்கிற்
பகலுங் கங்குலு மகலா தொழுகுமே
நன்றி யளவைத் தன்றி
தெவன்கொன் மற்றிவட் கெய்திய வாறே.

இதனுள் நாற்றமுந் தோற்றமுஞ் செலவும் வந்தன.

[3]கண்ணுஞ் சேயரி பரந்தன்று நுதலு
நுண்வியர் பொடித்து வண்டார்க் கும்மே
வாங்கமை மென்றோண் மடந்தை
யாங்கா யினள்கொ லென்னுமென் னெஞ்சே. (சிற்றெட்டகம்)

[4]தெய்வத்தி னாயதுகொ றெண்ணீர் புடையுடுத்த
வையத்து மக்களி னாயதுகொ – னைவுற்று
வண்டார்பூங் கோதை வரிவளைக்கை வாணுதலாள்
பண்டைய ளல்லள் படி.

இவையும் அவை.

---

1. எதிர்ப்பாட்டுப் புணர்ச்சி என்றது இயற்கைப் புணர்ச்சியை.

2. காம்பு இவர் - மூங்கிலையொத்த. மதர் - மதர்ப்பு. வீங்குதல் - பூரித்தல். புகற்சியென - பொலிவென. ஆங்கில் - அவ்விடத்தில். ஒழுகும் - செல்லும். புகற்சியெனச் சிறந்து என மாற்றுக. நன்றி - நன்மை.

3. சேயரி - செவ்வரி. யாங்காயினள் - எத்தன்மையளாயினள்.

4. நைவுற்று - மெலிந்து. நைவுற்றுப் பண்டையளல்லள் என இயைக்க. படி - தன்மை.

[1]ஏனல் காவ லிவளு மல்லண்
மான்வழி வருகுவ னிவனு மல்ல
னரந்தங் கண்ணி யிவனோ டிவளிடைக்
கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே
வெம்மு னாணுநர் போலத் தம்முண்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
வுள்ளத் துள்ளே மகிழ்ப
சொல்லு மாடுப கண்ணி னானே.

*இது புணர்ச்சி உணர்ந்தது.*

[2]இவள்வயிற் செலினே யிவற்குடம்பு வறிதே
யிவன்வயிற் செலினே யிவட்கு மற்றே
காக்கை யிருகணி னொருமணி போலக்
குன்றுகெழு நாடற்குங் கொடிச்சிக்கு
மொன்றுபோன் மன்னிய சென்றுவா ழுயிரே.

*இதுவும் அது.*

*மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர் பொருள் நாட்டத்தானும்* - அங்ஙனம் உணர்ந்தபின் தோழி தலைவியுடன் ஆராயுங்காற் றன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்துக் கூறவேண்டுதலில் உண்மைப் பொருளானும் பொய்ப் பொருளானும் விராவிவரினும் அவட்குக் குற்றேவல் செய்யுந் தன்மையில் தப்பாதவாற்றான் வேறுபல்கவர் பொருள்படக் கூறி ஆராயும் ஆராய்ச்சிக் கண்ணும்:

நாணால் இறந்துபடாமற் கூறுதற்கு 'வழிநிலை பிழை யாது' என்றார்.

பிறைதொழுவா மெனவும், கணைகுளித்த புண் கூர் யானை கண்டனெனெனவும், தன் பெருமைக்கு ஏலாத சிறுசொற் கூறிக் குறைவுற்று நிற்கின்றான் ஒருவனுளன் அவனை நீயுங் காண்டல் வேண்டுமெனவும், அவன் என்னைத் தழுவிக்கொண்டு குறை கூற வும் நான் மறுத்து நின்றேனென்றாற் போலவும் மெய்யும் பொய் யும் விராயும் பிறவாறாகவுங் கூறுவன பல்வேறு கவர் பொருளாம்.

---

1. மான்வழி - (வேட்டையாடி மானைத் துரத்தி) மானின்பின். நரந்தங்கண்ணி - நாரத்தம்பூமாலை. கரந்த - மறைந்த. கருதியது - நினைந்தது. மது - கள். கண் ணினால் சொல்லுமாடும் என இயைக்க.

2. வறிது - உயிரில்லாதது போலாகின்றது. இருவர் உயிரும் ஒன்றுபோன் மன்னிய என மாற்றுக.

*உதாரணம்:*

[1]முன்னுந் தொழுத்தோன்றி முள்ளெயிற்றா யத்திசையே
யின்னுந் தொழத்தோன்றிற் றீதேகாண் – மன்னும்
பொருகளிமால் யானைப் புகார்க்கிள்ளி பூண்போற்
பெருகொளியான் மிக்க பிறை.

*இது பண்டு கூறியவாறு கூறலின் மெய்யும், பிறைதொழாமை அறிந்து கூறலிற் பொய்யுமாய் வழிநிலை பிழையாத கவர் பொருளாயிற்று.*

[2]பண்டிப் புனத்துப் பகலிடத் தேனலுட்
கண்டிக் களிற்றை யறிவன்மற் – றொண்டிக்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணா
யுதிர முடைத்திதன் கோடு. (சிற்றெட்டகம்)

*இது நடுங்க நாட்டம்; இஃது இறந்துபாடு பயத்தலிற் கந்தரு வத்திற்கு அமையாது.*

[3]தொய்யில் வனமுலையுந் தோளுங் கவினெய்தித்
தெய்வங் கமழுமா லைம்பாலு – மையுறுவல்
பொன்னங் கொடிமருங்குற் பூங்கயற் கண்ணினாய்க்
கென்னை யிதுவந்த வாறு

*என வழிநிலை பிழையாமற் கவர்பொருளாக நெறிபடு நாட்டம் நிகழ்ந்தவழித் தலைவி சுனையாடினேற்கு இங்ஙனம் ஆயிற்றென் னும். அதுகேட்டுத் தோழி, யானும் ஆடிக் காண்பல் என்னும். உதாரணம்:*

[4]பையுண் மாலைப் பழுமரம் படரிய
நொவ்வுப்பறை வாவ னோன்சிற கேய்க்கு
மடிசெவிக் குழவி தழீஇப் பெயர்தந்
திடுகுகவுண் மடப்பிடி யெவ்வங் கூர
வெந்திற லாளி வெரீஇச் சந்தின்
பொரியரை மிளிரக் குத்தி வான்கே
ழுருவ வெண்கோ டுயக்கொண்டு கழியுங்

1. பிறையாகிய ஈது தோன்றிற்று என இயைக்க. பூண் - அணி.
2. ஏனல் - தினை. திண்டி - ஓரூர். பண்டு உதிரமுடைத்தன்று இன்று உடைத்து என்பது கருத்து. இவ்வாறு டுங்கநாடாள் என்பர் களவிய லுரையாசிரியர்.
3. கவின்-தோற்றம். தெய்வம்-தெய்வமணம். ஐம்பால்-கூந்தல். இது-இவ்வேறுபாடு.
4. பையுள்மாலை - பிரிந்தார்க்குத் துயர்தருமாலை. பழுமரம் - பழுத்தமரம்; ஆலமரமுமாம். படரிய - படரும்படி. நொவ்வுப் பறைவாவல் - மென்மையாகப் பறத்தலையுடைய வௌவால். "நொப்பறைவாவல்" (குறுந்தொகை 172) என்பதும் இப்பொருட்டு. சிறகேய்க்கும் மடிசெவி என்க. சிறகு மடிந்திருத்தல் போல மடிந்திருக்கும் செவி. எவ்வம் - துன்பம். ஆளி - சிங்கம். வெரீஇ - அஞ்சி. சந்து - சந்தனமரம். வான்கேழ்உருவம் - வெண்ணிறமான வடிவம்.

கடுங்கண் யானை காலுற வொற்றலிற்
கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு
பேஎ நாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை
தோளா ரெல்வளை தெளிர்ப்ப நின்போல்
யானு மாடிக் காண்கோ தோழி
வரைவயிறு கிழித்த சுடரிலை நெடுவேற்
றிகழ்பூண் முருகன் றீம்புன லலைவாய்க்
கமழ்பூம் புறவிற் கார்பெற்றுக் கலித்த
வொண்பொறி மஞ்ஞை போல்வதோர்
கண்கவர் காரிகை பெறுதலுண் டெனினே.

[1]நெருந லெல்லை யேனற் றோன்றித்
திருமணி யொளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலுந் தோற்ற முறழ்கொள
விரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றிச்
சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்
குளிர்கொ டட்டை மதனில புடையாச்
சூரர மகளிரி னின்ற நீமற்
றியாரை யோவெம் மணங்கியோ யுண்கெனச்
சிறுபுறங் கவையின னாக வதற்கொண்
டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென்
னுள்ளவ னறித லஞ்சி யுள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ
வெரூஉமான் பிணையி னொரீஇ நின்ற
வென்னுரத் தகைமையிற் பெயர்த்துப்பிறி தென்வயிற்
சொல்ல வல்லிற்று மிலனே யல்லாந்
தினந்தீர் களிற்றிற் பெயர்ந்தோ னின்றுந்
தோலா வாறிலை தோழிநாஞ் சென்மோ
சாயிறைப் பணைத்தோட் கிழமை தனக்கே
மாசின் றாதலு மறியா னேசற்
றென்குறைப் புறனிலை முயலு
மண்க ணாளனை நகுகம் யாமே.

*என்னு மகப்பாட்டும் (32) கொள்க.*

---

உயக்கொண்டு - பிழைப்பக்கொண்டு. ஒற்றல் - மிதித்தல். கோவா ஆரம் - கோக் காத ஆரம் - சந்தனமரம். வீழ்ந்தென - வீழ்ந்ததாக. பேஎ - நுரை. தெளிர்ப்ப - ஒலிப்ப. அலைவாய் - திருச்சீரலைவாய் (செந்தூர்த்தலம்). புறவில் கலித்த மஞ்ஞை என ஒட்டுக. புறவு - முல்லைநிலம் (= காடு). காரிகை - அழகு.

1. புரவலன் - அரசன். பணிமொழி - தாழ்வைப் புலப்படுத்துமொழி. கடீஇயர் - கடியும்படி (துரத்தும்படி). மதனில - வலியில்லாதன - எடுக்கத்தக்கன. தட்டை - மூங்கிலை நறுக்கிப் பிளந்து ஒன்றிற்றட்டுவது. உண்கென - உண்பேனென. அகப்பாட்டில் உண்ணல் - முத்தமிடல் என்ற கருத்தில் வேறிடத்தும் வருகின்றது. கவையினனாக - அகத்திட்டானாக. இகுபெயல் - பெய்தமழை. ஞெகிழ்பு - உள்ஞெகிழ்ந்து. பிணி - பிணிப்பு. சாயிறை - வளைந்தசந்து. கிழமை - உரிமை. ஏசற்று - வருத்தமுற்று. என்குறைக்கு - என்னாற்பெறுங் காரியத்திற்கு. புறனிலை - பின்னிலை. அண்கணாளனை - கண்அண்ணாளனை. கண்ணுக்குமுன் வருவோனை

[1]எழாஅ வாகலி னெழினலந் தொலைய
வழாஅ தீமோ நொதுமலர் தலையே
யேனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த
பகழி யன்ன சேயரி மழைக்க
ணல்ல பெருந்தோ ளோயே கொல்ல
னெறிபொற் பிதிரிற் சிறுபல தாஅய்
வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா மன்னோ
பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே. (நற்றிணை. 13)

*இது தலைவி வேறுபாடுகண்டு ஆராயுந்தோழி தனது ஆராய்ச்சியை மறைத்துக் கூறியது. 'நாட்டத்தானும்' என்னும் உம்மை முற்று, நாட்டமெல்லாந் தழீஇயினமையின். [2]ஆனுருபு இடப் பொருட்டாம். அஃது இடமாக [3]வருகின்ற எட்டனையும் இடத்தியல் பொருளாக உரைக்கவே அவளை நாடுகின்ற காலமும் மேல்வருகின்ற எட்டனையுந் தலைவற்கு உரைக்குங் காலமும் ஒருங்கு நிகழுமென்பதாம். இங்ஙனம் நாடி மதியுடம்படுக்குந் துணையுந் தலைவற்கு இக்குறை முடிப்பல் என்னாது ஒழுகும்.*

*குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறப் பெருமையிற் பெயர்ப்பினும் - இரவு வலியுற்றுக் குறைகூறத் தொடங்கிய தலைவனைத் தோழி தான் இவ்வொழுகலாறு அறிந்தும் அறிந்திலள்போலத் தலைவன் பெருமைகூறி அவன் குறிப்பினை மாற்றினும்:*

*தான் அறிந்ததனை மறைத்துக் கூறுதலன்றி அன்பின்மை ஒருதலையாக உடையளல்லள். உதாரணம்:*

[4]கல்லோங்கு சாரற் கடிபுனங் காத்தோம்பு
நல்கூர்ந்தார் மாட்டு நயந்தொழுகித் – தொல்வந்த
வான்றோய் குடிக்கு வடுச்செய்த றக்கதோ
தேன்றோய்பூங் கண்ணியீர் நீர்.

---

1. எழாஅய் - கிளிகளைத் துரத்தற்கு எழுந்தாயல்லை. சேயரி - செவ்வரி. பொன்பிதிர் - இரும்பினின்றும் பறக்கும் பொறி. பிதிரின் உகும் என இயையும் காட்சி - கூடு. கிளி மயில்கள் அறிதலைத் தாமறியாவாய்க் கவரும் என்க.

2. இடப்பொருள் ஏழாம் வேற்றுமைக்குரியது. எனவே ஆனுருபு கண்ணுருபின் பொருளில் வந்ததென்றபடி. உருபுமயக்கம்.

3. வருகின்ற - இனிக் கூறுகின்ற.

4. நல்கூர்ந்தார் - வறியோர். நயந்து - விரும்பி. வான்றோய்குடி - உயர்ந்தகுடி. பூங்கண்ணியீர் - பூமாலையைத் தரித்தீர்; பூங்கண்ணியை ஏந்திவந்தீர் எனினுமாம்.

[1]மறுவொடு பட்டன மாமலை நாட
சிறுகுடியோர் செய்வன பேணார் – சிறுகுடிக்கு
மூதான் புறத்திட்ட சூடேபோ னில்லாதே
தாதாடு மார்ப பழி.

[2]தகைமாண் சிறப்பிற் சான்றோர்க் கொத்த
வகையமை வனப்பினை யாகலி னுலகமொடு
பாற்படற் பாலை மன்னோ காப்புடுத்
தோங்குய ரடுக்கத்துச் சாந்துவளர் நனந்தலை
நெடுவரை மருங்கிற் குடிமை சான்றோ
ரின்ன ரென்னா தின்பம் வெஃகிப்
பின்னிலை முயற்சியின் வருந்தினு
நும்மோ ரன்னோர்க்குத் தகுவதோ வன்றே.

[3]இவளே, கான னண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்கவுள் புக்கு
மீனெறி பரதவர் மகளே நீயே
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே
நிணச்சுறா வறுத்த வுணக்கல் வேண்டி
யினப்பு ளோப்பு மெமக்குநல னெவனோ
புலவு நாறுதுஞ் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ வன்றே
யெம்ம னோரிற் செம்மலு முடைத்தே. (நற்றிணை. 45)

இதுவும் அது.

உலகு உரைத்து ஒழிப்பினும் - அவ்வொழுக்கம் அறியாள் போற் [4]கரந்த தோழி உலகத்தாரைப்போல் வரைந்துகொள் ளெனக் கூறித் தலைவனை நீக்கினும்: உதாரணம்:

[5]கோடீ ரெல்வளைக் கொழுமணிக் கூந்த
லாய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற்
றெண்கழிச் சேயிறாப் படூஉந்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ. (ஐங்குறு. 196)

---

1. மறுவொடுபட்டன செய்வனபேணார் என இயைக்க. மறு - வடு. மூதான் - முதியஆன். பழி நில்லாதோ என ஒட்டுக.
2. ஒத்த - இயைந்த. பாற்படற்பாலை - முறைப்படற்றன்மையை. அடுக்கம் - மலைப்பக்கம். குடிமை சான்றோர் - குடியிலமைந்தோர். இன்னர் என்னாது - இத்தன்மையர் என்று கருதாது; உயர்பிழிவு கருதாது என்றபடி. பின்னிலை - இரந்து பின்னிற்றல்.
3. சிறுகுடிப் பரதவர் மகள் என இயையும். அறுத்த உணக்கல் வேண்டி - அறுத்த தசைகளை உலரவைத்தல் வேண்டி. நலன் - இன்பம். எம்மனோரில் - எம்மையொத்த பரதவர் குலத்தில். செம்மல் - தலைமையுடையோர்.
4. கரந்த - மறைத்த.
5. கோடு ஈர்வளை - சங்கை அரிந்து செய்த வளை. மடவரலை வேண்டுதி யாயின் வரைந்தனை கொண்மோ என இயைக்க.

*[1]அருமையின் அகற்சியும் - அவை கேட்டுப் பிற்றைஞான்றும் வந்தவன் மாட்டுச் சிறிது நெஞ்சு நெகிழ்ந்த தோழி அங்ஙனங் கூறாது இவள் அரியளெனக் [2]கூறுதலும்:*

*[3]இருவருமுள்வழி யவன்வரவுணர்தலின் இருவருள்ளமும் உணர்ந்து அங்ஙனங் கூறினாள்.*

[4]நெருநலு முன்னா ளெல்லையு மொருசிறைப்
புதுவை யாகலிற் கிளத்த னாணி
நேரிறை வளைத்தோ ணின்றோழி செய்த
வாருயிர் வருத்தங் களையா யோவென
வெற்குறை யுறுதி ராயிற் சொற்குறை
யெம்பதத் தெளிய எல்ல ளெமக்கோர்
கட்காண் கடவு ளல்லளோ பெரும
வாய்கோன் மிளகி னமலையங் கொழுங்கொடி
துஞ்சுபுலி வரிப்புறந் தைவரு
மஞ்சுசூழ் மணிவரை மன்னவன் மகளே. (பொருளியல்)

[5]தழையொடு தண்கண்ணி தன்மையாற் கட்டி
விழையவுங் கூடுமோ வெற்ப – விழையார்ந்
திலங்கருவி பொன்கொழிக்கு மீர்ங்குன்ற நாட
குலங்குருதி வாழ்வார் மகள்.

*அவள் அறிவுறுத்துப் பின்வர என்றலும் - தலைவனை நோக்கி நீ காதலித்தவட்கு நீயே சென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டு வருகவென்றலும்:*

*'அவன் அறிவுறுத்து' என்று பாடமோதுவாரும் உளர். உதாரணம்:*

[6]தன்னையுந் தானாணுஞ் சாயலாட் கீதுரைப்பி
னென்னையு நாணப் படுங்கண்டாய் – மன்னிய
வேயேய்மன் றோளிக்கு வேறா யினியொருநா
ணீயே யுரைத்து விடு.

*இது நீயே யுரையென்றது.*

---

1. அருமை - கிட்டுதற்கருமை.
2. கூறுதலும் - கூறி அகற்றலும் என்றிருத்தல் வேண்டும். இளம்பூரணருரை நோக்கியறிக.
3. இருவருமுள்வழி - தோழியுந்தலைவியுந் தலைப்பெய்தவிடத்து.
4. நெருநல் - நேற்றைத்தினம். எற்குறையுறுதிராயின் - என்னைக் குறையுறுதல் செய்திராயின். எம்பதத்து - எம்மளவில். எளியளல்லள் - அரியளென்றபடி. கட்காண்கடவுள் - வெளிப்பட்ட கடவுள். ஆய்கோள் - நுணுகிய காய்க் குலை. அமலை - நெருக்கம். மகள் கடவுளல்லளோ என இயைக்க.
5. கண்ணி - மாலை. விழைதல் - விரும்பல். விழையவுங்கூடுமோ - விரும்பத் தகுந்தவளோ? அன்று என்றபடி. அரியள் என்றாள் என்பது இதன் கருத்து.
6. தன்னையுந் தானே நாணுபவள், என்னையு நாணப்படுவாள் என்க. சாயல் - மென்மை. வேய் - மூங்கில். ஏய் - ஒத்த.

[1]நாள்வேங்கை பொன்சொரியு நன்மலை நன்னாட
கோள்வேங்கை போற்கொடிய ரென்னைமார் – கோள்வேங்கை
யன்னையா னீயு மருந்தழையா மேலாமைக்
கென்னையோ நாளை யெளிது. (திணை: நூற். 20)

*இது கையுறை மறுத்துப் பின் வருக என்றது.*

*இவை [2]ஒரு கூற்றாக வருவன வுளவேற் காண்க.*

*பேதைமை ஊட்டலும் - அங்ஙனம் பின் வருக என்றுழி முன்வந்தானை அறியாமை ஏற்றிக் கூறலும், தலைவியையும் அங்ஙனம் அறியாமை யேற்றிக் கூறலும்: உதாரணம்:*

[3]நெடுந்தேர் கடாய்த் தமியராய் நின்று
கடுங்களிறு காணிரோ வென்றீர் – கொடுங்குழையார்
யானை யதருள்ளி நிற்பரோ தம்புனத்
தேனற் கிளிகடிகு வார்.

[4]வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்த குருதி யொழுகமற் றிப்புனத்திற்
போந்தில தைய களிறு. (திணை: ஐம். 8)

*இவை தலைவனைப் பேதைமை ஊட்டின.*

[5]நறுந்தண் டகரம் வகுள மிவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி – யெறிந்துழுது
செந்தினை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு. (திணை: நூற். 24)

*இது தலைவியைப் பேதைமை யூட்டியது. 'இளையள் விளைவிலள்' என்பதூஉம் இதன்கண் அடங்கும்.*

---

1. நாள் - வைகறை. நாளில்சொரியும் என்க. கோள்வேங்கை - புலி. என்னை மார் - என்னையன்மார். அவர் நிற்றலின் நாளைவா என்றாள் என்பது கருத்து.
2. ஒருகூற்றாக - இரண்டுஞ் சேர்ந்து ஒருகூற்றாக.
3. அதர் - வழி. கிளிகடிகுவார் அதருள்ளி நிற்பரோ நில்லார் என்பது கருத்து.
4. தோளையுடைய மகளிர் என இயைக்க. மகளிரேம் - மகளிராகிய யாம். யாம் குறவர் மகளிரேம் என வருவிக்க. ஒழுகவந்திலது எனவே ஒழுகாமல் வந்தது என அசதியாடினாள் என்க.
5. தகரம் - மணமுடைய மரச்சாதியுளொன்று. வகுளம் - கடம்பு. புதல் - பற்றை. இனைய - வருந்த. தங்கை வல்லளோ - வல்லளல்லள் என்றபடி. பேதைமைத்தொழில்செய்யும். வேட்டுவர் தங்கை யாதலின் அவளும் பேதைமையுடையள் என்றபடி.

*உதாரணம்:*

[1]புன்றலை மந்திக் கல்லா வன்பறழ்
குன்றுழை நண்ணிய முன்றிற் போகா
தெரியகைந் தன்ன வீததை யிணர
வேங்கையம் படுசினைப் பொருந்திக் கைய
தேம்பெய் தீம்பால் வெளவலிற் கொடிச்சி
யெழுதெழில் சிதைய வழுத கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயின்
மாதயங் கிடங்கி னீரிய மலர்ந்த
பெயலுறு நீலம் போன்றன விரலே
பாஅ யவ்வயி றலைத்தலி னானா
நோடுமழை தவழுங் கோடுயர் பொதியி
னோங்கிருஞ் சிலம்பிற் பூத்த
காந்தளங் கொழுமுகை போன்றன சிவந்தே. **(நற்றிணை. 379)**

*முன்னுறு புணர்ச்சி முறைநிறுத்து உரைத்தலும் - அங்ஙனம் பேதைமை யூட்டியவழி இவள் இக்குறை முடிப்பளென்று இரந்து ஒழுகினேற்கு இவள் புணர்ச்சி அறிந்திலள்போற் கூறினாளென ஆற்றானாயவனை யான் அப்புணர்ச்சி நிகழ்ந்தமை அறிவ லென்று கூறி வருத்தந் தீர்த்தலும்: உதாரணம்:*

[2]நறுந்தண் கூந்தற் குறுந்தொடி மடந்தை
சிறுமுதுக் குறைவி யாயினள் பெரிதென
நின்னெதிர் கிளத்தலு மஞ்சுவ லெனக்கே
நின்னுயி ரன்ன ளாயினுந்
தன்னுறு விழுமங் கரத்த லானே.

*நின்னெதிர் கிளத்தல் அஞ்சுவல், நீ அவட்கு உரைத்தியெனக் கருதியென்றலிற் புணர்ச்சி உணர்ந்தமை கூறினாள்.*

*அஞ்சி அச்சு உறுத்தலும் - அங்ஙனம் ஆற்றுவித்தும் கடிது குறை முடியாமையைக் கருதுந் தோழி குரவரைத் தான் அஞ்சித் தலைவியும் அவரை அஞ்சுவளெனக் கூறலும்:*

*அஞ்சுதல் அச்சென்றாயிற்று. இவ்வச்சம் கூறவே அவன் ஆற்றும். உதாரணம்:*

[3]யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்புமருண் முதல பைந்தாட் செந்தினை

---

1. புன்றலை - மெல்லியதலை. கல்லா - மரம் ஏறுந் தொழிலை முற்றக் கல்லாத. பறழ் - குட்டி. பறழ்போகா பொருந்தி வெளவலின் கொடிச்சி அழுதகண் பெயலுறு நீலம்போன்றன; விரல் காந்தட்கொழுமுகை போன்றது என இயைக்க. இது 'இளையள் விளைவிலள்' என்றது.

2. சிறுமுதுக்குறைவியாயினள் - சிறுபருவத்தே பேரறிவுற்றாள். எனக்குக் கரத்தலான் கிளத்தலும் அஞ்சுவல் என இயைக்க.

3. யா - ஒருமரம். மரஞ்சுட்ட இயவில் - மரங்களைச் சுட்ட வழியில். சுட்ட - அகரந்தொக்கது. முதல - அடியையுடையன. பால்வார்பு - பால்நிரம்பி.

மடப்பிடித் தடக்கை யன்னபால் வார்பு
கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோற் பெருங்குரற்
படுகிளி கடிகஞ் சேறு மடுபோ
ரெஃகுவிளங்கு தடக்கை மலயன் கானத்
தார நாறு மார்பினை
வாரற்க தில்ல வருகுவள் யாயே. (குறுந். 198)

*இஃது யாயை அஞ்சியது.*

[1]யானை யுழலு மணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரே
மேனலு ளைய வருதன்மற் றென்னைகொல்
காணினுங் காய்வ ரெமர். (திணை: ஐம். 6)

*இது தமரை அஞ்சிக் கூறியது.*

*உரைத்துழிக் கூட்டமோடு எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும் - ஆயத்தினீங்கித் தன்னோடு நின்ற தலைவியை அவனோடு கூட்டவேண்டி அவளினீங்கித் தலைவற்கு இன்னுழி எதிர்ப்படுதியென உரைத்தவிடத்துக் கூடுங்கூட்டத்தோடே ஒழியாமற் கிளந்த எண்வகைக் கிளவியும்: உதாரணம்:*

[2]நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பினென்
நின்குறி வந்தனெ னியறேர்க் கொண்க
செல்கஞ் செலவியங் கொண்மோ வல்கலு
மார லருந்து வயிற்ற
நாரை மதிக்கு மென்மக ணுதலே. (குறுந். 114)

*'வந்தனென்' என்றும் 'என்மகள்' என்றும் ஒருமைகூறிச் 'செல்கம்' என்ற உளப்பாட்டுப் பன்மையால் தலைவி வரவுங் கூறி இடத்துய்த்தவாறு முணர்த்தினாள். 'செலவியங்கொண்மோ' என்றது நீயே அவளைப் போகவிடுவாய் என்றதாம். நாட்டந் தன்மனத்து நிகழாநிற்றலும், அவன் மனத்துக் குறையுணர்த்து தல் நிகழாநிற்றலுமென்னும் இரண்டினையும் எஞ்சாமற் றழீஇ நிற்கும் இவ்வெட்டுமென்றற்கு 'எஞ்சாது' என்றார்.*

*வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணங் குறித்த காலையும் - தன்முன்னர் வந்துநின்ற தலைவனைத் தோழி எதிர்ப்*

---

கரிக்குறடு இறைஞ்சிய - கொல்லர் முதலியோர் கரியை எடுக்கின்ற குறடுபோல் வளைந்த. கோள் - குலை. குரல் - கதிர். எஃகு - வேல்.

1. உழலும் - சூழ்ந்துதிரியும். ஏனல் - தினை.

2. கிடப்பினென் - வளர்த்தினேனாய். கிடப்பி என்னும் பாடத்திற்கு வளர்த்தி விட்டு எனப் பொருள்கொள்க. அல்கலும் - இராவருதலும். என்மகள் என்றது பாவையை.

பட்டு நின்றேயும் வாராதான்போல மாயமேற்றி அதனைப் பொறுத்த காரணங் குறிப்பினாற் கொள்ளக் கூறுங்காலைக் கண்ணும்:

காரணமாவது நீ [1]அரியையாதலின் இவள் ஆற்றாளாமென்று எதிர்கொள்கின்றேமென்றல்; கூட்டம் நிகழ்ந்தபின் தோழி இவ்வாறு கூறுதற்கு உரியளென்று அதன்பின் வைத்தார். இஃது அவன் வரவை விரும்பியது; வரைவுகடாயதன்று. உதாரணம்:

[2]நெடுங்கயிறு வலந்த குறுங்க ணவ்வலைக்
கடல்பா டழிய வினமீன் முகந்து
துணைபுண ருவகையர் பரத மாக்க
ளிளையரு முதியருங் கிளையுடன் றுவன்றி
யுப்பொ யுமண ரருந்துறை போக்கு
மொழுகை நோன்பக டொப்பக் குழீஇ
யயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்
பெருங்களந் தொகுத்த வுழவர் போல
விரந்தோர் வறுங்கல மல்க வீசிப்
பாடுபல வமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ
பெருமை யென்பது கெடுமோ வொருநாண்
மண்ணா முத்த மரும்பிய புன்னைத்
தண்ணறுங் கானல் வந்துநும்
வண்ண மெவனோ வென்றனிர் செலினே. (அகம். 30)

இதனால் தம்மால் இடையூறெய்தி வருந்துகின்றானை ஒருநாள் வருந்திலிரென மாயஞ்செப்பியவாறும், நீர் வராமையின் [3]வண்ணம் வேறுபடுமென ஏற்றுக்கோடுமெனக் காரணங் கூறியவாறுங் காண்க. தன்மேல் தவறின்றாகக் கூறுங்காலத்து இது கூறுவரென்றற்குக் 'குறித்தகாலை' என்றார்.

புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற்கண்ணும் - அக்கூட்டத்தின்பின் முற்காலத்துப் பணிந்து பின்னின்றோனைத் தோழி தானே பணிந்தொழுகுமிடத்தும்:

---

1. அரியை என்றது அரிதாய் வருதலுடைய என்றபடி.
2. வலத்தல் - கட்டுதல். பாடு - பெருமை. ஒழுகை - சகடம். பகடு - எருமைக்கடா. பாடு - கூறு. கொள்ளைசாற்றி - கூடுதல் சாற்றி என்பது பழையவுரை; விலைகூறி எனினுமாம். மண்ணா - கழுவாத. முத்தம் - முத்தம்போல. வண்ணம் - அழகு. செலின் - கெடுமோ என இயைக்க.
3. வண்ணம் - நிறம், அழகு.

*உதாரணம்:*

[1]இவளே, நின்சொற் கொண்ட வென்சொற் றேறிப்
பசுநனை ஞாழற் பல்கிளை யொருசிறைப்
புதுநல னிழந்து புலம்புமா ருடைய
ளுதுக்காண் டெய்ய வுள்ளல் வேண்டு
நிலவு மிருளும் போலப் புலவுத்திரைக்
கடலுங் கானலுந் தோன்று
மடறாழ் பெண்ணையெஞ் சிறுநல் லூரே. (குறுந். 81)

*'வாங்கு கோனெல்' என்னுங் குறிஞ்சிக்கலி (50) யுள்,*

[2]அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த
வுரவுவின் மேலசைத்த கையை யொராங்கு
நிரைவளை முன்கையென் றோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குர லேனல்
கடிதன் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டும் எ – ம்,

[3]கடுமா கடவுறூஉங் கோல்போ லெனைத்துங்
கொடுமையிலை யாவ தறிந்து மடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
யுழையிற் பிரியிற் பிரியு
மிழையணி யல்குலென் றோழியது கவினே

*எனவும் வரும். இத்துணையும் ஓர் கூட்டங் கூறினார்.*

*குறைந்து அவட் படரினும் - தலைவன் இரந்து பின்னின்றமை கண்டு தோழி மனம் ஞெகிழ்ந்து தான் [4]குறைந்து தலைவியிடத்தே சென்று குறைகூறினும்: உதாரணம்:*

[5]வளையணி முன்கை வாலெயிற் றின்னகை
யிளைய ராடுந் தளையவிழ் கானல்
விருந்தென வினவி நின்ற
நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே. (ஐங்குறு. 198)

---

1. புதுநலன் - தனது புதிய பெண்மை நலன். புலம்பு - தனிமை. மார் - அசை. கானல் - மணல்பரந்த கடற்கரை உவமை எதிர்நிரனிறை. உதுகாண் - அதோபார். உங்கே காண் எனினுமாம். பெண்ணை - பனை.
2. அரவு - பாம்பு. பொறி - அடையாளம் - (தோற்றம்) எனலாம். அணங்கு - வருத்தம் (என்றது, பகைவரை வருத்துதலை). இவை வில்லுக்கடை; நோக்கி மறப்பித்தாய் என இயையும்.
3. கோல் - தாற்றுக்கோல். அடுப்பல் - சேர்த்துவேன். வழை - சுரபுன்னை. குழவி - மறி (குட்டி). உழையிற்பிரியில் - அவளிடத்தினின்றும் நீ பிரியில். கவின்பிரியும் என இயைக்க.
4. குறைந்து - குறையுற்று.
5. இளையர் - இளைய மகளிர். ஆடும் - விளையாடும்.

*மறைந்தவள் அருக - நாண்மிகுதியால் தனது வேட்கை மறைந்த தலைவி அக்கூற்றிற்கு உடம்படாது நிற்றலால், தன்னொடும் அவளொடும் முதன்மூன்று அளைஇ - தலைவனோடுந் தலைவியோடும் நிகழ்ந்த இயற்கைப்புணர்ச்சி முதலிய* [1]*மூன்றனையுந் தான் அறிந்தமை குறிப்பான் உணர்த்தி, 'பின்னிலை பல்வேறு நிகழும் மருங்கினும் - இரந்து பின்னிற்றல் பலவாய் வேறுபட்டு நடக்குமிடத்தும்:*

*அவை பெருந்தன்மையானொருவன் யானை முதலியன வினாயுந் தழையுங் கண்ணியுங் கொண்டும் இப்புனத்து வாரா நின்றானெனவும், அவன் என்மாட்டுப் பெரிதுங் குறையுடையனெனவும், அவன் குறை முடியாமையின் வருந்தா நின்றானெனவும், அத்தழை நீ ஏற்றல் வேண்டுமெனவும், அக்குறை முடித்தற்கு இஃதிடமெனவும், யான் கூறியது கொள்ளாயாயின் நினக்குச் செறிந்தாருடன் உசாவிக் குறை முடிப்பாயெனவும், மறுப்பின் மடலேறுவனெனவும் வரைபாய்வ னெனவும், பிறவாற்றானுங் கூறிக் குறைநயப்பித்தலாம். உதாரணம் :*

[2]புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய் சாரற்
றினைகாத் திருந்தேம்யா மாக – வினைவாய்த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன் றுண்டு. (ஐந்: ஐம். 14)

[3]கைதையந் தண்கானற் காலையு மாலையு
மெய்த வரினு மிதுவெங் குறையென்னான்
செய்தழையுங் கண்ணியுஞ் சேர்ந்துழி வைத்திறந்தா
னுய்யலன் கொல்லோ வுணரலனே யென்றியால்.

[4]ஒருநாள் வாரல னிருநாள் வாரலன்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியென்
னன்னர் நெஞ்ச நெகிழ்த்த பின்றை
வரைமுதிர் தேனிற் போகி யோனே
யாசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
வேறுபுல நன்னாட்டுப் பெய்த
வேறுடை மழையிற் கவிழுமென் னெஞ்சே. (குறுந். 176)

---

1. மூன்று - இயற்கைப்புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற்கூட்டமும்.
2. தழையல்குல் - தழையணிந்த அல்குல். தழை - பூவாலும் தளிராலும் கட்டிய உடை. வினை - வேட்டைத்தொழில். மா - கெடுத்த ஒரு விலங்கு.
3. எய்தவரினும் - சமீபமாக வரினும். இறந்தான் -கடந்தான் = போயினான். உய்யலன்கொல் - உயிர்பிழையான்கொல்.
4. போகியோனாகிய எந்தை எனக் கூட்டுக. ஆசு - பற்றுக்கோடு. எந்தை - எமது தலைவன். ஏறு - இடி. வேற்றுப்புலங்களை யுடைய நாட்டில் பெய்த மழைநீர் கலங்கிவருதல்போல என் நெஞ்சு கலங்கும் என்க.

[1]புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி
யிணர்ததையும் பூங்கான லென்னையு நோக்கி
யுணர்வொழியப் போன வொலிதிரைநீர்ச் சேர்ப்பன்
வணர்சுரி யைம்பாலாய் வண்ண முணரேனால். (சிலம்பு. கானல். 31)

[2]ஓரைய யாய மறிய வூர
னல்கினன் றந்த நறும்பூந் தண்டழை
யாறுபடி னெவனோ தோழி வீறுசிறந்து
நெடுமொழி விளக்குந் தொல்குடி
வடுநாம் படுத்த லஞ்சுது மெனவே

*இது கையுறை ஏற்பத் தலைவிக்குக் கூறியது.*

[3]சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
வலங்குகுலைக் காந்த டீண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளுங் குன்ற நாட
னுடுக்குந் தழையீத் தனனே யாமஃ
துடுப்பின் யாயஞ் சுதுமே கொடுப்பிற்
கேளிடைக் கேடஞ் சுதுமே யாயிடை
வாடுப கொல்லோ தாமே யவன்மலைப்
போருடை வருடையும் பாயாச்
சூருடை யடுக்கத்த செயற்கருந் தழையே. (நற்றிணை. 359)

*இதுவும் அது.*

[4]இலைசூழ்செங் காந்த ளெரிவாய் முகையவிழ்த்த வீர்ந்தண் வாடை
கொலைவே னெடுங்கட் கொடிச்சி கதுப்புளருங் குன்ற நாட
னுலைவுடை வெந்நோ யுழக்குமா லந்தோ
முலையிடை நேர்வார்க்கு நேரு மிடமிது மொய்குழலே.

[5]அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன
செவ்வரி யிதழ சேணாறு பிடவி
னறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரை கல்லி னன்னிறம் பெறூஉம்

---

1. துணை - பெண். அலவன் - ஞெண்டு. அலவனை நோக்கி என்னையு நோக்கி என்க. உணர்வொழிய - அறிவுகெட. உணர்வை இங்கே ஒழித்து எனினுமாம். சேர்ப்பன்வண்ணம் என இயைக்க. வண்ணம் - இயல்பு.
2. ஓரை - விளையாட்டு. ஆறுபடின் - (ஏற்காது) தாமதித்தல் படின். எவனோ? - எத்தன்மையதாகுமோ? வீறு - பெருமை நெடுமொழி - புகழ். அஞ்சுதும் என்று ஆறுபடின் எவனோ? என இயைக்க ஆறுபடின் - மாறுபடின் என்றிருக்கலாம் போலும்.
3. சேதா - செவ்விய பசு; கபிலையுமாம். தாதுஉக - உடம்பில் தாது உகுதலால். (கன்று அதனைத் தாயென்றறியமாட்டாது மயங்கும் என்க). கேள் என்றது தலைவனை.
4. வாடை உளரும் குன்றநாடன் என இயைக்க. உழக்கும் ஆதலால் நேரு மிடமிது என்க.
5. அவ்வளை - அழகிய சங்கு. அரக்கு - செவ்வரக்கு. ஈர்த்தல் - தீற்றுதல்; இழுத்தல். தும்பி - வண்டு. பசுங்கேழ்ப்பொன்னுரைகல் - பசிய நிறத்தையுடைய

வளமலி நாட னெருந னம்மொடு
கிளைமலி சிறுதினைக் கிளிகடிந் தசைஇச்
சொல்லிடம் பெறாஅன் பெயர்ந்தனன் பெயர்ந்த
தல்ல லன்றது காதலந் தோழி
தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா
வண்டோ ரன்னவவன் தண்டாக் காட்சி
கண்டுங் கழறொடி வலித்தவென்
பண்பில் செய்தி நினைப்பாய் நின்றே. (நற்றிணை. 25)

[1]மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோ னன்ன வயங்குவெள் ளருவி
யம்மலைக் கிழவோ னந்நயந் தென்றும்
வருந்தின னென்பதோர் வாய்ச்சொற் றேறாய்
நீயுங் கண்டு நுமரொடு மெண்ணி
யறிவறிந் தளவல் வேண்டு மறுத்தரற்
கரிய வாழி தோழி பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தாம் மொட்டியோர் திறத்தே. (நற்றிணை. 32)

[2]மறவல் வாழி தோழி துறைவர்
கடல்புரை பெருங்கிளை நாப்பண்
மடல்புனைந் தேறிநிற் பாடும் பொழுதே.

இன்னும் வேறுபட வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக் கொள்க.

நன்னயம் பெற்றுழி நயம்புரியிடத்தினும் - அங்ஙனந் தோழி கூறிய குறையினை அவள் அருளப்பெற்றவழி அதனைத் தலைவற்குக் கூறுதற்கு விரும்புமிடத்தும்:

அவை, தலைவனாற்றாமை கண்டு தோழி கையுறையெதிர் தலும், இரவுக்குறியும் பகற்குறியும் நேர்தலும், குறியிடங்காட்டலும், பிறவுமாம்.

---

பொன்னையுரைத்த கட்டளைக்கல்; தும்பிநிறம் பெறும் என இயைக்க. அசைஇ - தங்கி. சொல் இடம் பெறான் - தன்குறைகூறற்கு. இடம்பெறான். தண்டாக்காட்சி - நீங்காத தோற்றப்பொலிவு. கழல்தொடிவலித்த - கழன்றதொடியை மீண்டுசெறித்த. நினைப்பாகின்றே எனவும் பாடம்.

1. மாயோன் - கண்ணன். வாலியோன் - பலதேவன். நந்நயந்து - நம்மை விரும்பி. நாடி - ஆராய்ந்து. நட்டுநாடார் - நண்புகொண்டு பின் நாடார். ஒட்டியோர் - நண்புகொண்டோர்.

2. பாடும்பொழுது மறவல் என இயைக்க. மறவல் - அப்பொழுது மறவாதே; என்றது நீ மறக்கின் மடலேறுவர் என்றபடி.

*உதாரணம்:*

[1]பொன்மெலியு மேனியாள் பூஞ்சுணங்கின் மென்முலைக
ளென்மெலிய வீங்கினவே பாவமென் – றென்மெலிவிற்
கண்கண்ணி வாடாமை யானல்ல வென்றுரைத்தா
லுண்கண்ணி வாடா ளுடன்று. (திணை: நூற். 21)

*இதனுட் கண்கண்ணி - குறுங்கண்ணி.*

[2]நிலாவி னிலங்கு மணன்மலி மறுகிற்
புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை
யூரென வுணராச் சிறுமையொடு நீருடுத்
தின்னா வுறையுட் டாயினு மின்ப
மொருநா ளுறைந்திசி னோர்க்கும் வழிநாட்
டம்பதி மறக்கும் பண்பி னெம்பதி
வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப
பொம்மற் படுதிரை கம்மென வுடைதரு
மரனோங் கொருசிறைப் பலபா ராட்டி
யெல்லை யெம்மொடு கழிப்பி யெல்லுற
நற்றேர் பூட்டலு முரியி ரற்றன்று
சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமு
மெம்வரை யளவையிற் பெட்குவ
நும்மொப் பதுவோ மேவரி தெமக்கே. (அகம். 200)

[3]கடும்புலால் புன்னை கடியுந் துறைவ
படும்புலாற் புட்கடிவான் புக்க – தடம்புலாந்
தாழைமா ஞாழற் றதைந்துயர்ந்த தாழ்பொழி
லேழைமா னோக்கி யிடம் (திணை: நூற். 44)

*என வரும். இன்னும் 'நயம்புரி யிடத்தும்' என்றதனால் அவன் வரவினைத் தலைவிக்குக் கூறுதலுங் கொள்க.*

[4]இவர்பரி நெடுந்தேர் மணியு மிசைக்கும்
பெயர்பட வியங்கிய விளையரு மொலிப்பர்
கடலாடு வியலணிப் பொலிந்த நறுந்தழை
திதலை யல்கு னலம்பா ராட்டிய
வருமை தோழி வார்மணற் சேர்ப்ப

1. சுணங்கு - தேமல். மெலிவின் என்? - மெலிதற்குக் காரணமென்? கண்கண்ணி - குறுங்கண்ணி; அண்கண்ணி என்றுமிருக்கலாம். உண்கண்ணி - மையுண்ட கண்ணையுடையாள். உடன்றுவாடாள் - மாறுபட்டுத் துன்புறாள் (ஏற்கும்).

2. குரம்பை - சிறுகுடில். உணரா - கருதாத. உறையுள் - உறையுமிடம். வழிநாள் - பின்னாள் (அடுத்தநாள்). கம்மென - விரைய. எல்லை - பகல். கழிப்பி - கழித்து. எல் - இரவு.

3. புலால்படும் புள் என மாற்றுக. புக்கமானோக்கியிடம் தாழ்பொழில் என முடிக்க. தடம்புலாம் தாழை - பெரிய புல்லாகிய தாழை.

4. இவர் பரி நெடுந்தேர் - ஏறும் குதிரைபூண்ட நெடிய தேர். கவர் பரி எனவும் பாடம். கவர்தல் - விரும்பல். பெயர்பட - பெயர்தல் பட. இளையர் -

னிறைபட வோங்கிய முழவுமுதற் புன்னை
மரவரை மறைகம் வம்மதி பானாட்
பூவிரி கானற் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணா
வல்ல லரும்படர் காண்கநாஞ் சிறிதே. (நற். 307)

*இது, தோழி தலைவிக்குப் பகற்குறிக்கண் தலைவன் வருகின்றமை காட்டி அவன் வருத்தங் காண யாம் மறைந்து நிற்பாம் வம்மோவெனக் கூறியது.*

*எண்ணரும் பல்நகை கண்ணிய வகையினும் - தலைவன் இளிவந்தொழுகுதற்குப் பொறாத தோழி அவன் இளிவரவு உணர்த்துங் கருத்தினளாய்ச் செயற்கையாக ஆராய்ச்சி அரிய வாய்வரு ஒன்றல்லாப் பலநகை குறித்த பகுதிக்கண்ணும்:*

*அவை 'என்னை மறைத்த லெவனாகியர்' (இறை – சூ. 12) என்றலும், அறியாள் போறலும்; [1]குறியாள் கூறலும், படைத்து மொழி கிளவியும், குறிப்பு வேறு கொளலும் பிறவுமாம். உதாரணம்:*

[2]நிறைத்திங்கள் சேர்ந்தோடு நீண்மலை நாட
மறைக்கப் படாதேனை மன்னு – மறைத்துக்கொண்
டோடினா யாதலா லொண்டொடியா டன்பக்கங்
கூடக் கிடந்ததொன் றில்.

[3]மன்னேர்மன் சாய லவருண் மருடீர
வின்னார்க ணென்ப தறியேனான் – மின்னூருங்
கார்கெழு தோன்றற் கணமலை நன்னாட
யார்கண்ண தாகுங் குறை.

---

ஏவலிளையர். பாராட்டிய - பாராட்டும்படி. முழவுமுதல் - முழவு போன்ற வடி. மர அரை - அரைமரம் = அடி மரம். வம்மதி - வருவாயாக. மதி - முன்னிலையசை. நம் - நம்மை. அல்லல் அரும்படர் - அல்லலாகிய அரிய துன்பம். சிறிது காண்கம் - சிறிது காண்பேம்.

1. குறியாள் கூறல்- தலைவன் கூறுவனவற்றைக் கருதாதவள் போலப் பிறிது கூறல். இது முதலியவற்றை இளையனார் களவியல் 12ஞ் சூத்திர உரை நோக்கியறிக. குறியாமை - கருதாமை.

2. நிறைத்திங்கள் - பூரணசந்திரன். மறைக்கப்பாடாதேனுக்கு மறைத்துக் கொண்டு என இயைக்க; ஆதலால் இல்லையென்க. இது 'என்னை மறைத்த லெவனாகியர் என்றது.

3. மன்ஏர் - நிலைபெற்ற அழகு. சாயலவருள் - மென்மையையுடைய ஆயத்தாருள். நின்குறை இன்னார் கண் என்பது அறியேன்; ஆகையால் நின்குறை யார் கண்ணது என இயைக்க இது அறியாள் போல்.

[1]தன்னெவ்வங் கூறினு நீசெய்த வருளின்மை
யென்னையு மறைத்தாளென் றோழி யதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூற றானாணி. (கலி. 44)

*இது பழி கூறுவேனென்று தலைவி குறியாததொன்றைத் தோழி கூறியது.*

[2]விருந்தின ராதலின் வினவுதி ரதனெதிர்
திருந்துமொழி மாற்றந் தருதலு மியல்பெனக்
கூறுவ தம்மயா னூறுபல வருமென
வஞ்சுவன் வாழி யரைய வெஞ்சா
தெண்ணில ரெண்ணியது முடிப்பர்
கண்ணிலர் கொடியரிவ டன்னை மாரே.

*இது நிகழாது நிகழ்வதாகப் படைத்து மொழிந்தது.*

[3]நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்
பொறிமாண் வரியலவ னாட்டலு மாட்டாள்
சிறுநுதல் வேரரும்பச் சிந்தியா நின்றாட்
கெறிநீர்த்தண் சேர்ப்பயா னென்சொல்லிச் செல்கோ.

*இது குறிப்பு வேறு கொண்டா ளென்றது.*

*புணர்ச்சி வேண்டினும் - தலைவன் பகற்குறியையும் இரவுக் குறியையும் விரும்பிக் கூறுமிடத்தும்: தோழி மேனகிளவி. அவை பலவகைய. உதாரணம்:*

[4]நன்னலஞ் சிதைய நாடொறும் புலம்பப்
பொன்னிணர் வேங்கை துறுகற் றாஅ
யிரும்பிடி வெரூஉ நாடற்கோர்
பெருங்க ணோட்டஞ் செய்தன்றோ விலமே.

*இது, தோழி தலைவியைப் பகற்குறி நயப்பித்தது.*

---

1. எவ்வம் - துன்பம் என்தோழி என்னையு மறைத்தாள் (அங்ஙன மறைத்தது) யான் பிறர்முன் நின்னைப் பழிகூறல் நாணி என இயைக்க.

2. விருந்தினர் ஆதலின் - புதியீராதலின். கூறுவது - கூறுவதற்கு. ஊறு - இடையூறு. அறைய எஞ்சாது - சொல்லமுடியாது. எண்ணிலர் - அளவிலர். இவள் தன்னைமார் எண்ணிலர்; கொடியர்; எண்ணியது முடிப்பர்; ஆதலால் அஞ்சுவல் என இயைத்து முடிக்க.

3. அலவன் - நண்டு. ஆட்டலு மாட்டாள் - ஆட்டலுஞ் செய்யாள். சிந்தியா நின்றாட்கு - யாதோ ஒன்றைச் சிந்திக்கின்றாளுக்கு.

4. வேங்கைதாய் - வேங்கைப்பூப் பரந்து. பரத்தலால் புலி என்று பிடி வெரூஉம் என்க. கண்ணோட்டம் - இரக்கம்; தண்ணளி செய்தன்று - செய்தது. வேங்கை தாய் என்றதனால் பகற்குறி யாயிற்று.

[1]மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங்
கானலுஞ்சேர் வெண்மணலுங் காணாயோ – காண
லிடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த
புடையெலாம் புன்னை புகன்று. (திணை: நூற். 58)

[2]ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்து மன்றே சிறுகான் யாறே
யிரைதேர் வெண்குரு கல்ல தியாவதுந்
துன்னல் போகின்றாற் பொழிலே யாமெங்
கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறு
மாண்டும் வருகுவள் பெரும்பே தையே. (குறுந். 113)

*இவை பகற்குறி நேர்ந்து இடங்காட்டியன.*

[3]செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேய் குன்றங்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே. (குறுந். 1)

*இது, தோழி தலைவியை இடத்துய்த்து நீங்கியது.*

[4]ஆர்கலி வெற்பன் மார்புபுணை யாகக்
கோடுயர் நெடுவரைக் கவாஅற் பகலே
பாடின் னருவி யாடுத லினிதே
நிரையிதழ் பொருந்தாக் கண்ணோ டிரவிற்
பஞ்சி வெண்டிரிச் செஞ்சுடர் நல்லிற்
பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
யன்னை முயங்கத் துயிலின் னாதே. (குறுந். 354)

*இஃது, இரவுக்குறி நயந்த தலைவன் சிறைப்புறமாகப் பகற் குறி நேர்வாள்போல் இரவுக் காப்புமிகுதி கூறியது.*

---

1. மாயவன் - கண்ணன். தம்முன் - பலதேவன். இவன்நிறம் - வெண்ணிறம். கடலும் கானலும் கண்ணன்போலவும், மணல் பல தேவன்போலவும் விளங்கியவென்க. இது இடங் குறித்தது.
2. சேய்த்துமன்று - தூரத்ததுமன்று. துன்னல்போகின்று - அடைதல் நீங்கியது (அடைதல் இல்லை). கூழை - கூந்தல். கொணர்கம் சேறும் - கொண்டு வருவேமாய்ச் செல்வேம்.
3. செங்களம்பட - போர்க்களம் இரத்தத்தால் சிவந்த களமாகும்படி. தேய்த்த - அழித்த. அம்பினையும் யானையையும் கொடியையும் உடைய. சேய் - முருக வேள். குருதிப்பூ- குருதிபோலும் சிவந்தபூ கழல்தொடி - உழலஇட்ட வீரவளை. அங்கே தலைவனை எதிர்ப்படுவாய் என்பது குறிப்பெச்சம். அது தான் கூறாளாதலின் குறிப்பெச்சம் என்பர் பேராசிரியர். (தொல். செய். 206 பேராசிரியம்) இது தலைமகளை இடத்துய்த்து நீங்கியது.
4. கவாஅன் - மலைப்பக்கம். சுடர் - விளக்கு. சிறுபுறம் - பிடர்.

*'பாடின்னருவி ஆடல்' என்றாள் [1]அதன்கண் உதவினா னென்பது பற்றி அல்லது களவிற்கு உடன் ஆடுதலின்று.*

[2]செறுவார்க் குவகை யாகத் தெறுவர
வீங்கும் வருபவோ தேம்பாய் துறைவ
சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்
கடுமா நெடுந்தேர் நேமி போகிய
விருங்கழி நெய்தல் போல
வருந்தின ளளியணீ பிரிருந்திசி னோளே. (குறுந். 336)

*இது, தலைவன் இரவுக்குறி நயந்தவனைத் தோழி மறுத்தது.*

[3]நாகுபிடி நயந்த முளைக்கோட் டிளங்களிறு
குன்ற நண்ணிக் குறவ ரார்ப்ப
மன்றம் போழு நாடன் றோழி
சுனைப்பூங் குவளைத் தொடலை தந்துந்
தினைப்புன மருங்கிற் படுகிளி யோப்பியுங்
காலை வந்து மாலைப் பொழுதி
னல்லக நயந்துதா னுயங்கிச்
சொல்லவு மாகா தஃகி யோனே. (குறுந். 346)

*இது, தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பித்தது.*

[4]தண்ணந் துறைவன் கடும்பரி மான்றேர்
காலை வந்து மாலை பெயரினும்
பெரிது புலம்பின்றே கானல்
சிறிது புலம்பினமாற் றோழி நாமே.

*இது, தலைவியது ஆற்றாமை கண்டு நம் வருத்தந் தீர்தற்கு இரவுக்குறியும் வேண்டுமென்றது.*

[5]ஏன் மிடந்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக்
கானவர் மக்கள் கனலெனக் கைகாய்த்தும்
வானுயர் வெற்பன் வருவான்கொ றோழிநம்
மேனி பசப்புக் கெட. (திணை: ஐம். 4)

*இது தலைவன் வருவனென்றது.*

---

1. அதன்கண் உதவல் என்றது நீரோடுபோயவளை மீட்டு உதவியதை. தலைவியுந் தலைவனும் உடன் ஆடல் கற்பின் கண்ணலல்லது களவின்கண் இல்லை; ஆதலின் ஆடல் என்றது உதவியதை என்றபடி.
2. செறுவார் - பகைவர். தெறுவர - (யான்) வருந்தவும். ஈங்கு - இவ்விடத்து. வருபவோ - அறிவுடையோர் வருவாரோ? செறுவார்க்கு உவகையாக வருபவோ? என்பதனால் இரவில்வரின் உனக்கு ஏதம் வரும் என்றபடி.
3. நாகு - இளமை. முளை - மூங்கின் முளை. உயங்கி - வருந்தி அஃகியோன் - குறைவுற்றான்.
4. புலம்பின்று - தனித்தது; பொலிவழிந்தது.
5. ஏனம் - பன்றி. இடத்தல் - கொம்பாற் குத்திக் கிளப்பல். எல் - இரா. கொண்டு கைகாய்த்தும் என்க. கனல் - அக்கினி. பசப்புக்கெட வருவான்கொல் என இயையும்.

[1]சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி வைகலு
மிரவுக்குறிக் கொண்கன் வந்தனன்
விரவுமணிக் கொடும்பூண் விளங்கிழை யோயே. (சிற்றெட்டகம்)

*இஃது இரவுக்குறி. தலைவன் வந்தமை தலைவிக்குக் கூறியது.*

[2]அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தண்கயத் தமன்ற கூதளங் குழைய
வின்னிசை யருவிப் பாடு மென்னதூஉங்
கேட்டியோ வாழிவேண் டன்னைநம் படப்பை
யூட்டி யன்ன வொண்டளிர்ச் செயலை
யோங்குசினைத் தொடுத்த வூசல் பாம்பென
முழுமுத றுமிய வுருமெறிந் தன்றே
யின்னுங் கேட்டியோ வெனவுமஃ தறியா
என்னையுங் கனைதுயின் மடிந்தன ளதன்றலை
மன்னுயிர் மடிந்தன்றாற் பொழுதே காதலர்
வருவ ராயிற் பருவ மிஃதெனச்
சுடர்ந்திலங் கெல்வளை ஞெகிழ்ந்த நம்வயிற்
படர்ந்த வுள்ளம் பழுதின் றாக
வந்தனர் வாழி தோழி யந்தரத்
திமிழ்பெய றலைஇய வினப்பல கொண்மூத்
தவிர்வில் வெள்ளந் தலைத்தலை சிறப்பக்
கன்றுகா லொய்யுங் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவு
மகல்வாய்ப் பாந்தட் படா அர்ப்
பகலு மஞ்சும் பனிக்கடுஞ் சுரனே. (அகம். 68)

*இது, தாயது துயிலுணர்ந்து தலைவன் வந்தமை தோழி தலைவிக்குக் கூறிக் குறிவயிற் சென்றது.*

[3]சேய்விசும் பிவர்ந்த செங்கதிர் மண்டில
மால்வரை மறையத் துறைபுலம் பின்றே
யிறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு
வெண்குவட் டருஞ்சிறைத் தாஅய்க் கரைய
கருங்கோட்டுப் புன்னை யிறைகொண் டனவே
கணைக்கான் மாமலர் கரப்ப மல்குகழித்

---

1. கழிநீந்தி - கழியைக் கடந்து. குறி - குறியில்
2. வேண்டு - விரும்பிக்கேள். படப்பை - கொல்லை. கயம் - குளம். கூதளம் - கூதாளி. என்னது - யாதேனும். ஊட்டியன்ன - அரக்கையூட்டினாற்போன்ற. செயலை - அசோகு. முதல் - அசோகினடி. அதன்றலை - அப்பொழுது . பொழுதே - காலத்தே. சுடர்ந்திலங்கு - விட்டுவிளங்கும். தலைஇய - பெய்த. கன்று - யானைக்கன்று. காலொய்யும் - காலை இழுக்கும். யானை நீத்தம் துழவும் என இயைக்க. விளி - ஒலி. பாந்தட்படாஅர் - பாம்புச்செடி.
3. வெண்குவடு - வெள்ளிய உப்புக்குவியல். அருஞ்சிறைத்தாய் - அரிய சிறகாற் கடந்துசென்று. இறைகொண்டன - தங்கின. எம்முறைவினூர்க்கு -

துணைச்சுறா வழங்கலும் வழங்கு மாயிடை
யெல்லிமிழ் பனிக்கடன் மல்குசுடர்க் கொளீஇ
யெமரும் வேட்டம் புக்கன ரதனாற்
றங்கி னெவனோ தெய்ய பொங்கதிர்
முழவிசைப் புணரி யெழுதரு
முழைகடற் படப்பையெம் முறைவி னூர்க்கே. (நற்றிணை. 67)

*இஃது இரவுக்குறி வேண்டிய தலைவற்குத் தோழி உடன் பட்டுக் கூறியது.*

[1]ஆம்ப னுடங்கு மணித்தழையு மாரமுந்
தீம்புன லூரன் மகளிவ – ளாய்ந்த
தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ. (திணை: ஐம். 40)

*இஃது இரவுக்குறி நேர்ந்த தோழி இந்நிலத்தின்கண் நீ வருங்கால் இன்னபெற்றியான் வருவாயாகவென்றது.*

[2]கடற்கானற் சேர்ப்ப கழியுலாஅய் நீண்ட
வடற்கானற் புன்னைதாழ்ந் தாற்ற – மடற்கான
லன்றி லகவு மணிநெடும் பெண்ணைத்தே
முன்றி லிளமணன்மேன் மெய்த்து. (திணை: நூற். 56)

*இஃது இரவுக்குறியிடங் காட்டித் தோழி கூறியது.*

[3]எம்மூர் வாயி லொண்டுறைத் தடைஇய
கடவுண் முதுமரத் துடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கட் கூருகிர்
வாய்ப்பறை யசாவும் வலிமுந்து கூகை
மையூன் றெரிந்த நெய்வெண் புழுக்க
லெலிவான் சூட்டொடு மலியப் பேணுது
மெஞ்சாக் கொள்கையெங் காதலர் வரனசைஇத்
துஞ்சா தலமரும் போழ்தி
னஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே. (நற்றிணை. 83)

---

யாமுறைதலையுடைய எமதூர்க்கண். ஊர்க்கண் தங்கின் எவனோ என இயைக்க.

1. நுடங்கும் ஆம்பற்றழை - அசையும் ஆம்பற்பூவாலாயதழை. ஆரம் - சந்தனம். மகளிவள் அணிவள் என ஒருசொல் வருவிக்க. ஆய்ந்த - ஆராய்ந்துகொண்ட. பிணையல் - மாலை.

2. அடற்கானல் - மீன் கொலையையுடைய கானல். தாழ்ந்து - தழைத்து. ஆற்ற - மிக. மடல் - பூவிதழ். நெடும்பெண்ணைத்து - நெடிய பனையையுமுடைத்து. முன்றில் - எம்மில்லத்தின்முன். முன்றில் மொய்த்து தாழ்ந்து பெண்ணைத்து என முடிக்க.

3. தடைஇய - பருத்த. கடவுண் முதுமரம் - தெய்வமிருக்கும் முதிய மரம். முது மரம் - ஆலமரமுமாம். தெண்கண் - தெளிந்த கண். வாய்ப்பறை அசாவும் - வாயாகிய பறையி னோசையாலே பிறரை வருத்தும். வலிமுந்து - வலிமிக்க. கூகை, இயல்புவிளி;மையூன் - ஆட்டிறைச்சி. வரல்நசைஇ - வரலை விரும்பி.

*இஃது இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறமாகக் கூகைக்கு உரைப்பாளாய்த் தோழி கூறியது.*

[1]நிலவு மறைந்தன் றிருளும் பட்டன்
றோவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன நிற்புறங் காக்குஞ்
சிறந்த செல்வத் தன்னையுந் துஞ்சினள்
கெடுத்துப்படு நன்கல மெடுத்துக்கொண் டாங்கு
நன்மார் படைய முயங்கி மேன்மேற்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
கீழு மேலுங் காப்போர் நீத்த
வறுந்தலைப் பெருங்களிறு போலத்
தமியன் வந்தோன் பனியலை நீயே. **(நற்றிணை. 182)**

*இது தலைவனைக்கண்டு முயங்குகம் வம்மோ என்றது.*

*வேண்டாப் பிரிவினும் - தலைவன்றான் புணர்ச்சியை விரும்பாது பிரிவை விரும்பிய இடத்தும்:*

*அப்பிரிவு தண்டாதிரத்தலை முனிந்த மற்றையவழி 'இட்டுப் பிரிவும் அருமைசெய் தயர்த்தலு' (111) மாம்; ஆண்டுத் தலைவற்குந் தலைவிக்கும் கூறுவன கொள்க. உதாரணம்:*

[2]முத்த மரும்பு முடத்தாண் முதிர்புன்னை
தத்துந் திரைதயங்குந் தண்ணங் கடற்சேர்ப்ப
சித்திரப் பூங்கொடியே யன்னாட் கருளீயாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு. **(திணை: ஐம். 42)**

[3]இறவுப்புறத்தன்ன பிணர்படு தடவுமுதற்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பி னன்ன வரும்புமுதிர்பு
நன்மா னுழையின் வேறுபடத் தோன்றி
விழுவுக்களங் கமழு முரவுநீர்ச் சேர்ப்ப
வினமணி நெடுந்தேர் பாக னியக்கச்
செலீஇய சேறி யாயி னிவளே
வருவை யாகிய சின்னாள்
வாழ்வா ளாத லறிந்தனை சென்மே. **(நற்றிணை. 19)**

*இது பிரிவு வேண்டியவழிக் கூறியது.*

---

1. மறைந்தன்று - மறைந்தது. பட்டன்று - உண்டாயது. வரைப்பு - வீடு. கெடுத்துப்படு - இழந்துபட்ட. கலம் - அணி. வறுந்தலை - சிறியதலை. முயங்கி மென்மெல எனவும் பாடம்.

2. முத்தம் - முத்துப்போலும் பூ. தத்தும் - வீசும். தயங்கல் - துளங்கல். அருளீயாய் - அருளினாலே நல்காய் மார்பு நல்காய் என இயைக்க.

3. பிணர் - சருச்சரை. தடவுமுதல் - வளைந்த அடி. நன்மானுழையின் வேறுபடத்தோன்றி - நல்ல பெண்மான் தலைசாய்த்து நிற்றல்போல வேறாகத் தோன்றி. சேறியாயின் அறிந்தனை சென்மே என இயைக்க.

[1]சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ
மிருங்கல் விடரளை வீழ்ந்தன வெற்பிற்
பெருந்தே னிறாலொடு சிதறு நாடன்
பேரமர் மழைக்கண் கலுழத்தன்
சீரடை நன்னாட்டுச் செல்லு மன்னாய் (ஐங்குறு. 214)

எனவும் வரும்.

*வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தும் - தலைவற்குத் தாஞ்சில கொடுத்தலைத் தலைவி வேண்டியவிடத்தும்:*

*அது, தலைவி 'வேளாணெதிரும் விருந்தின்கண்' (107) தோழி கூறுவதாம். உதாரணம்:*

[2]பன்னா ளெவ்வந் தீரப் பகல்வந்து
புன்னையம் பொதும்ப ரின்னிழற் கழிப்பி
மாலை மால்கொள நோக்கிப் பண்ணாய்ந்து
வலவன் வண்டே ரியக்க நீயுஞ்
செலவிருப் புறுத லொழிகதில் லம்ம
செல்லா நல்லிசைப் பொலம்பூட் டிரையன்
பல்பூங் கானற் பவத்திரி யன்னவிவ
ணல்லெழி லிளநலந் தொலைய வொல்லெனக்
கழியே யோத மல்கின்று வழியே
வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்குஞ்
சென்றோர் மன்ற மான்றின்று பொழுதென
நின்றிறத் தவலம் வீட வின்றிவட்
சேப்பி னெவனோ பூக்கேழ் புலம்பப்
பசுமீ னொடுத்த வெண்ணென் மாஅத்
தயிர்மிதி மிதவைமா வார்குவ நினக்கே
வடவர் தந்த வான்கேழ் வட்டங்
குடபுல வுறுப்பிற் கூட்டுபு நிகழ்த்திய
வண்டிமிர் நறுஞ்சாந் தணிகுவந் திண்டிமி
லெல்லுந்தொழின் மடுத்த வல்வினைப் பரதவர்
கூருளிக் கடுவிசை மண்டலிற் பாய்ந்துடன்
கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை
தண்கட லசைவளி யெறிதொறும் வினைவிட்டு
முன்றிற் றாழைத் தூங்குந்
தெண்டிரைப் பரப்பினெம் முறைவி னூர்க்கே. (அகம். 340)

---

1. கொழுந்துணர் - கொழுவியகுலை. வீழ்ந்தன தேன்இறாலொடு சிதறும் - வீழ்ந்தனவாய்த் தேனிறாலொடு சிதறும். என்றது தேனிறாலையும் வீழ்த்திக் கொண்டு வீழ்ந்து சிதறும் என்றபடி. இறால் கீறும் எனவும் பாடம்.

2. எவ்வம் - துயரம். மால் - இருண்மயக்கம். வலவன் - பாகன். பவத்திரி - ஓரூர். ஓதம் - நீர்ப்பெருக்கு. மான்றின்று - மயங்கிற்று. சேப்பின் - தங்கின். மா - குதிரைகள். ஆர்குவ - உண்பன. வடவர் - வடதேயத்தார். வட்டம் - சந்த னக்கல். குடபுலவுறுப்பு - சந்தனக்கட்டை. கூட்டுபுநிகழ்த்திய - சேர்த்து அரைத்த. கூருளி - கூரிய உளி போன்ற ஆயுதம்: இது மீன் எறிவது. உறை வினூர்க்குச் சேப்பினெவனோ என இயைக்க. உறைவினூர் - உறைதலை யுடைய ஊர். நொடுத்தல் - விற்றல். வெண்ணெல் மிதவை என்க.

இதனுள், [1]தனக்கும் புரவிக்குங் கொடுப்பன கூறித் தடுத்த வாறு காண்க.

'நாள்வலை முகந்த' (அகம் - 300) என்பதும் அது.

புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும் - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தகாலத்து அவன் தீங்கு உணராது அவனை நன்றாக உணர்ந்த அறிவினது மடப்பங்கூறித் தங் காதற்சிறப்பும் உரைத்த இடத்தும்: உதாரணம்:

[2]சுரஞ்செல் லியானைக் கல்லுறு கோட்டிற்
றெற்றென விறீஇயரோ வைய மற்றியா
நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே
பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோ
லெமக்கும் பெரும்புல வாகி
நும்மும் பெறேஎ மிறீஇயரெம் முயிரே. (குறுந். 169)

இஃது அவனோடு நகுதற்குத் தோன்றிய உணர்வு இன்றி யமையாமை கூறிக் காதற்சிறப்பு உரைத்தது.

ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும் - தலைவற்குத் தலைவியைப் பாதுகாத்துக் கொள்ளெனக் கூறுங் கிளவியது பகுதிக்கண்ணும்: தோழிமேன கிளவி பகுதியாவன வரைவிடைப் பிரிவு முதலிய பிரிவிடத்தும் மனத்திடைப் புணர்ச்சியின்றி நீங்கு மிடத்து, பிறவிடத்துங் கூறுவனவாம். உதாரணம்:

[3]நனைமுதிர் ஞாழற் றினைமரு டிரள்வீ
நெய்தன் மாமலர்ப் பெய்த போல
வூதை தூற்று முரவுநீர்ச் சேர்ப்ப
தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்
டன்னா யென்னுங் குழவி போல
வின்னா செயினு மினிதுதலை யளிப்பினு
நின்வரைப் பினளென் றோழி
தன்னுறு விழுமங் களைஞரோ விலளே. (குறுந். 397)

---

1. தனக்கும் என்பது தலைவனைக் குறித்து நின்றது.
2. எயிறு கோட்டின் இறுக என இயைக்க. கல்லுறுகோடு - மலையைக்குத்தின கோடு. மண்டை - ஒருவகை மண்பாத்திரம். புலவாகி - வெறுப்பைத் தருவதாகி. இறீஇயர் - இறுக.
3. திணை - திணைக்கதிர். மருள் - ஒத்த. ஊதை - குளிர்காற்று போலத் தூற்றும் என்க. இன்னாசெயினும் - நீ துன்பஞ்செயினும். நின்வரைப்பினள் - நின் எல்லையைக் கடவாள். நின்னையன்றி விழுமம் களைஞரிலள் என்க. விழுமம் - துன்பம்.

[1]பொருநன் றாற்றிற் பேணாரு முளரே
யொருநன் றுடைய ளாயினும் புரிமாண்டு
புலவி தீர வளிமதி யிலைகவர்
பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரன்
மென்னடை மரையா துஞ்சு
நன்மலை நாட நின்னல திலளே. (குறுந். 115)

[2]எறிந்தெமர் தாமுழுத வின்குர லேனன்
மறந்துங் கிளியினமும் வாரா – கறங்கருவி
மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவ னெஞ்சத்துட் கொண்டு. (ஐந். ஐம். 22)

[3]அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி
குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கா
லிருவி நீள்புனங் கண்டும்
பிரித றேற்றாப் பேரன் பினவே. (ஐங்குறு. 284)

*இது, தினை அரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள் போற் [4]சிறைப்புறமாக ஓம்படுத்தது. இன்னும் 'ஓம்படைக் கிளவி' என்றதற்கு இவளை நீ பாதுகாத்துக் கொள்ளென்று தலைவன் கூறுங் கிளவியது பகுதிக்கண்ணுமென்றும் பொருள் கூறுக.*

[5]பிணங்கரில் வாடிய பழவிற னனந்தலை
யுணங்கூ ணாயத் தோரான் றெண்மணி
பைப்பய விசைக்கு மத்தம் வையெயிற்
றிவளொடு செலினோ நன்றே குவளை
நீர்சூழ் மாமல ரன்ன கண்ணழக்
கலையொழி பிணையிற் கலங்கி மாறி
யன்பிலி ரகறி ராயி னென்பர
மாகுவ தன்றிவ ளவல நாகத்
தணங்குடை யருந்தலை யுடலி வலனேர்
பார்கலி நல்லேறு திரிதருங்
கார்செய் காலை வரூஉம் போழ்தே. (நற்றிணை. 37)

1. நன்று - நன்மை; உதவி. புரி - விருப்பம். புலவி - புலத்தல். நின் அலது இலள் - நின்னையன்றி வேறு பற்றுக்கோடு இலள்.
2. எறிந்து - (மரமுதலியவற்றை) வெட்டி. கேண்மை நெஞ்சத்துக்கொண்டு நீ மறவல் என்க.
3. அளிய - இரங்கத்தக்கன. இருவி - கதிர் கொய்ததாள். கிளிபேரன்பின என இயைக்க.
4. சிறை - மதில்; வேலியுமாம்.
5. பிணங்கு - ஒன்றோடொன்று மாறுபடுகின்ற. அரில் - பற்றை. ஊண் உணங்கு ஆயம் - ஊணால் வருந்துகின்ற பசுநிலை. பைப்பய - மெல்ல மெல்ல. இவள வலம் என்பரம் ஆகுவதன்று - இவள் துன்பம் என்னால் பொறுக்கப்படு வதன்று (என்னாலே தாங்கப்படுவதன்று). உடலி - மாறுபட்டு. ஏறு - இடியேறு. திரிதரல் - மேகத்தில் எங்குமோடி முழங்கல்.

இது, வரைவிடைப் பிரிகின்றான் ஆற்றுவித்துக் கொண்டிரு என்றாற்குத் தோழி கூறியது.

செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினும் - தோழி செவ்வனங் கூறுங் கடுஞ்சொற்களால் தலைவி நெஞ்சு சிதைவுடைத்தாயினும்: ஆண்டுந் தோழிமேன கிளவி.

அவை தலைவனை இயற்பழித்தலுந் தலைவியைக் கழறலு மாம்.

உதாரணம்:

[1]கௌவையம் பெரும்பழி தூற்ற நலனழிந்து
பைதலஞ் சிறுநுதல் பசலை பாய
நம்மிதற் படுத்த வவரினு மவர் நாட்டுக்
குன்றங் கொடியகொ றோழி
யொன்றுந் தோன்றா மழைமறந் தனவே.

இது, வரைவிடைப் பருவங்கண்டழிந்த தோழி இயற் பழித்தது.

[2]மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத லொருதலை சேக்கு நாட
னோய்தந் தனனே தோழி
பசலை யார்ந்தன குவளையங் கண்ணே. (குறுந். 13)

[3]கேழ லுழுத கரிப்புனக் கொல்லையுள்
வாழை முதுகாய் கடுவன் புதைத்தயருந்
தாழருவி நாடன் றெளிகொடுத்தா னென்றோழி
நேர்வளை நெஞ்சூன்று கோல். (ஐந்: எழு. 11)

இஃது அவள் சூளுறவு பொய்த்ததென இயற்பழித்தது.

[4]மகிழ்நன் மார்பே வெய்யை யானீ
யழியல் கொன்று நாட்டிற் போக்கிய
வொன்று மொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே. (குறுந் 73)

---

1. கௌவை - அலர். பைதல் - பசுமை. பசலைபாய - பசப்பூர. இகல் - பகை. ஒன்றுந்தோன்றா - சிறிதுந்தோன்றா, மழை மறைந்தன - மேகத்தில் மறைந்தன.

2. மாசு - புழுதி. உழந்த - பெயலை ஏற்றுக் கழுவுண்ட. பிணர் - சருச்சரை. துறு கல் - உருண்டைக்கல்; பாறைக்கல் என்றல் நலம். பைதல் - பசுமை. சேக்கும் - தங்கிக்கிடக்கும்.

3. கேழல் - பன்றி. கரிப்புனம் - கரிதலையுடைய புனம். புதைத்து - புழுதியிற் புதைத்து. தெளிகொடுத்தான் - சூளுற்றான். நெஞ்சூன்றுகோலாகச் சூள்கொடுத்தான் என்க.

4. வெய்யை - விருப்பமுடையை. மா - காவன்மரமாகிய மாமரம். ஒன்றுமொழி - வஞ்சினம். கோசர் - ஒருவகைவீரர்.

[1]மெய்யிற் றீரா மேவரு காமமொ
டெய்யா யாயினு முரைப்ப றோழி
கொய்யா முன்னுகுங் குரல்வார்பு தினையே
யருவி யான்ற பைங்கா றோறு
மிருவி தோன்றிய பலவே நீயே
முருகு முரண்கொள்ளுந் தேம்பாய் கண்ணிப்
பரிபன் னாயொடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலோ டமைந்தனை யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்து
கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி
யாங்காங் கொழுகா யாயி னன்னை
சிறுகிளி கடித றேற்றா ளிவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவ ளாயி
னுறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே. (அகம். 28)

என வரும். இதனானே வரையும் பருவமன்றெனக் கூறுதலுங் கொள்க.

என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று [2]கடைஇ அன்பு தலையடுத்த வன்புறைக் கண்ணும் - என்பு உருகுமாறு தலைவனாற் பிரியப்பட்ட தலைவிக்கு வழிபாடாற்றிச் சென்று தான் கூறும் மொழியை அவள் மனத்தே செலுத்தித் தலைவன் அன்பை அவளிடத்தே சேர்த்துக் கூறிய வற்புறுத்தற்கண்ணும்:

அப்பிரிவு வரைந்துகோடற்குப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தர்க்குற்றுழிப் பிரிதலும், காவற்குப் பிரிதலுமாம். ஆண்டு வற்புறுத்துங்கால் இயற்பழித்தும் இயற்படமொழிந்தும் பிறவாறும் வற்புறுத்தும். முன் 'செங்கடு மொழியால்' என்புழி இயற்பழித்தனவும் வற்புறுத்துதல் பயனாகக் கூறியன வென்றுணர்க. உதாரணம்:

[3]யாஞ்செய் தொல்வினைக் கென்பே துற்றனை
வருந்தல் வாழி தோழி யாஞ்சென்
றுரைத்தனம் வருக மெழுமதி புணர்திரைக்
கடல்விளை யமிழ்தம் பெயற்கேற் றாஅங்
குருகி யல்குத லஞ்சுவ லுதுக்காண்

---

1. எய்யாயினும் - அறியாயினும். கால் - கால்வாய், இருவி - கதிர்முரித்த தாள். பரி - வருந்திய. தொடலைநுடங்க - மாலைதூங்க. கிள்ளைத்தெள்விளி - கிள்ளையையோட்டும் தெளிந்த ஒலி.

2. கடைஇ - கடவி = செலுத்தி (புகுத்தி).

3. பேதுற்றனை - வருந்தினை. அமிழ்தம் - உப்பு. பெயல் - மழை. உருகி அல்குதல் அஞ்சுவல் - நீ உள்ளமுருகியொழுகுவதற்கு அஞ்சுவேன்.

டம்மோன் கொடுமை நம்வயி னேற்றி
நயம்பெரி துடைமையிற் றாங்கல் செல்லாது
கண்ணீ ரருவி யாக
கலுழுமே தோழியவர் பழமுதிர் குன்றே. (நற்றிணை. 88)

*இது பிரிவிடைத் தோழி இயற்பழித்து வற்புறுத்தது.*

[1]தோளுந் தொல்கவின் றொலைந்தன நாளு
மன்னையு மருந்துய ருற்றன ளலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமா
னெழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழிய
னேரா வெழுவ ரடிப்படக் கடந்த
வாலங் கானத் தார்ப்பினும் பெரிதென
வாழல் வாழி தோழி யவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்ப
ரறையிறந் தகன்றன ராயினு நிறையிறந்
துள்ளா ராகலோ வரிதே செவ்வேன்
முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வி
லோரிக் கொன்று சேரலர்க் கீந்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை யன்னநின் னலனே. (அகம். 209)

[2]அழிய லாயிழை யிழிபுபெரி துடையன்
பழியு மஞ்சும் பயமலை நாட
னில்லா மையே நிலையிற் றாகலி
னல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப் பொருள் போலத்
தங்குதற் குரிய தன்றுநின்
னங்கலுழ் மேனிப் பாஅய பசப்பே.

*என்னும் குறுந்தொகையும் (143) கொள்க.*

---

தம்மோன் - தமது தலைவன். ஏற்றி - நினைந்து. நயம் - அன்பு. தாங்கல் செல்லாது - அடக்கமுடியாது. குன்று கலுழும் என்க.

1. அலர் ஆர்ப்பினும் பெரிதென ஆழல் (அழல்) தோழிவாழி எனக் கூட்டுக. எழுவர் - ஏழரசர். புல்லிவேங்கடத்தும்பர் என இயைக்க. புல்லி - ஒருபகாரி (புறம் - 385). அறையிறந்து பாறையைக் கடந்து. மன்னனாகிய காரி ஓரியைக் கொன்று. சேரலர்க் கீந்த கொல்லியிற்பாவை என்க. தெய்வம் ஆக்கிய (புணர்த்த) பாவை எனவுங் கூட்டுக. புணர்த்த - எழுதிய. நலன் உள்ளாராக லரிது என முடிக்க.

2. அழியல் - வருந்தற்க. ஆகலின் வேட்ட என ஒட்டுக. இசை - புகழ். கடப்பாட்டாளன் - ஒப்புரவாளன். நின் பசப்பு தங்கதற்குரியதன்று என முடிக்க.

[1]பெருங்கை யிருங்களி றைவன மாந்திக்
கருங்கான் மராம்பொழிற் பாசடைத் துஞ்சுஞ்
சுரும்பிமிர் சோலை மலைநாடன் கேண்மை
பொருந்தினார்க் கேமாப் புடைத்து. (ஐந்: எழு. 12)

*இவை இயற்பட மொழிந்து வற்புறுத்தன. இன்னும் 'அன்புதலையடுத்த வன்புறை' என்றதனாற் பிறவுங் கொள்க.*

[2]பெறுமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோட் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போலக்
கோல்கொண் டலைப்பப் படீஇயர் மாதோ
வீரை வேண்மான் வெளியன் றித்தன்
முரசுமுற் கொளீஇய மாலை விளக்கின்
வெண்கோ டியம்ப நுண்பனி யரும்பக்
கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்
தவல நெஞ்சி னஞ்சினம் பெயர
வுயர்திரை நீடுநீர்ப் பனித்துறைச்
சேர்ப்பனோடு நுண்ணுக நுழைத்த மாவே. (நற்றிணை. 58)

*இது, பகற்குறி வந்து போகின்ற தலைவன் [3]புறக்கிடை நோக்கி ஆற்றாத தலைவி குறிப்பறிந்து மாவின்மேல் வைத்து வற்புறுத்தது.*

[4]விளையா டாயமொ டோரை யாடா
திளையோ ரில்லிடத் திற்செறிந் திருத்த
லறனு மன்றே யாக்கமுந் தேய்ம்மெனக்
குறுநுரை சுமந்து நறுமல ருந்திப்
பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண வாடுகம்
வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே

---

1. ஐவனம் - மலைநெல். மராம் - கடம்பு. பாசுஅடை - பசிய இலை. ஏமாப்பு - இறுமாப்பு = களிப்பு.

2. பொன்னுடைப்புதல்வர் - பொன்னணிகளையுடைய புதல்வர். பறையின் கண்ணிடத்தெழுதியகுருவி கோலானே அடிக்கப்படுதல் போல, மாக் கோல்கொண்டு அலைப்பப்படுகவென இயைக்க. படீஇயர் - வியங்கோள். வெளியனாகிய தித்தனின் வரிசையாக ஏற்றிய விளக்கைப்போல என்க. முரசின்முன்கொளுத்திய விளக்கைப் போல வந்தபொழுது எனக் கூட்டுக. முரசுமுதற்கொளீஇய என்பது முதலிய மூன்றடிக்கும் நற்றிணையுரைகாரர் முரசுமுதற் கொளீஇய எனப் பாடங்கொண்டு வேறு பொருள் கூறுவர். ஆயின் அது நேர்பொருளன்று.

3. புறக்கிடை (புறக்கிடல்) - புறங்காட்டிப்போதல். இனிபுறத்தே கிடப்பது (முதுகு) எனினுமாம். இது புறக்குடை எனப் பெருங் கதையுள் வருகின்றது. "பொற்புனை பாவை புறக்குடை நீவி" (மகத. 14 - 44).

4. ஓரை - விளையாட்டு. உந்தி - தள்ளி. சுமந்து உந்தி வருநீர் என்க. அன்னைக்குச் சொல்லுநர்ப்பெறின் ஆடுகம் என இயைக்க. விடுநள்கொல் -

செல்கென விடுநண்மற் கொல்லோ வெல்லுமிழ்ந்
துரவுரு முரறு மரையிரு ணடுநாட்
கொடி நுடங் கிலங்க மின்னி
யாடுமழை யிறுத்தன்றவர் கோடுயர் குன்றே. (நற்றிணை. 68)

*இது, வரைவு நீட ஆற்றாத தலைவி வேறுபாடு புறத்தார்க்குப் புலனாகாமையும் இயையும் இங்ஙனங் கூறுவாரைப் பெறி னெனக் கூறி வற்புறுத்தது.*

[1]மறுகுபு புகலு நெஞ்ச நோயின்
றிறுகப் புல்லி முயங்குகஞ்
சிறுபுன் மாலை செயிர்ப்ப நாமே.

*இது, பிரிவிடையாற்றாத தலைவியைத் தோழி நன்னிமித்தங் கூறி வற்புறுத்தது.*

*ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும் - தலைவன் வருகின்ற நெறியினது தீமையைத் தாங்கள் அறிதலுற்றதனானே எய்திய கலக்கத்தின் கண்ணும்: தோழிமேன கிளவி. உதாரணம்:*

[2]கழுதுகால் கிளர வூர்மடிந் தன்றே
யுருகெழு மரபிற் குறிஞ்சி பாடிக்
கடியுடை வியனகர்க் கானவர் துஞ்சார்
வயக்களிறு பொருத வாள்வரி யுழுவை
கன்முகைச் சிலம்பிற் குழுமு மன்னோ
மென்றோ ணெகிழ்ந்து நாம் வருந்தினு மின்றிவர்
வாரா ராயினு நன்றுமற் றில்ல
வுயர்வரை யடுக்கத் தொளிறி மின்னிய
பெயல்கான் மயங்கிய பொழுதுகழி பானாட்
டிருமணி யரவுத்தேர்ந் துழல
வுருமுச்சிவந் தெறியு மோங்குவரை யாறே. (நற்றிணை. 255)

---

விடுவாளோ? எல் - ஒளி. உரறும் - முழங்கும். கொடி நுடங்கு இலங்க மின்னி - கொடி நுடங்கல்போல விளங்கமின்னி.

1. மறுகுபு - சுழன்று. புகலும் - விரும்பும். நெஞ்சநோயின் றாக முயங்குகம் என இயைக்க. நோயின்று நோயில்லாதபடி. செயிர்ப்பம் - கோபிப்பம்; பகைப்பம் நாம் தலைவன் மார்பை இறுகப்புல்லி முயங்குவேம்.

2. கழுது - பேய். கால்கிளர - இயங்காநிற்ப. மடிந்தன்று - துயின்றது. குறிஞ்சி - ஓர் பண். களிற்றோடு பொருத வேங்கை (குழுமும்) முழங்கும் மன் என்க. தில்ல - அசைநிலை. பெயல் கால் மயங்கிய - மழை பெய்தல் மயங்கிய. தேர்ந்து உழல - காதிற் கேட்டு உழல. மணியைக் கக்கி உழல எனினுமாம். சிவந்து - கோபித்து.

[1]கொடுவரி வேங்கை பிழைத்துக்கோட் பட்டு
மடிசெவி வேழ மிரீஇ – யடியோசை
யஞ்சி யொதுங்கு மதருள்ளி யாரிருட்
டுஞ்சா சுடர்த் தொடி கண். (ஐந்: ஐம். 16)

*இவை இரவுக்குறிவரவால் தலைவி வருந்துவளென்றது.*

*'கரைபொரு கான்யாற்றங் கல்லதர்'. (யா – வி 76) என்பதும் அது; 'கூருகிரெண்கின்' என்னும் (112) அகப்பாட்டுங் காண்க.'*

*'கலக்கம்' எனப் பொதுப்படக் கூறியவதனால் ஆற்றிடை ஏதமின்றிச் சென்றமை தோன்ற ஆண்டு ஓர் [2]குறிசெய் எனக் கூறு வனவுங் கொள்க.*

[3]கான மானதர் யானையும் வழங்கும்
வான மீமிசை யுருமுநனி யுரறு
மரவும் புலியு மஞ்சுதக வுடைய
விரவழங்கு சிறுநெறி தமியை வருதி
வரையிழி யருவிப் பாடொடு பிரச
முழவுச்சேர் நரம்பி னிம்மென விமிரும்
பழவிற னனந்தலைப் பயமலை நாட
மன்றல் வேண்டினும் பெறுகுவை யொன்றோ
வின்றுதலை யாக வாரல் வரினே
யேமுறு துயர நாமிவ ணொழிய
வெற்கண்டு பெயருங் காலை யாழநின்
கற்கெழு சிறுகுடி யெய்திய பின்றை
யூதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு
வேய்பயி லழுவத்துப் பிரிந்தநின்
னாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே

*என்னும் (அகம் - 318) நித்திலக் கோவையுள், 'வரினே, ஏமுறு துயரம் நாமிவ ணொழிய, நின் னாய்பயிர் குறிநிலை கொண்ட [4]கோட்டை ஊதல் வேண்டுமாற் சிறிது' என்றவாறு காண்க.*

---

1. கொடுவரி - வளைந்தவரி. வேங்கையாற் கோட்பட்டுப் பிழைத்து என மாற்றுக. கோட்பட்டு - பற்றப்பட்டு. இரீஇ - பின் வாங்கி. வேழம் கோட்பட்டுப் பிழைத்து இரீஇ அஞ்சி ஒதுங்கும் அதர் எனவும், கண் துஞ்சா எனவும் இயைக்க. வெரீஇ எனவும் பாடம்.
2. குறி - குறிப்பு.
3. கானம் - காடு. மானதர் - விலங்குகள் செல்லும் வழி; ஆனதர் எனப் பிரித்தலுமாம். அஞ்சுதகவுடைய - அஞ்சுந் தகுதியுடையன. இர - இரவு. முழவு - தண்ணுமை. பிரசம் - தேன். இமிரும் - ஒலிக்கும். மன்றல் - மணம். இன்றுதலையாக - இன்று முதலாக. ஏமுறு - மயங்குகின்ற. பெயருங்காலை எய்தியபின்றை நின்கோட்டை ஊதல் வேண்டும் என இயைக்க. பயிர்குறி - அழைக்குங் குறிப்பு.
4. கோடு - கொம்பு. ஒருவாய்ச்சியம்.

*காப்பின் கடுமை கையற வரினும் - காத்தற் றொழிலால் உண்டாங் கடுஞ்சொற்கள் களவொழுக்கத்திடத்தே எல்லையற வருமிடத்தும்: தோழிமேன கிளவி; அவை பலவகைய:- உதாரணம்:*

[1]கடலுட னாடியுங் கான லல்கியுந்
தொடலை யாயமொடு தழூஉவணி யயர்ந்தும்
நொதுமலர் போலக் கதுமென வந்து
முயங்கினன் செலினே யலர்ந்தன்று மன்னே
துத்திப் பாந்தட் பைத்தக லல்குற்
றிருந்திழை துயல்வுக்கோட் டசைத்த பசுங்கழைத்
தழையினு முழையிற் போகான்
றான்றந் தனன்யாய் காத்தோம் பல்லே. (குறுந். 294)

*இது, பகற்குறிக்கட் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது.*

[2]கணமுகை கையெனக் காந்தள் கவின
மணமுகை யென்றெண்ணி மந்திகொண் டாடும்
விறன்மலை நாட வரவரிதாங் கொல்லோ
புனமு மடங்கின காப்பு. (திணை: ஐம். 2)

*இது, தினைவிளைந்தமை கூறிச் செறிப்பறிவுறீ இயது.*

[3]அறையருவி யாடா டினைவனமுங் காவாள்
பொறையுயர் தண்சிலம்பிற் பூந்தழையுங் கொய்யா
ளுறைகவுள் வேழமொன் றுண்டென்றா ளன்னை
மறையறநீர் வாழிய மையிருங் குன்றே.

*இது, குன்றத்திற்குக் கூறுவாளாகச் செறிப்பறிவுறீஇயது.*

[6]சாந்த மொறிந்துழுத சாரற் சிறுதினைச்
சாந்த விதண மிசைச் சார்ந்து – சாந்தங்
கமழக் கிளிகடியுங் கார்மயி லன்னா
ளிமிழக் கிளியெழா வார்த்து. (திணை: நூற். 3)

*இது, பிறரைக் காத்தற்கு இடுவரெனச் செறிப்பறிவுறீ இயது.*

---

1. அல்கி - தங்கி. தொடலை - மாலை. தழூஉவணிஅயர்ந்தும் - கைகோத்தாடியும். அலர்ந்தன்று - அலருண்டாயிற்று. துத்தி - படப்பொறி. தித்தி எனின் தேமல் என்று பொருள். துயல்வு - அசைதல். கோடு - பக்கம். அசைத்த - கட்டிய. உழை - அணிமை. ஓம்பலைத் தானே தந்தனன் என இயைக்க.

2. கணமுகை - திரண்டமுகை. காந்தள் கணமுகை கவின என்க. மணமுகை - (அதன்) மணத்தையுடைய முகை. புனங்களும் காவல் ஒழிந்தன என்றது. தினை விளைந்தமையால் காவல் ஒழிந்தன என்றபடி. இனி வரவரிது என்றபடி.

3. அறை - பாறை, ஒலிக்கும் எனினுமாம். சிலம்பு - மலை. அன்னை - தலைவி. குன்றே நீர் வாழிய என்க. நீர் - அருவி. மறையற - மறைதலற.

4. சாந்தம் - சந்தனமரம். சாந்தஇதணம் - சந்தனமரத்தாற் செய்த பரண். சாந்தமெறிந்த விதண்மிசை எனவும் பாடம். எறிந்த - வெட்டிச்செய்த. இமிழ - ஆயோவென்றியம்புதலால். ஆர்த்துஎழா - ஆர்த்துப்போகா.

[1]பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்
துரவுக்களிறு போல்வந் திரவுக்கதவு முயறல்
கேளே மல்லேங் கேட்டனெம் பெரும
வோரி முருங்கப் பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியா
முயங்குதொறு முயங்கு மறனில் யாயே. (குறுந். 244)

*இஃது, இரவுக்குறிக்காப்பின் கடுமை கூறியது.*

[2]வினைவிளையச் செல்வம் விளைவதுபோ னீடாப்
பனைவிளைவு நாமெண்ணப் பாத்தித் – தினைவிளைய
மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண். (திணை: நூற். 5)

*இஃது இவ்வொழுக்கத்தினை வேங்கை நீக்கிற்றெனத் தலைவிக்குக் கூறியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.*

[3]புன்னையம் பூம்பொழிலே போற்றவே பாதுகா
வன்னப் பெடையே யறமறவன் – மன்னுங்
கடும்புதர்மான் காவலி கானலஞ் செல்லூர்
நெடுங்கடலே நீயு நினை.

*இது, புனங் கைவிட்டுப் போகின்றுழிச் சிறைப்புறமாகத் தோழி கூறியது.*

[4]பண்டைக்கொ ணல்வினை யில்லேம் பதிப்பெயர்துங்
கண்டற் குலங்காள் கழியருகேர் – முண்டகங்கா
ணாணி யிராதே நயந்தங் கவர்க்குரைமின்
பேணி யவர்செறித்த லான்.

*இது, தலைவற்குக் கூறுமினென்றது.*

*களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதன் மிகுதி உளப் பட: காதன் மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை*

---

1. பல்லோர் துஞ்சும் - பலருந் துயிலும். கதவுமுயறல் - கதவைத் திறக்க முயலும் ஒலி. ஓரி - தலைக்கொண்டை. அறனில்யாய் முயங்கும் என்க.

2. வினை - நல்வினை. பனைவிளைவு - பனையென்னுமளவு போன்ற அளவினையுடைய இன்பவிளைவு. அதற்கு இடையூறாகத் தினை விளைய என்க. தீத்தீண்டுகையார் - வேங்கையார்.

3. பாதுகா - பாதுகாப்பாய். அற - மிக. புதர் - பற்றை. மான் - மானே! கா வலி - காத்தலை நினை.

4. கண்டல் - தாழை. முண்டகம் - முள்ளி. ஏர் - எழுந்து. செறித்தலின் - இற்செறித்தலான். நாம் பெயர்வதை உரைமின் என இயைக்க.

*விலக்கி - அவரிடத்துக் காதன் மிகுதி மனத்து நிகழாநிற்க [1]இரு வகையிடத்தையும் இருவகைக் காலத்தையுந் தாம் வரைந்து கூறும் நிலைமையைத் தவிர்த்து அவன்வயின் தோன்றிய கிளவி யையும், பிறவும் - கூறியவாறன்றிப் பிறவாறாக அவன்வயின் தோன்றிய கிளவியையும், நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப் பும் சிறப்பும் இறப்ப நோக்கி அவன்வயின் தோன்றிய கிளவி யொடு தொகைஇ - அவன் பிறந்த நாடும் அதன் பகுதியாகிய குடியிருப்பும் அவ்வூர்க்கு இருப்பாகிய மனையும் பார்ப்பார் முதலிய நால்வகை வருணமும் அவ்வருணத்துள் இன்னவழி இவனென்றலும் ஒருவயிற்றுப் பிறந்தோர் பலருள்ளுஞ் சிறப் பித்துக் கூறலும் பிறரின் ஒவ்வாதிறந்தனவாதல் நோக்கித் தலை வனிடத்தே தோழி கூறிய கிளவியோடே கூடி, அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும் - அத்தன்மைத்தாகிய நிலை மையின் கூறுபாட்டானே வரைந்து கோடலை விரும்பிய வழி யும்: தோழிமேன கிளவி.*

*'பகற்புணர் களனே' (132) 'இரவுக் குறியே' (131) 'குறி யெனப்படுவது' (130) என்னுஞ் சூத்திரங்களாற் களனும் பொழு தும் உணர்க. உதாரணம்:*

**[2]புன்னை காத்து மன்ன மோப்பியும்
பனியிருங் கானல் யாம்விளை யாட
மல்லலம் பேரூர் மறுகி
னல்கலு மோவா தலரா கின்றே.**

*இது பகற்குறி விலக்கியது.*

**[3]நெடுமலை நன்னாட நின்வே றுணையாக்
கடுவிசை வாலருவி நீந்தி – நடுவிரு
ளின்னா வதர்வர வீர்ங்கோதை மாதரா
ளென்னாவா ளென்னுமென் னெஞ்சு. (ஐந்: ஐம். 19)**

*இஃது இரவுக்குறி விலக்கியது.*

---

1. இருவகையிடம் - பகற்குறி, இரவுக்குறி. இருவகைக்காலம் - பகல், இரா.
2. புன்னைகாத்தும் - புன்னைமரத்தின் கீழிருந்து காத்தும். ஓப்பல் - துரத்தல். விளையாட அலராகின்று - விளையாட அதனால் அலர் உண்டாகின்றது. ஓவாது - நீங்காது (இடைவிடாது).
3. இன்னா அதர் - துன்பத்தை விளைக்கும் வழி. இது ஆற்றின்னாமை கூறி விலக்கியது. என்ஆவாள் - எப்பெற்றியாவாள். என்னும் - என்று தடுமாறாநிற்கும்.

[1]இரவு வாரலை யைய விரவுவீ
யகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுதியிவ டடமென் றோளே. (கலி. 49)

*இது பகற்குறி நேர்வாள்போல் இரவுக்குறி விலக்கியது.*

[2]திரைமேற்போந் தெஞ்சிய தெண்கழிக் கானல்
விரைமேவு பாக்கம் விளக்காக் – கரைமேல்
விடுவாய்ப் பசும்புற விப்பிகான் முத்தம்
படுவா யிருளகற்றும் பாத்து. (திணை: நூற். 48)

*இதுவும் அது. இவை வரவுநிலை விலக்கின.*

[3]வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார னாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவ
ளுயிர்தவச் சிறிது காமமோ பெரிதே. (குறுந். 18)

*இது காதன் மிகுதி கூறியது.*

*'பிறவும்' என்றதனால்,*

[4]கோடீ ரிலங்குவளை நெகிழ நாடொறும்
பாடில கலிழ்ந்து பனியா னாவே
துன்னரு நெடுவரை ததும்பிய வருவி
தண்ணென் முழவி னிமிழிசை காட்டு
மருங்கிற் கொண்ட பலவிற்
பெருங்க னாடநின் னயந்தோள் கண்ணே. (குறுந். 365)

*இஃது 'யான் வரையுந் துணையும் ஆற்றுவளோ' என்றாற்கு ஆற்றாளென்றது.*

[5]நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
தினைபாய் கிள்ளை வெரூஉ நாட
வல்லைமன் றம்ம பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே. (ஐங்குறு. 287)

*இது தலைவனைப் பழித்தது.*

---

1. அறை - பாறை, பெறுதி; ஆதலின் வாரலை என இயைக்க.
2. எஞ்சிய - கரைமேலொழிந்த. விடுவாய் - அகன்றவாய். முத்தம் விளக்கா அகற்றும் என்க. பாத்து - பகுத்து.
3. வேரல் - சிறுமூங்கில். வேர்க்கோள் பலவு - வேரிற் காய்களையுடைய பலாமரம்.
4. கோடுஈர்வளை - சங்கையரிந்துசெய்தவளை. பாடு - துயில். கலிழ்ந்து - கலங்கி (- அழுது). பனி - துளி. ஆனா - நீங்கா. கண்கள் பனி ஆனா என இயைக்க.
5. வருடை - மலையாடு. பொய்த்தல் வல்லை என்க. அல்லது செயல் - பொய்யல் லாதவற்றைச் செய்தல். வல்லாய் - மாட்டாய்.

[1]கானற் கண்டற் கழன்றுகு பைங்காய்
நீனிற விருங்கழி யுட்பட வீழ்ந்தெழ
வுறுகா றூக்கத் தூங்கி யாம்பல்
சிறுவெண் காக்கை யாவித் தன்ன
வெளிய விரியுந் துறைவ வென்று
மளிய பெரியோர் கேண்மை நும்போற்
சால்பெதிர் கொண்ட செம்மை யொருத்தி
தீதி னெஞ்சங் கையறுபு வாடி
நீடின்று விரும்பா ராயின்
வாழ்தன்மற் றெவனோ தேய்கமா தெளிவே. (நற்றிணை. 345)

*இஃது, ஆற்றாத தலைவியைக் கடிதின் வரைவேனென்று தலைவன் தெளிவிக்கப் புக்குழித் தோழி தெளிவிடை விலக்கியது.*

[2]குன்றக் குறவன் காதன் மடமகள்
மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலர்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே. (ஐங்குறு. 260)

*இது புனங்காவல் இனியின்று என்றது.*

[3]என்னாங்கொ லீடி லிளவேங்கை நாளுரைப்பப்
பொன்னாம்போர் வேலவர் தாம்புரிந்த – தென்னே
மருவியா மாலை மலைநாடன் கேண்மை
யிருவியா மேன லினி. (திணை: நூற். 18)

*இது, தினை அரிகின்றமையுஞ் சுற்றத்தார் பொருள் வேட்கை யுங் கூறியது.*

[4]வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட
தறியாண்மற் றன்னோ வணங்கணங்கிற் றென்று
மறியீர்ந் துதிரந்தூய் வேலற் றரீஇ
வெறியோ டலமரும் யாய். (ஐந். ஐம். 20)

*இது வெறியச்சுறுத்தியது.*

---

1. கண்டல் - தாழை. உட்பட - புதைய. தூங்கி - மோதப்பட்டு. ஆவித்தல் - கோட்டாவிகொள்ளல். தெளிவு - சூள்; சத்தியம்; தெளிவித்தலுமாம்.

2. மடமகளாகிய கொடிச்சியை (இனிப்) பெறற்கரிது என்க. ஓப்பலர் - குறவர் ஓப்பவிடமாட்டார். இது ஓப்பலள், என்றாதல் ஓப்பலம் என்றாதல் இருந்திருத்தல் வேண்டும்.

3. ஈடில் - தகுதியில்லாத. புரிந்தது - விரும்பியது. விரும்பியது பொன்னாகும் என்க. கேண்மை - நட்பு. என்னாம்கொல் - என்னாய் விளையுங்கொல்லே. என்னே - இரக்கப்பொருட்டு.

4. மெய்ந்நீர்மை - மெய்யின்றன்மை. வெற்பன்கொண்டது யாய் அறியாள் தெய்வம் வருத்திற்றென்று வேலற்றரீஇ ஆட்டுக் குட்டியை வெட்டி இரத்தத்தைப் பலியாகத் தூவி அலமரும் என்க.

[1]இனமீ னிருங்கழி யோத முலாவ
மணிநீர் பரக்குந் துறைவ தகுமோ
குணநீர்மை குன்றாக் கொடியன்னாள் பக்க
நினை நீர்மை யில்லா வொழிவு. (திணை: ஐம். 44)

இஃது அருள வேண்டும் என்றது.

[2]மூத்தோ ரன்ன வெண்டலைப் புணரி
யிளையோ ராடும் வரிமனை சிதைக்குந்
தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச்
சில்செவித் தாகிய புணர்ச்சி யலரெழ
வில்வயிற் செறித்தமை யுணராய் பன்னாள்
வருமுலை வருத்த வம்பகட்டு மார்பிற்
றெருமர லுள்ளமொடு வருந்து நின்வயி
னீங்குக வென்றியான் யாங்ஙன மொழிகோ
வருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது
பெருங்கடன் முழக்கிற் றாகி யாண
ரிரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கடுங்கட் கோசர் நியம மாயினு
முறுமெனக் கொள்குவ ரல்லர்
நறுநுத லரிவை பாசிழை விலையே. (அகம். 90)

இது, பொருண்மிக்க கொடுத்தல் வேண்டுமென்றது.

இன்னும் வரைவு கடாவுதற் பொருட்டாய் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

[3]கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொ டூழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேற
லறியா துண்ட கடுவ னயலது
கறிவளர் சாந்த மேறல் செல்லாது
நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்
குறியா வின்ப மெளிதி னின்மலைப்
பல்வேறு விலங்கு மெய்து நாட
குறித்த வின்ப நினக்கெவ னரிய

1. ஓதம் - நீர்ப்பெருக்கு. நினையும்நீர்மையில்லா ஒழிவு தகுமோ? என இயைக்க. ஒழிதல் - தவிர்ந்திருத்தல்.

2. மூத்தோர் - முதியோர் (கிழவர்) புணரி - திரை. சில்செவித்தாகிய - சிலர் அறிந்த தாகிய (அம்பலமாகிய). வருமுலை வருத்தா - வளருமுலையையுடையவளை வருத்தி. மார்பின் வருத்தா வருந்தும் என இயைக்க.

3. கோள் - காய். ஊழுறுதீங்கனி - ஊழ்த்து வீழ்ந்த தீங்கனி. ஊழ்படு - முறை மைப்பட்ட (சேர்ந்த). ஏறல்செல்லாது - ஏறமாட்டாது. குறியாஇன்பம் - நினையாதுவருமின்பம். குறித்த இன்பம் - நினைத்துப்பெறும் இன்பம்.

வெறுத்த வேஎர் வேய்மருள் பணைத்தோ
ணிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்
டிவளு மினைய ளாயிற் றந்தை
யருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக்
கங்குல் வருதலு முரியை பைம்புதல்
வேங்கையு மொள்ளிணர் விரிந்தன
நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே. (அகம். 2)

*'விலங்கும் எய்து நாட' என்று அந்நாட்டினை இறப்பக் கூறி இந்நாடுடைமையிற் 'குறித்த இன்பம் நினக்கெவ னரிய' என வரைதல் வேண்டியவாறும், வேங்கை விரிந்ததனால் தினை யறுத்தலின் இற்செறிப்புக் கூறியவாறும், 'கங்குல் வருதலும் உரியை' எனப் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்வாள் போற் கூறி 'நெடுவெண்டிங்களு மூர்கொண் டன்றே' என்று அதனையும் மறுத்து வரைதற்கு நல்லநாளெனக் கூறி வரைவு கடாய வாறுங் காண்க.*

[1]காமங் கடவ வுள்ள மினைப்ப
யாம்வந்து காண்பதோர் பருவ மாயி
னோங்கித் தோன்று முயர்வரைக்
கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ. (ஐங்குறு. 237)

*இஃது ஊரை [2]இறப்பக்கூறியது.*

*'துணைபுணர்ந் தெழுதரும்' என்னும் நெய்தற் கலி (135) யுட்,*

[3]கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடிநெகிழ் தோளளாத் துறப்பாயான் மற்றுநின்
குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ;

ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை
நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின்
வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ;

திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை
யிகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்
புகழ்மைக்கட் பெரியதோர் புகராகிக் கிடவாதோ.

---

வெறுத்த - செறிந்த. சோர்பதன் - சோர்வடைந்தசமயம். ஒற்றி - அறிந்து. ஊர்தல் - நிறைதல், வளர்தல்.

1. கடவ - செலுத்த. இனைப்ப - வருத்த. யாங்கு - எவ்விடம்.

2. இறத்தல் - பிறரின் ஒவ்வாது இறத்தல் என்பர் நச்சினார்க்கினியர். இறத்தல் - மேற்படல்.

3. காரிகை - அழகு; பெண்டன்மையுமாம். நின்னைப்புணர்தலினால் அழகு தோற்றாளை என்க. அணிநலம் - அழகின்நலம். திருநலம் - திருவின் நலம்போலும் நலம். புகர் - குற்றம். நச்சினார்க்கினியர் கருத்து இவை.

என இவை ஒழுக்கமும் வாய்மையும் புகழும் [1]இறப்பக் கூறியன. குடிப்பிறந்தார்க்கு இம்மூன்றுஞ் சிறப்பக் கூறல் வேண்டும். ஏனைய வந்துழிக் காண்க.

இன்னும், 'அனை நிலைவகை' என்றதனானே தலைவி ஆற்றாமை கண்டு வரைவு கடாவவோவென்று தலைவியைக் கேட்டலும், சிறைப்புறமாகவுஞ் சிறைப்புறமன்றாகவுந் தலைவி யாற்றாமை கூறி வரைவு கடாவுவனவும், பிறவும் வேறுபட வரு வனவும் இதனால் அமைக்க.

[2]கழிபெருங் கிழமை கூறித் தோழி
யொழியா யாயினொன் றுரைக்கோ தெய்ய
கடவு ணெற்றிய கருங்கால் வேங்கை
தடவுநிலைப் பலவொடு தாழ்ந்த பாக்கத்துப்
பின்னீ ரோதி யிவடமர்க் குரைப்பதோர்
பெண்யாப் பாயினு மாக வொண்ணுத
லிலங்குவளை மென்றோட் கிழமை
விலங்குமலை நாடநீ வேண்டுதி யெனினே.

[4]நிலவு மிருளும் போல நெடுங்கடற்
கழியுங் கானலு மணந்தன்று
நுதலுந் தோளு மணிந்தன்றாற் பசப்பே

என வரும்.

ஐயச் செய்கை தாய்க்கு எதிர்மறுத்துப் பொய் என மாற்றி மெய்வழிக் கொடுப்பினும் - தலைவிக்குக் கூட்டம் உண்டு கொலென்று தாய் ஐயுற்றவழி அவ்வையப்பட்ட செய்கையைத் தாய்க்கு எதிரே நின்று மறுத்து அதனைப் பொய்யெனவே கருதும் படி அவள் மனத்தினின்றும் போக்கி மெய்யல்லன சில சொற் களை மெய்வழிப் படுத்து அறிவுகொள்ளக் கொடுப்பினும் :

---

1. இறத்தல் - மேற்படல்
2. கிழமை - உரிமை. உரைக்கோ - உரைப்பேனோ? இது வரைவுகடாவலோ என்று தலைவியைக் கேட்டல்.
3. கடவுள் நெற்றிய - தெய்வத்தை மேற்பக்கத்துடைய. தட - பெருமை. பாக்கம் - கடற்கரைப்பட்டினம். தமர் - சுற்றம். யாப்பு - இயைபு - தொடர்பு. கிழமை வேண்டுதி எனின் ஆக என்க. இச்செய்யுளில் யாதோ பிழையுளது இது இன்னநூல் என்று தெரியவில்லை.
4. நிலவுபோல மணலால் கழி விளங்குகிறது என்க. கானல் - கடற்கரைச் சோலை. மணந்தன்று - சேர்ந்திருந்தது. பசப்பு அணிந்தது என்க.

*உதாரணம் :*

[1]உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
பெயலான் றவிந்த தூங்கிரு ணடுநாண்
மின்னுநிமிர்ந் தன்ன கணங்குழை யிமைப்பப்
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
வரையிழி மயிலி னொல்குவ ளொதுங்கி
மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
வலையல் வாழிவேண் டன்னை நம் படப்பைச்
சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலு முண்டே யிவடான்
சுடரின்று தமியளாய்ப் பனிக்கும் வெருவர
மன்ற மராத்த கூகை குழறினும்
நெஞ்சழிந் தரணஞ் சேரு மதன்றலைப்
புலிக்கணத் தன்ன நாய்த் தொடர் விட்டு
முருகி னன்ன சீற்றத்துக் கடுந்திற
லெந்தையு மில்லா னாக
வஞ்சுவ ளல்லளோ விவளிது செயலே. (அகம். 158)

*இது [2]மிடையை ஏறி இழிந்தாளென்றது காரணமாக ஐயுற்ற தாயைக் கனவுமருட்டலும் உண்டென்றது முதலாகப் பொய் யென மாற்றி அணங்கும் வருமென மெய்வழிக் கொடுத்தது. இது சிறைப்புறமாகக் கூறி வரைவுகடாதலின் அதன்பின் வைத்தார்.*

[3]வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொய்து
மாந்தளிர் மேனி வியர்ப்பமற் – றாங்கெனைத்தும்
பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாஞ் சேயரிக்கண் டாம். (ஐந்: ஐம். 15)

*இதுவும் அது.*

---

1. உரும் - இடி. உரறு - முழங்கும். கருவி - தொகுதி. பெயல் - மழை. ஆன்று - நிறைந்து. அவிந்த - தணிந்த. இமைப்ப - ஒளிசெய்ய. மிடை -பரண். இவ்வாறு கலியுரையில் கூறப்பட்டுள்ளது. நனவின்வாயே போல் - நனவிற்கண்டது போல. மருட்டல் - மயக்கல். சுடர் - விளக்கு. பனிக்கும் - நடுங்குவாள். நெஞ்சு அழிந்து - அஞ்சி. அரணம்சேரும் - பாதுகாவலான இடத்தை அடைவாள். அதன்றலை - அதன்மேலும். தொடர் - சங்கிலி; கட்டு. நாய் தொடர்விட்டு என்றது காவலின் பொருட்டு நாயை இரவிற் கட்டிவிடாது ஒழித்துவிடும் வழக்கினை. இனி நாய் தொடர்தலைவிட்டு என என்பாருமுளர். பொருத்தம் நோக்கிக்கொள்க. பிற்கருத்திற்கு நாய் தொடாவிட்டு என்று பாடம்.
2. மிடை - பரண்.
3. இஃது ஐயுற்றுக் கண்சிவந்தமைக்குக் காரணங்கேட்ட தாய்க்குத் தோழி கூறியது. சேந்தன - சிவந்தன. சேயரி - செவ்வரி.

*அவன் விலங்குறினும் - தன்னானுந் தலைவியானும் இடையீடு படுதலின்றித் தலைவனாற் கூட்டத்திற்கு இடையூறு தோன்றினும்; அது வரைவிடைப் பொருட்பிரிவும், வேந்தற்குற்றுழியும், காவற் பிரிவுமாம். உதாரணம்:*

[1]செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைஇய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி. (கலி. 19)

[2]நுண்ஞாண் வளையிற் பரதவர் போத்தந்த
பன்மீ னுணங்கல் கவருந் துறைவனைக்
கண்ணினாற் காண வியையுங்கொ லென்றோழி
வண்ணந்தா வென்கந் தொடுத்து. (ஐந்: எழு. 66)

*களம்பெறக் காட்டினும் - காப்புமிகுதியானுங் காதன் மிகுதியானுந் தமர் வரைவு மறுத்ததினானுந் தலைவி ஆற்றாளாயவழி இஃதெற்றினானாயிற்றெனச் செவிலி [3]அறிவரைக் கூஉய் அவர் களத்தைப் பெறா நிற்கத் தலைவியை அவர்க்கு வெளிப்படக் காட்டினும்:*

*களமாவது:- கட்டுங் கழங்கும் இட்டுரைக்கும் இட்டும் வெறியாட்டிடமுமாம். உதாரணம்:*

[4]பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோ
னாண்டகை விறல்வே ளல்லனிவள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே. (ஐங்குறு. 250)

*இது கழங்குபார்த்துழிக் கூறியது.*

---

1. தீவிய - இனிய. யாங்குஅறிகோ - எப்படி அறிவேன். ஓ - அசை. அலர் - கௌவை (- பழிமொழி). பகல் - ஞாயிறு. சுரமுள்ளல் என்றது பொருட்குப் பிரியக் கருதலை.
2. ஞாண் - கயிறு. போத்தந்த - கொண்டுவந்த. மிகத்தந்த எனினுமாம். கவரும் - (புட்கள்) கவரும். வண்ணம் - நிறம்; அழகு.
3. அறிவர் - கட்டுங் கழங்கும் இட்டுரைப்போரும் வெறியாடுவோரும்.
4. கழங்கே - இது விளி அணங்கியோன் நங்கானங் கிழவோன். வேளல்லன் இது மெய்யே என்க. அணங்கல் - வருத்தல்.

[1]கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
யறியா வேலன் வெறியெனக் கூறு
மதுமனங் கொள்குவை யனையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே. (ஐங்குறு. 243)

*இது தாயறியாமை கூறி வெறிவிலக்கியது.*

[2]அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயி
னென்பயஞ் செய்யுமோ வேலற்கு வெறியே. (ஐங். 244)

*இது தலைவிக்குக் கூறியது.*

[3]நெய்த னறுமலர் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழு மார்ப
னருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே. (ஐங். 182)

*இது வேலற்குக் கூறியது.*

[4]கடவுட் கற்சுனை யடையிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தட்
குருதி யொண்பூ வுருகெழக் கட்டிப்
பெருவரை யடுக்கம் பொற்பக் குறமக
னருவி யின்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி யருநோய்
நின்னணங் கன்மை யறிந்து மண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறியிடை வந்தோய்
கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே. (நற்றிணை. 34)

*இது முருகற்குக் கூறியது.*

---

1. அனை - தாயே! கண்புலம்பியநோயை, வெறியெனக் கூறும் அதற்கு மனங்கொள்ளுகின்றாய். அவள் நோய் தலைவனைக் காணாமையாலே கண்துயிலாமையுற்று வருந்திய நோயேயன்றி முருகணங்கன்று; ஆதலால் வெறியாடலாற் பயனில்லை என்றாள் தோழி என்க.

2. நெடுந்தகையின்குன் றம்பாடிற் பயன்செய்யுமன்றிப் பாடானாயின் வேலற்கு வெறியாடலால் பயன் ஏன்? என்பது கருத்து.

3. விரைஇ - விரவி. விரவிக் கமழும் என்க. விரைஇப் புனைந்த எனினுமாம். அணங்கியோன் மார்பன் என்க.

4. அடையிறந்து - இலையைக் கடந்து. உரு - நிறம். அருவி இன்னியம் - அருவி யோசையாகிய இனிய வாய்ச்சியம். அண்ணாந்து - தலைநிமிர்ந்து. முருகே - முருகக்கடவுளே. நீ மன்றமடவை - நீ அறுதியாக மடமையுடையை.

[1]அன்னை தந்த தாகுவ தறிவென்
பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயி
னருவரை நாடன் பெயர்கொலோ வதுவே. (ஐங்குறு. 247)

*இது தமர்கேட்பக் கூறியது.*

*பிறன்வரைவு ஆயினும் - நொதுமலர் வரையக் கருதிய வழித் தலைவி சுற்றத்தார் அவ்வரைவினை ஆராயினும்: தோழி தலைவற்குந் தலைவிக்குங் கூறும். உதாரணம்:*

[2]கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென
நெடுந்தேர் பண்ணி வரலா னாதே
குன்றத் தன்ன குவவுமண னீந்தி
வந்தனர் பெயர்கொ றாமே யல்க
லிளையரு முதியருங் கிளையுடன் குழீஇக்
கோட்சுறா வெறிந்தெனச் சுருங்கிய நாட்பின்
முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்
வலையுந் தூண்டிலும் பற்றிப் பெருங்காற்
றிரையெழு பௌவ முன்னிய
கொலைவெஞ் சிறாஅர் பாற்பட் டனளே (நற்றிணை. 207)

*இது, நொதுமலர் வரைவு மலிந்தமை தோழி சிறைப்புற மாகக் கூறியது. 'பாற்பட்டனள்' எனத் தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாள்.*

[3]இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கின்
கண்ணகன் றூமணி பெறூஉ நாட
னறிவுகாழ்க் கொள்ளு மளவைச் செறிதொடி
யெம்மில் வருகுவை நீ யெனப்
பொம்ம லோதி நீவி யோனே. (குறுந். 379)

*இது தாய்கேட்பத் தோழி தலைவிக்குக் கூறியது.*

---

1. அன்னை தந்தது ஆகுவது அறிவென் - தாய் வேலனை வெறியாடத் தந்ததற்கு ஆகுங்காரணத்தை அறிவேன். மொழியுமாயின் - (வேலன்) சொல்லுமாயின்.

2. கண்டல் - தாழை; ஒரு மரமுமாம் படப்பை - கொல்லை. முண்டகம் - முள்ளி. குறியிறைக் குரம்பை - குறுகிய கூரையையுடைய சிறுகுடில். வரல் ஆனாது வருதல் நிறுத்தப்படுவதன்று - எறிந்தென - (வலையைச்) கிழித்ததாக. சுருங் கியநாட்பின் - குருங்கிய நரம்புகளைக்கொண்டு. முடி - வலையை முடிகின்ற. கிழித்தென முடி என இயைக்க. கால் - காற்று. பற்றி முன்னிய சிறாஅர்ப்பாற் பட்டனள் என்க. படுவள் என்பது பட்டனள் எனத் துணிவுபற்றி இறந்த காலமாயிற்று. வேற்றுவரைவிற் படுத்திற்படுவள் என எச்சச்சொல் வருவிக்க.

3. நீதியோனாகிய நாடன் இன்று யாண்டையனோ? என இயைக்க. காழ்க் கொளும் அளவை - முதிரும்பருவத்தில். கிழங்கொடு தூமணிபெறும் என்பது நாட்டை விசேடித்து நின்றது.

*அவன் வரைவு மறுப்பினும் - தலைவி சுற்றத்தார் தலைவற்கு வரைவு மறுத்தவழியும், தோழி அறத்தொடு நிலையாற் கூறும். உதாரணம்:*

[1]அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி
யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலுழு மன்னாய் (ஐங்குறு 220)

[2]குன்றக் குறவன் காதன் மடமக
ளணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிற்
கொடுத்தனெ மாயினோ நன்றே
யின்னு மானாது நன்னுத றுயரே (ஐங்குறு. 258)

*என வரும். தலைவிக்குக் கூறுவனவுங் கொள்க.*

[3]அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்பவ ரிருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்றுநன் றென்னு மாக்களோ
டின்றுபெரி தென்னு மாங்கண தவையே. (குறுந். 146)

*இது, தமர் வரைவு மறுப்பரோவெனக் கவன்றாட்குத் தோழி கூறியது.*

[4]நுண்ணேர் புருவத்த கண்ணு மாடு
மயிர்வார் முன்கை வளையுஞ் செற்றுங்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
யெழுதரு மழையிற் குழுமும்
பெருங்க னாடன் வருங்கொ லன்னாய். ஐங்குறு. (218)

*இது, தமர் வரைவு மறுத்துழி ஆற்றாத தலைவிக்குத் தோழி[5] தீயகுறி நீங்கி நற்குறி தனக்குச் செய்யக்கண்டு கடிதின் வரைவ ரெனக் கூறியது.*

---

1. ஆடுதல் - அசைதல். அடுக்கம் - தாழ்வரை. கலுழ்தல் - அழுதல்.
2. துயர் இன்னும் ஆனாது என இயைக்க.
3. பிரிந்தோர்ப்புணர்ப்பவர் - பிரிந்தோரைக் கூட்டிவைப்பவர். கொல் ஓ - அசைகள். வெண்டலை - நரைத்ததலை. சிதவல் - துகில்; பழந்துணி. அவை - நம்மைச்சார்ந்த குழுவிலுள்ளார். மாக்கள் - தலைவன் மணம்பேசவிட்டோர். கையருந் தலையரும் சிதவலருமாகிய மாக்கள் என இயைக்க.
4. ஆடும் - இடமாடும். செற்றும் - செறியும் ( - நெருங்கும்). களிறுகோட பிழைத்த - களிற்றைக் கொள்ளுதலிற் பிழைத்த. கதம் - கோபம். அன்னாய் என்றது தலைவியை. குழுமும் - முழங்கும்.
5. தீக்குறி - தீநிமித்தம். நற்குறி - நன்னிமித்தம். குழுமும் - முழங்கும். கடிதின் வரைய வருவர்போலும்.

*முன்னிலை அறன் எனப்படுதல் என்றிருவகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்: அறனெனப்படுதல் இருவகைப் புரைதீர் முன்னிலையென்று கிளவி தாயிடைப் புகுப்பினும் - அறனென்று சொல்லப்படுந்தன்மை இருவர் கண்ணுங் குற்றந் தீர்ந்த எதிர்ப்பாடென்று செவிலியிடத்தே கூறி அக்கிளவியை நற்றாயிடத்துஞ் செலுத்தினும்:*

*என்றது, புனறருபுணர்ச்சியும், பூத்தருபுணர்ச்சியும், களிறு தருபுணர்ச்சியும் போல்வன செவிலிக்குக் கூறி அவள் நற்றாய்க் குக் கூறுதலை நிகழ்த்துவித்தலாம். எனவே, அவள் தந்தைக்குந் தன்னையர்க்கும் உணர்த்துதலும் அதனை மீண்டு வந்து தலை விக்கு உணர்த்துதலும் பெற்றாம். அவ்வறத்தொடு நிலை எழு வகைய (207) எனப் பொருளியலுட் கூறுப. உதாரணம்:*

காமர் கடும்புனல் கலந்தெம்மொ டாடுவாள்

*என்னுங் குறிஞ்சிக்கலி (39)யுள்,*

தெருமந்து சாய்த்தார் தலை

*எனப் புனறரு புணர்ச்சியால் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பச் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்ப அவள் [1]ஏனை யோர்க்கு அறத்தொடு நின்றவாறு காண்க.*

[2]வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பி னல்லது – கோடா
வெழிலு முலையு மிரண்டற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து. (திணை: நூற் 15)

[3]சான்றோர் வருந்திய வருத்தமு நுமது
வான்றோய் வன்ன குடிமையு நோக்கித்
திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள்
வருமுலை யாகம் வழங்கினோ நன்றே
யஃதான், றடைபொருள் கருதுவி ராயிற் குடையொடு
கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் வஞ்சியோ
டுள்ளி விழவி னுறந்தையுஞ் சிறிதே.

*இவை நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நின்றன.*

---

1. ஏனையோர் என்றது தந்தை தன்னையரை.
2. கோடாது - மனங் கோடாது. இச்செய்யுட் பொருள் முன்னுரைக்கப்பட்டது.
3. சான்றோர் - மணம்பேசும் சான்றோர். குன்றம் கொண்டு - குன்றைவிலை யாகப் பெற்று. கழுமலம் - சீர்காழி. செம்பியன் - சோழன். உறந்தை - உறை யூர். வஞ்சி - கருவூர்.

[1]அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை
தானு மலைந்தா னெமக்குந் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
யென்ன மரங்கொலவர் சார லவ்வே. (ஐங்குறு. 201)

*இது தழைதந்தமை கூறிற்று.*

[2]சுள்ளி சுணைநீலஞ் சோபா லிகைசெயலை
யள்ளி யளகத்தின் மேலாய்ந்து – தெள்ளி
யிதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை
யுதணாற் கடிந்தா னுளன். (திணை: நூற் 2)

*இது களிற்றிடையுதவி கூறிற்று.*

[3]வில்லார் விழவினும் வேலாழி சூழுலகி
னல்லார் விழவகத்து நாங்காணே – நல்லா
யுவர்க்கத் தெறிதிரைச் சேர்ப்பனோ டொப்பார்
சுவர்க்கத் துளராயிற் சூழ். (திணை: நூற். 62)

*இது, செவிலி தலைவியைக் கோலஞ் செய்து இவள் நலத்திற்கு ஒப்பான் ஒருவனைப் பெற வேண்டு மென்றாட்குத் தோழி கூறியது.*

[4]பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமனை யீனுந்
தண்ணந் துறைவ னல்கி
னொண்ணுத லரிவை பாலா ரும்மே. (ஐங்குறு: 168)

*இது, நொதுமலர் வரைவுழி ஆற்றாது பசியட நின்றுழி இதற்குக் காரணமென்னென்ற செவிலிக்குத் தோழி கூறியது.*

[5]எந்தையும் யாயு முணரக் காட்டி
யொளித்த செய்தியின் வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் றலைவந் திரப்ப
நன்றுபுரி கொள்கையி னொன்றோ வின்றே
முடங்க லிறைய தூங்கணங் குரீஇ
நீடிரும் பெண்ணை தொடுத்த
கூடினு மயங்கிய மைய லூரே. (குறுந். 374)

*இஃது அறத்தொடு நின்றமை தலைவிக்குக் கூறியது.*

---

1. என்னை - என்தலைவன் சாரல் - சாரலிடத்திலுள்ளன.
2. இதுவு முன்வந்தது. இதண் - பரண். உதண் - மொட்டம்பு
3. வில்லார் - வில்வீரர். நல்லார் - பெண்கள். இருவிழவினும் எல்லாமாந்தரும் திரள்வராதலின், அவ்விரண்டினுங் கண்டறியோ மென்றாள். உவர்க்கம் - கடற்கரை. வேலாழி - கடல்.
4. சிறுவெண்காக்கை அம்பியினகமாகிய மனையிலீனும் என்க நல்கின் ஆரும் என இயைக்க. அம்பி - தோணி.
5. ஒளித்தசெய்தி - மறைத்து வைத்திருந்த களவெழுக்கம். நன்றுபுரிகொள்கை யின் - நமர் நன்மைசெய்யுங் கொள்கையினால். ஊர் ஒன்றாகின்று என்க.

*வரைவு உடன்பட்டோற் கடாவல் வேண்டினும் - தலைவி தமர் வரைவுடன்படத் தானும் வரைவுன்பட்ட தலைவன் வரை விடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி இனி நீட்டிக்கற்பாலை யல்லையெனக் கடுஞ்சொற்கூறி வரைவு கடாவல் வேண்டிய இடத்தும்: உதாரணம்:*

[1]மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்
கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற்
சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த
நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்:

ஆற்றுத லென்பதொன் றலர்ந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுத
லன்பெனப் படுவது தன்கிளை செறாமை
யறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்;

ஆங்கதை யறிந்தனி ராயினென் றோழி
நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைத
னின்றலை வருந்தியா டுயரஞ்
சென்றனை களைமோ பூண்கநின் றேரே. (கலி. 133)

*இது முற்காலத்து வரைவுகடாவுமாறு போலன்றி வரைவு கடாயது.*

---

கூட்டினும் என்றது கூடினும் என எதுகை நோக்கி நின்றது. கூடு மயங்கி யிருத்தல்போல மயங்கி என்றபடி. கூட்டின்பின்னல் மயக்கம்பற்றிக் கூறி னாரோ? உள்ளிடம் இருளாயிருத்தல்பற்றிக் கூறினாரோ? என்பது ஆராயத் தக்கது. உள்ளிருட்சிபற்றிக் கூறினாரென்று கோடல் பொருத்தமாகக் காணப் படுகின்றது. என்னை? மின்மினியை யாதல் மணிகளையாதல் இருளோட்டக் குரீஇ வைத்தல் இயல்பென்று, காட்டிலெளிதுற்ற கடவுண மணியைக் கொணர்ந்த - கூட்டிலிருளோட்டக் கருகுய்த்த வாறன்றோ" என்றும் மெய்ச் சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்டகுருகார் கச்சோத மென்று ... மாண்டகதைபோ" லென்றும் கந்தபுராணத்துக் கூறப்படலின்.

1. முண்டகம் - முள்ளி. தில்லை - ஒருமரம். எக்கர் - குவியல். சிறப்பினோன் என்றது - தக்கணாமூர்த்தியை. மரம் - ஆலமரம். கரகம் - குண்டிகை. புள் - குருகு. ஆற்றுதல் - இல்லறநடத்தல். அலர்ந்தவர் - மிடியுற்றோர் (வறியார்). பாடு - உலகவொழுக்கம். முறை - அரசநீதி. கொள்கலம் - அதனைக்கொண்ட பாத்திரம். வரைதல் - கவிழ்த்துவிடுதல் (நீக்கிவிடுதல்).

[1]யாரை யெலுவ யாரே நீ யெமக்
கியாரையு மல்லை நொதும லாளனை
யனைத்தாற் கொண்கவெம் மிடையே நினைப்பிற்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு மமயத்து முரசதிர்ந் தன்ன
வோங்கற் புணரி பாய்ந்தாடு மகளி
ரணிந்திடு பல்பூ மரீஇ யார்ந்த
வாபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மரந்தை யன்னவெம்
வேட்டனை யல்லையா னலந்தந்து சென்மே. (நற்றிணை. 395)

*இது நலந்தொலைவுரைத்து வரைவு கடாயது.*

*ஆங்கு அதன் தன்மையின் வன்புறை உளப்பட - அங்ஙனங் கடாவியவழி அவ்வரைந்து கோடன் மெய்யாயினமையின் வதுவை முடியுமாறாவும் ஆற்றுதற்கு வற்புறுத்துக் கூறுதல் உளப்பட:*

*தன்மை - மெய்ம்மை எனவே, முன் பொய்ம்மையான் வற்புறுத்தலும் பெற்றாம். உதாரணம்:*

[2]நெய்கனி குறும்பூழ் காயமாக
வார்பதம் பெறுக தோழி யத்தை
பெருங்க னாடன் வரைந்தென வவனெதிர்
நன்றோ மகனே யென்றனெ
னன்றே போலு மென்றுரைத் தோனே. (குறுந். 389)

*இது, தலைவன் குற்றேவன் மகனான் வரைவுமலிந்த தோழி தலைவிக்குரைத்தது.*

[3]கூன்முண் முண்டகக் கூனி மாமலர்
நூலறு முத்திற் காலொடு பாறித்
துறைதொறும் வரிக்குந் தூமணற் சேர்ப்பனை

1. எலுவ! - நண்பனே! யார் - எத்தன்மையை. யாரையுமல்லை - நண்புடை யாரையும் போல்வாயல்லை. நொதுமலாளனை - அயலானாயினை. நினைப் பின் - ஆராயின். அன்ன ஒலியையுடைய புணரி என்க. ஓங்கற்புணரி - உயர்ந்த வருதலையுடையதாகிய திரையையுடையதாய கடல் புணரி ஆகுபெயர். ஆர்ந்த ஆ - நிறையத்தின்ற பசு. புலம் - தான் உறையும் புலம். பேரிசைமாலை (பசுவின்) பெரிய ஒலியையுடைய மாலைப் பொழுது. நலம்தந்துசெல் - நின்னால் இழந்த நலத்தைத் தந்து அப்பாற்செல்.

2. குறும்பூழ் - காடை; என்றது காடை இறைச்சியை. காயமாக - சம்பாரத்தோடு கூடிய கறியாக. ஆர்பதம் - உண்ணும் உணவு. மகன் என்றது குற்றேவன் மகனை. நன்று - நன்மை. வரைந்தென - வரைவுக்குரிய முயற்சிகளைச் செய்தானாக.

3. கூன்முள் - வளைந்தமுள். முண்டகம் - முள்ளி. காலொடுபாறி - காற்றாற் சிதறி வீழ்ந்து வரித்தல் - கோலஞ் செய்தல். வெய்யள் - விருப்பமுடையள்.

யானுங் காதலென் யாயுநனி வெய்ய
ளெந்தையுங் கொடீஇயர் வேண்டு
மம்ப லூரு மவனொடு மொழிமே (குறுந். 51)

எனவும் வரும்.

[1]கொடிச்சி காக்கு மடுக்கற் பைந்தினை
முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
யங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
நிரையணற் கொடுங்கவு ணிறைய முக்கி
வான் பெய னனைந்த புறத்த நோன்பியர்
தையூ ணிருக்கையிற் றோன்று நாடன்
வந்தனன் வாழி தோழி யுலகங்
கயங்க ணற்ற பைதறு காலைப்
பீளொடு திரங்கிய நெல்லிற்கு
கள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே. (நற்றிணை. 22)

*இதனுள், தினை விளைகாலம் வதுவைக் காலமாயினும் [2]வம்பமாரி இடையிடுதலான அன்றுயான் கூறிய வரைவு பொய்த்தன ரேனும் இன்று மெய்யாகவே வந்தனரென்றாள்.*

[3]உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுத
லரவுவாள் வாய முள்ளிலைத் தாழை
பொன்னேர் தாதிற் புன்னையொடு கமழும்
பல்பூங் கானற் பகற்குறி வந்துநம்
மெய்கவின் சிதையப் பெயர்ந்தன னாயினுங்
குன்றிற் றோன்றுங் குவவுமண லேறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
தண்டா ரகலம் வண்டிமிர் பூதப்
படுமணிக் கலிமாக் கடைஇ
நெடுநீர்ப் சேர்ப்பன் வரூஉ மாறே. (நற்றிணை. 235)

*இது, தலைவன் வரைவோடு வருகின்றமை காண்கம்வம்மோ வென்றது.*

---

கொடீஇயர்வேண்டும் - கொடுக்கும்படி விரும்புவான் அவனொடுமொழியும் - அவனோடு நின்னைச் சேர்த்துச் சொல்லும்.

1. விரல் - விரலால். குரல் - கதிர். கல்லா - பாயுந்தொழில் அன்றிப் பிறிதுகல்லாத. ஞெமிடிக்கொண்டு - கயக்கித்தூய்மைசெய்து கொண்டு. அணல் - மோவாய். கவுள் - கதுப்பு. முக்கி - அமுக்கி (உண்டு). தையூண் இருக்கையில் - (நோன்பிருந்தோர்) தைப்பிறப்பிலன்று நீராடி நோன்பிருந்து உண்ணுதல்போல். கயம் - குளம். பைதறுகாலை - ஈரமற்றகாலத்து. பீள் - சூல். பொழிந்தாங்கு வந்தனன் என இயைக்க.

2. வம்பமாரி - காலமின்றிப் பெய்த மழை.

3. பிணர் - சருச்சரை. தடவுமுதல் - வளைந்த அடி. அரவுவாள் - அராவுகின்ற வாளரம். கடைஇ - கடவி (செலுத்தி) வருமாறு ஏறிக் கண்டனம் வருகம் செல் என இயைக்க.

பாங்குறவந்த நாலெட்டும் - பாங்கியர் பலருள்ளும் பாங் காந் தன்மை சிறப்பக் கூறிய முப்பத்திரண்டும்: "நாலெட்டும்" என உம்மை விரிக்க.

வகையும் - இக்கூற்றுக்களிலே வேறுபட வருவனவும், தாங்கருஞ் சிறப்பின் தோழிமேன - பொறுத்தற்கரிய சிறப்பினை யுடைய தோழியிடத்தன என்றவாறு.

எனவே, ஒன்றிய தோழிக்கன்றி ஏனையோர்க்கு இக்கூற்று இன்றென்றான். [1]தாய்த்தாய்க் கொண்டுவருஞ் சிறப்பும், இருவர் துன்பமுந் தான் உற்றாளாகக் கருதுஞ்சிறப்பும் உடைமையின் 'தாங்கருஞ் சிறப்பு' என்றான். உரைத்துழிக் கூட்டத்தோடே அகற்சியும் என்றலும் ஊட்டலும் உரைத்தலும் அச்சுறுத்தலும் எஞ்சாமற் கிளந்த இருநான்கு கிளவியும் பாங்குற வந்த என்க. நாட்டத்தின்கண்ணும் எஞ்சாமற் கிளந்த என்க; என்றது; ஆராய்ச் சியுடனே இவ்வெட்டும் கூறுமென்றான். பெயர்ப்பினும் ஒழிப் பினும் உரைத்துழிக் கூட்டத்தோடு எஞ்சாமற் கிளந்த என்க. ஏனைப் பொருள்கள் ஏழனுருபும் வினையெச்சமுமாய் நின்றவற் றைப் பாங்குற வந்த என்பதனோடு முடித்து, அப்பெயரெச்சத் தினை நாலெட்டென்னும் பெயரோடு முடித்து, அதனைத் தோழி மேனவென முடிக்க.

இனி 'வகை'யாற் கொள்வன வருமாறு:-

**[2]அன்னை வாழிவேண் டன்னை நெய்த**
**னீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவ**
**னெந்தோ டுறந்த காலை யெவன்கொல்**
**பன்னாள் வருமவ னளித்த போழ்தே. (ஐங்குறு. 109)**

இஃது, அறத்தொடு நின்றபின் வரைவான் பிரிந்து நீட்டித் துழி ஐயுற்ற செவிலி அவன் நும்மைத் துறந்தான் போலும் நுங் கட்கு அவன் கூறிய திறம் யாதென்றாட்குத் தோழி கூறியது.

---

1. தாய்த்தாய்க் கொண்டுவரலென்றது, தாய் முறையாகத் தோழித்தன்மை வந்ததென்றபடி. நற்றாய்க்குத் தாய் தோழி; தாயின் தாய் நற்றாயின் தாய்க்குத் தோழி என்ற இம்முறையாக மரபாக வந்தது என்பது கருத்து.

2. தூம்பு - மதகு. நெய்தற்பூக்கெழு துறைவன் எனக் கூட்டுக. அறித்தபோழ்து - பிரியேனென்று எமக்கருள் செய்தகாலத்து அறனல்ல செய்யேனெனச் சொல்லியிருக்க (நுங்களைத் துறந்தானென்பையாயின்) துறந்தகாலை (துறந்தபொழுது) பன்னாள்வரும் எவன் கொல் என இயைக்க.

[1]அன்னை வாழிவேண் டன்னை கழனிய
முண்டக மலருந் தண்கடற் சேர்ப்ப
னெந்தோ டுறந்தன னாயி
னெவன் கொன் மற்றவ னயந்த தோளே. (ஐங்குறு. 108)

*இஃது அறத்தொடு நின்றபின் வரைவுநீட மற்றொரு குல மகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குக் கூறியது.*

[2]அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவ
னிவட்கமைந் தனனாற் றானே
தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே. (ஐங்குறு. 103)

*இது, வதுவை நிகழா நின்றுழித் தாய்க்குக் காட்டித் தோழி கூறியது.*

[3]கன்னவி றோளான் கடிநாள் விலக்குதற்
கென்னை பொருணினைந்தா ரேந்திழாய் – பின்ன
ரமரேற்றுக் கொள்ளுமென் றஞ்சினே னஞ்சார்
நமரேற்றுக் கொள்ளாத ஞான்று.

*இது, சுற்றத்தார் பொருள்வேண்டி மறுத்தாரென்றது.*

[4]நொதும லாளர் கொள்ளா ரிவையே
யெம்மொடு வந்து கடலாடு மகளிரு
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையா
ருடலகங் கொள்வோ ரின்மையிற்
றொடலைக் குற்ற சிலபூ வினரே. (ஐங்குறு. 187)

*இது கையுறை மறுத்தது.*

---

1. அவன் நயந்ததோள் மற்று எவன்கொல் என மாற்றி இயைக்க. எவன்கொல் - வேறு யாதுகொல் (இல்லை என்றபடி)

2. துறைவன் தான் இவட்கு அமைந்தனன்; இவள் மாமைக்கவின் அவற்கு அமைந்தது; அதனைக் காண் என்றபடி. அமைதல் - பொருந்துதல்; ஒத்தல்.

3. கடிநாள் - மணநாள். என்னை - என்ன காரணமோ? எமர் பொருணினைந் தார். எமர் அஞ்சார் வரைவைஏற்றுக்கொள்ளாத (ஞான்று) பொழுது, அமர் ஏற்றுக்கொள்ளுமென்று அஞ்சினேன் என மாற்றுக. அமர் - போர். ஏற்றுக் கொள்ளும் - தலைவனேற்றுக் கொள்ளுவான்.

4. நொதுமலாளர் - அயலார்; என்றது. நீயல்லாத ஏனையோர் என்றபடி. இவை - இத்தழை. பகைத்தழை - ஒன்றுக்கொன்று மாறான பல பூவாலும் தளிராலும் தொடுத்த தழை. பாவை புனையார் - பாவையையும் புனையார். புனைதல் - கோலஞ்செய்தல் உடலகம் கொள்வோரின்மையின் என்பதற்கு அணிபோரின்மையின் என்று பொருள் கொள்ளலாம். தொடலை - மாலை. மாலைதொடுப்போரும் சில பூக்கொண்டொழிவர் என்றபடி.

[1]அம்ம வாழி தோழி நம்மலை
வரையா மிழியக் கோடி னீடக்
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியுந்
தண்பனி வடந்தை யச்சிர
முந்துவந் தனர்நங் காத லோரே. (ஐங்குறு. 223)

*இது, வரைவிடைப் பிரிந்தோன் குறித்த பருவத்திற்கு முன் வருகின்றமை யறிந்த தோழி தலைவிக்குக் கூறியது.* *(23)*

**(செவிலி கூற்று நிகழுமாறு கூறல்)**

115. களவல ராயினுங் காமமெய்ப் படுப்பினு
மளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரு
மொட்டிய திறத்தாற் செய்திக் கண்ணு
மாடிய சென்றுழி யழிவுதலை வரினுங்
காதல் கைமிகக் கனவி னரற்றலுந்
தோழியை வினவலுந் தெய்வம் வாழ்த்தலும்
போக்குட னறிந்தபிற் றோழியொடு கெழீஇக்
கற்பி னாக்கத்து நிற்றற் கண்ணும்
பிரிவி னெச்சத்து மகணெஞ்சு வலிப்பினு
மிருபாற் குடிப்பொரு ளியல்பின் கண்ணு
மின்ன வகையிற் பதின்மூன்று கிளவியோ
டன்னவை பிறவுஞ் செவிலி மேன.

*இது, செவிலி கூற்று நிகழுமாறு கூறுகின்றது; அக்கூற்றுச் செவிலி தானே கூறப்படுவனவும், தலைவியுந் தோழியுங் [2]கொண்டு கூற்றாகக் கூறப்படுவனவுமென இருவகையவாம்: இக் கூறப் பட்ட பதின்மூன்று கிளவியும் அவைபோல்வன பிறவுஞ் செவிலி தானே கூறப்படுவனவுந் தலைவியுந் தோழியும் அவள் கூற்றாய்க் கொண்டெடுத்து மொழியப்படுவனவுமாய்ச் செவிலிக்குரியவா மென்றவாறு. 'இன்னவகை' என்றார் தன் கூற்றுங் கொண்டு கூற்றுமாய் நிகழுமென்றற்கு.*

---

1. நம்மலை வரை ஆம் இழிய - நம்மலையின் எல்லையை விட்டு நீர் இறங்க; என்றது அருவி பெருக என்றபடி. முன்பனியில் அருவி வெள்ளமாகப் பெருகாதாகலின் இழிய என்றார். ஆம் - நீர். யாம் எனப் பிரித்தல் பொருந்தாது. வடந்தை - வாடை. அச்சிரம் - முன்பனிக் காலம்.

2. கொண்டு கூற்றாவது: ஒருவர் சொன்னதைத் தாம் பின் எடுத்துக்கூறல்.

*இ — ள்: களவு அலர் ஆயினும் - களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாய் [1]அலர் தூற்றப்படினும்: உதாரணம் :*

[2]பாவடி யுரல பகுவாய் வள்ளை
யேதின் மாக்க ணுவறலு நுவல்ப
வழிவ தெவன் கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னவென்
மெல்லியற் குறுமகள் பாடிநள் குறினே. (குறுந். 89)

*இது செவிலி தானே கூறியது.*

[3]அம்ம வாழி தோழி நென்ன
லோங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற்
கூரார் பெண்டென மொழிய வென்னை
யதுகேட் டன்னா யென்றன ளன்னை
பைபைய வெம்மை யென்றனென்யானே. (ஐங். 113)

*இதனுள், பெண்டென்றதனைக் கேட்டு அன்னாயென்றனள் அன்னையென அலர் தூற்றினமை கண்டு செவிலி கூறிய கூற்றினைத் தலைவி கொண்டு கூறியவாறு காண்க.*

*காமம் மெய்ப்படுப்பினும் - தலைவி கரந்தொழுகுங் காமந்தானே அக்களவினை நன்றாயுந் தீதாயும் மெய்க்கண் வெளிப்படுப்பினும்: உதாரணம்:*

[4]மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு. (குறள். 1273)

*இது, காமத்தால் திகழ்ந்த பொலிவினைச் செவிலிதானே கூறியது.*

*அளவு மிகத் தோன்றினும் - கண்ணுந் தோளும் முலையும் பிறவும் புணர்ச்சியாற் [5]கதிர்த்துக் காரிகை நீரவாய் அவளிடத்து அளவை மிகக் காட்டினும் :*

---

1. அலர் - பழிமொழி
2. பாஅடி - பரந்தஅடி. உரலபகுவாய் - உரலினிடத்துள்ள விரிந்த வாய். வள்ளை - வள்ளைப்பாட்டு நுவறலும் நுவலப - குறைகூறலுஞ் செய்ப. வள்ளைபாடி நள்குறின் நுவறலும் நுவல்ப என மாற்றிக் கூட்டுக. இது நற்றிணையில் தோழி கூற்று.
3. நென்னல் - நேற்று. என்னை ஊரார் துணைவற்குப் பெண்டென மொழிய அதுகேட்டு என்னை அன்னாய் என்றாள். யான் அது வெம்மை என்றேன் என்பது கருத்து. வெம்மை - விருப்பம்.
4. மணி - பளிங்குமணி. ஆணி - புணர்ச்சியாலுண்டான அழகு.
5. கதிர்த்தல் - விளக்கமுறல்; தோற்றமுறல். காரிகை - அழகு; பெண்டன்மையுமாம். அளவுமிகுதல் - அளவிற்கு மேற்படல்.

*உதாரணம்:*

[1]கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. (குறள். 1272)

*இது, கதிர்ப்புக்கண்டு செவிலி தானே கூறியது.*

[2]பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
வாகத் தரும்பிய சுணங்கும் வம்புடைக்
கண்ணுருத் தெழுதரு முலையு நோக்கி
யெல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்
பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள்
.............. .......... ............ .............
தாரார் மார்பநீ தணந்த ஞான்றே. (அகம். 150)

*இது, தோழி கொண்டு கூறியது.*

*தலைப்பெய்து காணினும் - இருவர்க்குங் கூட்டம் நிகழ்த லானே தலைவனை இவ்விடத்தே வரக்காணினுந் தலைவியைப் புறத்துப் போகக் காணினும்:*

*[3]பெய்தென்பது காரணகாரியப் பொருட்டாய்ப் பிறவினை கொண்டது. உதாரணம்:*

[4]இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்கு
லருவி தந்த வணங்குடை நெடுங்கோட்
டஞ்சுவரு விடர்முகை யாரிரு ளகற்றிய
மின்னொளி ரெஃகஞ் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து பணியலை முனியா
னீரிழி மருங்கி னாரிடத் தமன்ற
குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
யசையா நாற்ற மசைவளி பகரத்
துறுக னண்ணிய கறியிவர் படப்பைக்

---

1. காரிகை - அழகு. நீர்மை - மடைமை.

2. சுணங்கு - தேமல். வம்பு - கச்சு, எல் - ஒளி கதிர்ப்பு. கடி - காவல்.

3. தலைப்பெய்து என்பது காரணகாரியப் பொருட்டென்றது - தலைப்பெய்து என்பது தலைப்பெய்தலால் எனக் காரணப்பொருளில் நிற்ப, காணல் காரியமாய் வந்தது என்றபடி. காணல் செவிலி வினையாதலால் பிறவினை என்றார்.

4. புலவு - புலான்மணம். அணங்கு - தெய்வம். புகர் - புள்ளி. விடர் - பிளப்பு. முகை - குகை. அணங்கு - தெய்வம். விளக்கவந்து பணியலை முனியானாய்ப் புகுதரும் என முடிக்க. பணியல் - வழிபாடு. அமன்ற - செறிந்த. குளவி - காட்டு மல்லிகை. கண்ணி - மாலை. அசையா - நீங்காத. நாற்றம் - நறுமணம். அசைவளி - அசைகின்ற காற்று. பகர - மணப்பிக்க. கறி - மிளகு.

குறியிறைக் குரம்பைநம் மனை வயிற் புகுதரு
மெய்ம்மலி யுவகைய னந்நிலை கண்டு
முருகென வுணர்ந்து முகமன் கூறி
யுருவச் செந்தினை நீரொடு தூஉய்
நெடுவேட் பரவு மன்னை யன்னோ
வென்னா வதுகொ றானே பொன்னென
மலர்ந்த வேங்கை யலங்குசினை பொலிய
மணிநிற மஞ்ஞை யகவு
மணிமலை நாடனோ டமைந்தநந் தொடர்பே.

*இம் மணிமிடை பவளத்துத் (அகம் - 272) தலைவனைச் செவிலி கண்டு [1]முருகெனப் பராவினமை தோழி கொண்டு கூறினாள்.*

*'உருமுரறு கருவிய' (158) என்னு மகப்பாட்டினுள்,*

[2]மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
வலையல் வாழிவேண் டன்னை

*என்றது, தலைவி புறத்துப் போகக் கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டு கூறினாள். தானே கூறுவன வந்துழி காண்க.*

*கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும் ஒட்டிய திறத் தாற் செய்திக்கண்ணும் - கட்டுவிச்சியும் வேலனுந் தாம் பார்த்த கட்டினானுங் கழங்கினானுந் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக் கால் இம்மையில் தீராதென்று கூறுதலின் அவ்விருவருந் தம்மி னொத்த திறம்பற்றியதனையே செய்யுஞ் செய்தியிடத்தும்:*

*'திறம்' என்றதனான் அவர் வேறு வேறாகவுங் கூறப்படும். உதாரணம்:*

[3]பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்
கழங்கினா னறிகுவ தென்றா
னன்றா லம்ம நின்றவிவ ணலனே. (ஐங்குறு 248)

*இது வேலன் கழங்குபார்த்தமை கூறிற்று.*

---

குரம்பை - சிறுகுடில். நெடுவேள் - முருகக்கடவுள். தொடர்பு என்னாகுங் கொல் என இயைக்க.

1. முருகு - முருகக்கடவுள்.
2. மிடை - பரண். இது கலித்தொகையுரையுட் கண்டது. மலையினொடுக்க மான வழியாயு மிருக்கலாம்.
3. கவின் - அழகு. மலைவான் கொண்ட - வெறியாடலை ஏறிட்டுக்கொண்ட. சினைஇய - (அதனால்) கோபமுற்ற. மலைவான் கோட்ட என்றும் பாடம். 'கோட்டம்' என்றிருத்தல்வேண்டும். கோட்டம் - கோயில். இது சிறந்த பாடம். இப்பாடத்திற்கு முற்றம் கோயில் முற்றமாம்.

[1]அறியா மையின் வெறியென மயங்கி
யன்னையு மருந்துய ருழந்தன ளதனா
லெய்யாது விடுதலோ கொடிதே நிரையித
ழாய்மல ருண்கண் பசப்பச்
சேய்மலை நாடன் செய்த நோயே. (ஐங்குறு. 242)

*இது வெறியென அன்னை மயங்கினமை கூறிற்று.*

*'அணங்குடை நெடுவரை' என்னும் (22) அகப்பாட்டினுட் கட்டுக்கண்டு வெறியெடுத்தமை கூறிற்று.*

*'பனிவரை நிவந்த' என்னும் (98) அகப்பாட்டினுட் 'பிரப் புளர்பிரீஇ' எனக் கட்டுவிச்சியைக் கேட்டவாறும் 'என்மகட்கு' எனச் செவிலிகூற்று நிகழ்ந்தவாறுங் காண்க; இதனுள் '[2]நெடு வேணல்குவ னெனினே' எனத் தலைவி அஞ்சவேண்டியது, இருவரும் ஒட்டிக்கூறாமல் தெய்வந்தான் அருளுமென்று கோடலின்.*

[3]இகுளை கேட்டிசிற் காதலந் தோழி
குவளை யுண்கண் டெண்பனி மல்க
வறிதியான் வருந்திய செல்லற் கன்னை
பிறிதொன்று கடுத்தன ளாகி வேம்பின்
வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி
யுடலுநர்க் கடந்த கடலந் தானைத்
திருந்திலை நெடுவேற் றென்னவன் பொதியி
லருஞ்சிமை யிழிதரு மார்த்துவர லருவியிற்
றதும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழு
துருகெழு சிறப்பின் முருகு மனைத்தரீஇக்
கடம்புங் களிறும் பாடி நுடங்குபு
தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலு
மாடின ளாத னன்றோ நீடு
நின்னொடு தெளித்த நன்மலை நாடன்
குறிவர லரைநாட் குன்றத் துச்சி
நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூரிருட்
டிருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட்
கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி
நன்னிற மருளு மருவிட
ரின்னா நீளிடை நினையுமெ னெஞ்சே.

---

1. எய்யாது - (அவள்) அறியாது. நோய் - பிரிதலாலாய நோய்.
2. நல்கல் எவ்வம் - மார்பைநல்குதலால் உண்டான வருத்தம். இருவர் என்றது கட்டுவிச்சியையும் வேலனையும். ஒட்டிக் கூறாமை - இது வெற்பன் அருளுதலால் வந்த துன்பம் என ஒட்டிக்கூறாமை. ஒட்டல் - நிகழ்ச்சியொடு பொருந்தல், சேர்தல்.
3. வறிது - சிறிது. பிறிது ஒன்று என்றது தெய்வத்தாலாயது என்று கருதின மையை. உரு - அச்சம். முருகு - வேலன். களிறு - பிணிமுகம் என்னும் யானை. ஆடல் - ஆடுவித்தல் என்னும் பொருட்டு.

*என்னும் (அகம் - 138)* **மணிமிடைபவளம்** *விதந்து கூறாமையின் [1]இரண்டு ஒருங்கு வந்தது.*

*ஆடிய சென்றுழி அழிவு தலைவரினும் - அங்ஙனம் வெறி யாடுதல் வேண்டிய தொழின் முடிந்தபின்னுந் தலைவிக்கு வருத்தம் மிகினும்: உதாரணம்:*

[2]வேங்கை யிரும்புனத்து வீழுங் கிளிகடியாள்
காந்தண் முகிழ்விரலாற் கண்ணியுங் கைதொடா
ளேந்தெழி லல்குற் றழைபுனையா ளெல்லேயென்
பூந்தொடி யிட்ட புலம்பு மறிதிரோ.

[3]புனையிருங் குவளைப் போதுவிரி நாற்றஞ்
சுனையர மகளி ரவ்வே சினைய
வேங்கை யொள்வீ வெறிகமழ் நாற்றமொடு
காந்த ணாறுப கல்லர மகளி
ரகிலு மாரமு நாஅ றுபவன் (?)
றிறலரு மரபிற் றெய்வ மென்ப
வெறிபுனங் காவ லிருந்ததற் றொட்டுத்
தீவிய நாறு மென்மக
ளறியேன் யானிஃ தஞ்சுதக வுடைத்தே.

*இவை ஆற்றாமை கண்டு அஞ்சிச் செவிலி பிறரை வினாயின.*

[4]அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி யதன்றிறம்
யானுந் தெற்றென வுணரேன் மேனாண்
மலிபூஞ் சாரலென் றோழி மாரோ
டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யென்னும் பூச றோன்ற
வொண்செங் கழுநீர்க் கண்போ லாயித
ழூசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி

1. விதந்து கூறாமையின் என்றது ஆடியவர் இன்னார் என்று எடுத்துச் சொல் லாமையால் என்றபடி. இரண்டும் என்றது கட்டுங் கழங்கும் என்னு மிரண்டையும்.
2. வீழும் - கதிரில்வீழும், கடியாள் - துரத்தாள். கண்ணி - மாலை. தழை - தழை யுடை. எல்லே - என்னே? வெளியே எனினுமாம். புலம்பு - தனிமை. துயரம்.
3. சுனையரமகளிர - சுனையிலுள்ள நீரர மகளிரிடத்தன. கல்அரமகளிர் - மலையரமகளிர். அரமகளிர் - தெய்வமகளிர். 'அகிலுமாரமு நாறுபவன்' இவ்வடியில் யாதோ பிழையுளது. தீவிய நாறும் - தெய்வமணம் கமழும். நாறுமவள் என்று பாடமிருந்திருப்பிற் பொருத்தமாகும்.
4. இதன்பொருள் முன் விளக்கப்பட்டுளது.

வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்
டியாதோ மற்றம் மாதிறம் படரென
வினவி நிற்றந் தோனே யவற்கண்
டெம்மு ளெம்முண் மெய்ம்மறை பொடுங்கி
நாணி நின்றன மாகப் பேணி
யைவகை வகுத்த கூந்த லாய்நுதன்
மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யு முளவோ வென்றனன் பையெனப்
பரிமுடுகு தவிர்த்த தேரனெதிர் மறுத்து
நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
பகன்மா யந்திப் படுசுட ரமயத்
தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றன
ளதனள வுண்டுகொன் மதிவல் லோர்க்கே. (அகம் 48)

*இது, செவிலிக்கூற்றினைத் தோழி கொண்டு கூறியது.*

*காதல் கைமிகக் கனவின் அரற்றலும்* - தலைவியிடத்துக் காதல் கையிகந்து பெருகுதலால் துயிலா நின்றுழியும் ஒன்று கூறி அரற்றுதலும்:

*கனவு - துயில்; துயிலிற் காண்டலைக் கனவிற் காண்ட லென்ப.*

*உதாரணம்:* [1]'பொழுது மெல்லின்று' (குறுந். 161) என்பதனுட் 'புதல்வற் புல்லி யன்னாய்' என்று தலைவியை விளித்தது கனவின் அரற்றலாயிற்று.

*அரற்றல்* - இன்னதோர் இன்னாக்காலத்து என் செய்கின்றாயெனக் காதல் பற்றி இரங்குதல்.

*தோழியை வினவலும்* - நின்றோழிக்கு இவ்வேறுபாடு எற்றினானாயிற்றென்றாற் போலத் தோழியை வினாவுதலும்: *உதாரணம் :*

[2]நெடுவே லேந்தி நீயெமக் கியாஅர்
தொடுத லோம்பென வரற்றலு மரற்றுங்
கடவுள் வேங்கையுங் காந்தளு மலைந்த
தொடலைக் கண்ணி பரியலு மென்னும்
பாம்புபட நிவந்த பயமழைத் தடக்கைப்

---

1. எல் - ஒளி.

2. ஏந்தி - ஏந்தியே! யார் - யாராந்தன்மையுடையை. தொடுதல் ஓம்பென - தொடுதலைப் பாதுகாப்பாய் என்று. தொடலைக் கண்ணி - தொடுத்தலைக் கொண்டதாகிய கண்ணி. பரியலம் என்னும் - தாங்கலம் என்பாள்? பாம்புபட

பூம்பொறிக் கழற்கா லாஅய்குன் றத்துக்
குறுஞ்சுனை மலர்ந்த குவளை நாறிச்
சிறுதேன் கமழ்ந்த வம்மெல் லாகம்
வாழியெம் மகளை யுரைமதி யிம்மலைத்
தேம்பொதி கிளவியென் பேதை
யாங்கா டினளோ நின்னொடு பகலே.

*இது செவிலி தோழியை வினாவியது.*

[1]ஓங்குமலை நாட வொழிகநின் வாய்மை
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி
யுறுபகை பேணா திரவின் வந்திவள்
பொறிகிள ராகம் புல்லா தோள்சேர்
பறுகாற் பறவை யளவில மொய்த்தலிற்
கண்கோ ளாக நோக்கிப் பண்டு
மினையை யோவென வினவினள் யாயே
யதனெதிர் சொல்லா ளாகி யல்லாந்
தென்முக நோக்கி யோளே யன்னா
யாங்குணர்ந் துய்குவள் கொல்லென மடுத்த
சாந்த ஞெகிழி காட்டி
யீங்கா யினவா லென்றிசின் யானே. (நற்றிணை. 55)

*இது, செவிலி வினாயினமையைத் தோழி கொண்டு கூறினாள்.*

*தெய்வம் வாழ்த்தலும் - இன்னதொன்று நிகழ்ந்ததெனத் துணிந்த பின்னர்த் தன்மகளொடு தலைமகளிடை நிகழ்ந்த ஒழுக்கம் நன்னர்த்தாகவெனத் தெய்வத்திற்குப் பராவுதலும்: உதாரணம்:*

[2]பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
செறிமடை யம்பின் வல்விற் கானவன்
பொருது தொலை யானை வெண்கோடு கொண்டு
நீரகழ் சிலம்பி னன்பொ னகழ்வோன்
கண்பொரு திமைக்குந் திருமணி கிளர்ப்ப
வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க
தெண்ணீ ராலி கடுக்கு முத்தமொடு
மூவேறு தாரமு மொருங்குடன் சாற்றிச்

---

நிவந்த - பாம்பை ஒப்ப நீண்ட. இது கைக்கு விசேடணம். ஆய் - ஒருவள்ளல். மகளை - மகளே; ஐ சாரியை. இது தோழியை விளித்தது. யாங்காடினள் உரை என ஒட்டுக. யாங்கு ஆடினள் - எவ்விடத்து விளையாடினாள்.

1. தோள்சேர்பு - இவள் தோளைச்சார்ந்து. அறுகாற்பறவை - வண்டு கண் கோளாக நோக்கி - கண்ணாற் கொல்வது போல நோக்கி. சாந்தஞெகிழி - சந்தனவிறகுக் கொள்ளி. ஈங்கு - இவ்விறகிலுள்ள வண்டு. ஆயின - மொய்த்தன.

2. சிலம்பு - மலைப்பக்கம். வேட்டம் - வேட்டை. செறிமடை அம்பு - செறிக்கப் பட்ட மூட்டுவாயையுடைய அம்பு. பொருது தொலை யானை - பொருது இறந்த யானை. அகழ்வோன் - தோண்டு வோன். கிளர்ப்ப - மேலெழுந்து விளங்க. அகழ எனினுமாம். மூவேறுதாரம் - பொன்னும் மணியும் முத்தம்

சாந்தம் பெறைமர மாக நறைநார்
வேங்கைக் கண்ணிய னிழிதரு நாடற்
கின்றீம் பலவி னேர்கெழு செல்வத்
தெந்தையு மெதிர்ந்தனன் கொடையே யலர்வா
யம்ப லூரு மவனொடு மொழியுஞ்
சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி
யாயு மவனே யென்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாளென
நல்லிறை மெல்விரல் கூப்பி
யில்லுறை கடவுட் கோக்குதும் பலியே. (அகம். 282)

*இதனுள், 'தோள் பாராட்டி, யாயுமவனே யென்னும்' என்று [1]யாய் தெய்வம் பராயினாளென்பதுபடக் கூறி யாம் அத்தெய்வத்திற்குப் பலிகொடுத்து மென்றவாறு காண்க.*

*போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக் கற்பின் ஆக்கத்து நிற்றற்கண்ணும் - உடன் போக்கு அறிந்தபின்னர்ச் செவிலி தோழியொடு மதியுடம்பட்டு நின்று தலைவியது கற்பு மிகுதியே கருதி உவந்த உவகைக்கண்ணும்:*

*அது,*

[2]எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே (அகம். 195)

*என்றாற் போலக் கற்பினாக்கத்துக் கருத்து நிகழ்தல். உதாரணம்:*

[3]முயங்குகம் வாராய் தோழி தயங்குபு
கடல்பெயர்ந் தன்ன கானலங் கல்லெனப்
பெயல்கடைக் கொண்ட பெருந்தண் வாடை
வருமுலை வெப்பங் கொழுநற் போற்றிய
சென்றன ளம்மநின் றோழி யவனோ
டென்றினி வரூஉ மென்றனள்
வலந்துரை தவிர்ந்தன் றலர்ந்த வூரே.

*இது, செவிலி கற்பினாக்கத்து நின்றமை தோழி கூறியது.*

---

என்னும் மூவகைப் பண்டம். பொறைமரம் - சுமைமரம் (காவுமரம்). கொடை எதிர்ந்தனன் - மகட்கொடைக்கு உடன்பட்டனன். ஓக்குதும் - செலுத்துதும்.

1. யாய் - என் தாய்.

2. எம்மனை - எம்வீடு. உய்க்குமோ? - கொண்டுபோமோ? குறிப்பு - கருத்து.

3. முயங்குகம் - தழுவுவம். தயங்குபு - தயங்கி = விளங்கி. கானல் - கடற்கரைச் சோலை, கல்லென - கல்லென்றொலிப்ப. அம் - சாரியை. வாடை - வாடைக் கண். கொழுநற் போற்றிய - கணவனைப் பாதுகாக்கும் படி. வலந்துரை தவிர்ந்தன்று - சூழ்ந்து உரைத்தலை நீங்கியது. அலர்ந்தஊர் - பரந்தஊர். அலர்கூறிய ஊர் அவ்அலர் கூறலை நீங்கிற்று எனவுமாம். வலந்து சூழ்ந்து உரைத்தல் என்றது; அலர்கூறலை.

*பிரிவின் எச்சத்தும்* - *தலைவி உடன்போயவழித் தான் பின் செல்லாதே [1]எஞ்சுதலும் உளவாதலின் ஆண்டுக் கூறுவனவும்:*

*உதாரணம்:*

[2]தெறுவ தம்ம நும்மகள் விருப்பே
யுறுதுய ரவலமொ டுயிர்செலச் சாஅய்ப்
பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க,
நாடிடை விலங்கிய வெற்பிற்
காடிறந் தனணங் காத லோளே. **(ஐங்குறு 313)**

*இது, பின்செல்லாது வருந்தியிருந்த செவிலியைக்கண்ட நற்றாய் கூறியது.*

*இது, நற்றாய் கூற்றாய்ச் 'செவிலிமேன' ஆயிற்று.*

*மகள் நெஞ்சு வலிப்பினும்* - *உடன் போக்கிற்கு மகள் நெஞ்சு துணியினும்:*

*தன்மேல் அன்பு நீங்கியது உணர்ந்து செவிலி கூறும் உதாரணம்:*

[3]பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனெ னென்றன
ளினியறிந் தேனது துனியா குதலே
கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையுங் காந்தளு நாறி
யாம்பன் மலரினுந் தான்றண் ணியளே. **(குறுந். 84)**

*இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும்* - *தலைவனுந் தலைவியுந் தோன்றிய இருவகைக் குடியும் நிரம்பிவருதல் இயல்பாகப் பெற்றவழியும்:*

*'பொருள்' என்றார்; பிறப்பு முதலிய பத்தையுங் (273) கருதி.*

*'காமர் கடும்புனல்' என்னும் (39) கலியுள்.*

---

1. எஞ்சுதல் - தளித்தல். மகளைப் போக்கினமையின் எஞ்சுதல் என்றார்

2. தெறுவது - வருத்துவது. நும் மகள் என்று நற்றாய் செவிலியை நோக்கிக் கூறினாள். செல - போக. சாய் - மெலிந்து. மெலிந்து கலங்க என்க. படர் - துன்பம். கலங்கக் காடிறந்தனள் என்க. நம் என்பது நற்றாய் கூற்று.

3. பெயர்த்தனென் முயங்க - மீட்டுந் தழுவ. (ஒருமுறையன்றி மீளவுந் தழுவ என்றபடி). யான் வேர்வையுற்றேன் என்றாள். இனி - இப்பொழுது. துனி - வெறுப்பு. நாறல் - மணத்தைத் தோற்றுவித்தல். தண்ணியள் - குளிர்ச்சியை யுடையவள். ஆய் - ஒரு வள்ளல்.

[1]அவனுந்தா, னேன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்

வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்;

.......... ............... .................. ............... ...............

எனவாங், கறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
வென்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்.

எனத் தோழி தான்கூறிய [2]இருபாற் குடிப்பொருளைக் கூறிச் செவிலி அறத்தொடு நின்றாளெனக் கொண்டெடுத்து மொழிந் தவாறு காண்க.

இன்னவகையிற் பதின்மூன்று கிளவியோடு அன்னவை பிறவும் - இத்தன்மைத்தாகிய கூறுபாட்டையுடைய பதின்மூன்று கிளவியோடே அவைபோல்வன பிறவாய் வருவனவும்; செவிலி மேன - தன் கூற்றாயும் பிறர் கொண்டு கூறுங் கூற்றாயும் கூறும் கூற்றுச் செவிலிக்கு உரியவாம் என்றவாறு.

'அன்ன பிற' என்றதனால்,

[3]பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி யாய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே. (குறுந். 15)

இஃது உடன்போயபின் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

இன்னும் அதனானே,

வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள் (அகம். 122: 4)

சிறுகிளி கடித றேற்றா ளிவள் (அகம். 28: 12)

கண்கோ ளாக நோக்கிப் பண்டு, மினையையோ (நற்றிணை. 55:6:7)

என்றலும் போல்வன பிறவுங் கொள்க. (24)

---

1. ஏனல் இதணம் - தினைப்புனத்துப்பரண். வரை - மலை. ஏணி - கண்ணேணி. இழைத்து - உண்டாக்கி.

2. இருபாற்குடி - தலைவன் தலைவி என்னும் இருபகுதிக்குடி.

3. பட - ஒலிப்ப. பணிலம் - சங்கு. இறைகொள்பு - தங்கி. வாய் - உண்மை. ஆய்கழல் - அழகிய கழல் பொதியில் - பொதுவிடம். நட்பு, இறைகொள்பு, வாயாகின்று என இயைக்க. இறை கொள்பு தோன்றிய எனக் கூட்டுவாருமுளர்.

(நற்றாய்க்குரிய கூற்று உரைத்தல்)

**116. தாய்க்கும் வரையா ருணர்வுடன் படினே.**

இது செவிலிக்கு உரியன கூறி நற்றாய்க்கு உரிய கூற்றுக் கூறுகின்றது.

இ — ள்: உணர்வு உடன்படின் - அங்ஙனஞ் செவிலி உணர்ந் தாங்கே நற்றாயும் மதியுடன்படில், தாய்க்கும் வரையார் - நற்றாய்க்கும் முற்கூறிய பதின்மூன்று கிளவியும் பிறவுமாகக் கொண்டு எடுத்து மொழிதல் வரையார் என்றவாறு.

[1] 'தாய்க்கும்' என்றார் இவட்கு அத்துணை பயின்றுவாரா என்றற்கு. அது நற்றாய் இல்லறம் நிகழ்த்துங் கருத்துவேறு உடைமையின் உற்றுநோக்காள், செவிலியே தலைவியை உற்று நோக்கி ஒழுகுவாளாதலின், இலக்கணமுண்மையின் இலக்கியம் வந்துழிக் காண்க. (25)

(நாற்றாய்க்கும் செவிலிக்குமுரியதோர் இலக்கணம் உரைத்தல்)

**117. [2]கிழவோ னறியா வறிவின ளிவளென**
**மையறு சிறப்பி னுயர்ந்தோர் பாங்கி**
**னையக் கிளவி யறிதலு முரித்தே.**

இஃது அங்ஙனங் களவு வெளிப்பட்டபின்னர் நற்றாய்க்கும் செவிலிக்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ — ள்: கிழவோன் அறியா அறிவினள் இவளென ஐயக் கிளவி - நங்குலத்திற்கு ஒத்த தலைவனை அறிந்து கூடாத அறி வினை உடையள் இவளென்று தம்மனத்தை ஐயமுற்றும் பிறரோடு உசாவுங் கிளவியை, மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின் அறிதலும் உரித்தே - குற்றமற்ற சிறப்பினையுடைய அந்தணர் முதலியோரிடத்தே கூறி அதுவும் முறைமையென்று அவர் கூற அறிதலும் உரித்து என்றவாறு.

---

1. இழிவு சிறப்பு உம்மையால் பயின்றுவாராது என்றார்.

2. உயர்ந்தோர் - சான்றோர் எனக்கொண்டு. சான்றோரிடத்துக் கிழவோனுடைய குலநலம் விசாரித்து அறிந்தாள் என்று கூறலே பொருத்தம். ஐயம் - தலை வன் உயர்ந்தவனோ தாழ்ந்தவனோ என்னும் ஐயம். இளம்பூரணர் வேறு கூறுவர். அவர் கூற்றும் பொருத்தமாகக் காணப்படவில்லை

என்றது 'மிக்கோனாயினுங் கடிவரையின்றே' (சூ. 93) முற் கூறினமையின் தலைவன் தன்குலத்தின் உயர்ந்தமை அறிந்த விடத்து இங்ஙனங் கூறுதல் முறையன்றென்று ஐயுற்ற செவிலி யும் நற்றாயும் உயர்ந்தோரைக் கேட்டு இதுவுங் கூடுமுறைமை என்றுணர்வர் என்பதாம். இலக்கணமுண்மையின் இலக்கிய மும் அக்காலத்து உளவென்றுணர்க. (26)

**(தலைவிக்குரியதோ ரிலக்கண முரைத்தல்)**

**118. தன்னுறு வேட்கை கிழவன் முற் கிளத்த**
**லெண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்**
**பிறநீர் மாக்களி னறிய வாயிடைப்**
**பெய்ந்நீர் போலு முணர்விற் றென்ப.**

இது தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ – ள்: பிறநீர் மாக்களின் - வேறுவேறாகத் தம்மில் தாம் காதல்செய்து ஒழுகும் அறிவில்லாதாரைப்போல, கிழவன் அறியத் தன்னுறு வேட்கை முற்கிளத்தல் கிடித்திக்கு இல்லை - தலைவன் அறியும்படியாகத் தனக்குற்ற வேட்கையை அவன் முன்னர்க் கூறுதல் தலைவிக்கு இல்லை. ஆயிடை - அங்ஙனங் கூற்றில்லாவிடத்து, எண்ணுங்காலையும் - அவள் வேட்கையை அவன் ஆராயுங்காலையும், பெய்ந்நீர் போலும் உணர்விற்று என்ப - அவ்வேட்கை புதுக்கலத்துப் பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுமாறு போலும் உணர்வினை உடைத்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'கிழத்திக்கில்லை' எனவே தோழிக்குத் தலைவி தனது வேட் கையை எதிர்நின்று கூறுதலுளதென்பது பெற்றாம். தலைவிக் குக் குறிப்பானன்றித் தலைவன் முன்னின்று கூறும் வேட்கைக் கூற்றின்மை முற்கூறிய செய்யுட்களுட் காண்க. [1]எனவே, தோழி முன்னர்த் தலைவிக்கு வேட்கைக்கூற்று நிகழ்தல் பெற்றாம். உதாரணம்:

**சேணோன் மாட்டிய நறும்புகை,** **(குறுந். 150)**

**ஈயற் புற்றத் தீர்ம்புறத் திருத்த** **(அகம். 8)**

என்பனவும்,

**இவளே, நின்சொற் கொண்ட** **(குறுந். 81)**

என்றாற் போல் வருவனவும் முன்னர்க் காட்டினாம்.

1. இக்கருத்து முன்வந்திருத்தலின் இவ்வாக்கியம் வேண்டிய தில்லை.

[1]கடும்புனன் மலிந்த காவிரிப் பேரியாற்று
நெடுஞ்சுழி நீத்த மண்ணுநீர் போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருந
லாக மடைதந் தோளே (அகம். 62: 9: 2)

என்றாற் போல்வன தலைவி வேட்கையைத் தலைவன் குறிப்பான் உணர்ந்தன. (27)

**(தலைவனுந் தலைவியும் தாமே தூதுவராதலு முரித்தெனல்)**

**119.** காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலிற்
றாமே தூதுவ ராதலு முரித்தே.

இஃது எய்தாதது எய்துவித்தது, பாங்கனுந் தோழியும் நிமித்தமாகவன்றித் தாமே தூதாகும் இடமும் உண்டென்றலின்.

**இ — ள்:** காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலின் - இயற்கைப் புணர்ச்சியும் இடர்ந்தலைப் பாடுங் கூட்டுவாரையின்றித் தனிமையாற் பொலிவுபெறுதலின், தாமே தூதுவர் ஆகலும் உரித்தே - ஒருவருக்கு ஒருவர் தூதுவராகி ஒருவர் ஒருவரைக் கூடுதலும் ஆண்டு உரித்து என்றவாறு.

அது மெய்ப்பாட்டினுட் 'புகுமுகம் புரிதன்' (261) முதலிய பன்னிரண்டானும் அறிக. இதன் பயன் இக்கூட்டத்தின் பின்னர் வரைதலும் உண்டென்பதாம். (28)

**(களங்கூறுதற்குரியாள் தலைவியெனல்)**

**120.** அவன்வரம் பிறத்த லறந்தனக் கின்மையிற்
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்
தான்செலற்குரிய வழியாக லான.

இது முன்னர்க் களனும் பொழுதும் என்றவற்றுட் களங் கூறுதற்கும் உரியாள் தலைவி யென்கிறது.

**இ — ள் :** அவன் வரம்பு இறத்தல் - தலைவன் கூறிய கூற்றின் எல்லையைக் கடத்தல், தனக்கு அறமின்மையின் - தலைவிக்கு உரித்தெனக்கூறிய தரும நூலின்மையின், களஞ்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும் - தலைமகனை இன்னவிடத்து வருகவென்று

---

1. நீத்தம் மண்ணுநீர்போல - நீத்தத்திற் குளிக்குமிடத்து அந்நீர் குளிருமாறு போல். போலக் குளிர முயங்கி என்றபடி. அஞர் - துன்பம். ஆகம் - மார்பு.

ஓரிடத்தைத் தான் கருதிக் கூறுங்கூற்று அவன் குறிப்புவழி ஒழுகுந் தலைவியதாம், தான் செலற்கு உரிய வழி ஆகலான - தான் சென்று கூடுதற்குரிய இடந் தானே உணர்வள் ஆதலான் என்றவாறு.

'சுட்டுக்கிளவி' என்றதன் கருத்துத் தலைவன் இருவகைக் குறியும் வேண்டியவழி அவனை மறாது தான் அறிந்தவிடத்தினைக் கூற்றானன்றிக் குறிப்பானாதல் சிறைப்புறத்தானாதல் தோழி யானாதல் உணர்த்து மென்பதாம். தலைவன் களஞ்சுட்டுமாயின் யாண்டானும் எப்பொழுதானும் அக்களவொழுக்கம் நிகழ்ந்து பிறர்க்கும் புலனாய்க் குடிப்பிறப்பு முதலியவற்றிற்குத் தகாதாம்.

விரியிணர் வேங்கை

என்னும் (38) அகப்பாட்டுத் தலைவி களஞ்சுட்டியது; 'மறந்திசின் யானே' என்றலின் இது குறிப்பான் உணர்த்திற்று. பிறவும் வந்துழிக் காண்க. (29)

(தோழிக்குங் களஞ்சுட்டுக் கிளவி யுரித்தெனல்)

121. தோழியின் முடியு மிடனுமா ருண்டே.

இது, தோழிக்குங் [1]களஞ்சுட்டுக்கிளவி உரித்தென்று எய்தாது எய்துவித்தது.

இ — ள்: களஞ்சுட்டுக்கிளவி தலைவி குறிப்பால் தோழி கூறுதலன்றித் தானேயுங் கூறப்பெறும் ஒரோவழி என்றவாறு. தோழி குறித்த இடமுந் தலைவி தான் சேறற்குரிய இடமா மென் பது கருத்து. உதாரணம்:

[2]செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினைத்
தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தன் மாக்கழி நிவப்ப
வினிப்புலம் பின்றே கானலு நளிகடற்
றிரைச்சுர முழந்த திண்டிமில் விளக்கிற்
பன்மீன் கூட்ட மென்னையர்க் காட்டிய
வெந்தையுஞ் செல்லுமா ரிரவே யந்தி

1. களம் - இரவுக்குறியும் பகற்குறியும்.

2. இதில், புன்னையந்தண்பொழில் வா எனத் தோழி களஞ் சுட்டியவாறு காண்க. இது பகற்குறி. உள்ளிய - கருதிய. பறை - சிறை. நிவப்ப - பறப்ப. புலம்பின்று - தனித்தது. கானல் - கடற்கரைச் சோலை. சுரம் - காடு. திமில் - தோணி. காட்டிய - காட்டும்படி. எந்தை - எந்தந்தை. அந்தி - மலை அணங்கு -

லணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமோ டயரு நீயுந்
தேம்பா யோதி திருநுத னீவிக்
கோங்குமுகைத் தன்ன குவிமுலை யாகத்
தின்றுயி லமர்ந்தனை யாயின் வண்டுபட
விரிந்த செருந்தி வெண்மணன் முடுக்கர்ப்
பூவேய் புன்னைய தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே (அகம். 240)

எனத் தோழி களஞ்சுட்டியவாறுங் காண்க. (30)

**(துணையின்று கழியுநா ளித்துணையவெனல்)**

122. முந்நா ளல்லது துணையின்று கழியா
தந்நா ளகத்து மதுவரை வின்றே.

இதுவும் அதிகாரத்தால் தலைவிக்கெய்தியதோர் இலக் கணங் கூறுகின்றது.

**இ – ள்:** முந்நாள் அல்லது துணையின்று கழியாது - பூப்பெய் திய மூன்றுநாளும் அல்லது கூட்டமின்றி இக் களவொழுக்கங் கழியாது, அந்நாளகத்தும் அது வரைவு இன்றே - அம்மூன்று நாளின் அகப்பட்ட நாளாகிய ஒரு நாளினும் இரண்டுநாளினும் துணையின்றிக் கழிதல் நீக்கப்படாது என்றவாறு.

'அது' என்றது, துணையின்றிக் கழிதலை. பூப்பினால் துணையின்றிக் கழிதல் பொருந்திற்றாயினும், பூப்பின்றி ஒரு நாளும் இரண்டுநாளுந் துணையின்றிக் கழிதல் வழுவாமெனக் கருதின் அதுவும் புறத்தார்க்குப் புலனாம் என்று அஞ்சுதலாற் கழிதலின் வழுவாகா என்றற்கு 'வரைவின்று என்றார்'. இன்னோ ரன்ன காரணந் தலைவற்கின்மையின் அவனாற் துணையின்றிக் கழிவது இன்றாயிற்று. உதாரணம்:

[2]குக்கூ வென்றது கோழி யதனெதிர்
துட்கென் றற்றென் றூஉ நெஞ்சந்
தோடோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே (குறுந். 157)

---

தெய்வம். யாயும் - எந்தாயும் அயரும் - வழிபடும் ஓதி - ஓதியையுடையாள் நீயும் இன்றுயிலமர்ந்தனையாயின் மணந்தனை செலற்குப் பொழில்வா என இயைக்க.

1. இன்னோரன்ன காரணம் என்றது. பூப்புநிகழ்தல், புறத்தார்க்குப் புலனா மென்றஞ்சுதல் முதலியவற்றை.

2. துட்கென்றற்று - அஞ்சியது. தூஉ - தூய. வைகறை - விடியல். வந்தன்று - வந்தது. என் நெஞ்சம் துட்கென்றற்று என இயைக்க. ஆல் - அசை.

*இது, முந்நாளைப் பிரிவாகிய பூப்பிடைப் பிரிவு வந்துழித் தலைவி கூறியது.*

*இனி, [1]அல்லகுறிப்பட்டுழி ஒருநாளும் இரண்டுநாளும் இடையீடாமென்றுணர்க. [2]பூப்பு நிகழாத காலத்துக் களவொழுக்கம் பூப்பு நிகழ்காலம் வரையப்பட்டதென்று உரைப்பாரும் உளர். இவ்விதி அந்தணர்க்குக் கூறியதன்று, அரசர் வணிகர் ஆதியர்க்குச் சிறுபான்மையாகவும், ஏனைய வேளாளர் ஆயர் வேட்டுவர் முதலியோர்க்குப் பெரும்பான்மையாகவுங் கூறிய விதியென்றுணர்க. என்னை? பூப்பு நிகழுங்காலத்து வரையாது களவொழுக்கம் நிகழ்த்தினார்க்கு,*

அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட வொழுகலும். (146)

*என்பதனாற் பிராயச்சித்தம் விதிப்பராதலின். இதனானே அந்தணர் மகளிர்க்கும் பூப்பெய்தியக்கால் [3]அறத்தொடு நின்றும் வரைதல் பெறுதும்.* *(31)*

**(*தலைவி அறத்தொடு நிற்றல்*)**

**123.** **பன்னூறு வகையினுந் தன்வயின் வரூஉ**
**நன்னய மருங்கி னாட்டம் வேண்டலிற்**
**துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்**
**துணையோர் கரும மாக லான.**

*இது, தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.*

***இ — ள்:*** *தன்வயின் வரூஉம் நன்னய மருங்கின் - தலைவியிடத்தே தோழிக்குஞ் செவிலிக்குஞ் வருகின்ற அன்பு மிகுதிக்கண்ணே, பல்நூறு வகையினும் நாட்டம் வேண்டலில் - பல நூறாகிய பகுதியானும் ஆக்கமுங் கேடும் ஆராய்தலை அவர் விரும்புதலாலே, துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகும் - இவள் ஓர் துணையுடையளென அவர் சுட்டுதலிடத்துக் கிளக்குங் கிளவி தலைவிய தாக, துணையோர் கருமம் ஆகலான - அக்கிளவி அத்தோழியானுஞ் செவிலியானும் முடியுங் காரியம் ஆதலான் என்றவாறு.*

---

1. அல்லகுறி - தலைவன் குறியல்லாத குறி. அஃதாவது தலைவன் நிகழ்த்துங் குறி பிறிதொன்றால் நிகழ்வது.

2. பூப்பு நிகழாதகாலம் என்றது - பூப்புடையாளாதற்குமுன் என்றபடி.

3. அறத்தொடு நிற்றல் - தலைவி தோழிக்கு அறத்தொடுநிற்றல்.

என்றது, தோழி 'பல்வேறு கவர்பொருணாட்டம்' (114) உற்ற வழியுஞ் செவிலி களவு அலராதல் முதலியவற்றான் (115) நாட்டமுற்றவழியுந் தலைவி அறத்தொடு நிற்குமென்று அறத்தொடு நிலைக்கு இலக்கணங் கூறியவாறாயிற்று. தோழிக்குத் தலைவி அறத்தொடு நிற்ப, அவள் செவிலிக்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடு நிற்குமென்று உணர்க. இதனானே பாங்கற்கு உற்றதுரைத்த பின்னர்த் தலைவன் உரையாமையும் பெற்றாம்.

**புனையிழை நோக்கியும்**

என்னும் மருதக் கலி (76)யுள்,

**வினவுதி யாயின்**

என நாட்டம் நிகழ்ந்தவாறும், அதன் சுரிதகத்துக் கூட்ட முண்மை கூறுதலின் துணைச் சுட்டுக்கிளவி கிழவியதாயவாறுங் காண்க.

[1]கொடியவுங் கோட்டவும் (கலி. 54) என்பதன் சுரிதகத்துச் செவிலிக்கு உரையாயெனக் கூறியவாறுங் காண்க. (32)

**(களவின் கண் தாயென்று சிறப்பிக்கப்படுவாள் செவிலி எனல்)**

**124. ஆய்பெருஞ் சிறப்பி னருமறை கிளத்தலிற்**
**றாயெனப் படுவோள் செவிலி யாகும்.**

இது முற்கூறிய செவிலி சிறப்புக் கூறுகின்றது.

**இ — ள்:** ஆய்பெருஞ் சிறப்பின் - [2]தாய்த்தாய்க்கொண்டு உயிர் ஒன்றாய் வருகின்றாளென்று ஆராய்ந்து துணியப்பட்ட பெருஞ் சிறப்புக் காரணமாக, அரு [3]மறை கிளத்தலின் - கூறுதற்கரிய மறைபொருளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்றாற் கூறத் தக்காளாதலின், தாயெனப் படுவோள் செவிலி ஆகும் - தாயென்று சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம் என்றவாறு.

---

1. சுரிதகத்து 'கூறின் நன்றென - நின்னொடு சூழ்வல்' என வருதலின், செவிலிக்குலையாயெனக் கூறியது என்றார். கூறின என்பதற்குச் செவிலிக்கு அறத்தொடு நின்று கூறின் என்று உரைக்க.

2. தாய்த்தாய்க் கொண்டுவரல் என்றது, தாய் செவிலியானபின், அவள் தாயுஞ் செவிலியாய் மரபுபற்றி வருதலை.

3. மறை - களவொழுக்கம்.

எனவே, ஈன்ற தாயினுங் களவின்கட் சிறந்தாள் இவளென்றார். கற்பிற்கு இருவரும் ஒப்பாராயிற்று. செவிலி சிறந்தமை சான்றோர் செய்யுளுட் பலருங் கூறியவாறு காண்க. (33)

### (சிறப்புடைத் தோழியாவாள் இவளெனல்)

**125. தோழி தானே செவிலி மகளே.**

இது தோழியது சிறப்புணர்த்துகின்றது.

**இ – ள்:** தோழி தானே - தோழியர் பலருள்ளும் ஒருத்தியெனப் பிரிக்கப்படுவாள், செவிலி மகளே - முற்கூறிய செவிலியுடைய மகள் என்றவாறு.

இதற்கும் [1]அருமறை கிளத்தல் [2]அதிகாரத்தாற் கொள்க. தாய்த்தாய்க் கொண்டு வருகின்றமையின் (நாலடி. 15) [3]உழுவலன்பு போல்வதோர் அன்பு உடையர் இருவருமென்று கொள்க. இதனானே களவிற்குத் தோழியே சிறந்தாளாயிற்று; அது சான்றோர் செய்யுளுட் காண்க. (34)

### (தோழி சூழ்தற்குமுரியளெனல்)

**126. சூழ்தலு முசாத்துணை நிலைமையிற் பொலிமே.**

இதுவுந் தோழி சிறப்பினையே கூறுகின்றது.

**இ – ள்:** உசாத்துணை நிலைமையின் - தலைமகனுந் தலைமகளும் உசாவுதற்குத் துணைமைசான்ற நிலைமையினாலே, சூழ்தலும் பொலிமே - புணர்ச்சி உண்மையை [4]ஏழுவகையானுஞ் சூழ்தற் கண்ணும் பொலிவு பெறும் என்றவாறு.

எனவே, [5]இம் மூன்று நிலைக்குந் தோழி உரியள் என்றார். உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. (35)

---

1. அருமறை கிளத்தலை இதன் முதற் சூத்திரத்து நோக்கியறிக.
2. அதிகாரம் என்றது - முற்சூத்திரத்து அதிகாரப்பட்டமையை.
3. உழுவலன்பு - எழுமையுந் தொடர்ந்த அன்பு.
4. எழுவகை என்றது "நாற்றமும் தோற்றமும்" என்ற சூத்திரத்துட் கூறிய எழுவகையையும் (களவியல் 23).
5. இம்மூன்றுநிலை என்றது. அருமறைகிளத்தல், உசாத்துணையாதல், சூழ்தல் என்ற மூன்று நிலையையும்.

(தோழி சூழ்ச்சி இத்துணைப்பகுதியெனல்)

127. குறையுற வுணர்தன் [1]முன்னுற வுணர்த
லிருவரு முள்வழி யவன்வர வுணர்தலென
[2]மதியுடம் படுத்த லொருமூ வகைத்தே.

இஃது, அத்தோழி சூழ்ச்சி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

இ — ள்: குறையுற உணர்தல் - தலைவன் தோழியை இரந்து குறையுற்றவழி உணர்தல், முன்னுற உணர்தல் - முன்னம் மிக வுணர்தல், இருவரும் உள்வழி அவன் வர உணர்தல் - தலைவியுந் தோழியும் ஒருங்கிருந்தவழித் தலைவன் வருதலால் தலைவன் குறிப்புந் தலைவி குறிப்புங் கண்டுணர்தல், என மதியுடம்படுத் தல் ஒரு மூவகைத்தே - என்று இருவர் கருத்தினையுந் தன்கருத் தினோடு ஒன்றுபடுத்துணர்தல் ஒரு மூன்று கூற்றினையுடைத்து என்றவாறு.

எண்ணுதல் எண்ணென்றாற்போல முன்னுதல் ‘முன்’ என நின்றது. உயிர்கலந்தொன்றலிற் குறிப்பின்றியும் பாகமுணர்வாள் குறிப்புப் பெற்றுழி மிகவுணரும் என்று கொள்க. இது மூவர் மதியினையும் ஒன்றுபடுத்துதலின் மதியுடம்படுத்தலென்று பெயராயிற்று. இம்மூன்றுங் கூடிய பின்னரல்லது மதியுடம் படுத்தலின் றென்றற்கு ‘மூவகைத்து’ என்று ஒருமையாற் கூறி னார். ‘முன்னுற’ என்றதனை ‘முந்துற’ என்றாலோவெனின் குறை யுறுதலான் உணர்தல் அவன் வருதலான் உணர்தலென்று இரண் டற்குங் காரணங் கூறுதலின் இதற்குங் குறிப்பு மிகுதலான் உணர்தலெனக் காரணங் கொடுத்தல் வேண்டுமென்றுணர்க. ‘நாற்றமுந் தோற்றமும்’ (114) என்பதனுட் கூறியவாறன்றி முன் னுறவை இடைவைத்தார், அவ்விரண்டினான் உணருங்காலும் இக்குறிப்பான் உணரவேண்டுமென்றற்கு. இம் மூன்றும் முற் கூறிற்றேனும் ஒரோவொன்றாற் கூட்டமுணரில் தலைவியை நன்கு மதித்தில ளாவளென்றற்கு இம் மூன்றும் வேண்டுமென்று ஈண்டுக் கூறினார்.

---

1. முன்னுறவுணர்தல் என்பதற்குக் களவியலுரைகாரர் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த பிற்றைஞான்று தலைவி வேறுபாடு கண்டு கரவு உள்நாடியுணர்தல் என்பர்.

2. மதியுடம்படுத்தல் என்பது தலைவன் தலைவி என்னும் இருவர் மதி யினையும் தன் மதியொடு ஒருங்குசேர்த்துணர்தல். எனவே இருவர்கண்ணும் களவொழுக்கம் உண்டென்பதைத் தன்கருத்தோடு பொருத்தித் துணிதல் என்றாயிற்று.

*உதாரணம்:*

> [1]கோனே ரெல்வளை தெளிர்ப்ப நின்போல்
> யானு மாடிக் காண்கோ தோழி. (பக். 487)

*இது கூட்டமுணராதாள் போல நாணிற்கு மாறாகாமற் கூறலின் முன்னுறவுணர்தல்.*

> [2]நின்னின் விடாஅ நிழற்போற் றிரிதருவா
> யென்னீ பெறாத திதென். (கலி. 61)

*இது குறையுறவுணர்தல்.*

> ஏனல் காவ லிவளு மல்லள் (பக். 485)

*என்பது அவன் வரவுணர்தல். (36)*

### (தோழி மதியுடம்படுத்தபின்னல்லது தலைவனிரந்து பின்னில்லானெனல்)

**128.** அன்ன வகையா னுணர்ந்தபி னல்லது
பின்னிலை முயற்சி பெறானென மொழிப.

*இது மதியுடம்பட்ட பின்னல்லது தலைவன் கூற்று நிகழ்த்தப் பெறானென்கின்றது.*

**இ – ள்:** *அன்ன வகையான் உணர்ந்தபின் அல்லது - அம்மூ வகையானுந் தோழி மதியுடம்படுத்தபின்னல்லது, [3]பின்னிலை - இவன் ஓர் குறையுடையனென்று தோழி உய்த்துணர நிற்கு மிடத்து, முயற்சி பெறான் என மொழிப - கூற்றான் அக்குறை முடித்தல் வேண்டுமென்று [4]முடுக்குதல் பெறானென்று கூறுப ஆசிரியர் என்றவாறு.*

*தோழி [5]தன்னை வழிப்பட்டவாறு கண்டு மதியுடம்பட்ட வாறுணர்ந்து கூற்றான் உணர்த்தும்.*

*அது, 'நெருநலு முன்னாள்' (பக். 490) என்பதனுள் 'ஆரஞர் வருத்தங் களையாயோ' என்றவாறு காண்க. (37)*

---

1. கோல்நேர் எல்வளை எனப் பிரிக்க. தெளிர்ப்ப - ஒலிப்ப; விளங்க. ஆடல் - சுனையாடல்.
2. நிழல் - சாயை. நீ பெறாதது என்? - நீ பெறாத குறை யாது? இது என்? - (அதனை) இது என்று கூறு.
3. பின்னிலை - இரந்து பின்னிற்றல்.
4. முடுக்குதல் - விரைவுபடுத்தல்; செலுத்தல்.
5. தன்னை என்றது தலைவனைச் சுட்டி நின்றது.

### (தோழி தலைவியைக் கூட்டவும் பெறுமெனல்)

**129. முயற்சிக் காலத் ததற்பட நாடிப்**
**புணர்த்த லாற்றலு மவள்வயி னான.**

இது தலைவன் முயற்சி கூறிய முறையே தோழி முயற்சி பிறக்குமிடங் கூறுகின்றது.

இ — ள்: முயற்சிக்காலத்து - தலைவன் அங்ஙனங் கூடுதற்கு முயற்சி நிகழ்த்துங் காலத்தே, நாடி அதற்படப் புணர்த்தலும் - தலைவி கூடுதற்கு முயலுங் கருத்தினை ஆராய்ந்து அக்கூட்டத் திடத்தே உள்ளம்படும்படி கூட்டுதலும், அவள் வயின் ஆன ஆற்றல் - தோழியிடத்து உண்டான கடைப்பிடி என்றவாறு.

ஆற்றல் - ஒன்றனை முடிவு போக்கல். உம்மை - எச்சவும்மை. [1]மதியுடம்படுத்தலேயன்றிக் கூட்டவும் பெறுமென்க. (38)

### (குறி இவை எனல்)

**130. குறியெனப் படுவ திரவினும் பகலினு**
**மறியத் தோன்று மாற்ற தென்ப.**

அங்ஙனங் கூட்டுகின்றவட்குக் கூடுதற்குரிய காலமும் இடனுங் கூறுகின்றது.

இ — ள்: குறியெனப்படுவது - குறியென்று சொல்லப்படுவது, இரவினும் பகலினும் - இரவின்கண்ணும் பகலின்கண்ணும், அறியத் தோன்றும் ஆற்றது என்ப - தலைவனுந் தலைவியுந் தானும் அறியும்படி தோன்றும் நெறியையுடைய இடம் என்றவாறு.

'நெறி' என்றார் அவன் வருதற்குரிய [2]நெறி இடம் என்றற்கு 'அது' என்று ஒருமையாற் கூறினார், [3]தலைப்பெய்வதோரிட மென்னும் [4]பொதுமைபற்றி. இரவு களவிற்குச் சிறத்தலின் முற்

1. மதியுடம்படுத்தலேயன்றிக் கூட்டவும் பெறுமென நிற்றலின் எச்சவும்மை என்க.
2. நெறி - முறைமை. நெறி என்பதற்கு இடம் என்றும் பொருள்கொள்ளலாம். அடுத்த சூத்திரத்து வழியது என்பதை நோக்குக.
3. தலைப்பெய்தல் - (தலைவனும் தலைவியும்) கூடுதல்.
4. பொது - இருவர்க்கும் பொது.

கூறினார். 'அறியத் [1]தோன்றும்' என்றதனாற் சென்று காட்டல் வேண்டா நின்று காட்டல் வேண்டுமெனக் கொள்க. (39)

**(இரவுக்குறியிட மிதுவெனல்)**

**131. இரவுக் குறியே யில்லகத் துள்ளு**
**மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே**
**மனையகம் புகாஅக் காலை யான.**

இது, நிறுத்தமுறையானே இரவுக் குறியிடம் உணர்த்து கின்றது.

இ — ள்: அகமனைப் புகாக்காலை ஆன இரவுக்குறியே - உண்மனையிற் சென்று கூடுதற்கு உரித்தல்லாத முற்காலத்து உண்டான இரவுக்குறியே.

ஏகாரம், பிரிநிலை.

இல்லகத்துள்ளும் மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே - இல்வரைப்பினுள்ளதாகியும் மனையோர் கூறிய கிளவிகேட் கும் பிற மனையிடத்ததாம் என்றவாறு.

அல்லகுறிப்பட்டதனை ஒருவாற்றான் உணர்த்திய காலத்து அவன் அது கேட்டு ஆற்றுவனென்பது கருதி 'மனையோர் கிளவி கேட்கும் வழியது' என்றார்; ஏகாரம் ஈற்றசை: என்றது, இரவுக் குறி. அம்முயற்சிக்காலத்து [2]அச்சநிகழ்தலின் அகமனைக்கும் புறமதிற்கும் நடுவே புணர்ச்சி நிகழுமென்றதாம். அகமனையிற் புகாக்காலை யெனவே இரவுக்குறி அங்ஙனஞ் சிலநாள் நிகழ்ந்த பின்னர் அச்சமின்றி உண்மனையிற் சென்று கூடவும் பெறு மென்பதுங் கூறியதாம். உதாரணம்:

[3]அஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள், (அகம். 198)

---

1. தோன்றும் என்றதனாற்றான் இக்கருத்துப் பெறப்படும் என்றபடி. எனக் கொள்க என்றதனால் தோழி சென்று காட்டாமல் அவ்விடத்தை நின்று காட்டல்வேண்டும் என்பது விதி என்பது பெறுதும். சென்று காட்டின் இவள்கண் ஐயமுண்டாம் என்பது கருத்துப்போலும்.

2. அச்சம் - தாய் முதலியோர் அறியவரும் என்னுமச்சம்.

3. இம்மூன்றுதாரணமும் இரவுக்குறி மனையோர் கிளவிகேட்கும் வழியது என்பதற்குப் பிரமாணம் காட்டியனவாகும்.

மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
வலையல் வாழிவேண் டன்னை, (அகம். 158)

அட்டி லோலை தொட்டனை நின்மே (நற்றிணை. 300)

*என வருவன பிறவும் மனையோர் கிளவி கேட்கும் வழியது.*

[1]உளைமான் றுப்பி னோங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
வுரைத்த சந்தி னூர லிருங்கதுப்
பைதுவர லசைவளி யாற்றக் கைபெயரா
வொலியல் வார்மயி ருளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகன் மழகளி றுறங்கு நாட
னார மார்பி னரிஞிமி றார்ப்பத்
தாரன் கண்ணிய னெஃகுடை வலத்தன்
காவல ரறித லோம்பிப் பையென
வீழாஅக் கதவ மசையினன் புகுதந்
துயங்குபட ரகல முயங்கித் தோண்மணந்
தின்சொ லளைஇப் பெயர்ந்தனன் றோழி
யின்றெவன் கொல்லோ கண்டிகு மற்றவ
னல்கா மையி னம்ப லாகி
யொருங்குவந் துவக்கும் பண்பி
னிருஞ்சூ ழோதி யொண்ணுதற் பசப்பே. (அகம். 102)

*இது மனையகம் புக்கது.*

*தலைவி புறத்துப் போகின்றாளெனச் செவிலிக்கு ஓர் ஐயம் நிகழ்ந்தவழிப் பின்னர் மனையகத்துப் புணர்ச்சி நிகழுமென் றுணர்க.* *(40)*

**(*பகற்குறியிட மிதுவெனல்*)**

**132.** பகற்புணர் களனே புறனென மொழிப
வவளறி வுணர வருவழி யான.

*இது முறையானே பகற்குறி உணர்த்துகின்றது.*

***இ — ள்:*** *அவள் அறிவு உணர வருவழி ஆன பகற்புணர்களனே - களஞ்சுட்டிய தலைவி அறிந்தவிடந் தலைவன் உணரும் படியாக வருவதோரிடத்து உண்டான பகற்புணருங் குறியிடத்தை,*

---

1. கழுது - பரண். பிழி - கள். கதுப்பு - முன்பக்கம் மயிர். குறிஞ்சி - குறிஞ்சிப் பண். குரல் - தினைக்கதிர். படாஅ - துயிலாத. வீழாக்கதவம்.- தாழ்வீழ்க்காத கதவம்; பூட்டாத கதவம். (தலைவன் வருமென்று தாழ்வீழ்க்காது திறந்து வைத்தாள் என்பது கருத்து). இதனால் உண்மனையிற் சென்று கூடினான் என்பது பெறப்படும்.

*புறன் என மொழிப - மதிற்புறத்தேயென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.*

*அறிவு, ஆகுபெயர். உதாரணம்:*

புன்னையங் கானற் புணர்குறி வாய்த்த
மின்னே ரோதியென் றோழிக்கு,

பூவேய் புன்னையந் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே (அகம் 240)

*என வருவன பிறவுங் கொள்க.* *(41)*

### (அல்லகுறிப்படுதலுந் தோழிக்குரித்தெனல்)

**133. அல்லகுறிப் படுதலு மவள்வயி னுரித்தே
யவன்குறி மயங்கிய வமைவொடு வரினே.**

*இது தோழி அல்லகுறிப்படுமாறு கூறுகின்றது. 'இருவகைக் குறி பிழைப்பாகியவிடத்தும்' என்புழித் தலைவி அல்லகுறிப் படுதல் கூறிற்று.*

**இ — ள்:** *அவன் குறி - தலைவன் தன்வரவு அறிவிக்குங் கருவிகள், மயங்கிய அமைவொடு வரின் - அவன் செயற்கையானன்றி இயற்கைவகையானே நிகழ்ந்து தோழி மயங்கிய அமைதியோடே வருமாயின், அல்லகுறிப்படுதலும் - குறியிடத்துக் கூட்டுங்கால் அவ்வல்லவாகிய குறியிலே மயங்குதலும், அவள் வயின் உரித்து - அத்தோழியிடத்து உரித்து என்றவாறு.*

*வெறித்தல் வெறியாயினாற்போலக் குறித்தல் குறியாயிற்று. அக்கருவி [1]புனலொலிப்படுத்தல் முதலியன. உதாரணம்:*

[2]கொடுமுண் மடற்றாழைக் கூன்புற வான்பூ
விடையு ளிழுதொப்பத் தோன்றிப் – புடையெலாந்
தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்
செய்தான் றெளியாக் குறி. (ஐந்: ஐம். 49)

*இஃது அல்லகுறிப்பட்டமை சிறைப்புறமாகக் கூறியது.*

---

1. புனலொலிப்படுத்தல் முதலியன என்றது. புனலொலிப்படுத்தல் புள்ளெழுப்பன் முதலியவற்றை.

2. கொடுமுள் - கொடியமுள். கூன்புறம் - வளைந்தபுறம். வான்பூ - வெள்ளியபூ 'கூம்பவிழ்ந்தவொண்பூ' எனவும் பாடம். இடையுள் - நடுவேயுள்ள சோறு. சோறு - மகரந்தம். இழுது - வெண்ணெய். தெளியாக்குறி - தெளிந்துகொள்ள முடியாத குறி.

[1]எறிசுறா நீள்கட லோத முலாவ
நெறியிறாக் கொட்கு நிமிர்கழிச் சேர்ப்ப
னறிவுறா வின்சொ லணியிழையாய் நின்னிற்
செறிவறா செய்த குறி. (திணை: ஐம். 43)

*இஃது அவன்மேற் குறிசெய்கின்றமை தலைவிக்குக் கூறியது.*

[2]இடுமணை லெக்க ரகன்கானற் சேர்ப்பன்
கடுமான் மணியரவ மென்று – கொடுங்குழை
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடிய
ருள்ளரவ நாணுவ ரென்று. (ஐந்: எழு. 59)

*இஃது இவன் இனி ஆண்டுவரிற் சுற்றத்தார் அறிவரென்றது.*

[3]வீழ்பெயற் கங்குனின் விளியோர்த்த வொடுக்கத்தால்
வாழுநாள் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ
தான்செறி கடுங்காப்பிற் றாய்முன்னர் நின்சாரா
லூழுறு கோடல்போ லொல்வளை யுகுபவால். (கலி. 48)

*இது, தலைவற்குப் பிற்றைஞான்று கூறியது.*

[4]அன்னை வாழியோ வன்னை நம் படப்பை
பொம்ம லோதி யம்மென் சாயல்
மின்னென நுடங்கிடைக் கின்னிழ லாகிய
புன்னை மென்காய் போகுசினை யிரிய
வாடுவளி தூக்கிய வசைவிற் கொல்லோ
தெண்ணீர்ப் பொய்கையுள் வீழ்ந்தென
வெண்ணினை யுரைமோ வுணர்குவல் யானே.

*இது தோழி தாய்க்குக் கூறுவாளாய் அல்லகுறி அறிவித்தது.*

---

1. ஓதம் - நீர்ப்பெருக்கு. இறா - இறாமீன். கொட்கும் - சுழன்றுதிரியும். சேர்ப்பன் நின்னறிவின்கண் நீங்காதிருந்த. நின்இல் - (நின் மனைக்கண்) செய்தகுறி செறிவு அறா என மாற்றுக. குறி மேலும் மேலும் செய்கின்றான் என்பது கருத்து.

2. எக்கர் - மணன்மேடு. புள் - பறவை. அரவம் - ஒலி. பெயர்ந்தாள் - குறிச் சென்று மீண்டாள். சிறுகுடியர் - சிறுகுடியிலுள்ள சுற்றத்தார். தான் செல் லும் ஒலியை அறியில் உள நாணுவர் என்று மீண்டாள் என இயைக்க.

3. பெயல் - மழை. விளி - விளித்தல் (அழைத்தல்). நீ குறியால் அழைத்த அழைப் பினை; என்றபடி. ஓர்த்த - செவியால் ஓர்த்த. ஒடுக்கம் - மனஒடுக்கம். தாள் செறிக்குங் காவல் - தாளிட்டு அடைத்தாற்போலும் கடிய காவல். ஊழ் - முறைமை. கோடல் போல் - காந்தட்பூ உகுமாறுபோல. உகுதல் - சொரிதல்.

4. அன்னை - தாயே! படப்பை - கொல்லை. புன்னை மென்காய் பொய்கையுள் வீழ்ந்தென எண்ணினை என இயைக்க. போகுசினை - நீண்ட கொம்பர். இரிய - அசைய. ஆடுவளி - அசையுங்காற்று. தூக்குதல் - மேலெழுப்பி அசைத்தல்.

[1]மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப
னணிநல முண்டகன்றா னென்றுகொ லெம்போற்
றிணிமண லெக்கர்மே லோதம் பெயரத்
துணிமுந்நீர் துஞ்சா தது. (ஐந்: எழு. 60)

*இது, தோழி இல்லுளிருந்து சிறைப்புறமாகக் கூறியது.*

*திங்கள் மேல் வைத்துக் கூறுவனவும் ஓதத்தின் மேல் வைத்துக் கூறுவனவும் பிறவுங் கொள்க.*

அரவளை மென்றோ ளனுங்கத் துறந்து
கரவல மென்றாரைக் கண்ட திலையா
லிரவெலா நின்றாயா லீர்ங்கதிர்த் திங்காள்.

புன்னை நனைப்பினும் பூஞ்சினை தோயினும்
பின்னிருங் கூந்தலென் றோழி நடையொக்கு
மன்ன நனையாதி வாழிகட லோதம்.

*என வருவன பிறவுங் கொள்க. [3]'படுதல்' எதிர்ப்படாமையை உணர்த்திற்று. ஆண்டுத் தன்மேல் தவறேற்றாது தலைவன் பொழுதறிந்து வாராமையின் மயங்கிற்றென்று [4]அமைவு தோன்றலின் 'அமைவு' என்றார். அது,*

தான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனவென் றடமென் றோளே (குறுந். 121)

*என்றாற் போல வரும். இதன் பயன் தலைவி துன்பந் தனதாகத் துன்புறுத்தலாயிற்று.* *(42)*

**(*தலைவனு மல்லகுறியால் வருந்துவனெனல்*)**

**134.** ஆங்காங் கொழுகு மொழுக்கமு முண்டே
யோங்கிய சிறப்பி னொருசிறை யான.

*இது தலைவனும் அல்லகுறியால் வருந்துவ னென்கின்றது.*

---

1. மணி - நீலமணி. ஓதம் - நீர்ப்பெருக்கு. முந்நீர் - கடல். எம்போல் துஞ்சாதது என்றுகொல் என இயைக்க.

2. அரவளை - வாளரத்தால் அராவப்பட்ட வளை. அனுங்க - வருந்த; மெலிய. கரவலம் - மறைந்திரோம். இது திங்கண்மேல் வைத்துக் கூறியது. புன்னையை நனைப்பினும் என விரிக்க.

3. படுதல் என்பதற்கு மயங்குதல் என்று பொருள் கூறலின் எதிர்ப்படாமையை யுணர்த்திற்று என்றார்.

4. அமைவு - மனம் அமைதல்.

இ — ள்: ஓங்கிய சிறப்பின் - தனது மிக்க தலைமைப்பாட்டினாலே பொழுதறிந்து வாராமையின், ஒருசிறை ஆன ஆங்கு - தான் குறிசெய்வதோரிடத்தே தன்னானன்றி இயற்கையான் உண்டான அவ்வல்ல குறியிடத்தே, ஆங்கு ஒழுகும் ஒழுக்கமும் உண்டு - தலைவியுந் தோழியுந் துன்புறுமாறு போலத் தலைவனுந் துன்புற்று ஒழுகும் ஒழுக்கமும் உண்டு என்றவாறு.

முன்னர் நின்ற [1]'ஆங்கு' முன்னிற்சூத்திரத்து அல்லகுறியைச் சுட்டிற்று, பின்னர் நின்ற 'ஆங்கு,' உவமவுருபு. உதாரணம்:

[2]தாவி னன்பொன் றைஇய பாவை
விண்டவ ழிளவெயிற் கொண்டு நின் றன்ன
மிகுகவி னெய்திய தொகுகுர லைம்பாற்
கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன் றைவருஞ் செவ்வழி நல்யா
ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி
யணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற்
றினம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
பெறலருங் குரைய ளென்னாய் வைகலு
மின்னா வருஞ்சுர நீந்தி நீயே
யென்னை யின்னற் படுத்தனை மின்னுவசிப்
புரவுக்கால் கடுப்ப மறலி மைந்துற்று
விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா விலங்குங் கடன்மரு டானை
மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
யோங்குதிரைப் பௌவ நீங்க வோட்டிய
நீர்மா ணெஃக நிறத்துச்சென் றழுந்த
கூர்மத னழியரோ நெஞ்சே யானா
தெளிய ணல்லோட் கருதி
விளியா வெவ்வந் தலைத்தந் தோயே. (அகம் 212)

1. ஆங்கு ஆங்கு - அவ்வல்ல குறியிடத்து (த் தலைவியுந் தோழியுந் துன்புறுமாறு) போல (என்பது நச்சினார்க்கினியர் கருத்து).

2. தைஇய - செய்த. இளவெயிற்கொண்டு - இளவெயிலைத் தன்மேற்கொண்டு, எய்திய புரியை என முடிக்க. நயவன் - யாழ்ப்பாடலில் நன்கு பயின்றோன். தைவரல் - தடவல்; இயக்குதல். ஓர்த்தன்ன - கோட்டாலொத்த. அணங்கு - வருத்துந் தெய்வமகள். நசைஇ - விரும்பி. பெறல் அருங் குரைய ளென்னாய் - பெறுதற்கரியளென்று கருதாயாய். மின்னுவசி - மின்னொளி. மறலிமைந் துற்று - மறலிபோலும் வலியுற்று; மறலி என்பதற்குப் பகைத்து எனினுமாம். முற்றி - வளைத்து. ஓட்டிய - புறங்கொடுக்கச்செய்த. எவ்வம் - துன்பம்.

[1]வடமலை மிசையோன் கண்ணில் முடவன்
றென்றிசை யெல்லை விண்புகு பொதியிற்
சூருடை நெடுஞ்சுணை நீர்வேட் டாங்கு
வருந்தினை வாழியெ னுள்ளஞ் சாரற்
பொருதுபுறங் கண்ட பூநுத லொருத்தல்
சிலம்பிழி பொழுதி னத்தம் பெயரிய
வல்லிய மடுக்கத் தொடுங்கு நல்வரைக்
கல்லக வெற்பன் மடமகண்
மெல்லியல் வனமுலைத் துயிலுற் றோயே.

*இவை அல்லகுறிப்பட்டு நீங்குகின்றான் நெஞ்சிற்குக் கூறியன.* *(43)*

***(தலைவற்குத் தீயஇராசியினும் தீயநாளினும் துறந்த ஒழுக்கமில்லையெனல்)***

**135.** மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்
துறந்த வொழுக்கங் கிழவோற் கில்லை.

*இது தலைவற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.*

*இ — ள்:* ஓரையும் நாளுந் துறந்த ஒழுக்கம் - தீய இராசியின் கண்ணுந் தீய நாளின்கண்ணுங் கூட்டத்தைத் துறந்த ஒழுக்கம், கிழவோற்கு மறைந்த ஒழுக்கத்து இல்லை - தலைவற்குக் களவொழுக்கத்தின்கண் இல்லை, எனவே கற்பின்கணுள என்றவாறு.

*ஒழுக்கமாவது சீலமாதலிற் சீலங்காரணத்தால் துறப்பது தீதாகிய இராசியும் நாளுமென்பது பெற்றாம். நாளாவது [2]அவ்விராசி மண்டில முழுவதும். கிழத்தி துறந்த ஒழுக்கம் முந்நாளல்லதென (122) முற்கூறிற்று. [3]இதனான் அன்பு மிகுதி கூறினார். இதற்குப் பிராயச்சித்தம் அந்தணர் முதலிய மூவர்க்கும் உண்மை 'வந்தகுற்றம் வழிகெட வொழுகலும்' (146) எனக் கற்பியலிற் கூறுப.* *(44)*

---

1. வடமலை - மேரு. மிசையோனாகிய முடவர் நீர்வேட்டாங்கு என இயைக்க. பொதியில் - பொதியமலையில். உள்ளம் - உள்ளமே! பயிலுற்றோயாகிய உள்ளம் எனக் கூட்டுக. ஒருத்தல் - களிற்றியானை. அத்தம் - வழி. வல்லியம் - புலி. அடுக்கம் - மலைப்பக்கம்.

2. அவ்விராசி - தீயவிராசி. அத் தீய இராசிக்குரியநாள் முழுவதும் தீயநாள் என்பார் முழுதும் என்றார். நாள் - நட்சத்திரம்.

3. இதனான் - இச்சூத்திரத்தான்.

**(தலைவற்கு வழியருமை முதலியன இல்லையெனல்)**

**136. ஆறின தருமையு மழிவு மச்சமு
மூறு முளப்பட வதனோ ரன்ன.**

*இதுவுந் தலைவற்கு இல்லன கூறுகின்றது.*

*இ — ள்:* **உளப்பட** *- நிலவும் இருளும் பகைவரும் போல்வனபற்றிச் செலவழுங்குதல் உளப்பட,* **ஆறினது அருமையும்** *- நெறியினது அருமை நினைந்து கூட்ட நிகழ்ந்தவழிக் கூறுதலும்,* **அழிவும்** *- குறைந்த மனத்தனாதலும்,* **அச்சமும்** *- பாம்பும் விலங்கும் போல்வன நலியுமென்று அஞ்சுதலும்,* **ஊறும்** *- அக் கருமத்திற்கு இடையூறு உளவாங்கொலென்று அழுங்குதலும்,* **அதனோரன்ன** *- கிழவற்கு இல்லை என்றவாறு.*

*கிழவற்கில்லையெனவே கிழத்திக்குந் தோழிக்கும் உள வாயிற்று. அவை முற்காட்டியவற்றுட் காண்க.* *(45)*

**(களவினைத் தந்தை முதலியோர் இவ்வாறுணர்வரெனல்)**

**137. தந்தையுந் தன்னையு முன்னத்தி னுணர்ப.**

*இது தந்தையுந் தன்னையுங் களவொழுக்கம் உணருமாறு கூறுகின்றது.*

*இ — ள்:* **தந்தையுந் தன்னையும்** *ஒருவர் கூறக்கொள்ளாது உய்த்துக் கொண்டுணர்வர் என்றவாறு.*

*நற்றாய் அறத்தொடு நின்றவழியும்,*

[1]இருவர்கட் குற்றமு மில்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை (கலி. 39)

*என்றலின் முன்னர் நிகழ்ந்த வெகுட்சி நீங்கி உய்த்துக்கொண்டு உணர்ந்தாராயிற்று.* *(46)*

**(நற்றாய் இவ்வாறு அறத்தொடு நிற்பாளெனல்)**

**138. தாயறி வுறுதல் செவிலியோ டொக்கும்.**

*இது தந்தைதன்னைக்கு நற்றாய் களவொழுக்கம் உணர்த்துமாறு கூறுகின்றது.*

---

1. தெருமந்து - அலமந்து (- சுழற்சியுற்றுத்). தலைசாய்த்தார் என மாறுக.

இ — ள்: *தாய் அறிவுறுதல் - நற்றாய் களவொழுக்கம் உண்டென்று அறிந்த அறிவு தந்தைக்குந் தன்னைக்குஞ் சென்று உறுந் தன்மை, செவிலியோடு ஒக்கும் - செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்று உணர்த்திய தன்மையோடு ஒக்கும் என்றவாறு.*

*என்றது, செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றாற்போல நற்றாயுந் தந்தைக்குந் தன்னைக்கும் அறத்தொடு நிற்கும் என்றவாறாயிற்று. அது,*

எனவாங், கறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
வென்னையர்க் குற்றுரைத்தாள் யாய் (கலி. 39)

*என்பதனால் உணர்க.*

*[1]இனி இதற்கு நற்றாயுஞ் செவிலி உணர்ந்தாற்போல உணருமென்று பொருள்கூறில் 'தாய்க்கும் வரையார்' (116) என்னுஞ் சூத்திரம் வேண்டாவாம்.* *(47)*

**(*களவு வெளிப்படுதற்கு நிமித்தமாவான் தலைவனெனல்*)**

**139.** அம்பலு மலருங் களவுவெளிப் படுத்தலி
னங்கதன் முதல்வன் கிழவ னாகும்.

*இது களவு வெளிப்படுதற்கு நிமித்தமாவான் தலைமகனென்கின்றது.*

இ — ள்: *அம்பலும் அலருங் களவு வெளிப்படுத்தலின் - [2]முகிழ்த்தலும் பலரறியச் சொல் நிகழ்த்தலுங் களவொழுக்கத்தினை வெளிப்படுத்தலான், அங்கதன் முதல்வன் கிழவன் ஆகும் - அவ்விடத்து அவ்வெளிப்படை நிகழ்த்துதற்கு நிமித்தமாயினான் தலைமகனாம் என்றவாறு.*

*தலைவனை அறிந்தபின் அல்லது முற்கூறிய ஐயம் நிகழாமையின் தலைவி வருத்தம் நிமித்தமாகா; ஆண்டு ஐயம் நிகழ்த*

---

1. இவ்வாறு கூறுவார் இளம்பூரணர். அவர் செவிலிபோலக் கலங்குவதல்லது வெகுளலிலள் என்பர். இவ்வாறு கூறுவதினும் செவிலி கூற்றானுணர்ந்தாற் போல நற்றாயும் கூற்றானுணரும் என்று கூறல் பொருத்தமாகும். செவிலி தோழி கூற்றானுணரும் அதுபோல நற்றாய் செவிலி கூற்றானுணரும் என்பது கருத்தாகும். செவிலி தோழி கூற்றானுணர்தல், தோழிகூற்றுட் காண்க.

2. முகிழ்த்தல் என்றது அம்பலை. அரும்பல் அம்பல் என்றாயிற்று. அஃதாவது இதழ்குவித்துணர்த்தல். இஃது சிலரறிந்தது.

*லன்றித் துணிவு தோன்றாமையின். வரைவு நீட்டிப்போனுந் தலைவி தமர்க்குக் கூறி வெளிப்படுப்போனுந் தலைவனே என்றுணர்க. அது,*

[1]நீரொலித் தன்ன பேஎ
ரலர் நமக் கொழிய வழப்பிரிந் தோரே, (அகம். 211)

[2]நெறியறி செறிகுறி புரிதிரி பறியா
வறிவனை முந்துறீஇ (கலி. 39)

*என்றாற்போல வருவனவும் பிறவும் வெளிப்படையாமாற்றாற் கண்டுணர்க.* *(48)*

### (வரைவு இருவகைப்படுமெனல்)

**140.** வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்
றாயிரண் டென்ப வரைத லாறே.

*இது வரையும் பகுதி இனைத்தென்கின்றது.*

**இ – ள்:** *வெளிப்பட வரைதல் - முற்கூறியவாற்றானே களவு வெளிப்பட்டபின்னர் வரைந்து கோடல், படாமை வரைதல் - அக்களவு வெளிப்படுவதன் முன்னர் வரைந்து கோடல், என்று ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே - என்று கூறப்பட்ட அவ் விரண்டே என்று கூறுவர் ஆசிரியர் வரைந்து கொள்ளும் வழியை என்றவாறு.*

சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே. (கலி. 39)

*இது வெளிப்பட்டபின் வரைவு நிகழ்ந்தது.*

[3]கொல்லைப் புனத்த வகில்சுமந்து கற்பாய்ந்து
வானி னருவி ததும்பக் கவினிய
நாட னயனுடைய னென்பதனா னீப்பினும்
வாடன் மறந்தன தோள். (ஐந்: எழு. 2)

*இது வெளிப்படாமல் வரைவு நிகழ்ந்தது.*

எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே. (அகம். 195)

---

1. பேரலர் - பெரிய அலர்.
2. இதில் 'பசலையும் அம்பலும் - மாய' எனப் பின்வருமடியால் அம்பல் கூறப் படுதலறிக.
3. புனத்த அகில் - புனத்திலுள்ள அகில். கற்பாய்ந்து - கற்களைப் பாய்ந்து. வான் - மழை. நயன் - அன்பு. வாடல் - வாடுதல்.

*என்றாற்போல்வன வெளிப்படுவதன் முன்னர்க் [1]கொண்டு தலைக் கழிந்துழிக் கொடுப்போரின்றியுங் கரணம் நிகழ்ந்தமையின் அதுவும் வெளிப்படாமல் வரைந்ததாம். (49)*

***(ஓதல், பகை, தூது என்ற மூன்றினும் வரையாது பிரிதல் கிழவோற் கில்லையெனல்)***

**141.** வெளிப்படை தானே கற்பினொ டொப்பினு
ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக
**வரையாது பிரிதல் கிழவோற் கில்லை.**

*இது முதற்கூறிய வரைவு நிகழ்த்தாது பிரியும் இடம் இது வெனவும் பிரியலாகாவிடம் இதுவெனவுங் கூறுகின்றது.*

*இ — ள்:* வெளிப்படைதானே கற்பினொடு ஒப்பினும் - *முற் கூறிய வெளிப்படைதானே கற்பினுள் தலைவி உரிமை சிறந் தாங்கு அருமைசிறந்து கற்போடொத்ததாயினும்,* ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக - *முற்கூறிய ஓதல் பகை தூதென்ற மூன் றும் (25) நிமித்தமாக,* வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை - *வரைவிடைவைத்துப் பிரிதல் தலைமகற்கில்லை என்றவாறு.*

*மூன்றுமென முற்றும்மைகொடாது கூறினமையின் ஏனைப் பிரிவுகளின் வரையாது பிரியப்பெறும் என்றவாறாயிற்று. அவை வரைதற்குப் பொருள்வயிற்பிரிதலும் வேந்தற்குற்றுழியுங் காவற் குப் பிரிதலுமென மூன்றுமாம். உதாரணம்:*

[2]பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதைய
டிணிமண லடைகரை யலவ னாட்டி
யசையின ளிருந்த வாய்தொடிக் குறுமக
ணலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரைய ளாயி னறந்தெரிந்து
நாமுறை தேஎ மரூஉப்பெயர்ந் தவனோ
டிருநீர்ச் சேர்ப்பி னுப்புட னுழுதும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்

---

1. கொண்டுதலைக்கழிதல் - தலைவியை உடன்கொண்டுபோதல்.

2. அடர்தல் - நெருங்கல். வேய்ந்த கோதையள் - அணிந்த கூந்தலள். அலவன் - ஞெண்டு. அசையினளிருந்த - அலவனாட்டியதனால் இளைப்புற்றிருந்த. கலநிறை - கலநிறைய. கலம் - கொள்ளும் பாத்திரம். தேஎம் - தேயம். மரூஉ - மருவி. அவன் என்றது தலைவி தந்தையை. படுத்தனமாய்ப் பணிந்தனமாய்

படுத்தனம் பணிந்தன மடுத்தன மிருப்பிற்
றருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரண் முத்தங் கொண்டு ஞாங்கர்
தேனிமி ரகன்கரைப் பகுக்குங்
கானலம் பெருந்துறைப் பரதவ னமக்கே. (அகம். 280)

*இதனுள், ஈண்டுள்ள பொருள் கொடுத்தாற் பெறல் அரிய ளாயின் தன்னை வழிப்பட்டால் தந்தை தருவனோ? அது நமக்கு அரிதாகலின் இன்னும் பொருள் நாம் மிகத் தேடிவந்து வரைது மெனப் பொருள்வயிற் பிரியக் கருதியவாறு காண்க.*

[1]பூங்கொடி மருங்குற் பொலம்பூ ணோயே
வேந்து வினைமுடித்து வந்தனர்
காந்தண் மெல்விரற் கவையினை நினைமே. (அகம்.)

*இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தான் வரைவு மலிந்தமை தோழி கூறியது.*

*ஏனைய வந்துழிக் காண்க.*

*ஓதுதற்கு ஏவுவார் இருமுதுகுரவராதலின் அவர் வரை யாமற் பிரிகவென்றார்.*

*பகைவென்று திறைகோடற்குப் பிரியுங்கால் அன்புறு கிழத்தி துன்புற்றிருப்ப வரையாது பிரிதலின்று. இது தூதிற்கும் ஒக்கும்.*

*மறைவெளிப்படுதல் கற்பென்று (499) செய்யுளியலுட் கூறு தலின் இதனை இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தார். கற்பி னோடொப்பினும் பிரிவின்றெனவே கற்பிற்காயிற் பிரிவு வரை வின்றாயிற்று.* (50)

## களவியல் முற்றிற்று

---

அடுத்தனமாய் இருப்பின் பரதவன் நமக்குத் தருகுவனோ? என இயைக்க. படுத்தல் - உப்பும் மீனும் படுத்தல். அவன்வயமாதல் என்பாருமுளர். பொருந்துவது கொள்க.

1. கொடி மருங்குல் - கொடி போலுமிடை. பொலம்பூண் - பொன்னாற்செய்த பூண். காந்தண்மெல்விரல் - கை; ஆகுபெயர். கவைதல் - அகப்படுத்தல் = தழுவல்.

# நான்காவது: கற்பியல்

## (கற்பாவது இதுவெனல்)

142. கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே

என்பது சூத்திரம். இவ்வோத்துக் களவு கற்பென்னும் கைகோளிரண்டினுட் கற்புணர்த்தினமையிற் கற்பியலென்னும் பெயர்த்தாயிற்று. கற்பியல் கற்பினது இயலென விரிக்க. இயல் - இலக்கணம். [1]அஃது ஆகுபெயரான் ஓத்திற்குப் பெயராயிற்று. அது [2]கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும் அவனை இன்னவாறே வழிபடுகவெனவும் [3]இரு முது குரவர் கற்பித்த லானும் 'அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும், ஐயர் பாங் கினும் அமரர்ச் சுட்டியும்' (146) ஒழுகும் ஒழுக்கந் தலைமகன் கற்பித்தலானுங் கற்பாயிற்று. இனித் தலைவனுங் களவின்கண் [4]ஓரையும் நாளுந் [5]தீதென்று அதனைத் துறந்தொழுகினாற் போல ஒழுகாது [6]ஓத்தினுங் கரணத்தினும் யாத்த சிறப்பிலக் கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுந் துணை யும் இல்லற நிகழ்த்துதலிற் கற்பாயிற்று. களவு வெளிப்பட்ட பின்னராயினும் அது வெளிப்படாமையாயினும் உள்ளப்புணர்ச்சி நிகழ்ந்தவழியாயினும் வரைதல் அக்களவின் வழியாதலின் மேலதனோடு இயைபுடைத்தாயிற்று. இச்சூத்திரம் கற்பிற் கெல்லாம் பொதுவிலக்கணங் கூறுகின்றது.

---

1. அஃது ஆகுபெயரான் ஓத்துக்குப் பெயராயிற்று என்றது இலக்கணம் என்பது இலக்கணத்தையுணர்த்தும் பகுதிக்குப் பெயராயிற்று என்றபடி. காரிய ஆகுபெயர்; தானியாகுபெயர் எனினுமாம்.

2. கொண்டான் - கொண்டவன் (- நாயகன்).

3. இரு முதுகுரவர் என்றது தாய் தந்தையரை.

4. ஓரை - இராசி. நாள் - நட்சத்திரம்.

5. தீதென்று அதனை என்பது தீதென்றதனை என ஒருசொல்லாக ஏட்டுப்பிரதி யிற் காணப்படலின் அவ்வாறிருப்பதே பொருத்தம். தீதென்றதனை - தீதென்று நூல் கூறிய விதியை. துறந்து - கைவிட்டு.

6. ஓத்து - வேதம். கரணம் - சடங்கு (கிரியை).

இ — ள்: கற்பெனப்படுவது - கற்பென்று சிறப்பித்துக் கூறப் படுவது, கரணமொடு புணர - வேள்விச் சடங்கோடே கூட, கொளற்கு உரி மரபிற் கிழவன் - ஒத்த குலத்தோனும் மிக்க குலத் தோனுமாகிக் கொள்ளுதற்குரிய முறைமையினையுடைய தலை வன், கிழத்தியை - ஒத்த குலத்தாளும் இழிந்த குலத்தாளுமாகிய தலைவியை, கொடைக்கு உரி மரபினோர் கொடுப்ப - கொடுத் தற்குரிய முறைமையினையுடைய இரு முதுகுரவர் முதலாயி னார் கொடுப்ப, கொள்வது - கோடற்றொழில் என்றவாறு.

'எனப்படுவது' என்னும் பெயர் [1]'கொள்வ்து' என்னும் பெயர்ப் பயனிலை கொண்டது; [2]இது சிறப்புணர்த்துதல் 'அவ்வச் சொல்லிற்கு' (தொல். சொல். 297) என்னுஞ் சூத்திரத்துட் கூறி னாம். [3]'கொடுப்போரின்றியும்' (143) என மேல்வருகின்றதாகலின் இக் கற்புச் சிறத்தலிற் சிறந்ததென்றார். [4]இஃது 'என' என்கின்ற எச்சமாகலிற் சொல்லளவே எஞ்சிநின்றது. [5]இதனாற் 'கரணம் பிழைக்கில் மரணம் பயக்கும்' என்றார். [6]அத்தொழிலின் நிகழுங் கால் இவளை இன்னவாறு பாதுகாப்பாயெனவும், இவற்கு இன்னவாறே நீ குற்றேவல் செய்தொழுகெனவும் அங்கியங் கடவுள் [7]அறிகரியாக மந்திரவகையாற் கற்பிக்கப்படுதலின் அத் தொழிலைக் கற்பென்றார். தலைவன் பாதுகாவாது பரத்தைமை செய்து ஒழுகினும் பின்னர் அது கைவிட்டு இல்லறமே நிகழ்த்தித் துறவறத்தே செல்வனென்றுணர்க. இக் கற்புக் காரணமாகவே

1. கொள்வது - தொழிற்பெயர்.
2. இது என்றது எனப்படுவது என்றதனை.
3. 'கொடுப்போரின்றியும் கரணமுண்டே' என்றதனால் கற்பிற்குக் கரணம் நிச்சயமாக வேண்டப்படும் என்பது பெறுதும். அதனாற் கரணமொடு புணர்தலிற் கற்புச் சிறந்தது என்றபடி.
4. இஃது என்றது எனப்படுவது என்றதனை. அச்சொல்லில் என என்பது என்றுசொல்ல எனப் பொருட்டாலின் சொல் என்னுஞ் சொல் எஞ்சிநின்ற தென்க. இது நச்சினார்க்கினியர் கருத்து. 'சொல்லெனெச்சம் ... சொல்லள வல்ல தெஞ்சுதலின்றே' என்பது (சொல். எச். 44ஞ் சூத்திரம்).
5. இதனால் - எனப்படுவதென்று விதந்துகூறிய இதனால்.
6. அத்தொழிலென்றது கரணத்தொழிலை.
7. அறிகரி - அறியும்சான்று.

[1]பின்னர் நிகழ்ந்த ஒழுகலாறெல்லாம் நிகழவேண்டுதலின் அவற்றையுங் கற்பென்று அடக்கினார். இருவரும் எதிர்ப்பட்ட ஞான்று தொடங்கி உழுவலன்பால் உரிமைசெய்து ஒழுகலிற் [2]'கிழவனுங் கிழத்தியும்' என்றார். [3]தாயொடு பிறந்தாருந்தன்னையருந் தாயத்தாரும் ஆசானும் முதலியோர் கொடைக்குரியரென்றற்கு 'மரபினோர்' என்றார். உதாரணம் :

[4]உழுத்து தலைப்பெய்த கொழுங்களி மிதவைப்
பெருஞ்சோற் றமலை நிற்ப நிலைகாற்
றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
கோள்கா னீங்கிய கொடுவெண் டிங்கட்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
வுச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலை யவ்வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த வீரித ழலரி
புல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர

---

1. பின்னர் நிகழ்ந்த ஒழுகலாறுஎல்லாம் என்றது பரத்தைமை செய்தொழுகன் முதலியவற்றை.

2. கிழவன் - உரியோன். கிழத்தி - உரியோள்.

3. தாயொடு பிறந்தார் - மாமன்மார். தன்னையர் - தமையன்மார். தாயத்தார் - சுற்றத்தார்.

4. தலைப்பெய்த - கூட்டிய. களிமிதவை - குழைதலையுடைய கும்மாயம். கும்மாயம் என்பது புழுக்கிய பச்சைப் பயற்றோடு சருக்கரை முதலியன கூட்டி ஆக்கப்படுஞ் சிற்றுண்டி. (பெரும்பாண்.114ம் அடியுரை). அமலை - ஆரவாரம். ஞெமிரி - பரப்பி. கோள்கால் - அசுபக் கிரகங்களினிடம். கொடு - சகடம் (- உரோகணி). கொடுவெண்டிங்கள்நாள் என்றது உரோகணியோடு சந்திரன் கூடியநாளை. மண்டை - நீர்கொள்ளும் பாத்திரம். முன்ன - முற்படக் கொடுப்பன. பின்ன - பிற்படக் கொடுப்பன. பெற்றோற்பெட்கும் - கொண்டானை விரும்பும். பிணையை - பேணுதலையுடையை. பிணை தலையுடையை எனினுமாம். இனிப் பிணாப்பெண்ணுக்குப் பெயராதலின், பிணை என்பதும் அப்பொருளில்வந்ததெனினுமாம். வதுவை - குளிப்பாட்டுக் கல்யாணம்.

வோரிற் கூடிய வுடன்புணர் கங்குற்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்
தொடுங்கினள் கிடந்த வோர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
வஞ்சின ளுயிர்த்த காலை யாழநின்
னெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
வின்னகை யிருக்கைப் பின்யான் வினவலிற்
செஞ்சூட் டொண்குழை வண்காது துயல்வர
வகமலி யுவகைய ளாகி முகனிகுத்
தொய்யென விளைஞ்சி யோளே மாவின்
மடங்கொண் மதைஇய நோக்கி
னொடுங்கீ ரோதி மாஅ யோளே. (அகம். 86)

*இதனுள், வதுவைக்கு ஏற்ற கரணங்கள் நிகழ்ந்தவாறும் தமர்கொடுத்தவாறுங் காண்க. சுற்றஞ் சூழ்ந்து நிற்றலானும் தமர் அறிய மணவறைச் சேறலானும் களவாற் சுருங்கிநின்ற [1]நாண் சிறந்தமையைப் பின்னர்த் தலைவன் வினாவ அவண் மறுமொழி கொடாது நின்றமையைத் தலைவன் தோழிக்குக் கூறியவாறு காண்க. இதனானே [2]இது களவின்வழி நிகழ்ந்த கற்பாயிற்று. (1)*

***(உடன் போகிய காலத்துக் கொடுப்போ ரின்றியுங் கரண நிகழுமெனல்)***

143. கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான.

*இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.*

*இ — ள்: கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே - முற்கூறிய கொடைக்குரிய மரபினோர் கொடுப்பக் கோடலின்றியுங்கரணம் உண்டாகும், புணர்ந்து உடன்போகிய காலையான - புணர்ந்து உடன்போகிய காலத்திடத்து என்றவாறு.*

*இது புணர்ந்து உடன்போயினார் ஆண்டுக் கொடுப்போ ரின்றியும் வேள்வியாசான் காட்டிய சடங்கின் வழியாற் கற்புப் பூண்டு வருவதும் ஆமென்றவாறு. இனி ஆண்டு வரையாது மீண்டு வந்து கொடுப்பக் கோடல் உளதேல் அது மேற்கூறியதன்கண் அடங்கும்.*

---

1. நாண்சிறந்தமையை - நாண் சிறந்தமையால் என்றிருப்பது நலம்.

2. இது இச்செய்யுளிற் கூறிய கற்பு.

*இனிப் போயவழிக் கற்புப் பூண்டலே கரணம் என்பாருமுளர். [1]எனவே கற்பிற்குக் கரணம் ஒருதலையாயிற்று.*

[2]பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கேசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி யாய்கழற்
செயலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே. (குறுந். 15)

*இதனுள் 'வாயாகின்று' எனச் செவிலி நற்றாய்க்குக் கூறின மையானும் 'விடலை' எனப் பாலைநிலத்துத் தலைவன் பெயர் கூறினமையானும் இது கொடுப்போரின்றிக் கரணம் நிகழ்ந்தது. 'அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமகள்'. (அகம். 195) என்பதும் அது. (2)*

**(அந்தணர் முதலிய மூவர்க்கும் புணர்த்த கரணம் வேளாளர்க்குரியவான காலமுமுண்டெனல்)**

**144.** [3]மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்
கீழோர்க் காகிய காலமு முண்டே.

*இது முதலூழியில் வேளாளர்க்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.*

*இ – ள்:* மேலோர் மூவர்க்கும் புணர்த்த *கரணம் - வேதநூல் தான் அந்தணர் அரசர் வணிகரென்னும் மூவர்க்கும் உரியவாகக் கூறிய கரணம், கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டு - அந்தணர் முதலியோர்க்கும் மகட்கொடைக்குரிய வேளாண் மாந்தர்க்குந் தந்திர மந்திர வகையான் உரித்தாகிய காலமும் உள என்றவாறு.*

---

1. எனவே என்பது சூத்திரப்பொருளை அநுவதித்து நின்றது.

2. பறை - முரசு. பணிலம் - சங்கு. இறைகொள்பு - தங்கி. நட்புவாயாகின்று - நண்பு உண்மையாகியது. செயலை - அசோகம்பூ; விடலைக்கடை. சேயிலை எனவும் பாடம். இப்பாடம் நன்று.

3. இச்சூத்திரத்திற்கு இவர்கூறிய பொருளும் அடுத்த சூத்திரப் பொருளும் பொருத்தமோ என்பது ஆராயத்தக்கது. வருஞ்சூத்திரத்து என்ப என்பதற்கு வடநூலாரைக் கூறுவதும் பொருத்தமின்று. இச்சூத்திரத்தில் கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டு என்பதனால் முன்கீழோர்க்குக் கரணமில்லை என்று கொண்டு பொருள்கூறலே பொருத்தமாம். அடுத்த சூத்திரத்திற்குக் கீழோர்க்குப் பொய்யும்வழுவுந் தோன்றியபின் கரணம் யாக்கப்பட்டது என்பது கருத்தாகக் கோடலே பொருத்தமாம். இக்கருத்துப் பொருத்த மாதலை, இளம் பூரணர் விரிவுரை நோக்கியறிக.

எனவே, முற்காலத்து நான்கு வருணத்தார்கும் கரணம் ஒன்றாய் நிகழ்ந்தது என்பதாம். அஃது இரண்டாம் ஊழிதொடங்கி வேளாளர்க்குத் தவிர்ந்தது என்பதூஉந் தலைச் சங்கத்தாரும் முதனூலாசிரியர் கூறிய முறையே கரணம் ஒன்றாகச் செய்யுள் செய்தார் என்பதூஉங் கூறியவாறாயிற்று. உதாரணம் இக்காலத்திலின்று. (3)

**(பொய்யும் வழுவுந் தோன்றியபின் கரணங் கட்டப்பட்டதெனல்)**

**145.** பொய்யும் வழுவுந் தோன்றிய பின்ன
ரையர் யாத்தனர் கரண மென்ப.

இது, வேதத்திற் கரணம் ஒழிய ஆரிடமாகிய கரணம் பிறந்த வாறும் அதற்குக் காரணமுங் கூறுகின்றது.

**இ — ள்:** பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர் - ஆதி ஊழி கழிந்தமுறையே அக்காலத்தந்தந் தொடங்கி இரண்டாம் ஊழி முதலாகப் பொய்யும் வழுவுஞ் சிறந்து தோன்றிய பிற்காலத்தே, ஐயர் யாத்தனர் கரண மென்ப - இருடிகள் மேலோர் கரணமும் கீழோர் கரணமும் வேறுபடக் கட்டினாரென்று கூறுவர் என்றவாறு.

ஈண்டு 'என்ப' (249) என்றது முதனூலாசிரியரையன்று, வடநூலோரைக் கருதியது. பொய்யாவது:- செய்த ஒன்றனைச் செய்திலேனென்றல். வழுவாவது:- சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகல். அஃது அரசரும் வாணிகரும் தத்தம் வகையாற் செய்யத் தகுவன செய்யாது சடங்கொப்புமை கருதித் தாமும் அந்தணரோடு தலைமை செய்தொழுகுதலுங் களவொழுக்கத்தின் இழுக்குதல் போல்வனவும் அவர்க்கிழுக்கம். ஏனை வேளாளரும் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின்னர்ப் பொய்யும் வழுவுந் தோன்றி வழுவுதல் அவர்க்கிழுக்கம். இவற்றைக்கண்டு இருடிகள் மேலோர் மூவர்க்கும் வேறு வேறு சடங்கினைக் கட்டிக் கீழோர்க்குங் களவின்றியும் கற்பு நிகழுமெனவுஞ் சடங்கு வேறு வேறு கட்டினார். எனவே, ஒருவர் கட்டாமல் தாமே தோன்றிய கரணம் வேதநூற்கே உளதென்பது பெற்றாம். [1]ஆயின் கந்தருவ வழக்கத்திற்குச் சிறந்த களவு விலக்குண்டதன்றோ எனின், ஒரு

1. இக்கருத்துப் பொருத்தமில்லை.

வனையும் ஒருத்தியையும் எதிர்நிறீஇ 'இவளைக்கொள்ள இயை தியோ நீ' எனவும், 'இவர்க்குக் கொடுப்ப இயைதியோ நீ' எனவும் இருமுதுகுரவரும் கேட்டவழி அவர் கரந்த உள்ளத்தான் இயைந்தவழிக் கொடுப்பவாகலின் அது தானே ஒருவகையாற் கந்தருவ வழக்கமாம்; களவொழுக்கம் நிகழாதாயினும் என்பது கரணம் யாத்தோர் கருத்தென்பது பெற்றாம். இதனானே இயற் கைப் புணர்ச்சிக்கண் மெய்யுறு புணர்ச்சியையும் உள்ளப் புணர்ச்சி யென்று கூறி அதன்வழிக் கற்பு நிகழ்ந்ததென்றுங் கூறவும்படும். இவ்வாசிரியர் ஆதியூழியின் அந்தத்தே இந்நூல் செய்தலின் முத னூலாசிரியர் கூறியவாறே களவு நிகழ்ந்த பின்னர்க் கற்பு நிகழு மாறுங் கூறித் தாம் நூல்செய்கின்ற காலத்துப் பொய்யும் வழுவும் பற்றி இருடிகள் கரணம் யாத்தவாறுங் கூறினார். அக்களவின் வழி நிகழ்ந்த கற்புங் கோடற்கென்று உணர்க.

உதாரணம் :

[1]மைப்புறம் புழுக்கி னெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
யங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணு மிமையோர் நோக்குபு மறைய
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறிக்கும் பயம்பம லறுகைத்
தழங்குரல் வானந் தலைப்பெயற் கீன்ற
மண்ணு மணியன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்த
ரிழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்

1. மைப்புறப்புழுக்கின் - ஆட்டின்தசைப் புழுக்கினோடு கூடிய; மைப்பற என வும் பாடம். மைப்பு அற - குற்றமற. சோறு - சோற்றை. வரையா - வரைவு படுத்த. வண்மை - கொடை. புரையோர்ப் பேணி - உயர்ந்தோரைப்பேணி. பேணி - வழிபட்டு (உபசரித்து). புள் - புள்நிமித்தம். திங்கள் - சந்திரன். சகடம் - உரோகணி. கூட்டத்து - கூடிய முகூர்த்தத்தில். பணை - முரசு. இமிழ - ஒலிப்ப. வதுவைமண்ணிய - வதுவைக்கோலம் செய்த. விதுப்புற்று - விரைவுற்று. இமையார் - இமைத்தலிலராய். பயம்பு - குழி; பள்ளம். மாயிதழ் - கரியஇதழ். பெயற்கு ஈன்ற இதழையுடைய அறுகின் பாவை என இயைக்க. பாவை - கிழங்கு; ஆகுபெயர். கிழங்கின்முகை எனவும் முகையோடு சேரக்கட்டிய

தமர்நமக் கீந்த தலைநா ளிரவி
னுவர்நீங்கு கற்பினெ முயிருடம் படுவி
முருங்காக் கலிங்க முழுவதும் வளைஇப்
பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவிய
ருறுவளி யாற்றச் சிறுவரை திறவென
வார்வ நெஞ்சமொடு போர்வை வௌவலி
னுறைகழி வாளி னுருவுபெயர்ந் திமைப்ப
மறைதிற னறியா ளாகி யொய்யென
நாணின ளிறைஞ்சி யோளே பேணிப்
பரூஉப்பகை யாம்பற் குரூஉத்தொடை நீவிச்
சுரும்பிமி ராய்மலர் வேய்ந்த
விரும்பல் கூந்த லிருண்மறை யொளித்தே (அகம். 136)

எனவரும். *(4)*

***(கற்பின்கண் தலைவன் கூற்றுக்கள் நிகழுமிட மிவையெனல்)***

146. கரணத்தி னமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணு
மெஞ்சா மகிழ்ச்சி யிறந்துவரு பருவத்து
மஞ்ச வந்த வுரிமைக் கண்ணு
நன்னெறிப் படருந் தொன்னலப் பொருளினும்
பெற்ற தேஎத்துப் பெருமையி னிலைஇக்
குற்றஞ் சான்ற பொருளெடுத் துரைப்பினு
நாமக் காலத் துண்டெனத் தோழி
யேமுறு கடவு ளேத்திய மருங்கினு
மல்ல றீர வார்வமொ டளைஇச்

சொல்லுறு பொருளின் கண்ணுஞ் சொல்லென
வேனது சுவைப்பினு நீகை தொட்டது
வானோ ரமிழ்தம் புரையுமா லெமக்கென
வடிசிலும் பூவுந் தொடுதற் கண்ணு
மந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்து
மந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினு

நூல் எனவும் இயைக்க. தலைநாள் - முதனாள். உவர் - உவர்ப்பு; வெறுப்பு. உயிர்உடம்பு அடுவி - உயிர்க்கு உடம்பாக அடுத்தவள். வியர் - வேர்வை. போர்வை - மூடியவஸ்திரம். கூந்தல் இருண்மறை ஒளித்து இறைஞ்சி யோள் என முடிக்க. கூந்தலாகிய இருளில் மறைந்து ஒளித்துத் தலை வணங்கினாள் என்பது கருத்து. மறை - மறைக்கும் உறுப்புமாம்.

மொழுக்கங் காட்டிய குறிப்பினு மொழுக்கத்துக்
களவினு ணிகழ்ந்த வருமையைப் புலம்பி
யலமர லுள்ளமொ டளவிய விடத்து
மந்தரத் தெழுதிய வெழுத்தின் மான

வந்த குற்றம் வழிகெட வொழுகலு
மழிய லஞ்சலென் றாயிரு பொருளினுந்
தானலட் பிழைத்த பருவத் தானு
நோன்மையும் பெருமையு மெய்கொள வருளிய
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னி னாகிய தகுதிக் கண்ணும்
புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதி
னெய்யணி மயக்கம் புரிந்தோ ணோக்கி
யையர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்

பயங்கெழு துணையணை புல்லிய புல்லா
துயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப்
புல்கென முன்னிய நிறையழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய விரவினு
முறலருங் குண்மையி னூடன்மிகுத் தோளைப்
பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்
பிரிவி னெச்சத்துப் புலம்பிய விருவரைப்
பிரிவி னீக்கிய பகுதிக் கண்ணு
நின்றுநனி பிரிவி னஞ்சிய பையுளுஞ்
சென்றுகை யிகந்துபெயர்த் துள்ளிய வழியுங்

காமத்தின் வலியுங் கைவிடி னச்சமுந்
தானவட் பிழைத்த நிலையின் கண்ணு
முடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு
மடம்பட வந்த தோழிக் கண்ணும்
வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானு
மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணு
மவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்
பேரிசை யூர்திப் பாகர் பாங்கினுங்

காமக் கிழத்தி மனையோ ளென்றிவ
ரேமுறு கிளவி சொல்லிய வெதிருஞ்

சென்ற தேஎத் துழப்புநனி விளக்கி
யின்றிச் சென்ற தந்நிலை கிளப்பினு
மருந்தொழின் முடித்த செம்மற் காலை
விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணு
மாலை யேந்திய பெண்டிரு மக்களுங்
கேளி ரொழுக்கத்துப் புகற்சிக் கண்ணு
மேனை வாயி லெதிரொடு தொகைஇப்
பண்ணமை பகுதிமுப் பதினொரு மூன்று
மெண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன.

*இது, பார்ப்பார் முதலிய பன்னிருவருங் (501 - 2) கற்பிடத்துக் கூற்றிற்கு உரியராயினும் அவருள் தலைவன் சிறந்தமையின் அவன் கூற்றெல்லாந் தொகுத்துக் களவிற் கூறியாங்கு முற்கூறுகின்றது.*

**இ — ள்:** *கரணத்தின் அமைந்து முடிந்தகாலை - ஆதிக் கரணமும் ஐயர் யாத்த கரணமுமென்னும் இருவகைச் சடங்கானும் ஓர் குறைபாடின்றாய் மூன்று இரவில் முயக்கம் [1]இன்றி ஆன்றோர்க்கு அமைந்த வகையாற் பள்ளிசெய்து ஒழுகி நான்காம் பகலெல்லை முடிந்தகாலத்து:*

*ஆன்றோராவார், மதியுங் கந்தருவரும் அங்கியும். (பக். 576)*

*நெஞ்சு தளை அவிழ்ந்த புணர்ச்சிக்கண்ணும் - [2]களவிற் புணர்ச்சிபோலுங் கற்பினும் மூன்றுநாளுங் கூட்டமின்மையானும் நிகழ்ந்த மனக்குறை தீரக்கூடிய கூட்டத்தின்கண்ணும்:*

*அது நாலாம் நாளை இரவின் கண்ணதாம். உதாரணம்:*

[3]விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமு
மரிதுபெறு சிறப்பிற் புத்தே ணாடு
மிரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே

---

1. இன்றிப் பள்ளிசெய்து ஒழுகி என இயைக்க.

2. களவிற் புணர்ச்சியிற்போல என்றிருத்தல்வேண்டும். களவிற் புணர்ச்சியுள் மூன்றுநாள் கூட்டமின்மை, பூப்பின்புறப்பாட்டானே வந்தது. 122ஞ் சூத்திரநோக்கியறிக. உம்மை வேண்டியதின்று.

3. கடல்வளை இய உலகம் - பூவுலகம். புத்தேணாடு - தேவருலகம். இரண்டும் வைகலொடு தூக்கின் சீர்சாலா எனக் கூட்டுக.

பூப்போ லுண்கட் பொன்போன் மேனி
மாண்வரி யல்குற் குறுமக
டோண்மாறு படூஉம் வைகலொ டெமக்கே. (குறுந். 101)

*இது நெஞ்சு தளையவிழ்ந்த புணர்ச்சி.*

முகனிகுத், தொய்யென விறைஞ்சி யோளே (அகம். 86)

*என முற்காட்டியது கரணத்தின் அமைந்து முடிந்தது.*

*எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும் - அதன்பின்னர் ஒழியாத மகிழ்ச்சி பலவேறு வகையாகிய* [1]*நுகர்ச்சிக்கட் புதிதாக வந்த காலத்தினிடத்தும்: உதாரணம்:*

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு (குறள். 1110)

*என்றது பொருள்களை உண்மையாக உணர்ந்த இன்பத்தை அறியுந்தோறும் அவற்றை முன்னர் இவ்வாறு விளங்க உணராத அறிவின்மையை வேறுபடுத்துக் கண்டாற்போலுஞ் சேயிழை மாட்டுச் செறியுந்தோறுந் தலைத்தலை சிறப்பப் பெறுகின்ற காமத்தை முன்னர் அறியப் பெற்றிலேமென்று வேறுபடுத்த லென்றவாறு.*

*அஞ்சவந்த உரிமைக்கண்ணும் - தலைவனும் பிறரும் அஞ்சும்படி தலைவிக்கட் டோன்றிய உரிமைகளிடத்தும்:*

*அவை இல்லறம் நிகழ்த்துமாறு தன் மனத்தாற் பலவகை யாகக் காணலும் பிறர்க்குத் தான் கொடுத்தலுங் கற்புச் சிறத் தலுமாம். உதாரணம்:*

[2]உள்ளத் துணர்வுடையா னோதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்க ணொண்பொரு – டெள்ளிய
வாண்மகன் கையி லயில்வா ளனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம். (நாலடி. 386)

---

1. நுகர்ச்சி என்பது இன்ப நுகர்ச்சியை. பல்வேறுவகை நுகர்ச்சி என்றார்; ஐம்புலன்களானுமாரத்துய்த்தல்பற்றி. "கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு - மொண்டொடி கண்ணேயுள" என்பதனானு மறிக. (குறள் - 1101)

2. உணர்வுடையான் ஓதிய நூற்பொருள் அவனறிவால் விரியுமாறுபோல இவள் நலமும் விரியும் எனப் பொருள் கொள்க. நூலாற்று என்பதில் அற்றைப் பிரித்துப் பொருளோடுகூட்டி நலம் பொருளற்று எனப் பொருளுரைத்துக் கொள்க.

இதனுள் நலமென்றது [1]இம்மூன்றினையும். தலைவி இல்லறப் பகுதியை நிகழ்த்துமாறு பலவகையாகக் காணுந்தன்மை உணர்வுடையோன் ஓதிய நூல் விரியுமாறுபோல விரியா நின்றதெனவும், இவள் கொடைநலம் வள்ளன்மை பூண்டான் பொருளனைத்தெனவும், இவனது கற்புச் சிறப்புப் பிறர்க்கும் அச்சஞ் செய்தலின் வாளனைத் தெனவும், தலைவன் அவளுரிமைகளை வியந்து கூறியவாறு காண்க.

*நன்னெறிப் படரும் தொல்நலப் பொருளினும்* - இல்லறத்திற்கு ஓதிய நெறியின்கண் தலைவி கல்லாமற் பாகம்பட ஒழுகுந் *(பழ. 6: 4)* தொன்னலஞ்சான்ற பொருளின்கண்ணும்:

பொருள் வருவாய் இல்லாத காலமும் இல்லற நிகழ்த்துதல் இயல்பாயிருத்தற்குத் 'தொன்னலம்' என்றார். உதாரணம்:

**[2]குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதும்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறாக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள். (நாலடி. 382)**

இஃது, ஒரு குடம் நீராற் சோறமைத்து உண்ணுமாறு மிடிப்பட்டகாலத்தும் மனைக்கு மாட்சிமையுடையாள் கடல்நீரை வற்ற உண்ணுங் கேளிர் வரினும் இல்லற நிகழ்த்துதலைக் கைக்கு நெறியாகக் கொள்ளுமெனத் தலைவன் வியந்து கூறினான்.

*பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக் குற்றஞ்சான்ற பொருள் எடுத்து உரைப்பினும்* - தலைவி அங்ஙனம் உரிமை சான்ற இடத்து அவளைப் பெருமையின்கண்ணே நிறுத்திக் குற்றமமைந்த களவொழுக்கத்தை வழுவியமைந்த பொருளாகக் கேளிர்க்காயினும் பிறர்க்காயினும் உரைப்பினும்:

அது களவொழுக்கத்தையுந் தீய ஓரையுள்ளுந் துறவாது ஒழுகிய குற்றத்தையும் உட்கொண்டும் அதனைத் [3]தீதென்னாமற் கூறுதலாம். உதாரணம்:

---

1. இம்மூன்று என்றது முன் வாக்கியத்திற் கூறிய மூன்றையும். இடுக்கட் பொழுது - வறுமைக்காலம்.
2. கடன்நீர்மை - இல்லறம் நிகழ்த்துந்தன்மை.
3. தீதென்னாமற் கூறல் - வழுவியமைந்ததாகக் கூறல்.

[1]நாலாறு மாறாய் நனிசிறிதா யெப்புறனு
மேலாறு மேலுறை சோரினு – மேலாய
வல்லளாய் வாழுமூர் தற்புகழு மாண்கற்பி
னில்லா ளமைந்ததே யில். (நாலடி. 383)

இதனுள் மனைவி அமைந்துநின்ற இல்நிலையை இல்லற மாவதெனவே யாம் முன்னரொழுகிய ஒழுக்கமும் இத்துணை நன்மையாயிற்று என்றானாயிற்று. இது குறிப்பெச்சம்.

நாமக்காலத்து உண்டெனத் தோழி ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்: தோழி [2]நாமக்காலத்து ஏமுறு கடவுள் உண்டென ஏத்திய மருங்கினும் - தோழி இன்னது விளையுமென்று அறியாது அஞ்சுதலையுடைய களவுக்காலத்தேயாம் வருந்தாதிருத்தற்குக் காரணமாயதோர் கடவுள் உண்டு எனக் கூறி அதனைப் பெரிதுமேத்திய இடத்துத் தலைவன் வதுவைகாறும் ஏதமின்றாகக் காத்த தெய்வம் இன்னும் காக்குமென்று ஏத்துதலும்: அது,

[3]குனிகா யெருக்கின் குவிமுகிழ்.....
தாமரை முகத்தியைத் தந்த பாலே.

என்னும் [4]குணநாற்பதில் ஏமுறு கடவுளைத் தலைவன் தானே ஏத்தியது போலாது.

[5]நேரிழாய் நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வ முவப்ப வுவந்து
குரவை தழீஇயா மாடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண் (கலி. 39)

எனத் தான் பராய தெய்வத்தினைத் தோழி கற்புக்காலத்துப் பரவுக்கடன் கொடுத்தற்கு ஏத்தியவழித் தலைவனும் ஏத்துதலாம்.

---

1. நால் ஆறும் ஆறாய் - நான்குபக்கமும் வழியாய்; நனிசிறி தாய் - மிகச் சிறிய இல்லாய். மேல் ஆறு - மேற்பக்கம். மேல் உறை சோரினும் - மேலாக மழை சொரியினும். மேலாய - மேன்மையான செயல்கள். ஆறாய்ச் சிறிதாய்ச் சோரினும் அமைந்தது இல் என்க.

2. நாமக்காலம் - அஞ்சுதலையுடைய காலம். நாம் - அச்சம். அது, வேறு சொல்லோடுகூடி வருங்கால் அகரம் பெற்றே வரும். அதற்கு அஃது இயல்பா தலைப் பழைய இலக்கியச் செய்யுட்கணோக்கியறிக.

3. பால் - தெய்வம் (ஊழ்).

4. குணநாற்பது ஒரு நூல்.

5. தெரியிழாய் என்றும் பாடம். கேளும் - கணவனும். உவப்ப - உவக்கும்படி. உவப்ப ஆட என இயையும். கொண்டு நிலை - ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டு கூறுவது.

*உதாரணம்:*

[1]அதிரிசை யருவிய பெருவரைத் தொடுத்த
பஃறே னிறாஅ லல்குநர்க் குதவு
நுந்தைநன் னாட்டு வெந்திறன் முருகென
நின்னோய்க் கியற்றிய வெறிநின் றோழி
யென்வயி னோக்கலிற் போலும் பன்னாள்
வருந்திய வருத்தந் தீரநின்
றிருந்திழைப் பணைத்தோள் புணரவந் ததுவே.

*தேன் இறாலை அல்குநர்க்கு உதவும் நாடாதலின் நின் நோய்க்கு இயற்றிய வெறி நுமக்குப் பயன்படாது எமக்குப் பயன்றருமென்றோன் என்வயின் நோக்கலின் என்றது, எனக்குப் பயன்கொடுக்க வேண்டுமென்று பராவுதலிற் றோளைப் புணர்ந்து உவந்தது என்றான். இது கற்புக்காலத்துப் பரவுக்கடன் கொடுக் கின்ற காலத்துத் தலைவன் கூறியது.*

*அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின் கண்ணும்* - வரைந்தகாலத்து மூன்றுநாட் கூட்டமின்மைக்குக் காரணமென்னென்று தலைவி மனத்து நிகழாநின்ற வருத்தந் தீரும்படி மிக்க வேட்கையோடு கூடியிருந்து வேதஞ் சொல்லு தலுற்ற பொருளின் கண்ணும்: தலைவன் விரித்து விளங்கக்கூறும்.

அது முதனாள் [2]தண்கதிர்ச் செல்வற்கும், இடைநாள் கந்தருவற்கும், பின்னாள் அங்கியங்கடவுட்கும் அளித்து நான் நாள் அங்கியங்கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் நுகர வேண்டிற்று; அங்ஙனம் வேதங் கூறுதலால் எனத் தலைவிக்கு விளங்கக் கூறுதல். உதாரணம் இக்காலத்தின்று.

*[3]சொல்லென ஏனது சுவைப்பினும் நீ கை தொட்டது வானோர் அமுதம் புரையுமால் எமக்கென அடிசிலும் பூவுந் தொடுதற்கண்ணும்* - அமிர்திற்கு மாறாகிய நஞ்சை நுகரினும் நீ

---

1. தேன் இறால் - தேன்கூடு. அல்குநர் - தங்குநர். நாட்டு இயற்றிய வெறி என்க. இது தலைவன் கூறியதற்குதாரணம்.

2. தண்கதிர்ச்செல்வன் - திங்கள் (சந்திரன்).

3. சொல்லென என்பது எமக்கென என்பதன்பின் மாற்றி வைத்துப் பொரு ளுரைக்கப்பட்டுளது. இவ்வாறு மாற்றிப் பொருளுரைக் குமிடத்து அமுதம் என்பது பின்வரலின் ஏனது என்பதற்கு அமிழ்திற்கு மாறாயது (நஞ்சு) என்று பொருளுரைக்கப்பட்டுளது. இதனை உற்றுநோக்காமையாற்போலும் சொல் - நெல் என்றும் அஃது ஆகுபெயராய் அமிழ்தையுணர்த்திற்று என்றும்

கையால் தீண்டின பொருள் எமக்கு உறுதியைத் தருதலின் தேவர் களுடைய அமிர்தத்தை ஒக்கும் எமக்கெனப் புனைந் துரைத்துழி இதற்குக் காரணங் கூறென்று அடிசிலும் பூவுந் தலைவி தொடுத லிடத்தும்: கூற்று நிகழும்.

உம்மை, இழிவுசிறப்பு.

வேம்பின் பைங்காயென் றோழி தரினே
தேம்பூங் [1]கட்டி யென்றனிர் (குறுந். 196)

எனத் தலைவன் கூற்றினைத் தோழி கொண்டு கூறியவாறு காண்க.

அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும் ஒழுக்கங்காட்டிய குறிப்பினும் - வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும், முற்ற உணர்ந்து ஐம்பொறியையும் அடக்கியோர் கண்ணும், முடிவில்லாச் சிறப்பினையுடைய தேவர்கள்கண்ணும் ஒழுகும் ஒழுக்கத்தினைத் தான்தொழுது காட்டிய குறிப்பின் கண்ணும்:

'பிறர்பிறர்' என்றார் தேவர் மூவரென்பதுபற்றி. தன்னை யன்றித் தெய்வந் தொழாதாளை இத்தன்மையோரைத் தொழல் வேண்டுமென்று தொழுது காட்டினான். [2]குறிக்கொளுங் கூற் றால் உரைத்தலிற் 'குறிப்பினும்' என்றார். உதாரணம் வந்துழிக் காண்க.

ஒழுக்கத்துள் களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி அலமரல் உள்ளமொடு அளவிய இடத்தும் - வணக்கஞ்செய்தும் [3]எதிர்மொழியாது வினாயவழிப் பிறராற் கூற்று நிகழ்த்தியும்

---

பவானந்தம்பிள்ளை பதிப்பிலும், கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிலும் கீழ்க் குறிப்பு எழுதப்பட்டுளது. சொல்லென என்பதை மாற்றாமலே தலைவி தலைவனை நோக்கி நஞ்சும் அமிழ்தாமென்பதைச் சூளொடு கூறென அவன் அமிர்தம் புரையும் எமக்கெனக் கூறி அடிசிலும் பூவுந் தொடுதற்கண்ணும் என்று நேரேயும் பொருளுரைக்கலாம். தலைவன் தொடுதற்கண்ணும் அவனுக்குக் கூற்றுநிகழுமென்றபடி. முன் உரைக்குப் புனைந்துரைத்து என்றது புனைந்துரைத்துழி என்றிருத்தல் வேண்டும்.

1. கட்டி - வெல்லக்கட்டி. கண்டசருக்கரையுமாம்.
2. குறிக்கொளும் கருத்தால் என்றது தலைவி குறித்துக்கொள்ளுங் கருத்தால் என்றபடி.
3. எதிர்மொழியாது - எதிர்கூறா'து; இது நிகழ்த்தியது என்பதனோடு முடியும்.

எதிர்ப்பட்டுழி எழுந்தொடுங்கியுந் தான் [1]அக்காலத்து ஒழுகும் ஒழுக்கத்திடத்து முன்னர்க் களவுக்காலத்து நிகழ்ந்த கூட்டத் தருமையைத் தனித்துச் சுழலுதலையுடைய உள்ளத்தோடே உசாவிய இடத்தும் தலைவற்குக் கூற்று நிகழும்.

உதாரணம் வந்துழிக் காண்க. 'கவவுக் கடுங்குரையள்' (குறுந். 132) என்பது காட்டுவாரும் உளர்.

அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்: வந்த குற்றம் அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வழிகெட ஒழுகுதலும் - களவுக்காலத்து உண்டாகிய பாவம் ஆகாயத்தெழுதிய எழுத்து வழிகெடுமாறுபோல வழி கெடும்படி பிராயச் சித்தஞ்செய்து ஒழுகுதற்கண்ணும்:

அது [2]முன்புபோலக் குற்றஞ்சான்ற பொருளை வழு வமைத்துக் கொள்ளாது குற்றமென்றே கருதிக் கடிதலாம்.

[3]பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தால் (கலி. 15: 14 – 5)

என்றவழி 'மையற்ற படிவம்' எனத் தலைவன் கூறியதனைத் தோழி கூறியவாறு காண்க.

அழியல் அஞ்சல் என்று ஆயிரு பொருளினும் - வந்த குற்றம் நினக்கு உளதென்று அழியலெனவும் எனக்குளதென்று அஞ்ச லெனவுஞ் சொல்லப்படும் அவ்விருபொருண்மைக்கண்ணும்:

இவை இரண்டாகக்கொள்ளின் முப்பத்துநான்காமாதலின் இருவர் குற்றமுங் குற்றமென ஒன்றாக்கியது. தெய்வத்தினாதலின் ஏதம்பயவாதென்றான்.

[4]யாயு ஞாயும் யாரா கியரோ
வெந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதுஞ்

1. அக்கலாம் - கற்புக்காலம்.
2. முன்புபோல - களவிற்போல.
3. பொய்யற்றகேள்வி - மெய்ந்நூற் கேள்வி. புரையோர் - உயர்ந்தோர். மையற்றபடிவம் - மாசற்றவிரதம். இது தோழிகூற்றாயினும் தலைவன் கூறியதைக் கொண்டுகூறலின் அவன் கூற்றிற்கும் உதாரணமாம் என்றபடி.
4. யாய் - என்றாய். ஞாய் - நின்றாய் இவை இப்பொருள் பயத்தலை, (தொல். எச். 14) தெய்வச்சிலையாருரையாலறிக.

செம்புலப் பெய்ந்நீர் போல
வன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே. (குறுந். 40)

*இது நம்மானன்றி நெஞ்சந்தம்மில் தாங் கலத்தலின் தெய்வத் தான் ஆயிற்றெனத் தெருட்டியது.*

*தான் அவட் பிழைத்த பருவத்தானும் - அங்ஙனந் தெய்வத் தினான் ஆயிற்றேனுங் குற்றமேயன்றோ என உட்கொண்ட அவட்கு யான் காதன் மிகுதியாற் புணர்ச்சிவேண்ட என் குறிப்பிற் கேற்ப ஒழுகினையாகலின் நின்க்கோர் குற்றமின்றென்று தான் பிழைத்த பருவமுணர்த்தும் இடத்தும்: கூற்று நிகழும். உதாரணம்:*

நகைநீ கேளாய் தோழி தகைபெற
நன்னாட் படராத் தொன்னிலை முயக்கமொடு
நாணிழுக் குற்றமை யறிகுநர் போல
நாங்கண் டனையநங் கேள்வர்
தாங்கண் டனைய நாமென் றோரே.

*இதனுள், நன்னாள் வேண்டுமென்னாது கூடிய கூட்டத்துள் தங்கி நாணுச் சுருங்கி வேட்கை பெருகிய நம்மினும் ஆற்றாராயி னார் போல நாங் குறித்துழி வந்தொழுகிய தலைவர் தாங் குறித் தனவே செய்தனமென நமக்குத் தவறின்மை கூறினாரெனத் தோழிக்குத் தலைவி கூறியவழித் தலைவன் [1]பிழைப்புக் கூறிய வாறு காண்க.*

*நோன்மையும் பெருமையும் மெய்கொள அருளிய பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித் தன்னின் ஆகிய தகுதிக்கண்ணும்: தன்னின் ஆகிய நோன்மையும் பெருமையும் மெய்கொள - தலைவனான் உளதாகிய பொறையையுங் கல்வி முதலிய பெரு மையையும் உடைய மகவைத் தலைவி தன்வயிற்றகத்தே கொள் கையினாலே, [2]பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தி அருளிய தகுதிக்கண்ணும் - வேதத்தை ஆராய்தல் அமைந்த அந்தணரோடு கூடி இருந்து [3]அதற்குச் செய்யத்தகுஞ் சடங்குகளைச் செய்த தகுதிப்பாட்டின்கண்ணும் :*

*தன்னினாகிய மெய் - கருப்பம். அவிப்பலி கொள்ளும் அங்கியங் கடவுட்கும் அது கொடுக்கும் தலைவற்கும் இடையே நின்று கொடுப்பித்தலின் அந்தணரை 'வாயில்' என்றார்.*

1. பிழைப்பு - தன்பிழைப்பு
2. பன்னல் - நூல் (வேதம்). வாயில் - வழி
3. அதற்கு - அம்மகவிற்கு;

[1]ஆற்றல் சான்ற தாமே யன்றியு
நோற்றோர் மன்றநங் கேளிரவர் தகைமை
வட்டிகைப் படூஉந் திட்ட மேய்ப்ப
வரிமயி ரொழுகுநின் னவ்வயி றருளி
மறைநவி லொழுக்கஞ் செய்து மென்றனர்
துனிதீர் கிளவிநந் தவத்தினு
நனிவாய்த் தனவான் முனிவர்தஞ் சொல்லே.

இதனுள், நந்தலைவரேயன்றிச் சுற்றத்தாரும் நோற்று ஓர் கருப்பந் தங்கிய நினது வயிற்றைக்கண்டு [2]உவந்தெனவும், அதற் கேற்ற சடங்கு செய்துமென்றாரெனவும், முற்காலத்து நாங்கேட்ப நமக்குக் கூறிய முனிவர் சொல்லும் உண்மையாயிற்றெனவுங் கூறியவாறு காண்க. தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதின் - அங்ஙனஞ் சிறப் பெய்திய புதல்வனைப் பெற்ற ஈன்றணுமை சேர்ந்த காலத்தே:

நெய் அணி மயக்கம் புரிந்தோள் நோக்கி - சுற்றக் குழாத் துடனே [3]வாலாமை வரைதலின்றி எண்ணெயாடும் மயக்கத்தை விரும்பிய தலைவியை முகமனாகக் கூறுதலைக் குறித்து:

ஐயர் பாங்கினும் - முனிவர் மாட்டும்:

அமரர்ச்சுட்டியும் - தேவர்கள் புதல்வனைப் பாதுகாத்த லைக் கருதியும்:

செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்ணும் - அக்காலத்துச் செய்யும் பெரிய சிறப்புகளைக் குறித்த மனத்தோடே சென்று சார்தற்கண்ணும்:

சிறப்பாவன:- பிறந்த புதல்வன் முகங்காண்டலும் ஐம்படை பூட்டலும் பெயரிடுதலும் முதலியனவும், எல்லா முனிவர்க்குந் தேவர்க்கும் அந்தணர்க்குங் கொடுத்தலும். சேர்தல் கூறவே,

1. எழுதுகோலாற் சித்திரித்த வரையறையை ஒப்ப வரியாக மயிரொழுகிய வயிறு. வட்டிகை - எழுதுகோல். திட்டம் - அளவு; வரையறை. எழுது கோலால் (சித்திரிக்குங்கோலால்) வரையறை செய்து எழுதிவிட்டாற் போன்ற மயிரொழுங்கு என்பது கருத்து. அரிமயிரெனக்கொண்டு ஐதாகிய மயிரெனினுமாம். சொல் நனிவாய்த்தன என இயைக்க.

2. உவந்ததெனவும் - உவந்தனரெனவும் என்றிருத்தல் வேண்டும்.

3. வாலாமை - தூய்மை யில்லாமை (தீட்டு). வரைதல் - நீக்குதல் நியமமுமாம்.

*கருப்பம் முதிர்ந்த காலத்துத் தலைவன் பிறரொடு கூட்ட முண்மை யுங் கூறிற்றாம். ஆண்டுத் தோழி கூறுவனவும் 'ஒன்றென முடித்த' லாற் கொள்க.*

[1]வாராய் பாண நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூ னங்குடிக் குதவி
நெய்யோ டிமைக்கு மையவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்
புதல்வனை யீன்றெனப் பெயர்பெயர்த் தவ்வரித்
திதலை யல்குன் முதுபெண் டாகித்
துஞ்சுதி யோமெல் லஞ்சி லோதியெனப்
பன்மா ணகட்டிற் குவளை யொற்றி
யுள்ளினெ னுள்ளுறை யெற்கண்டு மெல்ல
முகைநாண் முறுவ லொன்றித்
தகைமல ருண்கண் கைபுதைத் ததுவே. (நற். 370)

*இது, நெய்யணி மயக்கம்பற்றித் தலைவன் கூறியது.*

நெடுநா வொண்மணி கடிமனை யிரட்டக்
குரையிலை போகிய விரவுமணற் பந்தர்ப்
பெரும்பாண் காவல் பூண்டென வொருசார்
திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப
வெறியுற விரிந்த வறுவை மெல்லணைப்
புனிறுநாறு செவிலியொடு புதல்வன் றுஞ்ச
வையவி யணிந்த நெய்யாட் டீரணிப்
பசிநோய் கூர்ந்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை யுரிமை பொருந்த
நன்னென் கங்குற் கள்வன் போல
வகன்றுறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரால் பிறந்த மாறே. (நற்றிணை 40)

*இது, முன் வருங்காலத்து வாராது சிறந்தோன் பெயரன் பிறத்தலான் வந்தானெனத் தோழி கூறினாள்.*

குவளை மேய்ந்த குறுந்தா ளெருமை
குடநிறை தீம்பால் படூஉ மூர
புதல்வனை யீன்றிவ ணெய்யா டினளே.

*இதுவுமது.*

---

1. கடும்புடைக்கடுஞ்சூல் - எனது சுற்றத்தார் சூழ ஓம்புகின்ற சிறந்த கருப்பம். இமைக்கும் - விளங்கும். காழ் - விதை. காழ் விளங்கக்கிடந்தோள் என்க. நெய்யணி மயக்கம்பற்றி விளங்கக் கிடந்தோள் என்றார். பெயர்பெயர்த்து என்றது இளம்பெண்டு என்னும் பெயரை ஒழித்து என்றபடி. பெயர்பெயர்த்து முதுபெண்டாகி என்க. அகடு - வயிறு. குவளை - குவளைப்பூ, புதைத்தது நகுகம் என மாற்றிக் கூட்டுக.

பயங்கெழு துணையணை புல்லிய புல்லாது உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப் புல்கு என முன்னிய நிறையழி பொழுதின் மெல்லென் சீறடி புல்லிய இரவினும் - தலைவி தனது ஆற்றாமை மிகுதியால் தழுவி ஆற்றுதற்குக் குளிர்ந்த பயன் கொடுத்தல் பொருந்திய பல அணைகளைத் தழுவித் தன்னைப் புல்லுதல் பெறாதே வருந்திக் கிடந்த தலைவியை அணுகித் தான் கூடுதலைக் கருதின நிறையழிந்த காலத்தே அவளது மெத்தென்ற சிறிய அடியைத் தீண்டிய இரத்தற்கண்ணும்:

இதனானே மகப்பெறுதற்கு முன்னர் அத்துணை யாற்றாமை எய்திற்றிலனென்றார். இப்பிரிவுகாரணத்தால் தலைவனும் 'நிறையழிவனென்றார்.

'அகன்றுறை யணிபெற' என்னும் மருதக்கலி (73) யுள்,

[1]என்னை நீ செய்யினு முணர்ந்தீவா ரில்வழி
முன்னடிப் பணிந்தெம்மை யுணர்த்திய வருதிமன்
னிரைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்

என இதனுட் சீறடிப் புல்லிய இரவினைத் தலைவி கூறியவாறு காண்க. தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

உறலருங்கு உண்மையின் ஊடல் மிகுத்தோளைப் பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற்கண்ணும் - தலைவற்குச் [2]சாந்தழி பெருங்குறி பெற்றார் கூந்தல் துகளும் உண்மையின் அவனைக் கூடுதல் அருமையினாலே ஊடன் மிகுத்த தலைவியைப் பிறபிற பெண்டிர் ஏதுவாக ஊடல் உணர்த்துதலிடத்தும்:

---

1. முன்னடி - அடிமுன். எம்மை உணர்த்திய - எம்மை ஊடலுணர்த்துதற்கு. துணங்கை - ஒருவகைக் கூத்து. தலைக்கொள - நின்னிடத்தே கொள்ளுத லால். காழகம் - நீலஆடை.

2. சாந்தழி பெருங்குறி பெற்றார் கூந்தற்றுகளும் என்பது சாந்தழிவேரும் குறிபெற்றார். கூந்தல் துகளும் என்றிருக்கலா மென்பது எமது கருத்து. சாந்தழி பெரும் என்பதிலேதான் பிழையுளது. கலி. 96ஞ் செய்யுளில் வரும் 'சாந்தழிவேரை' என்பதையும் கலி. 72ஞ் செய்யுளில் வரும் 'குறிபெற்றார் குரற் கூந்தற் கோடுளர்ந்த துகளினை' என்பதிலே சில நீக்கிக் 'குறிபெற்றார் கூந்தற் றுகளினை' என்பதையுஞ் சேர்த்தே 'சாந்தழிவேருங் குறிபெற்றார் கூந்தற் றுகளும்' என்று நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார் என்பது எமது கருத்து. சிறிது வேறுபட்டிருப்பினுங் கொள்க. அன்றேல் சாந்தழிபெருங்குறியும் குறிபெற்றார் கூந்தற் றுகளும் என்றிருத்தல் வேண்டும்.

*என்றது, உலகத்துத் தலைவரொடு கூடுந் தலைவியர் மனையறத்து இவ்வாறொழுகுவரென அவர் ஒழுக்கங்காட்டி அறத்துறைப் படுத்தலாம். மறை வெளிப்படுத்தலும் தமரிற் பெறுதலும் மலிவும் முறையே கூறிப் பின்னர்ப் புலவி நிகழ்ந்து ஊடலாய் மிகுதலின் 'ஊடல் மிகுத்தோள்' என்றார். இரத்தற் பாலினும் பெண்பால் காட்டிப் [1]பெயர்த்தலிற் 'பிறபிற பெண்டிர்' என்றார்.*

*'புனம்வளர் பூங்கொடி' என்னும் மருதக்கலி (92) யுள்,*

[2]ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று
வண்டின மார்ப்ப விடைவிட்டுக் காதலன்
றண்டா ரகலம் புகும் எனக் கூறி,

அனவகை யால்யான் கண்ட கனவுத்தா
னனவாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானா தகவும் பொழுதினான் மேவர
நான்மாடக் கூடன் மகளிரு மைந்தருந்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா
ரானா விருப்போ டணியயர்பு காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு.

*எனவே, புல்லாதிருந்தா ளென்றதனான் ஊடன்மிகுதி தோன்றுவித்து, மகளிரும் மைந்தரும் வேனில்விழாச் செய்கின்றார் நாமும் அது செய்யவேண்டுமென்று கூறியவாறு காண்க.*

*பிரிவின் எச்சத்துப் [3]புலம்பிய இருவரைப் பிரிவின் நீக்கிய பகுதிக்கண்ணும் - பரத்தையிற் பிரிவினது தவிர்ச்சிக்கண்ணே தனிமையுற்றிருந்த தலைமகனையுந் தலைமகளையுந் தனதருளினாலே தானும் பிரிவினெச்சத்துப் புலம்பிநின்றானொருவன் தலைவிதனைக் கண்டருளுதற்கு அப்பிரிவினின்று நீக்கிய கூறுபாட்டின் கண்ணும்:*

---

1. பெயர்த்தல் - நீக்கல்.
2. புலவி - புலத்தல். புல்லாது - கணவனைத் தழுவாது. ஆர்ப்ப - ஆரவாரித்தலால். இடைவிட்டு - அப்புலவியை நடுவே விட்டு. நன்வாயா - நன்றாகிய உண்மையாக. ஆனாது அகவும்பொழுது - அமையாது பெடையை அழைக்கும் இளவேனிற்பொழுது. ஆடுமார் - விளையாடவேண்டி. அணி அயர்ப - அணிகளை அணிவார். அயர்பு என்னும் பாடத்திற்கு - அயர்ந்து என்று பொருள் கொண்டு அதனை ஆடுமார் என்பதனோடு முடித்து, அதனை முற்றாக்குக.
3. புலம்பு - தனிமை.

பிரிந்து வந்துழியல்லது புலத்தல் பிறவாமையின் [1]எச்சத்து என்றார். உதாரணம் வந்துழிக் காண்க. இதுவும் ஊடற்பகுதியாம்.

நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும் - முன்னில்லா [2]தொருசிறைப்போய்நின்று நீட்டித்துப் பிரிவினால் தலைவன் அஞ்சிய நோயின்கண்ணும்: இது [3]துனி.

'மையற விளங்கிய' என்னும் மருதக்கலி (81) யுள்,

> [4]ஏதப்பா டெண்ணிப் புரிசை வியலுள்ளோர்
> கள்வரைக் காணாது கண்டேமென் பார்போலச்
> சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவனின்
> னாணை கடக்கிற்பார் யார்

எனச் [5]சேய்நின்றென்றதனால் துனித்து நின்றவாறும், சினவ லென்றதனாற் பிரிவு நீட்டித்தவாறும், நின்னாணை கடக்கிற் பார் யாரென அஞ்சியவாறு கூறியவாறுங் காண்க.

> பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து
> கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி (கலி. 95)

என்பதும் அச்சமாதலின் இதன்கண் அடங்கும்.

சென்று கை இகந்து பெயர்த்து உள்ளிய வழியும்: சென்று - தலைவன் ஆற்றானாய்த் துனியைத் தீர்த்தற்கு அவளை அணுகச் சென்று, [6]கையிகந்து - அவன்மெய்க்கட் கிடந்த தவறுகண்டு தலைவி ஆற்றாளாய் நீக்கி நிறுத்தலானே, பெயர்த்து - அவன் ஒருவாற் றான் அவளாற்றாமையைச் சிறிது மீட்கையினாலே, உள்ளிய வழியும் - அவள் கூடக் கருதியவிடத்தும்: தலைவன் கூற்று நிகழும்.

இதுவுந் துனிதீர்ப்பதோர் முறைமை கூறிற்று; உதாரணம் முற்கூறிய (கலி. 81) பாட்டுள்,

---

1. எச்சம் ஈண்டுப் பிரிவின் முடிவைக் கருதிற்று.
2. ஒருசிறை - ஒருபக்கம்.
3. துனி - ஊடலின் மிக்கது. "துனியும் புலவியு மில்லாயின்" (குறள். 1306)
4. புரிசை - மதில். வியலுள்ளோர் - ஊரிற் காவலாளர். காணாது - காணாமலிருக்கவும். ஆணை - கட்டளை.
5. சேய் - தூரம்.
6. கைஇகந்து - கைகடந்து; (நீக்கி நிறுத்தலான் என்பது தாற்பரியம்)

[1]அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேன்
முதிர்பூண் முலைபொருத வேதிலான் முச்சி
யுதிர்துக ளுக்கநின் னாடை யொலிப்ப
வெதிர்வளி நின்றாய்நீ செல்;
இனி எல்லாயாந், தீதிலே மென்று தெளிப்பவுங் கைந்நீவி
யாதொன்று மெங்கண் மறுத்தர வில்லாயின்
மேதக்க வெந்தை பெயரனை யாங்கொள்வேந்
தாவா விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லு
மாபோற் படர்தக நாம்

*எனத் தலைவன் கூறியவாறு காண்க.*

*காமத்தின் வலியும் - அவள் [2]துனித்து நீங்கியவழி முற்கூறிய வாறன்றிக் காமஞ் சிறத்தலின் ஆற்றாமை வாயிலாகச் சென்று [3]வலித்துப் புக்கு நெருங்கிக் கூடுமிடத்தும்: தலைவன்கூற்று நிகழும்.*

*இதுவுந் துனிதீர்ப்பதோர் முறைமை கூறிற்று. உதாரணம்:*

யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை
வாரனீ வந்தாங்கே மாறு (கலி. 89)

*என வலிந்து சென்றதனைத் தலைவி கூறியவழி,*

ஏஎ யிவை, ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றாப் புலவனீ கூறியென்
னாருயிர் நிற்குமா றியாது

*என ஆற்றாமை மிகுதியாற் சென்றமை கூறியவாறு காண்க.*

*கைவிடின் அச்சமும் - தலைவி தான் உணர்த்தவும் உணராமல் தன்னைக் கைவிட்டுப் பிரியில் தான் அவளை நீங்குதற்கு அஞ்சிய அச்சத்தின்கண்ணும்: தலைவற்குக் கூற்று நிகழும்.*

*அஃது, உணர்ப்புவயின் வாராவூடலாம்.*

---

1. அதிர்வில் - நடுக்கமில்லாது. படிறு - வஞ்சனை. எருக்கி - வருத்தி; போக்கி என்றுமாம். மகன்மேல் வந்து என இயைக்க. வளிஎதிர் - காற்றெதிர். எல்லா - ஏடி? கைந்நீவி - கைகடந்து. படர்தக - நம்பாற் படரும்படி.

2. அவள் அது நித்து என்பது முற்பாடம். அஃது அவள் துனித்து என்றிருத்தல் வேண்டும். அது பின், இதுவுந் துனிதீர்ப்பதோர் முறைமை கூறிற்று என்பதனால் அறியப்படும்.

3. வலிந்துபுகல் - வலோற்காரமாகப் புகுதல்.

[1]எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றிணைமதி வாழிய நெஞ்சே மனைமரத்
தெல்லுறு மௌவ னாறும்
பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே. **(குறுந். 19)**

*இதனுள் அவளையின்றி வருந்துகின்ற நெஞ்சே அவள் நமக்கு யாரெனப் புலத்தலன்றி ஆண்டு நின்றும் பெயர்தல் கூறாமையிற் கைவிடின் அச்சமாயிற்று.*

*தான் அவட் பிழைத்த நிலையின்கண்ணும்* - தலைவன் தலைவியைப் பிழைத்த பிரிவின் கண்ணும்:

*'பிழைத்த' என்றார் ஆசிரியர், இயற்கைப்புணர்ச்சி தொடங்கிப் பலகாலும் பிரியேனெனத் தெளிவித்ததனைத் தப்பலின். உதாரணம்:*

[2]அன்பு மடனுஞ் சாயலு மியல்பு
மென்பு நெகிழ்க்குங் கிளவியும் பிறவு
மொன்றுபடு கொள்கையோ டொராங்கு முயங்கி
யின்றே யிவண மாகி நாளைப்
புதலிவ ராடமைத் தும்பி குயின்ற
வகலா வந்துளை கோடை முகத்தலி
னீர்க்கியங் கினநிரைப் பின்றை வார்கோ
லாய்க்குழற் பாணியி னைதுவந் திசைக்குந்
தேக்கமழ் சோலைக் கடறோங் கருஞ்சுரத்
தியாத்த தூணித் தலைதிறந் தவைபோற்
பூத்த விருப்பைக் குழைபொதி குவியிணர்
கழறுளை மூத்திற் செந்நிலத் துதிர
மழைதளி மறந்த பைங்குடிச் சீறூர்ச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே பூப்புனைப்
புயலென வொலிவருந் தாழிருங் கூந்தற்
செறிதொடி முன்கைநங் காதலி
யறிவுஞர் நோக்கமும் புலவியு நினைந்தே. **(அகம். 225)**

*இது நெஞ்சினாற் பிரியக்கருதி வருந்திக் கூறியது.*

---

1. எவ்வி - ஒருவள்ளல். பூ - பொற்பூ. புல்லென - பொலிவிழந்து. இனை - வருந்துதி. யாரள் - எத்தன்மையாள்.

2. மடன் - மடம். அஃதாவது கொளுத்தக் கொண்டு கொண்டது. விடாமை. சாயல் - மென்மை. கிளவி - சொல். முயங்கி இன்று இவ்விடத்தேமாகி நாளைச் சேக்குவங்கொல் என இயைக்க. தூணி - அம்புக்கூடு. நினைந்து சேக்குவங்கொல் எனவும் இயைக்க. அமை - மூங்கில். நிரை - ஆனிரை. வார்கோல் - நீண்ட வேய்ங்கோல். இது ஆயர்க்கடை. இனிக் குழலுக்காயின், நீண்டநரம்பாம். ஆய் - ஆயர். குழல் - வங்கியம். பாணி - இசை. மூங்கிலில் தும்பி குயின்ற துளை என்க. துளையில் கோடைமுகத்தலின் பாணியி னைது வந்திசைக்கும் கடறு என்க; கடறு - காடு, தூணித்தலைதிறந்தவை போல் - மொட்டம்புகளைப் பெய்த தூணித்தலைகள் - மூடிதிறக்கப்பட்டவைகள் போலப் பூத்த என்க. இணர் உதிர மழைமறந்த சீறூர் என்க.

வயங்கு மணிபொருத (அகம். 167) என்பதும் அது.

உடன்சேறல் செய்கையொடு அன்ன பிறவும் மடம்பட வந்த தோழிக்கண்ணும்: அன்னவும் பிற - நீ களவில் தேற்றிய [1]தெளிவகப் படுத்தலுந் தீராத் தேற்றமும் பொய்யாம், செய்கையொடு உடன் சேறல் - அவை பொய்யாகாதபடி செய்கைகளோடே இவளை உடன்கொண்டு செல்க, மடம்படவந்த தோழிக்கண்ணும் - தன்னறி யாமை தோன்றக் கூறிவந்த தோழிக்கண்ணும்: கூற்று நிகழும்.

உடன் கொண்டுபோதன் முறைமையன்றென்று அறியாமற் கூறலின் 'மடம்பட' என்றார். செய்கைகளாவன: - தலைவன் [2]'கைபுனைவல்வில்' நாண் ஊர்ந்தவழி இவள் 'மையில்வாண்முகம் பசப்பூர்' தலும் அவன் 'புனைமாண்மரீஇய அம்பு' தெரிந்தவழி இவள் 'இனைநோக் குண்கண் ணீர்நில்லா' மையும் பிறவுமாம்.

'பாஅலஞ் செவி' என்னும் பாலைக்கலி (5) யுள்,

ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு
ணீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ
................ ................ .............. .............. ........
அந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே

என, உடன்கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன், இவளை உடன்கொண்டுபோதல் எல்லாவற்றானும் முறையன்றென்று தோழிக்குக் கூறுவனவும் நெஞ்சிற்குக் கூறு வனவும் பிறவுங் கொள்க.

[3]வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குளவி மொய்த்த வழுகற் சின்னீர்
வளையுடைக் கைய ளெம்மொ டுணீஇய
வருகதில் லம்ம தானே
யளியளோ வளியளென் னெஞ்சமர்ந் தோளே. (குறுந். 56)

இது, தோழி கேட்பக் கூறியது.

---

1. 'தெளிவகப்படுத்தல்' - தொல்: பொரு. 101ம் சூத்திரம் 'தீராத்தோற்றம்' - 102ம் சூத்திரம்.

2. கலி. 7ஞ் செய்யுள் நோக்கியறிக.

3. கிளைத்து ஊண் மிச்சில் - தோண்டி உண்டு எஞ்சியநீர். குளவி - காட்டு மல்லிகை. அளியள் - இரங்கத்தக்காள்.

[1]நாணகை யுடைய நெஞ்சே கடுந்திறல்
வேனி னீடிய வானுயர் வழிநாள்
வறுமை கூறிய மன்னீர்ச் சிறுகுளத்
தொடுகுழி மருங்கிற் றுவ்வாக் கலங்கல்
கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச்
சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு
செங்கோல் வாலிணர் தயங்கத் தீண்டிச்
சொறிபுற முரிஞிய நெறியயன் மராஅத்
தல்குறு வரிநிழ லசைஇ நம்மொடு
தான்வரு மென்ப தடமென் றோளி
யுறுகணை மழவ ருள்கீண் டிட்ட
வாறுசென் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்
கன்மிசைக் கடுவளி யெடுத்தலிற் றுணைசெத்து
வெருளேறு பயிரு மாங்கட்
கருமுக முசுவின் கானத் தானே. (அகம். 121)

*இது நெஞ்சிற்குக் கூறியது.*

*வேற்று நாட்டு அகல் வயின் விழுமத்தானும் - அங்ஙனம் வேற்றுநாட்டிற் பிரியுங்காலத்துத் தானுறும் இடும்பையிடத்தும்: தலைவற்குக் கூற்று நிகழும்.*

*விழுமமாவன:- பிரியக் கருதியவன் பள்ளியிடத்துக் கனவிற் கூறு வனவும், போவேமோ தவிர்வேமோ என வருந்திக் கூறுவனவும், இவள் நலன் திரியுமென்றலும், பிரியுங்கொலென்று ஐயுற்ற தலைவியை ஐயந்தீரக் கூறலும், நெஞ்சிற்குச் சொல்லி அழுங்குதலும் பிறவுமாம்.*

*'நெஞ்சு நடுக்குற' என்னும் பாலைக்கலி (24)யுள் கனவிற் கூறியவாறு காண்க.*

1. நாள்நகையுடையம் - நாளும் நகையுடையேம். நாம் நகையுடையேம் எனவும் பாடம். தோளிவருமென்ப; அதற்கு நகையுடையேம் என்க. கயந்தலைமண்ணி - மெல்லிய தலையைக் கழுவி. ஆடிய வேறுபாடு களிறு - ஆடுதலால் வேறுபட்ட களிறு. தீண்டி உரிஞிய மராஅம் என இயைக்க. அசைஇ - தங்கி; இளைப்பாறி. (கானத்தான் -) கானத்தின்கண் வருமென்ப என இயைக்க. உள்கீண் டிட்ட - உள்ளே கிழித்த (குடை என்க). உறுகண் மழவர் உருள்கீண்டிட்ட எனவும் பாடம் அதற்குவண்டி உருள்செல்லும்படி உடைத்த (ஆறு என்க) என்பது பொருள் குடை - பனையோலைப் பிழா. பிழாவை (வளி -) காற்று எடுத்துச் செல்லலினால், (துணைசெத்து - ) துணை யென்று கருதி. துணை பெண்மான். வெருள்ஏறு - மயங்கிய கலைமான். பயிரும் - அழைக்கும். குடை மானின் முகம் போறலின், அதனைப் பெண்மா னென்று மயங்கி ஏறுபயிரும் என்க. இதற்கு ஒலியால் துணையென்று கருதி என்று பொருள்கோடல் பொருந்தாமை, 194ம் செய்யுள் நோக்கியறிக. பிழாவின் புறவடிவு மான்முக வடிவுபோலிருக்கும்.

[1]உண்ணா மையி னுயங்கிய மருங்கி
னாடாப் படிவத் தான்றோர் போல
வரைசேர் சிறுநெறி நிரைபுடன் செல்லுங்
கான யானை கவினழி குன்ற
மிறந்துபொரு டருதலு மாற்றாய் சிறந்த
சில்லையங் கூந்த னல்லகம் பொருந்தி
யொழியின் வறுமை யஞ்சுதி யழிதக
வுடைமதி வாழிய நெஞ்சே நிலவென
நெய்கனி நெடுவே லெஃகி னிமைக்கு
மழைமருள் பஃறோன் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை
யிறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
வொன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே. (அகம். 123)

*இது போவேமோ தவிர்வேமோ என்றது.*

அருவி யார்க்கும் பெருவரை யடுக்கத்
தாளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்
பூம்பொறி யுழுவை தொலைச்சிய வைந்நுதி
யேந்துவெண் கோட்டு வயக்களி றிழுக்குந்
துன்னருங் கான மென்னாய் நீயே
குவளை யுண்க ணிவளீண் டொழிய
வாள்வினைக் ககறி யாயி னின்னொடு
போயின்று கொல்லோ தானே படப்பைக்
கொடுமு ளீங்கை நெடுமா வந்தளிர்
நீர்மலி கதழ்பெய றலைஇய
வாய்நிறம் புரையுமிவண் மாமைக் கவினே. (நற். 205)

*இஃது இவள் நலனழியுமென்று செலவழுங்கியது.*

[3]தேர்செல வழுங்கத் திருவிற் கோலி
யார்கலி யெழிலி சோர்தொடங் கின்றே
வேந்துவிடு விழத்தொழி லொழிய
யான்றொடங் கினனா னிற்புறந் தரவே. (ஐங்குறு. 428)

*இஃது ஐயந் தீர்த்தது.*

---

1. உண்ணாமை - விரதத்தால் பசியிருத்தல். ஆடாப்படிவம் - அசையாத விரத வடிவம். யானைகவினழிகுன்றம் - சினைவினை முதன் மேல்நின்றது. நெஞ்சே! ஆற்றாய்; அஞ்சுதி; (அழிதகவுடைமதி - ) அழியுந் தகைமையுடையை. மதி - முன்னிலையசை. ஒன்றிற்கொள்ளாய் - போதல் தவிர்தல் என்னு மிரண்டில் ஒன்றில் நிலைபெறாய்.

2. ஆளி - சிங்கத்தின் பேதம். வேட்டு - இரையை விரும்பி. ஆளி உழுவை கொன்ற களிற்றை இழுக்கும் கானம் என இயைக்க. மாமைக்கவின் போகின்றுகொல் என முடிக்க.

3. திருவில் - இந்திரவில் சோர்தொடங்கின்று - சொரிதலைத் தொடங்கிற்று. புறந்தரல் - பாதுகாத்தல்.

[1]ஈதலந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக்
கம்மா வரிவையும் வருமோ
வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே. (குறுந். 63)

*இது தலைவியை வருகின்றாளன்றே எனக்கூறிச் செலவழுங்கியது.*

*மீட்டு வரவு ஆய்ந்த வகையின்கண்ணும் - பிரிந்த தலைவன் இடைச்சுரத்து உருவு வெளிப்பட்டுழியும் மனம் வேறுபட்டுழியும் மீண்டு வருதலை ஆராய்ந்த கூறுபாட்டின்கண்ணும்:*

[2]உழையணந் துண்ட விறைவாங் குயர்சினைப்
புல்லரை யிரத்திப் பசுங்காய் பொறப்பக்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்கா டிறந்து மெய்தவந் தனவா
லருஞ்செயற் பொருட்பிணி முன்னி யாமே
சேறு மடந்தை யென்றலிற் றான்ற
னெய்த லுண்கண் பைதல் கூரப்
பின்னிருங் கூந்தலின் மறையினள் பெரிதழிந்
துதியன் மண்டிய வொலிதலை ஞாட்பி
னிம்மென் பெருங்களத் தியவ ரூது
மாம்பலங் குழலி னேங்கிக்
கலங்கஞ ருறுவோள் புலம்புகொ ணோக்கே. (நற். 113)

*இஃது உருவு வெளிப்பட்டுக் கூறியது.*

[3]ஒன்றுதெரிந் துரைத்திசி னெஞ்சே புன்காற்
சிறியிலை வேம்பின் பெரிய கொன்று
கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பிற்
களிறுநின் றிறந்த நீர லீரத்துப்
பால்வீ தோன்முலை யகடுநிலஞ் சேர்த்திப்
பசியட முடங்கிய பைதற் செந்நாய்
மாயா வேட்டம் போகிய கணவன்
பொய்யா மரபிற் பிணவுநினைந் திரங்கும்
விருந்தின் வெங்காட்டு வருந்துதும் யாமே
யாள்வினைக் ககல்வா மெனினு
மீள்வா மெனினு நீதுணிந் ததுவே. (நற்றிணை. 103)

*இது வேறுபட்டு [4]மீட்டுவரவு ஆய்ந்தது.*

---

1. துய்த்தல் - அனுபவித்தல். இல்லோர் - பொருளில்லாதோர். அரிவை - பெண்.
2. உழை - மான். அணந்து - நிமிர்ந்து. இறைவாங்கு - சிறிது வளைந்த. இரத்தி - ஒருமரம். நோக்கு எய்த வந்தன என இயைக்க. இறந்தும் - கடந்தும். பைதல்கூர - வருத்தமிக. ஏங்கி - வாய்விட்டழுது. அஞர் - துன்பம்.
3. பெரிய கொன்று - பெரிய கிளைகளை முறித்து. முன்பு - வலி. இறந்த - பெய்தகன்ற. நீரல்லீரம் - மூத்திரவீரம்; இஃது இடக்க ரடக்கல். செந்நாய்ப் பிணவின் கணவன் அதனை நினைந்து இரங்கும் காடு என இயைக்க.
4. மீட்டுவரவு - மீண்டுவருதல் (திரும்பிவருதல்)

[1]ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை
வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு
மறுதரு வதுகொ றானே செறிதொடி
கழிந்துகு நிலைய வாக
வொழிந்தோள் கொண்டவெ னுரங்கெழு நெஞ்சே. (ஐங்குறு. 329)

*இது மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைவன் உழையர்க்கு உரைத்தது.*

[2]நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
யொண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே. (ஐங்குறு. 322)

*இஃது இடைச்சுரத்துத் தலைவி குணம் நினைந்து இரங்கியது. இன்னும் 'இரட்டுறமொழிதல்' என்பதனாற் செய்வினை முற்றி மீண்டு வருங்கால் வருந்தி நெஞ்சொடு கூறுவனவும் பிறவுங் கொள்க. அது,*

[3]என்றுகொ லெய்து ஞான்றே சென்ற
வளமலை நாடன் மடமக
ளிளமுலை யாகத் தின்னுயிர்ப் புணர்ப்பே.

[4]கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கிப் பெய்த
வப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்பட ரன்ன செங்குழை யகந்தோ
றிழுதி னன்ன தீம்புழற் றுய்வா
யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பாலி வாளிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவி

---

1. ஆள் வழக்கற்ற - ஆள் வழங்குதலற்ற. வழக்கறுதல் - போக்கு வரவு இல்லாமை. நனந்தலை - அகன்ற இடம். நெஞ்சுமறுகுவது - நெஞ்சு சுழலாநின்றது.

2. முளிய - உலர. கல்பக - மலைபிளக்க. தெறுதல் - சுடுதல். இனி - இப்பொழுது. ஆறு - வழி

3. புணர்ப்பு என்றுகொல் எய்தும் என இயைக்க. ஞான்று சென்ற - நாட்கள் சென்றன.

4. கொல்வினை - கொற்றொழில். புழுகு - மொட்டு. புழுகின் அம்பு என இயைக்க. அப்பு - வலித்தல்விகாரம். செப்புஅடர் - செப்புத்தகடு. இழுது - வெண்ணெய். புழல - துளை. துய்வாய் - துய்போலும் வாயையுடையது (பூ): ஆகுபெயர். துய் - பஞ்சு. உழுதுகாண்டல் - தாள்நீக்கிக்காண்டல். ஆர்கழல்பு - ஆர்க்கினின்றும் கழன்று. வான் ஆலியில் என மாற்றுக. ஆலி - பெருந்துளி. காலொடு - காற்றால். துப்பு - பவளம். கோடு - மேடு. இயவு -

னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளி ரோக்கிய
தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையொ டிரட்டுங்
குன்றுபி னொழியப் போகியுரந் துரந்து
ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவி
னெம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா
ணோங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் பெறநசைஇச் சென்றவெ னெஞ்சே (அகம். 9)

என வரும். இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

அவ்வழிப்பெருகிய சிறப்பின்கண்ணும் - பிரிந்தவிடத்துத் தான் [1]பெற்ற பெருக்கம் எய்திய சிறப்பின்கண்ணும்: மனமகிழ்ந்து கூறும்.

சிறப்பாவன:- பகைவென்று திறைமுதலியன கோடலும் பொருண்முடித்தலும் [2]துறைபோகிய ஓத்தும் பிறவுமாம்.

உதாரணம்:- 'கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவும் (அகம். 93) எனவும், 'தாழிரு டுமிய' (குறுந். 270) என்பதனுட் 'செய் வினை முடித்த செம்ம லுள்ளமொடு' எனவும் மனமகிழ்ந்து கூறியவாறு காண்க. 'முன்னிய முடித்தனமாயின்' என்னும் (169) நற்றிணையுட் பொதுப்படச் சிறப்புக் கூறியவாறு காண்க.

பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும் - அச்சிறப்புக்களை எய்திய தலைவன் பெரிய புகழையுடைத்தாகிய தேரையுடைய பாகரிடத்தும்: கூற்று நிகழ்த்தும்.

---

வழி. நெய்த்தோர் - இரத்தம். உரற்பாணி - வள்ளைப்பாட்டு. குடிஞை - ஆந்தை. கைகவியா - தடுக்கப்படாது. பின்னகம் - பின்னிமுடித்த மயிர்.

1. பெற்ற சிறப்பு என இயைக்க.

2. துறைபோதல் - முடிவுபோக அறிதல்.

[1]*அவரது சிறப்பு உணர்த்துதற்குப் பாகரெனப் பன்மையாற் கூறினார்.*

[2]இருந்த வேந்த னருந்தொழின் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானு
மேறிய தறிந்தன் றல்லது வந்தவாறு
நனியறிந் தன்றோ விலனே தாஅய்
முயற்பற ழுகளு முல்லையம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூ ராங்கண்
மெல்லிய லரிவை யில்வயி னிறீஇ
யிழிமி னென்றநின் மொழிமருண் டிசினே
வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
வுரைமதி வாழியோ வலவ வெனத்தன்
வரைமருண் மார்பி னளிப்பனன் முயங்கி
மனைக்கொண்டு புக்கன னெடுந்தகை
விருந்தோ பெற்றன டிருந்திழை யோளே. (அகம். 384)

*இதனாற் பாகன் சிறப்புக் கூறியவாறு காண்க.*

[3]மறத்தற் கரிதாற் பாக பன்னாள்
வறத்தொடு வருந்திய வல்குதொழிற் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீ ரவல்வர
நாநவில் பல்கிளை கறங்கு மாண்வினை
மணியொலி கேளாள் வாணுத லதனா
லேகுமி னென்ற விளையர் வல்லே
யில்புக் கறியுந ராக மெல்லென
மண்ணாக் கூந்தன் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குர லழுத்திய
வந்நிலைப் புகுதலின் மெய்வருத் துறாஅ
யவிழ்பூ முடியள் கவைஇய
மடமா வரிவை மகிழ்ந்தயர் நிலையே. (நற்றிணை. 42)

*இது தானுற்ற இன்பத்தினைப் பாகற்குக் கூறியது.*

---

1. அவர் என்றது பாகரை.
2. வேந்தன் அருந்தொழில் - வேந்தற்குரிய முற்றுதற்கரிய தொழில். அறிந் தன்றல்லது - அறிந்ததல்லது. அறிந்தன்றோஇலன் - அறிந்திலன். பறழ் - குட்டி. உகளும் - துள்ளிவிளையாடும். நீறீஇ - நிறுத்தி. இழிமின் - இறங்குதிர். மொழிமருண்டிசின் - மொழிக்கு மயங்கினேன் (- அதிசயமுற்றேன்). வளி - காற்று. அளிப்பனன் முயங்கி - அன்புசெய்தவனாய்த் தழுவி; அருளியவனாய்த் தழுவி எனினுமாம். நளிப்பனன் எனக் கண்ணழித்து இறுகத் தழுவி என்றுமாம்.
3. வறத்தொடு - வறட்சியோடு. உலகு - உலகிலுள்ள உயிர்கள். அவல் - பள்ளம். நாநவில் பல்கிளை - நாவாலொலிக்கின்ற பல கூட்டமான தவளைகள். கறங்க - ஒலித்தலால். அறியுநர் - அறிவிக்கின்றவர்; விவ்விகுதிதொக்கது. சில்போது - சிலபூ. மெய்வருத்துறாஅ - மெய்துவளவந்து. கவைஇய - அணைத்துக் கொண்ட. மகிழ்ந்து அயர்நிலை - மகிழ்ந்துகொண்டாடுநிலை. அயர்நிலை மறத்தற்கரிது என முடிக்க.

ஊர்க பாக வொருவினை கழிய (அகம். 44)

செல்க தேரே நல்வலம் பெறுந. (அகம். 34; 374)

எனவும் வரும்.

தயங்கிய களிற்றின்மேற் றகைகாண விடுவதோ
............... .................. .................. ......................
தாள்வளம் படவென்ற தகைநன்மா மேல்கொண்டு (கலி. 31)

என வருவன தலைவி கூற்றாதலின் தலைவன் மீண்டு வருங்காற் பாகற்கே கூறுவனென்றார்.

காமக்கிழத்தி மனையோள் என்று இவர் ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்: காமக்கிழத்தி மனையோளென்றிவர் சொல்லிய ஏமுறு கிளவி எதிரும் - இற்பரத்தை தலைவியென்று கூறிய இருவர் சொல்லிய வருத்தமுற்ற கிளவியின் எதிரிடத்தும்: கூற்று நிகழ்த்தும்.

[1]அவை 'அருஞ்சுரத்து வருத்தம் உற்றீரே' எனவும் 'எம்மை மறந்தீரே' எனவுங் கூறுவனவும் பிறவுமாம்.

[2]எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடை
யரிய வாயினு மெளிய வன்றே
யவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பிக்
கடுமான் றிண்டேர் கடைஇ
நெடுமா னோக்கிநின் னுள்ளியாம் வரவே. (ஐங். 360)

இது, வருத்தம் உற்றீரே என்றதற்குக் கூறியது.

[3]தொடங்குவினை தவிரா வசைவி னோன்றாட்
கிடந்துயிர் மறுகுவ தாயினு மிடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த
தாவி லுள்ளந் தலைத்தலைச் சிறப்பச்
செய்வினைக் ககன்ற காலை யெஃகுற்
றிருவே றாகிய தெரிதகு வனப்பின்
மாவி னறுவடி போலக் காண்டொறு

---

1. அவை என்றது காமக்கிழத்தியுந் தலைவியுங் கூறுவனவற்றை.

2. என்றூழ் - வெயில். நீளிடை - நீண்டவழி. அரியவாயினும் - வருதற் கரியவாயினும். அவவுஉறு - ஆசைபொருந்திய. அவா அவ என நின்று உகரம்பெற்றது. (கலி. 14ஞ் செய்யுளுரை நோக்குக) கவவு - அகத்தீடு (- தழுவுதல்) கடைஇ - செலுத்தி வர எளிய வன்றே என இயைக்க.

3. தவிரா - தவிராத. நோன்றாட் புலி என இயையும். நோன்தாள் - வலிய முயற்சி. இடம்படின் - இடப்பக்கம் வீழின். எஃகு உற்று - கத்தியால் வெட்டப் பட்டு. மாவின்நறுவடி - மாவினது நறிய பிஞ்சு. மேவல்தண்டா - பொருந்துத

மேவ றண்டா மகிழ்நோக் குண்க
ணினையாது கழிந்த வைக லெனையதூஉம்
வாழலென் யானெனத் தேற்றிப் பன்மான்
டாழக் கூறிய தகைசா னன்மொழி
மறந்தனிர் போறி ரெம்மெனச் சிறந்தநின்
னெயிறுகெழு துவர்வா யின்னகை யழுங்க
வினவ லானாப் புனையிழை கேளினி
வெம்மை தண்டா வெரியுகு பறந்தலைக்
கொம்மை வாடிய வியவுள் யானை
நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி
யறுநீ ரம்பியி னெறிமுத லுணங்கு
முள்ளுநர்ப் பனிக்கு மூக்கருங் கடத்திடை
யெள்ள னோனாப் பொருடரல் விருப்பொடு
நாணுத்தளை யாக வைகி மாண்வினைக்
குடம்பாண் டொழிந்தமை யல்லதை
மடங்கெழு நெஞ்ச நின்னுழை யதுவே. (அகம்.29)

*இது மறந்தீர்போலும் என்றதற்குக் கூறியது.*

[1]உள்ளினெ னல்லெனோ யானே உள்ளி
நினைந்தனெ னல்லெனோ பெரிதே நினைந்து
மருண்டனெ னல்லெனோ வுலகத்துப் பண்பே
நீடிய மராஅத்த தோடுதோய் மலிநிறை
யிறைத்துணச் சென்றற் றாஅங்
கனைப்பெருங் காம மீண்டுகடைக் கொளவே. (குறுந். 99)

*'பிறவும்' என்றதனான் இத்தன்மையனவுங் கொள்க. இவை [2]இருவர்க்கும் பொது. இவற்றைக் காமக்கிழத்தி விரைந்து கூறு மென்றற்கு அவளை முற்கூறினார்.*

*சென்ற தேஎத்து உழப்பு நனி விளக்கி இன்றிச் சென்ற தம் நிலை கிளப்பினும் - அங்ஙனம் கூறிய இருவர்க்குந் தான்சென்ற தேயத்தில் நேர்ந்த வருத்தத்தை மிகவும் விளங்கக்கூறி [3]நனவி னாற் சேறலின்றிக் கனவினாற் கடத்திடைச் சென்ற தம்முடைய நிலையைத் தலைவன் கூறினும்:*

---

லமையாத. எம்மென - எம்மிடத்தென்று. கொம்மை - பெருமை. இயவுள் - வழி. அம்பி - தோணி. நோனா (பொறாத) விருப்பு என இயையும். நாண் - மானம்.

1. பள்ளி - படுக்கை. ஈண்டுகடைக்கொள - இங்கே யான் வருதலால் முடிவடையும்படி. சென்று அற்றாங்கு - சென்று வற்றிக் குறைந்தாற் போல. அனைப் பெருங்காமம் - அவ்வளவு பெருங்காமம். அற்றாங்குகடைக்கொள என இயைக்க.

2. இருவர் - காமக்கிழத்தியுந் தலைவியும்

3. நனவினாற் சேறலின்றிக் கனவினாற்சேறல் என்றது நனவின் கண் நின்கண் சேறலின்றிக் கனவின் கண் நின்கண் செல்லல் என்றபடி. இது இருவர்க்கும் பொது. சேறல் என்பதற்கு நிகழ்தலென்றுமாம்.

*உதாரணம்:*

[1]ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்
துள்ளியு மறிதிரோ வெம்மென யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவ லழுங்க
நோய்முந் துறுத்து நொதுமல் மொழியனின்
னாய்நல மறப்பெனோ மற்றே சேணிகந்
தொலிகழை மிசைந்த ஞெலிசொரி யொண்பொறி
படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுன் மீமிசை வளிசுழற் றுறாஅக்
காடுகவர் பெருந்தீ யோடுவயி னோடலி
னதற்கெடுத் தலறிய சாத்தொ டொராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்
தினந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு
ஞான்றுதோன் றவிர்சுடர் மான்றாற் பட்டெனக்
கட்பட ரோதி நிற்படர்ந் துள்ளி
யருஞ்செல வாற்றா வாரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாய னவ்வி பட்டென
விலங்குவளை செறியா விகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்
டின்னகை யினைய மாகவு மெம்வயி
னூடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமயத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவி
னேற்றேக் கற்ற வுலமரல்
போற்றா யாகலிற் புலத்தியா லெம்மே. (அகம். 39)

*இதனுள் வறுங்கை காட்டியவாயல் கனவினென நன வின்றிச், சென்றவற்றைத் தலைவன் கூறியவாறு காண்க. இதுவும் இருவர்க்குமாம்.*

*அருந்தொழின்முடித்த [2]செம்மற்காலை விருந்தொடு நல்லவை வேண்டற்கண்ணும் - செயற்கு அரிதாகிய வினையை முடித்த தலைமையை எய்தியகாலத்தே தலைவி விருந்தெதிர்கோடலோடே*

---

1. ஒழித்தது - பெண்களைப் பிரிதல் கூடாதென்று முன்னோர் விலக்கியது. பழித்த - அவ்விதியை இகழ்ந்த. அழுங்க - குறைய. முந்துறுத்து - தோற்றுவித்து. நொதுமல் - அயன்மை. மொழியல் - சொல்லற்க. ஞெலி - கடைந்த பிசைதலால் கடைந்தபொறி என்க. பிசைதல் - தேய்த்தல். ஞெமல் - சருகு. பொத்தி - பொத்தலால்; (- மூடலால்). அதர் - வழி சாத்து - வாணிகத்திரள். சாத்தொடு கண்படுபாயல் எனக் கூட்டுக. படுதல் - கண்படுதல் (துயிலல்). ஞான்று - தாழ்ந்து. மான்றுபட்டென - மயங்கிப்பட்டதாக. நவ்விபட்டென - நவ்வியை எதிர்ப்பட்டாலொப்ப. நவ்வி - மான். வாயல் - உண்மையல்லாத.
2. செம்மல் - தலைமை.

*நீராடிக் கோலஞ்செய்தல் முதலியவற்றைக் காண்டல் வேண்டிய இடத்தும் தலைவன் கூற்று நிகழ்த்தும், உதாரணம்:*

[1]முரம்புதலை மணந்த நிரம்பா வியவி
னோங்கித் தோன்று முமண்பொலி சிறுகுடிக்
களரிற் புளியிற் காய்பசி பெயர்ப்ப
வுச்சிக் கொண்ட வோங்குகுடை வம்பலீர்
முற்றையு முடையமோ மற்றே பிற்றை
வீழ்மா மணிய புனைநெடுங் கூந்த
னீர்வார் புள்ளி யாக நனைப்ப
விருந்தயர் விருப்பினள் வருந்துந்
திருந்திழை யரிவைத் தேமொழி நிலையே (நற்றிணை. 374)

*என இதனுள் விருந்தயர் விருப்பினளென விருந்தொடு நல்லவை வேட்டுக் கூறியவாறு காண்க.*

*மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும் கேளிர் ஒழுக்கத்துப் புகற்சிக்கண்ணும் - வினைமுற்றிப் புகுந்த தலைமகனை எதிரேற்றுக் கொள்ளும் மங்கல மரபினர் மாலையேந்திய பெண்டிரும் புதல் வரும் கேளிரும் ஆகலான் அக்கேளிர் செய்யும் எதிர்கோடலொழுக் கத்துக் கண்ணும்: தலைமகன் உள்ளமகிழ்ந்துரைக்கும்.*

*[2]உம்மை விரிக்க. பெண்டிரும் மக்களுமாகிய கேளி ரென்றுமாம் உதாரணம்:*

[3]திருந்துங் காட்சிப் பெரும்பெயர்க் கற்பி
னாணுடை யரிவை மாணகர் நெடுந்தே
ரெய்தவந் தன்றாற் பாக நல்வர
விளைய ரிசைத்தலிற் கிளையோ ரெல்லாஞ்
சேயுயர் நெடுங்கடைத் துவன்றின ரெதிர்மார்
தாயரும் புதல்வருந் தன்முன் பறியாக்
கழிபே ருவகை வழிவழி சிறப்ப
வறம்புரி யொழுக்கங் காண்கம்
வருந்தின காண்கநின் றிருந்துநடை மாவே.

---

1. முரம்பு - பரல் முரம்பு தலை மணந்த இயவு என்றது பரற்கற்கள் மேலி டத்தே பொருந்தியவழி என்றபடி. முரம்பு - பாழ் நிலமுமாம். உமண் - உமண்சாதி; (உப்பமைப்போர்). களரி - களர்நிலம். பெயர்ப்ப - போக்கு தலால். தேமொழிநிலை முன்னையு முடையமோ? பிற்றை - பின்னே (இப்பொழுதுதான்).
2. உம்மை என்றது கேளிரும் என்றதிலும்மையை.
3. பெரும்பெயர்க்கற்பு - பெரிய புகழமைந்த கற்பு. எய்தவந்தன்று - சமீபமாக வந்தது. எதிர்மார் - எதிர்கொள்வார். தாயரு என்றது தன் கீழ்க்குல மகளிர்க் குள் தன்னால் மணக்கப்பட்டாரையுங் கருதிப்போலும். மாவருந்தின காண்கம் என்றது விரைந்து செலுத்துவாய் என்றபடி.

[1]ஏனைவாயில் எதிரொடு தொகைஇ - சிறந்த மொழியை ஒழிந்து நின்ற வாயில்கட்கு எதிரே கூறுங் கூற்றோடே முற்கூறிய வற்றைத் தொகுத்து: உதாரணம்:

[2]நகுகம் வாராய் பாண பகுவா
யரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவிற்
றேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காமர் நெஞ்சந் துரப்ப யாந்தம்
முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்
பிறைவனப் புற்ற மாசி றிருநுத
னாறிருங் கதுப்பினெங் காதலி வேறுணர்ந்து
வெரூஉ மான்பிணையி னொரீஇ
யாரை யோவென் றிகந்துநின் றதுவே. (நற்றிணை. 250)

இஃது ஏனை வாயிலாகிய பாணற்கு உரைத்தது.

பண்ணமை பகுதி முப்பதினொரு மூன்றும் - ஓதப்பட்ட இவையே இடமாக நல்லறிவுடையோர் ஆண்டாண்டு வேறு வேறாகச் செய்யுள் செய்து கோடற்கு அமைந்துநின்ற கூறுபாட்டை உடைய வாகிய முப்பத்துமூன்று துறையும்: எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன - களவுபோல இழி தொழிலின்றி ஆராய்தற்கரிய சிறப்போடுகூடிய தலைவன்கண்ண என்றவாறு.

சிறப்பாவன:- வந்தகுற்றம் வழிகெட ஒழுகலும், இல்லறம் நிகழ்த்தலும், பிரிவாற்றுதலும் பிறவுமாம். இன்னவிடத்தும் இன்னவிடத்தும் நிகழுங் கூற்றுக்களை வாயிலெதிர் கூறுங் கூற்றோடே தொகுத்துப் பண்ணுதற்கமைந்த பகுதியுடையவாகிய முப்பத்து மூன்று துறையுந் தலைவன்கண் நிகழ்வன என்று முடிக்க. எடுத்துரைப்பினுந் தந்நிலை கிளப்பினும் அக்கூற்றுக்களையும் வாயிலெதிரொடு தொகைஇயென முடிக்க. இவற்றுட் [3]பண்ணிக் கொள்ளும் பகுதியாவன:- யாம் மறைந்து சென்று இவனைக்

1. ஏனை - தோழியல்லாத.

2. பகுவாய் - பிளந்தவாய். அரி - பரல். கிண்கிணி - சதங்கை. செவ்வாய் - சிவந்தவாய்நீர். வேறுணர்ந்து - (சாந்தழிகுறியை) வேறாகக்கருதி. யாரை - யாவனாந்தன்மையையுடையை. இகந்து - நீங்கி. இகந்துநின்றதை நகுகம் வாராய் என இயைக்க.

3. பண்ணிக்கொள்ளும் பகுதியாவன் என்றது சூத்திர அடியுள் பண்ணமைபகுதி எனக் கூறியதை.

*கண்ணைப்புதைத்தால் தலைநின்றொழுகும் பரத்தையர் பெயர் கூறுவனென்று உட்கொண்டு காமக்கிழத்தியாதல் தலைவியாதல் சென்று கண்புதைத்துழித் தலைவன் கூறுவனவும், பள்ளியிடத்து வந்திருந்து கூறுவனவும், இவள் ஊடற்குக் காரணம் என்னென்று தோழி வினாயவழிக் கூறுவனவும், பிரிந்தகாலத்து இவளை மறந் தவா றென்னென்ற தோழிக்குக் கூறுவனவும் பிறவுமாம். உதாரணம்:*

[1]சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன
நலம்பெறு கையினெங் கண்புதைத் தோயே
பாய லின்றுணை யாகிய பணைத்தோட்
டோகை மாட்சிய மடந்தை
நீயல துளரோவென் னெஞ்சமர்ந் தோரே, (ஐங். 293)

[2]தாழிரு டுமிய மின்னித் தண்ணென
வீழுறை யினிய சிதறி யூழிற்
கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெருவான் யாமே
செய்வினை முடித்த செம்ம லுள்ளமொ
டிவளின் மேவின மாகிக் குவளைக்
குறுந்தா ணாண்மலர் நாறு
நறுமென் கூந்தன் மெல்லணை யேமே, (குறுந். 270)

[3]இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண்ட னள், (குறள். 1315)

[4]தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று, (குறள். 1319)

[5]எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற
நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கிற்
றேம்பாய் கூந்தன் மாஅ யோளே (ஐங்குறு. 324)

---

1. சிலம்பு - மலை அன்ன கையிற் கண்புதைத்தோயே என்க. பாயல் - படுக்கை. தோகை - மயில். இது கண்புதைத்துழிக் கூறியது.
2. துமிய - அழிய. உறை - துளி. ஊழ் - முறை. கடிப்பு - குறுந்தடி. செம்மல் - தலைமை; நிறைவு. இவளின் - இவளோடு. கூந்தல் அணையேம் - கூந்தலாகிய அணையிடத்தேம். அணை - படுக்கை (சயனம்). இது பள்ளி யிடத்து வந்திருந்து கூறியது.
3. நிறைநீர் - நிறைந்தநீர். இது ஊடற்குக் காரணங் கூறியது.
4. உணர்த்தல் - தெளிவித்தல். காயும் - வெகுளாநிற்கும். இதுவும் ஊடற்குக் காரணங்கூறியது.
5. என்றூழ் - வெயில். மாஅயோளைக் காண்குவென் என இயைக்க. வேங்கை - வேங்கைப்பூ. சுணங்கு - தேமல். இது மறக்கவில்லை என்று கூறியது.

எனவும் வரும். இன்னும் அதனானே ஊடலைவிரும்பிக் கூறு வனவுங் கொள்க.

[1]ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று, (குறள். 1307)

[2]ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா (குறள். 1329)

என வரும். இன்னும் கற்பியற்கண் தலைவன்கூற்றாய் வேறுபட வருஞ் சான்றோர் செய்யுட்களெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க. *(5)*

**(கற்பின்கண் தலைவி கூற்றுக்கள் நிகழுமிடங்கள் இவை எனல்)**

147. அவனறி வாற்ற வறியு மாகலி
னேற்றற் கண்ணும் நிறுத்தற் கண்ணும்
முரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற்
பெருமையிற் றிரியா வன்பின் கண்ணுங்
கிழவனை மகடூஉப் புலம்புபெரி தாகலி
னலமரல் பெருகிய காமத்து மிகுதியு
மின்பமு மிடும்பையு மாகிய விடத்துங்
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சுபுண்ணுறீஇ
நளியி னீக்கிய விளிவரு நிலையும்
புகன்ற வுள்ளமொடு புதுவோர் சாயற்
சகன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி
யியன்ற நெஞ்சந் தலைப்பெயத் தருக்கி
யெதிர்பெய்து மறுத்த வீரத்து மருங்கினுந்
தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி
யெங்கையர்க் குரையென விரத்தற் கண்ணுஞ்
செல்லாக் காலைச் செல்கென விடுத்தலுங்
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
யேமுறு விளையாட் டிறுதிக் கண்ணுஞ்
சிறந்த செய்கை யவ்வழித் தோன்றி
யறம்புரி யுள்ளமொடு தன்வர வறியாமைப்

1. 1 - 2 . இவை ஊடலை விரும்பிக் கூறியன.

புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானுந்
தந்தைய ரொப்பர் மக்களென் பதனா
லந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலுங்
கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது
நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்
பகுதியி னீங்கிய தகுதிக் கண்ணுங்
கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி
யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காத லெங்கையர் காணி னன்றென
மாதர் சான்ற வகையின் கண்ணுந்
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை யுள்ளிய வழியுந்
தன்வயிற் சிறைப்பினு மவன்வயிற் பிரிப்பினு
மின்னாத் தொல்சூ ளெடுத்தற் கண்ணுங்
காமக் கிழத்தியர் நலம்பா ராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணுங்
கொடுமை யொழுக்கந் தோழிக் குரியவை
வடுவறு சிறப்பிற் கற்பிற் றிரியாமைக்
காய்தலு முவத்தலும் பிரித்தலும் பெட்டலு
மாவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்
வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவ தென்ப.

*இது, முறையானே தலைவிகூற்று நிகழும் இடங் கூறுகின்றது.*

இ — ள்: *அவன் அறிவு ஆற்ற அறியும் ஆகலின் ஏற்றற் கண்ணும் நிறுத்தற்கண்ணும் உரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற் பெருமையில் திரியா அன்பின்கண்ணும்: அவன் அறிவு ஆற்ற அறியும் ஆகலின் - வேதத்தையுந் தருமநூலையுந் தலைவன் அறிந்த அறிவைத் தலைவி மிக அறியுமாதலின், ஏற்றற்கண்ணும் - அந்தணர் முதலிய மூவருந் தத்தமக்குரிய வேள்வி செய்யுங்கால் தம்மனைவியர் பலருள்ளுந் தமக்கு ஒத்தாளை வேள்விக்கண் உரிமைவகையான் ஏனை மகளிரின் உயர்த்தல் செய்யுமிடத்தும், நிறுத்தற்கண்ணும் - தத்தங் குலத்திற்கேற்ப நிறுத்துதலைச் செய்யுமிடத்தும், உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில் - அவர் குலத்திற்கேற்ற உரிமைகளைக் கொடுத்த தலைவனிடத்து, பெருமையில்*

*திரியா அன்பின் கண்ணும் - தத்தங் குலத்திற்கேற்ற பெருமை யினின்றும் நீங்காத அன்புசெய்து ஒழுகுதற்கண்ணும்: அறியு மாகலின் அன்புசெய்து ஒழுகுமெனக் கூட்டுக.*

*என்றது, அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணி கர்க்கு இருவருந் தலைவியராகியவழித் தங்குலத்திற் கொண்ட வரே வேள்விக்கு உரியர் ஏனையோர் வேள்விக்கு உரியரல்ல ரென்பதூஉம் அவர்க்குத் தங்குலங்கட்கு ஏற்றவகையின் உரிமை கொடுப்ப ரென்பதூஉம் [1]அவர்களும் இது [2]கருமமே செய்தா னென்று அன்பில் திரியா ரென்பதூஉம் கூறியவாறு. உதாரணம்:*

[3]நின்ற சொல்லி னீடுதோ றினிய
ரென்று மென்றோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்திற் றொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை
நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை யுறுபவோ செய்பறி யலரே. **(நற்றிணை.1)**

*இதனுள், [4]தாமரைத் தாதையும் ஊதிச் சந்தனத்தாதையும் ஊதி வைத்த தேன்போலப் புரைய என்றதனான் ஏற்றற்கண் தலைவி கூறினாள். பிரிவறியல ரென்றதும் அன்னதோர் குணக் குறையில ரென்பதாம். பிரிவுணர்ந்து புலந்துரைப்பின் நாணழிவாம்.*

[5]நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே. **(குறுந். 3)**

*இது, நிறுத்தற்கட் கூறியது.*

---

1. அவர்களும் என்றது மனைவியர்களை.
2. கருமம் - செய்யத்தகுந்தது.
3. புரைய - உயர்ச்சியையுடையன (மேதக்கன). புரையோர் கேண்மை - மேதக்கோராகிய தலைவரது நட்பு. உறுபவோ - உறுவாரோ. அஞ்சிச் செய்தலறியாராய்ச் சிறுமையுறுபவோ என இயைக்க.
4. தாமரைத்தாதும் சந்தனத்தாதும் உயர்வு தாழ்வு கருதிநின்றன என்பது நச்சினார்க்கினியர் கருத்துப்போலும். இதற்கு வேறு கருத்துக் கூறுவர் நற்றிணையுரையாசிரியர்.
5. நிலம் நட்பின் அகலத்திற்கும் வான் உயர்ச்சிக்கும் நீர் ஆழத்திற்கும் ஒப்பாயின. இவை உறழ்ச்சிப்பொருளில் வந்தன. இழைத்தல் - செய்தல்.

*கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின் அலமரல் பெருகிய காமத்து மிகுதியும் - அறமும் பொருளுஞ் செய்வதனாற் புறத்துறை தலில் தலைவனைத் தலைவி நீங்குங்காலம் பெரிதாகலின் அதற்குச் சுழற்சி மிக்க வேட்கை மிகுதி நிகழ்ந்தவிடத்தும்:* உதாரணம்

[1]காமந் தாங்குமதி யென்போர் தாமஃது
தறியலர் கொல்லோ. வனைமது கையர்கொல்
யாமெங் காதலர்க் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல வில்லா குதுமே. (குறுந். 290)

*இது, தெருட்டுந் தோழிக்குத் தலைவி காமத்து மிகுதிக்கட் கூறியது.*

*இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும் - அங்ஙனம் அலமரல் பெருகியவழித் தலைவனை எதிர்ப்பட்டஞான்று இன்பமுந் தனிப் பட்ட ஞான்று துன்பமும் உளவாகிய இடத்தும்: உதாரணம்:*

[2]வாரன் மென்றினைப் புலவுக்குரன் மாந்திச்
சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளியெறி வயிரிற் கிளிவிளி பயிற்றும்
நளியிருஞ் சிலம்பி னன்மலை நாடன்
புணரிற் புணருமா ரெழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயவெ
னணிநலஞ் சிதைக்குமார் பசலை யதனா
லசுணங் கொல்பவர் கைபோ னன்று
மின்பமுந் துன்பமு முடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே. (நற்றிணை. 304)

[3]இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. (குறள். 1152)

---

1. தாங்கு - பொறுப்பாய். அனை - அத்துணை. மதுகை - வலி. துனி - துயர். இல்லாகுதும் - இல்லையாவேம். இது சாக்காடு குறித்தது.

2. வாரல் - வாருதல் (... கொள்ளையிடுதற்குரிய); நீட்சியுமாம். வயிர் - கொம்பு வாச்சியம். விளி - ஒலி புணரின் எழில் புணரும்; பிரியின், மாமைசாயப் பசலை அணிநலஞ்சிதைக்கும் எனவும் அதனால் மார்பு உடைத்து எனவும் இயைக்க அசுணம்கொல்பவர்கை அசுணத்திற்கு முதல் யாழை வாசித்து இன்பஞ் செய்து அழைத்துப் பின் பறையை அடித்துக் கொல்வதுபோல மார்பும் எனக்கு முன் இன்பஞ்செய்து பின் துன்பஞ்செய்கின்றது என்பது கருத்து. பறை யொலி அசுணங் கோறலை "பறைபடவாழா அசுணமா" என்பதனானறிக.

3. பார்வல் - பார்வை. புணர்வு புன்கணுடைத்து என்க. புன்கண் - துன்பம். ஈண்டு அச்சத்தின்மேற்று.

[1]கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ நளியினீக்கிய இளிவரு நிலையும் - யானைக் கன்று போலும் புதல்வன் பிறத்தலான் உளதாகிய விருப்பத்தை யுடைய நெய்யணிக்கு விரும்பிய தலைவனை நெஞ்சை வருத்தித் தன்னைச் செறிதலினின்று நீக்கிய இளிவந்த நிலைமைக்கண்ணும்.

[2]தன்னை அவமதித்தானென்றது 'இளிவருநிலை' யென்றார்.

[3]கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வனை யீன்றவெம் மேனி முயங்க
லதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே. (ஐங்குறு. 65)

இது, புதல்வற் பயந்தகாலத்துப் பிரிவுபற்றிக் கூறியது.

புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு அகன்ற கிழவனை - புதல்வனை விளையாட்டை விரும்பின உள்ளத்தோடே புதுவது புணர்ந்த பரத்தையர் தன்மாட்டு மனநெகிழ்ந்த மென்மையின் பொருட்டு அவர்க்கு அருள்செய்யப் பிரிந்து வந்தோனை, புலம்பி நனிகாட்டி - தனது தனிமை மிகவும் அறிவித்து, இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த்து அருக்கி - அவன்மேற் சென்ற நெஞ்சினைச் செல் லாமல் அவனிடத்தினின்றும் மீட்டு [4]அருகப்பண்ணி, எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும் - பிறருள் ஒருத்தியைப் காணாளா யினுங் கண்டாள்போலத் தன்முன்னர்ப் பெய்து கொண்டு வாயின் மறுத்ததனால் தோன்றிய நயனுடைமைக்கண்ணும்:

எனவே, மறுப்பாள்போல் நயத்தாளாயிற்று. கிழவனை மறுத்தவெனக் கூட்டுக. உதாரணம்:

[5]கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பி
னிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கிற்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்காற்
களிற்றுச்செவி யன்ன பாசடை மருங்கிற்
கழுநிவத் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவன் முகத்திற் பன்மலர் தயங்கப்

---

1. கயந்தலை - யானைக்கன்று.
2. தன்னை என்றது ஈண்டுத் தலைவியை
3. கலித்த - தழைத்த. சுரும்பு - வண்டு. களையும் - நீக்கும். முயங்கல் - முயங்கற்க. அது மார்பு சிதைப்பதுவாம். சிதைத்தல் - கெடுத்தல், பால்படுதன் முதலிய வற்றால் கெடுப்பதுவாம் என்றபடி.
4. அருகல் - சுருங்கல்.
5. பக - பிளக்க. வீழ்ந்த கிழங்கு என்க. கழை - மூங்கில். கால் - தண்டு. கழு - கழுக்கோல். முறுவன்முகம் - மகளிரது நகையோடு கூடிய முகம். என்றது

பூத்த பொய்கை புள்ளிமிழ் பழனத்து
வேப்புநனை யன்ன நெடுங்க ணீர்ஞெண்
டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல
தொலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற்
றிதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்
னீர்மலி மண்ணளைச் செறியு மூர
மனைதகு வயலை மரனிவர் கொழுங்கொடி
யரிமல ராம்லொ டார்தழை தைஇ
விழவாடு மகளிரொடு தழுவணிப் பொலிந்து
மலரே ருண்கண் மாணிழை முன்கைக்
குறுந்தொடி தொடக்கிய நெடுந்தொடர் விடுத்த
துடன்றனள் போலுநின் காதலி யெம்போற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
வென்ன கடத்தளோ மற்றே தன்முகத்
தெழுதெழில் சிதைய வழுதன ளேங்கி
வடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு
கூர்நுதி மழுகிய வெயிற்ற
ளூர்முழுது நுவலுநிற் காணிய சென்மே (அகம். 176)

எனவரும்.

எதிர்பெய்து மறுத்த ஈரமெனவே எதிர்பெய்யாது மறுத்த ஈரமுங் கொள்க.

[1]கூர்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் ளன்ன வெண்கான் மாமலர்
பொய்தன் மகளிர் விழவணிக் கூட்டு
மவ்வய னண்ணிய வளங்கே ழூரனைப்
புலத்தல் கூடுமோ தோழி யல்கற்
பெருங்கதவு பொருத யானை மருப்பி
னிரும்புசெய் தொடியி னேர வாகி

உவகையுற்ற முகத்தை. மகளிர் என்னுஞ் சொல் வருவிக்க. கிழங்கினையும் காலையும் உடைய தாமரை எனவும், இலையின் மருங்கே முகையின் இடையிடையே மலர்தயங்கப் பூத்த தாமரை எனவும் இயைக்க. இமிழ்தல் - ஒலித்தல். பழனம் - வயனிலம். நனை - அரும்பு. ஞெண்டு அஞ்சி ஓடிச் செறியும் ஊர எனக் கூட்டுக. பகன்றை - சிவதை. வயலைக்கொடி என இயையும். தைஇ - உடுத்து. தழுவணி - தழூஉ ஆடும் அழகு. தழூஉ - கைகோத்தாடல். குறுந்தொடி - குறியவளையினையுடையாள். துடக்கிய - பிணித்த. தொடர் - பிணிப்பு காதலி என்றது ஒருத்தியை. என்ன கடத்தள் - என்ன கடப்பாடுடையள். தித்தி - தேமல். பல்லூழ் - பலமறை. தித்தியையும், விரலையும். எயிற்றையும் உடையளாய் நின்னை நுவலும் காணியசெல் என இயைக்க.

1. கழன்ற மலர் என முடியும். கால் - காம்பு. விழவணிக் கூட்டும் - (மலரை) விழவிற்கு அணியாகக்கூட்டும். கூட்டும் வயல் என்க. அல்கல் - இரவு. தொடி - பூண். தொடியின் ஏரவாகி - தொடியின் அழகையுடையவாகி. மாக்கண் -

மாக்கள் எடைய மார்பகம் பொருந்தி
முயங்கல் விடாஅ லிவையென மயங்கி
யானோ மென்னவு மொல்லார் தாமற்
றிவைபா ராட்டிய பருவமு முளவே
யினியே, புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்
திதலை யணிந்த தேங்கொள் மென்முலை
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்
வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுத றாமஞ் சினரே
யாயிடைக், கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க் கொத்தனிர் நீயி ரிஃதோ
செல்வற் கொத்தனெம் யாமென மெல்லவென்
மகன்வயிற் பெயர்தந் தேனே யதுகண்
டியாமுங் காதலெ மவற்கெனச் சாஅய்ச்
சிறுபுறங் கவையின னாக வுறுபெயற்
றண்டுளிக் கேற்ற பலவுழு செஞ்செய்
மண்போன் ஞெகிழ்ந்தவற் கலுழ்ந்தே
நெஞ்சறை போகிய வறிவி னேற்கே. (அகம். 26)

*இதனுள், ஒருத்தியை வரைந்து கூறாது நல்லோரைப் பொதுவாகக் கூறியவாறும் ‘வேண்டினமெ’னப் [1]புலம்புகாட்டிக் கலுழ்ந்ததென [2]ஈரங் கூறியவாறுங் காண்க.*

*தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி எங்கையர்க்கு உரையென இரத்தற்கண்ணும் - பரத்தையர் மாட்டுத் தங்கிய [3]செவ்வியை மறையாத ஒழுக்கத்தோடே வந்த தலைவனை நீ கூறுகின்ற பணிந்த மொழிகளை எங்கையர்க்கு வணங்கிக் கூறென இரந்து கோடற்கண்ணும்: உதாரணம்:*

அகன்றுறை யணிபெற

*என்னும் மருதக்கலி (73) யுள்,*

---

கரியமுலைக்கண். இவை முயங்கல் விடாஅல் என - இவற்றைத் தழுவுதலை விடாதொழிக என்றுசொல்ல, ஓம் என்னவும் - ஒழியும் என்று சொல்லவும். ஒல்லார் - இயையார். பருவம் - காலம். இனி - இப்பொழுது. கவவுக்கை - அகத்திட்டகை (தழுவியகை). போற்றி - கருதி. நல்லோர்க்கு - அழகுடைய பரத்தையர்க்கு. இஃதுசெல்வன் - இந்தச் செல்வன் (என்றது புதல்வனை) சிறுபுறம் - முதுகு, பிடருமாம். அறிவினேற்கு புலத்தல் கூடுமோ என இயைக்க. அறைபோதல் - கீழறல்.

1. புலம்பு - தனிமை. புலம்பு ... ... காட்டி என்றது வேண்டினம் என்பதனால் தனித்தமை தோன்றினமையின்.
2. ஈரம் - அன்பு.
3. செவ்வி - கோலம்.

[1]நோதக்கா யெனநின்னை நொந்தீவா ரில்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி யிளையவ ரிடைமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால்

என்பன கூறி,

[2]மண்டுநீ ராரா மலிகடல் போலுநின்
றண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றிமற் றியாமெனிற்
றோலாமோ நின்பொய் மருண்டு

எனவும் எங்கையரைத் தேற்றெனக் கூறியவாறு காண்க.

செல்லாக்காலைச் செல்கென விடுத்தலும் - தலைவன் செல்லானென்பது இடமுங் காலமும் பற்றி அறிந்தகாலத்து ஊடலுள்ளத்தாற் கூடப்பெறாதாள் செல்கெனக் கூறி விடுத்து ஆற்றுதற்கண்ணும்: உதாரணம்:

புள்ளிமி ழகல்வயல்

என்னும் மருதக்கலி (79) யுள்,

[3]பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
யாங்கே யவர்வயிற் சென்றி யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து.

[4]சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டுது பனிமல ராரு மூர

---

1. நோதக்காய் - வெறுக்கத்தக்க பரத்தமையையுடைய. நொந்தீவார் - வெறுப்பார். தேற்றிய - தெளிவிக்க (ஊடலுணர்த்த). இளையவர் - இளைய பரத்தையர் . தாதுசோர்ந்து - தாதுகள் உதிர்ந்து. கண்ணி - மாலை.

2. ஆரா - நிறையாத. தண்டாப்பரத்தை - அமையாத பரத்தைமை. புலத்தகைப் பெண்டிரை - புலக்குந் தகைமையுடைய பெண்டிரை. தேற்றி - தெளிவிப் பாய். தோலாமோ - தோலா திருப்பேமோ; தோற்பேமன்றோ.

3. இகவாய் - பரத்தையர் குறிக்கொண்ட நிலையைக் கடவாயாய். நில்லாதி - நில்லாதேகொள். சென்றீ - செல்வாய். ஈ முன்னிலையசை, நின்றால் அறிசிதைப்பான் ஆதலால் தந்துசெல் என்றாள்.

4. முனைஇய - வெறுத்த. காரான் - எருமை. மடி - துயின்ற. நோன்தளை - வலியகட்டு. பரிந்து - அறுத்து: அந்தூம்புவள்ளை அழகிய உட்டுளையை

யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறளு மொருத்தியை யெம்மனைத் தந்து
வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்
மொண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ. (அகம். 46)

*காமக் கிழத்தி தன்மகத் தழீஇ ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்* - மனையறத்திற்கு உரியளாக வரைந்துகொண்ட காமக் கிழத்தி, தலைவி புதல்வன் மனைப்புறத்து விளையாடுகின்றவனைத் தழுவிக்கொண்டு தான் [1]ஏமுறுதற்குக் காரணமான விளையாட்டின் முடிவின்கண்ணும்:

அவள் எம்மைப் பாதுகாப்பீரோவென வினாயவழி அவனும் அதற்கு உடன்பட்டான்போலக் கூறுவன உளவாகலின் 'ஏமுறு விளையாட்டு" என்றார். 'இறுதி' என்றார் விளையாட்டு முடியுந் துணையுந் தான் மறையநின்று பின்னர்க் கூறுதலின். உதாரணம்:

[2]நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதி னல்லி யயலிதழ் புரையு
மாசி லங்கை மணிமரு ளவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே
கூரெயிற் றரிவை குறுகினள் யாவருங்
காணுந ரின்மையிற் செத்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை
வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து

---

யுடைய வள்ளைக்கொடி. ஆரும் - உண்ணும், யாரோ - என்ன உறவினை? ஐ - சாரியை இடைச்சொல். நிற்புலக்கேம் - நின்னை வெறுப்பேம். வாருற்று - நீண்டு. இறந்து - மழை வீழ்ச்சியைக் கடந்து. பிறளும்ஒருத்தியை - வேறும். ஒருத்தியை, பிறரும் என்றும் பாடம். வதுவையயர்தல் - மணம்புரிதல் தகைக்குநர் - தடுப்போர்.

1. ஏமுறல் - இன்பமுறல்; பாதுகாவலுமாம்.

2. நாய் - நீர்நாய். கலித்த - முளைத்த. அயலிதழ் - புறவிதழ். மணி - பவளமணி. நவிலா - பயிலாத. நகைபடு - நகையையுண்டாக்குஞ் (சொல்). தேர் - சிறுதேர். தமியோற்கண்டு - தனித்தவனாய்க் கண்டு. அரிவை என்றது காமக்கிழத்தியை. செத்தல் - கருதல்; ஒப்புமாம். பொலங்கலம் - பொன்னாபரணம். முலைக்

கொண்டன ணின்றோட் கண்டுநிலைச் செல்லேன்
மாசில் குறுமக ளெவன்பே துற்றனை
நீயுந் தாயை யிவற்கென யான்றற்
கரைய வந்து விரைவனென் கவைஇக்
களவுடன் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி னின்றோ ணிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவுளன் னோணின்
மகன்றா யாதல் புரைவதாங் கெனவே. (அகம். 16)

எனவரும்.

*சிறந்த செய்கை அவ்வழித்தோன்றி அறம்புரி உள்ளமொடு தன்வரவு அறியாமைப் புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்: சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி - காமக்கிழத்தியது ஏமுறும் விளையாட்டுப்போலாது தலைவிதன் புதல்வனைத் தழீஇ விளையாட்டையுடைய இல்லிடத்தே தலைவன் தோன்றி, அறம்புரி உள்ளமொடு தன்வரவு அறியாமைப் புறஞ்செய்து - அவ்விளையாட்டு மகிழ்ச்சியாகிய மனையறத்தினைக் காணவிரும் பிய நெஞ்சோடே தன்வரவினைத் தலைவி அறியாமல் அவள் பின்னே நிற்றலைச் செய்து, பெயர்த்தல் வேண்டு இடத்தானும் - தலைவியது [1]துனியைப் போக்குதல் வேண்டிய இடத்தும்:*

*'தன்வரவறியாமை' என்றதற்குத் தன்னைக் கண்டால் தலைவி யுழை நின்றார் தமக்குச் செய்யும் [2]ஆசாரங்களையும் அவர் செய்யாமற் கைகவித்துத் தன்வரவு அறியாமை நிற்பனென்று கொள்க. உதாரணம்:*

[3]மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையின் விளங்குபூ ணனைத்தரப்
பொலம்பிறை யுட்டாழ்ந்த புனைவினை யுருள்கல
னலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர

---

கொண்டனள் நின்றோன் எனக் கூட்டுக. நிலைச்செல்லேன் - நின்றநிலை யிற் பெயரேனாய். குறுமகள் - இளமகளே! எவன் பேதுற்றனை - என்ன மயக்கமுற்றாய். கரைய - குறைகூற. கவைஇ - தழுவி. உடம்படுதல் - இயைதல்; ஒப்புக்கொள்ளல். பேணல் - விரும்பல். வானத்து அணங்கு அருங் கடவுள் என்றது அருந்ததியை. புரையும் - தகும். எனப் பேணினெனல்லனோ என இயைக்க.

1. துனி - வெறுப்பு உணர்த்தவுணராவூடல்.
2. ஆசாரம் - ஒழுக்கம் என்றது மரியாதையை.
3. மை - குற்றம். மணி - பவளமணி. அவ்வாய் - அழகியவாய். தன்மெய் - தன் எழுத்து வடிவு. மழலையின் - மழலைச்சொல்லைக் கூறுதலாற் பிறந்த வாய் நீரால். பொலம்பிறை - பொன்னாற்செய்த பிறையென்னுமணி. உருள்கலன் - உருண்டசுட்டி. நகை - ஒளி. துயல்வர - அசைய. உரு - நிறம். இடை காட்டும் -

வுருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகி
லரிபொலி கிண்கிணி யார்ப்போவா தடிதட்பப்
பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக்
கால்தேர் கையி னியக்கி நடைபயிற்றா
வாலமர் செல்வ னணிசால் பெருவிறல்
போல வருமென் னுயிர்;

பெரும, விருந்தொடு கைதூவா வெம்மையு முள்ளாய்
பெருந்தெருவிற் கொண்டாடி ஞாயர் பயிற்றத்
திருந்துபு நீகற்ற சொற்கள்யாங் கேட்ப
மருந்தோவா நெஞ்சிற் கமிழ்தயின் றற்றாப்
பெருந்தகாய் கூறு சில:

எல்லிழாய்,
சேய்நின்று நாங்கொணர்ந்த பாணன் சிதைந்தாங்கே
வாயோடி யேனாதிப் பாடிய மென்றற்றா
நோய்நாந் தணிக்கு மருந்தெனப் பாராட்ட
வோவா தடுத்தடுத் தத்தாவென் பான்மாண
வேய்மென்றோள் வேய்த்திறஞ் சேர்த்தலு மற்றிவன்
வாயுள்ளிற் போகா னரோ;

உள்ளி யுழையே யொருங்கு படைவிடக்
கள்வர் படர்தந் ததுபோலத் தாமெம்மை
யெள்ளுமார் வந்தாரே யீங்கு;

ஏதப்பா டெள்ளிப் புரிசை வியலுள்ளோர்
கள்வரைக் காணாது கண்டேமென் பார்போலச்
சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவனின்
னாணை கடக்கிற்பார் யார்:

அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேல்
முதிர்பூண் முலைபொருத வேதிலாண் முச்சி

---

நடுவே தோற்றுவிக்கும். உடைகழல் - உடுத்தல் கழன்ற. கால்வல்தேர் - உருளையோடுதல்வல்ல தேர். ஆலமர்செல்வன் - சிவன் (அவனுடைய) அணிசால் பெருவிறல் - முருகன். விருந்தொடு கைதூவா - விருந்து வருதலாற் கையொழியாத. ஞாயர் - நின்தாய்மார். பயிற்ற - கற்பிக்க. மருந்துஓவா - இனிமைமாறாத. எல்இழாய் - ஒளியை யுடைத்தாகிய பூணினையுடையாய். நாம்கொணர்ந்த பாணன் - நாம பழக்கங்கொண்டு போந்த பாணன். (எவ் விடத்தாய் என்று யாம் வினாவ) சேய்நின்று - தூரநின்று. வாய்சிதைந்து - வாயிற்கூறும் மொழிசிதைந்து. ஓடி - பரத்தையர் கூற்றிலே மனந்தங்கி. ஏனாகிப் பாடியம் என்றற்றா - யாம் ஏனாதிப்பாடியிடத்தேமென்ற தன்மைத் தாக. அத்தத்தா - அத்தா அத்தா. வேய்த்திறம் - ஏற்றிக்கொள்ளுமிடம். வாயுள்ளில் - வாயினின்றும் போகான் என்றது தலைவனை. அத்தத்தா என்று பின்னுங் கூறுகின்றான் என்றபடி. உள்ளி - கள்வரை நினைத்து. உழையே படைவிட - அவரிடத்தே படைக்கலங்களை விடும்படி. படர்தந்ததுபோல - வந்ததுபோல. ஏதப்பாடு - கள்வரால் வருங் குற்றம். புரிசைவியலுளோர் -

யுதிர்துக ளுக்கநின் னாடை யொலிப்ப
வெதிர்வளி நின்றாய்நீ செல்,

இனியெல்லா யாம்,
தீதிலே மென்று தெறிப்பவுங் கைந்நீவி
யாதொன்று மெங்கண் மறுத்தர வில்லாயின்
மேதக்க வெந்தை பெயரனை யாங்கொள்வேந்
தாவா விருப்பொடு கன்றியாகத் துழிச்செல்லு
மாபோற் படர்தக நாம். (கலி. 81)

*தந்தையர் ஒப்பர் என்பதனால் அந்தமில் சிறப்பின் மகப் பழித்து நெருங்கலும் - அங்ஙனம் விளையாடுகின்ற காலத்து மக்கள் தந்தையரை ஒப்பரென்னும் வேதவிதிபற்றி முடிவில்லாத சிறப்பினையுடைய மகனைப் பழித்து வெகுளுதற்கண்ணும்:*

*மகனுக்கும் [1]இதுபடுமென்று கருதிக் கூறலின் தலைவனைப் பழித் தென்னாது 'மகப்பழித்து' என்றார்.*

*'மைபடு சென்னி' என்னும்* மருதக்கலி *(86) யுள்,*

[2]செம்மால்!
வனப்பெலா நுந்தையை யொப்பினு நுந்தை
நிலைப்பாலு ளொத்த குறியென்வாய்க் கேட்டொத்தி
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமமற் றொவ்வாதி
யொன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோன்
மென்றோ ணெகிழ விடல்

*என அவனைக்கொண்டு விளையாடியவழி அவன் தலைவன் மேல் வீழ்தலின்,*

தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா னறனில்லா
வன்பிலி பெற்ற மகன்

*எனத் தன்திறத்து அன்பிலனென நெருங்கிக் கூறியவாறு காண்க.*

---

மதிலையுடைய ஊரிற் காவலாளர். படிறு - வஞ்சனை. எருக்கி - வருத்தி. முச்சி - மயிர்முடி. ஒலிப்ப - விளக்க. எதிர்வளி - காற்றெதிர். எல்லா - ஏடி. எந்தை பெயரனென்றது புதல்வனை. அக்காலத்துத் தந்தைபெயரே மைந்தற்கிடுவது வழக்கு. அதுபற்றி எந்தை பெயரனென்றான்.

1. இது - இக்குணம். படும் - உண்டாம்; பொருந்தும்.

2. வனப்பு - அழகு. நுந்தைநிலைப்பாலுள் - நுந்தைநிற்கின்ற நிலைகளின் கூற்றில். ஒத்த - உனக்கொத்த. குறி - குறிக்கப்படுங் குணம். கன்றி - மாறுபாட்டிற்பட்ட களங்கொள்ளும்வென்றி - களத்திற் கொள்ளும்வென்றி. கடம் என்று பாடமோதி - திறை என்று பொருள்கொள்வது நின்று. நெகிழவிடல் ஒவ்வாதி - மெலிய விடலாகிய பரத்தைமையை ஒவ்வாதேகொள்.

[1]கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப் பகுதியின் நீங்கிய தகுதிக்கண்ணும்: கொடியோர் நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇ - கொடியோரென்றது பாணர் கூத்தர் விறலியர் அந்தணர் முதலியோரை, கொடியோராய்த் தலைவன் புகழைக் கூறுதற்கு விரும்பினோர் பரத்தையர்க்கு வாயிலாய்வந்து கூறிய சொல்லோடே தானும் அவரிடத்தே சேர்ந்து, பகுதியினீங்கிய கொடுமை - காவற்பாங்கிற் பக்கமும் ஆங்கோர் பக்கமுமாகிய பகுதி காத்தலினின்று நீங்கிய பரத்தையரைக் கூடிய கொடுமை, சுடுமென ஒடியாது தகுதிக்கண்ணும் - நெஞ்சைச் சுடுமென்று கூறி அவன் தவற்றைக் கூறுதலைத் தவிராமற் கூறுதற்குத் தக்க தகுதியிடத்தும்:

[2]இன், நீக்கப் பொருட்டு. பகுதி - கூறுபாடு, ஆகுபெயர் ; பகுதிகளைக் காத்தற்குப் பிரிவேனெனக்கூறிப் பிரிந்து பாணர் முதலியோர் புதிதிற்கூட்டிய பரத்தையரிடத்தே ஒழுகிய மெய் வேறுபாட்டோடு வந்தானைக்கண்டு அப்பகுதிகளைப் பரத்தையராகக் கூறுவாளாயிற்று. அது, 'இணைபடநிவந்த' என்னும் மருதக்கலி (72) யுள்,

[3]கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்
பண்ணினாற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றானோ
பேணானென் றுடன்றவ ருகிர்செய்த வடுவினான்
மேனாணின் றோள்சேர்ந்தார் நகைசேர்ந்த விதழினை;

நாடிநின் றூதாடித் துறைச்செல்லா ளூரவ
ராடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ
கூடியார் புனலாடப் புணையாய மார்பினி
லூடியா ரெறிதர வொளிவிட்ட வரக்கினை;

வெறிதுநின் புகழ்களை வேண்டாரி னெடுத்தேத்து
மறிவுடை யந்தண னவனைக்காட் டென்றானோ
களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேற்
குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை

என்பவற்றார் பாணர் முதலியோர் வாயிலாயவாறு காண்க.

---

1. பரணர் முதலியோரைக் கொடியரென்றது பரத்தையர்க்கு வாயிலாதல் பற்றி.
2. இன் என்பது பகுதியின் என்பதிலின்னை. பகுதியை அகுபெயரென்றார்; பகுதியான காவற்பாங்கையும் ஆங்கோர்பக்கத்தையும் உணர்த்தலின்.
3. கண்ணி - கருதி. கடிகொண்டார் - காவல்கொண்ட பரத்தையர். கனைதொறும் - செறியுந்தோறும். பாணன் இதழினை எனக்குக் காட்டென்றானோ என இயைக்க. நகை - எயிற்றுக்குறி. புணை - தெப்பம். அரக்கு - சாதிலிங்கம். அவளை - அவட்கு; உருபுமயக்கம். கயம் - மென்மை. கோடுளார்ந்த துகள் - முடியையவிழ்ந்து கைசெய்து முடித்தலால் வீழ்ந்துகிடந்த துகள்.

[1]ஏந்தெழின் மார்ப வெதிரல்ல நின்வாய்ச்சொற்
பாய்ந்தாய்ந்த தானைப் புரிந்தானா மைந்தினை
சாந்தழி வேரை சுவற்றாழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் றீங்குவந் தீத்தந்தாய்; கேளினி
ஏந்தி, எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்
குதிரை வழங்கிவரு வல்;

அறிந்தேன் குதிரை தான்
பால்பிரியா வைங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவன்
மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை
நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்
ஞாலியன் மென்காதிற் புல்லிகைச் சாமரை
மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
வுத்தி யொருகாழ்நூ லுத்தரியத் திண்பிடி
நேர்மணி நேர்முக்காழ் பல்பல கண்டிகைத்
தார்மணி பூண்ட தமனிய மேகலை
நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த
வார்பொலங் கிண்கிணி யார்ப்ப வியற்றிநீ
காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
யாய்சுதை மாடத் தணிநிலா முற்றத்து
ளாதிக் கொளீஇய வசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ;

சேகா, கதிர்விரி வைகலிற் கைவாரூஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கட்
குதிரையோ வீறியது;

கூருகிர் மாண்ட குளம்பி னதுவன்றே
கோரமே வாழிகுதி ரை,

---

1. எதிரல்ல - மாறல்ல. சொல் மாறல்ல என மாற்றுக. பாய்ந்து - பரந்து (- மடி விரிந்து). பரிந்து ஆய்ந்ததானை - கரையற்று முசிந்த புடைவை. பரிந்து என்பது மாற்றிப் பொருளுரைக்கப்பட்டதென்பதை உரைநோக்கியறிக. ஆனா - அமையாத. பரிந்து - விரும்பப்பட்டு என்று பொருளுரைத்து நேரேமுடிக் கலாம். வேரை - வேர்வையை யுடையை. சுவல் - தோட்கட்டு; பிடர் வந்தீத் தந்தாய் - வந்தாய். குதிரைவழங்கி - குதிரையேறி. பால் - ஐம்பாற்பகுதி. கூந்தலாகிய கொய்சுவலென விரிக்க. சுவல் - பிடரிமயிர். சிகழிகை செவ்வுளை - சிகழிகையாகிய சிவந்த தலையாட்டம். சிகழிகை - மயிர்முடி, உரையுள் துஞ்சு என்பது. குஞ்சி என்றும் பாடம். நீலமணிக் கடிகையாகிய யாப்பின் வல்லிகையெனக் கூட்டுக. யாத்தல் - கட்டுதல். கீழ்காலும் கீழே தூங்கும், புல்லிகையாகிய சாமரை என விரிக்க. புல்லிகை - காதிலிடும் ஓரணி. மத்திகை - சம்மட்டி. கண்ணுறை - கண்ணுக்குக் காண இட்டுவைத்தது. கண்ணுறை யாகக் கவின்பெற்ற மத்திகை என மாற்றுக. உத்தி - தெய்வவுத்தி. மேகலையாகிய பூண்டதார்மணி என மாற்றுக. ஒருகாழ் - ஒருவடம். பிடி - குசை. நூபுரம் - சிலம்பு. புட்டில் - கெச்சை. கிண்கிணி - சதங்கை. காமம் - விருப்பம்; காமமுமாம். ஆதி - நேரோடற்கதி. அசையினை - இளைத்தனை. வாதுவன் ஆகுவை என மாற்றுக. சேவகா! சேகா எனத் திரிந்துநின்றது;

வெதிருழக்கு நாழியாற் சேதிகைக் குத்திக்
குதிரை யுடலணி போலநின் மெய்க்கட்
குதிரையோ கவ்வி யது;

சீத்தை, பயமின்றி யீங்குக் கடித்தது நன்றே
வியமமே வாழிகுதி ரை;

மிகநன், றினியறிந்தே னின்றுநீ யூர்ந்த குதிரை
பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட
பருமக் குதிரையோ வன்று பெருமநின்
னேதில் பெரும்பாணன் றூதாட வாங்கேயோர்
வாதத்தான் வந்த வளிக்குதிரை யாதி
யுருவழிக்கு மக்குதிரை யூரனீ யூரிற் பரத்தை
பரியாக வாதுவனாய்மற் றச்சாத்
திரிகுதிரை யேறிய செல். (கலி. 96)

*இதனுட் 'பாணன் தூதாட வாதத்தான் வந்தகுதிரை' என்பதனால் அவன் கூட்டிய புதிய பரத்தையர் என்பதூஉம் அவன் பகுதியினின்று நீங்கியவாறுங் 'குதிரையோ வீறியது' என்பது முதலியவற்றாற் கொடுமை நெஞ்சைச் சுடுகின்றவாறும், [1]அதனை நீக்கிய பரத்தையரைக் குதிரையாகக் கூறித் தான் அதற்குத் தகநின்றவாறுங் காண்க.*

*[2]கடவுட்பாட்டு 'ஆங்கோர் பக்க' மும், யானைப்பாட்டுக் 'காவற் பாங்கின் பக்க' முமாம்*

*கொடுமை ஒழுக்கங் கோடல்வேண்டி அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக் காதல் எங்கையர் காணின் நன்றென மாதர் சான்ற வகையின் கண்ணும்: கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி - அங்ஙனம் பகுதியினீங்கிப் பரத்தையர் மாட்டு ஒழுகிக் கொடுமை செய்த ஒழுக்கத்தைத் தலைவி பொறுத்தலை வேண்டி, அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கி - தன் அடிமேல் வீழ்ந்து வணங்கிய தலைவனை [3]அதனின் மீது துனிமிக்குக் கழறி, காதல் எங்கையர் காணின் நன்றென - நின்மாட்டுக் காதலையுடைய எங்கையர்*

---

விகார மெனினுமாம். வீறியது - கீறியது. குதிரை கோரமே - குதிரை கொடியதே. வெதிர் - மூங்கில். உழக்குநாழி என்பன அவ்வளவு கருவிக் காயின. சேதிகை - ஒருவகையான ஓவியக்கோலம். வியம் - வியப்பு. வாதம் - மாறுபாடு. ஆதியுரு -பழையவடிவு. அச்சார் - அக்கூறு. திரி - திரிவாய். இதன்பொருளை இன்னும் உரைகொண்டறிக.

1. அதனை - அச்சுடுதலை; அக்கொடுமையை எனினுமாம். நீக்கிய - நீக்கும்படி.

2. இவை கலியிலுள்ள பாட்டுக்கள்.

3. அதனின் மீது - அவ்வடிமேல் வீழ்தலின் மீது.

*காணின் இவை நன்றெனக் கொள்வாரெனக் கூறி, மாதர் சான்ற வகையின் கண்ணும் - காதல் அமைந்து மாறிய வேறுபாட்டின் கண்ணும்:*

*பொறாதாரைக் 'கொள்ளார்' என்பவாகலிற் [1]கோடல் பொறுத் தலாயிற்று. 'காதலெங்கையர், மாதர் சான்ற' என்பனவற்றால் துனி கூறினார். எனவே, யாங்கண்டதனாற் பயனின்றென்றார். உதாரணம்.*

*'நில்லாங்கு நில்' என்னும் பூழ்ப்பாட்டி (கலி. 95) னுள்,*

[2]மெய்யைப் பொய்யென்று மயங்கிய கையொன்
றறிகல்லாய் போறிகா ணீ;
நல்லாய்,
பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி;

அருளுகம் யாம்யாரே மெல்லா தெருள
வளித்துநீ பண்ணிய பூழெல்லா மின்னும்
விளித்துநின் பாணனோ டாடி யளித்தி
விடலைநீ நீத்தலி னோய்பெரி தேய்க்கு
நடலைப்பட் டெல்லாநின் பூழ்.

*இதனுள் 'அருளினி' என அடிமேல் வீழ்ந்தவாறும் 'அருளுகம் யாம்யார்' எனக் காதல் அமைந்தவாறும் 'விளித் தளித்தி' என இப் பணிவை நின் பெண்டிர் கொள்வரெனவுங் கூறியவாறுங் காண்க.*

[3]நினக்கே யன்றஃ தெமக்குமா ரினிதே
நின்மார்பு நயந்த நன்னுத லரிவை
வேண்டிய குறிப்பினை யாகி
யீண்டுநீ யருளா தாண்டுறை தல்லே. (ஐங்குறு. 46)

*இதுவும் அது.*

---

1. கோடல் என்றது 'கொடுமை ஒழுக்கங் கோடல்' என்பதிற் கோடலை.

2. மெய்யைப் பொய்யென்று மயங்கிய நீ என இயைக்க. கை - உலக வொழுக்கம். போறி - போலே இருந்தாய். ஏற்றி - ஏறத்தெளி வித்து. தலை யிட்டு - என்தலையிலேயிட்டு (சுமத்தி). கையொடு கண்டாய் - யான் செய்தன வற்றைக் கையொடு பிடித்துக் கொணடாய். யாம்யார் - (அங்ஙனம் அருளு தற்கு) யாம் யாராகுந்தன்மை யுடையேம். எல்லா - ஏடா. அளித்து - அருள் செய்து. விடலை - விடலாய். நடலை - நடிப்பு. பட்டு - அகப்பட்டு. பூழ் - காடை. பாணனோடு - பாணனால். விளித்து - அழைத்து. ஏய்க்கும் - பொருந்தும்.

3. அரிவை வேண்டிய குறிப்பினையாகி ஆண்டு உறைதல் நினக்கு மாத்திர மினிதன்று அஃது எமக்குமினிது என மாற்றி இயைக்க. ஈண்டு - இவ்விடம்.

*தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை உள் ளிய வழியும் - பரத்தையர் கருதி அணிந்த நன்றாகிய அணிகளை யுடைய புதல்வனை மாயப் [1]பரத்தைமையைக் குறித்தவிடத்தும்:*

*அவருள்; துனியாலே வருந்திய பரத்தையர் தம் வருத்தத் தினை உணர்த்தியும், தலைநின்றொழுகும் பரத்தையர் தஞ்சிறப்பு உணர்த்தியும் அணிவரென்றற்குக் 'கண்ணிய' என்றார். பரத்தையர் சேரி சென்ற அணியணிந்ததற்கு வெகுண்டு கூறலிற் பொய்யாகிய பரத்தையென்றார். எனவே தலைவன் பரத்தைமை கருதினாளா யிற்று. உதாரணம்:*

[2]உறுவளி தூக்கு முயர்சினை மாவி
னறுவடி யாரிற் றவைபோ லழியக்
கரந்தியா னரக்கவுங் கைந்நில்லா வீங்கிச்
சுரந்தவென் மென்முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த பொழுதினா னெல்லா
கடவுட் கடிநகர் தோறு மிவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை
யீர மிலாத விவன்றந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு;

நீருள், அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ
விவன்மன்ற யானோவ வுள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை யென்றிவற்
கொத்தவை யாராய்ந் தணிந்தார் பிறன்பெண்டி
ரீத்தவை கொள்வானா மிஃதொத்தன் சீத்தை
செறுத்தக்கான் மன்ற பெரிது;

சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாங் காண்கு;

அவற்றுள், நாறாவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
சுறாவே றெழுதிய மோதிரந் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடியெழுதி யென்றுஞ்
செறியாப் பரத்தை யிவன்றந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வ லென்பது தன்னை
யறீஇய செய்த வினை;

---

1. பரத்தைமை என்றது தலைவன் பரத்தைமையை.

2. இதன் பொருளை உரைநோக்கி யறிந்துகொள்க. விரியுமென்று விடுத்துள்ளாம்.

அன்னையோ விஃதொன்று
முந்தைய கண்டு மெழுகல்லா தென்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்றா விஃதொன்று
தந்தை யிறைத்தொடீஇ மற்றிவன் றன்கைக்கட்
டந்தா ரியாரெல்லாஅ விது;

இஃதொன்று,
என்னொத்துக் காண்க பிறரு மிவற்கென்னுந்
தன்னலம் பாடுவி தந்தாளா நின்னை
யிதுதொடு கென்றவர் யார்;

அஞ்சாதி, நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழி லுண்க ணவளுந் தவறிலள்
வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா
டான்யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன். (கலி. 84)

*தன்வயிற் [1]சிறைப்பினும் - தலைவனில் தான் புதல்வற்குச் சிறந் தாளர்கி அத்தலைவன்மாட்டும் அவன் காதலித்த பரத்தையர் மாட்டுஞ் செல்லாமல் புதல்வனைத் தன்பாற் சிறை செய்தற் கண்ணும்: உதாரணம்:*

*[2]புள்ளிமி ழகல்வயல். என்னும் மருதக்கலி (79) யுள்,*

அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி
மணிபுரை செய்வாய்நின் மார்பகல நனைப்பதாற்
றோய்ந்தாரை யறிகுவேன் யானெனக் கமழுநின்
சாந்தினாற் குறிகொண்டாள் சாய்குவ ளல்லளோ;

புல்லலெம் புதல்வனைப் புகலக னின்மார்பிற்
பல்காழ்முத் தணியாரம் பற்றினன் பரிவானான்
மாணிழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பிற்
பூணினாற் குறிகொண்டாள் புலக்குவ ளல்லளோ;

கண்டேயெம் புதல்வனைக் கொள்ளாதி நின்சென்னி
வண்டிமிர் வகையிணர் வாங்கினன் பரிவானா
னண்ணியார்க் காட்டுவ திதுவெனக் கமழுநின்
கண்ணியாற் குறிகொண்டாள் காய்குவ ளல்லளோ;

---

1. சிறைத்தல் - தடுத்துக்கொள்ளல்.

2. அணியொடு (பரத்தையரிடத்து அணிந்த) அணியோடு. கொள்ளாதி - எடாதேகொள் (தூக்காதே). செவ்வாய் - சிவந்த வாய்நீர். நனைப்பது - நனைக்கப்படுவதொன்றாயிராநின்றது; இதற்கு எழுவாய் அகலம். ஆல் - அசை. (அங்ஙனம் நனைப்பதாற்) சாய்குவாளல்லளோ என ஏது வருவித்து முடிக்க. சாய்தல் - வருந்தல். குறி - குறித்தல்; கருதல். பரிவான் - அறுப்பான். புலத்தல் - ஊடல். நண்ணியார் - கூடினார். காய்தல் - கோபித்தல்.

எனவாங்கு,
பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
யாங்கே யவர்வயிற் சென்றீ யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து.

*இது, தலைவனிடத்தினின்றும் புதல்வனைச் சிறைத்தது.*

*'ஞாலாம் வறந்தீர' என்னும் மருதக்கலி (82) யுள்,*

[1]அவட்கினி தாகி விடுத்தனன் போகித்
தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றீதோர்
புலத்தகைப் புத்தேளில் புக்கா னலைக்கொரு
கோறா நினக்கவள் யாராகு மெல்லா
வருந்தியா நோய்கூர நுந்தையை யென்றும்
பருந்தெறிந் தற்றாகக் கொள்ளுங்கொண் டாங்கே
தொடியு முகிரும் படையாக நுந்தை
கடியுடை மார்பிற் சிறுகண்ணு முட்காள்
வடுவுங் குறித்தாங்கே செய்யும் விடுவினி
யன்ன பிறவும் பெருமா னவள்வயிற்
றுன்னுத லோம்பித் திறவதின் முன்னிநீ
யையமில் லாதவ ரில்லொழிய வெம்போலக்
கையா றுடையவ ரில்லல்லாற் செல்ல
லமைந்த தினிநின் றொழில்.

*இது, காதற்பரத்தையர்பாற் புதல்வன் செல்லாமற் சிறைத்தது.*

*அவன் வயிற் பிரிப்பினும் - தன்னொடு மைந்தனிடை உறவு நீக்கி அவனைத் தலைவனொடு சார்த்துதற்கண்ணும்:*

*என்றது, எமக்கிவன் யாரென்று அயன்மை கூறுதலாம்.*

---

1. அவட்கு - அங்ஙனம் கூறினவளுக்கு. இனிதாகி - இனிதாயிருக்கும் படி. விடுத்த னன்போகி - சில மறுமொழிகளைக் கூறிப்போய். தலைக்கொண்டு - தலை மைப் பாடுகொண்டு (பெருமிதங்கொண்டு). ஈதுபுலத்த கைப்புத்தேள்இல் - இந்த புலக்குந் தகைமையையுடைய புதியவள் இல். புக்கான் என்றவரையும் சேடி கூற்று. அப்பால் தலைவிகூற்று. அலைக்கு ஒரு கோல்தா - இவனை அடித்தற்கு ஒரு கோல்தா. எல்லா - ஏடா. எறிதல் - எடுத்தல். சிறுகண்ணும் - சிறிய இடங்களிலும். செய்யும் - செய்வாள். விடு - அழுகையைவிடு. பெரு மானவள் - பெருமானுடைய அவள். என்றது அவன் தந்தையுடைய காதற் பரத்தை என்றபடி. திறவது - (நீ போதற்குத்) தக்க இல் ஐயமில்லாதவர் இல் - நீங்கானென்று துணிந்தவரில்லிலும். ஒழிய - நின்செலவொழிந்துகிடக்க. செல்லல் - செல்லற்க. அமைந்தது - முடிந்தது.

*உதாரணம்:*

*'மைபடு சென்னி' என்னும் மருதக்கலி (86) யுள்,*

[1]மறைநின்று தாமன்ற வந்தீத் தனர்;
ஆயிழாய், தாவாத வெற்குத் தவறுண்டோ காவாதீங்
கீத்தை யிவனையாங் கோடற்குச் சீத்தையாங்
கன்றி யதனைக் கடியவுங் கைந்நீவிக்
குன்ற விறுவரை கோண்மா விவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா னறனில்லா
வன்பிலி பெற்ற மகன்.

*என்புழி 'அறனில்லா வன்பிலி பெற்றமகன்' எனவும், 'நின், மகன்றா யாதல் புரைவதாங் கெனவே' (அகம். 16) என்புழி 'நின்மகன்' எனவும் [2]பிரித்தவாறு காண்க.*

*இன்னாத் தொல்சூள் எடுத்தற்கண்ணும் - இன்னாங்குப் பயக் குஞ் சூளுறவினைத் தலைவன் [3]சூளுறுவலெனக் கூறுமிடத்தும்:*

*தலைவன் 'வந்தகுற்றம் வழிகெட' ஒழுகிக், களவிற் சூளுற வான்வந்த ஏதம்நீக்கி, இக்காலத்துக் கடவுளரையும் புதல்வனை யுஞ் சூளுறுதலின் 'இன்னாதசூள்' என்றார். அது களவுபோலச் சூளுறுதலின் 'தொல்சூள்' என்றார். உதாரணம்:*

*'ஒரூஉக் கொடியிய னல்லார்'. என்னும் மருதக்கலி (88) யுள்,*

[4]வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டீயாய் தெளிக்கு;

இனித் தேற்றேம்யாம்;
தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு

---

1. மறைநின்று - மறையநின்று. வந்தீத்தனர் - வந்தனர். தாவாத - வருத்தம் இல்லாத. தவறு - தப்பு. யாம் இவனைக் கோடற்கு காவாது ஈங்கு ஈத்தை என இயைக்க. ஈத்தை - தருவாய். சீத்தை - கைவிடப்படுமவன். கன்றி - மனங்கன்றி. அதனை - அவள் மார்பிற் பாய்தலை. கடிதல் - விலக்கல். கோண்மா - சிங்கம்.

2. பிரித்தல் - தன்னினின்றும் பிரித்துத் தலைவன்பாற் சார்த்தி அவன் புதல்வ னாகக் கூறல்.

3. சூளுறல் - சத்தியஞ்செய்தல்.

4. வேற்றுமை - மெய்வேறுபாடு. தேற்ற - தெளிவிக்க. தெளிக்கு - தெளிவிப் பேன். தேற்றேம் - எம் நெஞ்சைத் தெளிவியேம். தார்மயங்கிவந்த - (பரத் தையரது) தாரை நின் தாராக மயங்கி அணிந்துவந்த. தவறு - தப்பு. போர் - ஊடற்போர். சூள் - சத்தியம். அணங்கு - வருத்தம். விளிதல் - கெடுதல்.

எனத் தலைவி எம்மேலே இப் பொய்ச்சூளால் வருங்கேடு வருமென மறுத்தவாறு காண்க.

காமக்கிழத்தியர் நலம்பாராட்டிய [1]தீமையின் முடிக்கும் பொருளின்கண்ணும் - நலம்பாராட்டிய காமக்கிழத்தியர் தலைவி தன்னிற் சிறந்தாராகத் தன்னான் நலம்பாராட்டப்பட்ட இற் பரத்தையர்மேல் தீமையுறுவரென முடித்துக்கூறும் பொருளின் கண்ணும்: உதாரணம்:

[2]மடவ ளம்மநீ யினிக்கொண் டோளே
தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப்
பெருநலந் தருக்கு மென்ப விரிமலர்த்
தாதுண் வண்டினும் பலர்நீ
யோதி யொண்ணுதல் பசப்பித் தோரே. (ஐங்குறு. 67)

இதனுள், இப்பொழுது கிடையாதது கிடைத்ததாக வரைந்து கொண்ட பரத்தை தன்னொடு இளமைச் செவ்வி ஒவ்வா என்னை யுந் தன்னோடொப்பித்துத் தன் பெரிய நலத்தாலே மாறுபடுமென்ப வென அவள் நலத்தைப் பாராட்டியவாறும் நீ பசப்பித்தோர் வண்டு தாது உண்ட மலரினும் பலரெனத் தீமையின் முடித்த வாறுங் காண்க.

அணிற்பல் லன்ன (குறுந். 49)

என்னும் பாட்டுக் கற்பாகலின் இதன்பாற்படும்.

கொடுமையொழுக்கம் தோழிக்கு உரியவை வடுவறுசிறப்பிற் கற்பில் திரியாமைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்: கொடுமை ஒழுக்கம் தோழிக்கு உரியவை - பரத்தையிற் பிரிவும் ஏனைப்பிரிவுகளும் ஆகித் தலைவன்கண் நிகழும் கொடுமை யொழுக்கத்தில் தோழி கூறுதற்கு உரியளென மேற்கூறுகின்றவற்றைக் கேட்டவழி, வடுவறுசிறப்பிற் கற்பில் திரியாமை - எஞ்ஞான்றும் குற்றமின்றி வருகின்ற பிறப்பு முதலிய சிறப்பிடத்துங் கற்பிடத்துந் திரிவுபடாத படி, காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் நிலையினும் - தோழி கூற்றினை வெகுளலும் மகிழ்தலும் அவளைப் பிரித்தலும் பின்னும் அவள் கூற்றினைக் கேட்டற்கு விரும்புதலுமாகிய நிலை யின் கண்ணும், ஆவயின்வரூஉம் நிலையினும் - அத்தோழியிடத்துத்

1. தீமையின் முடிக்கும் பொருளின்கண்ணும் என்பது இங்கே மீளவும் வரவேண்டும்.

2. இனி ... இப்பொழுது. கொண்டோள் மிகமடவள் என்க. யாதனாலெனின் பசப்பித்தோர் பலரென்பதையறியாளாதலின் என்க.

*தலைவனைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலுமாய் வரும் நிலையின்கண்ணும், பல்வேறு நிலையினும் - இக் கூறியவா றன்றிப் பிறவாற்றாய்ப் பல வேறுபட்டுவரும் நிலையின்கண்ணும்:*

*அவள்வயி னென்னாது [1]'ஆவயின்' என்றார், தோழியும் பொருளென்பது பற்றி.*

[2]இதுமற் றெவனோ தோழி துனியிடை
யின்ன ரென்னு மின்னாக் கிளவி
யிருமருப் பெருமை யீன்றணிக் காரா
னுழவன் யாத்த குழவியி னகலாது
பாற்பெய் பைம்பயி ராரு மூரன்
றிருமனைப் பல்கடம் பூண்ட
பெருமுது பெண்டிரே மாகிய நமக்கே. (குறுந். 181)

*இது, தோழி இன்னாக்கிளவி கூறியதனை இதுபொழுது கூறிப் பயந்ததென்னெனமக் காய்ந்து கூறினாள்.*

[3]பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்
டுடும்படைந் தன்ன நெடும்பொரி விளவி
னாட்டொழி பந்திற் கோட்டுமூக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்
வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடைச்
சேறு நாமெனச் சொல்லச் சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்
ககல்வ ராடவ ரதுவதன் பண்ணே. (நற்றிணை. 24)

*இது, செய்தனையெனத் தலைவி உவந்து கூறியது.*

---

1. ஆவயின் - அவ்விடம் தோழியைப் பொருளாக வைத்து ஆவயின் என்று சுட்டினார் என்பார், பொருள் என்பதுபற்றி என்றார்.

2. இருமருப்பு - கரியகொம்பு; எருமையாகிய காரான் என்க. எருமையையும் ஆ என்றல் மரபு. ஈன்றணிக்காரன் என்றமையால் பெண் எருமை என்பது பெறப்படும். யாத்த - கட்டிய. பால் - பக்கம். பெய் - பெய்த - விதைத்து முளைத்த. பாஅற்பைம்பயிர் எனவும் பாடம். மனை - இல்; ஈண்டு அறத்தின் மேலாயது. கடம் - கடமை. துனியிடை - புலவிக்காலத்து. இன்னாக்கிளவி யாகிய இதனால். எவன் - யாதுபயன். இன்னர் - இத்தகையர்.

3. பார்பக - நிலம்பிளக்க. வீழ்தல் - கீழ்ச்சேறல். உடும்படைந்தன்ன - உடும்பு செறிந்தாற்போன்ற. பொரி - பொரிந்த செதிள். ஆட்டு - விளையாட்டு கோடு - கிளை. கம்பலத்துஅன்ன - கம்பலத்தை விரித்தாற்போன்ற. பந்தின் தாஅம் - பந்துபோலப் பரவிக்கிடக்கும். வெள்ளில் - விளாம்பழம். வல்சி - உணவு. ஆரிடை - அரியவழி. புரிந்தனை - விரும்பிக்கூறினை. நன்று - நன்மை.

[1]வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறேனவர் பொய்வழங் கலரே. (குறுந். 21)

*இது, கானங் காரெனக் கூறவும் [2]வாராரென்றவழி, அது கூறினும் யானோ தேறேனெனப் பிரிநிலை ஓகாரத்தாற் பிரிந்தது.*

[3]யாங்கறிந் தனர்கொ றோழி பாம்பி
னுரிநிமிர்ந் தன்ன வுருப்பவி ரமயத்
திரைவேட் டெழுந்த சேவ லுள்ளிப்
பொறிமயி ரெருத்திற் குறுநடைப் பேடை
பொரிகாற் கள்ளி விரிகா யங்கவட்டுத்
தயங்க விருந்து புலம்பக் கூஉ
மருஞ்சுர வைப்பிற் கானம்
பிரிந்தசே ணுறைதல் வல்லு வோரே. (குறுந். 154)

*இது, வல்லுவோர் என்னும் பெயர்கூறித் தோழி கொடுமை கூறியவழி, அவளையே பிரிதல்வன்மை யாங்கறிந்தனரெனத் தலைவி வினவுதலின் அது பின்னுங் கேட்டற்கு அவாவியதாம்.*

*இனித் தோழியிடத்துத் தலைவனைக் காய்தல் முதலியன வருமாறு:*

[4]நன்னலந் தொலைய நலமிகச் சாஅ
யின்னுயிர் கழியினு முரைய லவர்நமக்
கன்னையு மத்தனு மல்லரோ தோழி
புலவிய தெவனோ வன்பிலங் கடையே (குறுந். 93)

*இது, காய்தல்.*

---

1. கொடியிணர் - நீண்ட பூங்கொத்து. இடையிடுபு தோன்றும் கொன்றை என்க. கதுப்பு - கூந்தல். கார் - கார்காலம். கொன்றை மலர்வது கார்காலம்.

2. வாரார் என்றது தோழி.

3. பாம்பின்உரி - பாம்பின் (கழற்றிய) தோல். நிமிர்ந்தன்ன உருப்பு என்க. உருப்பு - கானல். உருப்பவிரமையம் - நண்பகற்காலம். உள்ளிப்பேடை கூஉம் என இயைக்க. பொரிகால் - வெப்பத்தாற் பொரிந்த அடி. கவடு - கிளை. புலம்பக்கூஉம் - தனிமைதோன்றக் கூவும். சுரம் - வழி. பிரிந்த - கடந்து வல்லுவோர் அவ்வன்மையை யாங்கறிந்தனர் என முடிக்க.

4. நன்னலம் - நல்ல பெண்மைநலம். சாஅய் - மெலிந்து. உரையல் - (அவர்பாற் பரிவுகூர்ந்த சொற்களைச்) சொல்லாதே. எவன்? - எதன்பொருட்டு. அன்பில்லாதவர்பால் யான் புலக்கவில்லை என்பது கருத்து.

[1]வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய
வோதமொடு பெயருந் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே. (ஐங்குறு. 155)

*இது, பல்லாற்றானும் வாயில் நேராத தலைவியை மகப்பேற்றிற்கு உரிய காலங்கழிய ஒழுகாநின்றாயென நெருங்கிய தோழிக்கு, யான் களவின்கண் மகப்பெற்றேனெனக் காய்ந்து கூறியது.*

[2]கொடிப்பூ வேழந் தீண்டி யயல
வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கு
மணித்துறை யூரன் மார்பே
பனித்துயில் செய்யு மின்சா யற்றே. (ஐங்குறு. 14)

*இஃது, உவத்தல்.*

[3]புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
விசும்பாடு குருகிற் றோன்று மூரன்
புதுவோர் மேவல னாகலின்
வறிதா கின்றென் மடங்கெழு நெஞ்சே. (ஐங்குறு. 17)

*இது, பிரித்தல்.*

[4]நாமவர் திருந்தெயி றுண்ணவு மவர்நம
தேந்துமுலை யாகத்துச் சார்ந்துகண் படுப்பவுங்
கண்சுடு பரத்தையின் வந்தோற் கண்டு
மூடுதல் பெருந்திரு வுறுகெனப்
பீடுபெற லருமையின் முயங்கி யேனே.

*இது, பெட்டது.*

*நீரார் செருவின் என்னும்* மருதக்கலி *(75) யும் அது.*

*இனிப் 'பல்வேறுநிலை' யாவன:- தோழி பிரிவுணர்த்தியவழிச் செலவழுங்கக் கூறுவனவற்றின் வேறுபாடுகளும், பிரிந்துழி வழியருமை பிறர்கூறக் கேட்டுக் கூறுவனவும் தலைவனது செலவுக் குறிப்பு அறிந்து தானே கூறுவனவும், தூதுவிடக் கருதிக் கூறுவன*

---

1. செத்தென - இறந்ததாக. பதைப்ப - அசைய; ஏதுப் பொருட்டு. கழிய - மிக. கழியநெய்தல் என மாற்றியும் பொருள் கொள்ளலாம். நெய்தல் ஓதமொடு பெயரும்துறை என்க. பைஞ்சாய்ப்பாவை - தண்டான்கோரையிதழிற் செய்த பாவை.

2. கொடிப்பூ - நீண்டபூ, தீண்ட - தீண்டலால். வடு - பிஞ்சு. மா - மாமரம். பனித்துயில் - இனியதுயில். சாயல் - மென்மை.

3. புதல் - செடி. நுடங்கும் - அசையும். விசும்பாடுகுருகு - விசும்பில்நின்றசையும் குருகு. புதுவோர்மேவலன் - புதிதான பரத்தையரொடு மேவுதலுளனாகலின்.

4. கண்படுதல் - துயிலல். கண்சுடுபரத்தையின் - கோபிக்கின்ற பரத்தையினின்றும்.

*வும், நெஞ்சினையும் பாணனையும் தூதுவிட்டுக் கூறுவனவும், வழியிடத்துப் புட்களைநொந்து கூறுவனவும், பிரிவிடை ஆற்றா ளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலெனக் கூறுவனவும், அவன் வரவு தோழி கூறியவழி விரும்பிக் கூறுவனவும், கூறிய பருவத்தின் வாராது பின்னர் வந்தவனொடு கூடியிருந்து முன்னர்த் தன்னை வருத்திய குழலை மாலையிற் கேட்டுத் தோழிக்குக் கூறுதலும், தலைவன் தவறிலனெனக் கூறுவனவும், புதல்வனை நீங்கா தொழு கிய தலைவன் நீங்கியவழிக் கூறுவனவும், காமஞ்சாலா விளமை யோளைக் களவின்கண் மணந்தமை அறிந்தேனெனக் கூறுவன வும், இவற்றின் வேறுபட வருவன பிறவுமாம்.*

[1]அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயி
னுரவோ ருரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே. (குறுந். 20)

*இது, செலவழுங்கக் கூறியது.*

[2]வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்றுவிளை யுழிஞ்சில் வற்ற லார்க்கு
மலையுடை யருஞ்சுர மென்பநம்
முலையிடை முனிநர் சென்ற வாறே. (குறுந். 39)

[3]எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்குங்
கவலைத் தென்பவவர் தேர்சென்ற வாறே
யதுமற் றவலங் கொள்ளாது
நொதுமற் கலுழுமிவ் வழுங்க லூரே. (குறுந். 12)

*இவை, வழியருமை கேட்டவழிக் கூறியன.*

---

1. துணை - துணைவி. உரவோர். அறிவுடையோர். மடவமாக - அறிவிலேமாக.

2. கடுவளி - கடுங்காற்று. பொங்கர் - மரக்கிளை. போந்தென - வீசியதாக. போந் தென நெற்றுவிளை வற்றல் ஆர்க்கும் அருஞ்சுரம் என்க. நெற்றுவிளை வற்றல் - நெற்றின் முற்றியவற்றல். ஆர்க்கும் - ஒலிக்கும். உழிஞ்சில் - வாகை.

3. எறும்பியளை - எறும்புப்புற்று. சுனைகளையுடைய பாறை என்க. உலைக் கலன்னபாறை - கொல்லுனுலையிற் பட்டடைக்கல்லை யொத்த வெப்ப முடைய பாறை. மாய்க்கும் - தீட்டும். கவலை - கவர்த்தவழி. அது அவலம் கொள்ளாது - அதற்குத் துன்பங் கொள்ளாது. நொதுமல் - அயன்மை.

[1]நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்
னொண்ணுத னீவுவர் காதலர் மற்றவ
ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும். (கலி. 4)

*இது, செலவுக் குறிப்பறிந்து தோழிக்குக் கூறியது கொண்டு கூறிற்று.*

[2]பலர்புகழ் சிறப்பினுங் குரிசி லுள்ளிச்
செலவுநீ நயந்தனை யாயின் மன்ற
வின்னா வரும்பட ரெம்வயிற் செய்த
பொய்வ லாளர் போலக்
கைவல் பாணவெம் மறவா தீமே. (ஐங்குறு. 473)

*இது, தூதுவிடக் கருதிக் கூறியது.*

[3]சூழ்கம் வம்மோ தோழிபாழ் பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்
டருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச்
சென்ற நெஞ்ச மீட்டிய பொருளே. (ஐங்குறு. 317)

*இது நெஞ்சினைத் தூதுவிட்டுக் கூறியது*

[4]மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்
செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு
கதழ்பரி நெடுந்தே ரதர்படக் கடை இச்
சென்றவர்த் தருகுவ லென்னு
நன்றா லம்ம பாணன தறிவே. (ஐங்குறு. 474)

*இது, பாணனைத் தூதுவிட்டுக் கூறியது.*

[5]புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன்
றீதி னெஞ்சத்துக் கிளவி நம்வயின்

---

1. ஆகம் - மார்பு. தொடுத்தென - தொடுத்தது என (வைத்துக்) கட்டினது என்று கூறும்படி. அமையார் - வேட்கை தணியாராய்.

2. நுங்குரிசில் -நுந் தலைவன். உள்ளி - நினைத்து. நயந்தனையாயின் மறவாதீமே என இயைக்க. இன்னா - துன்பம். படர் - நோய்.

3. தோழி - விளி. ஈட்டிய பொருளினைச் சூழ்கம் என இயைக்க. நீடிய பொருள் எனவும் பாடம். நீடியபொருள் - நீட்டியத்த காரியம்.

4. கறுத்தோர் - தன்னொடு வெகுண்ட பகைவர். அரண் - மதில். கதழ் - விரைவு. அதர் - வழி. கடைஇ - செலுத்தி. என்னும் - என்பான். விளங்கத் தருகுவ லென்னும் என இயைக்க.

5. புல்வீழ் - புல்லிய விழுது. கல்இவர் வெள்வேர் - மலைக்கற்களிற் படர்ந்த வெள்ளியவேர். வேர் அருவியிற்றோன்றும் நாடன் என்க. கிளவி நயந்தன்று - சொல்நயக்கத்தக்கதாக வந்தது; என்றது தூதினால் தலைவர் கிளவி

நயந்தன்று வாழி தோழி நாமு
நெய்பெய் தீயி னெதிர்கொண்டு
தாமணந் தனையமென விடுகந் தூதே. (குறுந். 106)

*இது, தூதுகண்டு கூறியது.*

[1]ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றி லுணங்கன் மாந்தி மன்றத்
தெருவி னுண்டாது குடைவன வாடி
யில்லிறைப் பள்ளிதம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பு
மின்றுகொ றோழியவர் சென்ற நாட்டே. (குறுந். 46)

*இது, சென்ற நாட்டு இவை இன்றுகொலென்றது.*

[2]வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்முள் ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா தெறிவரும் வாடையொ
டென்னா யினள்கொ லென்னா தோரே. (குறுந். 110)

*இது, பருவங்கண் டழிந்து கூறியது.*

[3]உதுக்கா ணதுவே யிதுவென் மொழிகோ
நேர்சினை யிருந்த விருந்தோட்டுப் புள்ளினந்
தாம்புணர்ந் தமையிற் பிரிந்தோ ருள்ளா
தீங்குர லகவக் கேட்டு நீங்கிய

---

நயக்கத்தக்கதாக வந்தது என்றபடி. வந்தன்று எனவும் பாடம். அதற்கு கிளவியைக் கூறும் தூது வந்தது எனப் பொருள் கொள்க. தீயின் - தீயின் கிளர்ச்சி போன்ற கிளர்ச்சியோடு (குதூகலத்தோடு). மணந்தனையம் - மணந்த காலத்தைப் போன்றுள்ளேம் (அன்புடையோம்)

1. சாம்பல் - வாடிய பழம்பூ, உணங்கல் - உலருந் தானியம். இல்லிறைப்பள்ளி - வீட்டிலிறப்பாகிய பள்ளி. பள்ளி - தங்குமிடம். புலம்பு - தனிமை.

2. யாராகியர் - எத்தகைய உறவினராவர். உளரி - மலரச் செய்து. புதல - புதரிற் படர்ந்துள்ள. பீலி - மயிற்பீலி. ஆட்டி - அசைத்து. கருவிளைப்பூ மயிற் பீலிக்கண் போன்றது. என்னாதோர் - என்று கருதாதோர்.

3. இது என் மொழிகோ - இதனை என்னென்று சொல்லுவேன். தோடு - திரள் (கூட்டம்). பிரிந்தோர் உள்ளா - பிரிந்தோருடைய துன்பத்தை நினையா தனவாய். அகவ - கூவ. போதிற் புனையல் என இயைக்க. என்குவம்? அது

வேதி லாள ரிவண் வரிற் போதிற்
பொம்ம லோதியும் புனைய
லெம்முந் தொடாஅ லென்குவ மன்னே. (குறுந். 191)

*இது, [1]காய்ந்து கூறியது.*

[2]முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுளப்
பொழுதோ தான்வந் தன்றே மெழுகான்
றூதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி
மரம்பயி லிறும்பி னார்ப்பச் சுரனிழிபு
மாலை நனிவிருந் தயர்மார்
தேர்வரு மென்முன் முரைவா ராதே. (குறுந். 155)

*இது, பொழுதோ தான் வந்தன்றெனப் பொழுதுகண்டு மகிழ்ந்து கூறினாள்.*

[3]அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்படச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
பல்லித ழுண்க ணழப்பிரிந் தோரே. (ஐங்குறு. 334)

*இது, வன்புறை எதிரழிந்து கூறியது.*

[4]அம்ம வாழி தோழி யாவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோ
டியாஅந் துணைபுணர்ந் துறைதும்
யாங்குப் பிரிந்துறைதி யென்னு மாறே. (ஐங்குறு. 333)

*இது, புள்ளை நொந்து கூறியது.*

---

(அதனை) உதுக்காண் (- உவ்விடத்துப் காண்பாயாக) என மாற்றிக் கூட்டிப் பொருள்கொள்க.

1. காய்தல் - வெகுளல்.

2. முதைப்புனங்கொன்ற - பழங் கொல்லையை உழுத. விதைக்குறு வட்டி - விதையை எடுத்துச்சென்ற சிறுபெட்டி. மெழுகு ஆன்று - அரக்காற்செய்த கருவில் அமைத்து. இறும்பு - குறுங்காடு. சுரன் - அருவழி.

3. நீடிய - மிக்க. காய்தல் - சுடுதல். கடம் - சுரம். பிரிந்தோராய்ச் சென்றோர் வலியர் என இயைக்க.

4. அவணநாடு - தலைவர் சென்றுறையும் அவ்விடத்துள்ள நாடு. தோடு - திரள். (தலைவரை நோக்கி) யாம் எனது துணையைப் புணர்ந்திருக்கின்றேம்; நீ எப்படி உன் துணைவியைப் பிரிந்துறைகின்றாய் என்னுமாறு சிறிதும் வல்லா கொல் என இயைத்துப் பொருள் கொள்க. வல்லாகொல் - மாட்டாகொல்,

[1]காதல ருழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற
வத்த நண்ணிய வங்குடிச் சீறூர்
மக்கள் போகிய வணிலாடு முன்றிற்
புலப்பில் போலப் புல்லென்
றலப்பென் றோழியவ ரகன்ற ஞான்றே. (குறுந். 41)

*இஃது, ஆற்றுவ லெனக் கூறியது.*

[2]நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ
வொன்று தெளிய நசையின மொழிமோ
வெண்கோட் டியானை சோணை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே. (குறுந். 75)

*இது, தலைவன் வரவை விரும்பிக் கூறியது.*

[3]இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலு
மும்மையா மென்பவ ரோரரார்கா – ணம்மை
யெளிய ரெனநினைந்த வின்குழலா ரேடி
தெளியச் சுடப்பட்ட வாறு. (திணை: நூற். 123)

*இது, குழல் கேட்டுத் தோழிக்குக் கூறியது.*

[4]பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்குந் துறைவனொ
டியாத்தேம் யாத்த ன்று நட்பே
யவிழ்த்தற் கரிதது முடிந்தமைந் தன்றே. (குறுந். 313)

*இது, தலைவன் தவறில னென்று கூறியது.*

---

1. சாறுகொள் ஊரின் - விழாக்கொண்டாடி ஊர் மகிழ்தல் போல். புகல்வேன் - விரும்பி மகிழ்வேன்.மக்கள் போகிய - வசிக்கும் மக்கள் விட்டுப்போன. புலம்பு இல் - தனிமையான வீடு. அலப் பேன் - வருந்துவேன்.

2. கண்டார் - கண்டவரிடத்தில். ஒன்றுதெளிய - உண்மையான ஒன்றை அறிய. சோணை - ஓராறு. பெறீஇயர் - பெறுவாயாக.

3. இம்மையான் - இம்மைக்கண். செய்ததை - ஐ - சாரியை. போலும் - அசை. உம்மை - மறுமை. குழல் - வேய்ங்குழல். ஆர் விகுதி உயர்த்தற்கண்வந்து இழிவுப் பொருள் தந்து நின்றது. சுடப் படமுன்னேயே அதற்குப் பிறரை நலிதற்குணமுண்மையின், நினைந்து குழலார் சுடப்பட்டவாறு என்றாள்.

4. நீத்துநீர் - வெள்ளநீர். பொதும்பர் - மரச்சோலை. நட்புயாத்தேம்; அந் நட்பு (நன்றாக) யாத்தது. யாத்தல் - கட்டுதல். அது - (அக்கட்டிய நட்பு) அவிழ்த்தற்கரிதாக முடிந்தமைந்தது என இயைத்துப் பொருள் கொள்க.

[1]உடலினே னல்லேன் பொய்யா துரைமோ
யாரவண் மகிழ்ந தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வெளவி யோளே. (ஐங்குறு. 66)

*இது, புதல்வனை நீங்கியவழிக் கூறியது.*

[2]கண்டனெ மல்லமோ மகிழ்நநின் பெண்டே
பலரொடு பெருந்துறை மலரொடு வந்த
தண்புனல் வண்ட லுய்த்தென
வுண்கண் சிவப்ப வழுதுநின் றோளே. (ஐங்குறு. 69)

*இது, காமஞ்சாலா விளமையோளைக் களவின் மணந்தமை அறிந்தேனென்றது.*

*வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ - வாயில்தன் ஏதுவாகத் தலைவிக்கு வருங் கூற்றுவகையோடு கூட்டி:*

*வாயில்களாவார் செய்யுளியலுட் (512) கூறும் பாணன் முதலியோர். 'வகை' என்றதனான், ஆற்றாமையும் புதல்வனும் ஆடைகழுவுவாளும் பிறவும் வாயிலாதல் கொள்க.*

[3]கொக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின்
கூம்புநிலை யன்ன தகைய வாம்பற்
றூங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழுந்
தண்டுறை யூரண் றண்டாப் பரத்தமை
புலவா யென்றி தோழி புலவேன்
பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சூடுந் தொடைக்குந்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூ ரன்னவென்
னன்மனை நணிவிருந் தயரும்
கைதூ வின்மையி னெய்தா மாறே.

---

1. உடலினேனல்லேன் - பகைத்தேனல்லேன். தேரோடு புதல் வனை உள்ளி நின்மனைக்கு நீ வருதலும், (வெளவியோள் -) நின் வருகையைத் தடுத்தவள் அவண் யார் (எவள்) பொய்யாது உரை என இயைக்க.

2. (அவள்) தண்புனல் வண்டலைச் சிதைத்துக்கொண்டு போனதாகக் கண்சிவக்க அழுதுநின்றாள் என இயைக்க.

3. கொக்கினுக்கு ஒழிந்த - கொக்குப்பறவை இருத்தலால் கிளையசைந்து வீழ்ந்த (பழம்). கூம்புநிலை - ஒடுங்கியிருக்கு நிலை. தகைய - தன்மையான சுரும்பு களையுடைய. தண்டா - அமையாத; ஒழியாத. யாமைப் பாசறைப்புறத்து - யாமையின் பசிய பாறைக்கற்போன்ற முதுகில். நந்து - நத்தை. கைதூவின் மையின் - கை யொழியாமையின். எய்தாமாறு - எதிர்ப்படப்பெறாமை.

இந் நற்றிணை (280) தலைவனொடு புலவாமை நினக்கு இயல்போவென்ற தோழிக்கு விருந்தாற் கைதூவாமையின் அவனை எதிர்ப்படப் பெற்றிலேனல்லது புலவேனோ என்றவாறு.

[1]அன்னா யிவனோ ரிளமா ணாக்கன்
றன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ
விரந்தூ ணிரம்பா மேனியொடு
விருந்தி னூரும் பெருஞ்செம் மலனே. (குறுந். 33)

இது, பாணன் சொல்வன்மைக்குத் தோற்று வாயில் நேர்ந்த தலைவி தோழிக்கு உரைத்தது.

[2]காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென
விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே. (ஐங்குறு. 140)

இது, பரத்தையிற் பிரிந்துழி அவன் நின்வார்த்தையே கேட்பனென்பது தோன்றப் பாணற்குத் தலைவி கூறியது.

[3]ஆடியல் விழவி னழுங்கன் மூதூ
ருடையோர்ப் பான்மையிற் பெருங்கை தூவா
வறனில் புலைத்தி யெல்லி தோய்த்த
புகாப்புகர்க் கொண்ட புன்பூங் கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர வோடிப்
பெருங்கயிறு நாலு மிரும்பனம் பிணையற்
பூங்க ணாய மூக்க வூங்கா
ளழுதனள் பெயரு மஞ்சி லோதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமக
ளூச லுறுதொழிற் பூசற் கூட்டா
நயனின் மாக்களொடு குழீஇப்
பயனின் றம்மவிவ் வேந்துடை யவையே. (நற்றிணை. 90)

இது, பாணனைக் குறித்துக் கூறியது.

---

1. சொல்வன்மைபற்றி இளமாணாக்கன் என்றாள். மன்றம் - பொதுவிடம். என்னன் - எத்தகையன். நிரம்பா - முற்றவளராத. ஊரும் - செல்லும். செம்மல் - தலைமை.

2. பாண! நீ வளைநீங்கிய நிலைகாண். (மதி - முன்னிலையசை.) அதனை நீ துறைவற்கு உரைத்தற்குரியை என்க. இறை - முன்கை.

3. ஆடுஇயல் விழாவின் அழுங்கன் மூதூர் - கூத்தாடுகின்ற விழாவினொலியை யுடைய பழைய ஊர். உடை ஓர் பான்மையின் - ஆடைகளை ஆராய்ந்து கழுவுந்தன்மையினாலே. கைதூவா - கையொழியாத. புலைத்தி என்றது வண்ணாத்தியை. எல்லி - இரா. புகாப் புகர் - சோற்றின் கஞ்சி. கலிங்கம் - ஆடை. வாடாமாலை - பொன்னரிமாலை. பனம்பிணையல் - பனைநார்க் கயிறு. ஊக்காள் - ஆடாள். நல்கூர்பெண்டு - குறைவுபட்ட பெண்டன்மை (பெண்டன்மையிற் குறைவுபட்ட). பூசல் - ஆரவாரம். கூட்டல் - பொருத்தல்; பொருந்ததுசெய்தல். நயனின் மக்கள் என்றது பாணன் முதலாயினோரை.

[1]நெய்யுங் குய்யு மாடி மெய்யொடு
மாசுபட் டன்றே கலிங்கமுந் தோளுந்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே
வாலிழை மகளிர் சேரித் தோன்றுந்
தேரோற் கொத்தனெ மல்லே மதனாற்
பொன்புரை நரம்பி னின்குரற் சீறியா
ழெழாஅல் வல்லை யாயினுந் தொழாஅல்
*புரையோ ரன்ன புரையு நட்பி
னிளையோர் கூம்புகை மருள வோராங்
கட்டங் காது விட்டாங் கமைத்துக்
கொண்டுசெல் பாணநின் றண்டுறை யூரனைப்
பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்
புரவியும் பண்ணிலை முனிகுவ
விரகில மொழியல்யாம் வேட்டதில் வழியே. (நற்றிணை. 380)

*இது, பாணனுக்கு வாயின் மறுத்தது.*

[2]புல்லேன் மகிழ்ந புலத்தலு மிலனே
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமாண் பெருங்குள மடைநீர் விட்டெனக்
காலணைந் தெதிரிய கனைக்கோட்டு வாளை
யள்ளலங் கழனி யுள்வா யோடிப்
பகடுசே றுதைத்த புள்ளிவெண் புறத்துச்
செஞ்சா லுழவர் கோற்புடை மதரிப்
பைங்காற் செறுவி னலைமுதற் பிறழும்
வாணன் சிறுகுடி யன்னவென்
கோனே ரெல்வளை நெகிழ்த்த நும்மே. (நற்றிணை. 340)

*இஃது, ஆற்றாமை வாயிலாகச் சென்றுழித் தலைவி கூறியது.*

---

1. குய் - நறும்புகை. கலிங்கம் - ஆடை. புனிறுநாறும் - ஈன்றணிமையானாய முடைநாற்றம்வீசும். சேரி - சேரியினின்றும். எழாஅல் - யாழ்நரம்பினின்றும் எழும் ஓசை; என்றது ஓசையை எழுப்பிப்பாடலை. தொழாஅல் - எம்மைத் தொழாதே. பாடு மனைப் பாடல் கூடாது - சிறந்த எமது மனைக்கண்நின்று பாடுதலைச்செய்யாது. பாடல் கூடாது ஊரனைக் கொண்டுசெல் என இயைக்க. பண்ணிலை - பிணித்திருக்குநிலைமை. முனிகுவ வெறுக்கின்றன. விரகிலமொழியல் - பயனில்லாதவற்றைச் சொல்லாதே. *இதுமுதல் மூன்று அடியும் உரைப் புத்தகத்தில் இல்லை. புரையுநட்பு - உயர்ந்த நட்பு. இளை யோர் கூம்புகை மருள ஓராம் - இளைய பரத்தையர் கூம்புதலோடு மயங்க யாம் சிந்தியேம். கண்தங்காது - இவ்விடந் தங்காது. ஆங்கு - இளையரிடம். அமைத்து - அமையச்செய்து என்று பொருள் கொள்க..

2. நும்மைப்புல்லேன் புலத்தலுமிலன் என இயைக்க. கல்லா - பாகன்மொழிக் குறிப்பன்றிப் பிறகல்லாத. படை - படைத்த " செய்த. மடை - அடைப்பு. அடைப்பைத் திறந்துகொண்டு நீர் பெருகியதாக என இயைக்க. கால் - கால்வாய். எதிரிய - திருமிய (திரும்பிய). உள்வாய் - உள்ளிடம். சேறு

[1]வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
காலை யிருந்து மாலைச் சேக்குந்
தண்கடற் சேர்ப்பனொடு வாரான்
றான்வந் தனனெங் காத லோனே. (ஐங்குறு. 157)

*இது, வாயில் வேண்டி ஒழுகின்றான் புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ்சிய தலைவி, அவன் விளையாடித் தனித்து வந்துழிக் கூறியது.*

*'கூர்முண் முள்ளி' என்னும் (26) அகப்பாட்டு ஆற்றாமை வாயிலாகச் சென்றுழித் தடையின்றிக் கூறியவாறு.*

*'மாறாப் புண்போன் மாற்றச் சீற்றங் களற்றப்' [2]பின்னும் புலவி கூர்ந்து தலைவன் கேட்ப முன்னிலைப் புறமொழியாக யான் ஓமென்னவும் ஒல்லாரென வலிதிற் கூறியவாறு காண்க.*

பூங்கட் புதல்வனை பொய்பல பாராட்டி (கலி. 79: 20)

*எனப் புதல்வனை வாயிலாகக் கொண்டு சென்றவாறு காண்க.*

[3]நாடிநின் றூதாடித் துறைச்செல்லா ளூரவ
ராடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ
கூடியார் புனலாடப் புணையாய மார்பினி
லூடியா ரெறிதர வொளிவிட்ட வரக்கினை. (கலி. 72: 13 – 6)

*இஃது, ஆடைகழுவுவாளை வாயிலென்றது.*

*பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதனாற் கொள்க.*

*கிழவோள் செப்பல் கிழவது என்ப - இப் பத்தொன்பதுங் கிழவோளுக்கு உரிமை யுடைத்தென்று கூறுவர் ஆசிரியர் என்ற*

---

உதைத்தபுள்ளி - சேற்றை மிதித்தலாற் றெறித்த சேற்றுப்புள்ளி. புறத்து - முதுகிலே, உடம்பின்புறத்தே எனினுமாம். கோல்புடைமதரி - கோலால் அடித்தற்கும் அஞ்சாது செருக்குற்று. பிறழும் - புரளும்; அதுவும் பாடம்.

1. செத்தென - இறந்ததாக. சேக்கும் - துயிலும். எங்காதலோன் சேர்ப்ப னொடு வாரானாய்த் தானே தனித்து வந்தனன் என இயைத்துப் பொருள் கொள்க. தடையின்றிக் கூடியவாறு என்றிருத்தல் வேண்டும். ஆய்க.

2. பின்னும் - புலவி நீங்கிக் கூடியிருந்த பின்னும். ஓம் எனவும் - ஒழியுமென்ன வும். ஒல்லார் - விடார்; உடன்படார். வலிதின் - கடுஞ்சொல்லான்.

3. புலைத்தி என்றது வண்ணாத்தியை. கூடியார் - நின்னொடு புணர்ந்த பரத்தையர். புணை - தெப்பம். நின் புலைத்தி அரக்கினை (எனக்குக்) காட்டென்றாளோ என இயைக்க. அரக்கு - சாதிலிங்கம்.

வாறு. முன்னர் நின்ற ஏழனுருபுகளைத் தொகுத்து இன்னதன் கண்ணும் இன்னதன்கண்ணுந் தலைவி செப்புதலை வாயிலின் வகையோடே கூட்டிக் கிழவோள் செப்பல் வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ என மாறுக. (6)

**(தலைவி கூற்றின்கட்படுவதோ ரிலக்கணமுணர்த்தல்)**

148. புணர்ந்துடன் போகிய கிழவோண் மனையிருந்
திடைச்சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி
யன்புறு தக்க கிளத்த றானே
கிழவோன் செய்வினைக் கச்ச மாகும்.

இது, தலைவி கூற்றின்கட் படுவதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ — ள்: புணர்ந்து உடன் போகிய கிழவோள் மனையிருந்து - களவுக் காலத்துப் புணர்ந்து உடன் போகிய தலைவி கற்புக் காலத்து இல்லின்கண் இருந்து, இடைச்சுரத்து இறைச்சியும் அன்புறுதக்க வினையுஞ் சுட்டிக் கிளத்தல் தானே - தான் போகிய காலத்துக் காட்டின்கட் கண்ட கருப்பொருள்களையுந் தலைவன் தன்மேல் அன்பு செய்தற்குத் தக்க கருப்பொருளின் தொழில் களையுங் கருதிக் கூறுதல்தானே, கிழவோன் செய்வினைக்கு அச்சம் ஆகும் - தலைவன் எடுத்துக்கொண்ட காரியத்திற்கு முடித்த லாற்றான்கொலென்று அஞ்சும் அச்சமாம் என்றவாறு.

எனவே, அருத்தாபத்தியாற் புணர்ந்து உடன்போகாத தலைவி மனைக்கணிருந்து [1]தலைவன் கூறக்கேட்டு அக்கருப் பொருள்கடதன்மேல் அன்புறுதக்க வினைகளைக் கூறுதல் தலைவன் செய்வினைக்கு அச்சமாகாது வருவரெனத் துணிந்து கூறுதலாமென்றா ராயிற்று.

[2]கான யானை தோனயந் துண்ட
பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை
யலங்க லுலவை யேறி யொய்யெனப்
புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரு
மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்ச்

---

1. தலைவன் கூறக்கேட்டு என்றது, பிரிதற்குமுன் தலைவன் அன்புறுதக்கன வாகிய கருப்பொருள்களைக் கூறத் தான்கேட்டு என்றபடி.

2. பொரி - வெப்பாற் பொரிந்த; பொருக்குமாம். அலங்கல் - அசைதல். உலவை - வற்றற்கொம்பு. புறவு பெடை பயிரும் - புறவுச்சேவல் தன் பெடையை

சேந்தனர் கொல்லோ தாமே யாந்தமக்
கொல்லோ மென்ற தப்பற்குச்
சொல்லா தகறல் வல்லு வோரே. (குறுந். 79)

புலம்புதரு குரலவாய்ப் புறவினைப் பெடை அழைக்கும் வருத்தங் கண்டு வினைமுடியாமல் வருவரோவென அஞ்சிய வாறு காண்க.

"அரிதாய வறனெய்தி" என்னும் (11) கலிப்பாட்டுத் தலைவன் [1]'அன்புறுதக்கன' கூறக்கேட்ட தலைவி அவற்றைக் கூறிப் புனை நலம் வாட்டுநர் அல்லரென வரவுகருதிக் கூறியவாறு காண்க. [2]இதனுள் ஆற்றுவிக்குந் தோழி வருவர் கொல்லென ஐயுற்றுக் கூறலின்மையின் தோழி கூற்றன்மையும் உணர்க.

புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன (கலி. 3: 13)

என்றாற் போல்வன தலைவி கூற்றாய் வருவன உளவாயின் இதன்கண் அடக்குக. (7)

**(தோழி முதலிய வாயில்கட்கு எய்தாததெய்துவித்தல்)**

**149.** தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினு
மாவயி னிகழு மென்மனார் புலவர்.

இது, தோழி முதலிய வாயில்கட்கு எய்தாத தெய்துவித்தது.

இ – ள்: தோழி உள்ளுறுத்த வாயில் புகுப்பினும் - தலைவனது செலவுக்குறிப்பு அறிந்து அவனைச் செலவழுங்குவித்தற்குத் தோழியுள்ளிட்டவாயில்களைத் தலைவி போகவிட்ட அக்காலத்து அவர் மேலன போலக் கூறுங் கூற்றுக்களும், ஆவயின் நிகழும் என்மனார் புலவர் - தலைவி அஞ்சினாற்போல அவ்வச்சத்தின் கண்ணே நிகழுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

'அறனின்றி யயறூற்றும்' (கலி. 3) என்னும் பாலைக்கலியுள் இறைச்சியும் வினையுமாகிய பூ முதலியன கூறியவாற்றால் தலை

---

அழைக்கும். ஒல்லேம் - பொருந்தேம் (உடன்படேம்). தப்பல் - தவறு. அகறல்வல்லுவோர் சேர்ந்தனர்கொல் என இயைக்க.

1. அன்புறுத்தக்கன என்றது, 'அன்புறுதகந' என்னுஞ் சூத்திரத்தைக் குறித்துநின்றது. (பொருளியல் - 37)

2. இப்பாட்டு, தோழிகூற்றன்று என்பதற்குக் காரணம் 'வருவர்கொல்' என ஐயுற்றுக் கூறலே என்பது கருத்து.

*விக்கிரங்கி நீர் செலவழுங்குமெனக் கூறுவாள் 'யாமிரப்பவு மெமகொள்ளா யாயினை' எனப் பிறவாயில்களையுங் கூட்டி [1]உரைத்தவாறு காண்க.* *(8)*

**(கற்பின்கண் தோழிக்குரிய கூற்றுக்கள் நிகழுமிடமிவையெனல்)**

150. பெறற்கரும் பெரும்பொருண் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணு
மற்றமழி வுரைப்பினு மற்ற மில்லாக்
கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினுஞ்
சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினு
மடங்கா வொழுக்கத் தவன்வயி னழிந்தோளை
யடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்
பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
யிழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்
வணங்கியன் மொழியான் வணங்கற் கண்ணும்
புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியுஞ்
சிறந்த புதல்வனை நேராது புலம்பினு
மாணலந் தாவென வகுத்தற் கண்ணும்
பேணா வொழுக்க நாணிய பொருளினுஞ்
சூணயத் திறத்தாற் சோர்வுகண் டழியினும்
பெரியோ ரொழுக்கம் பெரிதெனக் கிளந்து
பெறுதகை யில்லாப் பிழைப்பினு மவ்வயி
னுறுதகை யில்லாப் புலவியுண் மூழ்கிய
கிழவோள்பா னின்று கெடுத்தற் கண்ணு
முணர்ப்புவயின் வாரா வூடலுற் றோள்வயி
னுணர்த்தல் வேண்டிய கிழவோன்பா னின்று
தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணு
மருமைக் காலத்துப் பெருமை காட்டிய
வெண்மைக் காலத் திரக்கத் தானும்
பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை யெதிரு
நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக்
காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்

1. உரைத்தது தோழி.

பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய
மரபுடை யெதிரு முளப்படப் பிறவும்
வகைபட வந்த கிளவி யெல்லாந்
32 தோழிக் குரிய வென்மனார் புலவர்.

இது, முறையானே தோழிக்குரிய கூற்றுங் கூறுகின்றது.

**இ – ள்:** பெறற்கு அரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த தெறற்கு அரும் மரபிற் சிறப்பின் கண்ணும்: பெறற்கு அரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த - தலைவனுந் தலைவியுந் தோழியும் பெறுதற்கரிதென நினைத்த பெரிய பொருளாகிய வதுவை வேள்விச்சடங்கான் முடிந்தபின்பு தோன்றிய, தெறற்கு அரும் மரபிற் சிறப்பின் கண்ணும் - தனது தெறுதற்கரிய மரபு காரணத்தால் தலைவன் தன்னைச் சிறப்பித்துக் கூறுமிடத்தும், தோழி கூற்று நிகழும். தலைவியையுந் தலைவனையும் வழிபாடாற்றுதலின் 'தெறற்கரு மரபின்' என்றார். தெறுதல் - அழன்று நோக்குதல். சிறப்பு, இவளை நீ ஆற்றுவித்தலின் எம் உயிர் தாங்கினேம் என்றாற் போல்வன. அவை, எம்பெருமானே அரிதாற்றியதல்லது யான் ஆற்றுவித்தது உண்டோவென்றானும் நின் அருளால் இவள் ஆற்றியதல்லது யான் ஆற்றுவித்தது உண்டோவொன்றானுங் கூறுவன்வாம்.

[1]அயிரை பரந்த வந்தண் பழனத்
தேந்தெழின் மலரத் தூம்புடைத் திரடா
ளாம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவ
ளிடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுகாண் பிறையிற் றோன்றி யாநுமக்
கரிய மாகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே. (குறுந். 178)

இதனுண் முலையிடைக்கிடந்தும் பனிக்கின்ற நீர் அரியமாகிய காலத்து எங்ஙனம் ஆற்றினீரென யான் நோவாநின்றேன், இங்ஙனம் அருமை செய்தலால் தேற்றுதற்கு உரியோனாகிய என்னைச் சிறப்பித்துக் கூறல் ஆகாது என்றவாறு காண்க.

---

1. அயிரை - ஒரு மீன். தூம்பு - உட்டுளை. தாள் - காம்பு. பழனம் - பொய்கை. குறுநர் - பறிப்போர். நடுக்கம் - வேட்கை விரைவுபற்றி உண்டான நடுக்கம். அரியமாகிய காலை என்றது களவுக்காலத்தை. நோன்றல் - பொறுத்தல். நோகு - நோவேன்.

[1]பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கா னாவற் புகர்ப்புற விருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கா லலவன் கொண்டகோட் கூர்ந்து
கொள்ளா நரம்பி னிமிரும் பூச
லிரைதேர் நாரை யெய்திய விடுக்குந்
துறைகெழு மரந்தை யன்ன விவணலம்
பண்டு மிற்றே கண்டிசிற் றெய்ய
வுழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய
நெகிழ்ந்த கவினலங் கொல்லோ மகிழ்ந்தோர்
கட்கழி செருக்கத் தன்ன
காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே. (நற்றிணை. 35)

*இதனுள், தலைவி கனியாகவும், தும்பி தோழியாகவும், அலவன் தன்மேல் தவறிழைக்குந் தமராகவும், தலைவன் இரை தேர் நாரையாகவும் உள்ளுறையுவமங் கொள்வுழித் தலைவி பொருட்டு யாய்க்கு அஞ்சி ஒழுகினேனை நீ காத்ததன்றி யான் ஆற்றுவித்தது உளதோவெனத் தலைவன் சிறப்பிற்கு எதிர் தோழி கூறியவாறு காண்க. 'பண்டும் இற்றே' என்றது பண்டையின் மிகவும் வருந்தினாள் என்றாள். இவள்கண் நீண்டு பசந்தது, களவின்கண் நீங்காது அளியாநிற்கவுஞ் சிறிது கெட்ட அழகின் மிகுதியோ, கள்ளுண்டார்க்குக் கள் அறூஉங் காலத்துப் பிறந்த வேறுபாடுபோலுங் காம வேறுபாடோ, அவ்விரண்டும் அல்லவே. இஃது ஓர் அமளிக்கண் துயிலப்பெற்றும் வேதவிதிபற்றிக் கூட்டம் நிகழாமையாற் பிறந்த மிக்க வேறுபாடன்றோ? இதனை இவளே ஆற்றுவதன்றி யான் ஆற்றுவிக்குமாறென்னை என்றாளென்க.*

*அற்றம் அழிவு உரைப்பினும் - களவுக்காலத்துப்பட்ட வருத்தம் நீங்கினமை கூறினும்:*

[2]எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழுந் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே. (ஐங்குறு. 148)

---

1. புன்கால் - புல்லிய காம்பு. காம்பையுடைய கனி என்க. புகர்ப்புறம் - புகர் நிறம்பொருந்திய புறம். கனிகிளைசெத்து -கனியைத் தம் கிளையாகக் கருதி. பழஞ்செத்து - பழமாகக்கருதி. அலவன் கொண்ட கோட்கு ஊர்ந்து கொள்ளா - நண்டுகொண்ட கோட்பாட்டினின்றுந் தாம் விலக்கிக் கொள்ளப் படாதனவாய். பூசல் - ஆரவாரம். எய்தியவிடுக்கும் - (நாரை) வர விடுத்துச் செல்லும். மகிழ்ந்தார் - கள்ளுண்டார். கட்கழிசெருக்கு - கள்ளூறுஉங் காலத்துப் பிறந்த வேறுபாடு. பூசலை விடுக்கும் என்க.

2. எக்கர் - மணற்குவியல். இகந்துபடுசினை - உயர்ந்து வளரும் சினை.

[1]எரிமருள் வேங்கை யிருந்த தோகை
யிழையணி மடந்தையிற் றோன்று நாட
வினிதுசெய் தனையா னுந்தை வாழியர்
நன்மனை வதுவை யயரவிவள்
பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே. **(ஐங்குறு. 294)**

*[2]அற்றம் இல்லாக் கிழவோட் சுட்டிய தெய்வக்கடத்தினும் - களவொழுக்கம் புலப்பட ஒழுகுதல் இல்லாத தலைவியைத் தலைவன் வரைந்து கோடல் குறித்துப் பரவிய தெய்வம் அதனை முடித்தலின் அப்பரவுக்கடன் கொடுத்தல் வேண்டுமெனத் தலைவற்குக் கூறும் இடத்தும்: உதாரணம்:*

[3]நெஞ்சொடு மொழிகடுத் தஞ்சுவர நோக்குந்
தாயவட் டெறுவது தீர்க்க வெம் மகனெச்
சிறந்த தெய்வத்து மறையுறை குன்ற
மறைந்துநின் றிறைஞ்சினம் பலவே
பெற்றனம் யாமே மற்றதன் பயனே.

*'கிழவோற் சுட்டிய தெய்வக்கடம்' என்று பாடம் ஓதி,*

[4]வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
வெனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
வெந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே. **(ஐங்குறு. 6)**

*என்பது உதாரணம் காட்டுவாருமுளர்.*

*சீருடைப் [5]பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும் - தலைமையுடைய இல்லறத்தைத் தலைவிமாட்டு வைத்தகாலத்துத் தலைவன் அறஞ்செயற்கும் பொருள்செயற்கும் இசையுங் கூத்துமாகிய இன்பம் நுகர்தற்குந் தலைவியை மறந்து ஒழுகினும்:*

---

1. தோகை - மயில். இழை - ஆபரணம். இனிது - இனிதான காரியம்.
2. அற்றம் - சோர்வு; எனவே களவைப் பிறர் அறிய ஒழுகல் என்றபடி. இல்லா எனவே அவ்வாறொழுகலில்லாத என்றபடி.
3. கடுத்து - வெகுண்டு. தெறுவது - வருத்துவது. பல இறைஞ்சினம் - பலமுறை வணங்கினேம். அதன்பயன்பெற்றனம் - அவ்வணக்கத்தின் பயனை இப்பொழுது பெற்றேம்.
4. யாய் என்றது தலைவியை. நந்துக - பெருகுக. தண்டுறை யூரன் வரைக எந்தையுங் கொடுக்க என்றது கிழவோற் சுட்டியன.
5. பெரும்பொருள் என்றது இல்லறத்தை.

*உதாரணம்;*

[1]கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிறுந்
தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவ
ணல்லணி நயந்துநீ துறத்தலிற்
பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே. (ஐங்குறு. 55)

*இதனுள், துறத்தலினெனப் பொதுவாகக் கூறினாள் அற முதலியவற்றைக் கருதுதலின்.*

*[2]அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை அடங்கக் காட்டுதற் பொருளின்கண்ணும் - புறத்து ஒழுக்கத்தை உடைய னாகிய தலைவன்மாட்டு மனம் வேறுபட்ட தலைவியைப் புறத்து ஒழுக்கமின்றி நின்மேல் அவர் அன்புடையரென அவ்வேறுபாடு நீங்க நெருங்கிக் கூறுதலை யுடைத்தாகிய பொருளின்கண்ணும்:*

*உதாரணம்:*

[3]செந்நெற் செறுவிற் கதிர்கொண்டு கள்வன்
றண்ணக மண்ணளைச் செல்லு மூரற்
கெல்வளை ஞெகிழச் சாஅ
யல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய். (ஐங்குறு. 27)

*இதன் உள்ளுறையாற் பொருளுணர்க.*

*பிழைத்து வந்து இருந்த கிழவனை நெருங்கி [4]இழைத்து ஆங்கு ஆக்கிக் கொடுத்தற்கண்ணும் - பரத்தையர் மனைக்கண் தங்கி வந்து அகனகர் புகுதாது புறத்திருந்த தலைவனை மிகக் கழறிச், சில மொழிகளைக் கூறி, இதனானே தலைவி மனத்தின்கண் ஊடல் நீங்குந் தன்மை உளதாக்கிக் கூட்டும் இடத்தும்: உதாரணம்:*

[5]நகைநன் றம்ம தானே யிறைமிசை
மாரிச் சுதையி னீர்ம்புறத் தன்ன

1. கரும்பின் எந்திரம் - கரும்பை நெரிக்கும் ஆலை. கோமான் என்றது பாண்டியனை.
2. அடங்கல் - அமைதல். அமையாத ஒழுக்கம் - புறத்தொழுக்கம்
3. செறு - வயல். கள்வன் - நண்டு. அளை - புற்று. சாஅய் - மெலிந்து.
4. இழைத்தல் - தானே தொடுத்துக்கூறல்.
5. இறைமிசை - சிறையின்மேலிடம். மாரிச்சுதையின் ஈர்ம்புறத்தன்ன - மழைக்காலத்துச் சுண்ணச்சாந்தின் ஈரிய புறத்தையொத்த: மழையாற் கழுவப்பட்ட சுண்ணச்சாந்து தூய வெண்ணிற முடையதாதல்பற்றி இங் ஙனங் கூறினார். இறை என்பது சிறைக்குப் பெயராதலை. "முடங்கலிறைய தூங்கணங்குரீஇ" என்னுங் குறுந்தொகைச் செய்யுளானறிக. (குறுந். 374).

கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்
வெள்ளி வெண்டோ டன்ன கயல்குறித்துக்
கள்ளா ருவகைக் கலிமகி ழுழவர்
காஞ்சியங் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை
மென்கழைக் கரும்பி னன்பல மிடைந்து
பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி
வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை
மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்
பார்வ லிருக்கும் பயங்கே ழூர
யாமது பேணின்றோ விலமே நீநின்
பண்ணமை நல்யாழ்ப் பாணனொடு விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணதிர்ந் தியம்ப
மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி
யெம்மனை வாரா யாகி முன்னா
ளும்மனைச் சேர்ந்த ஞான்றை யம்மனைக்
குறுந்தொடி மடந்தை யுவந்தன ணெடுந்தே
ரிழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகிற் கூட லாங்கண்
வெள்ளத் தானையொடு வேறுபுலத் திறுத்த
கிள்ளி வளவ னல்லமர் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வௌவி
யேதின் மன்ன ரூர்கொளக்
கோதை மார்ப னுவகையிற் பெரிதே. (அகம். 346)

---

இறை - இறப்பு என்றும், புறம் - மேலிடம் என்றும் உரைகூறுவாருமுளர். பொருத்த நோக்கிக் கொள்க. சுதையின் புறம் என்பதற்கு சுண்ணச்சாந்து பூசிய சுவர்ப்புறம் எனினுமமையும். சிறகின்மேலிடம் அதிவெண்ணிறமுடைமை பற்றி மாரிச்சுதையை உவமை கூறினார். கூரற்கொக்கு அவ்விறகையுடைய கொக்கு. கூரல் என்பதற்கு (க் குளிர்ச்சியால்) நடுங்குதல் எனினுமாம். சேவல் கயல் குறித்து நோக்கிப் பார்வலிருக்கும் ஊர் என இயைக்க. சிறை மிசை அதன்மீது வழியு நீரைப் பார்த்திருக்கும் எனச்சிறை (அணை)யை அது இருத்தற்கு இடமாகக் கொள்க. உழவர் குத்தி மிடைந்து பொத்திக் கொண்ட அணை என இயையும். செய்யாகிய நெற்பயிரையுடைய விளைநிலங்களை மறைத்து என்க. வல்வாய் - வலிய இடம். ஊர! நீ பாணனொடுமாந்தி வாராயாகி நும்மனைச் சேர்ந்தஞான்று நும்மனை மடந்தை உவகையிற் பெரிது உவந்தனள் யாமது பேணின்றோவிலம் எனக் கூட்டி முடிக்க. அது - அவ்வுவகை, பேணின்றிலம் - பேணிற்றிலம். யாமது பேணா தொழியவும் நீ அதனை மறைப்பது பெரிதும் நகையாடற்கிடமாய தென்பாள் நகை நன்றம்ம என்றாள். பழையன் மாறனது கூடற்கண் பகைப்புலத்தே இறுத்த கிள்ளிவளவன் அம்மாறனை அமரிற் சாய்த்து வவ்வி ஊர்கொள அதனைக் கண்டு உவந்த கோதைமார்பன் என்னுஞ் சேரன் உவகையின் எனவும் கூட்டி முடிக்க. மட்டு - கள். சாஅய் - சாய்த்து, உவகையிற் பெரிது உவந்தனள் என மாற்றிக் கூட்டுக.

[1]கேட்டிசின் வாழியோ மகிழ்ந வாற்றுற
மைய னெஞ்சிற் கெவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
யிவட்குமருந் தன்மை நோமெ னெஞ்சே. (ஐங்குறு. 59)

*வணங்கியன் மொழியான் வணங்கற் கண்ணும் - தாழும் இயல்பினையுடைய சொற்களால் தோழி தாழ்ந்து நிற்கும் நிலைமைக்கண்ணும்: உதாரணம்:*

[2]உண்டுறைப் பொய்கை வராஅ லினமிரியுந்
தண்டுறை யூர தகுவகொ – லொண்டொடியைப்
பாராய் மனைத்துறைந் தச்சேரிச் செல்வதனை
யூராண்மை யாக்கிக் கொளல் (ஐந்: எழு. 54)

*என வரும்*

[3]பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயி
னாம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன
விவணலம் புலம்பப் பிரிய
வனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே. (ஐங்குறு. 57)

*இதுவும் அதன்பாற் படும்.*

*புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும் - பரத்தைய ரிடத்தே உண்டாம் விளையாட்டினைத் தலைவன் பொருந்திய மன மகிழ்ச்சிக்கண்ணும்:*

*விளையாட்டாவது:- யாறுங் குளனுங் காவும் ஆடிப் பதியிகந்து நுகர்தலாம்.*

[4]பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்
கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி
யாம்பன் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்
தரில்படு வள்ளை யாய்கொடி மயக்கித்

---

1. எவ்வந்தீர ஆற்றுற - துனபந்தீர ஆற்றுதற்கு என் நெஞ்சு நேரம் என இயைக்க.

2. உண்துறை - நீருண்ணுந்துறை. கொளல் தகுவகொல் என இயைக்க. அச்சேரி என்றது பரத்தையர்சேரியை. ஊராண்மை - உபகாரியாந்தன்மை.

3. பல்கதிர்த்தீ - பல ஒளியையுடைய வேள்வித்தீ. தீயினையும் செறுவினையு முடைய தேனூர் என்பது உரைகாரரர் கருத்து. தீபோலச் செவ்வாம்பற்பூ விளங்கும் செறுவென்றுமாம். புலம்ப - தனிப்ப; கெட. அனை நலம் - அத்துணை நலம்.

4. வராற்போத்து - ஆண்வரால். கொடுவாயிரும்பு - தூண்டில். துற்றி - உண்டு. அடை - இலை. அரில்படு - பின்னிய. போத்துதுற்றி, பாய்ந்தெழுந்து, மயக்கி,

தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறடு கதச்சேப் போல மதமிக்கு
நாட்கய முழக்கும் பூக்கே ழூர
வருபுனல் வையை வார்மண லகன்றுறைத்
திருமரு தோங்கிய விரிமலர்க் காவி
னறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு
வதுவை யயர்ந்தனை யென்ப வலரே
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய
னாலங் கானத் தகன்றலை சிவப்பச்
சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் லியானைப் பொலம்பூ ணெழினி
நாரரி நறவி னெருமை யூரன்
றேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி
னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென்
றெழுவர் நல்வல மடங்க வொருபகன்
முரசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீர ரார்ப்பினும் பெரிதே. **(அகம். 36)**

*இதனுள் கொள்வா ரார்ப்பினும் பெரிதெனவே நாண் நீங்கிப் புலப்படுத்தலை மகிழ்ந்தவாறு காண்க.*

*சிறந்த புதல்வனை நேராது புலம்பினும் - யாரினுஞ் சிறந்த புதல்வனை வாயிலாகக்கொண்டு சென்றுழி அவற்குத் தலைவி வாயில் நேராமல் தலைவன் வருந்தினும்: உதாரணம்:*

[1]பொன்னொடு குயின்ற பன்மணித் தாலித்
தன்மார்பு நனைப்பத்தன் றலையு மிஃதோ
மணித்தகைச் செவ்வாய் மழலையங் கிளவி
புலர்த்தகைச் சாந்தம் புலர்தொறு நனைப்பக்
காணா யாகலோ கொடிதே கடிமனைச்
சேணிகந் தொதுங்கு மாணிழை யரிவை
நீயிவ ணேரா வாயிற்கு நாணுந்
தந்தையொடு வருவோன் போல
மைந்தனொடு புகுந்த மகிழ்நன் மார்பே.

---

வாராது மதமிக்கு உழக்கும் ஊரஎன முடிக்க. அலர் ஆர்ப்பினும் பெரிது என மாற்றி இயைக்க அலர், செழியன் அகப்படுத்துக் கொன்று களவேள்வி வேட்ட ஞான்றை ஆர்ப்பினும் பெரிது பரந்தது என்பது கருத்து.

1. பொன்னொடு குயின்ற - பொன்னாற் செய்த. தாலி - ஐம்படைத்தாலி (பஞ்சாயுதம்) தாலியையுடைய மார்பை நனைப்பதன் றலையும் என விரித்து இயக்க. நனைப்பதன்றலையும் - நனைப்பதன் மேலும். மணி - பவளமணி, மழலை - எழுத்து நிரம்பாதது. இஃது செவ்வாய் மழலையங்கிளவி - இந்தச் செவ்வாயினின்றுந் தோன்று மழலைச்சொல்லோடு கூடிய நீர். நீர்நனைப் பதன்றலையும் நனைப்பப் புகுந்த மகிழ்நன்மார்பு காணாயாகல் கொடிது எனக் கூட்டுக. தந்தை - தன்தந்தை. போலப் புகுந்த என இயைக்க.

*மாண் நலம் தா என வகுத்தற்கண்ணும் - இவள் இழந்த மாட்சிமைப்பட்ட நலத்தைத் தந்து இகப்பினும் இகப்பாயெனத் தலைவனை வேறுபடுத்தற்கண்ணும்: உதாரணம்:*

[1]யாரை யெலுவ யாரே நீயெமக்
கியாரையு மல்லை நொதும லாளனை
யனைத்தாற் கொண்கவெம் மிடையே நினைப்பில்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு மமயத்து முரசதிர்ந் தன்ன
வோங்கற் புணரி பாய்ந்தாடு மகளி
ரணைந்திடு பல்பூ மரீஇ யார்ந்த
வாபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை யன்னவெம்
வேட்டனை யல்லையா னலந்தந்து சென்மே (நற்றிணை. 395)

*என வரும்*

நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த
பன்மீ னுணங்கல் கவருந் துறைவனைக்
கண்ணினாற் காண வியையுங்கொ லென்றோழி
வண்ணந்தா வென்கந் தொடுத்து. (ஐந்: எழு. 66)

*இதுவும் [2]அதன்பாற்படும்*

*பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும் - பரத்தை தலைவியைப் பேணாது ஒழுகிய ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின்கண்ணும்: தலைவற்குத் தோழி கூற்று நிகழ்த்தும். உதாரணம்:*

[3]பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து
வாளை நாளிரை தேரு மூர
நாணினென் பெரும யானே பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
யெதிர்தலைக் கொண்ட வாரியப் பொருந

---

1. எலுவ - நண்பனே; யாரை - யாரை (நட்பாகவுடையை). யார் - என்னவுறவினை. நொதுமலாளனை - அயலானாயினை. எம்மிடை நினைப்பில் அனைத்து - எம்மிடத்து நடந்துகொள்ளும் இயல்பை ஆராயின் அஃது அத்தகைமைத்தே. அதிர்ந்தன்ன ஓங்கற்புணரி - அதிர்ந்தாற்போன்ற ஒலியோடு உயர்ந்து வருகின்ற திரையையுடைய கடல். மரீஇயார்ந்த ஆ - மருவியுண்ட பசு. புலம் - தானடையு மிடம். மாந்தை அன்ன எம் - மாந்தை நகர்போன்ற எம்மை. நலம் தந்துசெல் - நின்னாலிழந்த நலனைத் தந்துவிட்டு அப்பாற் போவாயாக.

2. ஞாண் - கயிறு. போத்தந்த - கொண்டுவந்த. உணங்கல் - வற்றல். துறைவனை என்கம் என இயையும். தொடுத்து - இடைநிலை. தொடுத்தல் - இடைவிடாமை.

3. நாய்ப்போத்து இரைதேருமூர என இயைக்க. பாணனது மார்பின் வலியுற வருந்தி ஆரியப்பொருநன் தோள் அவன் கையகத்து ஒழிந்த கிடக்கை நோக்கி கணையன் நாணியாங்கு வாணுதற்கண்டுயான் நாணினன் என முடிக்க. எதிர்தலைக்கொண்ட - எதிர்ந்த.

னிறைத்திரண் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணைய னாணி யாங்கு மறையினண்
மெல்ல வந்து நல்ல கூறி
மையீ ரோதி மடவோ யானுநின்
சேரி யேனே யயவி லாட்டியே
னுங்கை யாகுவெ னினக்கெனத் தன்கைத்
தொடு மணி மெல்விர றண்ணெனத் தைவர
நுதலுங்கூந்தலு நீவிப்
பகல்வந்து பெயர்ந்த வாறுதற் கண்டே. (அகம். 386)

*இதனுள், யான் நினக்குத் தோழியாவேனெனப் பரத்தை நீவிய [1]"பேணா ஒழுக்கத்திற்குத் தலைவி நாணியது கண்டு தான் நாணினேனென்று தலைவற்குத் தோழி கூறியவாறு காண்க.*

*இன்னுந் தலைவனது பேணா ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின் கண்ணுமெனவுங் கூறுக.*

[2]யாயா கியளே மா அ யோளே
மடைமாண் செப்பிற் றமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கா னெய்த
லினமீ னிருங்கழி யோத மல்குதொறுங்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானுந்
தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு னாணிக் கரப்பா டும்மே (குறுந். 9)

*என வரும். இவை இரண்டும் பொருள்.*

*சூள் நயத் திறத்தாற் சோர்வுகண்டு அழியினும்: நயத்திறத்தாற் சூள் சோர்வுகண்டு அழியினும் - கூடுதல் வேட்கைக் கூறு பாட்டால் தான் சூளுறக்கருதிய சூளுறவினது பொய்ம்மையைக் கருதித் தலைவி வருந்தினும்: தோழிக்குக் கூற்று நிகழும். உதாரணம்:*

[3]பகல்கொள் விளக்கோ டிராநா ளறியா
வென்வேற் சோழ ராமூ ரன்னவிவள்
ணலம்பெறு சுடர்நுத றேம்ப
லெவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே. (ஐங்குறு. 56)

---

1. பேணா - வழிபாடில்லாத; மதியாத.
2. மாஅயோள் - மாமை நிறமுடைய தலைவி. மடை - மூட்டு வாய். தமிய - சூடாமையால் தனித்தவையாய். மெய்சாயினள் - உடம்பு மெலிந்தாள். கணைக்கால் - திரண்டகாம்பு. ஓதம் மல்குதொறும் - வெள்ளம் அதிகரிக்குந் தோறும். கயம் - குளம். நம்முன்நாணி - நமக்குமுன் செல்ல நாணி. கரப்பு ஆடும் - மறைத்தலையுடைய சொற்களைச் சொல்லுவாள். (அதனால் அவள்) யாயாகியளே - கற்புக்கடம்பூண்டவளே.
3. பகல்கொள் விளக்கொடு - பகலைச்செய்யும் விளக்கால். தேற்றிய மொழி எவன் பயஞ்செய்யும் என மாற்றிக் கூட்டுக.

இதனுள், இவள் நுதல் தேம்பும்படி நீ தேற்றிய சொல் லெனவே சோர்வுகண்டு அழிந்தாளென்பது உணர்ந்தும் இப் பொய்ச் சூள் நினக்கு என்ன பயனைத் தருமெனத் தோழி தலை வனை நோக்கிக் கூறியவாறு காண்க.

'கோடுற நிவந்த' (அகம். 266) என்னும் மணிமிடை பவளத் தைத் தோழி கூற்றாகக் காட்டுவாரும் உளர்.

பெரியோர் ஒழுக்கம் பெரிது எனக் கிளந்து பெறுதகை இல்லாப் பிழைப்பினும்: பெரியோர் பெறுதகை இல்லாக் கிளந்து - நன் மக்கள் பெறுந் தகைமை இல்லறமாயிருக்குமென்றுஞ் சொல்லி, பெரியோர் ஒழுக்கம் பெரிதெனக் கிளந்து பிழைப் பினும் - நன் மக்கள் ஒழுகும் ஒழுக்கம் பெரிதாயிருக்குமென்றுஞ் சொல்லித் [1]தான் தலைவனை வழிபாடுதப்பினும்: தோழிக்குக் கூற்று நிகழும்.

பெரியோரையுங் கிளந்தென்பதனையும் இரண்டிடத்தும் கூட்டுக. உதாரணம்:

[2]வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க
மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழற் றமர்வளம் பாடி
யூர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
வராஅ லருந்திய சிறுசிரன் மருதின்
றாழ்சினை யுறங்கும் தண்டுறை யூர
விழையா வுள்ளம் விழைவ தாயினு
மென்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
கறனும் பொருளும் வாழுமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னியது முடித்த
லனைய பெரியோ ரொழுக்க மதனா
லரிய பெரியோர்த் தேருங் காலை
நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோவிவ் வுகலத் தானே. (அகம். 286)

---

1. தான் என்றது தோழியை.

2. வெள்ளித்தொடி - வெள்ளிப்பூண். அதனையுடைய கரும்பாகிய உலக்கை என்க. வள்ளி - கொடி. குறுமகளிர் - சிறுமகளிர். குறுவழி - குற்றுமிடத்து. உலக்கையாற் பாடிக் குறுவழி உறங்கும் நாட என முடிக்க. விறந்த - செறிந்த. கேட்டவை - கேட்ட நூலறிவு. உள்ளமாகிய யானையை மீட்டு என உரைக்க. அனைய - அத்தன்மைய (- பெரிய). தேருங்கால், அவ் ஒழுக்கம் அரியவாயிருந்தன என வருவித்து முடிக்க.

இதனுள், 'அறன்' என்றது இல்லறத்தை; 'தற்றகவுடைமை நோக்கி' என்றது தன்னால் அவ்வறனும் பொருளுந் தகுதிப் பாடுடையவாந் தன்மையை நோக்கி என்றவாறாம்; 'முன்னியது' என்றது புறத்தொழுக்கத்தை; 'பெரியோ ரொழுக்கமனைய' என்றது பெரியோர் ஒழுக்கம் பெரிய வென்றவாறு.

இது, முன்னர் நிகழ்ந்த பொய்ச்சூள் பற்றி நும்மனோர் மாட்டும் இன்ன பொய்ச்சூள் பிறக்குமாயின் இவ்வுலகத்து மெய்ச்சூள் இனி இன்றாம்; அதனாற் பெரியோரைத் தமது ஒழுக்கத்தைத் தேருங்காலை அரியவாயிருந்தனவெனத் தலைவனை நோக்கித் தோழி கூறலின் அவனை வழிபாடு தப்பினாளாயிற்று. உள்ளுறையுவமம் இதற்கு ஏற்குமாறுணர்க.

அவ்வயின் உறுதலை இல்லாப் புலவியுண் மூழ்கிய கிழவோள் பால்நின்று கெடுத்தற்கண்ணும் - தலைவன் அங்ஙனம் பிறழ்ந்த இடத்து அவன் சென்று சேரும் தகைமை இல்லாமைக்குக் காரணமாகிய புலவியின்கண் அழுந்திய தலைவி பக்கத்தாளாய் நின்று அவள் புலவியைத் தீர்த்தற்கண்ணும்: உதாரணம்:

[1]மானோக்கி நீயழ நீத்தவ னானாது
நாணில னாயி னலிதந் தவன்வயி
னூடுத லென்னோ வினி. (கலி. 87: 11 – 3)

[2]உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். (குறள். 1302)

[3]காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர் மரீஇய சென்ற
மல்ல லூர னெல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் றாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே. (குறுந். 45)

உணர்ப்புவயின் வாரா ஊடல் உற்றோள்வயின் உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று தான் வெகுண்டு ஆக்கிய

1. மானோக்கி - மான்போலும் நோக்கமுடையவளே!. ஆனாது - அமையாது. நலிதந்து - வருத்தி. என் - என்ன பயன்தரும்.
2. புலவி உப்பமைந்தற்று - புலவி இன்பஞ்செய்தற்கு வேண்டுமளவிற்றாதல் உப்புத்துய்ப்பனவற்றிற்கு வேண்டுமள விற்றாக அமைந்தாற்போலும். அது - அவ்வுப்பு.
3. பண்ணல் - ஏறுதற்கேற்ப அமைத்தல். மரீஇய - மருவும் பொருட்டு. எல்லினன் - விளக்கத்தினையுடையவன்; விளக்கம் பரத்தையரை மருவலால் உண்டாயது. மறுவரும் - மனஞ்சுழலும். இத்திணை - இக்குடி.

*தகுதிக்கண்ணும்: உணர்ப்புவயின் வாரா ஊடல் உற்றோள்வயின் - தலைவன் தெளிக்கப்படுந் தன்மைக்கணில்லாத ஊடல் மிகுத் தோளிடத்து:*

*உணர்ப்புப் 'புணர்ப்புப்' போல் நின்றது.*

*உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று - ஊடல் தீர்த் தலை விரும்பிய தலைவன் வயத்தாளாய் நின்று, தான் வெகுண்டு ஆக்கிய தகுதிக் கண்ணும் - தான் தலைவியைக் கழறி அவள் சீற்றம் போந்தன்மை உண்டாக்கிய தகுதிக்கண்ணும்: உதாரணம்:*

[1]துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை
யரிமல ராம்பன் மேய்ந்த நெறிமருப்
பீர்ந்த ணெருமைச் சுவல்படு முதுபோத்துத்
தூங்குசேற் றள்ளற் றுஞ்சிப் பொழுதுபடப்
பைந்நிண வராஅல் குறையப் பெயர்தந்து
பரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்
போர்செறி மள்ளரிற் புகுதரு மூரன்
றேர்தர வந்த தெரியிழை ஞெகிழ்தோ
ளூர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்
பரத்தைமை தாங்கலோ விலனென வறிதுநீ
புலத்த லோம்புமதி மனைகெழு மடந்தை
யதுபுலந் துறைதல் வல்லி யோரே
செய்யோ ணீங்கச் சிலபதங் கொழித்துத்
தாமட் டுண்டு தமிய ராகித்
தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்பா
வைகுந ராகுத லறிந்து
மறியா ரம்மவஃ துடலு மோரே. (அகம். 316)

*இது, தோழி தலைவியை வெகுண்டு ஆக்கியவாறு காண்க.*

---

1. ஆம்பல் மேய்ந்த எருமை (முதுபோத்து)ஆண் அள்ளற்றுஞ்சிப் பொழுதுபட (பொழுதுதோன்ற) வரால் குறையப் பெயர்ந்து (மீண்டுவந்து) பகன்றை சூடி மள்ளரிற் புகுதமூரன் எனக் கூட்டி முடிக்க. போர்ச்செறிமள்ளர் - போரிற் சென்று பொருது வெற்றிபெற்றுவரும் வீரர். வீரர் பூச்சூடிப் பெரு மிதத்தொடு வருதல்போல வந்தது என்பது கருத்து. குறைய - காலான் மிதி பட்டு உடல்துணிய. ஊரன் தேர்தரவந்த மகளிர்தரத்தரப்பரத்தைமையைத் தாங்கலாற்றாதவனாகவுள்ளான் என்று கூறி வறிது நீபுலத்தல் என இயைக்க. ஊர்கொள் கல்லாமகளிர் - ஊரிற் பொருந்திய தமக்கென்று ஒருவனை வரித்தலறியாத மகளிர். ஊர் (கொள்கல்லா) தாங்காத மகளிர் என்றுரைப் பாருமுளர். தாங்கலோவிலன் என்பதனைத் தாங்கல் ஓவிலன் எனக் கண்ண ழித்து - தாங்கலை ஒழிகின்றிலன் என்றும் பொருள்கொள்ளலாம். வல்லியோர் வைகுதல் அறிந்தும் உடலுமோர் அறியார் என முடிக்க. இனித் தெரியிழை என்பதை ஆகுபெயராக்கி, தெரிந்த இழையையுடையாளது ஞெகிழ்

[1]அருமைக்காலத்துப் பெருமைகாட்டிய எண்மைக்காலத்து இரக்கத்தானும்: எண்மைக்காலத்து - தாம் எளியராகிய கற்புக் காலத்திலே, அருமைக்காலத்துப் பெருமைகாட்டிய இரக்கத் தானும் - களவுக்காலத்துத் தமது பெருமையை உணர்த்திய வருத்தத்தின் கண்ணும்: உதாரணம்:

[2]வேம்பின் பைங்காயென் றோழி தரினே
தேம்பூங் கட்டி யென்றனி ரினியே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கட் டண்ணிய தரினும்
வெய்ய வுவர்க்கு மென்றனி
ரைய வற்றா லன்பின் பாலே. **(குறுந். 196)**

பாணர் கூத்தர் விறலியர் என்றிவர் - பாணருங் கூத்தரும் விறலியரு மென்று சொல்லுகின்ற இம்மூவரும், பேணிச் சொல் லிய குறைவினை எதிரும் - விரும்பிக் கூறிய குறையுறும் வினைக்கு எதிராகவும்: கூற்று நிகழும்.

'எதிரும் என்றது அவர் வாயில் வேண்டியவழித் தோழி அவர்க்கு மறுத்தலும் மறுத்தாள்போல நேர்தலுங் கூறியதாம். உதாரணம்:

[3]புலைமக னாதலிற் பொய்ந்நின் வாய்மொழி
நில்லல்பாண செல்லினிப் பரியல்
பகலெஞ் சேரி காணி
னகல்வய லூர னாணவும் பெறுமே.

இது, பாணர்க்கு வாயின் மறுத்தது.

---

தோளை (ப் புணர்ந்தமையை) ஊரிற்பொருந்திய (பழிகூறலன்றிப் பிறிது) கல்லாத மகளிர் (ஊர்மகளிர்) கொண்டுவந்து சொல்லச் சொல்ல, பரத்தமை என்னாற் பொறுக்கப்படுதல் இலனாகின்றான் என்று புலத்தல் கூடுமோ என்று உரைப்பினுமமையும்.

1. அருமைக்காலம் - தலைவனை அரிதாகப்பெறும் காலம். என்றது களவுக் காலத்தை. தாம் தலைவற்கு அரியராகிய காலம் எனினுமாம்.

2. தேம்பூங்கட்டி - இனிய பொலிவான வெல்லக்கட்டி. இனி - இப்பொழுது. வெய்ய உவர்க்கும் - வெப்பமுடையனவாய் உவர்ப்புச் சுவையைத் தரும். அன்பின்பால் அற்று - நுமது அன்பின்பகுதி அத்தன்மைத்து. ஐய! விளி.

3. புலைமகன் - புலைத்தொழிலையுடைய மகன்; கீழ்மகன். நின்வாய்மொழி பொய் என மாற்றுக. நில்லல் - எம்மனையில் நில்லற்க. பரியல் - வருந்தற்க. ஊரன் எம்சேரிகாணின் நாணவும்பெறும் என இயைக்க.

விளக்கி னன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச் செவி யன்ன பாசடை தயங்க
வுண்டுறை மகளி ரிரியக் குண்டு நீர்
வாளை யுகளு மூரற்கு நாளை
மகட்கொடை யெதிர்ந்த மறங்கெழு பெண்டே
தொலைந்த நாவி னுலைந்த குறுமொழி
யுடன்பட் டோராத் தாயரோ டழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை போல
வுள்யாது மில்லதோர் போர்வையஞ் சொல்லே. (நற்றிணை. 310)

*இது, விறலிக்கு வாயின் மறுத்தது. மறுப்பாள்போல் நேர்வ வந்துழிக் காண்க.*

*நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக் காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்: நீத்த கிழவனை - பரத்தையிற் பிரிந்து தலைவியைக் கைவிட்ட தலைவனை, நிகழுமாறு படீஇ - தானொழுகும் இல்லறத்தே படுத்தல் வேண்டி, காத்த தன்மையில் - புறத்தொழுக்கிற் பயனின்மை கூறிக் காத்த தன்மையினாலே, கண்இன்று பெயர்ப்பினும் - கண்ணோட்டமின்றி நீக்கினும்: உதாரணம்:*

[2]மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகின் மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇப்
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்
கின்னா திசைக்கு மம்பலொடு
வாரால் வாழிய ரையவெந் தெருவே. (குறுற். 139)

*இதனுள் 'அம்பலொடு வாரல்' எனவே, பன்னாள் நீத்தமையுங் கண்ணின்று பெயர்த்தமையுங் கூறிற்று. கோழிபோலத் [1]தாயர்*

---

1. சுடர்விடுதாமரை - ஒளியைக்காலும் பூவைத் தோற்றுவிக்குந் தாமரை. பாசடை - பசிய இலை. உண்துறைமகளிர் இரிய - நீருண்ணுந் துறையின் கண் நீராடுமகளிர் அஞ்சி ஓட. வாளைபிறழும் - வாளைமீன் உகளும் (வெடிபாயும்) பெண்டு என்றது விறலியை. தொலைந்த நா - மென்மையைக் கல்லாத நா. உலைந்த - நிலைகுலைந்த. ஓரா - ஆராயாத. ஒழிபு - ஒருசாரெய்தி. போர்வையஞ்சொல் சொல்லலை கொல்லோ என இயைக்க. உள்யாதுமில்லது - உள்ளே ஒரு பொருளுமில்லாததாகிய.

2. கோழிப்பேடை பயிர்ந்தாங்கு என்க. வெருகினம் - காட்டுப் பூனைக் கூட்டம். உடன்குழீஇய - தன்னுடன் கூடும்படியாக. பிள்ளை - குஞ்சு. பயிர்தல் - அழைத்தல். இன்னாது இசைக்கும் - துன்பத்தைத் தருவதாகிக் கூறப்படும். அம்பல் - பழிமொழி. வாரல் - வராதொழிக.

*மகளிரைத் தழிஇக் கொண்டா ரென்றலிற் புறம்போயும் பயமின் றெனக் காத்ததன்மை கூறிற்று.*

*பிரியுங்காலை எதிர்நின்று சாற்றிய மரபுடை எதிரும் உளப் படப் பிறவும்: பிரியுங்காலை எதிர்நின்று சாற்றிய - தலைவன் கற் பிடத்துப் பிரியுங்கால் தெய்வத்தன்மையின்றி முன்னின்று வெளிப் படக்கூறிய, மரபுடை எதிரும் உளப்படப் பிறவும் - முறையுடைத் தாகிய எதிர்காலமும் இறந்தகாலமும் உட்படப் பிறவற்றுக் கண்ணும்:*

*[2]'எதிரும்' என்ற உம்மை எச்சவும்மை. 'பிற' ஆவன:- தலைவன் வரவு மலிந்து கூறுவனவும், வந்தபின்னர் முன்பு நிகழ்ந்தன கூறு வனவும், வற்புறுப்பாள் வருவமன்றெனப் படைத்து மொழிவனவும், தூதுகண்டு கூறுவனவும், தூது விடுவனவும், சேணிடைப்பிரிந் தோன் இடைநிலத்துத் தங்காது இரவின் வந்துழிக் கூறுவனவும், பிறவுமாம்.*

*'பாஅலஞ்செவி' என்னும் பாலைக்கலி (5) யுள்,*

[3]பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ
தந்நாள் கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே.

*இதனுட், 'புரிந்தனை' என இறப்பும் 'இறக்குமென' எதிரும் மரபில் தப்பாமல் வந்தவாறு காண்க.*

[4]வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்தந் தனையா னீயே நன்று
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
விறுவரை நாட நீ விரைந்துசெய் பொருளே. (ஐங். 309)

*இஃது எதிரது நோக்கிற்று.*

---

1. தாயர் என்றது பரத்தையரது தாயரை, புறம்போயும் என்றது இல்லின் புறத்தே போயும் (பரத்தையர் பற்றி போயும்) என்றபடி. இது இறைச்சி யாற்போந்த பொருள்.
2. எதிரும் என்பதற்கு இளம்பூரணர் கொண்ட பொருள் பொருத்தமாகும்.
3. பொய்நல்கல் - பொய்யான அருளுதல். புறந்தரல் - பாதுகாத்தல். அந்நாள் இவள் உயிரைக் கொண்டிறக்கும் என இயைக்க.
4. செலவுஅயர்ந்தனை - செல்லவிரும்பினாய். நின்நயந்துறைவி - நின்னை விரும்பியுறைபவள். கடுஞ்சூற்சிறுவன் - முதற்சூலிற்பெற்ற புதல்வன். காண்டலின் பொருள் இனிதோ என இயைக்க.

[1]புறவணி நாடன் காதன் மடமக
ளொன்னுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வ னழுமினி முலைக்கே. (ஐங்குறு. 424)

*இதுவும் அது. இனிப் 'பிற' வருமாறு.*

[2]பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்காற் கணந்துள் புலம்புகொ டெள்விளி
சுரஞ்செல் கோடியர் கமுமென விசைக்கு
நரம்பொடு கொள்ளு மத்தத் தாங்கட்
கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங் குன்ற நீந்தி நம்வயின்
வந்தனர் வாழி தோழி கையதை
செம்பொற் கழறொடி நோக்கி மாமகன்
கவவுக்கொ ளின்குரல் கேட்டொறும்
வயவுக்கொண் மனத்தே மாகிய நமக்கே.

*இது, தலைவிக்கு வரவு மலிந்தது. (நற்றிணை. 212)*

[3]நீலத் தன்ன நீர்பொதி கருவி
னமர்விசும் பதிர முழங்கி யாலியி
னிலந்தண் ணென்று கானங் குழைப்ப
வினந்தே ருழுவ ரின்குர லியம்ப
மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற்
றிரிமருப் பிரலை பைம்பயி ருகள
வார்பெய லுதவிய கார்செய் காலை
நூனெறி நுணங்கிய கானவில் புரவி
கல்லெனக் கறங்குமணி யியம்ப வல்லோன்
வாய்ச்செல வணக்கிய தாப்பரி நெடுந்தே
ரீர்ம்புற வியங்குவழி யறுப்பத் தீந்தொடைப்
பையு ணல்யாழ் செவ்வழி பிறப்ப

---

1. புறவு - காடு; முல்லைநிலம். முலைக்கு அழும் என்றதன் கருத்து, நீபிரிந்து செலின் அவள் இறப்பாள்; அதனாற் புதல்வன் முலைக்கு அழும் என்றபடி.

2. படுவலை - அகப்படுத்த அமைத்த வலை. வெரீ இ - அஞ்சி கணந்துள் - ஓர்புள். நரம்பொடு கொள்ளும் - யாழோசையோடு ஒத்து ஒலிக்கும். அத்தம் - அருநெறி. (தலைவர்) குன்றம் நீந்தி வந்தனர் என வருவித்து முடிக்க. கழல் தொடி - இப்போது கழலுகின்ற வளையல். கவவுக்கொள் - அணைத்துக் கொள்ளுகின்ற; மகனது என மாற்றி முடிக்க. அவா - ஆசை. நமக்கு (மகிழ்ச்சியுண்டாக ) வந்தனர் என இயைக்க.

3. நீலம் - நீலமணி.கருவினான் முழங்கி என்க. இன் ஏதுப்பொருட்டு. நூல் - அசுவநூல். நூன்முறை - நூலிணக்கம். நுணங்கிய - நுட்பமாயமைந்த. கால்நவில் - காற்றை ஒப்புச் சொல்லும். கால்பழகிய எனினுமாம். வல்லோன் - செலுத்தலில் வல்ல பாகன். வாய் - இடம். வணக்கிய - வசப்படுத்திய. தாப்பரி

விந்நிலை வாரா ராயிற் றந்நிலை
யெவன்கொல் பாண வுணரத்திசிற் சிறிதெனக்
கடவுட் கற்பின் மடவோள் கூறச்
செய்வினை யழிந்த மைய நெஞ்சிற்
றுனிகொள் பருவர றீர அந்நோய்
யினிதுசெய் தனையால் வாழ்கநின் கண்ணி
வேலி சுற்றிய வால்வீ முல்லைப்
பொருதார் கமழும் விரிந்தொலி கது
னின்னகை யிளையோள் கவவ
மன்னுக பெருமநின் மலர்ந்த மார்பே. **(அகம். 314)**

*இது, முன்பு தலைவிக்கு நிகழ்ந்த ஆற்றாமையும் அது கண்டு தான் கலங்கியவாறுந் தலைவற்குக் கூறியது.*

[1]மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிண ரூழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே. **(குறுந். 66)**

*இது, பருவம் அன்றெனப் படைத்து மொழிந்தது.*

[2]என நீ, தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே. **(கலி. 26)**

*இது, தூது வந்தமை தலைவிக்குக் கூறியது.*

[3]கைவல் சீறியாழ்ப் பாண நுமரே
செய்த பருவம் வந்துநின் றதுவே
யெம்மி னுணரா ராயினுந் தம்வயிற்
பொய்படு கிளவி நாணலு
மெய்யா ராகுத னோகோ யானே. **(ஐங்குறு. 472)**

---

- செல்லும் வேகம். தேர்வழிஅறுப்பப் பிறப்ப வாராராயின் என இயைக்க. தந்நிலை - அவர்தம்நிலை. வால்வீ - வென்பூ, கவவ - தழுவ.

1. கொன்றை வம்பமாரியைக் காரென மதித்துஇணர் ஊழ்த்த: ஆதலால் மடவமன்ற என இயைத்துப் பொருள் கொள்க. வாரா அளவை - வாராதகாலத்து (- வருதற்குமுன்பே).

2. யானையர் - யானைப்படையையுடையராய். போர் மலைந்து எழுந்தவர் - போர்மலைந்து எழுந்தவராகிய பகைவர் வரும் - வருவார்.

3. நுமர் என்றது தலைவனை. எம்மின் - எம் போல. நாணலும் எய்யார் ஆகுதற்கு யான் நோகு - நாணலையும் அறியாராதற்கு யான் நோவேன்.

*இது, குறித்த பருவத்துத் தலைவன் வாராதவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழி கூறியது.*

*தூதுவிட்டது வந்துழிக் காண்க.*

[1]பதுக்கைத் தாய வொதுக்கருங் கவலைச்
சிறுகண் யானை யுறுபகை நினையா
தியாங்குவந் தனையோ பூந்தார் மார்ப
வருள்புரி நெஞ்ச முய்த்தர
விருள்பொர நின்ற விரவி னானே. (ஐங்குறு. 362)

*இது, சேணிடைப்பிரிந்து இரவின் வந்துழிக் கூறியது.*

[2]ஆமா சிலைக்கு மணிவரை யாரிடை
யேமாண் சிலையார்க் கினமா விரிந்தோடுந்
தாமாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரக்கண்டு
வாய்மாண்ட பல்லி படும். (கைந்நிலை. 18)

*இது, நிமித்தங்காட்டிக் கூறியது.*

*இன்னும் அதனானே நமர் பொருள் வேண்டுமென்றார்; அதற்கு யான் அஞ்சினேனெனக் களவின் நிகழ்ந்ததனைக் கற்பில் தலைவிக்குக் கூறுதலுங் கொள்க.*

[3]கன்னவி றோளான் கடிநாள் விலக்குதற்
கென்னை பொருணினைந்தா ரேந்திழாய் – பின்ன
ரமரேற்றுக் கொள்ளுமென் றஞ்சினே னஞ்சார்
நமரேற்றுக் கொள்ளாத ஞான்று.

*இன்னும் தோழி கூற்றாய்ப் பிறவாற்றான் வருவனவெல்லாம் இதனான் அமைக்க.*

---

1. பதுக்கைத்துஆய - பதுக்கையையுடைத்து ஆய. பதுக்கை - கற்குவியல். ஒதுங்கு அரும் கவலை - செல்லற்கரிய கவர்த்த வழி. ஒதுங்கு ஒதுக்கு என வலிந்து நின்றது: ஒதுக்கிடமரிதாய எனினுமாம். யானையுறுபகை - புலி. உய்த்தர - செலுத்த. இரவினான் - இரவின்கண்.

2. ஆமா - காட்டுப்பசு. சிலைக்கும் - ஒலிக்கும். ஆரிடை - அரியவழி. ஏ - அம்பு. சிலையார் - வில்லையுடையராகிய வேடர். இனமா - இனமான விலங்குகள் கண்டு - அறிந்து. வாய்மாண்ட பல்லி - இடம் நல்ல பல்லி. படும் - சொல்லும்.

3. கடிநாள் - மணநாள். என்னை - என்ன காரணம் (நமர்) பொருணினைந்தார் என வருவித்து இயைக்க. அஞ்சாராய் நமர் ஏற்றுக்கொள்ளாத ஞான்று அமர் ஏற்றுக்கொள்ளுமென்றஞ்சினேன் என்க.

[1]அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்
நள்ளென வந்த வியறோ்ச்
செல்வக் கொண்கன் செல்வனஃ தூரே. (ஐங்குறு. 104)

*இது, புதல்வற் பெற்றுழித் தலைவன் மனைக்கட் சென்ற செவிலிக்கு அறத்தொடு நின்ற வதுவை கூட்டிய தோழி அவன் ஊர் காட்டிக் கூறியது.*

*வகைபட வந்த கிளவி எல்லாம் தோழிக்கு உரிய என்மனார் புலவர் - தோழி கூற்றாய்த் தலைவி கூற்றினுள் அடங்குவதன்றித் தோழிக்கே கூறத்தகும் வேறுபாடு உண்டாக வந்த கிளவிகளெல் லாந் தோழிக்கு உரியவென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

*இச்சூத்திரத்துக்கண் ஏழனுருபும் அவ்வுருபு தொக்குநின்று விரிந்தனவுஞ் செயினென்னும் வினையெச்சமும் உரியவென்னுங் குறிப்புவினை கொண்டன. அவற்றை இன்னவிடத்தும் இன்னவி டத்தும் இன்னது செய்யினும் உரியவென்று ஏற்பித்து முடிக்க. (9)*

**(காமக்கிழத்தியர் கூற்றுக்கள் நிகழுமிட மிவை எனல்)**

151. புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணு
மில்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும்
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி யுவப்பினு
மறையின் வந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணுங்
காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையிற்
றாய்போற் றழீஇக் கழறியம் மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணு
மின்னகைப் புதல்வனைத் தழீஇ யிழையணிந்து
பின்னர் வந்த வாயிற் கண்ணு
மனையோ ளொத்தலிற் றன்னோ ரன்னோர்
மிகைப்படக் குறித்த கொள்கைக் கண்ணு
மெண்ணிய பண்ணையென் றிவற்றொடு பிறவுங்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன.

இது, காமக்கிழத்தியர் கூற்றெல்லாந் தொகுத்துக் கூறு கின்றது: காமக்கிழத்தியராவார் [1]கடனறியும் வாழ்க்கையுடை யராகிக் காமக்கிழமை பூண்டு இல்லற நிகழ்த்தும் பரத்தையர். அவர் பலராதலிற் பன்மையாற் கூறினார். அவர் தலைவனது இளமைப் பருவத்திற் கூடி முதிர்ந்தோரும், அவன் தலைநின்று ஒழுகப்படும் இளமைப் பருவத்தோரும், இடைநிலைப் பருவத் தோரும், காமஞ் சாலா இளமையோருமெனப் பல பகுதியராம். இவரைக் 'கண்ணிய காமக் கிழத்திய'ரெனவே கண்ணாத காமக் கிழத்தியரும் உளராயிற்று. அவர் கூத்தும் பாட்டும் உடையராகி வருஞ் சேரிப்பரத்தையருங் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவலபாங்கினரும் பிறருமாம். இனிக் காமக்கிழத்தியரைப் பார்ப்பார்க்குப் பார்ப்பனியை யொழிந்த மூவரும், ஏனையோர்க்குத் தங்குலத்தல்லாதோரும் வரைந்துகொள்ளும் பரத்தையருமென்று பொருளுரைப்பாருமுளர். அவர் அறியார், என்னை? சிறப்புடைத் தலைவியரொடு பரத்தையரையுங் கூட்டிக் காமக்கிழத்தியரென்று ஆசிரியர் சூத்திரஞ் செய்யின் மயங்கக்கூற லென்னுங் குற்றந் தங்கு மாதலின். அன்றியுஞ் சான்றோர் பலருங் காமக்கிழத்தியரைப் பரத்தையராகத் தோற்றுவாய் செய்து கூறுமாறும் உணர்க.

இ — ள்: புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும் - தலைவன் தனது முயக்கத்தைத் தலைவியிடத்துந் தம்மிடத்தும் இடை விட்டு மயக்குதலால் தலைவிக்கண் தோன்றிய புலவியிடத்தும்: காமக்கிழத்தியர் புலந்து கூறுப. உதாரணம்:

[2]மண்கணை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை யூரனெஞ் சேரி வந்தென
வின்கடுங் கள்ளி னகுதை களிற்றொடு
நன்கல னீயு நாண்மகி ழிருக்கை
யவைபுகு பொருநர் பறையி னானாது
கழறுப வென்பவவன் பெண்டி ரந்திற்
கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன்
வகையமை பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் காணி ரோவென
வாதி மந்தி பேதுற் றினையச்

1. கடன் - முறைமை.

2. மண்கணை முழவு - மார்ச்சனைமைந்த முழவு. மகிழ் - மகிழ்ச்சி. தூங்க - கூத்தாட. அகுதை - ஒருவள்ளல் இருக்கை - ஓலக்கம். இருக்கையையுடைய

சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகு
மந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே. (அகம். 76)

*இதனுள், எஞ்சேரி வந்தெனக் கழறுபவென்ப அவன் பெண்டிரென முன்னைஞான்று புல்லுதன் மயக்குதலால் தலைவி புலந்தவாறும், அதுகண்டு காமக்கிழத்தி கொண்டுகை வலிப்பலென் [1]பெருமிதம் உரைத்தவாறும் காண்க.*

*இது, பெருமிதங்கூறலின் இளமைப் பருவத்தாள் கூற்றாயிற்று.*

ஒண்டொடி யாயத் துள்ளுநீ நயந்து
கொண்டனை யென்பவோர் குறுமகள் (அகம். 96)

*எனக் காமஞ்சாலா இளமையோளைக் கூறிற்று.*

*இரட்டுற மொழித லென்பதனாற் பரத்தையரிடத்துப் புலப்பட ஒழுகாது அவர் புல்லுதலை மறைத்தொழுகுதலாற் காமக்கிழத்தியர்க்குப் பிறக்கும் புலவிக்கண்ணும் அவர்க்குக் கூற்று நிழுமெனவும் பொருள் கூறுக. உதாரணம்:*

கண்டேனின் மாயங் களவாதல் பொய்ந்நகா

*என்னும் மருதக்கலி (90) யுட் காண்க.*

*இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும் - இல்லிடத்திருந்த தலைவனுந் தலைவியும் ஊடியும் உணர்த்தியுஞ் செய்த தொழிலைக் கேட்டு இகழும் இகழ்ச்சிக்கண்ணும்: உதாரணம்:*

[2]கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூர
னெம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் தூங்கு
மாடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே. (குறுந். 8)

---

அவை பெண்டிர் சுழறுப என்ப என மாற்றுக. ஆட்டனத்தி. காண்டிரோ - காண்டீரோ. சிறை - அணை. மறைந்து - உடைத்து. கொண்டு - சூட்கொண்டு (- வஞ்சினங்கூறி). என்னிடத்தே கொண்டு எனினுமாம். கைவலித்தல் - கையால் பற்றிக் கோடல்

1. பெருமிதம் - மேன்மை.
2. மாஅத்து - மாமரத்தினது. விளைந்து - முற்றி (பழுத்து). கதூஉம் - கதுவும் - கவ்வி உண்ணும். ஆடி - கண்ணாடி. பாவை- கண்ணாடியிற்றோன்றும் ஒருவனது உருவச்சாயை. தூக்குதல் - மேலெடுத்தல் (உயர்த்தல்). மேவன - விரும்பியன.

[1]நன்மரங் குழீஇய நனைமுதிர் சாடிப்
பன்னா ளரித்த கோயுடை வைப்பின்
மயங்குழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்
பழம்ப னெல்லின் வேளூர் வாயி
னறுவிரை தெளித்த நாறிணர் மாலை
பொறிவரி யினவண் டூதல கழியு
முயர்பலி பெறூஉ முருகெழு தெய்வம்
புனையிருங் கதுப்பி னீவெய் யோள்வயி
னனையே னாயி னணங்குக வென்னென
மனையோட் டேற்று மகிழ்ந னாயின்
யார்கொல் வாழி தோழி நெருநை
தார்பூண் களிற்றிற் றலைப்புணை தழீஇ
வதுவை யீரணிப் பொலிந்த நம்மொடு
புதுவது வந்த காவிரித்
தோடுதோய் மலிர்நிறை யாடி யோரே (அகம். 166)

*எனவருமிவையும் [2]இளையோர் கூற்று. பிறவும் அன்ன.*

*பல்வேறு புதல்வர்க் கண்டு நனி உவப்பினும் - வெவ் வேறாகிய புதல்வரைத் தாங் கண்டு மிக மகிழ்ச்சி செய்யினும்:*

*'வேறுபல் புதல்வர்' என்றார் முறையாற்கொண்ட மனை வியர் பலரும் உளராதலின்.*

*'ஞாலம் வறந்தீர' என்னும் மருதக்கலி (82) யுள்,*

[3]அடக்கமில் போதின்கட் டந்தைகா முற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்காற் கவளு
மருப்புப்பூண் கையுறை யாக வணிந்து

---

1. மரங்குழீஇய - மரங்களில் குழுமவைத்த நனை - அரும்பு; கள்ளுமாம். மரங் களில் ஒருசேரவைத்த கட்சாடி என்க. பூவரும்புகளிலும் கள்வடிப்பதுண்டு. அரித்த - வடித்த. கோய் - கள் - முகக்கும் பாத்திரம். கோயினது உடைப்பி னால். (துவலையின் -) துவலை போல. (பனிக்கும் -) துளிக்கும் வேளூர் என்க. கள் முதிர மரங்களில் வைத்தல் அக்கால வழக்குப்போலும். மரங்களை வைத்து அதன் மேல் வைத்த எனினுமாம். ஊதலகழியும் - தெய்வத்தினாணை யால் ஊதலவாய்க்கழியும். உரு - அச்சம். நீவெய்யோள் - நின்னால் விரும்பப் பட்டவள். அணங்குக - வருத்துக. தெய்வம் அணங்குக என்று மனையோளைத் தெளித்த என இயைக்க. யார் - எவர். நெருநை - முதனாள். ஈர் அணி - புனலாடற்கணிந்த அணி. வதுவை நம்மொடு - கூட்டத்திற்குறிய நம்மொடு. மலிர் நிறை - வெள்ளப்பெருக்கு. ஆடியோர் யார்? என முடிக்க.

2. இளையோர் - இளமைப்பருவமுடைய பரத்தையர். இளையோள் என்றி ருப்பது நலம்.

3. அடக்கமில்போழ்து - வேண்டியவாறு ஒழுகுங்காலம். காமுற்ற - விரும்பிய. தொடக்கத்துத்தாய் - (தந்தை) பரத்தைமை தொடங்குங் காலத்துள்ளாகிய தாய் மருப்புப்பூண் - இடபஇலச்சினை. கையுறையாக - கைக்கணியாக. நகை -

பெருமா னகைமுகங் காட்டென்பாள் கண்ணீர்
சொரிமுத்தங் காழ்சோர்வ போன்றன.

*இது, முதிர்ந்தாள் உண்ணயந்து கூறியது.*

[1]மற்றும், வழிமுறைத் தாயுழைப் புக்காற் கவளு
மயங்குநோய் தாங்கி மகனெதிர் வந்து
முயங்கினள் முத்தின ணோக்கி நினைந்தே
நினக்கியாம் யாரே மாகுது மென்று
வனப்புறக் கொள்வன நாடி யணிந்தனள். (கலி. 82)

*இதனுள், நோய்தாங்கினளென இளமைப்பருவத்து மகிழ்ச்சியும் முதிர்ந்த பருவத்து மறவியுந் தோன்றக் கூறாமையினானும் வழி முறைத்தா யென்றமையானும் இஃது இடைநிலைப் பருவத்தாள் கூற்று.*

[2]அவட்கினி தாகி விடுத்தனன் போகித்
தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றீதோர்
புலத்தகைப் புத்தேளில் புக்கான் (கலி. 82)

*என்றவழிப் 'புத்தேள்' என்றதுவும் தலைநின்றொழுகும் இளை யோளைக் கூறியது.*

[3]தந்தை யிறைத்தொடீஇ மற்றிவன் றன்கைக்கட்
டந்தா ரியா ரெல்லாஅ விது;
இஃதொன்று (கலி. 84)

*என்றாற்போல அவள் கொடுப்பக் கொள்வனவுங் கொள்க.*

*மறையின் வந்த மனையோள் செய்வினைப் பொறையின்று பெருகிய பருவரற்கண்ணும்: மறையின் வந்த - தலைவற்கு வேறோர் தலைவியொடு களவொழுக்கம் நிகழ்தலின் அவன் செய்திகளின்*

---

சிரிப்பு. காழ் - முத்துவடம். சோர்தல் - அற்றுச்சொரிதல். தொடக்கத்துத்தாய் என்றதனால் முதிர்ந்தாளாயிற்று. பரத்தமை - பரத்தையர்பாற் சென்று ஒழுகுந் தன்மை.

1. மயங்குநோய் - மயங்குதற்குக் காரணமான காமநோய். தாங்கி - பொறுத்து. முயங்கினள் - தழுவினளாய். முத்தினள் - முத்தமிட்டாளாய். இவை முற்றெச்சம். யாரேம் - என்ன முறையேம். கொள்வன - (இவன் வடிவு ) தாங்குவன.

2. விடுத்தனன் - சில மறுமொழி கூறி. தலைக் கொண்டு - தலைமை கொண்டு (பெருமிதங்கொண்டு). காயும் - வெகுளும். புலத்தகை - புலக்குந்தகைமை. புத்தேள் - புதியவள்.

3. இறை - முன்கை. தொடி - வளை. தந்தார் - அணிந்தார். எல்லா - ஏடா.

*வேறுபாட்டால் தமக்குப் புலப்படவந்த, மனையோள் செய்வினை - மனையோளாதற்குரியவள் தமர்பணித்தலில்* **தைந் நீராடலும் ஆறாடலும்** *முதலிய தொழில்களைச் செய்யுமிடத்து, பொறை இன்று பெருகிய பருவரற் கண்ணும் - இவள் தோற்றப்பொலிவால் தலைவன் கடிதின்வரைவனெனக் கருதிப் பொறுத்தலின்றி மிக்க வருத்தத்தின் கண்ணும்: உதாரணம்:*

[1]வாளை வாளிற் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயி லேற்குங்
கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல்வெள் ளாம்ப லுருவ நெறித்தழை
யைதக லல்கு லணிபெறத் தைஇ
விழவிற் செலீஇயர் வேண்டு மன்னோ
யாண ரூரன் காணுந னாயின்
வரையா மையோ வரிதே வரையின்
வரைபோல் யானை வாய்மொழி முடியன்
வரைவேய் புரையு நற்றோ
ளளிய தோழி தொலையுந பலவே. (நற்றிணை. 390)

*இதனுள், விழவிற் செல்கின்ற தலைவியைக்கண்டு காமக் கிழத்தி இவள் தோற்றப்பொலிவோடு புறம்போதரக்காணின் வரைவனெனவும், அதனான் இல்லுறைமகளிர் பலருந் தோள் நெகிழ்பவெனவும் பொறாது கூறியவாறு காண்க.*

*காதல் சோர்விற் கடப்பாட்டு ஆண்மையில் தாய்போல் தழீஇக் கழறி அம்மனைவியைக் காய்வு இன்று அவன்வயிற் பொருத்தற் கண்ணும்: காதல் சோர்வில் - தானுங் காய்தற்குரிய காமக்கிழத்தி தலைவன் தன்மேற் காதலை மறத்தலானும், [2]கடப் பாட்டாண்மையிற் சோர்வில் - அவற்கு இல்லொடு பழகிய தொல்வரற் கிழமையாகிய ஒப்புரவின்மையானும், தாய்போல் தழீஇக் கழறி - தலைவியைச் செவிலிபோல உடன்படுத்திக் கொண்டு தலைவனைக் கழறி, அம் மனைவியைக் காய்வின்று அவன்வயிற் பொருத்தற்கண்ணும் - அத் தலைவியைக் காதலின் றாகித் தலைவனிடத்தே கூட்டுமிடத்தும்:*

---

1. வைகுதுயிலேற்கும் - தங்கிய துயிலைப் பொருந்தாநிற்கும். தங்கிய துயில் - நீண்ட துயில். வெண்ணி - ஓராறு. உருவநெறித்தழை - அழகையுடைய நெறிப்பையுடைய தழை. தைஇ - உடுத்து. காணுநனாயின் - இவ்விள மகளைக் காண்பானாயின். வரைவேய் - மலையிலுள்ள மூங்கில். தோள் தொலையுநபல அளிய என மாற்றிப் பொருள்கொள்க. அளிய - (அவை) இரங்கத்தக்கன.

2. கடப்பாடு - ஒப்புரவு.

*இது, [1]துனிநிகழ்ந்துழித் தலைவனது தலைவளரிளமைக்கு ஒரு துணையாகி முதிர்ந்த காமக்கிழத்தி இங்ஙனம் கூட்டு மென் றார். உதாரணம்:*

[2]வயல்வெள் ளாம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சி
லோய்நடை பக டாரு மூரன்
றொடர்புநீ வெஃகினை யாயி னென்சொற்
கொள்ளன் மாதோ முள்ளெயிற் றோயே,
நீயே, பெருநலத் தையே யவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித்
தண்கமழ் புதுமல ரூதும்
வண்டென மொழிப மகனென் னாரே. (நற்றிணை. 290)

*இதனுள், நீ இளமைச்செவ்வியெல்லாம் நுகர்ந்து புதல்வற் பயந்த [3]பின்னர் உழுதுவிடு பகடு எச்சிலை அயின்றாற்போலப் பிறர் அவனை நுகர்ந்தமை நினக்கு இழுக்கன்றெனவும், அவனோடு கூட்டம் நெடுங்காலம் நிகழ்த்தவேண்டும் நீ அவள் அவனோடு கட்டில்வரை எய்தியிருக்கின்றாளென்று ஊரார் கூறுகின்ற சொல்லை என்னைப்போல வேறுபட்டுக்கொள்ளாதே. கொள் வது நின் இளமைக்கும் எழிற்கும் ஏலாதெனவும், அவனை வண்டென்பதன்றி மகனென்னாராதலின் அவன் கடப்பாட் டாண்மை அதுவென்றுங் கூறினாள்.*

*இனி 'என்சொற், கொள்ளன்மாதோ' (நற். 290) [4]என்பதற்கு என்வார்த்தையைக் கேட்டல் நினக்கு விருப்பமோ? விருப்ப மாகில் யான் கூறுகின்றதனைக் கொள்க.*

[5]ஈண்டுபெருந் தெய்வத் தியாண்டுபல கழிந்தெனப்
பார்த்துறைப் புணரி யலைத்தலிற் புடைகொண்டு
மூத்துவினை போகிய மூரிவா யம்பி
னல்லெருது நடைவளம் வைத்தென வுழவர்

---

1. துனி - உணர்ப்புவயின்வாரா ஊடல். துணையாகிக்கூட்டுமென்றார் என இயைக்க.
2. ஆம்பற்பூ எனக் கூட்டுக. சூடுதரு புதுப்பூ- (கதிரோடு அறுபட்டு) சூட்டோடு களத்திற் கொண்டுவந்து போடப்பட்ட புதிய பூ. மிச்சில் - மிஞ்சியது. தொடர்பு - நீளநிகழ்த்துங்கூட்டம். கொள்ளல் - ஏற்றுக்கொள்வாயாக. பெருநலம் - பெரிய இளமை.
3. பின்னர் நுகர்ந்தமை என இயையும்.
4. என்பதற்கு என்பதற்கு முடிபின்மையின் எனவும் பொருளுரைக்கலாம்' என்னுஞ் சொற்கள் விடப்பட்டிருத்தல் வேண்டும்.
5. தெய்வத்துயாண்டு - தெய்வத்தன்மையையுடையதாகியயாண்டு பார் - கரை. புடைகொண்டு - மோதப்பட்டு. வைத்தென - நீங்கியதாக. அம்பியப்புகை

புல்லுடைக் காவிற் றொழில்விட் டாங்கு
நறுவிரை நன்புகை கொடார் சிறுவீ
ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழன்
முழவுமுதற் பிணிக்குந் துறைவ நன்றும்
விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதிற்
றவறுநற் கறியா யாயி னெம்போன்
ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்
மலர்தீய்ந் தனையர் நின்னயந் தோரே. (நற்றிணை. 315)

*இதனுள் மூத்துவினை போகிய அம்பிபோலப் பருவஞ் சென்ற பிணிக்கப்பட்ட எம்மைப்போலாது இவள் இப்பருவத்தே இனையளாகற் பாலளோ மலர்ந்த செவ்வியான் முறைவீயாய்க் கழியாது இடையே எரிந்து கரிவுற்ற [1]பூவினைப்போலவெனத் தலைவனுக்குக் காமக்கிழத்தி கூறியவாறு காண்க.*

*இன் நகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து பின்னர் வந்த வாயிற்கண்ணும்: இன்நகைப் புதல்வனைத் தழீஇ இழை யணிந்து - கண்டோர்க்கெல்லாம் இன்பத்தைப் பயக்கும் புதல் வனை எடுத்துப் [2]பொலங்கலத்தாற் புனைந்துகொண்டு, பின்னர் வந்த வாயிற் கண்ணும் - பலவாயில்களையும் மறுத்தபின்னர் வாயிலாகக்கொண்டு புகுந்த வாயிலின் கண்ணும்: உதாரணம்:*

[3]என்குறித் தனன்கொல் பாணநின் கேளே
வன்புறை வாயி லாகத் தந்த
பகைவரு நகூஉம் புதல்வனை
நகுவது கண்டு நகூஉ மோரே.

*இதனுள், வன்புறை வாயிலாகிய புதல்வனைக் கண்டு [4]நகு வாரைத் தனக்கு நகுவாரைப்போல நகாநின்றானெனக் காமக்கிழத்தி கூறி வாயில்நேர்ந்தவாறு காண்க. 'பகைவரும் நகூஉம்' எனவே தான் புலக்கத்தகுந்த தலைவியர் புதல்வனென்றாளாயிற்று.*

---

கைகொடார் பிணிக்கும் துறைவ என இயைக்க. அம்பி - தோணி. நன்றும் - பெரிதும். கேண்மை - நட்பு.

1. பூவினைப்போல இனையளாகற்பாலளோ என இயைக்க.
2. பொலங்கலம் - பொன்னாபரணம்.
3. நின்கேள் - நின் நண்பன். என்குறித்தனன்கொல் - யாது கருதினான்கொல் (அதனை அறியேம்). நகூஉம் - நகுவான். ஓர், ஏ அசைகள்.
4. நகுவாரை என்று தன்னைப் படர்க்கையாகக் கூறினாள் எனக் கொள்க.

*மனையோள் ஒத்தலில் தன்னோர் அன்னோர் மிகைபடக் குறித்த கொள்கைக்கண்ணும்: மனையோள் ஒத்தலில் - தானும் உரிமை பூண்டமைபற்றி மனையோளொடு தானும் ஒத்தாளாகக் கருதுதலின், தன்னோர் அன்னோர் மிகைபடக் குறித்த கொள்கைக் கண்ணும் - தன்னை ஒக்கும் ஏனைமகளிரின் தன்னை விசேடமுண் டாகக் குறித்துக்கொண்ட கோட்பாட்டின்கண்ணும்; உதாரணம்:*

[1]புழற்காற் சேம்பின் கொழுமட லகலிலைப்
பாசிப் பரப்பிற் பறழொடும் வதிந்த
வுண்ணாப் பிணவி னுயக்கஞ் சொலிய
நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய்
வாளையொ டுழப்பத் துறைகலுழ்ந் தமையிற்
றெண்கட் டேறன் மாந்திய மகளிர்
நுண்செய லங்குட மிரீஇப் பண்பின்
மகிழ்நன் பரத்தை பாடி யவிழிணர்க்
காஞ்சி நீழற் குரவை யயருந்
தீம்பெரும் பொய்கைத் துறைகே ழூரன்
றேர்தர வந்த நேரிழை மகளி
ரேசுப வென்பவென் னலனே யதுவே
பாக னெடிதுயிர் வாழ்தல் காய்சினக்
கொல்களிற் றியானை நல்கன் மாறே
தாமும் பிறரு முளர்போற் சேறன்
முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்
யானவண் வாரா மாறே வரினே
சுடரொடு திரிதரு நெருஞ்சி போல
வென்னொடு திரியே னாயின் வென்வேன்
மாரி யம்பின் மழைத்தோற் சோழர்
வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
யாரியர் படையி னுடைகவென்
னேரிறை முன்கை வீங்கிய வளையே. **(அகம். 336)**

*இதனுள், 'யானவண் வாரா மாறே' எனத் தான் மனை யோளைப் போல் இல்லுறைதல்கூறி 'யாண்டுச் [2]செல்லிற் சுட*

1. புழற்கால் - உட்டுளைபொருந்திய தண்டு. மடல்அகலிலை - மடலிலுள்ள அகன்ற இலை. இலையுடன் கூடிய பாசிப்பரப்பு என்க. பறழ் - குட்டி. உயக்கம் சொலிய - வருத்தத்தை நீக்குதற்கு. நாள் - விடியற்காலை. வாளை யொடு உழப்ப - வாளை மீனைப்பற்றிப் பொருதலால், கலுழ்தல் - கலங்கல் நுண்செயல் அம்குடம் இரீஇ - நுண்ணிய தொழிலமைந்த அழகிய குடத்தை வைத்துவிட்டு. பரத்தைமை - பரத்தையரைப் புணருந் தன்மை; அயன்மை. மகளிர் ஏசுப ஏன்ப அது நல்கன்மாறுபோலும் என இயைக்க. தூங்கும் - ஆடும். வாராமாறுஏ - வாராமையாலேயே. வரின் நெருஞ்சிபோலத் திரியேனாயின் என் முன்கைவளை உடைக என முடிக்க. சுடரொடு திரிதல் - ஞாயிறு செல் லும்பக்கத்துத் தானும் சேறல். மிளை - காவற்காடு.
2. செல்லில் என்பது செல்லும் என்றிருத்தல் நலம்.

*ரொடு திரியும் நெருஞ்சிபோல' என மகளிரை யான் செல்வுழிச் செல்லுஞ் சேடியர்போலத் திரியும்படி பண்ணிக்கொள்வலெனக் கூறியவாறு காண்க.*

*எண்ணிய [1]பண்ணை - தலைவற்குத் தகுமென்று ஆய்ந்த யாறுங் குளனும் காவும் ஆடிப் பதியிகந்து நுகர்வனபோல் வனவற்றுக்கண் தாமும் விளையாடுதற்கண்ணும்: உதாரணம்:*

[2]கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி
யாமஃ தயர்கஞ் சேறுந் தானஃ
தஞ்சுவ துடைய ளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடு காக்கதன் கொழுநன் மார்பே. (குறுந். 80)

*இதனுள் 'யாமஃதயர்கஞ்சேறும்' என விளையாட்டுக் கூறினாள்.*

*என்றிவற்றொடு பிறவும் - இக்கூறியவற்றின் கண்ணும், புதல் வற்கண்டு நனியுவப்பினும் கூற்று நிகழுமென்று கூறப்பட்ட இவ் வெட்டோடே பிறகூற்றுக்களும், கண்ணிய காமக்கிழத்தியர் மேன - இக் கருதப்பட்ட காமக்கிழத்தியரிடத்தன என்றவாறு.*

*கூற்றென்பது [3]அதிகாரத்தான் வருவிக்க, ஒடுவென்றது, உருபை; கண்ணுதல் - ஒருமனைத் தெருவின்கண் உரிமைபூண்டு இல்லற நிகழ்த்துவரென்று சிறப்புக்கருதுதல். 'பிறவும்' என்றதனால் தலைவனை என்னலந் தாவெனத் தொடுத்துக் கூறுவனவும், நின் பரத்தைமையெல்லாம் நின் தலைவிக்கு உரைப்பலெனக் கூறு வனவும், சேரிப்பரத்தையரொடு புலந்துரைப்பனவும், தலைவி கூற்றோடொத்து வருவனவும் பிறவாறு வருவனவுங் கொள்க.*

[4]தொடுத்தென மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூ ணன்னன் புன்னாடு கடிந்தென

---

1. பண்ணை - விளையாட்டு.

2. முழுநெறி - புறவிதழொடியாத முழுப்பூ, அடைச்சி - செருகி. பெரும்புனல் - வெள்ளநீர். அஃது - அவ்விளையாட்டு. அயர்தல் - செய்தல். நுகம்பட - நடுநிலையுண்டாக; வலியுண்டாக எனினுமாம். எழினி நிரையைக்காத்த வாறுபோல மார்பு காக்க என முடிக்க.

3. அதிகாரம் - முற்சூத்திரங்களிற் கூற்றுக் கூறிய அதிகாரம்.

4. தொடுத்து என்? - யான் பலதொடுத்துச் சொல்லியாவதென்? இனி, தொடுத் தென் - பற்றினேன் என்பாருமுளர். மகிழ்ந - கணவ. செல்லல்-செல்லாதேகொள்.

யாழிசை மறுகிற் பாழி யாங்க
ணஞ்ச லென்ற வாஅ யெயின
னிகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது
தெறலருங் கடவுண் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்
தார்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்பநின்
மார்புதரு கல்லாய் பிறனா யினையே
யினியான் விடுக்குவெ னல்லென மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந் துறையக்
கடுந்திற லத்தி யாடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின்
மனையோள் வௌவலு மஞ்சுவல் சினைஇ
யாரிய ரலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னவென் னலந்தந்து சென்மே. (அகம். 396)

*இது, காமக்கிழத்தி என்னலந்தாவென்றது.*

[1]உள்ளுதொறு நகுவ றோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
றேங்கம ழைம்பால் பற்றி யெம்வயின்
வான்கோ லெல்வளை வௌவிய பூசற்
சினவிய முகத்தஞ் சினவாது சென்றுநின்
மனையோட் குரைப்ப லென்றலின் முனையூர்ப்
பல்லா நெடுநெறி வில்லி னொய்யுந்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணி னதிரு
நன்ன ராள னடுங்கஞர் நிலையே. (நற்றிணை. 100)

*இது, மனையோட்கு உரைப்பலென்றலின் நடுங்கினானென்றது.*

---

இனி யான் விடுக்குவனல்லன் என் நலந்தந்துசெல் என இயைக்க. நன்னன் - ஒரு சிற்றரசன். கடிந்தென - கடிந்தானாக. ஆஅய்எயினன் - ஒரு சிற்றரசன். சொல்லியதமையாது உயிர்கொடுத்தனன் என மாற்றிக்கூட்டுக. கற்பு - கல்வி; பயிற்சியுமாம். மந்தி - ஆதிமந்தி. அத்தி - ஆட்டனத்தி. ஆடுஅணிநசைஇ - நீர்விளையாட்டணியை விரும்புதலால். வடவரை விற்பொறித்தோன் - சேரன்.

1. உள்ளுதொறும் - நினைக்குந்தோறும். அலகு - மூக்கு. அன்ன ஆம்பற்பூ என்க. ஆம்பல் - ஆகுபெயர். வௌவியபூசல் - கழற்றுதலாலுண்டான பூசல். பூசல் - கலாம். பூசலாலே சினவிய என்க. ஒய்யும் - செலுத்தும். மண்ணார் - மார்ச்சனையமைந்த. நடுங்கியநிலையை உள்ளுதொறும் நகுவேன் என மேலே கூட்டுக.

*'கண்டேனின் மாயம்'* என்னும் மருதக்கலி *(90)* யுள்,

[1]ஆராக் கவவி னொருத்திவந் தல்கற்றன்
சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
போரார் கதவ மிதித்த தமையுமோ
வாயிழை யார்க்கு மொலிகேளா வவ்வெதிர்
தாழா தெழுந்துநீ சென்ற தமையுமோ
மாறாள் சினைஇ யவளாங்கே நின்மார்பி
னாறிணர்ப் பைந்தார் பறிந்த தமையுமோ
தேறிநீ தீயே னலேனென்று மற்றவள்
சீறடி தோயா விறுத்த தமையுமோ

*எனச் சேரிப் பரத்தையராற் புலந்து தலைவனோடு கூறியவாறு காண்க.* இன்னும் இதனானே,

[2]நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
னடியறி வுறுத லஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
சாஅ யொதுங்குந் துறைகே ழூரனோ
டொல்கா தாக வினிநா ணுண்டோ
வருகதி லம்மவெஞ் சேரி சேர
வரிவே யுண்கணவன் பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி யாரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயி னார்வுற்
றிரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயா யோம்பிய நலனே. (அகம். 276)

---

1. ஆராக்கவவு - நிறைவுபெறாத முயக்கம். அல்கல் - தங்கல். போரார் - (பலகை) பொருத. மிதித்தது - பாய்ந்தது; உதைத்தது. சினம் மாறாளாய் மீளவுங் கோபித்துப் பறித்தது என இயைக்க. காய்தல் - கோபித்தல்.

2. பொய்கை - தடாகம் (குளம்) இரைவேட்டெழுந்தவாளை வெண்போத்தை உண்ணும்படி நாரைதான் அடிபெயர்த்து வைக்கும் ஒலியைக்கேட்கின் அஃதுஓடிவிடும் என்றஞ்சிப் பைப்பயசாஅய் ஒதுங்குந் துறை என இயைக்க சாஅய் - தளர்ந்து. ஒதுங்கும் - நடக்கும். கடி இல்லம் - காவல்பொருந்திய மனை. அவன் வருக என வருவித்துரைக்க. அவனை அவன் பெண்டிர்காணப் பற்றிப் பிணித்து மார்பைக் கடிகொள்ளேனாயின் (-சிறைசெய்யோனாயின்) என் நலன் பரந்து வெளிப்படாதாகி வருந்துக என் முடிக்க. தானை - ஆடை. மார்புவஸ்திரமுமாம். ஆரியர்பிடி - ஆரியர் பழக்கிவைத்த பிடி. பிடி பயின்று தருங் களிறு என்க. களிற்றைக் கந்திற் பிணித்து கடிகொள்ளுதல்போல என உவமையை விரித்துரைத்துக்கொள்க. ஆய் - செவிலித்தாய். நலன் - அழகு.

*இதனுட் பரந்து வெளிப்பட்டதாகி வருந்துக என்னலம் என்றமையிற் சேரிப்பரத்தையைப் புலந்துகூறுதன் முதலியனவுங் கொள்க. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக. (10)*

**(அகநகர்க்கட் புகுதற்குரிய வாயில்கள் கூற்று இவை எனல்)**

152. கற்புங் காமமு நற்பா லொழுக்கமு
மெல்லியற் பொறையு நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருலுஞ் சுற்ற மோம்பலும்
பிறவு மன்ன கிழவோள் மாண்புகண்
முகம்புகன் முறைமையிற் கிழவோற் குரைத்த
லகம்புகன் மரபின் வாயில்கட் குரிய.

*இது, விருந்து முதலிய வாயில்கள்போலாது [1]அகநகர்க்கட் புகுதற்குரிய வாயில்கள் கூற்று உணர்த்துகின்றது.*

*இ — ள்: கற்பும் - கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கமும், காமமும் - அன்பும், நற்பால் ஒழுக்கமும் - எவ்வாற்றானுந் தன் குலத்திற்கு ஏற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கமும், மெல் இயற் பொறையும் - வல்லென்ற நெஞ்சொடு பொறுக்கும் [2]அவனைப்போலாது ஒரு தலையாக மெல்லென்ற நெஞ்சினராய்ப் பொறுக்கும் பொறையும், நிறையும் - மறை புலப்படாமை நிறுக்கும் நெஞ்சுடைமையும், வல்லிதின் விருந்து புறந்தருதலும் - வறுமையுஞ் செல்வமுங் குறியாது வல்லவாற்றான்*

---

1. அகநகர் - உள்நகர்; என்றது தலைவியிருக்கும் அந்தப்புரத்தை அவ்வாயில் களாவன: அறிவர், பார்ப்பார், தோழி, விறலி, பாணன் முதலியோர்.

2. அவனை - தலைவனை. தலைவன் என்னுமொழி பின்வரலின் அவனை என்று சுட்டியொழிந்தார் இவ்வாறு உரையினும் சுட்டு முன்வர எழுதுவது நச்சினார்க்கினியர் வழக்கு. அதனை இச்சூத்திர உரையில் அவன் முகம் புகுதுமுறைமை என வருமுரையானும் புறத்திணையியல் 76-ஞ் சூத்திரத்து வரும் 'பெரும்பகைதாங்கும் வேலினானும்' என்பதனுரையானும், கற்பியல் 146-ஞ் சூத்ததிரத்துவரும் 'பேரிசையூர்திப் பாகர்பாங்கினும்' என்பதன் விசேடவுரையானும், அகத்திணையியல் 27-ஞ் சூத்திர உரையானும் அறிந்து கொள்க. S. கனகசபாபதிப் பிள்ளை பதிப்பில் மாத்திரம் அவனை என்பது ஆனை என்று காணப்படுகின்றது. ஆனைக்கும் தலைவிக்கும் ஓரியைபு ஆண்டுக்காணப்படாமையின், அப்பாடம் பொருந்துமோ என்பது ஆராயத் தக்கது. காதல் முதலியவற்றைத் தலைவி மெலிதாகப் பொறுத்து (அடக்கி)க் கொள்வாள். தலைவன் வலிதாகப் பொறுத்து (அடக்கி)க் கொள்வான் என்பது இவ்வுரைக் கருத்து.

விருந்தினரைப் பாதுகாத்து அவர் மனமகிழ்வித்தலும், சுற்றம் ஓம்பலும் - கொண்டோன் புரக்கும் நண்புடை மாந்தருஞ் சுற்றத் தாருங் குஞ்சர முதலிய காலேசங்களும் பலபடை மாக்களும் உள்ளிட்ட சுற்றங்களைப் பாதுகாத்து அவை உண்டபின் உண் டலும், அன்னபிறவும் கிழவோள் மாண்புகள் - அவைபோல்வன பிறவுமாகிய தலைவியுடைய மாட்சிமைகளை, முகம் புகன் முறைமையிற் கிழவோற்கு உரைத்தல் - அவள் [1]முகம் புகுதும் முறைமை காரணத்தால் தலைவற்குக் கூறுதல், அகம் புகன் மரபின் வாயில்கட்கு உரிய - அகநகர்க்கட்கு புகுந்து பழகி அறிதன் முறைமையினையுடைய வாயில்களுக்குரிய என்றவாறு.

அன்னபிறவாவன:- அடிசிற்றொழிலும், குடிநீர்மைக்கேற்ற வகையான் தலைமகள் ஒழிந்த தலைமகளிரையும் மனமகிழ்வு றுத்தலும், காமக்கிழத்தியர் நண்புசெய்து நன்கு மதிக்கப்படு தலும் போல்வன. புகலுதல் - மகிழ்தல். செவிலி கூறாமை கொள்க; அவட்கு முகம் புகன் முறைமையின்மையின். உதாரணம்:

[2]கடல்பா டவிந்து தோணி நீங்கி
நெடுநீ ரிருங்கழிக் கடுமீன் கலிப்பினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினு
மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப்
பகலு நம்வயி னகலா னாகிப்
பயின்றுவரு மன்னே பனிநீர்ச் சேர்ப்ப
னினியே, மணப்பருங் காமந் தணப்ப நீங்கி
வாரா தோர்நமக் கியாஅரென் னாது
மல்லன் மூதூர் மறையினை சென்று
சொல்லி னெவனோ பாண வெல்லி
மனைசேர் பெண்ணை மடல்வா யன்றி
றுணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்
கண்ணிறை நீர்கொண்டு கரக்கு
மொண்ணுத லரிவையா னென்செய்ய கோ வெனவே. (அகம். 50)

---

1. முகம்புகுதல் - (தாஞ்சொல்வதை) முகங்கொடுத்துக் கேட்டல் (விரும்பிக் கேட்டல்). புகலுதல் எனின் மகிழ்தல் என்றாம்.

2. பாடு - ஒலி. நீங்கி - போதலொழிந்து. கலித்தல் - செருக்கித் திரிதல். கௌவை - அலர். பாணிநிற்ப - தாமதித்துநிற்ப. அகலானாகி - பிரியானாகி. பயின்று - பழகி. மணப்புஅருங்காமம் தணப்ப - (களவுக்காலத்து) கூடுதற்கரிய வேட்கை ஒழிய. யாரென்னாது - என்ன உறவினரென்று கருதாது. மறையினை சென்று - மறைந்தாயாய்ச்சென்று. எல்லி - இரா (இரவில்). பெண்ணை - பனை. கரக் கும் - தன்னாற்றாமையை மறைக்கும். அரிவை - தலைவி. அரிவை கரக்கும்; இதற்கு யான் என்செய்கோ எனச் சென்று செப்பின் எவனோ எனக்கூட்டி முடிக்க. எவன் - என்ன தவறாம்.

*இதனுட் காமமிகுதியாற் கண் தாமே அழவும், கற்பிற் சுரக்கு மெனத் தலைவி பொறையும் நிறையுந் தோழி பாணற்குக் கூறி னாள், அவன் தலைவற்கு இவ்வாறே கூறுவனெனக் கருதி. [1]'இனி' என்றதனாற் கற்பும் பெற்றாம்.*

*தலைவற்குக் கூறுவன வந்துழிக் காண்க.*

*'வாயி லுசாவே தம்முளு முரிய' (512) என்பதனால் தலைவற்கு உரையாமல் தம்முட்டாமே உசாவுவனவும் ஈண்டே கொள்க.*

[2]அணிநிற வெருமை யாடிய வள்ளன்
மணிநிற நெய்த லாம்பலொடு கலிக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வூரன் பாயலின் றுணையே. **(ஐங்குறு. 96)**

*இது, கற்புக் கூறியது.*

*'முளிதயிர் பிசைந்த' (குறுந். 167) என்பது அடிசிற்றொழிலின் கண் மகிழ்ச்சி வாயில்கள் தம்முட் கூறியது.*

[3]கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
பழமை பயனோக்கிக் கொல்லோ – கிழமை
குடிநாய்கர் தாம்பல பெற்றாரிற் கேளா
வடிநாயேன் பெற்ற வருள். **(திணை: நூற். 134)**

*பல வாயில்களை மறுத்த தலைவி தனக்கு வாயில் நேர்ந்தமை தோழிக்கு விறலி கூறியது.* *(11)*

### *(செவிலி கூற்று இவை எனல்)*

**153.** கழிவினும் வரவினு நிகழ்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலு மல்லவை கடிதலுஞ்
செவிலிக் குரிய வாகு மென்ப.

*இது, செவிலிகூற்று உணர்த்துகின்றது.*

***இ – ள்:*** *கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள - மூன்று காலத்துந் தத்தங் குலத்திற்கு ஏற்கும்படியாக, நல்லவை உரைத்*

1. இனி என்பது பாட்டில் வந்த சொல். இனி - இப்பொழுது.
2. ஆடிய - உழக்கிய. அள்ளல் - சேறு. கலிக்கும் - தழைக்கும். பாயல் - படுக்கை. இன்துணை - இனியதுணையாம்.
3. பெற்றாரின் - பெற்றவரைப்போல பெற்றாரிற்பெற்ற அருள், உரிமை கேடில்லாமையாலோ? பழமையின் பயனோக்கியோ (அறியேன்) என இயைக்க. கேள் - கேளாக (உறவாக). கிழமை - உரிமை.

தலும் - முற்கூறிய கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும், அல்லவை கடிதலும் - காம நுகர்ந்த இன்பமாகிய கற்பிற்குத் தீய வற்றைக் கடிதலும், செவிலிக்கு உரியவாகும் என்ப - செவிலித் தாய்க்கு உரிய வாகுமென்று கூறுவர் புலவர் என்றவாறு. உதாரணம்:

[1]கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூரா ணியல்பினா – ளுட்கி
யிடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதராள் பெண். (நாலடி. 384)

கட்கினியாள், இது காமம்; வகைபுனைவாள், இது கற்பு; உட்குடையாள், இஃது ஒழுக்கம்; ஊராண்மை, இது சுற்ற மோம்பல்; ஊடியுணர்தல், அல்லவை கடிதல்.

நாலாறு மாறாய் நனிசிறிதா யெப்புறனு
மேலாறு மேலுரை சோரினு – மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழு மாண்கற்பி
னில்லா ளமர்ந்ததே யில் (நாலடி. 383)

என்னும் வெண்பா விருந்துபுறந்தருதல் கூறியதுமாம்.

இனி 'ஆகும்' என்றதனானே செவிலி நற்றாய்க்கு உவந் துரைப்பனவுங் கொள்க.

[2]கானங் கோழிக் கவர்குரற் சேவ
லொண்பொறி யெருத்திற் றண்சித ருறைப்பப்
புதனீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூ ரோளே மடந்தை வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செல்லினுஞ்
சேந்துவர லறியாது செம்ம றேரே. (குறுந். 242)

[3]மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வ னடுவண னாக நன்று
மினிது மன்றவவர் கிடக்கை முனிவின்றி
நீனிற வியலகங் கவைஇய
வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே. (ஐங்குறுந். 401)

1. கட்கினியாள் - கண்ணுக்கினிய உருவமுடையவள். காதல் வகைபுனைவாள் - காதற்படி தன்னை அணிவாள். உட்கு - அச்சம். ஊராண் இயல்பு - உபகார இயல்பு. இனிதினுணரும் - இன்பமுண்டாக ஊடல் தீரும்.

2. பொறி - புள்ளி. எருத்தில் - கழுத்தினிடத்து. சிதர் - துளி. உறைப்ப - துளிப்ப.

3. மறி - குட்டி. இடைப்படுத்த - நடுவிலே படுத்த. மான்பிணை - மானும் பிணையும். பிணை - பெண்மான். நன்றும் - பெரிதும். கிடக்கை இனிது என்க. கிடக்கை - படுக்கை. கவைஇய - சூழ்ந்த. ஈன் - இப்பூமி. உம்பர் - மேலுலகம்.

[1]வாணுத லரிவை மகன்முலை யூட்டத்
தானவள் சிறுபுறங் கவையின னன்று
நறும்பூந் தண்புற வணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே. (ஐங்குறு. 404)

*இவை உவந்து கூறியன.*

[2]பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோ
லுண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்
றரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரிமெலிந் தொழியப் பந்த ரோடி
யேவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
யறிவு மொழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தாதை கொழுஞ்சோ றுள்ளா
ளொழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துண்ணுஞ் சிறுமது கையளே. (நற். 110)

*இது, மனையறங்கண்டு மருண்டு உவந்து கூறியது.*

[3]அடிசிற் கினியாளை யன்புடை யாளைப்
படுசொற் பழிநாணு வாளை – யடிவருடிப்
பின்றூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தா
லென்றூங்குங் கண்க ளெனக்கு

*என்னும் பாட்டுச் செவிலி கூற்றன்றாயினுந் தலைவன் மனை யறங்கண்டு கூறியதன்பாற்படுமெனக் கொள்க.* *(12)*

### *(அறிவர்க்குரிய கூற்று இவை எனல்)*

**154.** சொல்லிய கிளவி யறிவர்க்கு முரிய.

*இஃது அறிவரது கூற்றுக் கூறுகின்றது.*

**இ — ள்:** *முற்கூறிய நல்லவையுணர்த்தலும் அல்லவை கடிதலு மாகிய கிளவி செவிலிக்கேயன்றி அறிவர்க்குமுரிய என்றவாறு.*

---

1. மகன்முலையூட்ட - மகனுக்கு முலையூட்ட. சிறுபுறம் கவையினன் - பிடரைத் தழுவிச்சூழ்ந்தான். புறவு - காடு. பொறைய - பொறைக் கற்களையுடைய.
2. பிரசம் - தேன். புடைப்பிற்சுற்றும் - புடைப்பாகச்சுற்றிய. ஓக்குபு - ஓச்சி. தத்துற்று - பாய்ந்து, ஓடி, மறுக்கும் சிறுவிளையாட்டி என இயைக்க. பரி - பரிந்து. பொழுது மறுத்து உண்ணும் - ஒருபொழுதின்றி ஒருபொழுதுண்டிருக்கும். மதுகை - வலி.
3. அடிசில் - உணவு. படுசொற்பழி - உண்டாகுஞ்சொற்பழி. உணர்தல் - துயிலொழிதல்.

*என்றது, அறியாத தலைவியிடத்துச் சென்று அறிந்தார் முன்னுள்ளோர் அறம் பொரு ளின்பங்களாற் கூறிய [1]புறப்புறச் செய்யுட்களைக் கூறிக் காட்டுவரென்பதாம். உதாரணம்:*

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. (குறள். 55)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (குறள். 56)

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. (குறள். 51)

*இவை நல்லவை உணர்த்தல்.*

[2]எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
'பட்டிற் புகாதா ளரும்பிணி – யட்டதனை
யுண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை. (நாலடி. 363)

[3]தலைமகளிற் றீர்ந்தொழுகல் தான்பிறரிற் சேற
னிலைமையி றீப்பெண்டிர்ச் சார்தல் – கலனணிந்து
வேற்றூர் புகுதல் விழாக்காண்ட னோன்பெடுத்தல்
கோற்றொடியார் கோளழியு மாறு. (அறநெறி. 94)

*இவை அல்லவை கடிதல். இவை அறிவர் கூற்றாதலிற் புறப்புறப் பொருளாயிற்றென உணர்ந்துகொள்க. (13)*

### (*அறிவர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி*)

**155.** இடித்துவரை நிறுத்தலு மவர தாகுங்
கிழவனுங் கிழத்தியு மவர்வரை நிற்றலின்.

*இஃது அறிவர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.*

*இ – ள்: கிழவனுங் கிழத்தியும் அவர்வரை நிற்றலின் - தலைவனுந் தலைவியும் அவ்வறிவரது ஏவலைச்செய்து நிற்பராதலின், இடித்துவரை நிறுத்தலும் அவரது ஆகும் - அவரைக் கழறி ஓரெல்லையிலே நிறுத்தலும் அவ்வறிவரது தொழிலாகும் என்றவாறு.*

---

1. புறப்புறச்செய்யுள் என்றது, புறப்பொருட்செய்யுளல்லாதவற்றை. அஃதாவன; முன்னுள்ளோர் கூறிய நீதிவாக்கியங்களமைந்த செய்யுட்களை.

2. எறி - அடி, சிறுகாலை - உதயம். அட்டில் - அடப்படும் வீடு.

3. தலைமகனிற்றீர்ந்து - கணவனினின்றும்நீங்கி. பிறரில் - பிறர்வீடு. நிலைமையில் - மனம்ஒருப்படாத. நோன்பு - விரதம். கோள் - கொள்கை (கற்பு).

அஃது, உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவிமாட்டு ஊடினானையும் உணர்ப்புவயின் வாராது ஊடினானையுங் கழறுப.

[1]உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே யிஃதோ
வோரான் வல்சிச் சீறில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகன் வந்தென
வினிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே. (குறுந். 295)

இது, தலைவனைக் கழறியது.

[2]மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில். (குறள். 52)

இது, தலைவியைக் கழறியது. (14)

**(தலைவற்குப் புலவியு மூடலு நிகழுமிடம் இவை எனல்)**

**156.** உணர்ப்புவரை யிறப்பினுஞ் செய்குறி பிழைப்பினும்
புலத்தலு மூடலுங் கிழவோற் குரிய.

இது, தலைவற்குப் புலவியும் ஊடலும் நிகழுமிடங் கூறுகின்றது.

இ — ள்: உணர்ப்புவரை இறப்பினும் - கற்பிடத்துத் தலைவி ஊடியவழி அவன் தேற்றத் தேறுமெல்லை இகந்தனளாயினும், செய்குறி பிழைப்பினும் - களவின்கட் டலைவிசெய்த குறியைத் தானே தப்பினும், புலத்தலும் ஊடலுங் கிழவோற்கு உரிய - உள்ளஞ் சிறிது வேறுபடுதலும் அவ்வேறுபாடு மிக்கு நீடுநின்று தேற்றியக்கால் அது நீங்குதலும் தலைவற்குரிய என்றவாறு.

எனவே, கற்பிற்கும் களவிற்கும் புலத்தலும் ஊடலு முரிய வென்றார். புலவியும் ஊடலுங் கற்பிற்கே பெரும்பான்மை நிகழ்தலிற் கற்பிற்கு அவை உரிய [3]வென்கின்றார், அவை களவிற்குஞ் சிறுபான்மை உரிமைபற்றிச் சேரக் கூறினார், சூத்திரச் சுருக்கம் நோக்கி.

---

1. தழையணிப்பொலிந்த - தழையை அணிதலாற் பொலிந்த. விழவு - நீர்விழாச் செய்ததனாலாய அடையாளம். ஓரான்வல்சி - ஓராவால் நிகழ்த்திய உணவு. சீறில்வாழ்க்கை - சிறிய இல்லின் வாழ்க்கை. சீரில்வாழ்க்கை எனவும் பாடம். ஊர், வாழ்க்கை வந்தென விழவாயிற்று என்னும் என்க.

2. மனை - இல்லறம். மாட்சி - நற்குணநற்செயல்கள். எனை - எத்துணை. இல் - (மாட்சி) இல்லை (உடையதன்று).

3. என்கின்றார் - வினைப்பெயர்; என்கின்றவர் என்பது கருத்து,

[1]எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர். (குறுந். 19)

இது, கற்பிற் புலந்தது.

[2]தீதிலே மென்று தெளிப்பவுங் கைந்நீவி
யாதொன்று மெங்கண் மறுத்தர வில்லாயின் (கலி. 81)

என்பது ஊடல். பிறவிடத்தும் ஊடுதலறிந்துகொள்க.

[3]கலந்தநோய் கைம்மிகக் கண்படா வென்வயிற்
புலந்தாயு நீயாகிற் பொய்யானே வெல்குவை (கலி. 46)

என்பது குறி பிழைத்துழிப் புலந்தது.

குணகடற் றிரையது பறைதபு நாரை (குறுந். 128)

என்பதனுள், நாரை தெய்வங் காக்கும் அயிரை இரையை வேட்டாற்போல் நமக்கு அரியளாயினாளை நீ வேட்டாயென்பதனாற் குறி பிழைத்துழி ஊடினமை கூறிற்று. பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்ந்துகொள்க. (15)

**(தலைவன் புலக்குமிடத்துத் தோழிகூற்று நிகழ்த்துமெனல்)**

157. புலத்தலு மூடலு மாகிய விடத்துஞ்
சொலத்தகு கிளவி தோழிக் குரிய

இது, முன்னர்த் தலைவன் புலக்குமென்றார், அவ்விடத்துந் தோழியே கூற்று நிகழ்த்துதற்கு உரியளென்கிறது.

இ — ள்: புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும் - தலைவன் தலைவியையும் தோழியையும் அச்சுறுத்தற்குச் செய்கையாகச் செய்து கொண்டு புலத்தலும் அது நீட்டித்து ஊடலும் உடன் நிகழ்த்திய வழியும், சொலத்தகு கிளவி தோழிக்கு உரிய - சொல்லத்தகும் பணிமொழி தோழிக்கு உரிய என்றவாறு.

எனவே, தலைவி குறிப்பறிந்து தோழி கூறுதலன்றித் தலைவி தானே கூறப்பெறாளென்றவாறு. எனவே [4]**பாடாண்டிணைக் கைக்கிளையாயின்** தலைவி கூறவும்பெறுமென்று கொள்க. உம்மை, சிறப்பும்மை.

---

1. எவ்வி - ஒருவள்ளல்.
2. தெளித்தல் - சூளுறல். கைந்நீவி - கைகடந்து. மறுத்தரவில்லாயின் - (துனித்த நிலைமை) மீட்சியில்லையாயின். இது தலைவன தூடல்.
3. (இவளைக்) கலந்த - கூடிய. கைம்மிக - (இவள்) ஒழுக்கத்தை மிகுக்கையினாலே. கண்படா - (அதுகண்டு) துயிலாத இது தோழிகூற்று.
4. பாடாண்டிணைக்கைக்கிளை புறப்பொருட்குரியது.

*உதாரணம்:*

[1]தாயுயிர் வேண்டாக் கூருகி ரலவ
னரிதின்று பரிக்கு மூர யாவது
மன்புமுத லுறுத்த காத
லின்றெவன் பெற்றனை பைந்தொடி திறத்தே.

[2]அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். (குறள். 1303)

*இவை கற்பில் தலைவி குறிப்பினால் தோழிகூற்று வந்தன.*

புலந்தாயு நீயாகிற் பொய்யானே வெல்குவை. (கலி. 46)

*என்று களவில் தோழி கூறினாள், தலைவி குறிப்பினால்.*

[3]கனைபெய னடுநாள்யான் கண்மாறக் குறிபெறாஅன்
புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப
துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்
னளிநசைஇ யார்வுற்ற வன்பினேன் யானாக (கலி. 46)

*எனத் தோழி சொல்லெடுப்புதற்குத் தலைவி சிறுபான்மை கூறு தலும் ஈண்டு 'உரிய' என்றதனாற் கொள்க.*

[4]யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
றானூட யானுணர்த்தத் தானுணரான் – றேனூறுங்
கொய்தார் வழுதிக் குளிர்சாந் தணியகல
மெய்தா திராக்கழிந்த வாறு. (முத்தொள்ளாயிரம். 104)

*இதனுள், யானுணர்த்தத் தானுணரானெனப் பாடாண் டிணைக் கைக்கிளையுட் டலைவி கூறியது காண்க.* *(16)*

---

1. வேண்டா - விரும்பாத (கேளாத). அலவன் - நண்டு. நரிதின்று பரிக்கும் - நரிதின்று உயிர்பரிக்கும் (தாங்கும்). காதல் திறத்து எவன்பெற்றனை - காதலைத் திறத்து எவ்வாறு பெற்றாய். யாவதும் - சிறிதாயினும்.

2. அலந்தாரை - துன்பமுற்றாரை. அல்லல்நோய் - அல்லலாகிய நோய் (மிக்க துன்பம்). செய்தற்று - செய்தாற்போலும். புலந்தார் - ஊடினார். புல்லல் - தழுவல்.

3. கனைபெயல்நடுநாள் - மிக்க மழையையுடைய இடையாமம். கண்மாற - இடமாற. மிசைபாடும்புள் - வானம்பாடி. அளிஅருள். நசைஇ - விரும்பி ஆர்வுற்ற - நிறைவுற்ற. தான் என்றது தலைவனை. என்ப - அசைநிலை.

4. உணர்த்தல் - தெளிவித்தல். வழுதி அகலம் எய்தாது என இயைக்க. எய்தாது - கூடப்பெறாது.

(தோழி இடித்துக்கூறற்கு முரியளெனல்)

158. பரத்தைமை மறுத்தல் வேண்டியுங் கிழத்தி
மடத்தகு கிழமை யுடைமை யானு
மன்பிலை கொடியை யென்றலு முரியள்.

*இது, சொல்லத்தகுங் கிளவியேயன்றிச் சொல்லத்தகாக் கிளவி யுந் தோழி கூறுமென எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துகின்றது.*

*இ — ள்: பரத்தைமை மறுத்தல் வேண்டியும் - தலைவன் படிற்றுள்ளத்தாற் புறத்து ஒழுகும் ஒழுக்கத்தைப் போக்குதல் விரும்பியும், கிழத்தி, மடத்தகு கிழமை உடைமையானும் - தலைவி அவன் பரத்தைமை அறிந்தேயும் அவன் கூறியவற்றை மெய்யெனக் கொண்டு சீற்றங்கொள்ளாது ஒழுகும் மடனென்னுங் குணத்திற்கு ஏற்றன அறிந்தொழுகும் உரிமையுடையளாகிய எண்மையானும், அன்பிலை கொடியை யென்றலு முரியள் - தலைவனை அன்பிலை யென்றலுங் கொடியையென்றலுமுரியள் தோழி என்றவாறு.*

*கொடுமை கடையாயினார் குணம். களவினுள் தன்வயி னுரிமையும் அவன்வயிற் பரத்தைமையுங் கோடலின் இதற்குப் பரத்தைமை மறுத்தல் கொள்க. உதாரணம்:*

[1]கண்டவ ரில்லென வுலகத்து ளுணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளு
ணெஞ்சறிந்த கொடியவை மறைப்பினு மறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின்
வண்பரி நவின்ற வயமான் செல்வ
நன்கதை யறியினு நயனில்லா நாட்டத்தா
லன்பிலை யெனவந்து கழறுவ லையகேள்;
மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூ ழிளமுலை
முகிழ்செய முள்கிய தொடர்பவ ளுண்க
ணவிழ்பனி யுறைப்பவு நல்காது விடுவா
யிமிழ்திரைக் கொண்க கொடியை காணீ;
இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்தழப் புல்லாது விடுவா
யிலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காணீ;

1. தங்காது - இதுசெய்யலாகாதென்று மீளாது. தகைவின்றி - தடுப்பாருமின்றி. அறிபவர் - தாஞ்செய்தமையை அறிந்திருக்கின்றவர்கள். கரி - சான்று. அதை - கழறவேண்டாமையை. நாட்டத்தால் - ஆராய்ச்சியால்; அறியினுங் கழறுவல் என ஒட்டுக. முள்கிய - கூடிய. தொடர்பு - தொடர்பினை. தொடர் பினை விடுவாய் என இயைக்க. தைஇ - உடுத்து. செல - வளர்ந்துசெல்ல. சாஅய் - மெலிந்து. இறைவரை - இறையினெல்லை. இறை - முன்கை. மறையச்செல்லும் - ஒருகாலமும் வராமல் மறையும்படி போம்.

............... .................... ............ ......... ..............
எனவாங், கனையளென் றளிமதி பெரும நின்னின்
றிறைவரை நில்லா வளைய ளிவட்கினிப்
பிறையோர் சுடர்நுதற் பசலை
மறையச் செல்லுநீ மணந்தனை விடினே (கலி. 125)

என்னும் நெய்தற்கலி [1]கைகோள் இரண்டிற்குங் கொள்க. (17)

(தலைவி தலைவனொடு அயன்மைகூறவும் பெறுவளெனல்)

159. அவன்குறிப் பறிதல் வேண்டியுங் கிழவி
யகன்மலி யூட லகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.

இது தலைவிக்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துகின்றது.

இ – ள்: அவன் குறிப்பு அறிதல்வேண்டியும் - தோழி அன்பிலை கொடியை எனக் கேட்ட தலைவன் முனிந்த உள்ளத்தானாங் கொல்லோ என ஐயுற்று அவனது குறிப்பை அறிதல்வேண்டியும், அகன்மலி ஊடல் அகற்சிக் கண்ணும் - தனது நெஞ்சில் நிறைந்து நின்ற ஊடல் கையிகந்து துனியாகியவழி இஃது அவற்கு எவனாங் கொல்லென அஞ்சிய வழியும், கிழவி வேற்றுமைக்கிளவி தோற்றவும் பெறும் - தலைவி தலைவனோடு அயன்மையுடைய சொல்லைத் தோற்றுவிக்கவும்பெறும் என்றவாறு. உதாரணம்:

[2]நன்னலந் தொலைய நலமிகச் சாஅ
யின்னுயிர் கழியினு முரைய லவர்நமக்
கன்னையு மத்தனு மல்லரோ தோழி
புல்லிய தெவனோ வன்பிலங் கடையே. (குறுந். 93)

இதனுள், அவரை அன்பிலை கொடியை யென்னாதி, அன்பில் வழி நின்புலவி அவரை என்செய்யும் அவர் நமக்கு இன்றியமையாத எமரல்லரோவென [3]இருவகையானும் அயன்மை கூறியவாறுங் காண்க. (18)

1. கைகோள் இரண்டிற்கும் என்றது களவுங் கற்புமாகிய இரண்டற்கு மென்றபடி.

2. நலம் - பெண்ணலம். நலமிகச்சாய் - அழகுமிகக்குறைந்து. புலவியஃது எவன்? - புலவியாகிய அஃது என்ன பயனுடைத்து. அன்பில்லாதவிடத்து புலவியாற் பயனில்லை என்றபடி.

3. இருவகை என்றது, சூத்திரத்துட் கூறிய இருவகையையும். இருவகைக்கும் இஃது உதாரணமாகும்.

**(தலைவன் தலைவிகண் பணிந்த கிளவி கூறுமிடமிதுவெனல்)**

160. காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடு கிழமை யவட்கிய லான.

இது, தலைவி வேற்றுமைக் கிளவி தோற்றிய பின்னர்த் தலைவற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ — ள்: காமக் கடப்பினுட் பணிந்த கிளவி - அங்ஙனந் தலைவிகண்ணுந் தோழிகண்ணும் வேறுபாடு கண்டுழித் தனக்குக் காமங் கையிகந்துழித் தாழ்ந்து கூறுங் கூற்று, காணுங் காலை கிழவோற்கு உரித்தே - ஆராயுங் காலத்துத் தலைவற்கு உரித்து, வழிபடு கிழமை அவட்கு இயலான - அவனை எஞ்ஞான்றும் வழி பட்டொழுகுதல் தலைவிக்கு இல்லறத்தோடு பட்ட இயல் பாகலான் என்றவாறு. உதாரணம்:

[1]ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு. (கலி. 88)

கடியர்தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று. (கலி. 88)

நின், னாணை கடக்கிற்பா ரியார் (கலி. 81)

என்றாற்போல்வன கொள்க.

'காணுங்காலை' என்றதனால் தலைவன் தலையெதிர் புலப்பது, தன்றவறு சிறிதாகிய இடத்தெனவும் இங்ஙனம் பணிவது தன்றவறு பெரிதாகிய இடத்தெனவுங் கொள்க. (19)

**(தலைவன்கண் தலைவியும் பணிந்து கூறுமெனல்)**

161. அருண்முந் துறுத்த வன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கு முரித்தே.

இது, தலைவன் பணிந்து மொழிந்தாங்குத் தலைவியும் பணிந்து கூறுமென்கின்றது.

இ — ள்: அருள் முந்துறுத்த அன்புபொதி கிளவி - பிறர் அவலங்கண்டு அவலிக்கும் அருள் முன்தோற்றுவித்த அவ்வருள் பிறத்தற்கு ஏதுவாகி எஞ்ஞான்றும் அகத்து நிகழும் அன்பினைக்

1. நின்கண் - நின்கண்ணினருணோக்கு. தவறு - தப்பு. மாற்று - மாற்றம்; மறுமொழி.

*கரந்து சொல்லுங் கிளவி, பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே - பணிந்தமொழி தோற்றாது வேறோர்பொருள் பயப்பக் கூறுதல் தலைவிக்கும் உரித்து என்றவாறு.*

*வேறுபொருளாவது தலைவன் கூறியாங்குத் தானும் பணிந்து கூறுவாள், பணியாதே தன் நெஞ்சு தன்னையுங் கைகடந்து அவன் ஏவலைச் செய்ததென்றாற்போலக் கூறுதலுமாம்.*

*இது 'தன்வயிற் கரத்தலு மவன்வயின் வேட்டலும்' எனப் பொருளியலுள் (205) வழுவமைத்தற்கு இலக்கணம்.*

*'இணையிரண்டு' என்னும் மருதக்கலி (77) யுள்,*

[1]மாசற மண்ணுற்ற மணியேசு மிருங்கூந்தல்
வீசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்மன்
னோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்லினாய் வாராமற் பெறுகற்பின்

*எனக் கூறிய தலைவி,*

[2]கடைஇய நின்மார்பு தோயல மென்னு
மிடையு நிறையு மெளிதோநிற் காணிற்
கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னுந் தம்மோ
டுடன்வாழ் பகையுடை யார்க்கு

*என்புழி, நிற்காணிற் கடவுபு கைத்தங்கா நெஞ்செனவே அவன் ஆற்றாமை கண்டருளி நெஞ்சு ஏவல்செய்ததென வேறோர் பொருள் பயப்பக் கூறித் தன் அன்பினைக் கரந்தவாறு காண்க.*

*'கூர்முண்முள்ளி' (அகம். 26) என்பதனுட் 'சிறுபுறங்கவையினன்' என அவன் வருந்தியது ஏதுவாகத் தான் 'மண்போன் ஞெகிழ்ந்தேன்' என அருண் முந்துறுத்தவாறும், 'இவை பாராட்டிய பருவமும் உள' என அன்பு பொதிந்து கூறியவாறும், 'ஆண்டும் பணிந்தமொழி வெளிப்படாமல் நெஞ்சறை போகிய அறிவினேற்கு' எனத் தன் அறிவினை வேறாக்கி அதன்மேலிட்டுக் கூறியவாறுங் காண்க.* (20)

---

1. மண்ணுதல் - கழுவல். மணி - நீலமணி. ஏசும் - பழிக்கும். இருங்கூந்தல் - கருங்கூந்தல். நோய்சேர்ந்ததிறம் - நோவு சேர்ந்த திறம் (நோதிறம் என்னும் பண்)

2. கடைஇய - (நின்மேல்) வீழ்வித்த. தோயலம் - கூடக் கடவே மல்லேம். இடையும் என்பதை நெஞ்சுக்கு விசேடணமாக்குக என்பர் நச்சினார்க்கினியர். இடையும் என்று நிறைக்கு விசேடணமாக்கி வருந்தும் நிறை என்றுகூறல் நன்று. கடவுபு - செலுத்தி.

*(தலைவியுந் தோழியு மலரெழுகின்றதெனக் கூறற்கு முரியரெனல்)*

**162.** களவுங் கற்பு மலர்வரை வின்றே.

*இதுவுந் தலைவிக்குந் தோழிக்கும் உரிய கூற்றுக் கூறுகின்றது.*

*இ – ள்: களவின்கண்ணுங் கற்பின்கண்ணும் அலரெழுகின்றதென்று கூறுதல் தலைவிக்குந் தோழிக்கும் நீக்குநிலைமையின்று என்றவாறு.*

*'வரைவின்று' எனப் பொதுப்படக் கூறினமையான் இருவரைவுங் கொண்டாம் - தலைவன் ஆங்குக் கூறுவனாயிற் களவிற் கூட்டமின்மையுங் கற்பிற் பிரிவின்மையும் பிறக்கும். 'ஒப்பக்கூறல்' (666) என்னும் உத்திபற்றிக் களவும் உடனோதினார் சூத்திரஞ் சுருங்குதற்கு. 'களவலராயினும்' (115) எனவும் 'அம்பலுமலரும்' (139) எனவும் களவிற் கூறியவை [1]அலராய் நிகழ்ந்தவழி வேறுசில பொருண்மைபற்றிக் கூறுதற்கு வந்தன. அவை அலர் கூறப் பெறுப என்றற்கு வந்தனவன்றென உணர்க. உதாரணம்:*

[2]கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. (குறள். 1146)

*இது, களவு.*

[3]வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருத்துஞ்
சுரனே சென்றனர் காதல ருரனழிந்
தீங்கியான் றாங்கிய வெவ்வம்
யாங்கறிந் தன்றிவ் வழுங்க லூரே. (குறுந். 140)

*இது, கற்பு.*

[4]கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிறுந்
தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவ
ணல்லணி நயந்துநீ துறத்தலிற்
பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே. (ஐங்குறு. 55)

*இது, தோழி அலர்கூறியது.* *(21)*

---

1. அலராய் - (களவு) அலராய்.
2. காதலரைக்கண்டது ஒருநாள் எனவும், அலர்பாம்புகொண்டற்று எனவுமியைக்க. மன் என்பதும் உம் என்பதும் அசைகள்.
3. வேதினம் - கருக்கரிவாள். வெரிந் - முதுகு. ஓதி - ஓந்தி. போத்து - ஆண். புட்கொள - நிமித்தங்கொள. தாங்கிய - பொறுத்த. அழுங்கல் - ஆரவாரம்.
4. எந்திரம் என்றது ஆலையை. கோமான் என்றது பாண்டியனை. நல்லணி - நல்ல அழகு. நயந்து - விரும்பி. பசந்தன்று - பசப்புற்றது. நுதல்பசந்தது என இயைக்க.

### (அலராற்றோன்றும் பயனிதுவெனல்)

**163. அலரிற் றோன்றுங் காமத்து மிகுதி.**

*இஃது, அலர்கூறியதனாற் பயன் இஃது என்கின்றது.*

*இ – ள்: அலரிற் றோன்றுங் காமத்து மிகுதி - இருவகைக் கைகோளினும் பிறந்த அலரால் தலைவற்குந் தலைவிக்குங் காமத்திடத்து மிகுதிதோன்றும் என்றவாறு.*

*என்றது, களவு அலராகிய வழி இடையீட்டிற்கு அஞ்சிய அச்சத்தான் இருவர்க்குங் காமஞ்சிறத்தலுங் கற்பினுட் பரத்தை மையான் அலர்தோன்றியவழி காமஞ்சிறத்தலும் அவள் வருந்து மென்று தலைவற்குக் காமஞ்சிறத்தலுந் தலைவன் பிரிவின்கட் டலைவிக்குக் காமஞ் சிறத்தலும் பிறவுமாம். உதாரணம்:*

[1]ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய் (குறள். 1147)

[2]நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல் (குறள். 1148)

*என்றாற் போல்வன கொள்க.* *(22)*

### (இதுவுமது)

**164. கிழவோன் விளையாட் டாங்கு மற்றே.**

*இதுவுங் காமச்சிறப்பே கூறுகின்றது.*

*இ – ள்: கிழவோன் விளையாட்டு - தலைவன் பரத்தையர் சேரியுள் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டும் அவருடன் யாறு முதலியன ஆடியும் இன்பம் நுகரும் விளையாட்டின்கண்ணும், ஆங்கும் அற்று - அப்பரத்தையரிடத்தும் [3]அலராற்றோன்றும் காமச்சிறப்பு என்றவாறு.*

*'ஆங்கும்' என்ற உம்மையான் [4]ஈங்கும் அற்றெனக் கொள்க. தம்மொடு தலைவன் ஆடியது பலரறியாதவழி என்றுமாம். பல*

1. கௌவை - அலர் (பழிமொழி). நீளும் - வளரும். நோயாகிய பயிர் வளரும் என்க.
2. எரி - நெருப்பு. நுதுப்பல் - அவித்தல் (தணித்தல்). வளர்ப்பதால் தணித்தல் கூடாது என்றபடி.
3. காமச்சிறப்புத் தோன்றும் என முடிக்க.
4. ஈங்கும் என்றது தலைவியிடத்தும் என்றவாறு.

ரறிந்த வழி அவனது பிரிவு தமக்கு இழிவெனப்படுதலின், அவர் காமச் சிறப்புடையராம். தலைவன் அவரொடு விளையாடி அலர் கேட்குந் தோறுந் தலைவிக்குப் புலத்தலும் ஊடலும் பிறந்து காமச் சிறப்பெய்தும். ஆங்கு மீங்கு மெனவே அவ்விருவரிடத்துந் தலை வன் அவை நிகழ்த்தினானாகலின் அவற்குங் காமச்சிறப்பு ஒருவாற் றாற் கூறியவாறாயிற்று. இது காமக்கிழத்தியரல்லாத பரத்தைய ரோடு விளையாடிய பகுதியாகலின் வேறுகூறினார். காமக்கிழத் தியர் ஊடலும் விளையாடலும் 'யாறுங் குளனும்' (191) என்புழிக் கூறுப. அஃது அவரெனப்படாமையின், விளையாட்டுக்கண் ணென விரிந்த உருபு வினைசெய்யிடத்து வந்தது. உதாரணம்:

[1]எஃகுடை யெழினலத் தொருத்தியொடு நெருநை
வைகுபுன லயர்ந்தனை யென்ப வதுவே
பொய்புறம் பொதிந்தயாங் கரப்பவுங் கையிகந்
தலரா கின்றாற் றானே (அகம். 116)

[2]கோடுதோய் மலிர்நிறை யாடி யோரே (அகம். 166)

எனத் தலைவியும் பரத்தையும் பிறர் அலர்கூறியவழிக் காமஞ் சிறந்து புலந்தவாறு காண்க. ஆண்டுப் பணிந்து கூறுங்காலும் விளையாடுங்காலுந் தலைவன் காமச்சிறப்புக் காண்க. (23)

## (வாயில்கள் தலைவிமுன் கிழவோன் கொடுமை கூறாரெனல்)

**165. மனைவி தலைத்தாட் கிழவோன் கொடுமை
தம்முள வாதல் வாயில்கட் கில்லை.**

இது, வாயில்கட்கு உரிய இலக்கணங் கூறுகின்றது.

**இ – ள்:** மனைவி தாட்டலை - தலைவி எத்திறத்தானும் புலந்த வழி அவளிடத்து, கிழவோன் கொடுமை - தலைவன் கொடுந் தொழில்களை, தம் உள ஆதல் - தம்முரைக்கண் உள வாக்கி உரைத்தல், வாயில்கட்கு இல்லை - தோழி முதலிய வாயில்களுக்கில்லை என்றவாறு.

[3]தாட்டலையென மாறுக. அது பாதத்திடத்தென்னுந் தகுதிச் சொல். அது வாயில்கள் கூற்றாய் வந்தது. உதாரணம் வந்துழிக் காண்க. (24)

---

1. நெருநை - முன்னைநாள். அயர்தல் - ஆடல்.
2. கோடு - கரை. மலிர்நிறை - வெள்ளம்.
3. மனைவிமுன் என்பதை மனைவிதலைத்தாள் என்றது தகுதிச்சொல் என்றபடி. தலைத்தாள் என்பது தாட்டலை அடியின் கண் என மாற்றிப்

### (வாயில்கட்கு எய்தியதிகந்துபடாமைக் காத்தல்)

**166.** மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக் குறுதி யுள்வழி யுண்டே.

*இஃது எய்தியது இகந்துபடாமைக் காத்தது, இன்னுழியாயிற் பெறுமென்றலின்.*

*இ — ள்: மனைவி முன்னர்க் கையறு கிளவி - தலைவி முன்னர்த் தலைவன் காமக்கடப்பினாற் பணியுந்துணையன்றி நம்மைக் கையிகந்தானெனக் கையற்றுக் கூறுங் கூற்று, மனைவிக்கு உறுதி உள்வழி உண்டே - புலந்துவருந் தலைவிக்கு மருந்தாய் அவன் கூறுவதோர் ஆற்றல் உறுதிபயக்குமாயின் அவ்வாயில்கட்கு உளதாம் என்றவாறு. உதாரணம்:*

[1]அறியா மையி னன்னை யஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல
நெடுநிமிர் தெருவிற் கைபுகு கொடுமிடை
நொதும லாளன் கதுமெனத் தாக்கலிற்
கேட்போ ருளர்கொ லில்லைகொல் போற்றெள
யாண்டைய பசலை யென்றன னதனெதிர்
நாணிலை யெலுவ வென்றுவந் திசினே
செறுநரும் விழையுஞ் செம்ம லோனென
நறுநுத லரிவை போற்றேன்
சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே. (நற்றிணை. 50)

*[2]இதனுள், என்னறியாமையாலே அன்னாய் நின்னையஞ்சி யாங் கள்வன் துணங்கையாடுங் களவைக் கையகப்படுப்பேமாகச்*

---

பொருள் கொள்ளப்படும். தாட்டலை என்பது முன் என்னும் பொருள் படலை, பொருளியல் 41-ஞ் சூத்திரப் பொருள் நோக்கியறிக. தகுதிச்சொல் இதுவென்பதை, தொல், சொல். கிளவி 17-ஞ் சூத்திர உரைநோக்கியறிக.

1. அன்னை - அன்னாய்! அஞ்சி - நின்னை அஞ்சி. தழூஉகம் - அகப்படுப்பேமாகி. கைபுகுகொடுமிடை - வேறொருவழிவந்து புகுந்த வளைந்தவிடத்தே. தாக்கலின் - எதிர்ப்படலின். போற்றென - அறிந்துகொள் என்று யான்கூற. யாண்டைய பசலை என்றனன் - அவனறியாமையான் எவ்விடத்தது என்கட் பசலை என்றானாக. யாணது பசலை என்றானாக என்னும் பாடத்திற்கு என்கட்பசலை அழகுடைத்து என்றானாக எனப் பொருளுரைக்க. சிறுமை பெருமையின் - என்சிறுமை பெரிதாகலான். காணாது - ஆராயாது துணிந்து நாணிலை எலுவ! என்றனன் என இயைக்க.

2. இவ்வாக்கியத்தில் எதிர்ப்பட்டனாக என்பதன்பின்னே "கேட்போர் ... போற்றென" என்பதன் பொருளும் 'எலுவ என்று' என்பதில் என்று என்பதும் விடப்பட்டன.

செல்லா நிற்க, அவன் குழை முதலியவற்றையுடையனாய்த் தெருவு முடிந்த இடத்தே எதிர்ப்பட்டானாக, அவ்வருளாமையின் யாண்டையது என்கட் பசலையென்றானாக, அவனெதிரே என் சிறுமை பெரிதாகலான் ஆராயாதே துணிந்து நாணிலை எலுவ! என்று வந்தேனெனத் தோழி மெய்யானும் பொய்யானும் புனைந் துரைத்தவாறு காண்க. ஏனைய வாயில்கள் கூற்று வந்துழிக்காண்க.

இங்ஙனந் தலைவன் சிறைப்புறமாகக் கூறுவன 'அன்பு தலைப் பிரிந்த கிளவி தோன்றின' (179) என்புழிக் கூறுதும். (25)

**(வாயில்கட்கு முன்னிலைப் புறமொழி பின்னிலைக்கணுரித்தெனல்)**

167. முன்னிலைப் புறமொழி யெல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்று மென்மனார் புலவர்.

இது, வாயில்கட்கு உரியதோர் பகுதி கூறுகின்றது.

இ – ள்: முன்னிலைப் புறமொழி - முன்னிலையாய் நிற்கின்ற தலைவனை நோக்கிப் பிறரைக் கூறுமாறுபோலக் கூறுதல், எல்லாவாயிற்கும் - பன்னிரண்டு வாயில்களுக்கும், பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர் - குறைவேண்டி முயலுங்கால் தோன்றுமென்று கூறுவர் புலவர் என்றவாறு. உதாரணம்:

[1]உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றாகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்
புதுவ தன்றே புலனுடை மாந்திர்

தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கட் டாவார்தாந் தந்நலந்
தாதுதேர் பறவையி னருந்திறல் கொடுக்குங்கா
லேதிலார் கூறுவ தெவனோநின் பொருள்வேட்கை (கலி. 22)

எனத் தலைவனை நோக்கி முன்னிலைப் புறமொழியாகக் கூறிற்று. (26)

1. உண்கடன் - தானுண்ணுதற்குரிய கடன். வழிமொழிந்து - வழிபாடாகச் சொல்லி. முகம்வேறாதல் - முகமலர்தல். கொண்டது - முன் கடனாக வாங்கியபொருள். முகம்வேறாதல் - முகம் மலர்ச்சியின்றியிருத்தல். புலன் - அறிவு தாய் என்றது சித்திரக்காரனை. உயிர்பெய்த - உயிர்ப்புக்கொடுத்த. தாவார் - கெடார். அருந்து - அருந்திய. இறல் - கேடு (அழிவு). நின்பொருள் வேட்கையிடத்து ஏதிலார் கூறுவதெவன்? என மாற்றுக.

### (கூத்தர் கிளவி இவையெனல்)

**168.** தொல்லவை யுரைத்தலு நுகர்ச்சி யேற்றலும்
பல்லாற் றானு மூடலிற் றணித்தலு
முறுதி காட்டலு மறிவுமெய் நிறுத்தலு
மேதுவி னுணர்த்தலுந் துணிவு காட்டலு
மணிநிலை யுரைத்தலுங் கூத்தர் மேன.

*இது, கூத்தர்க்குரிய கிளவி கூறுகின்றது.*

*இ — ள்: தொல்லவை உரைத்தலும் - முன்பே மிக்கார் இருவர் இன்பம் நுகர்ந்தவாறு இதுவெனக் கூறலும், நுகர்ச்சி ஏற்றலும் - நுமது நுகர்ச்சி அவரினுஞ் சிறந்ததெனக் கூறலும், பல் ஆற்றானும் ஊடலில் தணித்தலும் - இல்லறக் கிழமைக்கு இயல்பன்றென்றாயினும் இஃது அன்பின்மையாமென்றாயினுங் கூறித் தலைவியை ஊடலினின்று மீட்டலும், உறுதிகாட்டலும் - இல் வாழ்க்கை நிகழ்த்தி இன்பநுகர்தலே நினக்குப் பொருளென்றலும்.*

*இனிக் கூறுவன தலைவற்குரிய: அறிவு மெய் நிறுத்தலும் - புறத்தொழுக்கம் மிக்க தலைவற்கு நீ கற்றறிந்த அறிவு இனி மெய் யாக வேண்டுமென்று அவனை மெய்யறிவின்கண்ணே நிறுத்தலும், ஏதுவின் உணர்த்தலும் - இக் கழிகாமத்தான் இழிவு தலைவரு மென்றற்குக் காரணங் கூறுலும், துணிவு காட்டலும் - அதற் கேற்பக் கழிகாமத்தாற் கெட்டாரை எடுத்துக்காட்டலும், அணி நிலை உரைத்தலும் - முலையினுந் தோளினும் முகத்தினும் எழு துங்காற் புணர்ச்சிதோறும் அழித்தெழுதுமாறு இதுவெனக்கூற லும், கூத்தர்மேன - இவ்வெட்டுங் கூத்தரிடத்தன என்றவாறு.*

*கூத்தர் - நாடகசாலையர். தொன்றுபட்ட நன்றுந் தீதுங் கற்ற றிந்தவற்றை அவைக்கெல்லாம் அறியக்காட்டுதற்கு உரியராகலிற் கூத்தர் இவையுங் கூறுபவென்றார். இலக்கியம் இக்காலத்திறந்தன.*

[1]பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர். **(குறள். 914)**

*இஃது அறிவு மெய்ந்நிறுத்தது.* *(27)*

---

1. பொருட்பொருளார் - பொருளையே பொருளாகக் கொள்வோர் (- பரத்தையர்). பொருள் - பயன். பொருளாகிய பொருள் என்பர் பரிமேலழகர். அருட்பொருள் ஆயும் - அருளையே பொருளாகத் துணியும். அருளாகிய பொருளுமாம். தோயார் - விரும்பார்.

### (கூத்தர்க்கும் பாணர்க்கு முரிய கிளவிகூறல்)

**169.** நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய.

இஃது, அதிகாரப்பட்ட கூத்தரொடு பாணர்க்கும் உரிய தோர் இலக்கணங் கூறுகின்றது.

இ — ள்: நிலம் பெயர்ந்து உறைதல் வரைநிலை யுரைத்தல் - தலைவன் சேட்புலத்துப் பிரிந்துறைதலைத் தலைவிக்காக [1]வரைந்து மீளும்நிலைமை கூறுதல், கூத்தர்க்கும் பாணர்க்கும் [2]யாப்பமைந்தன உரிய என்றவாறு.

யாப்பமைதலாவது:- தோழியைப்போலச் செலவழுங்குவித்தல் முதலியன பெறாராகலின், யாழெழீஇக் கடவுள் வாழ்த்தி அவளது ஆற்றாமை தோற்றும்வகையான் [3]எண்வகைக் குறிப்பும்பட நன்னயப்படுத்துத் தலைவற்குக் காட்டல் போல்வன. உதாரணம்:

[4]அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாஞ் சென்ம றாஅய்ப் பலவுட
னீயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய
வங்காட் டாரிடை மடப்பிணை தழீஇத்
திரிமருப் பிரலை புல்லருந் துகள
முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்
குறும்பொறை மருங்கி னறும்பூ வயரப்
பதவுமேய லருந்து மதவுநடை நல்லான்
வீங்குமாண் செருத்த றீம்பால் பிலிற்றக்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு
மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்
செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்

---

1. வரைதல் - நீக்கல்.
2. யாப்பு - நியமம்.
3. எண்வகைக்குறிப்பு - எண்வகை மெய்ப்பாடு.
4. அரக்கு - செவ்வரக்கு. செம்மல் - வாடியபூ (பழம்பூ). தாஅய் - பரந்து, ஈயன் மூதாய் - தம்பலப்பூச்சி. வரிப்ப - வரி வரியாக ஊர்ந்துசெல்ல. மணி - நீலமணி; இது காயாம்செம்மலுக்கு உவமை. கவைஇய - சூழ்ந்த. திரிமருப்பு - முறுகிய கொம்பு. உகள - குதிப்ப (துள்ளிச்செல்ல). குறும்பொறை - சிறுகுன்று. அயர - மாலையாகக் கட்ட. அறவு - அறுகம்புல். மேயல் - உணவு. செருத்தல் - முலைமடி. பயிர்தல் -அழைத்தல். பையுள் - துன்பம். செல்வேன் தேர் கண்டனன் என இயைக்க.

தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே
விடுவிசைப் புரவி வீங்குபரி முடுகக்
கல்பொரு திரங்கும் பல்வாய் நேமிக்
கார்மழை முழக்கிசை கடுக்கும்
முனைநல் லூரன் புனைநெடுந் தேரே. (அகம். 14)

*இதனுள், தலைவி இரக்கந் தோன்றக் கடவுள் வாழ்த்திப் பிரிந்தோர்மீள நினையாநின்றேனாக அவர்மீட்சி கண்டேனெனப் பாணன் கூறியவாறு காண்க.*

*கூத்தர் கூற்று வந்துழிக் காண்க.* *(28)*

**(இளையோர்க்குரிய கிளவி இதுவெனல்)**

170. ஆற்றது பண்புங் கருமத்து விளைவு
மேவன் முடிவும் வினாவுஞ் செப்பு
மாற்றிடைக் கண்ட பொருளு மிறைச்சியுந்
தோற்றஞ் சான்ற வன்னவை பிறவு
மிளையோர்க் குரிய கிளவி யென்க.

*இஃது , உழைக்குறுந்தொழிற்கும் காப்பிற்கும் (171) உரியராகிய இளையோர்க்குரிய இலக்கணங் கூறுகின்றது.*

*இ — ள்: ஆற்றதுபண்பும் - தலைவன் தலைவியுடனாயினுந் தானேயாயினும் போக்கு ஒருப்பட்டுழி வழிவிடற்பாலராகிய இளையோர் தண்ணிது வெய்துசேய்த்து அணித்தென்று ஆற்றாது நிலைமை கூறுதலும், கருமத்து விளைவும் - [1]ஒன்றாகச் சென்று வந்து செய்பொருண் முடிக்குமாறு அறிந்து கூறுதலும், ஏவல் முடிவும் - இன்னுழி இன்னது செய்க என்று ஏவியக்கால் அதனை முடித்துவந்தமை கூறலும், வினாவும் - தலைவன் ஏவலைத் தாங்கேட்டலும், செப்பும் - தலைவன் வினாவாத வழியும் தலைவிக் காகவாயினுஞ் செப்பத்தகுவன தலைவற்கு அறிவு கூறுதலும், ஆற்றிடைக்கண்ட பொருளும் - செல்சுரத்துக்கண்ட நிமித்தம் முதலிய பொருள்களைத் தலைவற்கும் தலைவிக்கும் உறுதி பயக்குமாறு கூறலும், இறைச்சியும் - ஆண்டு மாவும் புள்ளும் புணர்ந்து விளையாடுவனவற்றை அவ்விருவர்க்குமாயினுந் தலைவற்கேயாயினுங் காட்டியும் ஊறுசெய்யும் [2]கோண்மாக் களை அகற்றியுங் கூறுவனவும், தோற்றஞ் சான்ற அன்னவை பிற*

---

1. ஒன்றாக - துணிவாக; இது அறிந்து என்பதனோடு முடியும்.

2. கோண்மாக்கள் - கொலைசெய்யும் விலங்குகள்; அவை புலி, யானை, கரடி முதலியன.

வும் - அங்ஙனம் அவற்குத் தோற்றுவித்தற்கமைந்த அவைபோல்வன பிறகூற்றுக்களும், இளையோர்க்குரிய கிளவி என்ப - இளையோர்க்கு உரிய கூற்றென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

தலைவியது செய்தி அறிந்துவந்து கூறுவனவும் பிறபொருளுணர்ந்து வந்துரைப்பனவும் ஒற்றர்கண் அடங்கும். ஏவன் முடிவிற்கும் இஃதொக்கும். 'சான்ற' என்றதனான் ஆற்றது பண்பு கூறுங்கால் இதுபொழுது இவ்வழிச்சேறல் அமையாதென விலக்கலுங் கருமங் கூறுங்காற் சந்துசெய்தல் அமையுமெனக் கூறுதலும் போல்வன அமையாவாம்; அவர் அவை கூறப்பெறாராகலின் பிறவாவன:- தலைவன் வருவனெனத் தலைவிமாட்டுத் தூதாய் வருதலும், அறிந்து சென்ற தலைவற்குத் தலைவிநிலை கூறுதலும், மீளுங்கால் விருந்து பெறுகுவள் கொல்லெனத் தலைவி நிலையுரைத்தலும் போல்வன. இலக்கியம் வந்துழிக் காண்க.

[1]விருந்தும் பெறுகுநள் போலுந் திருந்திழைத்
தடமென் பணைத்தோண் மடமொழி யரிவை
தளிரியற் கிள்ளை யினிதினி னெடுத்த
வளராப் பிள்ளைத் தூவி யன்ன
வார்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவிற்
பறைக்கண் ணன்ன நிறைச்சுனை தோறுந்
துளிபடு மொக்குள் துள்ளுவன சாலத்
தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய
வளிசினை யுதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
சிரற்சிற கேய்ப்ப வறற்கண் வரித்த
வண்டு ணறுவீ துமித்த நேமி
தண்ணில மருங்கிற் போழ்ந்த வழியு
ணிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்
செல்லு நெடுந்தகை தேரே
முல்லை மாலை நகர்புக லாய்ந்தே. (அகம். 324)

---

1. அரிவை விருந்தும் பெறுகுநள்பேலும் என மாற்றியுரைக்க. எடுத்த - வளர்த்த. வளராப்பிள்ளை - இளம்பிள்ளை. தூவியன்ன பைம்பயிர் என இயையும். வார்பெயல் - பெய்தமழை. புறவு - காடு. மொக்குள் - குமிழி. தொளிபொரு பொகுட்டு தோன்றுவனமாய - சேற்றின்கண் பொருதலால் குமிழிகள் தோன்றுவனவாய் மறைய. மாய நேமிபோழ்ந்த வழி என இயைக்க. வளி - காற்று. தாஅய் - பரந்து. அறல் - மணல். வரித்த - கோலஞ் செய்த. வழியுள் நீர்முடுக ஆய்ந்து தேர்செல்லும். ஆதலால் அரிவை இன்று விருந்தும் பெறுகுநள்போலும் என முடிக்க.

[1]அவர்கள் தங்களுக்கு வளராப்பிள்ளையென்றலுமாம்.

இது பெறுவளென்றது.

ஆற்றதுபண்பும், ஆற்றிடைக்கண்ட பொருளும் இறைச்சியும் உடன் போக்கிலுங் கற்பிலுங் கூறுவனவாதலின் இச்சூத்திரங் கைகோள் இரண்டற்கும் பொதுவிதி. (29)

**(இது இளையோர்க்குரிய இயல்புகூறல்)**

**171. உழைக்குறுந் தொழிலுங் காப்புமுயர்ந் தோர்க்கு**
**நடக்கை யெல்லா மவர்கட் படுமே.**

இது முற்கூறியவற்றிற்கு உரியார் இங்ஙனஞ் சிறந்தாரென மேலதற்கோர் புறனடை.

இ — ள்: உழைக்குறுந் தொழிலும் காப்பும் உயர்ந்தோர்க்கு நடக்கையெல்லாம் - அவரிடத்து நின்று கூறிய தொழில்செய்தலும் போற்றீடு முதலிய பாதுகாவலும் பிறவும் உயர்ந்தோர்க்குச் செய்யுந் தொழிற்பகுதியெல்லாம், அவர்கட் படும் - முற்கூறிய இளையோரிடத்து உண்டாம் என்றவாறு.

எனவே இவ்விரண்டற்குமுரியரல்லாத [2]புறத்திணையர் முற்கூறியவை கூறப்பெறாரென்பது பொருளாயிற்று. (30)

**(தலைவன் பரத்தைமை நீங்குமிடமிவை எனல்)**

**172. பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவைத்**
**தொன்முறை மனைவி யெதிர்ப்பா டாயினு**
**மின்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினுங்**
**கிழவோ னிறந்தது நினைஇ யாங்கட்**
**கலங்கலு முரிய னென்மனார் புலவர்.**

---

1. அவர்கள் தங்களுக்கு என்பது அவைகள் தங்களுக்கு என்றிருத்தல் வேண்டும். தாமோதரம்பிள்ளை பதிப்பில் 'வளரிளம்பிள்ளை' என்று பாடங் காணப்படலின், அதுநோக்கி 'அவைகள் தங்களுக்கு வளராப்பிள்ளை' என்றலுமாம் என்று பொருளுந்தோன்றப் பாடபேதங் கூறியிருக்கலாமென்பது எமது கருத்து. வளராப்பிள்ளை இளம்பிள்ளை. அல்லது அவ்வாக்கியத்தில் வேறு சிதைவுமிருக்கலாம். அவைகள் தங்களுக்கு - அவைகளுக்கு.

2. புறத்திணையா - புறவொழுக்கத்தினர். இது புறத்தினர் என்றுமிருந்திருக்கலாம்.

இது, மேல் அதிகாரப்பட்ட வாயில், பரத்தையிற் பிரிவொடும் பட்டதாகலின் அதுகூறி, இனித் தலைவன் பரத்தைமை நீங்குமிடங் கூறுகின்றது.

**இ – ள்:** பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை - மூவகை வருணத்தாரும் முன்னர்த் தத்தம் வருணத்தெய்திய வதுவை மனைவியர்க்குப் பின்னர் முறையாற் செய்துகொள்ளப்பட்ட பெரிய பொருளாகிய வதுவை மனைவியரை, தொன்முறை மனைவி எதிர்ப்பாடாயினும் - பழையதாகிய முறைமையினையுடைய மனைவி விளக்கு முதலிய மங்கலங்களைக்கொண்டு எதிரேற்றுக் கோடற் சிறப்பினும், இன்இழைப் புதல்வனை வாயில் கொண்டு புகினும் - இனிய பூண்களை அணிந்து தொன்முறை மனைவி புதல்வனைக் கோலங்காட்டிய செல்வான்போலப் பின் முறை வதுவையரிடத்து வாயிலாகக்கொண்டு செல்லினும், கிழவோன் இறந்தது நினைஇ - தலைவன் இங்ஙனஞ் செய்கையுடைய இருவகைத் தலைவியரையுங் கைவிட்டுப் பரத்தைமை செய்து ஒழுகியவற்றை நினைந்து, ஆங்கட் கலங்கலும் உரியன் என்மனார் புலவர் - அப்பரத்தையர்க்கண் நிகழ்கின்ற காதல் நிலைகுலைந்து மீளுதலும் உரியன் எனக் கூறுவர் புலவர் என்றவாறு.

உம்மை எதிர்மறையாகலான் மீளாமையும் உரித்தாயிற்று. என்னை? இளமைப்பருவங் கழியாத காலத்து அக்காதன் மீளாதாகலின். 'பெரும்பொருள்' என்றார் வேதநூல், அந்தணர்க்குப் பின்முறைவதுவை மூன்றும் அரசர்க்கிரண்டும் வணிகர்க்கொன்றும் நிகழ்தல் வேண்டுமெனக் கூறிற்றென்பது உணர்த்துதற்கு.

இனி, மகப்பேறு காரணத்தாற் செய்யும் வதுவையென்றுமாம். 'ஆக்கிய' என்றதனானே வேளாளர்க்கும் பின்முறை வதுவை கொள்க. தொன்மனைவியென்னாது 'முறை' என்றதனானே அவரும் பெருஞ்சிறப்புச்செய்து ஒரு கோத்திரத்தராய் ஒன்றுபட்டொழுகுவரென்பது கூறினார். இங்ஙனந் தொன்முறையார் பின்முறையாரை மகிழ்ச்சி செய்தமை கண்டு இத்தன்மையாரை இறந்தொழுகித் தவறு செய்தோமேயென்றும் பின்முறையார் அவர் புதல்வரைக்கண்டு மகிழ்ச்சிசெய்து வாயில்நேர்ந்த குணம்பற்றி இவரை இறந்தொழுகித் தவறுசெய்தோமேயென்றும் பரத்தைமை நீங்குவனென்றார். 'புகி னும்' எனவே பிறர்மனைப் புதல்வனென்பது பெற்றாம். தொன் முறை மனைவி எதிர்ப்பட்டதற்கு இலக்கியம் வந்துழிக் காண்க.

*இனிப், பரத்தைமையிற் பிரிவொழிந்து மனைக்கண் இருந்த தற்கு உதாரணம்:*

[1]மாத ருண்கண் மகன்விளை யாடக்
காதலிற் றழீஇ யினிதிருந் தனனே
தாதார் பிரச முரலும்
போதார் புறவி னாடுகிழ வோனே. (ஐங்குறு. 406)

*இன்னும் இவ்வாறு வருவனபிறவும் உய்த்துணர்ந்து கொள்க.* *(31)*

**(*தலைவி புலவி நீங்குங்கால முணர்த்தல்*)**

**173.** தாய்போற் கழறித் தழீஇக் கோட
லாய்மனைக் கிழத்திக்கு முரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான.

*இது, தலைவி புலவிகடைக்கொள்ளுங் காலம் உணர்த்து கின்றது.*

*இ — ள்: தாய்போற் கழறித் தழீஇக் கோடல் - பரத்தையிற் பிரிவு நீங்கிய தலைவன் தன்னினும் உயர்ந்த குணத்தினளெனக் கொள்ளுமாற்றான் 'மேனின்று மெய்கூறுங் கேளிராகிய' (கலி. 3) தாயரைப்போலக் கழறி அவன் மனக்கவலையைமாற்றிப் பண்டு போல மனங்கோடல், ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப - ஆராய்ந்த மனையற நிகழ்த்துங் கிழத்திக்கும் உரித் தென்று கூறுப, கவவொடு மயங்கிய காலை யான - அவன் முயக் கத்தால் மயங்கிய காலத்து என்றவாறு.*

*என்றது, தலைவன் தவற்றிற்கு உடம்பட்டுக் கலங்கினமை கண்ட தலைவி அதற்கு ஆற்றாது தன்மனத்துப் புலவியெல்லாம் மாற்றி இதற்கொண்டும் இனையையாகலெனத் தழீஇக் கொண் டமை கூறிற்று. தலைவன் தன்குணத்தினும் இவள் குணமிகுதி கண்டு மகிழவே தலைவி தன்னைப்புகழ்ந்த குறிப்பு உடைய ளென்பதூஉங் கொள்க.* *(32)*

**(*தலைவி குணச்சிறப்புரைத்தல்*)**

**174.** அவன்சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்றா யுயர்புந் தன்னுயர் பாகுஞ்
செல்வன் பணிமொழி யியல்பாக லான.

*இதுவுந் தலைவி குணச்சிறப்புக் கூறுகின்றது.*

---

1. மாதருண்கண் - அழகிய மையுண்டகண். சிறுவருக்கும் மையூட்டல் இக் காலத்தும் வழக்கிலுள்ளது. கண்ணையுடையாளாகிய தலைவி என்று கூறினுமாம். பிரசம் - வண்டு.

**இ – ள்:** அவன் சோர்பு காத்தல் கடன் எனப்படுதலின் - தான் நிகழ்த்துகின்ற இல்லறத்தால் தலைவற்கு இழுக்கம் பிற வாமற் பாதுகாத்தல் தலைவிக்குக் கடப்பாடென்று கூறப்படு தலால், மகன் தாய் உயர்பும் தன் உயர்பு ஆகும் - மகன் தாயா கிய மாற்றாளைத் தன்னின் இழிந்தாளாகக் கருதாது தன்னோடு ஒப்ப உயர்ந்தோளாகக் கொண்டொழுகுதல் தனது உயர்ச்சி யாம், செல்வன் பணிமொழி இயல்பு ஆகலான் - தலைவன் இவ் வாறு ஒழுகவென்று தமக்குப் பணித்தமொழி நூலிலக்கணத் தான் ஆனமொழியாகலான் என்றவாறு.

ஈண்டு 'மகன்றாய்' என்றது பின்முறையாக்கிய வதுவை யாளை. இன்னும் அவன் சோர்பு காத்தல் தனக்குக் கடனென்று கூறப் படுதலாலே முன்முறையாக்கிய வதுவையாளைத் தம்மின் உயர்ந் தாளென்றும் வழிபாடாற்றுதலும் பின்முறை வதுவையாளுக்கு உயர்பாஞ் செல்வன் பணித்த மொழியா லென்றவாறு. ஈண்டு 'மகன்றாய்' என்றது உயர்ந்தாளை; உய்த்துக்கொண்டுணர்தல் (666) என்னுமுத்தியால் இவையிரண்டும் பொருள். 'செல்வன்' என்றார், பன்மக்களையுந் தன்னாணை வழியிலே இருத்துந் திரு வுடைமைபற்றி. இவை வந்த செய்யுட்கள் உய்த்துணர்க. (33)

**(பாசறைக்கண் தலைவியரொடும் போகான் எனல்)**

**175. எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்.**

இஃது எய்தியது விலக்கிற்று; 'முந்நீர்வழக்கம்' (34) என்பத னாற் பகைதணி வினைக்குங் காவலற்குங் [1]கடும்பொடு சேறலா மென்று எய்தியதனை விலக்கலின்.

**இ – ள்:** எண் அரும் பாசறை - போர்செய்து வெல்லுமாற்றை எண்ணும் அரிய பாசறையிடத்து, பெண்ணொடு புணரார் - தலை வியரொடு தலைவனைக் கூட்டிப் புலனெறி வழக்கஞ் செய்யார் என்றவாறு.

இரவும் பகலும் போர்த்தொழின் [2]மாறாமை தோன்ற 'அரும்பாசறை' என்றார்.

---

1. கடும்பு - சுற்றம். என்றது தலைவியரை. இது நச்சினார்க்கினியர் கருத்து.

2. மாறாமை - ஒழியாமை.

[1]நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே (நெடுநல். 186 – 8)

எனவும்

[2]ஒருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிதுநினைந்து (முல்லை. 75 – 6)

எனவும் வருவனவற்றான் அரிதாக [3]உஞற்றியவாறு காண்க.

இனிக் காவற்பிரிவுக்கு முறைசெய்து காப்பாற்றுதலை [4]எண்ணுமெனப் பொருளுரைக்க. (34)

(அகப்புறத் தலைவற்குரிய விதி கூறல்)

176. புறத்தோ ராங்கட் புரைவ தென்ப.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது.

இ – ள்: புறத்தோர் ஆங்கண் - அடியோரும் வினை வலபாங்கினோருமாகிய அகப்புறத்தலைவருடைய பாசறையிடத் தாயில், புரைவது என்ப - அவரைப் பெண்ணொடு புணர்த்துப் புலனெறி வழக்கஞ்செய்தல் பொருந்துவது என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இப்பாசறைப் பிரிவை வரையறுப்பவே ஏனைப் பிரிவு களுக்குப் புணர்த்தலும் புணராமையும் புறத்தோர்க்கு [5]வரை வின்றாயிற்று. (35)

(பார்ப்பார்க்குரிய கூற்று இவையெனல்)

177. காமநிலை யுரைத்தலுந் தேர்நிலை யுரைத்தலுங்
கிழவோன் குறிப்பினை யெடுத்தனர் மொழிதலு
மாவொடு பட்ட நிமித்தங் கூறலுஞ்
செலவுறு கிளவியுஞ் செலவழுங்கு கிளவியு
மன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய.

இது, பார்ப்பார்க்குரிய கிளவி கூறுகின்றது.

---

1. நள்ளென்யாமம் - நடுயாமம். பள்ளிகொள்ளான் - துயிலான். முரணுதல் - மாறுபடல்.
2. பள்ளிஒற்றி - பள்ளிமேல்வைத்து. ஒருகையிற் கடகத்தை முடியொடு சேர்த்து என மாற்றி உரைக்க.
3. உஞற்று - முயலுதல்.
4. எண்ணும் என்றது 'எண்ணரும்' என்பதில் எண் என்றதை. அதற்குக் காவற் பிரிவிற்கேற்ப இவ்வாறு பொருளுரைக்க என்றபடி.
5. வரைவு - நியமம்.

இ — ள்: காமநிலையுரைத்தலும் - தலைவனது காமமிகுதி கண்டு இதன்நிலை இற்றென்று இழித்துக் கூறுவனவும், தேர்நிலை உரைத்தலும் - அங்ஙனங்கூறி அவன் தேருமாறு [1]ஏதுவும் எடுத்துக்காட்டுங் கூறலும், கிழவோன் குறிப்பினை எடுத்தனர் மொழிதலும் - தலைவன் தாழ்ந் தொழுகியவற்றை அவன் குறிப்பான் அறிந்து வெளிப்படுத்தி அவற்கே கூறுதலும், ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும் - வேள்விக்கபிலை பாற்பயங்குன்றுதலானும், குன்றாது கலநிறையப் பொழிதலானும் உளதாய நிமித்தம் பற்றித் தலைவற்குவரும் நன்மை தீமை கூறுதலும், செலவுறு கிளவியும் - அவன் பிரியுங்கால் நன்னிமித்தம்பற்றிச் செலவு நன்றென்று கூறுதலும், செலவு அழுங்கு கிளவியும் - தீய நிமித்தம்பற்றிச் செலவைத் தவிர்த்துக் கூறுதலும், அன்ன பிறவும் - அவைபோல்வன பிறவும், பார்ப்பார்க்கு உரிய - அந்தணர்க்கு உரிய என்றவாறு.

'தேர்நிலை' என்றதனால் தேர்ந்து பின்னுங் கலங்கினுங் கலங்காமல் தெளிவுநிலை காட்டலுங் கொள்க. 'அன்ன பிறவும்' என்றதனான், - அறிவர் இடித்துக் கூறியாங்குத் தாமும் இடித்துக் கூறுவனவும், வாயிலாகச் சென்று கூறுவனவும், தூது சென்று கூறுவனவுங் கொள்க. 'மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்றுமுடித்தல்' (666) என்பதனாற் களவியலிற் கூறாதனவும் ஈண்டே கூறினார். அஃது இப்பேரறிவு உடையையாயின் இனையை யாதற்பாலையல்லையெனக் காம நிலை யுரைத்தலும், கற்பினுள்,

இல்லிருந்து மகிழ்வோற் கில்லையாற் புகழெனை (சிற்றெட்டகம்)

தலைவன் நினையுமாற்றாற் காமநிலை யுரைத்தலும் அடங்கிற்று. ஏனையவற்றிற்கும் இருவகைக் கைகோளிற்கும் ஏற்பன கொணர்ந்து ஒட்டுக. 'பார்ப்பான் பாங்கன்' (501) என உடன் கூறினமையிற் பாங்கற்கு ஏற்பனவுங் கொள்க. இவையெல்லாந் தலைச் சங்கத்தாரும் இடைச்சங்கத்தாருஞ் செய்த பாடலுட் பயின்ற போலும்; இக்காலத்தில் இலக்கியமின்று. பாங்கன் கூறுவன 'நோய்மருங் கறிநருள்' அடக்கிக்கொண்டு எடுத்து மொழியப்படுதலன்றிக் கூற்று அவண் இன்மை உணர்க. அது,

---

1. ஏது - காரணம். எடுத்துக்காட்டு - உதாரணம்.

[1]வேட்டோர் திறத்து விரும்பியநின் பாகனும்
நீட்டித்தா யென்று கடாங்கடுந் திண்டேர்
பூட்டு விடாஅ நிறுத்து. (கலி. 66)

எனவும் வரும்.

இன்னும் சான்றோர் கூறிய செய்யுட்களில் இதுபோல வருவன பிறவனைத்தும் உய்த்துணர்ந்துகொள்க. (36)

### (வாயில்கட்குரியதோர் இலக்கணங் கூறல்)

**178.** எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப.

இது, வாயில்களின் இலக்கணங் கூறுகின்றது.

**இ — ள்:** எல்லாவாயிலும் - பார்ப்பான் முதலிய வாயில்களெல்லாம், இருவர் தேஎத்தும் புல்லிய - தலைவன்கண்ணுந் தலைவி கண்ணும் பொருந்திய, மகிழ்ச்சிப் பொருள என்ப - மனமகிழ்ச்சிப் பொருளினை [2]நிகழ்த்துதலைத் தமக்குப் பொருளாகவுடையர் என்றவாறு.

எனவே, மகிழ்ச்சி கூறப்பெறாராயிற்று. 'புல்லிய' என்றதனானே விருந்தும் புதல்வரும் ஆற்றாமையும் வாயிலாகுப என்று கொள்க. வாயில்கள் 'தோழி தாயே' (193) என்பதனுட் கூறுப. உதாரணம் வந்துழிக் காண்க. (37)

### (வாயில்கட்கு எய்தியதிகந்துபடாமற் காத்தல்)

**179.** அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றிற்
சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர்.

இது, மகிழ்ச்சிப் பொருளன்றி வாயில்கள் இவ்வாறுங் கூறப்பெறுவரென்றலின் எய்தியதிகந்துபடாமற் காத்தது.

**இ — ள்:** அன்பு தலைப்பிரிந்த கிளவி தோன்றில் - அன்பு இருவரிடத்தும் நீங்கிய கடுஞ்சொல் அவ்வாயில்களிடத்துத் தோன்றுமாகில், சிறைப்புறங் குறித்தன்று என்மனார் புலவர் - ஒருவர்க்கொருவர் சிறைப்புறத்தாராகக் கூறல்வேண்டுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

---

1. வேட்டோர் - (நீ) விரும்பினோர். விரும்பிய - நீசெல்லுதலை விரும்பிய. நீட்டித்தாய் என்று - காலந்தாழ்த்தாயென்று. பூட்டு விடாத்தேர்கடாம் என மாற்றுக. கடாம் - அது நிற்குமிடத்துச் செலுத்தும். நிறுத்து - அவ்வன்பை நிறுத்துவாயாக.

2. நிகழ்த்தல் - உண்டாக்கல்.

'தோன்றின்' என்பது படைத்துக்கொண்டு கூறுவரென்பதா மாகலின். [1]'குறித்தன்று' என்பது 'போயின்று' என்பதுபோல, றகரம் ஊர்ந்த குற்றியலுகரம். 'அறியாமையின்' என்னும் (50) நற்றிணைப்பாட்டும் உதாரணமாம்; அது சிறைப்புறமாகவுங் கொள்ளக் கிடந்தமையின். (38)

**(தலைவி தலைவன்கட் தற்புகழ் கிளவி முற்கூறிய இரண்டிடத்தல்லது கூறாள் எனல்)**

**180.** தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்த
லெத்திறத் தானுங் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த விரண்டலங் கடையே.

இது, தலைவியிலக்கணங் கூறுகின்றது.

**இ – ள்:** தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல் - தன்னைப் புகழ்ந்துரைத்தலைக் கிழவன் முன்னர்ச் சொல்லுதல், எத்திறத் தானுங் கிழத்திக் கில்லை - நனிமிகு சீற்றத்துனியினும் தலை விக்கு இல்லை, முற்பட வகுத்த இரண்டலங் கடையே - முன்பு கூறுபடுத்தோதிய 'தாய்போற் கழறித் தழீஇக் கோடலும்' (173) அவன் சோர்புகாத்தற்கு 'மகன்றா யுயர்பு தன்னுயர் பாதலும்' (174) அல்லாதவிடத்து என்றவாறு.

கிழத்திக்கில்லையென முடிக்க. அவ்விரண்டிடத்துந் தனது குணச்சிறப்பைக் குறிப்பால் தலைவன்முன்னே புகழ்வாள் போல ஒழுகினாளென்றுணர்க.

இனி, 'முற்பட வகுத்த இரண்டு' என்பதற்கு 'இரத்தலுந் தெளித்தலும்' (41) என அகத்திணையியலுட் கூறியனவென் றுமாம். தலைவன்முன்னர் இல்லையெனவே அவன் முன்னரல் லாதவிடத்துப் புகழ்தல் பெற்றாம். அவை காமக்கிழத்தியரும் அவர்க்குப் பாங்காயினாருங் கேட்பப் புகழ்தலாம். உதாரணம்:

பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினு
மென்னொடு புரையுந ளல்ல
டன்னொடு புரையுநர்த் தானறி குநளே

எனப் * பதிற்றுப்பத்தில் வந்தது. (39)

1. குறித்தன்று - குறித்தது. போயின்று - போயது.

* பதிற்றுப்பத்து என்பது ஆராயத்தக்கது; இச்செய்யுள் அகப்பொருளை யுணர்த்துதலின்.

### (தலைவன் தன்னைப் புகழுமிட மீதுவெனல்)

181. கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி
கிழவோன் வினைவயி னுரிய வென்ப.

இது, தலைவன் தன்னைப் புகழ்ந்துரைக்கும் இடம் இன்னுழி என்கின்றது.

இ – ள்: கிழவி முன்னர்க் கிழவோன் தற்புகழ் கிளவி - தலைவிமுன்னர்த் தலைவன் தன்னைப் புகழ்ந்து கூறும் கூற்று, வினைவயின் உரிய என்ப - காரியங்களை நிகழ்த்துங் காரணத்திடத்து உரியவென்று கூறுவார் ஆசிரியர் என்றவாறு.

அக்காரணமாவன:- கல்வியும், கொடையும், பொருள் செயலும், [1]முற்றகப்பட்டோனை முற்றுவிடுத்தலுமாகிய காரியங்களை நிகழ்த்துவலெனக் கூறுவன. இவ் வாள்வினைச்சிறப்பை யான் எய்துவலெனத் தன்னைப் புகழவே அதுபற்றித் தலைவி பிரிவாற்றுதல் பயனாயிற்று.

இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிளிவென (கலி. 2)

என்றவழி, யான் இளிவரவு எய்தேனென்றலிற் புகழுக்குரியேன் யானேயெனக் கூறியவாறு காண்க. ஏனையவும் வந்துழிக் காண்க. (40)

### (பாங்கற்கு எய்திய தொருமருங்கு மறுத்தல்)

182. மொழியெதிர் மொழிதல் பாங்கற் குரித்தே.

இது, மேற் பார்ப்பார்க்குரியன பாங்கற்குமாமென எய்துவித்ததனை [2]ஒருமருங்கு மறுக்கின்றது.

இ – ள்: மொழியெதிர் மொழிதல் - பார்ப்பானைப்போலக் காமநிலையுரைத்தல் போல்வன கூறுங்கால் தலைவன்கூறிய மொழிக்கு எதிர்கூறல், பாங்கற்கு உரித்து - பாங்கனுக்கு உரித்து என்றவாறு.

இது களவியற்கும்பொது: அது பாங்கற்கூட்டத்துக் காண்க. கற்பிற் புறத்தொழுக்கத்துத் தலைவன் புகலாமற் கூறுவன வந்துழிக் காண்க. 'உரித்து' என்றதனால் தலைவன் இடுக்கண் கண்டுழி எற்றினான் ஆயிற்றென அவன் மொழிக்கு முன்னே வினாதலுங் கொள்க. (41)

---

1. முற்றுதல் - மதிலை (அரணை) வளைத்தல். அதிலகப்பட்டோன், மதிலகத்தோன் என்க.

2. ஒருமருங்குமறுத்தல் - பார்ப்பார்க்குரித்தன்றென மறுத்தல்.

**(இதுவும் பாங்கற்குரியதோரிலக்கணங் கூறல்)**

**183. குறித்தெதிர் மொழித லஃகித் தோன்றும்.**

*இதுவும் பாங்கற்குரியதோ ரிலக்கணங் கூறுகின்றது.*

*இ – ள்: குறித்து எதிர்மொழிதல் - தலைவன் குறிப்பினை அவன் கூறாமல் தான் குறித்துணர்ந்ததற்கு எதிர்மொழி கொடுத்தல், அஃகித் தோன்றும் - சுருங்கித் தோன்றும் என்றவாறு.*

*அவன் குறிப்பறிந்து கூறல் சிறுவரவிற்றெனவே 'காமநிலை யுரைத்தல்' (177) என்னுஞ் சூத்திரத்தின்கட் கூறிய 'ஆவொடு பட்ட நிமித்தம்' ஆயின் [1]பார்ப்பான் கூறக்கேட்டுத் தான்கூறவும் பெறு மெனவும், ஏனையவுங் கிழவன் கூறாமல் தானே கூறவும் பெறு மெனவுங் கூறியவாறாயிற்று. (42)*

**(தலைவன் வற்புறுத்திப் பிரிவனெனல்)**

**184. துன்புறு பொழுதினு மெல்லாங் கிழவன்**
**வன்புறுத் தல்லது சேற லில்லை.**

*இது, முன்னர்க் 'கிழவி முன்னர்' (181) என்பதனாற் குறிப் பினான் ஆற்றுவித்துப் பிரிதல் அதிகாரப்பட்டதனை ஈண்டு விளங்கக் கூறி வற்புறுத்துமென்கின்றது.*

*இ – ள்: துன்பு உறு பொழுதினும் - உணர்த்தாது பிரிந்து தலைவி துன்பம் மிக்க பொழுதினும், உம்மையான் உணர்த்திப் பிரிந்து துன்பம் மிகாத பொழுதினும், எல்லாம் - சுற்றமுந் தோழி யும் ஆயமுந் தலைமகள் குணமாகிய அச்சமும் நாணமும் மடனு மாகியவற்றையெல்லாம், கிழவன் வன்புறுத்து அல்லது சேறல் இல்லை - தலைவன் வலியுறுத்து அல்லது பிரியான் என்றவாறு.*

*எனவே, இவற்றை முன்னர் நிலைநிறுத்திப் பின்னர் பிரியுமா யிற்று. சொல்லாது பிரியுங்கால், 'போழ்திடைப் படாமன் முயங்கியு மதன்றலைத், தாழ்கதுப் பணிந்துமுள் ளெறழ் முளையெயிற் றமிழ் தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ்செய்யு'மென வுரைத்தும் (கலி. 4) இவை முதலிய தலையளிசெய்து தெருட்டிப் பிரிய அவை பற்றுக் கோடாக ஆற்றுதலின் அவள் குணங்கள் வற்புறுத்துவன ஆயின.*

---

1. தான் அறியமாட்டாமையிற் பார்ப்பான் கூறக்கேட்டு என்றார்.

இனி உலகத்தார் பிரிதலும் ஆற்றியிருத்தலு முடையரென உலகியலாற் கூறலும் பிரிவுணர்த்திற்றேயாம். இனிப் பிரிவினை விளங்கக்கூறி ஆற்றியிருவென்றலும் அவற்றை வற்புறுத்தலாம்.

யாந்தமக், கொல்லோ மென்ற தப்பற்குச்
சொல்லா தகறல் வல்லு வோரே. (குறுந். 79)

இது சொல்லாது பிரிதல்.

'அரிதாய வறனெய்தி' (கலி. 11) இது சொல்லிப்பிரிதல். (43)

## (தலைவன் செலவிடையழுங்கல் இன்னதன்பொருட்டெனல்)

**185.** செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே
வன்புறை குறித்த தவிர்ச்சி யாகும்.

இது செலவழுங்கலும் பாலையா மென்கின்றது.

இ — ள்: செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே - தலைவன் கருதிய போக்கினை இடையிலே தவிர்ந்திருத்தல் பிரிந்து போதல் [1]ஆற்றாமைக்கன்று, வன்புறை குறித்த தவிர்ச்சியாகும் - தலைவியை ஆற்றுவித்துப் பிரிதற்குத் தவிர்ந்த தவிர்ச்சியாகும் என்றவாறு.

செலவழுங்கி ஆற்றுவிக்க அவள் ஆற்றியிருத்தல் இப்பிரிவிற்கு நிமித்தமாகலிற் பாலையாயிற்று.

[2]மணியுரு விழந்த வணியிழை தோற்றங்
கண்டே கடிந்தனஞ் செலவே யொண்டொடி
யுழைய மாகவு மினைவோள்
பிழையலண் மாதோ பிரிதுநா மெனினே. (அகம். 5)

[3]களங்காய்க் கண்ணி நார்முடிச் சேர
லிழந்த நாடுதந் தன்ன
வளம்பெரிது பெறினும் வாரலெ னியானே. (அகம். 199)

இவை வன்புறை குறித்துச் செலவழுங்குதலிற் பாலையாயிற்று. (44)

---

1. ஆற்றாமை - செய்யாமை.

2. மணி - பவளமணி. உரு - நிறம் உழை - பக்கம்; அணிமை. இனைதல் - வருந்தல். எனின் பிழையலள் என இயைக்க.

3. களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்பதற்குக் களங்காயாற் செய்த கண்ணியையும் நாராற்செய்த முடியையுமுடைய சேரல் என்பது பொருள். நெஞ்சே வாரலன் என இயையும். 'களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்' இவ்வடி பதிற்றுப்பத்தில் நாலாம்பத்து 38-ம் செய்யுளிலும் பதிகத்திலும் வருகின்றது; ஆண்டு நோக்கியறிக.

### (பாசறைப்புலம்பல் இன்னுழியாகாதெனலும் இன்னுழியாமெனலும்)

**186.** கிழவி நிலையே வினையிடத் துரையார்
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்.

இஃது, அகத்திணையியலுட் 'பாசறைப் புலம்பலும்' (41) என்றார், ஆண்டைப் புலம்பல் இன்னுழியாகாது இன்னுழி யாமென வரையறை கூறுகின்றது.

இ — ள்: கிழவி நிலையே வினையிடத்து உரையார் - தலைவியது தன்மையை வினைசெய்யா நிற்றலாகியவிடத்து நினைந்து கூறினானாகச் செய்யுள் செய்யப்பெறார், வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும் - வெற்றி நிகழுமிடத்தும் தான் குறித்த பருவம் வந்துழியும் தூதுகண்டுழியும் வருத்தம் விளங்கிக் கூற்றுத் தோன்றிற்றாகச் செய்யுள் செய்ப என்றவாறு.

'உரையார்' எனவே நினைத்தலுளதென்பதூஉம் அது போர்த் திறம் புரியும் உள்ளத்தாற் கதுமென மாயுமென்பதூஉங் கொள்க. வினையிடம் - வினைசெய்யிடம். காலத்துமென்னும் எச்சவும்மை தொக்குநின்றது. அன்றி அங்ஙனம் பாடங் கூறலும் ஒன்று. உதாரணம்:

[1]வேளாப் பார்ப்பான் வாளரத் துமித்த
வளைகளைந் தொழிந்த கழுத்தி னன்ன
தளைபிணி யவிழாச் சுரிமுகிழ்ப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலருந்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குன் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்
தம்மூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதிற் கதவம் பாய்தலிற் றோடிபிளந்து
நுதிமுக மழுங்கிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா வொண்மணி
கழிப்பிணிக் கறைத்தோற் பொழிகணை யுதைப்பத்

---

1. வேளாப் பார்ப்பான் - யாகம்பண்ணாத ஊர்ப் பார்ப்பான். வாளரந்துமித்த - வாளரத்தால் அறுத்தெடுத்த. வளை - வளைகள். ஒழிந்த கழுத்து - எஞ்சிய சங்கின் தலை. அன்னபகன்றை அரும்பு என்க. தென்புலம் - தென்றிசை. சேட்புலம் எனவும் பாடம். தமியள் - தனித்தவளாய். நீந்தி - கடந்து. தொடி - கிம்புரி. மண்ணை - மழுமொட்டை. மணி - மணியோசை. தோல் - பரிசை. பரிசையில் கணைதைப்ப அதனால் உண்டான ஓசையும் என்க. யாம் பாசறையேம் என இயைக்க.

தழங்குரன் முரசமொடு மயங்கும் யாமத்துக்
கழித்துறை செறியா வாளுடை யெறுழ்த்தோ
ளிரவித்துயின் மடிந்த தானை
யுரவுச்சின வேந்தன் பாசறை யேமே. (அகம். 24)

இதனுட் கணையுதைப்ப முரசமொடு மயங்கும் யாமத்துத் துயின்மடிந்த வாளுறை செறியாத் தானையையுடைய வேந்தனெனவே வென்றிக்காலங் கூறியவாறும் கிழவிநிலை உரைத்தவாறுங் காண்க.

பருவங்கண்டும் தூதுகண்டும் கூறியவை 'பாசறைப் புலம்பலும்' (41) என்புழிக் காட்டினாம். (45)

**(பரத்தையிற் பிரிவின்கண் தலைவற்கும் தலைவிக்குமாவதோ ரிலக்கணமுரைத்தல்)**

**187.** பூப்பின் புறப்பா டீராறு நாளு
நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான.

இது, பரத்தையிற் பிரிவின்கண் தலைவற்குந் தலைவிக்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

**இ — ள்:** பரத்தையிற் பிரிந்த காலை யான - பரத்தையிற் பிரிந்த காலத்தின்கணுண்டான, பூப்பின் நீத்து - இருதுக்காலத்தின்கட் சொற்கேட்கும் அணுமைக்கண் நீங்கியிருந்து, புறப்பாடு ஈராறு நாளும் அகன்றுறையா என்மனார் புலவர் - அவ்விருதுக் காலத்தின் புறக்கூறாகிய பன்னிரண்டுநாளும் இருவரும் பிரிந்துறை யாரென்று கூறுவர் புலவர் என்றவாறு.

என்றது, பூப்புத்தோன்றிய மூன்றுநாளுங் கூட்டமின்றி அணுகவிருந்து அதன்பின்னர்ப் பன்னிரண்டுநாளுங் கூடியுறைப என்றதாம்.

தலைவியுந் தலைவனுந் [1]துனித்தும் இருத்தலிற் 'பிரிந்துறை யார்' எனப் பன்மையாற் கூறினார்.

இனிப், பூப்பின் முன்னாறுநாளும் பின்னாறுநாளுமென்றும், பூப்புத்தோன்றியநாள் முதலாகப் பன்னிரண்டுநாளுமென்றும், நீத்தல் தலைவன்மேல் ஏற்றியும், அகறலைத் தலைவிமேல் ஏற்றியும் உரைப்பாருமுளர். பரத்தையிற் பிரிந்தகாலத்துண்டான பூப்பெனவே, தலைவிசேடியர் செய்யகோலங்கொண்டு பரத்தையர் மனைக் கட்சென்று தலைவற்குப் பூப்புணர்த்துதலுங் கொள்க. இது,

1. துனி - உணர்ப்புவயின்வாரா ஊடல்.

[1]அரத்த முடீஇ யணிபழுப்புப் பூசிச்
சிரத்தையாற் செங்கழுநீர் சூட்டிப் – பரத்தை
நினைநோக்கிக் கூறினு நீமொழிய லென்று
மனைநோக்கி மாண விடும். (திணை: நூற். 144)

தோழி செவ்வணியணிந்துவிட்டமை தலைவன் பாங்காயினார் கூறியது.

இக்காலத்தின்கண் வேறுபாடாக வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக்கொள்க.

பூப்புப் புறப்பட்ட ஞான்றும், மற்றையநாளுங் கருத் தங்கில் அது வயிற்றில் அழிதலும், மூன்றாம்நாள் தங்கில் அது சில் வாழ்க்கைத்தாகலும்பற்றி முந்நாளுங் கூட்டமின்றென்றார். கூட்டமின்றியும் நீங்காதிருத்தலிற் பரத்தையிற் பிரிந்தானெனத் தலைவி நெஞ்சத்துக் கொண்ட வருத்தம் அகலும். அகல வாய்க்குங்கரு மாட்சிமைப்படுமாயிற்று. இது மகப்பேற்றுக் காலத்திற்குரிய நிலைமை கூறிற்று. இதனாற் **பரத்தையிற் பிரியுநாள் ஒரு திங்களிற் பதினைந்தென்றாராயிற்று**. உதாரணம் வந்துழிக் காண்க. 'குக்கூ' (குறுந். 157) என்பதனைக் காட்டுவாருமுளர். (46)

**(ஓதற்பிரிவிற்குக் காலவரையறை யிதுவெனல்)**

**188. வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது.**

இஃது 'ஓதலுந் தூதும்' (26) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய ஓதற்பிரிவிற்குக் காலவரையறையின்றென்பதூஉம் அவ்வோத்து இது வென்பதூஉம் உணர்த்துகின்றது.

**இ – ள்:** [2]கல்வி வேண்டிய யாண்டு இறவாது - துறவறத்தினைக் கூறும் வேதாந்தமுதலிய கல்வி வேண்டிய யாண்டைக்கடவாது, மூன்று இறவாது - அக்கல்வியெல்லாம் மூன்றுபதத்தைக் கடவாது என்றவாறு.

'இறவாது' என்பதை இரண்டிடத்துங் கூட்டுக. மூன்று பதமாவன:- அதுவென்றும் நீயென்றும் ஆனாயென்றுங் கூறும் பதங்களாம். அவை பரமுஞ் சீவனும் அவ்விரண்டும் ஒன்றாதலுமாகலின் இம்மூன்று பதத்தின்கண்ணே தத்துவங்களைக் கடந்த

---

1. அரத்தம் - செந்நிற வஸ்திரம். பழுப்பு - அரிதாரம்; அதன் சாந்துபூசி என்றபடி. சிரத்தை - அன்பு. மனை - பரத்தைவீடு.

2. இப்பொருள் நேர்பொருளன்று; வலிந்து கோடலாம்.

பொருளை யுணர்த்தும் ஆகமங்களெல்லாம் விரியுமாறு உணர்ந்து கொள்க. இது மூன்று வருணத்தார்க்குங் கூறினார். ஏனை வேளாளரும் ஆகமங்களானும் அப்பொருளைக்கூறிய தமிழானும் உணர்தல் 'உயர்ந்தோர்க்குரிய' (31) என்பதனான் உணர்க. இஃது இல்லறம் நிகழ்த்தினார் துறவறம் நிகழ்த்துங் கருத்தினராக வேண்டுதலின் காலவரையறை கூறாராயினார். முன்னர்க் காட்டிய 'அரம்போழவ்வளை' (அகம். 125) என்னும் பாட்டினுட்,

> [1]பானாட் கங்குலின் முனிய வலைத்தி
> கடவுள் சான்ற செய்வினை மருங்கிற்
> சென்றோர் வல்வரி னோடுவை

என்றது இராப்பொழுது அகலாது நீட்டித்தற்கு ஆற்றா ளாய்க் கூறினாளென்று உணர்க. (47)

**(பகைவயிற்பிரிவிற்குக் காலவரையறை இதுவெனல்)**

**189.** வேந்துறு தொழிலே யாண்டின தகமே.

இது வரையறையுடைமையிற் பகைவயிற்பிரிவிற்கு வரையறை கூறுகின்றது.

**இ — ள்:** வேந்து உறு தொழிலே - இரு பெரு வேந்தருறும் பிரிவும், அவருள் ஒருவற்காக மற்றொரு வேந்தனுறும் பிரிவும், யாண்டினது அகமே - ஓர் யாண்டினுட்பட்டதாம் என்றவாறு.

'வேந்துறு தொழில்' என்பதனை இரட்டுறமொழிதல் என்பதனான், வேந்தனுக்கு மண்டிலமாக்களும் தண்டத்தலைவரு முதலியோர் உறும் பிரிவும் 'யாண்டினதகம்' எனவும் பொருளுரைக்க. 'தொழில்' என்றது அதிகாரத்தாற் பிரிந்து மீளும் எல்லையை. அது 'நடுவுநிலைத்திணையே நண்பகல் வேனிலொடு' (9) என்பதனாற் பிரிவிற்கோதிய இருவகைக்காலத்துள்ளும் முதற் கணின்ற சித்திரை தொடங்கித் தையீறாகக் கிடந்த பத்துத் திங்களுமாம். இனி பத்தென்னாது யாண்டென்றதனாற் 'பின்பனி தானும்' (10) என்பதனாற்கொண்ட சிறப்பில்லாத பின்பனிக் குரிய மாசி தொடங்கித் தையீறாக யாண்டு முழுவதூஉங் கொள்ளக் கிடந்ததேனும் அதுவும் பன்னிரு திங்களுங் கழிந்த தன்மையின் யாண்டினதகம் ஆமாறுணர்க. இதற்கு இழிந்த எல்லைவரை வின்மையிற் கூறாராயினார்; அது,

---

1. முனிய அலைத்தி - வெறுப்ப அலைப்பாய். கடவுள் சான்ற செய்வினை - கடவுட்டன்மை அமைந்த செய்வினை என்றது ஓதலை. வல்வரின் - விரைந்துவரின். இது வாடையை விளித்துக் கூறியது.

இன்றே சென்று வருவது நாளைக்
குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக (குறுந். 189)

*எனச் சான்றோர் [1]கூறலின்.*

[1]நிலநாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்
புலநாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்காற்
சுடர்நுதா னமக்கவர் வருதுமென் றுரைத்ததை. (கலி. 35)

*இது, பின்பனியிற் பிரிந்து இளவேனிலுள் வருதல் குறித் தலின் இரு திங்கள் இடையிட்டது.*

[2]கருவிக் காரிடி யிரீஇய
பருவ மன்றவர் வருதுமென் றதுவே. (அகம். 139)

*இது, கார் குறித்து வருவலென்றலின் அறுதிங்கள் இடையிட்டது.*

*'வேளர்ப் பார்ப்பான்' (அகம். 24) என்பது 'தைஇ நின்ற தண்பெயற் கடைநாட் ... பனியிருங் கங்குல்' என்றலின் யாண் டென்பதூஉம், அது கழிந்தன்மையின் அஃது அகமெனவும் பட்ட தென்பதூஉம் தலைவன் வருதுமென்று காலங்குறித்ததற் கொத்த வழக்கென்றுணர்க. காவற்பிரிவும் வேந்துறுதொழிலெனவே அடங்கிற்று; தான்கொண்ட நாட்டிற்குப் பின்னும் பகையுள தாங்கொலென்று உட்கொண்டு காத்தலின். (48)*

### *(ஏனைப்பிரிவுகளுக்குக் காலவரையறை இதுவெனல்)*

**190.** ஏனைப் பிரிவு மவ்வயி னிலையும்.

*இஃது எஞ்சிய பிரிவிற்கு வரையறை கூறுகின்றது.*

**இ — ள்:** *ஏனைப் பிரிவும் அவ்வயின் நிலையும் - கழிந்து நின்ற தூதிற்கும் பொருளிற்கும் பிரிந்துமீளும் எல்லையும் யாண்டின தகம் என்றவாறு.*

---

1. கூறலின் கூறாராயினர் என்க.
2. நிலம் - நிலத்திலுள்ளார். திரிதரும் - வழங்கும். இது மாடக்கூடலுக்கு விசேடணம். மாடக்கூடல் - மதுரைமாநகர். புலநாவிற் பிறந்த சொல் - அறிவுடையோர் நாவிற் பிறந்த சொல்லாலாகிய கவி. பொழுது - இளவேனில். உரைத்தது பொழுதன்றோ என மாற்றிக் கூட்டுக. விடுத்தக்கால் - விடுக்க.
3. இரீஇய - தன்னிடத்தே ஓடச்செய்த; அமரச்செய்த என்றுமாம். பருவமன்று - பருவமன்றுபோலும். வருதுமென்றது பருவமன்று போலும் என இயைக்க.

*உதாரணம்:*

[1]மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்
பாடுலந் தன்றே பறைக்குர லெழிலி
புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை
நெடுங்குலப் பிடவமொ டொருங்குபிணி யவிழக்
காடே கம்மென் றன்றே யவல
கோடுடைந் தன்ன கோடற் பைம்பயிர்ப்
பதவின் பாவை முனைஇ மதவுநடை
யண்ண னல்லே றமர்பிணை தழீஇத்
தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டன்றே
யனையகொல் வாழி தோழி மனைய
தாழ்வி னொச்சி சூழ்வன மலரும்
மௌவன் மாச்சினை காட்டி
யவ்வள வென்றோ ராண்டுச்செய் பொருளே. (அகம். 23)

*இது பொருட்பிரிவின்கட் கார் குறித்து ஆறு திங்கள் இடையிட்டது.*

*'நெஞ்சு நடுக்குற' என்னும்* **பாலைக்கலி** *(24) யுள்,*

**நடுநின்று, செய்பொருண் முற்றுமள வென்றார்;** *என்றலின் எத்துணையும் அணித்தாக மீள்வலென்றதாம். இவற்றிற்குப் பேரெல்லை வந்த செய்யுள் வந்துழிக் காண்க. (49)*

***(தலைவன் முதலியோர்க்குரிய மரபு கூறல்)***

**191.** யாறுங் குளனுங் காவு மாடிப்
பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப.

*இது, தலைவற்குங் காமக்கிழத்தியர்க்குந் தலைவியர்க்கும் உரியதோர் மரபு கூறுகின்றது.*

**இ — ள்:** *யாறும் குளனும் காவும் ஆடி - காவிரியும் தண் பொருனையும் ஆன்பொருனையும் வையையும் போலும் யாற்றிலும் இருகாமத்திணையேரிப்போலும் (பட்டினப். 39) குளங்களிலும், திருமருதந்துறைக்காவேபோலுங் (கலி. 25) காக்களினும் விளையாடி, பதி இகந்து நுகர்தலும் உரிய என்ப - உறைபதியைக் கடந்து போய் நுகர்ச்சியெய்துதலுந் தலைவற்குங் காமக்கிழத்தியர்க்குந் தலைவியர்க்கும் உரிய என்றவாறு.*

---

1. மண்கண் - மண்ணிடம். பாடுஉலந்தன்று - ஒலிஅடங்கிற்று. பறை - முரசு. தளவு - முல்லை. இதல்முட்செந்நனை - சிவல்முட்போலும் சிவந்த அரும்பு. அவல - பள்ளங்களிலுள்ளன. கோடு - சங்கு. கோடல் - வெண்காந்தள். பதவின்பாவை - அறுகங்கிழங்கு. முனைஇ - வெறுத்து. அனையகொல் - அவ்வளவிற்றோ? மௌவல் - முல்லை. அவ்வளவு - அது மலருங் காலமளவு.

*ஏற்புழிக் கோடலால் தலைவியர்க்குச் சிறுபான்மையென் றுணர்க.*

[1]கதிரிலை நெடுவேற் கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையிற் கதழ்புநெரி தந்த
சிறையழி புதுப்புன லாடுக
மெம்மொடுங் கொண்மோவெந் தோள்புரை புணையே.
(ஐங்குறு. 78)

*இது, காமக்கிழத்தி நின்மனைவியோடன்றி எம்மொடு புணைகொள்ளின் யாமாடுதுமென்று புனலாட்டிற்கு இயைந் தாள்போல மறுத்தது.*

[2]வயன்மல ராம்பற் கயிலமை நுடங்குதழைத்
திதலை யல்குற் றுயல்வருங் கூந்தற்
குவளை யுண்க ணேஎர் மெல்லியன்
மலரார் மலிர்நிறை வந்தெனப்
புனலாடு புணர்துணை யாயின ளெமக்கே. (ஐங்குறு. 72)

*இது, தலைவி புலவிநீங்கித் தன்னொடு புனலாடல்வேண்டிய தலைவன், முன் புனலாடியதனை அவள் கேட்பத் தோழிக்குரைத்தது.*

வண்ண வொண்டழை (ஐங்குறு. 73)

விசும்பிழி தோகை. (ஐங்குறு. 74)

*இவையும் அது.*

புனவளர் பூங்கொடி.

*என்னும் மருதக்கலி (92) யுள்,*

[3]அன்ன வகையால்யான் கண்ட கனவுதா
னன்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானா தகவும் பொழுதினான் மேவர
நான்மாடக் கூடன் மகளிரு மைந்தருந்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா
ரானா விருப்போ டணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு

*என்னுஞ் சுரிதகத்துக் காவிற் புணர்ந்திருந்தாட நீயுங் கருதெனத் தலைவன் தலைவிக்குக் கூறியவாறு காண்க. (50)*

---

1. கடுமான்கிள்ளி - சோழன் ஒருவன் பெயர். இன் - உவமஉருபு. கதழ் - விரைந்து. நெரிதந்தசிறை - நெரிந்தசிறை. சிறை - கரை. எந்தோள்புரைபுணை என்றது - மூங்கிற்புணையை.

2. கயில் - மூட்டுவாய். கயில் அமை - பூட்டு அமைந்தது. எனவே ஆபரணம் என்றாயிற்று. தழைக்கு விசேடணமாக்கினுமமையும். ஏர் - அழகு. மலிர் நிறை - வெள்ளப்பெருக்கு.

3. நன்வாயா - நல்ல உண்மையாக. காண்டை - காண்பாய். ஆனாது - அமை யாது. அகவும் - பெடையை அழைக்கும். பொழுது - இளவேனில். அணி அயர்ப - அணிகளை அணிவார். எதிர்கொண்டு அணி அயர்ப என இயைக்க.

**(தலைவனும் தலைவியும் இல்லற நிகழ்த்தியபின் துறவறமும் நிகழ்த்துவர் எனல்)**

**192.** காமஞ் சான்ற கடைக்கோட் காலை
யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே.

*இது, முன்னர் இல்லற நிகழ்த்திய தலைவனுந் தலைவியும் பின்னர்த் துறவற நிகழ்த்தி வீடு பெறுப என்கின்றது.*

*இ – ள்: கிழவனும் கிழத்தியும் - தலைவனுந் தலைவியும், சுற்றமொடு துவன்றி அறம்புரி மக்களொடு - உரிமைச் சுற்றத் தோடே கூடிநின்று இல்லறஞ் செய்தலை விரும்பிய மக்களோடே, சான்ற காமங் கடைக்கோட் காலை - தமக்கு முன்னரமைந்த காமத்தினையுந் தீதாக உட்கொண்ட காலத்திலே, சிறந்தது ஏமஞ் சான்ற பயிற்றல் - அறம்பொருளின்பத்திற் சிறந்த வீட் டின்பம் பெறுதற்கு ஏமஞ் சான்றவற்றை அடிப்படுத்தல், இறந்த தன் பயனே - யான் முற்கூறிய இல்லறத்தின் பயன் என்றவாறு.*

*'சான்றகாமம்' என்றார், நுகர்ச்சியெல்லாம் முடிந்தமை தோன்ற. இது கடையாயினார் நிற்கும் நிலையென்று உரைத் தற்குக் 'கடை' என்றார். ஏமஞ்சான்றவாவன:- வானப்பிரத்தமுஞ் சந்நியாசமும். எனவே, இல்லறத்தின்பின்னர் இவற்றின்கண்ணே நின்று பின்னர் மெய்யுணர்ந்து வீடு பெறுப என்றார். இவ் வீடு பேற்றினை இன்றியமையாது இவ்வில்லறமென்பது இதன் பயன். இது காஞ்சி யாகாதோவெனின்? ஆகாது; (தற்குறிப்பினானன்றி நிலையாமை தானே வருவதுதான் சிறந்து நிலைபெற்றுநிற்கு மெனச் சான்றோர் கூறுதலும், அது தானேவந்து நிற்றலுங் காஞ்சி. இஃது அன்னதன்றிச் சிறந்த வீட்டின்ப வேட்கையால் தாமே எல்லாவற்றையும் பற்றறத் துறத்தலின் அகப்பொருட் பகுதியாம்.) இதனானே இவ்வோத்தினுட் பலவழியுங் கூறிய [1]காமம் நிலையின்மையின்மேல் இன்பத்தை விளைத்தே வருதலிற் காஞ்சியாகாமையுணர்க. உதாரணம்:*

அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும் – விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணு
நறுநுதலார் நன்மைத் துணை. **(நாலடி. 381)**

---

1. காமம் விளைத்தே வருதலின் என இயைக்க.

இதனுள், [1]அருந்ததியைப்போலுந் (?) தமக்குப் பெரும் பொருள்களை நச்சுதலாலே இரப்பாராது வறுமையே விரும்பிப் பாதுகாத்து, அவர்க்கு வேண்டுவன கொடுக்கும் மகளிர், நாஞ் செல்கின்ற வானப்பிரத்த காருகத்திற்குத் துணையாவரெனத் தலைவன் கூறவே தலைவியும் பொருள்களிற் பற்றற்றாளாய் யாமுந் துறவறத்தின் மேற் செல்வாமெனக் கூறியவாறு காண்க. பிறவும் வந்துழிக் காண்க. (51)

### (வாயில்களாவார் இவர் எனல்)

**193.** **தோழி தாயே பார்ப்பான் பாங்கன்**
**பாணன் பாடினி யிளையர் விருந்தினர்**
**கூத்தர் விறலிய ரறிவர் கண்டோர்**
**யாத்த சிறப்பின் வாயில் களென்ப.**

இது, வாயில்களைத் தொகுத்து அவருந் துறவிற்கு உரிய ராவர் என்கின்றது.

இ — ள்: தோழி - அன்பாற் சிறந்த தோழியும், தாய் - அவளே போலுஞ் செவிலியும், பார்ப்பான் - அலரின் ஆற்றலுடைய பார்ப்பானும், பாங்கன் - அவரேபோலும் பாங்கனும், பாணன் - பாங்குபட்டொழுகும் பாணனும், [2]பாடினி - தலைவிமாட்டுப் பாங்காயொழுகும் பாடினியும், இளையர் - என்றும் பிரியா இளை யரும், விருந்தினர் - இருவரும் அன்புசெய்யும் விருந்தினரும், கூத்தர் - தலைவற்கு இன்றியமையாக் கூத்தரும், விறலியர் - தாமே யாடலும் பாடலும் நிகழ்த்தும் விறலியரும், அறிவர் - முன்னே துறவுள்ளத்தராகிய அறிவரும், கண்டோர் - அவர் துறவுகண்டு கருணை செய்யுங் கண்டோரும், யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப - இந்தத் தலைவனுந் தலைவியும் பெற்ற துறவின்கண்ணே

---

1. அருந்ததியைப்போலும் என்பது அயிராணியைப்போலும் என்று பாட்டின் படி இருத்தல்வேண்டும். அயிராணியைப்போலும் என்று பாடங்கொள்ளின், இங்கே நச்சினார்க்கினியர் கூறிய பொருள் பொருந்தாது. இப்பாட்டின்படி பொருள் கூறுங்கால், பெரும் பெயர் - பெரும்பொருள்கள் என்று கொள்ளப் படும். அவ்வாறே நச்சினார்க்கினியருங் கூறியுள்ளார். போலும் என்பது மகளிரொடு முடியும். பின்னிற்பார் - இரப்போர்; வறியவர். நன்மை - வானப் பிரத்த காருகம். காருகம் - ஊழியம் (- தொண்டு). எனவே வானப்பிரத்த நெறியில் நிற்பார்க்குச் செய்யத்தகுவதான தொண்டிற்குத் துணையாவார் என்பது கருத்தாம்.

2. பாடினி - யாழ்ப்பாடினி.

மனம் பிணிப்புண்ட சிறப்பினையுடைய வாயில்களென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

என்றது, இவர் அத்துறவிற்கு இடையூறாகாது முன்செல்வர், தாமும் அவரைப் பிரிவாற்றாமையினென்பதாம். இதனைக் 'கற்புங் காமமும்' என்னும் (152) சூத்திரத்து முன்னாக வாயில்களைத் தொகுத்துக்கூறிய சூத்திரமாக வைத்தல் பொருத்தமுடைத் தேனும் 'யாத்த சிறப்பின்' என்று துறவுநோக்குதலின் இதன்பின் வைத்தார். இதற்குக் கோப்பொருஞ்சோழன் துறந்துழிப் [1]பிசிராந்தை யாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தாரென்று கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம் என்றவாறு. (52)

**(வினைவயிற்பிரிந்துமீளுந் தலைவற்குரியதோரிலக்கணமுணர்த்தல்)**

**194.** வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவருங் காலை
யிடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை
யுள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான.

இதுபிரிந்து மீளுங்காற் செய்யத்தகுவதோர் இயல்பு கூறுகின்றது.

**இ – ள்:** வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவருகாலை - யாதானுமோர் செய்வினையிடத்துப் பிரிந்தோன் அதனை முடித்து மீண்டு வருங்காலத்து, இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை - எத்துணைக் காதம் இடையிட்டதாயினும் இவ்விடையின் கணுண்டாகிய ஒரு வருவழியிடத்துத் தங்கி வருதலில்லை. உள்ளம் போல உற்றுழி உதவும் - உள்ளஞ் சேட்புலத்தை ஒரு கணத்திற் செல்லுமாறுபோலத் தலைவன் மனஞ் சென்றுற்ற விடத்தே ஒருகணத்திற்சென்று உதவி செய்யும், புள்இயல் கலிமா உடைமை யான - புட்போல் நிலந்தீண்டாத செலவினையுடைய [2]கலித்த குதிரையுடையனாதலான் என்றவாறு.

---

1. பிசிராந்தையாரும் பொத்தியாரும் கோப்பெருஞ்சோழனோடு நண்பு பூண்டிருந்த இரு புலவர்கள். அவன் துறந்தபொழுது இவர்களும் துறந் தமையை - புறநானூற்றுள்வரும் 212, 216, 217, 218, 220, 223-ம் செய்யுட் களாலறியலாம்.

2. கலித்த - செருக்கின.

தேருங் குதிரையாலல்லது செல்லாமையிற் குதிரையைக் கூறினார். இஃது இடையிற்றங்காது, இரவும் பகலுமாக வருதல் கூறிற்று. இதனை மீட்சிக்கெல்லைகூறிய சூத்திரங்களின்பின் வையாது, ஈண்டுத் துறவு கூறியதன்பின்னர் வைத்தார், இன்ப நுகர்ச்சியின்றி இருந்து அதன்மேல் இன்பமெய்துகின்ற நிலை யாமை நோக்கியும், மேலும் இன்பப்பகுதியாகிய பொருள் கூறு கின்றதற்கு அதிகாரப் படுத்தற்குமென்றுணர்க. உதாரணம்:

[1]வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந்
தினவண் டார்க்குந் தண்ணறும் புறவின்
வென்வே லிளைய ரின்புற வலவன்
வள்புவலித் தூரி னல்லதை முள்ளுறின்
முந்நீர் மண்டில மாதி யாற்றா
நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்
வாங்குசினை பொலிய வேறிப் புதல
பூங்கொடி யவரைப் பொய்யத ளன்ன
வுள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி
மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய
புன்றலைச் சிறாரோ டுகளி மன்றுழைக்
கவையிலை யாரி னிளங்குழை கறிக்குஞ்
சீறூர் பல்பிறக் கொழிய மாலை
யினிதுசெய் தனையா லெந்தை வாழிய
பனிவார் கண்ணள் பலபுலந் துறையு
மாய்தொடி யரிவை கூந்தற்
போதுகுர லணிய வேய்தந் தோயே. (அகம். 104)

இதனுள், வினைமுடித்தகாலைத் தேரிளையர் செலவிற் கேற்ப ஊராது கோலூன்றின் [2]உலகிறந்தன செலவிற்குப் பற்றாத குதிரைத் தேரேறி இடைச்சூத்திரத்திற்றங்காது மாலைக்காலத்து வந்து பூச்சூடினை, இனிது செய்தனை எந்தை வாழிய எனத் தோழி கூறியவாறு காண்க.

'இருந்த வேந்த னருந்தொழின் முடித்தென' என்னும் அகப் பாட்டி (384)னுள்,

1. வேந்து வினைமுடித்தகாலை - வேந்தனது வினையை முடித்த போது. புறவு - காடு (- முல்லைநிலம்). வலவன் - பாகன். வள்பு - வார் (- கடிவாளம்). முள் - தாற்றுக்கோல். ஆதி - ஒருகதி. நால்கு - நான்கு. பரி - வேகம்; குதிரையுமாம். உள்இல் - உள்ளீடில்லாத. வெள்ளை வெண்மறி - வெள்ளாட்டுக்குட்டி. வெள் - வெண்மை; வாளாபெயரெனினுமமையும். உகளி - துள்ளிவிளையாடி. ஆர் - ஆத்தி. பிறக்கு - பின். வேய்ந்தோய் - பூச்சூடினே. எந்தை - எந்தலைவனே.

2. உலகிறந்தன பற்றாத என இயையும். பற்றாத - போதாத.

[1]புரிந்த காதலொடு பெருந்தேர் யானு
மேறிய தல்லது வந்த வாறு
நனியறிந் தன்றோ விலனே ...
இழிமி னென்றநின் மொழிமருண் டிசினே
வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
வுரைமதி வாழியோ வலவ

*என 'உள்ளம்போல உற்றுழி உதவிற்று' எனத் தலைவன் கூறிய வாறு காண்க.* *(53)*

## கற்பியல் முற்றிற்று

1. ஏறியதல்லது வந்தவாறு அறிந்தன்றோவிலன் - அறிந்ததோவிலன் (அறிந்திலன்). இழிமின் - இறங்குமின். மொழிமருண்டிசின் - மொழிகேட்டு மயங்கினேன் (அதிசயித்தேன்). வளி - காற்று. மான் - குதிரை. வலவஉரைமதி - வலவஉரைப்பாய். மதி - முன்னிலையசை.

## ஐந்தாவது: பொருளியல்

### (வழுவமைதி இருவகையவெனல்)

**195.** இசைதிரிந் திசைப்பினு மியையுமன் பொருளே
யசைதிரிந் தியலா வென்மனார் புலவர்.

இவ்வோத்துப் பொருளிலக்கணம் உணர்த்தினமையிற் பொருளியலென்னும் பெயர்த்தாயிற்று. ஏனை ஓத்துக்களும் பொருளதிலக்கணமன்றே உணர்த்தின, இதற்கிது பெயராய வாறென்னையெனின்; சொல்லதிகாரத்திற் கூறிய சொற்களை மரபியலின் [1]"இருதிணை ஐம்பா லியனெறி வழாமைத் திரிபில் சொல்" லென்பாராதலின் அவை ஈண்டுத் தம்பொருளை வேறு பட்டிசைப்பினும் பொருளாமெனவும், இப் பொருளதிகாரத்து முன்னர்க்கூறிய பொருள்களிற் பிறழ்ந்திசைப்பனவும் பொருளா மெனவும் அமைத்துச், சொல்லுணர்த்தும் பொருளுந் தொடர் மொழியுணர்த்தும் பொருளும் ஒருங்கே கூறலிற் பொருளிய லென்றார். இச்சூத்திரம் இவ்வோத்தின்கண் அமைகின்ற வழு வமைதிகளெல்லாஞ் சொற்பொருளின் வழுவமைதியும் பொரு ளின் வழுவமைதியுமென இருவகைய என்கின்றது.

இ — ள்: [2]இசைதிரிந்து இசைப்பினும் - சொற்கள் தத்தம் பொருளுணர்த்தாது வேறுபட்டிசைப்பினும், அசைதிரிந்து இயலா இசைப்பினும் - இவ்வதிகாரத்துள் யாத்த பொருள்கள் நாடகவழக்கும் உலகியல் வழக்குமாகிய புலனெறி வழக்கிற் றிரிந்து இயன்றிசைப்பினும், மன்பொருள் இயையும் என்மனார் புலவர் - அவை மிகவும் பொருளேயாய்ப் பொருந்துமென்று தொல்லாசிரியர் கூறுவர் என்றவாறு. அதனால் யானும் அவ்வாறு கூறுவலென்றார்.

சொல்லாவது எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறி வுறுக்கும் ஓசையாதலின் அதனை இசையென்றார். இஃது[3] ஆகுபெயர். அசைக்கப்பட்டது அசையென்பதும் ஆகுபெயர்.

---

1. (மரபியல் - 89) நிலந்தீ ... தழா அல் வேண்டும்
2. இசை - சொல்
3. இசை - இசைத்தலுடையது (சொல்) = தொழிலாகுபெயர். அசைத்தல் - யாத் தல் அது யாக்கப்பட்ட தாகிய பொருளுக்கு ஆகியதும் தொழிலாகுபெயர்.

*'நோயுமின்பமும்' (196) என்பதனுள் 'இருபெயர் மூன்று முரிய வாக' என்பதனால் திணைமயங்குமென்றும் 'உண்டற்குரிய வல்லாப் பொருளை' (213) என்றும் பிறாண்டுஞ் சொல் வேறுபட்டுப் பொருளுணர்த்துதலும், இறைச்சிப் பொருண் முதலியன நாடக வழக்கின் வழீஇயவாறும், 'தேரும் யானையும்' (212) 'அறக்கழி வுடையன' (218) 'தாயத்தினடையா' (221) என்னுஞ் சூத்திர முதலி யன உலகியல்வழக்கின் வழீஇய வாறுங் கூறி, அவ் வழு அமைக் கின்றவாறு மேலே காண்க.* **புறத்திணையியலுட்** *புறத்திணை வழுக் கூறி அகப்பொருட்குரிய வழுவே ஈண்டுக் கூறுகின்றதென் றுணர்க.*

*'இயலா' என்றதனால்[1] 'என் செய்வாம்' என்றவழிப் 'பொன் செய்வாம்' என்றாற்போல வினாவிற்பயவாது இறை பயந்தாற் போல நிற்பனவுங் கொள்க. இன்னும் அதனானே செய்யுளி டத்துச் சொற்பொருளானன்றித் தொடர்பொருளாற்பொருள் வேறுபட இசைத்தலுங் கொள்க. அது சூத்திரத்துஞ் செய்யுளுள் ளும் பொருள் கூறுமாற்றானுணர்க.* (1)

**(முற்கூறிய இருவகையானும் பொருள் வேறுபட்டு வழீஇ யமையுமாறு கூறல்)**

**196.** நோயு மின்பமு மிருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
வெட்டன் பகுதியும் விளங்க வொட்டிய
வுறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன்
மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியு
மவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியு
மறிவும் புலனும் வேறுபட நிறீஇ
யிருபெயர் மூன்று முரிய வாக
வுவம வாயிற் படுத்தலு முவம
மொன்றிடத் திருவர்க்கு முரியபாற் கிளவி.

1. இது குறிஞ்சிக்கலி 24ஞ்செய்யுளடி. இதற்கு நச்சினார்க்கினியர் 'பொன் செய்வாம்' என நகைக்குறிப்புத்தோன்றக் கூறினாள் என்று உரைகூறலின் தனக்கு உடன்பாடன்மை தோன்றத் தோற்றப்பொலிவு செய்வாம் என நகையாடிக் கூறினாள் என்பது கருத்தாகும். இறைபயத்தலாவது: நேர் விடையாகாது குறிப்பாற் றோன்றும் விடையாய் வருவது. வினாவிற்கு நேர் விடையாகாது குறிப்பால் விடைபயப்பது என்பது கருத்து. கலி 64ஞ் செய்யுளுள்ளும் 'பொன்படுகுவை' என வருதலும் நோக்குக.

இது முற்கூறிய இருவகையானும் பொருள்வேறுபட்டு வழீஇ யமையுமாறு கூறுகின்றது.

**இ — ள்:** நோயும் இன்பமும் இருவகை நிலையிற் காமம் கண்ணிய மரபிடை தெரிய - துன்பமும் இன்பமுமாகிய இரண்டு நிலைக்களத்துங் காமங் கருதின வரலாற்று முறையிடம் விளங்க, எட்டன் பகுதியும் விளங்க - நகை முதலிய எட்டனுடைய கூறு பாடுந் தோன்ற, அறிவும் புலனும் வேறுபட நிறீஇ இருபெயர் மூன்றும் உரியவாக - மன அறிவும் பொறியறிவும் வேறுபட நிறுத்தி அஃறிணையிருபாற்கண்ணும் உயர்திணை மூன்று பொருளுமுரியவாக, அவரவர் ஒட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல் மறுத்துரைப்பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும் - கூறுகின்ற அவரவர் தமக்குப் பொருந்திய உறுப் பெல்லாம் அதுவுடையதுபோலவும் உணர்வுடையதுபோலவும் மறுமாற்றந் தருவதுபோலவுந் தந்நெஞ்சொடு புணர்த்துச்சொல் லியும், சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் செய்யா மரபிற் றொழிற்படுத்தடக்கியும் - வார்த்தை சொல்லா முறைமையுடை யனவாகிய புள்ளும் மாவும் முதலியவற்றோடே அவை வார்த்தை கூறுவனவாகப் பொருந்தி அவை செய்தலாற்றாத முறைமை யினையுடைய தொழிலினை அவற்றின்மேலே ஏற்றியும், உறு பிணி தமபோலச் சேர்த்தியும் - அச்சொல்லா மரபினவை உற்ற பிணிகளைத் தம்பிணிக்கு வருந்தினபோலச் சார்த்திக் கூறியும், உவமம் ஒன்றிடத்து உவமவாயிற்படுத்தலும் - அம் மூவகைப் பொருளை உவமஞ்செய்தற்குப் பொருந்துமிடத்து உவமத்தின் வழியிலே சார்த்திக் கூறுதலும், இருவர்க்கும் உரியபாற் கிளவி - அத் தலைவர்க்குந் தலைவியர்க்கு முரிய இலக்கணத்திற் பக்கச் சொல் என்றவாறு.

தெரிய விளங்க உரியவாகப் புணர்த்தும் அடக்கியுஞ் சேர்த்தும் அவற்றைப்படுத்தலும் அவ்விருவர்க்குமுரிய பாற்கிளவி யென முடிக்க. அவரவரென்கின்றார் [1]அகத்திணையியலுட் பல ராகக்கூறிய தலைவரையுந் தலைவியரையும். [2]இருவரென்றதும் அவரென்னுஞ் சுட்டு. நெஞ்சென்னும் அஃறிணையொருமையைத்

---

1. அகத்திணையியலுட் பலராகக்கூறிய தலைவர் தலைவியர் என்றது; ஐந்திணைக்குரிய தலைமக்களும் நான்குவருணத்தாரும் முதலாயினோரை யும் அடிமையோரையும் வினைவல பாங்கினோரையும்.

2. இருவர், என்றபெயர் ஈண்டு அவர் என்னுஞ் சுட்டுமாத்திரையாய் நின்ற தென்றபடி.

*தெரிய விளங்கத் தலைவன் கூறும்வழி உயர்திணையாண்பாலாக வும் தலைவிகூறும்வழி உயர்திணைப் பெண்பாலாகவும் அவற் றைத் தம்போலச் சேர்த்திக் கூறுபடுத்து உயர்திணை முப்பா லாக்கியுங் கூறுபவென வழுவமைத்தார்.*

*இருவகை நிலைக்களத்து [1]எட்டனையும் சேர்க்கப் பதினா றாம். அவற்றை நெஞ்சொடு சேர்க்கப் பலவாமென்றுணர்க.*

*'உண்ணாமையின்' என்னும்* அகப்பாட்டி *(123)* னுள்,

இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
வொன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே

*என்றவழி 'அழிதக வுடைமதி வாழிய நெஞ்சே' என்றதனான் நிலையின்றாகுதியென நெஞ்சினை யுறுப்புடையதுபோலக் கழறி நன்குரைத்தவாறும் [2]ஓதத்தையும் நெஞ்சையும் உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்தவாறுங் காண்க.*

கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்த்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே. (அகம். 9)

*இஃது, உறுப்புடையதுபோல் [3]உவந்துரைத்தது.*

*'அன்றவ ணொழிந்தன்று மிலையே' என்னும்* அகப்பாட்டி *(19)* னுள்,

வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை
யுருடுடி மகுளியிற் பொருடெரிந் திசைக்குங்
கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்ற
மெம்மொ டிறத்தலுஞ் செல்லாய் பின்னின்
றொழியச் சூழ்ந்தனை யாயிற் றவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் (அகம். 19)

*என அறிவுடையதுபோல் அழுகைபற்றிக் கூறிற்று.*

பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே. (குறுந். 19)

*என்றது உணர்வுடையதுபோல் வெகுளிபற்றிக் கூறிற்று.*

---

1. எட்டு என்றது மெய்ப்பாடெட்டையும்.
2. ஓதம் - கடலின் நீர்ப்பெருக்கு.
3. இதுமுதலாக மெய்ப்பாட்டுக்குரிய உதாரணங் கூறுகின்றார். உவந்து என்பது உவகை என்னு மெய்ப்பாட்டைக் குறித்து நின்றது. ஏனையனவுமன்ன.

உள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ்
செல்ல நீர்கஞ் செல்வா மெனினுஞ்
செய்வினை முடியா தெவ்வஞ் செய்த
லெய்யா மையோ டிளிவுதலைத் தருமென
வுறுதி தூக்காத் தூங்கி யறிவே
சிறிதுநனி விரைய லென்னு மாயிடை
யொளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே. (நற். 284)

*இஃது, உணர்வுடையதுபோல இளிவரல்பற்றிக் கூறியது.*

ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக்
கம்மா வரிவையும் வருமோ
வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே. (குறுந். 63)

*இது, மறுத்துரைப்பார்போல நெஞ்சினை இளிவரல் பற்றிக் கூறியது.*

பின்னின்று துரக்கு நெஞ்ச நின்வாய்
வாய்போற் பொய்மொழி யெவ்வமென் களைமா (அகம். 3)

*என்பதும் அது,*

விசும்புற நிவந்த என்பதனுள்,

வருக வென்னுதி யாயின்
வாரே னெஞ்சம் வாய்க்கநின் வினையே (அகம். 131)

*என்பது, மறுத்துரைப்பதுபோல் தறுகண்மைபற்றிய பெருமிதங் கூறிற்று. ஏனை அச்சமும் மருட்கையும் பற்றியன தலைவன் கூற்று வந்துழிக் காண்க. இவை நெஞ்சை ஆண்பாலாகக் கூறின.*

*'மன்று பாடவிந்து' (அகம் 128) என்பதனுள்,*

நெஞ்ச, மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானத் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே.

*என்பது உறுப்புடையதுபோல் அழுகைபற்றிக் கூறியது.*

*'குறுநிலைக்குரவின்' (நற்றிணை. 56) என்பது உறுப்புமுணர்வு முடையதுபோல இளிவரல்பற்றிக் கூறியது.*

அறியவும் பெற்றாயோ வறியாயோ மடநெஞ்சே. (கலி. 123)

*இஃது உணர்வுடையதுபோல் நகைபற்றிக் கூறியது.*

கோடெழி லகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா
வூடுவே னென்பென்ம னந்நிலையே யவற்காணிற்
கூடுவே னென்னுமிக் கொள்கையி னெஞ்சே. (கலி. 67)

*இது, மறுத்துரைப்பதுபோல் உவகைபற்றிக் கூறியது.*

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. (குறள். 1291)

*இஃது, இளிவரல்பற்றி மறுத்துக் கூறியது. ஏனைய வந்துழிக் காண்க. இவை நெஞ்சினைத் தலைவி பெண்பாலாகக் கூறியன. [1]இவை துன்பமும் இன்பமும் நிலைக்களமாகக் காமங்கண்ணிய மரபிடை தெரியவந்தன.*

கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா
தொருநீ யல்லது பிறிதியாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
பறைவ தளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமா ரலவ (அகம். 170)
........ ............ ............... .........

*இது சொல்லாமரபின சொல்லுவனவாக அழுகைபற்றிக் கூறியது. இவை உயர்திணையுமாயின.*

கொங்குதேர் வாழ்க்கை ... (குறுந். 2)

*என்பது உவகைப்பற்றிக் கூறியது.*

போர்தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போ
லாரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ. (கலி. 120)

*இது, செய்கையில்லாத மாலைப்பொழுதினைச் செய்யா மரபில் தொழிற்படுத்தடக்கி உவமவாயிற்படுத்தது.*

*'தொல்லூழி தடுமாறி' (கலி. 129) என்பதனுள்,*

பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கட
றூவத் துறந்தனன் றுறைவனென் றவன்றிற
நோய்தெற வுழைப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை வுடையையோ நீ;

மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றி
னன்றறை கொன்றன ரவரெனக் கலங்கிய

1. இச்சூத்திரத்து நோயுமின்பமும் என்பதை விளக்கி இவ்வாக்கியம் எழுதப்பட்டது.

வென்றுய ரறிந்தனை நரறியோ வெம்போல
வின்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ;

பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ
லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல
இனியசெய் தகன்றாரை யுடையையோ நீ

*எனக் கடலும் அன்றிலுங் குழலும் உற்ற பிணியைத் தம் பிணிக்கு வருந்தினவாகச் சேர்த்து உயர்திணையாக்கி உவம வாயிற் படுத்தவாறு காண்க.*

*'ஒன்றிடத்து' என்றார் வேண்டியவாறு உவமங் கோடலாகா தென்றற்கு. பகுதியைப் 'பால்கெழு கிளவி' (199) என மேலும் ஆளுப. 'காமங்கண்ணிய' என்றதனாற் கைக்கிளையும் பெருந் திணையுமாகிய காமத்திற்கு வருவனவுங் கொள்க:*

சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையு
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி – முன்றின்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு. (முத்தொள்)

*இது கைக்கிளைக்கண் உறுப்புடையதுபோல் அவலம் பற்றி நெஞ்சினைக் கூறியது.*

ஓங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லுங்
காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு
மாந்தளிர்க் கையிற் றடவரு மாமயில்
பூம்பொழி னோக்கிப் புகுவனபின் செல்லுந்
தோளெனச் சென்று துளங்கொளி வேய்தொடு
நீள்கதுப் பிஃதென நீரற லுட்புகும்
வாளொளி முல்லை முகையை முறுவலென்
றாள்வலி மிக்கா னஃதறி கல்லான்

*என்றாற்போல உயர்திணையாக உவமவாயிற்படுத்த பெருந்திணை யாய் வருவனவுங் காண்க. இஃது அவலம். (2)*

***(முற்கூறிய நிலைமைகள் கனவின்கண்ணு நிகழுமெனல்)***

**197. கனவு முரித்தா லவ்விடத் தான.**

*இது, மேற்கூறிய நிலைமைகள் கனவின்கண்ணும் நிகழு மெனப் பகுதிக் கிளவி கூறுகின்றது.*

*இ – ள்: அவ்விடத்தான - முன்னர் வழுவமைத்த நிலைமை யின்கண்ணே வந்தன, கனவும் உரித்தால் - கனவும் உரித்தா யிருந்தது முந்துநூற்கண் என்றவாறு.*

*எனவே, யானுங் கூறுவலென்றார்.*

அலந்தாங் கமையலே னென்றானைப் பற்றியென்
னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்
கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்;

முலையிடைத் துயிலு மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தே னழுவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும். (கலி. 128)

*இவற்றுள், தன்னெஞ்சினை உறுப்பும் உணர்வும் மறுத் துரைத்தலுமுடையதாகக் கூறியவாறும், ஆங்கு [1]எதிர்பெய்து கொண்ட தலைவன் உருவும் உறுப்பும் உணர்வும் மறுத்துரைத் தலுமுடையதாகச் செய்யாமரபின் செய்ததாகக் கூறியவாறும், அவை உயர் திணையாகக் கூறியவாறும், பிறவுமுணர்க.*

[2]இன்னகை யினைய மாகவு மெம்வயி
னூடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமயத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின் (அகம். 39)

*என வருவனவுங் கொள்க.* *(3)*

**(கனவு களவின்கட் செவிலிக்குமுரித்தெனல்)**

**198. தாய்க்கு முரித்தாற் போக்குடன் கிளப்பின்.**

*இது முற்கூறிய கனவு களவின்கட் செவிலிக்கு முரித்தென வழுவமைகின்றது.*

*இ — ள்: உடன்போக்குக் கிளப்பின் - உடன்போக்கின்கட் கூறின், தாய்க்கும் உரித்தால் - அக்கனவு செவிலிக்கும் உரித் தாயிருந்தது முந்து நூற்கண் என்றவாறு.*

*தோழி உடன்பட்டுப் போக்குதலானும், நற்றாய் 'நற்பாற் பட்டனள்' என்று வருதலானுந், 'தாயெனப்படுவோள் செவிலி யாகும்' (124) என்பதனானுஞ் செவிலியைத் தாயென்றார். தலைவி போகாமற் காத்தற்குரியளாதலானும், அவளை என்றும் பிரியாத பயிற்சியானுஞ் செவிலிக்குக் கனவு உரித்தாயிற்று.*

காய்ந்து செலற்கனலி என்பதனுட்
கண்படை பெறேன் கனவ. (அகம். 55)

*என்றவாறு காண்க.* *(4)*

---

1. எதிர்பெய்துகொண்ட என்றது - தனக்குமுன்னிற்பவனாக இட்டுக்கொண்ட (முன்னிலைப்படுத்திக்கொண்ட) தலைவன் உருவும் - தலைவனுடைய உருவும் என்க.

2. வாயல்கனவு - உண்மையல்லாத கனவு.

### (பக்கச்சொல் தோழி முதலிய நால்வர்க்குமுரித்தெனல்)

**199. பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே.**

*இது, எய்தாத தெய்துவித்து வழுவமைக்கின்றது.*

*இ — ள்: பால்கெழு கிளவி - இலக்கணத்திற் [1]பக்கச்சொல், நால்வர்க்கும் உரித்து - தோழியுஞ் செவிலியும் நற்றாயும் பாங்கனு மென்னும் நால்வர்க்கும் உரித்தாம் என்றவாறு.*

*மேல் 'இருவர்க்குமுரிய பாற்கிளவி' (196) என்றலின் தலை வனையும் தலைவியையும் ஆண்டே கூறலின் ஈண்டு இந்நால் வருமென்றே கொள்க.*

தருமணற் கிடந்த பாவையென்
மருமக ளேயென முயங்கின ளழுமே. (அகம். 165)

*இது, நற்றாய் மணற்பாவையைப் பெண்பாலாகக் கூறித் தழீஇக்கொண் டழுதலிற் பால்கெழுகிளவியாயிற்று.*

தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப
வீன்றாய்நீ பாவை யிருங்குரவே — யீன்றாண்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டா யீதென்று வந்து (திணை: நூற். 65)

*என்பது செவிலி குரவை வழிகாட்டென்றலிற் பால்கெழு கிளவி யாயிற்று. ஏனையிரண்டும் மேல்விலக்குப.* *(5)*

### (இறந்தது காத்தல்)

**200. நட்பி னடக்கை யாங்கலங் கடையே.**

*இஃது, இறந்தது காத்தது.*

*இ — ள்: ஆங்கு - அந்நால்வரிடத்து, நட்பின் நடக்கை அலங்கடை - நட்பின்கண்ணே ஒழுகுதலல்லாத [2]அவ்வீரிடத்தும் பால் கெழுகிளவி உரித்து என்றவாறு.*

*எனவே, நட்புச்செய் தொழுகுந் தோழிக்கும் பாங்கனுக்கும் 'பால்கெழுகிளவி' (199) இன்றென்றாரெனக் கொள்க.* *(6)*

---

1. பக்கச் சொல் - பகுதிச்சொல்; இலக்கணமல்லவாயினும் இலக்கணமுடைய வாக அமைத்துக்கொள்வது.

2. அவ்வீரிடத்தும் என்றது செவிலியும் நற்றாயுமாகிய இருவரிடத்தும் என்றபடி.

(தலைவிக்கு வேறுபாடு தோன்றியவிடத்து அதனைப் பரிகரித்தற்குரியாரிவரெனல்)

201. உயிரு நாணு மடனு மென்றிவை
செயிர்தீர் சிறப்பி னால்வர்க்கு முரிய.

*இது, தலைவிக்குத் தலைவனாற் பிறப்பதோர் வேறுபாடு தோன்றியவழி அதனைப் பரிகரித்தற் குரியோர் இவரென வழு வமைக்கின்றது.*

*இ — ள்: உயிரும் நாணும் மடனும் என்றிவை - உயிரும் நாணும் மடனுமென்று கூறப்பட்ட இவை மூன்றும், செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய - குற்றந்தீர்ந்த தலைமையினை யுடைய நற்றாய்க்குஞ் செவிலிக்குந் தோழிக்குந் தலைவற்குமுரிய, என்றவாறு.*

*உம்மை ஐயமாதலின் தலைவனை யொழிந்த மூவர்க்கு முரிய என்றாராயிற்று. என்றது தலைவன் இவற்றைக் களவிலுங் கற்பிலுங் காத்தலும் வரைவிடைவைத்துப் பிரிந்தும் பரத்தை யிற் பிரிந்துங் காவாமையுமுடையனென்பது கூறிற்று. அவை [1]எழுவகையால் (207) தோழி அவற்றைக் காத்து அறத்தொடுநிற்ப, அதனைச் செவிலி உட்கொண்டு அவற்றைக் காத்து நற்றாய்க் கறத்தொடுநிற்ப, அவளும் அவற்றை உட்கொண்டு காத்தற்கு அறத்தொடு நிற்றலும் உடன் போயது அறனென நற்றாய் கோடலுஞ் செவிலி பிறரை வரைகின்றானோவெனத் தோழியை வின வலும் பிறவுமாம். உதாரணம் முன்னர்க் காட்டியவற்றுட் காண்க.*

*இனி உம்மையை முற்றும்மையாக்கி உயிர் முதலிய தலைவி யுறுப்பினை உறுப்புடைத்தாகவும் மறுத்துரைப்பதாகவுங் [2]கூறப் பெறாதென்றார். (7)*

(தலைவி வருத்தமிக்கவழி இவ்வாறு புணர்க்கவும் பெறுமெனல்)

202. வண்ணம் பசந்து புலம்புறு காலை
யுணர்ந்த போல வுறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே.

*இது, வருத்தமிக்கவழி இவையுமா மென்கிறது.*

---

1. எழுவகையால் அறத்தொடு நிற்றலை 207ஞ் சூத்திரநோக்கியறிக.
2. கூற அவ்வுறுப்புப் பெறாது என முடிக்க.

இ — ள்: வண்ணம் பசந்து புலம்பு உறுகாலை - மேனி பசந்து தனிப்பட்டுருறுங்காலத்து, கிழவி உறுப்பினை உணர்ந்த போல - தலைவி தனது உறுப்பினை அறிந்தனபோல, புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே - பொருந்தின கூற்றாற் சொல்லவும் பெறும் என்றவாறு.

கேளல னமக்கவன் குறுகன்மி னெனமற்றெந்
தோளொடு பகைபட்டு நினைவாடு நெஞ்சத்தேம். (கலி. 68)

நாணில மன்றவெங் கண்ணே நாணேர்பு
சினைப்பசும் பாம்பின் சூன்முதிர் பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ
நுண்ணுறை யழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே. (குறுந். 35)

தணந்தநாள் சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள். (குறள். 1233)

காதும் ஓதியும் முதலியன கூறப்பெறா, கண்ணுந் தோளும் முலையும் போல்வன புணர்க்கப்படுமென்றற்குப் 'புணர்ந்த வகை' யென்றார். இதனானே இவற்றைத் தலைவன்பாற் செலவு வரவுடை யனபோலக் கூறலுங்கொள்க.

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று (குறள். 1244)

எனக் கண்ணினைச் செல்வனவாகக் கூறினாள். (8)

**(தலைவனொடு வேறுபட்டவழித் தலைவி இவ்வாறு கூறுவள் எனல்)**

203. உடம்பு முயிரும் வாடியக் காலு
மென்னுற் றனகொ லிவையெனி னல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.

இது, தலைவனோடு வேறுபட்டுழிப் பிறப்பதோர் வழு வமைதி கூறுகின்றது.

இ — ள்: உடம்பும் உயிரும் வாடியக் காலும் - தன் உடம்பும் உயிருந் தேய்ந்து கூட்டமின்றி இருந்தகாலத்தும், இவை என் உற்றன கொல் எனின் அல்லது - இவை என்ன வருத்த முற்றன கொலென்று தனக்கு வருத்தமில்லதுபோலக் கூறினல்லது, கிழத்திக்குக் கிழவோற் சேர்தல் இல்லை - தலைவிக்குத் தலைவனைத் தானே சென்று சேர்தல் இருவகைக் கைக்கோளினுமில்லை என்றவாறு.

*இது, காதல்கூரவுங் கணவற்சேராது வஞ்சம்போன்றொழு கலின் வழுவாயினும் அமைக்க என்றவாறு.*

எற்றோ வாழி தோழி முற்றுபு
கறிவள ரடுக்கத் திரவின் முழங்கிய
மங்குல் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட விழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி யருவி யுண்டுறைத் தரூஉங்
குன்ற நாடன் கேண்மை
மென்றோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே (குறுந். 90)

*என்பதனுட் கேண்மை தோளை மெலிவித்ததாயினும் எனக்கு அமைதியைத் தந்தது; யான் ஆற்றவுந் தாம் மெலிதல் பொருந் தாதது எத்தன்மைத்தெனத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க. 'கலைதீண்ட வழுக்கி வீழ்ந்த பழத்தை யருவி பின்னும் பயன்படுத்து நாடன்' என்றதனானே அலரால் நஞ்சுற் றத்திற் பிரிந்தேமாயினும் அவன் நம்மை வரைந்துகொண்டு இல்லறஞ் செய்வித்துப் பயன்படுத்துவனென்பதாம்*

[1]கதுமெனத் தாநோக்கித் தாமே கலிழு
மிதுநகத் தக்க துடைத்து (குறள். 1173)

*இதுவும் அது.*

[2]ஒஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டன. (குறள். 1176)

*இதுவும் இதன்பாற்படும்.*

[3]இனிப்புணர்ந்த வெழினல்லா ரிலங்கெயி றுறாஅலி
னனிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி வரினெல்லா
துனிப்பேன்யா னென்னேன்ம னந்நிலையே யவற்காணிற்
றனித்தே தாழுமித் தனியி னெஞ்சே. (கலி.67)

*இதனுள், யான் துனித்தல்வல்லேன்; என் நெஞ்சிற்குத் தன் றன்மை யென்பதொன்றில்லை; ஈதென்னென்றலின் அவ்வாறு காண்க. (9)*

---

1. கலுழ்தல் - அழுதல் கண்கள் அழும் என்பது இவை என்னுற்றன கொல் என்பதிலடங்கும் என்றபடி.
2. ஓஒ இனிது - மிகவினிது, எமக்குத் துயர்செய்த கண்கள் தாமே துன்பமடைந் தன என்றபடி. இதுவுமதன்பாற்படும்.
3. இனி - இப்பொழுது. உறாஅலின் - அழுந்தலின். எல்லா - ஏடி . தனியில் நெஞ்சு - தனிமையான மனத்தைத் தனக்கு உரித்தாக்கு தலில்லாத நெஞ்சு. தனித்து - என்னைவிட்டு.

### (இதுவுமது)

**204. ஒருசிறை நெஞ்சமோ டுசாவுங் காலை**
**உரிய தாகலு முண்டென மொழிப.**

*இதுவும் அது.*

*இ — ள்: ஒருசிறை - தன் உள்ளத்து நின்ற தலைவனையொழியப் போந்துநின்றது, நெஞ்சமொடு [1]உசாவுங்காலை - தானுந் தன் நெஞ்சமும் வேறாக நின்று கூட்டத்திற்கு உசாவுங்காலம், உரிய தாகலும் உண்டென மொழிப - தலைவிக்குரித்தாகலும் உண் டென்று கூறுவர் புலவர், என்றவாறு.*

*உம்மையால் தோழியுடன் உசாவுங்காலமும் உண்டு என்று கொள்க. உம்மை எச்சவும்மை. இது தலைவனை வேறுபடுத்துத் தானும் நெஞ்சமும் ஒன்றாய்நின்று உசாவுதலின் வழுவாயமைந்தது. இது யாண்டு நிகழுமெனின் இவனொடு கூடாமையின் இவன் ஆற்றானாவனென்றானும் 'உணர்ப்புவயின்வாராவூடற்' கட் (150) புலக்குமென்றானும் பிறவாற்றானுமென்றானும் உசாவும்.*

[2]மான மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் றப்பினே
னென் றடி சேர்தலு முண்டு. **(கலி. 89)**

[3]பகலே பலருங் காண நாண்விட்
டகல்வயிற் படப்பை யவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி. **(நற்றிணை. 365)**

*இது, தோழியோடு உசாவியது. (10)*

### (மடமை அழியுமிடமிவை எனல்)

**205. தன்வயிற் கரத்தலு மவன்வயின் வேட்டலு**
**மன்ன விடங்க ளல்வழி யெல்லா**
**மடனொடு நிற்றல் கடனென மொழிப.**

*இது, பெண்டிர்க்கியல்பாகிய மடமை யழிவதோர் வழு வமைக்கின்றது.*

---

1. உசாவல் - வினாவல்
2. மாண - யான் மாட்சிமைப்பட்டிருக்க. மாண உள்ளா எனக் கூட்டுக. இப் போர் - ஊடற்போர். புறஞ்சாய்ந்து - தோற்று. நெஞ்சே காண்பாய் என்க.
3. பலருங்காணச் சென்மோ என இயையும். சென்மோ?- செல்லுவேமோ? வினாவி - மன்றத்துள்ளாரை வினவி.

இ — ள்: தன்வயிற் கரத்தலும் - தலைவன் தலைவியிடத்தே புறத்தொழுக்க மின்றென்று பொய்கூறலும், அவன்வயின் வேட்டலும் - அங்ஙனங் கரந்து கூறிய தலைவன்கட் டலைவி விரும்புதலும், அன்ன இடங்கள் அல்வழி எல்லாம் - ஆகிய அவை போலும் இடங்களல்லாத இடத்தெல்லாம், மடனொடு நிற்றல் கடனென மொழிப - தலைவி மடமையுள்ளாகிநிற்றல் கடப்பாடென்று கூறுவர் புலவர் என்றவாறு.

எனவே இவ்வீரிடத்தும் மடனழிதலுடையளென வழுவமைத்தார். அது 'குதிரை வழங்கிவருவல்' (கலி. 96) என்று அவன் கரந்தவழி, அதனை மெய்யெனக் கோடலன்றே மடமை, அங்ஙனங் கொள்ளாது அறிந்தேன் குதிரைதானெனப் பரத்தையர்கட்டங்கினாயெனக் கூறுதலின் இது மடனழிந்த வழுவமைதியாயிற்று.

> [1]கவவுக்கை ஞெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
> செவிலி கையென் புதல்வனை நோக்கி
> நல்லோர்க் கொத்தனிர் நீயி ரிஃதோ
> செல்வர்க் கொத்தனம் யாமென மெல்லவென்
> மகன்வயிற் பெயர்தந் தேனே (அகம். 26)

என்றவழி, மனத்து நிகழ்ந்து வேட்கையை மறைத்து வன் கண்மை செய்து மாறினமையின் அதுவும் மடனழிந்து வழுவாகி யமைந்தது. அன்னவிடமென்றதனால்,

> [1]யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
> யாரினும் யாரினு மென்று (குறள். 1314)

என்றாற்போல மடனழிய வருவனவுங் கொள்க. (11)

**(தலைவி அறத்தொடு நிற்குங் காலத்தன்றித் தோழி அறத்தோடு நில்லாள் எனல்)**

**206.** அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
யறத்தியன் மரபில டோழி யென்ப.

இது, தலைவியால் தோழிக்கு வருவதோர் வழுவமைக்கின்றது.

---

1. கவவு - அகத்தீடு. கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி - அகத்தீட்டொழுக்கம் நழுவினமைகருதி. எம் புதல்வனைநோக்கி இந்தச் செல்வற்கியைந்தேம் யாமென்று மெல்ல என் மகன் வயின் சென்றேன் என இயைக்க

2. தன்னால் காதலிக்கப்பட்ட மகளிர் யாரினும் காதல் உடையே னென்றாகக் கருதினமையின் மடனழிய வந்தது என்றார்.

இ – ள்: அறத்தொடு நிற்குங் காலத் தன்றி - தலைவி இக் களவினைத் தமர்க்கறிவுறுத்தல் வேண்டுமென்னுங் கருத்தின ளாகிய காலத்தன்றி, தோழி அறத்தியன் மரபில ளென்ப - தோழி அறத்தினியல்பாகத் தமர்க்குக் கூறும் முறைமையிலளென்று கூறுவர் புலவர் என்றவாறு.

காலமாவன [1]நொதுமலர்வரைவும் வெறியாட்டெடுத்தலும் முதலியன. தலைவி களவின்கண்ணே கற்புக்கடம் பூண்டு ஒழுகு கின்றாளை நொதுமலர் வரைவைக் கருதினார் என்பதூஉம் இற் பிறந்தார்க் கேலாத வெறியாட்டுத் தம்மனைக்கண் நிகழ்ந்த தூஉம் தலைவிக் [2]கிறந்துபாடு பிறக்குமென்று [3]உட்கொண்டு அவை பிறவாமற்போற்றுதல் தோழிக்குக் கடனாதலின் இவை நிகழ்வதற்கு முன்னே தமர்க்கறிவித்தல்வேண்டும்; அங்ஙனம் அறிவியாதிருத்தலின் வழுவாயமைந்தது.

[4]இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கின்
கண்ணகன் றூமணி பெறூஉ நாட
னறிவுகாழ்க் கொள்ளு மளவைச் சிறுதொடி
யெம்மில் வருகுவை நீயெனப்
பொம்ம லோதி நீவி யோனே. (குறுந். 379)

இது, நொதுமலர் வரைவுகூறி உசாவி அறத்தொடு நின்றது.

கடவுட் கற்சுனை யடையிறந் தவிழ்ந்த (நற்றிணை. 34)

இது, வெறியாட்டெடுத்தவழி அறத்தொடு நின்றது.

அகவன் மகளே யகவன் மகளே (குறுந். 23)

இது, [5]கட்டுக்காணிய நின்றவிடத்து அறத்தொடு நின்றது.

அதுவும் வெறியாட்டின்கண் அடங்கும். தலைவிக்குக் குறிப் பினு மிடத்தினுமல்லது வேட்கைநெறிப்பட வாராமையிற் சின் னாள் கழித்தும் அறத்தொடுநிற்பாளாகலானுஞ் செவிலியும் நற் றாயுங் கேட்ட பொழுதே அறத்தொடு நிற்ப ராகலானும் ஆண்டு வழுவின்று. (12)

---

1. நொதுமலர் - அயலார்
2. இறந்துபாடு - இறந்துபடுதல்
3. உட்கோடல் - கருதல், சிந்தித்தல்
4. கானவன் - வேட்டுவன். காழ்க்கொள்ளல் - முதிர்தல். இல் - வீடு நீவியோன் - தடவியோன்.
5. கட்டுக்காணல் - கட்டுவிச்சியால் கட்டுப் பார்ப்பித்தல். கட்டாவது இன்னது என்பதைக் களவியலில் "கட்டினுங் கழங்கினும்" என்னுஞ் சூத்திர அடி விளக்கக் குறிப்பாலறிக.

(அறத்தொடு நிற்கும்வகை இவையெனல்)

207. எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுத லுசாத லேதீடு தலைப்பா
டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
யவ்வெழு வகைய வென்மனார் புலவர்.

இதுவும் அவ்வறத்தொடு நிலை இனைத்தென்கின்றது.

இ — ள்: எளித்தல் - தலைவனை எளியனாகக் கூறுதல், ஏத்தல் - அவனை உயர்த்துக்கூறல், வேட்கை உரைத்தல் - அவனது வேட்கை மிகுந்துரைத்துக் கூறல், கூறுதல் உசாதல் - தலைவியுந் தோழியும் வெறியாட்டிடத்தும் பிரிவிடத்துஞ் சில கூறுதற் கண்ணே தாமும் பிறருடனேயும் உசாவுதல், ஏதீடு - ஒருவன் களிறும் புலியும் நாயும் போல்வன காத்து எம்மைக் கைக் கொண்டா னெனவும் பூத்தந்தான் தழைதந்தானெனவும் இவை முதலிய காரணமிட்டுணர்த்தல், தலைப்பாடு - இருவருந் தாமே எதிர்ப் பட்டார் யான் அறிந்திலேனெனக் கூறுதல், உண்மை செப்புங் கிளவி யொடு தொகைஇ - என்று அவ்வாறனையும் [1]படைத்து மொழி யாது பட்டாங்கு கூறுதலென்னுங் கிளவியோடே கூட்டி, அவ் எழு வகைய என்மனார் புலவர் - அத்தன்மைத்தாகிய ஏழுகூற்றை யுடைய அறத்தொடு நிற்றலென்று கூறுவர் புலவர் என்றவாறு.

'அவ்வெழுவகைய' என்றதனால் உண்மைசெப்புங்கால் ஏனையாறு பொருளினுட் சில உடன்கூறி உண்மைசெப்பலும் ஏனைய கூறுங்காலுந் தனித்தனிக் கூறாது இரண்டும் மூன்றும் உடனே கூறுதலுங்கொள்க. உதாரணம்:

[2]எல்லு மெல்லின் றசைவுபெரி துடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின் மற்றெவனோ
வெனமொழிந் தனனே யொருவன். (அகம். 110)

என்பது எளித்தல்.

1. படைத்துமொழிதல் - கற்பித்துக்கூறல். பட்டாங்கு - நிகழ்ந்தபடி,

2. எல் - பகல். எல்இன்று - ஒளியின்று (இருண்டது). அசைவு - தொழில் செய்த லாலுண்டான மெய்யசைவு. எளிவந்து கூறினானாகக்கூறலின் எளித்தல் என்றார்.

[1]பகன்மா யந்திப் படுசுட ரமயத்
தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள் (அகம். 48)

*என்பது ஏத்தல்.*

[2]பூணாக முறத்தழீஇப் போதந்தான் (கலி. 39)

*என்பது வேட்கையுரைத்தல்.*

[3]முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுத லுடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவ ணறுநுத னீவி
வணங்கினை கொடுத்தி யாயி னணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்ப
னொண்டா ரகலமு முண்ணுமோ பலியே. (குறுந். 362)

*இது, [4]வேலனொடு கூறுதலுசாதல், கூறுதற்கண் உசாத லென விரிக்க,*

[5]வாடாத் சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்ப தல்லது – கோடா
வெழிலு முலையு மிரண்டற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து. (திணை: நூற். 15)

*இதுவும் உசாதலாய் அடங்கும்.*

[6]உரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளு
முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர
நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியா
மிடும்பைகூர் மனத்தே மருண்டு புலம்படர

---

1. படுசுடரமையம் - ஞாயிறுபடுங்காலம். தேஎம் - திக்கு. இவன் மகனே என்றனள் - இவன் ஒரு புருஷனே என்று வியந்து கூறினாள். இது தலைவனைப் புகழ்ந்துகூறலின் ஏத்தல் என்றாள்.

2. ஆகமுறத்தழுவினான் என்றதனால் அவன் வேட்கையுரைத்தலாயிற்று

3. சில்லவிழ்மடை - சில சோற்றோடுகூடிய பலி. மறி - ஆட்டுக்குட்டி, அணங்கிய - தலைவியை வருத்திய. வருத்திய அகலம் என்க. அகலம் - மார்பு.

4. வேலனொடு உசாதல் என இயையும்; வேலன் வெறியாடிக் கூறற்கண் அவனொடுந் தோழி உசாவும் என்றபடி. இளம்பூரணம் நோக்கியறிக.

5. கோடாது - மனங்கோடாது. கோடா - தளராத. பொழில் - உலகு. போந்து - நிரம்பி. நிரம்பிவிலையாமோ என இயையும்.

6. ஞமலி - நாய். திளையா - இமையாத. வளைகுபுநெரிதர - எம்மை வளைத்துக்கொண்டு நெருங்குகையினாலே. புலம்படர - வேற்றுப் புலத்து ஏறச்

மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்
தாகாண் விடையி னணிபெற வந்தெ
மலமர லாயிடை வெருவுத லஞ்சி
மெல்லிய வினிய மேவரக் கிளந்தெ
மைம்பா லாய்கவி னேத்தி யொண்டொடி
யசைமென் சாய லவ்வாங் குந்தி
மடமதர் மழைக்க ணிளையீ ரிறந்த
கெடுதியு முடையே னென்றனன் (குறிஞ்சி. 130 – 42)

*என நாய் காத்தவாறும்.*

[1]கணைவிடு புடையூக் கானங் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக
விரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅஞ் செருக்கிமரங் கொல்பு
மையல் வேழ மடங்கலி னெதிர்தர
வுய்விட மறியே மாகி யொய்யெனத்
திருந்துகோ லெல்வளை தெளிர்ப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையி னடுங்க வார்கோ
லுடுவுறு பகழி வாங்கிக் கடுவிசை
யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலிற்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லா
தயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவே
ளணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத்
திண்ணிலைக் கடம்பின் றிரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடேஎ
நுரையுடைக் கலுழி பாய்தலி னுரவுத்திரை
யடுங்கரை வாழையி னடுங்கப் பெருந்தகை
யஞ்சி லோதி யசைய லெனையதூஉ
மஞ்ச லோம்புநின் னணிநலங் காக்கென
மாசறு சுடர்நுத னீவி நீடுநினைந்
தென்முக நோக்கி நக்கனன் (குறிஞ்சி. 160 – 83)

*எனக் களிறு காத்தவாறும், புனலுள் எடுத்தவாறுங் காண்க.*

---

செல்லாநிற்ப. புகல்வு - மனச்செருக்கு. விடை - ஆனேறு. அலமரல் - சுழற்சி. வெரூஉதல் - அஞ்சுதல். யாமஞ்சுதற்குத்தானஞ்சி என்க. அவ்வாங்குஉந்தி - அழகிய வளைந்த கொப்பூழ். கெடுதிகள் - கெடுக்கப்பட்டவை = இழந்தவை. அவை: மான், மரை, பன்றி, வேழம் முதலியன.

1. மடிவிடுவீளை - வாயைமடித்துவிடுஞ் சீழ்க்கை. எதிர - எதிர்த்தலினால் = புறத்தினின்றும் ஓட்டுதலினால். வெடி - ஓசை. பிணர் - சருச்சரை. எதிர்தர - எம்மேல் வருகையினாலே. விதுப்பு - நடுக்கம். உடு - நாணைக் கொள்ளுமிடம். பகழி - அம்பு. கடுப்ப - ஒப்ப. களத்திற்குருதியை ஒப்ப என்க. கலுழி - யாற்றின் பெருக்கு, அஞ்சல் ஓம்பு - அஞ்சுதலைப் பாதுகாப்பாய்.

[1]புலிபுலி யென்னும் பூச றோன்ற
வொண்செங் கழுநீர்க் கண்போ லாயித
ழூசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்லி னொருகணை தெரிந்துகொண்
டியாதோ மற்றிம் மாதிறம் படரென
வினவி நிற்றந் தோனே. (அகம். 48)

*இது, புலிகாத்தற்கு வந்தானென இட்டுரைத்தது.*

[2]அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை
தானு மலைந்தா னெமக்குந் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
யென்ன மரங்கொலவர் சார லவ்வே. (ஐங்குறு. 201)

*இது, தோழி தழைதந்தானென அறத்தொடு நின்றது.*

[3]சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை
யள்ளி யளகத்தின் மேலாய்ந்து – தெள்ளி
யிதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை
யுதணாற் கடிந்தா னுளன். (திணை: நூற். 2)

*இதனுள் அளகத்தின் மேலாய்ந்தெனவே பூத்தந்தமை கூறினாள்.*

[4]பிறிதொன் றின்மை யறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கி
கடுஞ்சூ டருகுவ னினக்கே. (அகம். 110)

*இது தலைப்பாடு.*

---

1. குறிஞ்சிநிலமகளிர் வேங்கைப்பூக் கொய்யுங்கால் புலி புலி யென்று பூசலிட்டுக் கொய்வது வழக்கு; அப்பூசல் கேட்டபளன்றபடி. கண்போலும் கழுநீர்ப்பூ என்க. ஊசி போகிய சூழ்செய்மாலை - ஊசியாற் கோத்துச் சுற்றின மாலை. ஊசிபோலும் அல்லியைக் கழித்துச் சுற்றின மாலையுமாம். செச்சை - வெட்சி. மாபடர்திறம் யாது? - புலியாகிய மா போனவழி யாது? என வினவிநின்றான் என இயைக்க.

2. என்னை - என்தலைவன். வீ - பூ. பொன்போலும் பூவும் மணிபோலும் அரும்பும் உடையன. சாரல் - மலைச்சாரலிடத்தன.

3. சுள்ளி - நறவு. சோபாலிகை - அடம்பு. செயலை - அசோகு. இதண் - பரண். இதணாற் கடியொடுங்கா பரணாற் காவலமையாத. உதண் - மொட்டம்பு.

4. பிறிதொன்றின்மை - தலைவிவேறுபாட்டிற்கு வேறொருகாரண மின்மை. புகாஅர்த்தெய்வம் - கடற்றெய்வம். கடுஞ்சூள் - கடிய சத்தியம். தலைப்பாடு - தலைப்படல்; இருவருந் தாமே எதிர்ப்படல்.

[1]நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கஞ் சின்னாட்
கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென
வீர நன்மொழி தீரக் கூறித்
துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயி
லுண்டுறை நிறுத்துப் பெயர்ந்தன னதற்கொண்
டன்றை யன்ன விருப்போ டென்று
மிரவரன் மாலைய னேவரு தோறுங்
காவலர் கடுகினுங் கதனாய் குரைப்பினு
நீதுயி லெழினு நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்றோ ளின்றுயி லென்றும்
பெறாஅன் பெயரினு முனிய லுறாஅ
னிளமையி னிகந்தன்று மிலனே வளமையிற்
றன்னிலை திரிந்தன்று மிலனே. (குறிஞ்சி. 231 – 245)

[2]அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி
யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலுழு மன்னாய் (ஐங்குறு. 220)

*என வருவன உண்மைசெப்பல்.*

*'காமர் கடும்புனல்' (கலி. 39) என்பதனுள் [3]இரண்டுவந்தன; பிறவு மன்ன. (13)*

## (*தோழி அறத்தொடு நிற்றல் தலைவி விருப்பத்தால் நிகழுமெனல்*)

**208.** உற்றுழி யல்லது சொல்ல லின்மையி
னப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப.

*இது, மேலதற்கோர் புறனடை.*

**இ – ள்:** *உற்றுழி அல்லது சொல்லல் இன்மையின் - தலைவியர்க்கு ஏதமுற்ற இடத்தன்றித் தோழி அவ்வாறு மறை புலப் படுத்துக் கூறாளாதலின், அப்பொருள் வேட்கைக் கிழவியின் உணர்ப - அம்மறை புலப்படுத்துதல் விருப்பத்தைத் தலைவியர் காரணத்தால் தோழியர் உணர்வர் என்றவாறு.*

---

1. துணைபுணர்ஏறு - ஆவைப் புணர்ந்த எறு. இரவரன்மாலையன் - இரவுக்குறி யில்வரும் தன்மையன்.

2. ஆடுகழை - அசைகின்ற மூங்கில். கலுழும் - அழும்.

3. இரண்டு என்றது - ஏதீடும் உண்மை செப்பலுமாகிய இரண்டையும்.

'உணர்வர்' என்று உயர்திணைப்பன்மையாற் கூறவே, தலைவியருந் தோழியரும் புலரென்றார். 'கிழவி' என்றாரேனும், 'ஒருபாற் கிளவி' (222) யென்பதனாற் பன்மையாகக் கொள்க. 'உயிரினுஞ் சிறந்த நாணுடையாள்' (113) இது புலப்படுத்தற்கு உடம்படுதலின் வழுவாயமைந்தது.

[1]இன்னுயிர் கழிவ தாயினு நின்மக
ளாய்மல ருண்கட் பசலை
காம நோயெனச் செப்பா தீமே (அகம். 52)

என்றாற் போல்வனவே இலக்கணமென்பது மேலைச் சூத்திரத் தாற் கூறுப. (14)

**(அறத்தொடு நிற்றல் வழுவென்றதற்குக் காரணங் கூறல்)**

209. செறிவு நிறைவுஞ் செம்மையுஞ் செப்பு
மறிவு மருமையும் பெண்பா லான.

இது, மறைபுலப்படாமல் ஒழுகுதல் இலக்கணமென்றற்கும் மறைபுலப்படுத்துதல் வழுவென்றற்குங் கூறுகின்றது.

இ — ள்: செறிவும் - அடக்கமும், நிறைவும் - மறைபுலப்படாமல் நிறுத்தும் உள்ளமும், செம்மையும் - மனக்கோட்டமின்மையும், செப்பும் - களவின்கட் செய்யத்தகுவன கூறலும், அறிவும் - நன்மைப்பயப்பனவும் தீமைபயப்பனவும் அறிவித்தலும், அருமை யும் - உள்ளக்கருத்தறிதலருமையும், பெண்பாலான - இவை யெல்லாம் பெண்பாற்குக் காரணங்கள் என்றவாறு.

இவையுடையளெனவே மறைபுலப்படுத்தற்கு உரியளல்ல ளென்பதூஉம் அதனைப் புலப்படுத்தலின் முற்கூறியன வழு வமைத்தனவுமாயிற்று. இவை வருஞ்சூத்திரத்திற்கும் ஒத்தலிற் சிங்கநோக்கு. (15)

**(வரைதல் வேட்கைக்குரிய கூற்றுக்கள் இவையெனல்)**

210. பொழுது மாறுங் காப்புமென் றிவற்றின்
வழுவி னாகிய குற்றங் காட்டலுந்
தன்னை யழிதலு மவணூ றஞ்சலு
மிரவினும் பகலினு நீவர லென்றலுங்

1. பசலை - பசப்பு. செப்பாதீமே - சொல்லாதொழிவாய் இது வினைத்திரிசொல்.

கிழவோன் றன்னை வார லென்றலு
நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த வன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள வென்ப.

இதுவுந் தோழிக்குந் தலைவிக்கும் உரியனவாகிய வழு வமைக்கின்றது.

இ — ள்: பொழுதும் ஆறும் காப்பும் என்றிவற்றின் வழுவின் ஆகிய குற்றங்காட்டலும் - இராப்பொழுதும் அக்காலத்து வழி யுங் கண்ணுறும் இடத்துள்ள காவலுமென்று கூறப்பட்டவை மூன்றினது பழையமுறையிற் பிறழுதலால் தலைவற்குளதாகிய குற்றத்தை யுணர்த்தலும்:

இவை, தலைவற்கு அச்சம் உளவாகக் கருதுதலும் அவ னால் நிகழும் இன்பத்தைத் துன்பமாகக் கருதுதலும் உடையன வாயிற்றேனும் அன்புபற்றிக் கூறலின் அமைந்தது. அப்பொழு திற் றலைவனது செலவு வரவு நிகழ்ந்துழியே இக்குற்றங் காட்டு வதென்று கொள்க.

[1]மன்றுபா டவிந்து (அகம். 128)

என்பது பொழுதுவழுவுதலிற் குற்றங்காட்டியது.

[2]ஈர்ந்த ணாடையை யெல்லி மாலையை
சோர்ந்துவீழ் கதுப்பினாள் செய்குறி நீவரி
னொளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென வார்ப்பவ ரேனல்கா வலரே. (கலி. 52)

இது, காப்பினான் வழுவுணர்த்தியது.

தன்னை அழிதலும் - அவன் அக்காலத்து அவ்வழியில் தனியே வருதற்கு யான் ஏதுவாயினேன் எனத் தன்னை அழிவு படுத்துரைத்தலும்:

1. மன்றுபாடு அவிதல் - ஊர்ப் பொதுமன்றம் ஒளி அடங்கல்; என்றது அங்குள் ளாரும் பொழுதானமையின் அதனை விட்டனர் என்றபடி. மனைமடிந்தன்று என்பது மனையிலுள்ளாரும் துயின்றனர் என்றபடி. எனவே இடையாம மாயிற்று. எனவே இக்காலம் அவர் வருதற்குத் தகுதியில்லை. எனக் குற்றங் காட்டியதாயிற்று.

2. ஞெகிழி - குறைக்கொள்ளி. கவணையர் - கல்லெறியும் கவணையுடையர்; ஐ - சாரியை. இது குறவர் காவலால் ஏதம் வருமென்ற தலைவி இரவுக்குறிவரல் விலக்கியது.

[1]நீதவ றுடையையு மல்லை நின்வயி
னானா வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே. (அகம். 72)

*அவன் வரவினை உவவாது; துன்பங்கூர்தல் வழுவாயினும் அதுவும் அவன்கண் அன்பாதலின் அமைத்தார்.*

*அவண் ஊறு அஞ்சலும் - அவ்வழியிடத்துத் தலைவற்கு வரும் ஏதமஞ்சுதலும்:*

[2]அஞ்சுவல் வாழி யைய வாரிருட்
கொங்கிய ரீன்ற மைந்தின்
வெஞ்சின வுழுவை திரிதருங் காடே.

*இஃது, அவனைப் புலிநலியுமென் றஞ்சியது.*

[3]ஒருநாள் விழும முறினும் வழிநாள்
வாழ்குவ ளல்லளென் றோழி (அகம். 18)

*என்பதும் அது.*

*ஆறின்னாமையாவது:- விலங்கு முதலியவற்றான் வரவிற்கு இடையீடு நிகழுமென்றஞ்சுதல்; [4]எளித்தலின் வேறாயிற்று. இது நன்குமதியாமையின் வழுவாயினும் அன்புமிகுதியான் அமைத்தார்.*

*இரவினும் பகலினும் நீ வர என்றலும் - இராப்பொழுதின் கண்ணும் பகற்பொழுதின்கண்ணுந் தலைவனைக் குறியிடத்து வருகவெனத் தோழி கூறலும்:*

[5]வல்வி லிளையரொ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
யன்றி லகவு மாங்கட்
சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே. (அகம். 120)

[6]பூவேய் புன்னையந் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே. (அகம். 240)

---

1. ஆனாஅரும்படர் - நீங்காத ஆற்றமுடியாத துன்பம்.
2. உழுவை - புலி. இருளில் புலி திரிதருங்காட்டை அஞ்சுவல் என இயைக்க.
3. விழுமம் - துன்பம் வழிநாள் - பின்னாள் (= அடுத்தநாள்)
4. எளித்தலின் வேறாயிற்று என்றது - தலைவனுக்கு ஏதம் வருமென்றஞ்சுதல் அறத்தொடு நிற்றலின்கட் கூறிய எளித்தலின் வேறு என்றபடி.
5. இஃது இரவுக்குறி வேண்டியது.
6. இது பகற்குறி நேர்ந்தது.

களவு அறிவுறுமென்று அஞ்சாது வருகவென்றலின் வழு வேனுந் தலைவி வருத்தம்பற்றிக் கூறலின் அமைத்தார்.

கிழவோன்றன்னை வாரல் என்றலும் - தோழியுந் தலைவியுந் தலைமை செய்துகொண்டு தலைவனை வாரற்க என்று கூறுதலும்:

தலைமை வழுவேனும் அன்பான் அமைத்தார்.

[1]இரவு வார லைய விரவுவீ
யகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுதியிவ டடமென் றோளே. (கலி. 49)

இஃது இரவுவாரலென்றது.

[2]பகல்வரிற் கவ்வை யஞ்சுதும் (அகம். 118)

என்றது பகல்வாரலென்றது.

[3]நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோருந் தான்வா ழலளே. (அகம். 12)

இஃது, இரவும் பகலும் வாரலென்றது.

நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும் - பிறிதோர் பொருண் மேல் வைத்து நன்மையுந் தீமையுந் தலைவற்கேற்பக் கூறலும்:

[4]கழிபெருங் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வரூஉ மின்பம் வெஃகார் (அகம். 112)

எனப் பிறர்மேல் வைத்துத் தலைவனை அறிவுகொளுத்தினமை யின் வழுவாயமைந்தது.

பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்.

எனவே புகழொடு வரூஉம் இன்பம் வெஃகுவரெனக் கொள்ள வைத்தலின் நன்மையுந் தீமையும் பிறிதின்மேல் வைத்துக் கூறிற்றாம்.

புரைபட வந்த அன்னவை பிறவும் - வழுப்பட வந்த இவை போல்வன பிறவும்:

அவை ஊடற்கணின்றியுந் தலைவனைக் கொடியனென் றலும் நொதுமலர் வரைகின்றாரென்றலும் அன்னை வெறி யெடுக்கின்றாளென்றலும் பிறவுமாம்.

---

1. வீ - பூ, அறைவரிக்கும் - பாறையிற் கோலஞ்செய்யும் இஃது இரவு வாரல் என்றது.
2. கவ்வை - அலர்.
3. ஓரும் - அசை. மெல்லியல்தான் வாழலள் என்க.
4. பிறிது - பிறிதுபொருள். இது சான்றோராகிய பிறிது பொருண்மேல் வைத்துக் கூறியது என்றபடி. பழியொடுவருமின்பம் தீமை, புகழொடுவருமின்பம் நன்மை என்றபடி.

[1]பகையினோய் செய்தான் (கலி. 40)

என்பது ஊடற்கணின்றிக் கொடியனென்றது.

[2]தினையுண் கேழ லிரிய

என்னும் நற்றிணை (119)யுள்,

யாவது, முயங்கல் பெறுகுவ னல்லன்
புலவிகொ ளீயர்தன் மலையினும் பெரிதே.

இது, நொதுமலர் வரைவு சிறைப்புறமாகக் கூறியது.

[3]கடம்புங் களிறும் பாடித் தொடங்குபு
தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலு
மாடின ளாத னன்றோ நீடு (அகம். 138)

என்பது தலைவர்க்கு வெறியாட்டுணர்த்தியது.

வரைதல் வேட்கைப் பொருள என்ப - தலைவன் வரைந்து கோடற்கண் நிகழும் விருப்பத்தைத் தமக்குப் பொருளாக வுடைய வென்றவாறு.

என்றது, வழுப்படக்கூறினும் வரைவுகாரணத்தாற் கூறலின் அமைக்க வென்றவாறாம். (16)

**(கைக்கிளை பெருந்திணைக்கட்படுவதோர் வழுவமைக்கின்றது.)**

**211. வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தன்
மரீஇய மருங்கி னுரித்தென மொழிப.**

இது, நடுவணைந்திணையல்லாத கைக்கிளை பெருந்திணைக் கட்படுவதோர் வழுவமைக்கின்றது.

**இ – ள்:** வேட்கை மறுத்து - தம்மனத்து வேட்கையை மாற்றி, ஆங்குக் கிளந்து உரைத்தல் - இருவரும் எதிர்ப்பட்டவிடத்துத் தாம் ஆற்றின தன்மையைப் புலப்படக்கூறி ஒருவர் ஒருவர்க்கு அறிவித்தல், மரீஇய மருங்கின் உரித்தென மொழிப - புலனெறி வழக்கஞ்செய்து மருவிப்போந்த கைக்கிளை பெருந்திணைக் கண் உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

---

1. பகையில்நோய் - மருந்தில்லாதநோய். இது வரைவுநீட்டித்தமைபற்றிக் கொடியனென்றது. ஆதலின் ஊடற்கணின்றி என்றார்.

2. வேற்று வரைவு உள்ளுறை உவமத்தாற் பெறப்பட்டது. நற்றிணையுரை நோக்கியறிக.

3. கடம்பும் களிறும் - முருகவேளின் கடப்பமாலையும் அவனது ஊர்தியாகிய பிணிமுகம் என்னும் யானையும். அன்னை - ஆடினளாதனன்றோ என்பது ஆடுவான் வினையை ஆடுவிப்பாள் மேலேற்றிக் கூறப்பட்டது.

*'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்' என அவை இருமருங்கும் நிற்றலின் ஈண்டு 'மருங்கு' என்றார்.*

[1]தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று. (கலி. 62)

*இஃது, அடியோர் தலைவராயவழித் தலைவி வேட்கை மறுத்துணர்த்தியது.*

[2]எறிந்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரா லென்னைப்
பொறுக்கலா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லே
னீநல்கி னுண்டென் னுயிர். (கலி. 94)

[3]உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னி
னிழிந்ததோ கூனின் பிறப்பு. (கலி. 94)

*இவை, அடியோர் தலைவராக வேட்கைமறுத்துணர்த்தியது. பெருந்திணை.*

*ஏனை வினைவலபாங்கினோர்க்கு வந்துழிக்காண்க. இவை கைகோளிரண்டன் கண்ணும் வழங்குதல் சிறுபான்மை யுரித் தென்று அகத்திணைக்கட் கூறலின் வழுவமைத்தார். 'ஒன்றென முடித்த'லான் மரீஇயவாறு [4]ஏனையவற்றிற்குங் கொள்க.*

[5]புள்ளிக் கள்வன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவு
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்புந்
தவறாதல் சாலாவோ கூறு (கலி. 88)

குதிரையோ வீறியது (கலி. 96)

*என வருவனவும் பிறவும் இழிந்தோர் கூற்றை உயர்ந்தோர் கூறுவன; அவையும் அமைத்துக்கொள்க. (17)*

---

1. இன்னா - துன்பம். வலிதின் என்றதனால் பொருந்திணையாயிற்று. இது தீதாமாதலின் அடியோர் தலைவராயது என்று இக்கவியுரையில் நச்சினார்க்கினியர் கூறுகின்றார். ஆயின் அடியோர் என்பது இச்செய்யுளிற் கூறப்படவில்லை.

2. எறித்தபடை - கலப்பையிற்றைத்த படைவாள். நெறித்து விட்டன்ன - முறித்துவிட்டாற்போன்ற. ஏர் - அழகு. பொறீஇ - ஆற்றி.

3. உழுந்து - உழுத்தம்பணியாரம். துவ்வா - அனுபவிக்கப்பட்டு இருக்கின்ற.

4. ஏனைய என்றது ஐந்திணையை.

5. கள்வன் - ஞெண்டு. சேர்பொதுக்கம் - சேர்புஒதுக்கம் எனப் பிரிப்பர் நச்சினார்க்கினியர். ஒதுக்கம் - நடை; அது வடுவுக்காயினது. ஆகுபெயர் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்து. தவறாதல் சாலாவோ - தப்பாதற்கு அமையாவோ. போழ்ந்தன, உற்றன என்பவை வினைப்பெயராய் வழுக்களையுணர்த்திற்று.

**(இது களவொழுக்கத்தின்கண் தேர் முதலியவற்றை ஊர்ந்துந் தலைவன் செல்லுவன் எனல்)**

**212.** தேரும் யானையுங் குதிரையும் பிறவு
மூர்ந்தன ரியங்கலு முரிய ரென்ப.

*இது, களவொழுக்கத்துக்கு மறுதலையாயதோர் வழுவமைக்கின்றது.*

*இ – ள்: தேர் முதலியவற்றையும் பிறவூர்திகளையும் ஏறிச் சென்று கூடுதலையும் உரியர் தலைவரென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

*'பிற' ஆவன கோவேறுகழுதையுஞ் சிவிகையும் முதலியன வாம். இது செல்வக் குறைபாடின்மை கூறுதலான் அமைந்தது.*

[1]குறியின்றிப் பன்னாணின் கடுந்திண்டேர் வருபதங்கண்
டெறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்பதோ
வறிவஞ ருழந்தேங்கி யாய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர லிவளைநீ துறந்ததை. (கலி. 127)

[2]நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே (அகம். 20)

கடுமான் பரிய கதழ்பரி கடைஇ
நடுநாள் வரூஉம். (நற். 149)

[3]கழிச்சுறா வெறிந்த புட்டா ளத்திரி
நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ (அகம். 120)

*என வரும். ஏனைய வந்துழிக் காண்க.*

*உம்மையான், இளையரோடுவந்து தனித்துக் கூடுதலுங் கொள்க:*

[4]வல்வி லிளையரொ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ (அகம். 120)

*என்றாற் போல்வன கொள்க.*

*இதனானே உடன்போக்கிலும்,*

கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறி
கோல்வல் வேங்கை மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்கள்
நற்றோ ணயந்துபா ராட்டி
யெற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே (ஐங்குறு. 385)

*எனத் தேர் முதலியன ஏறிப்போதலுங் கொள்க.* *(18)*

---

1. தேர் இதனுள் வந்தது.
2. இதுவும் தேர் கூறியது.
3. இதனுள் அத்திரி - கோவேறுகழுதை வந்தது.
4. இளையர் - ஏவலிளையர்.

## (இது ஓர் சொல்வழுவமைத்தல்)

213. உண்டற் குரிய வல்லாப் பொருளை
யுண்டன போலக் கூறலு மரபே.

*இது, சொல்வேறுபட்டுப் பொருளுணர்த்தும் வழுவமைக்கின்றது.*

*இ — ள்: உண்டற்கு உரிய அல்லாப் பொருளை - உண்டற்றொழிலை நிகழ்த்துதற்கு உரியவல்லாத பொருளை, உண்டன போலக் கூறலும் மரபே - அத்தொழிலை நிகழ்த்தினவாகப் புலனெறி வழக்கஞ் செய்தலும் மரபு என்றவாறு.*

*அது,*

[1]பசலையா லுணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால் (கலி. 15)

*எனவரும்.*

*இதன்கட் சொல்வழுவன்றிச் செய்யா மரபிற் றொழிற் படுத்து அடக்கலும் அமைத்தார். இன்னும்,* **உய்த்துக்கொண் டுணர்தல்** *(666) என்பதனான் உண்ணப்படுதற்குரிய வல்லாத பொருளதனைப் பிறர் உண்ணப்பட்டதுபோலக் கூறலும் மரபாமென்பது பொருளாகக் கொள்க. அவை,*

[2]தோணல முண்டு துறக்கப் பட்டோர்
வேணீ ருண்ட குடையோ ரன்னர்;
நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோ
ரல்குநர் போகிய வூரோ ரன்னர்;
கூடினர் புரிந்து குண னுணப் பட்டோர்
சூடுந ரிட்ட பூவோ ரன்னர் (கலி. 23)

*என வரும். பிறவுங் கொள்க.*

*உம்மையாற் பிறதொழில் பற்றி வருவனவுங் கொள்க.*

[3]கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று (குறள். 1244)

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு (குறள். 1187)

வருத்தின், வான்றோய் வற்றே காமம் (குறுந். 102)

*என்றாற் போல்வனவுங் கொள்க.* *(19)*

---

1. பசலையின் பரத்தலை உண்ணல் என்றது சொல்வழு; உண்ணமாட்டாத பசலையை உண்டதாகக் கூறல். செய்யாமரபினவற்றைச் செய்ததாகக் கூறியது.

2. இதில் நலமுண்டு என்றது உண்ணப்படாத பொருளை உண்டதாகக் கூறியது. பிறவுமன்ன.

3. தின்னல் அள்ளிக்கொளல், வான்றோய்தல் என்பன உண்டலல்லாத பிற தொழில்கள். வருத்தல், செறிதல், மிகுதல் என்பனவற்றை முறையே தின்னல் முதலியவாகக் கூறப்பட்டது சொல்வழு என்றபடி.

### (வரைவு நேராமைக்குக் காரணம் பொருள்வேண்டி எனத் தோழி கூறல்)

**214.** பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே
காப்புக் கைமிகுத லுண்மை யான.

*இது, களவின்கண் தோழிக்குரியதோர் வழுவமைக்கின்றது.*

**இ – ள்:** *பொருள் என மொழிதலும் வரைநிலை இன்றே - எமர் வரைவு நேராமைக்குக் காரணம் பொருள் வேண்டியெனத் தோழி கூறலும் நீக்குநிலைமையின்று, காப்புக் கைம்மிகுதல் உண்மையான - காவன் மிகுதியால் தலைவிக்கு வருத்தங் கைகடத்த லுண்டாகையால் என்றவாறு.*

*உம்மையால், பொருளேயன்றி ஊரும் காடும் மலையும் முதலியன வேண்டுவரென்றலுங் கொள்க.*

[1]சான்றோர் வருந்திய வருத்தமு நுமது
வான்றோய் வன்ன குடிமையு நோக்கித்
திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள்
வருமுலை யாகம் வழங்கி னன்றே
யஃதான், றடைபொருள் கருதுவி ராயிற் குடையொடு
கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் வஞ்சியோ
டுள்ளி விழவி னுறந்தையுஞ் சிறிதே. (பக். 525)

*இதனுள், பொருள் விரும்பியவாறும் குன்றம் விரும்பிய வாறுங் காண்க. அடைபொருள் - இவள் நும்பால் அடைதற்குக் காரணமாகிய பொருளென்க.* *(20)*

### (மேலதற்கோர் புறனடை)

**215.** அன்பே யறனே யின்ப நாணொடு
துறந்த வொழுக்கம் பழித்தன் றாகலி
னொன்றும் வேண்டா காப்பி னுள்ளே.

*இது, தோழி பொருளென மொழிதற்குத் தலைவியும் உடன்பட்டு நிற்றற்குரியளென்றலின் மேலதற்கோர் புறனடை.*

**இ – ள்:** *காப்பினுள் - காவன் மிகுதியால் தலைவிக்கு வருத்தம் நிகழ்ந்தவிடத்து, அன்பே அறனே இன்பம் நாணொடு துறந்த*

1. குன்றம் - மலை. அடைபொருள் கருதுவிராயின், வஞ்சியும் உறந்தையுஞ் சிறிதாகும் என்க.

ஒழுக்கம் - தலைவன்கண் நிகழும் அன்பும், குடிப்பிறந்தோர் ஒழுகும் அறனும் தமக்கு இன்றியமையா இன்பமும் நாணும் அகன்ற ஒழுகலாறு, பழித்தன்று ஆகலின் ஒன்றும் - பழியுடைத் தன்று ஆகையினாலே புலனெறிவழக்கிற்குப் பொருந்தும், வேண்டா - அவற்றை வழுவாமென்று களையல் வேண்டா என்றவாறு.

எனவே, பொருளென மொழிதல் தலைவிக்கும் உடன் பாடென்று அமைத்தாராயிற்று. (21)

**(தலைவர் பிரியக்கருதின் இவ்வாறுங் கூறுவரெனல்)**

**216.** சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே.

இது, தோழிக்குந் தலைவிக்கு முரியதோர் வழுவமைக்கின்றது.

**இ — ள்:** தலைவன் பிரியக் கருதியவழித் தோழியுந் தலைவியும் நீ போகின்றவிடம் எல்லாவற்றானும் போதற்கரிய நிலமெனக் கூறி விலக்குதலும் நீக்குநிலைமையின்று என்றவாறு. உதாரணம்:

[1]இடுமு ணெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்ந்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை யாராற் றறுசுனை முற்றி
யுடங்குநீர் வேட்ட வுடம்புயங் கியானை
கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேறாகச் சார்ச்சார லோடி
நெறிமயக் குற்ற நிரம்பா நீ டத்தஞ்
சிறுநனி நீதுஞ்சி யேற்பினு மஞ்சு
நறுநுத ணீத்துப் பொருள்வயிற் செல்வோ
யுரனுடை யுள்ளத்தை (கலி. 12)

எனச் சுரமெனக் கூறினாள்.

தலைவியுந் தோழியாற் கூற்று நிகழ்த்தும். [2]சூத்திரம் பொதுப் படக் கிடத்தலின் தலைவி உடன்போகக் கருதியவழித் தலை வனுஞ் சுரமெனக் கூறுதல் கொள்க.

---

1. கொடுமரம் தேய்த்தார் - வில்லாலே கொல்லப்பட்டவர். பதுக்கை - கொல்லப் பட்டவரது உடல்களை மறைத்த இலைக்குவியல். நவை - குற்றம். ஆர் - நிறைந்த. ஆறு - வழி. முற்றி - சூழ்ந்து. கடுமை - வெம்மை. சுனைக்கு - அடை. தாம்பதிபு - தாஞ்சேரப்பதிந்து. தெறப்பட்டு - சுடப்பட்டு. நெறி - வழி. நிரம்பா - சென்றுமுடியாத (தொலையாத). அத்தம் - காடு. உரன் - வலி.

2. இப்பொருளையே சூத்திரப்பொருளாக இளம்பூரணர் கொண்டனர். இலக்கி யங்காண்டலின் நச்சினார்க்கினியருரையுங் கொள்ளற்பாற்று.

எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை
யல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ (கலி. 13)

எனவரும். (22)

### (உலகவழக்குச் செய்யுட்குமாமெனல்)

217. உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே.

இது, முன்னர் உலகியல் வழக்கென்றது செய்யுட்கா மென்று அமைக்கின்றது.

**இ – ள்:** உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின் - உயர்ந்த மக்கள் கூறுங் கூற்றும் வேத நெறியோடு கூடுதலின், வழக்கு வழிப்படுத்தல் செய்யுட்குக் கடனே - அவ்வழக்கினது நெறியிலே நடத்தல் செய்யுட்கு முறைமை என்றவாறு.

'வழக்கெனப் படுவது' (648) என்னும் மரபியற் சூத்திரத்தான் வழக்கு உயர்ந்தோர் கண்ணதாயிற்று. அவர் அகத்தியன் முதலியோ ரென்பது பாயிரத்துட் கூறினாம். அவை சான்றோர் செய்யுளுட் காண்க. இதனை மேலைச்சூத்திரத்திற்கும் எய்துவிக்க. (23)

### (உலகியலல்லாதனவும் பயன்படவரின் புலனெறிவழக்கிற்கூறல் வழுவன்றெனல்)

218. அறக்கழி வுடையன பொருட்பயம் படவரின்
வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப.

இஃது, உலகியல் வழக்கன்றிப் பொருள் கூறினும் அமைக வென்கின்றது.

**இ – ள்:** அறக்கழிவு உடையன - உலக வழக்கத்திற்குப் பொருத்தமில்லாத கூற்றுக்கள், பொருட்பயம் படவரின் - அகப் பொருட்குப் பயமுடைத்தாக வருமாயின், வழக்கென வழங்கலும் - அவற்றை வழக்கென்றே புலனெறி வழக்கஞ் செய்தலும், பழித்தன்று என்ப - பழியுடைத்தன்றென்று கூறுவாராசிரியர் என்றவாறு.

தலைவன் குறைவுற்று நிற்கின்றவாற்றைத் தோழி தலைவிக்குக் கூறுங்கால், தன்னை அவன் நயந்தான் போலத் தலைவிக்குக் கூறுவனவும் 'பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின்' (கலி. 37)

எனப் படைத்து மொழிவனவும், தலைவி 'காமக் கிழவனுள் வழிப் படுதலும்', 'தாவி னன்மொழி கிழவி கிளப்பினும்' (113) போல்வன பிறவும் அறக்கழிவுடையனவாம். தலைவி தனக்கு மறை புலப் படுத்தாது வருந்துகின்ற காலத்து அதனைத் தனக்குப் புலப் படுவித்துக் கொண்டே அவளை ஆற்றுவித்தற்பொருட்டு அறக் கழிவுடையன கூறலின் அவை பொருட்குப் பயன்றந்தனவாம்.

நெருந லெல்லை யேனற் றோன்றி (அகம். 32)

என்பதனுள்,

[1]சிறுபுறங் கவையின னாக வதற்கொண்
டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென்
னுள்ளவ னறித லஞ்சி யுள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ

எனத் தலைவன் தன்னை நயந்தானென இவள் கொண்டாள் கொல்லெனத் தலைவி கருதுமாற்றால் தோழி கூறவே தலைவி மறை புலப்படுத்துவளென்பது பயனாயிற்று.

கயமல ருண்கண்ணாய்...
அங்க ணுடைய னவன், என்பதனுள்,

மெய்யறியா தேன்போற் கிடந்தேன் (கலி. 37)

என்புழி, முன்னர் மெய்யறி [2]வழிநிலை பிழையாமனின்று பின்னர்ப் பொய்யாக வழிநிலை பிழைத்துக் கூறியது வழுவேனும், இவளுந் தலைவனும் இவ்வாறே செறிந்தமை யுணர்த்தலின் மறை புலப்படுத்துங் கருத்தினளாந் தலைவியென்பது பயனாம்.

[3]மள்ளர் குழீஇய விழவி னானும் (குறுந். 31)
[4]அருங்கடி யன்னை (நற்றிணை. 365)

---

1. சிறுபுறங்கவையினனாக - முதுகை அகத்திட்டுத் தழுவினனாக. அதற்கொண்டு - அதனைக்கருதி. அதனால் எனினுமாம். இகுபெயன் மண்ணின் ஞெகிழ்பு - பெய்த மழையால் நெகிழ்ந்த மணல் போல் மனம் நெகிழ்ந்து. அஞர் - வருத்தம்; நோய். பிணி - பிணிப்பு.

2. வழிநிலை பிழையாமல் என்றது தான் குற்றேவன் மகளாதலின் தலைவிக்குத் தான்செய்யும் வழிபாட்டு நிலையிற் பிழையாமல் என்றபடி 'மெய்யறி' என்பது மெய்யின், என்றிருத்தல் வேண்டும். 114ஆம் சூத்திர நோக்கியறிக.

3. இச்செய்யுளில் விழவின்கண்ணும் துணங்கைக்கண்ணும் யாண்டும் காணேன் என்று தலைவி கூறலின் தேடிச்சென்றவாறு காண்க.

4. இச்செய்யுளில் "அவனூர் வினவிச் சென்மோ தோழி" என்று தலைவி கூறலின் செல்வாம் என்றாயிற்று.

[1]பாம்புமத னழியும் பானாட் கங்குலு
மரிய வல்லம னிகுளை (அகம். 8)

என்பனவற்றுள், தலைவி தேடிச்சென்றதும், செல்வா மென்றதும், சிறைப்புறமாக வரைவுகடாயது பொருட்பயன் றருதலின் அறக்கழிவுடையவேனும் அமைந்தன.

[2]இது, 'பல்வேறு கவர்பொரு ணாட்டத்தான்' (114) அறக் கழிவுடையனவுங் கூறப்பெறுமென்றமைப்பது பெரும்பான்மை. இஃது அதிகாரத்தாற் றோழிக்குந் தலைவிக்குங் கொள்க. (24)

**(மேலதற்கோர் புறனடை)**

**219. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரியா நல்வழிப் படுத்தே.**

இது, மேல் அறக்கழிவுடைத்தாயினும் அது பொருட் பயம்படு (218) மென்றார், அப்பொருளினை இது வென்றலின தற்கோர் புறனடை.

**இ – ள்:** மிக்க பொருளினும் - முன்னர் அகப்பொருட்குப் பயப் படவரினென்று வழுவமைத்த பொருளின்கண்ணே, நாணுத் தலைப்பிரியா நல்வழிப் பொருள்வகை படுத்துப் புணர்க்க - தலைவியது நாண் அவளிடத்து நின்று நீங்காமைக்குக் காரண மாகிய நன்னெறியாகிய பொருட் கூறுபாடுகளை உள்ளடக்கிப் படுத்துக் கூறுக என்றவாறு.

நெருந லெல்லை (அகம். 32)

என்பதனுள்,

நெருநல் யான் காக்கின்ற புனத்துவந்து ஒரு தலைவன் தன் பெருமைக்கேலாச் சிறுசொற் சொல்லித் தன்னை யான் வருத் தினேனாகக் கூறி என்னை முயங்கினான்; யான் அதற்கு முன் ஞெகிழ்ந்தே மனநெகிழ்ச்சி அவனறியாமன் மறைத்து வன்சொற் சொல்லி நீங்கினேன்; அவ்வழி என் வன்கண்மையாற் பிறிதொன்று கூறவல்லனாயிற்றிலன்; அவ்வாறு போனவன் இன்று நமக்குத் தோலாத் தன்மை யின்மையினின்றும் இளிவந்தொழுகுவன்;

---

1. இச்செய்யுளில் 'கங்குலும் (சேறற்கு) அரியவல்ல' எனத் தலைவி கூறலின் இதுவும் செல்வாம் என்றது.

2. இது - இச்சூத்திரம், இது நாட்டத்தாற் கூறவும் பெறும் என இயைக்க.

தனக்கே நந்தோள் உரியவாகலும் அறியானாய் என்னைப் பிறநிலை முயலுங் கண்ணோட்டமு முடையவனை நின் ஆயமும் யானும் நீயுங்கண்டு நகுவோமாக; நீ அவன் வருமிடத்தே செல்வாயாக எனக் கூறியவழி, எம்பெருமானை இவள் [1]புறத்தாற்றிற் கொண் டாள் கொல்லோ வெனவும், அவன் தனக்கு இனிய செய்தன வெல்லாம் என்பொருட்டென்று கொள்ளாது பிறழக்கொண் டாள் கொல்லோ வெனவுந் தலைவி கருதுமாற்றானே கூறினா ளெனினும் அதனுள்ளே [2]இவளெனக்குச் சிறந்தா ளென்பதுணர் தலின் என் வருத்தந் தீர்க்கின்றிலை யென்றான் எனவும், அதற்கு முகமனாக இவளைத் தழீஇக்கொண்டதன்றி இவள் பிறழக் கொண்ட தன்மை அவன்கணுளதாயின் இவளைக் குறிப்பறியாது புல்லானெனவும், இவ்வொழுகலாறு சிறிதுணர்தலில் இக்குறை முடித்தற்கு மனநெகிழ்ந்தாளெனவும், அவனை என்னோடு கூட்டுதற்கு என்னை வேறு நிறுத்தித் தானும் ஆயமும் வேறுநின்று நகுவேமெனக் கூறினாளெனவும், தலைவி நாண் நீங்காமைக்குக் காரணமாகிய பொருளை உள்ளடக்கிப் புணர்த்துக் கூறியவாறு காண்க. இதனுள் அறக்கழிவான பொருள் புலப்படவும் ஏனைப் பொருள் புலப்படாமலும் கூறாக்கால் தலைவியது மறையை வெளிப்படுத்தினளாமாதலின் அதனை 'மிக்கபொருள்' என்றார். ஏனையவற்றிற்கும் உட்பொருள் புணர்த்தவாறுணர்ந்து பொரு ளுரைத்துக் கொள்க. (25)

### (எல்லா என்னுஞ்சொல் இருபாற்குமுரித்தெனல்)

**220.** முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொ
னிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே.

இது, கிழவன் கிழத்தி பாங்கன் பாங்கியென்னு முறைப் பெயராகிய சொல்பற்றிப் பிறந்ததோர் வழு அமைக்கின்றது.

**இ — ள்:** முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொல் - முறைப்பெயரிடத்து இருபாற்கும் பொருந்தின தகுதியையுடைய எல்லா வென்னுஞ் சொல், நிலைக்கு உரி மரபின் இருவீற்றும் உரித்தே - புலனெறி வழக்கிற்குரிய முறைமையினானே வழுவாகாது ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒப்ப உரியதாய் வழங்கும் என்றவாறு.

---

1. புறத்தாறு - புறவொழுக்கம்; என்றது புறவொழுக்கமுடையவனாகக் கருதிக் கொண்டாளோ என்பது கருத்து.

2. இவள் என்றது தோழியைச் சிறந்தாள் என்றது ஆயத்தாருள்ளே நண்பிற் சிறந்தாள் என்றபடி.

'கெழுதகை' என்றதனானே தலைவியும் தோழியும் தலைவனைக் கூறியதே பெரும்பான்மையென்றும், தலைவன் தலைவியையும் பாங்கனையுங் கூறுதல் சிறுபான்மை வழுவமைதியென்றுங் கொள்க.

உதாரணம்:

அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேன்
முதிர்புண் முலைபொருத வேதிலான் முச்சி
யுதிர்துக ளக்கநின் னாடை யொலிப்ப
வெதிர்வளி நின்றாய்நீ செல்;
இனி [1]யெல்லா (கலி. 81)

எனத் தலைவியைத் தலைவன் விளித்துக் கூறலின் வழுவாயமைந்தது.

எல்லாநீ,
முன்னத்தா னொன்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழற்போற் றிரிதருவா
யென்னீ பெறாததீ தென் (கலி. 61)

எனத் தோழி தலைவனை விளித்துக்கூறலின் வழுவாயமைந்தது.

[3]'எல்லா விஃதொத்தன்' (கலி. 61) என்பது பெண்பால்மேல் வந்தது. ஏனைய வந்துழிக்காண்க. 'பொதுச்சொல்' என்றதனானே எல்லா எலா எல்ல [4]எலுவ எனவும் கொள்க.

"எலுவ சிறாஅர்" (குறுந். 129)

என வந்தது. (தலைவன் பாங்கனை விளித்தது)

யாரை யெலுவ யாரே (நற்றிணை. 395)

எனத் தலைவனைத் தோழி கூறினாள்.

எலுவியென்பது பாலுணர்த்தலின் ஆராயப்படா. (26)

**(தோழி தலைவியுறுப்பைத் தன்னுறுப்பாகவுங் கருதுவளெனல்)**

221. தாயத்தி னடையா வீயச் செல்லா
வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
வெம்மென வரூஉங் கிழமைத் தோற்ற
மல்லா வாயினும் புல்லுவ வுளவே.

இது, தோழி தலைவியுறுப்பினைத் தன்னுறுப்பாகக் கூறப்பெறுமென வழுவமைக்கின்றது.

---

1. எல்லா - ஏடி. இது தலைவன் தலைவியை விளித்தது.
2. எல்லா - ஏடா. இது தலைவனைத் தோழி விளித்தது.
3. எல்லா! ஏடி. இது தோழி தலைவியை விளித்தது.
4. எலுவ என்பது பெண்பால் வந்ததற்கு இலக்கிய உளதோ என்பது ஆராயத்தக்கது.

இ — ள்: தாயத்தின் அடையா - தந்தையுடைய பொருள்களாய் மக்களெய்துதற்குரிய பொருள்களிற் சேராதனவுமாய், ஈயச் செல்லா - அறமும் புகழுங் கருதிக் கொடுப்பப் பிறர்பாற் செல்லா தனவுமாய், வினைவயின் தங்கா - மைந்தரில்லாதார்க்கு மைந்தர் செய்வன செய்து பெறும் பொருளில் தங்காதனவுமாய், வீற்றுக் கொளப்படா - வேறுபட்டானொருவன் வலிந்துகொள்ளப்படாதனவுமாய், எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம் - எம்முடையனவென்று தோழிகூறப் புலனெறி வழக்கிற்குப் பொருந்தி வரும் உரிமையையுடைய உறுப்புக்கள், அல்லாவாயினும் புல்லுவ உளவே - வழுவாயினும் பொருந்துவனவுள என்றவாறு.

உறுப்புக்கட்புலனாதலின் 'தோற்றம்' என்றார். எனவே, உறுப்பொழிய இந்நான்கும் எம்மெனக் கூறலாகாதென்றார்.

ஒருநாளென், றோணெகிழ் புற்ற துயராற் றுணிதந்தோர் (கலி. 37)

எனவும்

என்றோ ளெழுதிய தொய்யிலும் (கலி. 18)

எனவும் தலைவிதோளினை என்தோள் என்றாள்.

[1]என்கா, லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு வைகிய செல்வோள்
இவைகாண் டோறு நோவா மாதோ"" (நற். 12)

"நெய்த லிதழுண்க ணின்கண்ணா கென்கண் மன" (கலி. 39)

என்பவும் இதன்கணடங்கும். 'உள' என்றதனாற் சிறுபான்மை தலைவி கூறுவனவுங் கொள்க; அவை,

"என்னோடு நின்னெடுஞ் சூழாது" (அகம். 128) எனவும்,

"நின்கண்ணாற் காண்பென்மன் யான்" (கலி. 39)

எனவும் வரும். *(27)*

**(பால்வழுவமைத்தல்)**

222. [2]ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப.

---

1. என்கால் என்றது தலைவி காலைத் தன் காலாகத் தோழிகூறியது. இது நற்றிணைப்பதிப்பில் தன் கால் என்று பாடங்கொள்ளப்பட்டது.

2. இதற்கு வேறு கருத்துக் கூறுவர் இளம்பூரணர். சேனாவரையர் சொல்லதிகாரத்து வேறு கூறுவர்.

இஃது, 'ஒன்றே வேறே' (93) என்னுஞ் சூத்திரத்து 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' என்ற ஒருமை பன்மைப்பாலாய் உணர்த்துக வென வழுவமைத்தது.

இ – ள்: ஒருபாற் கிளவி - 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' என்றவழி ஆணொருமையும் பெண்ணொருமையும் உணர்த்தி நின்ற சொற்களை ஆசிரியரும் அவ்வாறு ஆண்டாரேனும் அவ் வொருமைச் சொற்கள், ஏனைப்பாற் கண்ணும் வருவகை தானே - நால்வகைக் குலத்துத் தலைவரையுந் தலைவியையும் உணர்த் தும் பன்மைச்சொற் கண்ணே நின்று பன்மைப்பொருள் உணர்த்தி வருங் கூறுபாடுதானே, வழக்கென மொழிப - உலகவழக்கென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

இதனாற் பயன்: உலகத்து ஒருவர்க் கண்ணும் ஒரோவொரு குலத்தின் கண்ணும் தலைவருந் தலைவியரும் பலரேனும் அவர் களையெல்லாங் கூறுங்காற் கிழவனுங் கிழத்தியுமென்று ஒருமை யாற் கூறுவதன்றி வேறோர் வழக்கின்றென்பதுபற்றி முதனூ லாசிரியர் அங்ஙனஞ் சூத்திரஞ் செய்தலின், யானும் அவ்வாறே சூத்திரஞ் செய்தேனாயினும், அச்சொல் பலரையும் உணர்த்து மென வழுவமைத்தாராயிற்று. ஒருவனோடு பலர் கூட்டமுங் கோடற்கு ஏனைப்பாலென்று ஒருமையாற் கூறாது 'ஏனைப் பால்' எனப் பன்மையாற் கூறினார்; இதனாற் சொல்வழுவும் பொருள்வழுவும் அமைத்தார். 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' (93) என்ற ஒருமையே கொள்ளின் அன்னாரிருவர் இவ்வுலகத்துள் ளாரன்றி வேறாக நாட்டிக் கொள்ளப்பட்டாரென்பதுபட்டு இஃது உலகவழக்கல்லாதோர் நூலுமாய் 'வழக்குஞ் செய்யுளும்' (பாயிரம்) என்பதனோடு மாறுகோடலே யன்றிப் 'பரத்தை வாயி னால்வர்க்கு முரித்தே' (224) என்றாற் போல்வன பிற சூத்திரங் களும் வேண்டாவாமென்றுணர்க. (28)

**(எல்லாவுயிர்க்கும் இன்பமுரித்தெனல்)**

**223.** எல்லா வுயிர்க்கு மின்ப மென்பது
தானமர்ந்து வரூஉ [1]மேவற் றாகும்.

இது, மேலதற்கோர் புறனடை.

---

1. மேவல் - ஆணும் பெண்ணுமாய்க் கூடிப் போகநுகர்தல் என்பது நச்சினார்க் கினியர் கருத்து. எனவே மேவற்று என்பதற்கு ஆணும் பெண்ணுங் கூடி அநுபவித்தலுடையது என்று பொருளாம். இன்பமென்பது மேவற்று என இயையும். மேவல் - ஒன்றோடொன்று பொருந்தல் (சேர்தல்).

இ — ள்: இன்பம் என்பது தான் - அறனும் பொருளும் ஒழிய இன்பமென்று கூறப்படுவதுதான், எல்லா உயிர்க்கும் அமர்ந்து வருஉம் - மக்களும் தேவரும் நரகரும் மாவும் புள்ளு முதலிய எல்லாவுயிர்களுக்கும் மனத்தின்கண்ணே பொருந்தித் தொழிற் பட வருமாயினும், மேவற் றாகும் - ஆணும் பெண்ணுமென அடுக்கிக் கூறலுடைத்தாய் நுகர்ச்சி நிகழும் என்றவாறு.

'மேவற்றாகும்' என்றார், [1]என்பது ஆணும் பெண்ணுமாய்ப் போகநுகர்ந்து வருதலின், ஒருவனும் ஒருத்தியுமே இன்பநுகர்ந்தா ரெனப்படாது அவ்வின்பம் எல்லாவுயிர்க்கும் பொதுவென்ப தூஉம் அவை இருபாலாய்ப் புணர்ச்சிநிகழ்த்துமென்பதூஉங் கூறியதாயிற்று. அறனும் பொருளும் எல்லா உயிர்க்கும் நிகழா, மக்கட்கே சிறந்து வருமென்றாராயிற்று. (29)

**(ஊடல் தீர்க்கும் வாயில் நால்வர்க்குமுரித்தெனலும் பரத்தையிற்பிரிவு ஒரே நிலத்தின்கண்ணதெனலும்)**

**224.** [2]பரத்தை வாயி னால்வர்க்கு முரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.

இது, தலைவர்க்குரிய தலைவியர்பலருந் தலைவன் பரத் தைமை காரணமாக ஊடற்குரியரென்பதூஉம் அவரிடத்து வாயில்சேறற்குரியரென்பதூஉங் கூறி வழுவமைக்கின்றது.

இ — ள்: பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்து - தலைவன் பரத்தைமையால் தலைவிக்குத்தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய வாயிலை அவர்பாற் செலுத்தல் நான்கு வருணத்தாருக்கும் உரித்து, அஃது நிலத்திரிபு இன்று என்மனார் புலவர் - அவ் வொழுக்கம் பெரும்பான்மை மருத நிலத்தினின்றுந் திரிந்து வருதல் இன்றென்று கூறுவர் புலவர் என்றவாறு.

[3]'பரத்தை வாயில்' என்றது 'குதிரைத்தேர்' போல நின்றது. இதனாற் பயன்: அந்தணர்க்கு நால்வரும், அரசர்க்கு மூவரும்,

---

1. என்பது என்பது வருதலின்பின் வருதல்வேண்டும். வருதலின் என்பதன்பின் முற்றடையாளம் இடுதல் வேண்டும்.

2. இளம்பூரணர் வேறு கூறுவர்.

3. பரத்தைவாயில் - பரத்தமையால் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய வாயில். குதிரைத்தேர் என்பது குதிரையால் இழுக்கப்படும் தேர் என்றாகும். உருபும் பொருளுந்தொக்கது.

வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்குரியரென்ப தூஉம் அவர்பால் தத்தந் தலைவர் ஊடறீர்த்தற்குரிய வாயில் விடு வரென்பதூஉம், அவர் வாயின்மறுத்தலும், நேர்தலும் உடைய ரென்பதூஉம், ஏனைப்பரத்தையர்க்கு வாயில்விடுதல் இன்றென்ப தூஉங் கூறியவாறாயிற்று. 'ஒருபாற் கிளவி' (222) என்பதனால் ஒரோவோர் குலத்துத் தலைவருந் தலைவியரும் அடங்குமாறுணர்க. உதாரணம் முற்காட்டியவற்றுட்காண்க. ஒருவனும் ஒருத்தியுமாகி இன்பநுகர்ந்து இல்லற நிகழ்த்துதலே சிறந்ததென்றற்கு இங்ஙனம் பலராதல் வழுவென்று அதனை அமைத்தார். (30)

**(களவின்கண் தலைவிகண் நிகழும் வழு அமைதி இவை எனல்)**

225. ஒருதலை யுரிமை வேண்டியு மகடூஉப்
பிரித லச்ச முண்மை யானு
மம்பலு மலருங் களவுவெளிப் படுக்குமென்
றஞ்ச வந்த வாங்கிரு வகையினு
நோக்கொடு வந்த விடையூறு பொருளினும்
போக்கும் வரைவு மனைவிகட் டோன்றும்.

இது, களவின்கட் டலைவியின்கண் நிகழ்வதோர் வழு வமைக்கின்றது.

இ – ள்: உரிமை ஒருதலை வேண்டியும் - இடைவிடாது இன்ப நுகர்தலோடு இல்லறநிகழ்த்தும் உரிமையை உறுதியாகப் பெறுதலை விரும்புதலானும், பிரிதல் அச்சம் மகடூஉ உண்மை யானும் - ஆள்வினைக் குறிப்புடைமையின் ஆண்மக்கள் பிரிவ ரென்று அஞ்சும் அச்சம் மகளிர்க்குண்டாகையினானும், ஆங்கு அம்பலும் அலரும் களவு வெளிப்படுக்கும் என்று அஞ்ச வந்த இரு வகையினும் - அக்களவொழுக்கத்திடத்தே அம்பலும் அலரும் இக்களவைப் புலப்படுக்குமென்று அஞ்சும்படி தோன்றிய இரு வகைக் குறிப்பானும், நோக்கொடு வந்த இடையூறு பொரு ளினும் - பிறர் தன்னை அயிர்த்துநோக்கும் நோக்கங்காரணமாக வந்த கூட்டம் இடையூறுற்ற காரியத்தினானும், மனைவிகட் போக்கும் வரைவும் தோன்றும் - தலைவியிடத்தே உடன் போக் கும் வரையக் கருதுதலுந் தோன்றும் என்றவாறு.

**வழையம லடுக்கத்து (அகம். 328) என்பதனுள்,**

[1]'முகந்துகொண் டடக்குவம்' என இடைவிடாது இன்ப நுகர விரும்பியவாறும் உள்ளுறையான் இல்லறநிகழ்த்த விரும் பியவாறுங் காண்க.

'உன்னங் கொள்கையொடு' (அகம். 65) என்பது [2]அம்பலும் அலரும் அஞ்சிப் போக்குடன்பட்டது.

**[3]ஆனா தலைக்கு மறனி லன்னை**
**தானே யிருக்க தன்மனை யானே. (குறுந். 262)**

இஃது, இடையூறுபொருளின்கட் போக்குடன்பட்டது.

ஏனைய முன்னர்க் காட்டியவற்றுட் காண்க. 'ஒன்றித் தோன்றுந் தோழி மேன' (39) என்பதனால் தோழிக்கும் இவையுரிய வென்றுகொள்க. உடன் போக்குக் கருதுதலும் தலைவன் தான் வரையாமல் தலைவி விரும்புதலும் வழுவாய் அமைந்தன. (31)

***(கற்பினுள் தோழிக்கும் அறிவர்க்குமுரிய வழு அமைதி இவை யெனல்)***

**226. வருத்த மிகுதி சுட்டுங் காலை**
**யுரித்தென மொழிப வாழ்க்கையு ளிரக்கம்.**

இது, கற்புக்காலத்துத் தோழிக்கும் அறிவர்க்கும் உரியதோர் வழுவமைக்கின்றது.

**இ — ள்:** வருத்தமிகுதி சுட்டுங்காலை - தோழியும் அறிவரும் பரத்தையிற் பிரிவால் தலைவர்க்குந் தலைவியர்க்குந் தோன்றிய வருத்த மிகுதியைத் தீர்க்கக் கருதிக் கூற்று நிகழ்த்துங் காலத்து, வாழ்க்கையுள் இரக்கம் உரித்தென மொழிப - அவரது இல் வாழ்க்கை நிகழ்ச்சிக்கண்ணே தமக்கு வருத்தந் தோன்றிற்றாகக் கூறதலும் உரித்தென்று கூறுவ ராசிரியர் என்றவாறு.

---

1. இதனுள் 'சாயன்மார்பு - முகந்து கொண்டு அடக்குவம்' என்பதனால் இடைவிடாது இன்பநுகர்தலை விரும்பினாள் என்று பெறப்படும்.

2. அம்பல் - வாயைமுகிழ்த்துணர்த்தல்; சிலரறிந்தது. அலர் - வாயைத்திறந்து வெளிப்படக்கூறல். பலரறிந்தது. இவை அரும்பு அலர் என்ற பூவகை போறலின் அப்பெயர்பெற்றன. (109).

3. ஆனாதலைக்கும் அன்னை என்றலின் இடையூறு பொருள் பெறப்படும். ஆனாது அலைத்தல் இடையூறாகும்.

[1]நீர் நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கு
மார்ந்தோர் வாயிற் றேனும் புளிக்குந்
தணந்தனை யாயினெம் மில்லுய்த்துக் கொடுமோ
வந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க்
கடும்பாம்பு வழங்குந் தெருவி
னடுங்கஞ ரெவ்வங் களைந்த வெம்மே. (குறுந். 354)

*இதனுள், 'இல்லறத்தினை நீ துறந்தாயாயின் எம்மை எம் மூர்க்கண்ணே விடுக' எனத் தனக்கு வருத்தந் தோன்றிற்றாகத் தோழி கூறியவாறு காண்க.*

உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே யிஃதோ
வோரா வல்சிச் சீறில் வாழ்க்கைப்
பெருநலக் குறமகன் வந்தென
வினிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே. (குறுந். 295)

*இதனுள், 'ஓரா வல்சியொடு முன்னர் நிகழ்த்திய வாழ்க்கை இவன் வந்தானாகப் புறத்து விளையாடும் விழவுளதாயிற்றென்று இவ்வூர் கூறாநிற்குஞ் செல்வம் இவளை ஞெகிழ்ந்தாற் பழைய தன்மையா'மென்று அறிவர் இரங்கிக் கூறியவாறு காண்க.*

*துறைமீன் வழங்கும் (அகம். 316) என்பதனுள்,*

அதுபுலந் துறைதல் வல்லி யோரே

*எனப் புலவியால் நின் இல்வாழ்க்கை குறைபடுமெனத் தோழி கூறியவாறு காண்க.*

*இன்னும்,* **உய்த்துக்கொண்டுணர்தல்** *(666) என்பதனால், [3]"ஏனைப்பிரிவான் நிகழும் வருத்த மிகுதியைக் குறித்தவிடத்து உயிர் வாழ்க்கையின் இரக்கமுரித்தென மொழிப' என்றும் பொருள் கூறிச்,*

[4]செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை (குறள். 1151)

1. ஆர்ந்தோர் - பலதரம் நுகர்ந்தோர். தணத்தல் - துறத்தல்; இல்லறத்தைத் துறத்தல். எவ்வங் களைந்த எம்மை எம்மிலுய்த்துக்கொடுமோ என இயைக்க.
2. ஆயம் - பரத்தையர் கூட்டம். ஓராவல்சி - நன்று தீது ஆராயாத உணவு. 'ஓரான்வல்சி' என்று பாடங்கொள்வாருமுளர்.
3. இவ்வாறு பொருள் கூறுவர் இளம்பூரணர்.
4. வாழ்வார்க்கு - உயிருடன் வாழ்வார்க்கு.

[1]அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாம லாண்டோ
ரவலம் படுதலு முண்டு (கலி. 19)

*என வருவன பிறவுங் கொள்க. (32)*

***(புலவியுள் தலைவற்குந் தலைவிக்குமுரிய நிலைமைகூறல்)***

**227.** மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு
நினையுங் காலைப் புலவியு ளுரிய.

*இது, கற்பினுள் தலைவற்குந் தலைவிக்கும் எய்தியதோர் வழுவமைக்கின்றது.*

*இ — ள்: புலவியுள் மனைவி உயர்வும் - புலவிக்காலத்துத் தலைவன் பணிந்துழி [2]உட்கும் நாணுமின்றித் தலைவி அதனை ஏற்றுக்கோடலும், கிழவோன் பணிவும் - தலைவன் தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிதலும், நினையுங்காலை உரிய - ஆராயுங்காலை இருவர்க்குமுரிய என்றவாறு. உதாரணம்:*

[3]வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்
கோதை கோலா விறைஞ்சி நின்ற
வூதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும் (கலி. 128)

*இது, [4]முன்னே தலைவி மனத்து நிகழ்தலுண்மையிற் கன விலுங் கண்டாளென்றுணர்க.*

தப்பினே, னென்றடி சேர்தலு முண்டு (கலி. 89)

*என்பதும் அது.*

'நினையுங்காலை' என்றதனால் தோழியுயர்வும் கிழவோன் பணிமொழி பயிற்றலுங் கொள்க.

---

1. மாறி - மனம்வேறுபட்டு. உள்ள - என்னை நினைந்து வருந்தும்படி. யாந் துறந்தவள் பண்பும் - யாம் துறக்கப்பட்டவளுடைய செய்தியும். யாதும் - சிறிதும். வினவல் - வினவாதேகொள். பகலின் - ஞாயிறுபோல். செம்மல் - தலைமை. படுதலும் - பிறத்தலும்.
2. உட்கு - அச்சம்.
3. கோதை - மாலை. கோலா - அடிக்குங்கோலாக. கோலாக அலைப்பேன் போலவும் என இயைக்க. ஊதை - குளிர்காற்று; சேர்ப்புக்கடை. சேர்ப்பு - கடற்கரை.
4. முன் என்றது கனவுக்குமுன் (நனவில்) என்றபடி

[1]ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
னல்லார்கட் டோன்று மடக்கமு முடைய
னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடைய
னன்னா னொருவன்றன் னாண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும். (கலி. 47)

*இதனுள், தலைவன் இரந்துரைத்தவாறும் தான் அதனை ஏற்றுக் கொண்டவாறுங்காண்க. இச்சூத்திரம் புலவிக்கே கூறினார்; ஊடற்குந் துனிக்குங் 'காமக்கடப்பின்' (160) என்பதனுட் கூறினாரெனவுணர்க.* *(33)*

**(கற்புக்காலத்து வேட்கைமிகுதியால் தலைவனுந் தலைவியும் ஒருவரை ஒருவர் புகழ்வர் எனல்)**

**228.** நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.

*இது, கற்புக்காலத்துத் தலைவற்குந் தலைவிக்கும் உரியதோர் வழுவமைக்கின்றது.*

**இ — ள்:** *கற்பினுள் - கற்புக்காலத்து, தகைநிகழ் மருங்கின் - ஒருவர்க்கொருவர் மனத்து நிகழுமிடத்து, வேட்கைமிகுதியிற் புகழ் தகை வரையார் - வேட்கைமிகுதியாலே அதனைப் புகழ்ந் துரைக்குந் தகைமையினை ஆசிரியர் இருவருக்கும் நீக்கார் கொள்வர் என்றவாறு.*

[3]ஆக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பிற் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி. (அகம். 6)

*இது, புலவிக்கண் தலைவன் புகழ்ந்தது.*

---

1. புரப்பான் - பாதுகாப்பான். மதுகை - வலி. வல்லார் - மெய்ப் பொருணூல் வல்லார். நல்லார் - நன்மக்கள். புன்கண் - இழிவு. வண்மை - கொடை. ஆண்தகை - ஆளுந்தகைமை.

2. ஆகம் - மார்பு. சுணங்கு - தேமல். மாயம் - வஞ்சனை. சாயினை பயிற்றி - ஒருபக்கஞ்சார்ந்து (ஓரம்) சொல்லி. பயிறல் - பலகாற்கூறல்.

[1]அணைமரு ளின்றுயி லம்பணைத் தடமென்றோட்
டுணைமல ரெழினீலத் தேந்தெழின் மலருண்கண்
மணமௌவன் முகையன்ன மாவீழ்வா னிரைவெண்பன்
மணநாறு நறுநுதன் மாரிவீ ழிருங்கூந்த
லலர்முலை யாகத் தகன்று வல்குல்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
யினிய சொல்லி யின்னாங்குப் பெயர்ப்ப
தினியறிந் தேனது துனியா குதலே. (கலி. 14)

*இது, [2]போக்கின்கண் தலைவன் புகழ்ந்தது.*

அரிபெய் சிலம்பின் என்பதனுள்,

[3]ஏந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய (அகம். 6)

*என்பது, தலைவி புலவிக்கட் புகழ்ந்தது.*

[4]நிரைதார் மார்ப நெருந லொருத்தியொடு (அகம். 66)

*என்பதும் அது.*

*'தகை' எனப் பொதுவாகக் கூறலிற் குணத்தைக் கூறலுங் கொள்க:*

நாலாறு மாறாய் (நாலடி. 383) எனவும்,

[5]நின்ற சொல்லி னீடுதோன் றினியர் (நற். 1)

*எனவும் வரும்.*

*குற்றேவனிலையளாகிய தலைவியைத் தலைவன் புகழ்தலானும் பெருநாணினளாகிய தலைவி தலைவனைப் பிறரெதிர் புகழ்த லானும் வழுவாயிற்று. (34)*

### (இறைச்சிப்பொரு ளீதுவெனல்)

**229.** இறைச்சி தானே பொருட்புறத் ததுவே.

*இது, தலைவிக்குந் தோழிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது. இறைச்சியாவது உள்ளபொருள் ஒன்றனுள்ளே கொள்வ*

---

1. அனைமருள் தோள் என்க. இன்துயில் என மாறுக. பணை - மூங்கில். மௌவல் - முல்லை. மாவீழ் - வண்டுகள் விரும்புகின்ற. மாரிவீழ் - மழை விரும்புகின்ற. பாராட்டி - கொண்டாடி. இன்னாங்கு - துன்பம். பெயர்த்தல் - செலுத்தல். இனி - இப்பொழுது. துனி - வெறுப்பு.
2. போக்கு - பிரிந்து போதல்.
3. ஏந்தெழிலாகம் என்றது புகழ்ச்சி.
4. நிறைதார்மார்பு - என்றது புகழ்ச்சி. நெருநல் - முன்னை நாள்.
5. நின்றசொல்லும், நீடுதொன்றினிமையும் அவன் குனங்கள்.

தோர் பொருளாகலானுஞ் [1]செவ்வன் கூறப்படாமையானுந் தலைவன் கொடுமை கூறும்வழிப் பெரும்பான்மை பிறத்த லானும் வழுவாயிற்று.

இ – ள்: இறைச்சிதானே - கருப்பொருட்கு [2]நேயந்தான், பொருட் புறத்ததுவே - கூறவேண்டுவதோர் பொருளின்புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருட்டன்மையையுடைய தாம் என்றவாறு.

இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை. (கலி. 41)

[3]சூளைப்பொய்த்தா னென்பதே கூறவேண்டும் பொருள். அதன் புறத்தே இங்ஙனம் பொய்த்தான் மலையகத்து [4]நீர்திகழ் வானென்னென இறைச்சிப்பொருள் தோன்றியவாறு காண்க. பிறவுமன்ன. (35)

(கருப்பொருளிற் பிறக்கும் பொருளுமுளவெனல்)

230. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே.

இஃது, எய்தியது இகந்துபடாமற் காத்தது.

இ – ள்: இறைச்சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே - கருப் பொருள் பிறிதோர் பொருட்கு உபகாரப்படும் பொருட்டாதலே யன்றி அக்கருப்பொருடனுள்ளே தோன்றும் பொருளும் உள, திறத்து இயல் மருங்கில் - அஃது உள்ளுறையுவமத்தின் கூற்றிலே அடங்குமாறுபோல நடக்குமிடத்து, தெரியு மோர்க்கே - அவ்வுள் ளுறை யுவமமன்று இஃது இறைச்சியென்று ஆராய்ந்துணரும் நல்லறிவுடையோர்க்கு என்றவாறு.

---

1. செவ்வன் கூறப்படாமை - வெளிப்படக்கூறப்படாமை.
2. நேயம் - தெரித்துமொழியாற்கூறாமை.
3. சூள் - சத்தியம்.
4. நீர்திகழ்வான் என்? நீர்திகழ்தற்குக் காரணமென்னை? பொய் கூறியவன் மலையில் நீர் திகழமாட்டாது. அங்ஙனமாகத் திகழ்தன் என்னையோ?என்று சிந்திக்கின்றாள் தலைவி.

கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற்
றினைபிடி யுண்ணும் பெருங்கன் னாட
கெட்டிடத்து வந்த வுதவிக் கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றி மறந்தனை யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னவிவ
ளொலிமென் கூந்த லுரியவா நினக்கே. (குறுந். 225)

*இதனுள், 'தான் கெட்டவிடத்து உதவிய உதவியை அரச உரிமை யெய்திய மன்னன் மறந்தாற்போல நீ இரந்து துயருற்ற காலத்து யான் தலைவியை நின்னோடு கூட்டிய செய்ந்நன்றியை மறவாது இன்று நீ வரைந்து கொள்வாயாயின் இவள் கூந்தல் நினக்குரிய' என்றவழி, உவமையும், பொருளும் ஒத்து முடிந் தமையின் முன்னின்ற 'நாட' என்பது, உள்ளுறையுவமமன்றாய் இறைச்சியாம். என்னை? தன்கன்றிற்குப் பயன்பட்டுப் பிறர்க்கு உயிரைக் கொடுக்கின்ற தினையைத் தான் உண்டு அழிவு செய் கின்றாற்போல, நீ நின் கருமஞ் சிதையாமற் பார்த்து எமக்குயி ராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இறந்துபடுவித்தல் ஆகா தென்று உவமை யெய்திற்றேனும், பின்னர் நின்ற பொருளோ டியையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்பயவாது இறைச்சியாகிய நாடனென்பதனுள்ளே வேறோர் பொருள் தோற்றுவித்து நின்றதேயாமாதலின். முலைமாந்த என்றது தன் கருமஞ் சிதையாமற் பார்த்தென்னுந் துணையன்றி உள்ளுறை யுவமப்பொருளை முற்ற உணர்த்தாமை யுணர்க.*

[2]வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்
தேந்து மருப்பி னினவண் டிமிர்பூதுஞ்
சாந்த மரத்தி னியன்ற வுலக்கையா
லைவன வெண்ணெ லறையுரலுட் பெய்திருவா
மையனை யேத்துவாம் போல வணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவா நாம் (கலி. 43)

*இதனுட், புலவுநாறியுந் பூநாறியுந் தீதும் நன்றுமாகிய இறைச்சியாகிய உலக்கைகளால் தலைவனைப் பாடும் பாட்*

---

1. மாந்த - உண்ணற்பொருட்டு. பிடி - பெண்யானை. கெட்டிடத்து - வறுமை யுற்றவிடத்து. உவந்த உதவி - (பிறர் உதவ) மகிழ்ந்த உதவி. கட்டில் - அரசு கட்டில். வீறு - பெருமை. நன்றி மறந்தனையாயின். நன்றியை மறந்தாயாயின் (வரைந்துகொள்ளாயாயின்).
2. வேங்கை - புலி. வெறி - மதமயக்கம். பொறி - புகர்நிறம். இமிர்பு - மொய்த்து. ஐவனம் - மலைநெல். அறைஉரல் - பாறையாகிய உரல். ஐயனை - முருகக் கடவுளை.

டோடே கலந்து கூறத்தகாத தெய்வத்தையும் பாடுவாமென்னும் பொருள் பயப்பச் செய்த இறைச்சியிற் பொருள் பயந்தவாறும் இரண்டுலக்கையானும் பயன் கொண்டாற்போ லையன்பெயர் பாடுதலாற் பயன்கொள்ளாமையின் உள்ளுறையுவமமன்மையுங் காண்க. உள்ளுறையுவமமாயின்,

[1]தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத் தவனூ ரென்ப (ஐங்குறு. 41)

என்றாற்போலத் தலைவன்கொடுமையுந் தலைவிபேதைமையும் உடனுவமங்கொள்ள நிற்கும்; இதுபற்றித் 'தெரியு மோர்க்கே' என்றார். உம்மை இறந்தது தழீஇயிற்று. *(36)*

**(பிரிவின்கண் இறைச்சியுள் அன்புசெய்தற்குரியவற்றைத் தோழிகூறல் தலைவியை வற்புறுத்தற்கெனல்)**

**231.** அன்புறு தகுந விறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே.

இஃது, இறைச்சி முற்கூறியவற்றின் வேறுபட வருமென்றது.

இ — ள்: வருந்திய பொழுதே - பிரிவாற்றாத காலத்து, இறைச்சியுள் அன்புறு தகுந சுட்டலும் - தோழி கருப்பொருள்களுள் தலைவன் அன்பு செய்தற்குத் தகுவனவற்றைக் கருதிக் கூறலும், வன்புறை ஆகும் - வன்புறுத்தலாகும் என்றவாறு.

[2]நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழ
மென்சினை யாஅம் பொளிக்கு
மன்பின தோழியவர் சென்ற வாறே. (குறுந். 37)

இதனுள், 'முன்பே நெஞ்சகத்தன்புடையார் அதன்மேலே களிறு தன்பிடியின் பெரும்பசி களைதற்கு மென்றோலையுடைய ஆச்சாவைப் பிளந்து அந்நாரைப் பொளித்தூட்டும் அன்பினை யுடைய அவர் சென்ற ஆறதனைக் காண்பார்காண்' என்று அன்புறுதகுந கூறிப் பிரிவாற்றாதவளை வற்புறுத்தவாறு காண்க. நம்மேல் இயற்கையாக அன்பிலனென்று ஆற்றாளாவளென்று கருதாது இவளை ஆற்றுவித்தற்பொருட்டு இவ்வாறு கூறலின் வழுவாயமைந்தது.

'அரிதாயவறன்' (கலி. 11) என்பது தோழிகூற்றன்மை உணர்க. *(37)*

---

1. பார்ப்பு - பிள்ளை. வெண்பூ என்பதனால் தலைவி பேதைமை தோன்றிற்று.
2. நசை - வேட்கை. நல்கலுநல்குவர் - நல்கலுஞ் செய்வர். நல்கல் - அருளல்; தலையளிசெய்தல். யாஅம்பொளிக்கும் - யாமரத்தின் பட்டையை உரிக்கும்.

**(தலைவன் தலைவியைப் பாராட்டியவழி அஃது அவன்பிரிவை யுணர்த்துமெனல்)**

**232.** செய்பொரு ளச்சமும் வினைவயிற் பிரிவு
மெய்பெற வுணர்த்துங் கிழவிபா ராட்டே

*இது, தலைவன் தலைவியைப் பாராட்டியவழி வருவதோர் வழுவமைக்கின்றது.*

*இ – ள்: கிழவி பாராட்டே - தலைவன் தலைவியைப் பாராட்டிய பாராட்டு, செய்பொருள் அச்சமும் - யாஞ் செய்யக் கருதிய பொருட்கு இவள் இடையூறாவள் கொலென்று தலைவன் அஞ்சிய அச்சத்தையும், [1]வினைவயிற் பிரிவும் தான் பொருள்செய்தற்குப் பிரிகின்றதனையும், மெய்பெற உணர்த்தும் - ஒருதலையாகத் தலைவிக்கு உணர்த்தும் என்றவாறு.*

*[2]அப்பாராட்டுக் கிழவியதாகலிற் 'கிழவிபாராட்டு' என்றார்.*

நுண்ணெழின் மாமை (கலி. 4)

*என்பதனுட் கழிபெருநல்கலால் தலைவன் செய்பொருட் கஞ்சிய வாறும் அவன் பிரியக்கருதியதுஉந் தலைவியுணர்ந்தாள் அப்பாராட்டினாலென்றுணர்க.*

*அன்பானன்றிப் பொருள்காரணத்தாற் பாராட்டினமையானும் அதனைச் [3]செவ்வனங்கொள்ளாது பிறழக்கோடலானும் இருவர்க்கும் வழுவாமென்றமைத்தார். (38)*

**(தலைவி பரத்தையைப் புகழினும் உள்ளத்தூடல் உண்டெனல்)**

**233.** கற்புவழிப் பட்டவள் பரத்தை யேத்தினு
முள்ளத் தூட லுண்டென மொழிப.

*இது, தலைவிகட்டோன்றியதோர் வழுவமைக்கின்றது.*

---

1. வினைவயிற்பிரிவு என்பதற்குப் போர்த்தொழிற்குப் பிரிதல் என்று பொருள் கொள்வது நலம்.

2. கிழவி பாராட்டு என்றது கிழவியது பாராட்டு என உரிமைப்பொருள் பட நிற்றலினாலே ஆறாவதன் பொருட்டாய் நின்றது என்றபடி. ஆறாவதன் பொருட்டாய் நிற்பவும் இரண்டாவதன் உருபும் பொருளும் விரித்தது. 'அன்ன பிறவுந் தொன்னெறி பிழையாதுருபினும் பொருளினும் மெய்தடுமாறி' என்னும் வேற்றுமை மயங்கியல் 18ஞ் சூத்திர விதிபற்றியென்க.

3. செவ்வனம்கொள்ளாது - மெய்யாகக்கொள்ளாது.

இ — ள்: கற்புவழிப் பட்டவள் - கற்பின்வழிநின்ற தலைவி, பரத்தை ஏத்தினும் - பரத்தையைப் புகழ்ந்து கூறினாளாயினும், உள்ளத்து ஊடல் உண்டென மொழிப - உள்ளத்துள்ளே ஊடின தன்மை உண்டென்று கூறுவர் புலவர் என்றவாறு.

பரத்தையை ஏத்தவே தலைவன்கட் காதலின்மைகாட்டி வழு வாயிற்றேனும் உள்ளத் தூடலுண்மையின் அமைக்கவென்றார்.

[1]நாணி நின்றோ ணிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவுளன் னோணின்
மகன்றா யாதல் புரைவதாங் கெனவே. (அகம். 16)

'ஏத்தினும்' என்ற உம்மையால் ஏத்தாமற் கூறும்பொழு தெல்லாம் மாறுபடக் கூறலுளதென்பது பெற்றாம்.

[2]என்னொடு புரையுந ளல்ல
டன்னொடு புரையுநர்ந் தானறி குநளே. (பதிற்றுப்) (39)

**(கிழவன் குறிப்பை அறியக் கிழவி பிறள்குணத்தைப் புகழ்தலுமுரியள் எனல்)**

234. கிழவோள் பிறள்குண மிவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை யுணர்தற்கு முரியள்.

இஃது, எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது, உள்ளத்தூட லின்றியும் பிறளொருத்தியைத் தலைவி புகழுமென்றலின்.

இ — ள்: கிழவோள் பிறள் குணம் இவையெனக் கூறி - தலைவி வேறொரு தலைவியுடைய குணங்கள் இத்தன்மைய வென்று தலைவற்குக் கூறி, கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள் - அவள்மாட்டு இவள் எத்தன்மையனாயிருக்கின்றா னென்று தலைவன் குறிப்பினை அறிதற்குமுரியள் என்றவாறு.

பரத்தையென்னாது 'பிறள்' என்றதனால் தலைவியேயா யிற்று: அன்றிப் பரத்தையாயின் ஊடலின்மை அறனன்றாக லின் உள்ளத்தூடல் நிகழ்பவை வேண்டும். தோழிகூறுங்கால் தலைவிரைக் கூறப்பெறாளென்பதூஉம் பரத்தையரைக்கூறின் அவர்க்கு [3]முதுக்குறைமைகூறிக் கூறுவளென்பதூஉங் கொள்க.

1. நாணிநின்றோள் என்றது பரத்தையை. பேணினன் - விரும்பினேன். அணங்கு அருங்கடவுள் - வருத்தும் அரியதெய்வம். புரைவது - ஒப்பது; தக்கது.

2. புரைதல் - ஒத்தல்.

3. முதுக்குறைமை - பேரறிவு.

கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே. (ஐங்குறு. 122)

*இது, தலைவன் வரையக்கருதினாளோர் தலைவியை இனைய ளெனக் கூறி, அவள்மாட்டு இவன் எத்தன்மையனென்று [1]விதுப் புற்றுக் கூறியது. இது தலைவன்கூற உணராது தான் வேறொன்று கூறி அவன் குறிப்பு அறியக் கருதுதலின் வழுவாயமைந்தது. இது [2]கைக்கிளைப் பொருட்கண் வழுவமைக்கின்றது. (40)*

**(*தலைவி மலிதலு மூடலுமல்லாதவிடத்துத் தலைவன்முன் கழற்றுரைகூறாள் எனல்*)**

**235.** தம்முறு விழுமம் பரத்தையர் கூறினு
மெய்மமை யாக வவர்வயி னுணர்ந்து
தலைத்தாட் கழறற் மெதிர்ப்பொழு தின்றே
மலிதலு மூடலு மவையலங் கடையே.

*இது, பரத்தையர்க்கும் தலைவிக்கும் தலைவற்கும் படுவ தோர் வழுவமைக்கின்றது.*

**இ – ள்:** *தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும் - தலை வனால் தாம் உற்ற வருத்தத்தைத் தலைவிக்குப் பரத்தையர் கூறி னும் ஏனைத் தலைவியர் கூறினும், அவர்வயின் மெய்ம்மையாக உணர்ந்து - அவர் கூறியவாற்றானே அவ்வருத்தத்தை அவரிடத்து உண்மையாக உணர்ந்து, தலைத்தாட் கழறல் - தலைவன்முன் நின்று கழறும் கழற்றுரை, தம் எதிர்ப்பொழுது இன்று - தம்மைப் பரத்தையர் எதிர்ப்பட்டபொழுதின்கண் இல்லை, மலிதலும் - அவர் துயருறநின்றுழிக்கவலாது நீங்கினானென மகிழ்தலும், ஊடலும் - அவன் பிரிவிற்கு இவர் இரங்கினாரென்ற காரணத்தான் ஊடுதலும், அவை அலங்கடை - அவ்விரண்டும் நிகழாவிடத்து.*

*என்பது, வெறுத்த உள்ளத்தளாமென்பது கருத்து. எனவே, மலிதலும் ஊடலும் நிகழுமிடத்தாயின் தலைத்தாட் கழறு மென்பது பெறுதும். [3]தலைத்தாள் - தகுதிபற்றிய வழக்கு.*

---

1. விதுப்பு - வேட்கைமிகுதியானுளதாய விரைவு.
2. தலைவன் பேதைப்பருவப் பெண்ணை விரும்பலின் கைக்கிளை என்றார். பேதைப்பருவத்தாள் என்பதை 'வெள்ளாங்குருகை வினாவ'லாலறிக.
3. தலைத்தாள் - தாட்டலை; அடியிடத்து தலைவன் முன்னின்று கழறலை அடியிடத்துக் கழறல் என்றது தகுதிபற்றி என்பது கருத்து. கற்பியல் 24ஞ் சூத்திர உரை நோக்குக. 'கொற்றவன்றலைத்தாள்' (பெருங்கதை - உஞ்சை 45 - 79).

[1]பொன்னெனப் பசந்தகண் போதெழி னலஞ்செலத்
தொன்னல மிழந்தகண் துயில்பெறல் வேண்டேன்மன்
னின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைக
ளென்னுழை வந்துநொந் துரையாமை பெறுகற்பின். (கலி. 77)

*இது, பரத்தையர் முன்னரன்மையின் மலிதலும் ஊடலும் நிகழ்ந்து தலைத்தாட்கழறியது.*

*கழறாது கூறியது வந்துழிக் காண்க. தம்முறு விழுமத்தைப் பரத்தை தலைவிக்குக் கூறுதலாற் பரத்தைக்கும், அவர்கூறத் தான் எளிவந்தமையின், தலைவிக்கும், இவரிங்ஙன மொழுகலின் தலைவற்கும் வழுவமைந்தது. உம்மை, இறந்ததுதழீஇயிற்று. (41)*

**(*இது பெருந்திணைக்குரியதொரு வழுவமைக்கின்றது*)**

**236.** பொழுது தலைவைத்த கையறு காலை
யிறந்த போலக் கிளக்குங் கிளவி
மடனே வருத்த மருட்கை மிகுதியொ
டவைநாற் பொருட்க ணிகழு மென்ப.

*இது, 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே' (105) என்ற சிறப்புடைப் பெருந்திணையன்றிப் பெருந்திணைக் குறிப்பாய்க் கந்தருவத்துட்பட்டு வழுவிவரும் 'ஏறிய மடற்றிறம்' (51) முதலிய நான்கினுள் ஒன்றாய் முன்னர் நிகழ்ந்த கந்தருவம் பின்னர் வழீஇ வந்த 'தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்' (51) ஆகிய பெருந்திணைவழு அமைக்கின்றது.*

*ஓதலுந் தூதும் ஒழிந்த பகைவயிற்பிரிவாகிய வாளாணெதிரும் பிரிவும் முடியுடை வேந்தர்க்கும் அவரேவலிற் பிரியும் அரசர்க்கும் இன்றியமையாமையின், அப்பிரிவிற் பிரிகின்றான் 'வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்' (185) என்பதனாற் கற்புப் போல நீ இவ்வாறொழுகி யான்வருந்துணையும் ஆற்றியிருவென ஆற்றுவித்துப் பிரிதல் இலக்கண மன்மையின் வாளா பிரியுமன்றே: அங்ஙனம் பிரிந்துழி அவன் கூறிய கூற்றினையே கொண்டு ஆற்றுவிக்குந் தோழிக்கும் ஆற்றுவித்தலரிதாகலின், அவட்கு அன்பின்றி நீங்கினானென்று ஆற்றாமை மிக்கு ஆண்டுப் பெருந்திணைப் பகுதி நிகழுமென்றுணர்க.*

---

1. நின்னணங்குற்றவர் - நின்னால் வருத்தமுற்றவர். நொந்து - வெறுத்து.

இ — ள்: பொழுது - அந்திக்காலத்தே, கையறுகாலை - 'புறஞ் செயச் சிதைத்தல்' (18) என்னுஞ் சூத்திரத்தில் அதனி னூங்கின்று எனக் கூறிய 'கையற வுரைத்த' லென்னும் மெய்ப்பாடெய்திய காலத்தே, தலைவைத்த - அந்த வாற்றாமையின் இகந்தவாக முடிவிலே வைக்கப்பட்ட மெய்ப்பாடுகள், மிகுதியோடு மடனே வருத்தம் மருட்கை நாற்பொருட்கண் நிகழும் - தன்வனப்பு மிகுதியுடனே மடப்பமும் ஆற்றாமையும் வியப்புமாகிய நான்கு பொருட்கண்ணே நடக்கும், அவை இறந்தபோலக் கிளக்குங் கிளவி என்ப - அங்ஙனம் அவை நடக்கின்ற நான்கு பொருளுங் கூற்று நிகழுங்கால் தன்னைக் கைகடந்தனபோலக் கூறுங் கூற்றாய் நிகழுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

தலைவைத்த மெய்ப்பாடாவன:- 'ஆறாமவதியினும் ஒப்பத் தோன்றுதற்குரிய மெய்ப்பாடுகளாகி மன்றத்திருந்த சான்றோ ரறியத் தன்றுணைவன் பெயரும் பெற்றியும் அவனோடு புணர்ந் தமையுந் தோன்றக் கூறியும் அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும் ஞாயிறு முதலியவற்றோடு கூறத்தகாதன கூறலும் பிறவுமாம். உதாரணம்:

[2]புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை
யருகுவித் தொருவரை யகற்றலிற் றெரிவார்கட்
செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது
நயநின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்
பயனின்று மன்றம்ம காம மிவண்மன்னு
மொண்ணுத லாயத்தா ரோராங்குத் திளைப்பினு
முண்ணுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தன்
கண்ணினு முகத்தினு நகுபவள் பெண்ணின்றி
யாவருந் தண்குரல் கேட்ப நிரைவெண்பன்
மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே
பூவுயிர்த் தன்ன புகழ்சா லெழிலுண்க
ணாயிதழ் மல்க வழும்;

ஓஒ, அழிதகப் பாராதே யல்லல் குறுகினங்
காண்பாங் கனங்குழை பண்பு

1. ஆறாமவதி என்றது மெய்ப்பாட்டியலிற் கூறும் 'புறஞ்செயச் சிதைதல் ... ஆறென மொழிப்" என்னுஞ் சூத்திரத்துக் கூறியமெய்ப்பாடுகளை. அவற்றுள் கையறவுரைத்தல் என்ற மெய்ப்பாட்டின் மேல் களவொழுக்கத்தினுள் மெய்ப் பாடு நிகழா என்றும் அதன் மேல் வருவன கைக்கிளை பெருந்திணைக்கு வருவன என்றும் அச்சூத்திர உரையுள் இவரே கூறுதல் நோக்கி யறிக.

2. இதன் பொருளைக் கலித்தொகை யுரைநோக்கி யறிந்து கொள்க விரிவுபற்றி விடுத்தனம்.

என்று, எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற
வல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்;

எல்லாநீ, யுற்ற தெவனோமற் றென்றீரே லெற்சிதை
செய்தா னிவனென வுற்ற திதுவென
வெய்த வுரைக்கு முரனகத் துண்டாயிற்
பைதல வாகிப் பசக்குவ மன்னோவென்
னெய்தன் மலரன்ன கண்;

கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே
யாடையான் மூஉ யகப்படுப்பேன் சூடிய
காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று
மான்மலர்க் கொன்றை யவன்;

தெள்ளியே மென்றுரைத்துத் தேரா தொருநிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ
யுள்ளி வருகுவர் கொல்லோ வளைந்தியா
னெள்ளி யிருக்குவேன் மற்கொலோ நல்லிருண்
மாந்தர் கடிகொண்ட கங்குற் கனவினாற்
றோன்றின னாகத் தொடுத்தேன்மன் யான்றன்னைப்
பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து;

கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ;

மையில் சுடரே மலைசேர்தி நீயாயிற்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராயென்
றொய்யில் சிதைத்தானைத் தேர்கு;

சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ வெம்மை
நயந்து நலஞ்சிதைத் தான்;

மன்றப் பணைமேன் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ
மென்றோ ணெகிழ்த்தான் றகையல்லால் யான்காணே
னன்றுதீ தென்று பிற;

நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென்
னாயித முள்ளே கரப் பன் கரந்தாங்கே
நோயுறு வெந்நீர் தெளிப்பிற் றலைக்கொண்டு
வேவ தளித்திவ் வுலகு;

மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்
நலிதருங் காமமுங் கௌவையு மென்றிவ்

வலிதி னுயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழும மிரண்டு

எனப்பாடி;

இனைந்துநொந் தழுதன ணினைந்துநீ டுயிர்த்தன
ளெல்லையு மிரவுங் கழிந்தன வென்றெண்ணி யெல்லிரா
நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்தநீர் போலத் துணிவாங்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்றா
ணல்லெழின் மார்பனைச் சார்ந்து.' (கலி. 142)

*இதனுள், [1]அந்திக்காலத்தே கையறவெய்திப் பின்னர்ச் சான்றோரை நோக்கிக் கூறுகின்றவள் [2]புல்லாரா மாத்திரையென அவனோடு புணர்ச்சி நிகழ்ந்தமையும் யாவருங் கேட்ப நக்கழுது அல்லலுறீஇயானெனப் பெயரும் பெற்றியுங் கூறிப், புல்லிப் புணரப்பெறின் ஈதிகழ்ச்சியன்றாமெனக் கூறத்தகாதன கூறலான் மடந்தன்னை இறந்தவாறும், தெள்ளியே மென்றதனானும் எள்ளியிருக்குவேனென்றதனானும் வருத்தமிறந்தவாறும் 'கோடு வாய்கூடா' என்பது முதலாக் 'கொன்றையவன்' என்னுந் துணையுந் தான்செய்ததனை வியவாமையின் மருட்கை யிறந்தவாறும். நெய் தன்மலரன்ன கண்ணெனத் தன் வனப்புமிகுதி கூறலின் மிகுதி யிறந்தவாறுங் காண்க. எல்லிரா நல்கிய கேள்வனிவனெனவே கந்தருவத்தின் வழுவிப் பெருந்திணை நிகழ்ந்தவாறும் பின்னர் வரைவு நிகழ்ந்தவாறுங் காண்க. இதற்குப் பொருளுரைக்குங்காற் கேட்பீராக இவள் நக்கு, நக்க அப்பொழுதேயழும்; இங்ஙனம் அழுமாறு காமத்தை ஊழானது அகற்றலின் அஃதறுதியாக நரம்பினும் பயனின்றாயிருந்தது; ஓஒ, இதனையுற்ற இவள் அல்லற்பண்பைப் பாராதே அழிதக யாங்குறுகினோம்; குறுகி யாம் இதனை முடிவு போகக் காண்பேமென்று வந்து எல்லீரும் என்செய்தீர்? என்னை யிகழ்கின்றீரோ? இவ்வருத்தத்தை எனக் குறுத்தினவனது மாயஞ் செய்த மலர்ந்த மார்பை யான்முயங்கிக் கூடினும் இகழ்ச்சியன்றாம் என்றற் றொடக்கமாய் வரும். (42)*

### (இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி நீக்கி நிறுத்தலன்றிப் படைத்துக் கூறவும் பெறுமெனல்)

**237.** இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே.

1. அந்தி - மாலை. கையறவு - செயலறல்.
2. புல்ஆராமாத்திரை - புல்லுதல் நிறையாத அளவு.

இது, தோழி தலைவனைக் கூறுவனவற்றுள் வழுவமைவன கூறுகின்றது.

இ – ள்: இரந்து குறையுற்ற கிழவனை - இரந்துகொண்டு தன்காரியத்தினைக் கூறுதலுற்ற தலைவனை, தோழி நிரம்ப நீக்கி நிறுத்தலன்றியும் - தோழி அகற்றுற ஏத்துமுறைமையில் தாழ் வின்றாக அகற்றி நிறுத்தலேயன்றியும், வாய்மைகூறலும் - நுமது கூட்டத்தினை யான் முன்னே அறிவலென மெய்யாகக் கூறலை யும், பொய்தலைப்பெய்தலும் - அப்புணர்ச்சியில்லையென்று பொய்த்த துணைத் தலைவன்மேற் பொய்யுரை பெய்துரைத்தலை யும் அவன் வரைந்துகோடற்பொருட்டுச் சில பொய்களைக் கூற வேண்டுமிடங்களிலே பெய்துரைத்தலையும், நல்வகையுடைய நயத்திற் கூறியும் - நல்ல கூறுபாடுடைய சொற்களை [1]அசதியாடிக் கூறியும், பல்வகையானும் படைக்கவும் பெறுமே - இக்கூறிய வாறன்றி வேறுபடப் புனைந்துரைக்கவும் பெறும், என்றவாறு.

தோழி நீக்கலன்றியுங் கூறலையுந் தலைப்பெய்தலையும் படைக்கவும்பெறும், பல்வகையானும் படைக்கவும் பெறுமென வினைமுடிக்க. தோழி தலைவனோடு [2]நயங்கருதுமாற்றால் அவனை நீக்குதல் ஏனையவற்றோடெண்ணாது அன்றியுமெனப் பகுத்துரைத்தார். [3]ஏனைக்குறை முடித்தற்கு இடையூறின்மை கூறியனவும் வரைவுகடாய்க் கூறியனவுமாம்.

நெருநலு முன்னா ளெல்லையு.....
............ .......... ............ மகளே. **(பக்.490,551)**

இது [4]சேட்படுத்தது.

எமக்கிவை யுரையன் மாதோ நுமக்கியான்
யாரா கியரோ பெரும வாருயி
ரொருவி ரொருவிர்க் காகி முன்னா
ளிருவிர் மன்னு மிசைந்தனி ரதனா
லயலே னாகிய யாஅன்
முயலேன் போல்வனீ மொழிபொருட் டிறத்தே.

இது, வாய்மைகூறியது. யாந்[5]தன்னை மறைத்தலிற்போலும் இவள் குறைமுடியாளாயதென அவன் கருதக் கூறினாள்.

---

1. அசதியாடல் - பரிகாசமாகக்கூறல் நகையாடல்.
2. நயம் - குறையறிதல்.
3. ஏனை - ஏனைய என்றிருத்தல் வேண்டும்.
4. சேட்படுத்தல் - அகற்றுதல்.
5. தன்னை மறைத்தல் - தனக்குமுன்னுறு புணர்ச்சியை மறைத்தல்.

[1]அறியே மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த னாறுநின் மார்பே தெய்யோ. (ஐங்குறு. 240)

*இதுவும் அது.*

[2]நீயே, பொய்வன் மையிற் செய்பொருண் மறைத்து
வந்துவழிப் படுகுவை யதனா
லெம்மை யெமக்கே விலவலனே(?)
தகாது சொல்லப் பலவும் பற்றி(?)
யொருநீ வருத னாடொறு முள்ளுடைத்
தீர்மா மழைக்கண் கலுழ்க மதனா
னல்லோர் கண்ணுமஃ தல்ல
தில்லை போலுமிவ் வுலகத் தானே.

*இது, பொய்தலைப் பெய்தது.*

*'திருந்திழை கேளாய்' என்னுங் குறிஞ்சிக்கலி (5) யுள் வரைந்து கோடற்குப் பொய்யுரை படைத்தது.*

[3]அன்னையு மறிந்தன ளலரு மாயின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரு
மின்னா வாடையு மலையு
நும்மூர்ச் செல்க மெழுமோ தெய்யோ. (ஐங்குறு. 236)

*இது, நல்வகையுடைய நயத்திற் கூறியது.*

வீகமழ் சிலம்பின் வேட்டம் போந்து
நீயே கூறினு மமையுநின் குறையே.

*இதுவுமது.*

*அஃதன்றியும் நீயே சென்று கூறென்றலும் அறியாள் போறலுங் குறியாள் கூறலுங் குறிப்புவேறு கூறலும் பிறவும் நயத்திற் கூறும் பகுதியாற் படைத்தது பலவகையாற் படைத்துத் துறை வகையாம். இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதனா னமைக்க. இவை நாடக வழக்காகவும் உலகியல் வழக்காகவும் புனைந்துரைத்தமையானுந் தோழி தலைவற்குக் கூறத்தகாதன கூறலானும் வழுவமைந்தது. (43)*

---

1. நின் மார்பு நறியோள் கூந்தல் நாறும், நின்புறத்தொழுக்கத்தை யாம் அறியேம் அல்லேம்; நாறுமதனால் அறிந்தேம் என்பது கருத்து.

2. இச்செய்யுளுட் பிழையிருத்தலினால் பொருளறிய முடிய வில்லை.

3. ஆயின்று - ஆயினது. புலம்பு - தனிமை, மலையும் - வருத்தும். நயம் - அசதியாடல்.

### (உறழுங் கிளவி தலைவி முதலியோர்க்கும் ஐயக்கிளவி தலைவற்கு முரித்தெனல்)

**238.** உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி
யையக் கிளவி யாடூஉவிற் குரித்தே.

*இது, தோழிக்குந் தலைவிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது.*

*இ – ள்: உயர்மொழிக்கு உறழுங் கிளவியும் உரிய - இன்பம் உயர்தற்குக் காரணமான கூற்று நிகழுமிடத்திற்கு எதிர்மொழி யாக மாறுபடக்கூறுங் கிளவி நிகழ்த்தலுமுரிய, ஐயக்கிளவி ஆடூஉ விற்கு உரித்தே - கூறுவேமோ கூறேமோ என்று ஐயமுற்றுக் கூறுஞ்சொல் தலைவற்குரித்து, என்றவாறு.*

*[1]உறழுங் கிளவியைப் பொதுப்படக் கூறினார். தோழி உயர் மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலும், தலைவன் உயர் மொழி கூறிய வழித் தோழி உறழ்ந்து கூறலும், தலைவன் உயர் மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலும், தலைவி உயர் மொழி கூறியவழித்தோழி உறழ்ந்து கூறலுங் கோடற்கு.*

*'சுணங்கணி வனமுலை' என்னுங் குறிஞ்சிக்கலி (60) யுள்,*

[2]என்செய்தான் கொல்லோ விஃதொத்தன் றன்கட்
பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ஞருகுவான் போலு முடைந்து

*எனத் தோழி கூறியவழித்,*

தெருவின்கட் காரணமின்றிக் கலங்குவார் கண்டு.....எவன்

*எனவும்,*

[3]அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
பேரம ருண்கணின் றோழி யுறீஇய
வாரஞ ரெவ்வ முயிர்வாங்கு
மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ;
நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
னின்முகந் தான்பெறி னல்லது கொன்னே
மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழாய்
என்செய்வாங் கொல்லினி நாம்;

---

1. உறழ்தல் - மாறுபடல்.

2. இஃதொத்தன் - இவனொருத்தன். தகை - தகைமை; தன்மை. சாம்பி - கெட்டு. உடைந்து - மனமுடைந்து.

3. ஆரஞர் எவ்வம் - பொறுத்தற்கரிய மனக்கவற்சியைச் செய்யும் வருத்தம். உயிர்வாங்கும் - உயிரைக் கவரும். பெறின் - அவன் பெறின் அல்லது அது மருந்தாவதல்லது. இல்லேல் - இல்லையாயிருக்குமாயின்.

*எனத் தோழி கூறியவழிப் [1]பொன்செய்வாம் எனவும் தலைவி உறழ்ந்து கூறியவாறு காண்க.*

*இது, தலைவன்வருத்தங்கூற அதனை ஏற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாணமிகுதியாற் கடிதின் உடம்படாமை யின் அமைந்தது.*

*'எல்லாவிஃதொத்தன்' என்னுங் குறிஞ்சிக்கலி (61)யுள்,*

**ஈத லிரந்தார்க்கொன் றாற்றது வாழ்தலிற்**
**சாதலுங் கூடுமா மற்று**

*எனத் தலைவன் கூறியவழி,*

**இவடந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்**
**யாதுநீ வேண்டி யது.**

*எனவும்,*

**[2] மண்டப ரட்ட களிறன்னான் றன்னையொரு**
**பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ.**

*எனவும் தோழி யுறழ்ந்து கூறியவாறு காண்க.*

*இதுவும் அவன் வருத்தத்திற்கு எதிர்கூறத் தகாதன கூறலின் வழுவாய்த் தலைவி கருத்தறிந்து உடம்படவேண்டுமென்று கருதுதலின் அமைந்தது.*

**[3]அணிமுக மதியேய்ப்ப வம்மதியை நனியேய்க்கு**
**மணிமுக மாமழைநின் பின்னொப்பப் பின்னின்கண்**
**விரிநுண்ணூல் சுற்றிய வீரித ழலரி**
**யரவுக்கண் ணணியுற ழாரன்மீன் றகையொப்ப**
**வரும்படர் கண்டாரைச் செய்தாங் கியலும்**
**விரிந்தொலி கூந்தலாய் கண்டை யெமக்குப்**
**பெரும்பொன் படுகுவை பண்டு;**

---

1. பொன்செய்வாம் என நகையாடிக் கூறலால் உடன்பாடன்மைக் குறிப்பு தோன்ற நின்றது.

2. இவ்வடிகள் தோழி தலைவியோடு சாவியதாகக் கலியுரையிற் கூறியுள்ளார். இங்குத் தலைவனோடுறழ்ந்து கூறியதாகக் கூறுகின்றார். பின்னதே பொருத்தமாகத் தோன்றுகின்றது.

3. நனியேய்க்கும் மாமழை - மிகப் பொருந்தும் கரியமழை. பின் - பின்னுமுடிப்பு. பின்னின்கண் அலரிப் (பூக்கள்). அரவுக்கண் நனியுறழ் ஆரன்மீனின்தகைய யொப்ப என்க. அரவு - கரும்பாம்பு. ஆரன்மீன் - கார்த்திகைமீன். படர் - துன்பம். பொன்படுகுவை - பொன்னுண்டாவை என்றது; தோற்றப் பொலி வெய்தினை என்றபடி. இது எனக்கு நீ பெரிய பொன்கடவை என்பதோர்

ஏஎ! எல்லா, மொழிவது கண்டை யிஃதொத்தன் றொய்யி
லெழுதி யிறுத்த பெரும்பொன் படுக
முழுவ துடையமோ யாம்;

உழுதாய்,
சுரும்பிமிர் பூங்கோதை யந்நல்லா யானின்
றிருந்திழை மென்றோ ளிழைத்தமற் றிஃதோ
கரும்பெல்லா நின்னுழ வன்றோ வொருங்கே
துகளறு வாண்முக மொப்ப மலர்ந்த
குவளையு நின்னுழ வன்றோ விகலி
முகைமாறு கொள்ளு மெயிற்றா யிவையல்ல
வென்னுழுவாய் நீமற் றினி;

எல்லா, நற்றோ ளிழைத்த கரும்புக்கு நீகூறு
முற்றெழி னீல மலரென வுற்ற
விரும்பீர் வடியன்ன வுண்கட்கு மெல்லாம்
பெரும்பொன்னுண் டென்பா யினி;

நல்லா யிகுளை கேள்,
ஈங்கே தலைப்படுவ னுண்டான் றலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல;

ஆங்காக வத்திற மல்லாக்கால் வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகா லெம்மை முயங்கினை சென்றீமோ
முத்தேர் முறுவலாய் நீ படும் பொன்னெல்லா
முத்தி யெறிந்து விடற்கு. (கலி. 64)

*இது, தலைவன் உயர்மொழிக்குத் தலைவி உறழ்ந்து கூறியது; இது நகையாடிக் கூட்டத்தை விரும்பிக் கூறியமொழிக்கு உறழ்ந்து கூறலின் வழுவாய் அவளும் நகையாடிக் கூறலின் அமைந்தது.*

*'மறங்கொளிரும்புலி'* என்னுங் குறிஞ்சிக் கலி *(42)* யுள்,

[1]ஆர்வுற்றார் நெஞ்ச மழிய விடுவானோ
வோர்வுற் றொருதிற மொல்காத நேர்கோ
லறம்புரி நெஞ்சத் தவன்

*எனத் தலைவி கூறலுந்,*

தண்ணறுங் கோங்க மலர்த்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோற் றோன்றுமே நம்மருளாக்
கொன்னாள னாட்டு மலை

---

நகைப்பொருளுந் தோன்ற நின்றது. இறுத்த - ஓரொருகாற்றங்கின. பொன் படுகம் - தோற்றப்பொலிவு உண்டாவேம். உழுவது - உழுதல். இதுவும் நகை யாடிக் கூறியது. முத்தியெறிந்துவிடல் - ஒருகாலமுறாதபடி கழித்துவிடல்.

1. ஆர்வுற்றார் - தன்னான் நுகரப்பட்டார். ஒருதிறம்ஒல்காத - ஒருபக்கஞ் சாயாத. நேர்கோல் - நேர்நிற்குந் துலாக்கோல். மலை தோன்றும் என இயைக்க, கொன்ஆளன் - பயனின்மையை ஆளுபவன்.

*எனத் தோழி உறழ்ந்து கூறியவாறு காண்க. இதுவுந் தலைவி கூற்றிற்கு மாறாதலின் வழுவாய்ச் சிறைப்புறமாகக் கேட்டு வரைதல் பயனாதலின் அமைந்தது.*

[1]சொல்லின், மறாதீவாண் மன்னோ விவள் (கலி. 61)

[2]கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது (அகம். 198)

*என ஐயக்கிளவி தலைவற்குரியவாய் வந்தன.*

*இனி, ஐயப்பாடு தலைவிக்குமுரித்தென்றாற் 'சிறந்துழியை யம்' (94) என்பதற்கு மாறாம்.*

அவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள் (அகம். 48)

*என்பதனை ஐயத்துக்கண் தெய்வமென்று துணிந்தாளெனின் அதனைப் பேராசிரியர் தாமே மறுத்தவாறு காண்க.* (44)

**(தோழி அறிவுடையாளாகக் கூறலும் அமையுமெனல்)**

**239. உறுக ணோம்ப றன்னியல் பாகலி
னுரிய தாகுந் தோழிகண் ணுரனே.**

*இது, தோழி அறிவுடையாளாகக் கூறலும் அமைகவென் கின்றது.*

**இ — ள்:** உறுகண் ஓம்பல் தன் இயல்பு ஆகலின் - *தலைவிக்கு வந்த வருத்தத்தைப் பரிகரித்தல் தனக்குக் கடனாதலின்,* தோழி கண் உரன் உரியதாகும் - *தோழிமாட்டு அறிவுளதாகக் கூறல் உரித்தாகும் என்றவாறு. உதாரணம்:*

பான்மருண் மருப்பின்.

*என்னும்* பாலைக்கலி *(21)யுள்,*

[3]பொருடான்,
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையு
மன்ன பொருள்வயிற் பிரிவோய்

*எனத் தோழி அறிவுடையாளாகாக் கூறியவாறு காண்க.*

---

1. சொல்லின் - யான் என்குறையைச் சொல்லின். மறாதீ வாளோ - மறாதிருப் பாளோ?
2. கரந்த - மறைத்த.
3. பழவினைமருங்கின் - பழவினையினாலே, பெயர்பு பெயர்பு உறையும் - (இவர் நமக்கு உரியவரென்று கருதாது பிறரிடத்தே) மீண்டு மீண்டு சென்று தங்கும். பெயர்தல் - ஓரிடத்து நில்லாமை. பெயர்பு பெயர்பு தங்கும் என்றது அறிவுடை மையாற் கூறியதாகும்.

[1]பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென்
னொண்டொடி ஞெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ (அகம். 46)

என்பது உறுகண் காத்தற் பொருட்டாகத் தலைவி வருந்தினும் நீ செல்லென்றாள் தலைவன் செல்லாமை அறிதலின்.

ஒன்றென முடித்தலான் தலைவி உரனுடையளெனக் கூறலுங் கொள்க. (45)

### (தோழிக்கு உயர்மொழிக் கிளவியு முரித்தெனல்)

**240. உயர்மொழிக் கிளவியு முரியவா லவட்கே.**

இதுவுந் தோழிக்குரியதோர் வேறுபாடு கூறுகின்றது.

இ – ள்: அவட்கு - தோழிக்கு, உயர்மொழிக் கிளவியும் உரிய - தலைவியையுந் தலைவனையும் உயர்த்துக் கூறுங் கூற்று முரியவாம் ஓரோவோரிடத்து, என்றவாறு.

[2]மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ
யாண ரூரநின் மாணிழை யரிவை
காவிரி மலிர்நிறை யன்னநின்
மார்புநனி விலக்க றொடங்கி யோளே. (ஐங்குறு. 42)

இதனுட் காவிரிப் பெருக்குப்போலத் தலைவியைநோக்கி வருகின்ற மார்பினைத் தான் விலக்குமா றென்னையெனத் தலைவியை உயர்த்துக் கூறியவாறு காண்க.

'காலை யெழுந்து' (குறுந். 45) என்பதும் அது.

உலகம், புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன் (கலி. 47)

[3]தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே (கலி. 52)

எனத் தலைவனை உயர்த்துக் கூறியவாறு காண்க. (46)

---

1. தொடி - வளையல். நெகிழ்தல் - தளர்தல். தகைக்குநர் - தடுப்போர்.
2. யாணர் - வளம் (புதுவருவாய்). மலிர்நிறை - நீர்வெள்ளம். விலக்குமாறென்னே எனத் தலைமைதோன்றக் கூறியதனால் உயர்த்துக் கூறியதென்றார்.
3. குறி - குறியிடம். அணங்கு - தெய்வம். தெய்வம் என்று கருதி என்றதனாற் றலைவனையுயர்த்துக் கூறியவாறு காண்க.

**(தலைவியும் தோழியும் வாயில்களோடு கூறுவனவற்றை வெளிப்படக் கிளப்பரெனல்)**

**241.** வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்த
றாவின் றுரிய தத்தங் கூற்றே.

*இது, தலைவியுந் தோழியும் வாயிலாகச் சென்றாருடன் கூறுவனவற்றுட் படுவதோர் வழுவமைக்கின்றது.*

**இ – ள்:** *தத்தங் கூற்றே - தோழிக்குந் தலைவிக்குமுரிய கூற்றின்கண், வாயிற் கிளவி - வாயிலாய் வந்தார்க்கு மறுத்துத் தலைவனது பழிகளைக் கூறுங் கிளவிகளை, வெளிப்படக் கிளத்தல் - மறையாது வெளியாம்படி கூறுதல், தாவின்று உரிய - இங்ஙனங் கூறுகின்றேமே என்னும் வருத்தம் மனத்து நிகழ்தலின்றியே உரியவாம், என்றவாறு.*

*அவை தலைவிக்குந் தோழிக்குமுரியனவும் தோழிக்கே யுரியனவுந் தலைவிக்கே யுரியனவுமாம். வாயில்களாவார் ஆற்றாமையுந் தோழி முதலியோருமாம்.*

[1]நெஞ்சத்த பிறவாக நிறையில ளிவளென
வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத் தீவாயோ. (கலி. 69)

*இஃது, ஆற்றாமைவாயிலாகத் தலைவன்வந்துழித் தலைவி வெளிப்படக் கூறியது, இது தோழிக்கும் உரித்து.*

எரியகைந் தன்ன தாமரை யிடையிடை
............ ............. யார்ப்பினும் பெரிதே. (அகம். 116)

*இதனுள் 'நாணிலைமன்ற' எனத் தோழிகூறி அலராகின்றாளென வெளிப்படக்கிளத்தலின் வழுவாயமைந்தது.*

[2]அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத லியைபவா
னினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றமர்பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே. (கலி. 70)

*இது, தலைவிகூற்று.*

---

1. வஞ்சத்தான் வந்து என வஞ்சனையுடையனாகக் கூறியது வெளிப்படக் கிளந்ததாம்.
2. எமது கண்கள் எம் மெய்ப் புதல்வனைத் தீண்டப்பெறுகையினாலே துயிலவுங்கூடும், அதனை அரவம் வந்து போக்கும் என இயைத்துப் பொருள்கொள்க.

'உரிய' என்றதனால் தோழிவாயிலாகச் சென்றுழித் தலைவி வெளிப்படக் கூறுதலுங் கொள்க. அஃது 'இம்மையுலகு' என்னும் (66) அகப்பாட்டினுட் காண்க.

இவை இங்ஙனம் வெளிப்படக்கிளத்தலின் வழுவாய் அமைந்தன. (47)

**(உள்ளுறை ஐந்துவகைப்படும் எனல்)**

**242.** **உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்**
**கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே.**

இது, மேல் வெளிப்படக் கிளப்பனகூறிப் பின் வெளிப் படாமற்கிளக்கும் உள்ளுறை இனைத்தென்கின்றது.

**இ — ள்:** உடனுறை - நான்கு நிலத்தும் உளவாய் அந்நிலத் துடனுறையுங் கருப்பொருளாற் பிறிதொன்று பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சியும், உவமம் - அக்கருவாற் கொள்ளும் உள்ளுறை யுவமமும் ஏனையுவமமும், சுட்டு - உடனுறையுவமமுமன்றி [1]நகையுஞ்சிறப்பும் பற்றாது வாளாது ஒன்று நினைந்து ஒன்று சொல்வனவும் அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டிவருவனவும், நகை - நகையாடி ஒன்று நினைத்து ஒன்று கூறுதலும், சிறப்பென - ஏனையுவமம் நின்று உள்ளுறையுவமத்தைத் தத்தங் கருப் பொருட்குச் (50) சிறப்புக் கொடுத்து நிற்றலும் என்று, கெடலரும் மரபின் உள்ளுறை ஐந்தே - கெடுதலரிதாகிய முறைமையினை யுடைய உள்ளுறை ஐந்துவகைப்படும், என்றவாறு.

[2]ஒன்றனை உள்ளுறுத்து அதனை வெளிப்படாமற் கூறலின் அவற்றை உள்ளுறையாமென்றார்.

'இறைச்சிதானே' (229) 'இறைச்சியிற் பிறக்கும்' (230) என்பன வற்றுள் இறைச்சிக்குக் காரணங் காட்டினாம். உவமம் உவம வியலுட் காட்டுதும்.

[3]பெருங்கடன் முகந்த பல்கிளைக் கொண்மூ
விருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்
போர்ப்புறு முரசி னிரங்கி முறைபுரிந்
தறநெறி பிறழாத் திறனறி மன்ன
ரருஞ்சமத் ததிர்ந்த பெருஞ்சே யாடவர்

---

1. நகையும் சிறப்பும் பின்வருகின்றன.

2. ஒன்றனை - ஒருபொருளை.

3. கிளை - கூட்டம். கொண்மூ - மேகமே! விளி. ஏர்பு - எழுந்து. வளைஇ - சூழ்ந்து. முறை - நீதி. சமம் - போர். கழித்துஎறி - உறைகழித்து வெட்டுகின்ற. நளிப்பன -

கழித்தெறி வாளி னழிப்பன விளங்கு
மின்னுடைக் கருவியை யாகி நாளுங்
கொன்னே செய்தியோ வரவம் பொன்னென
மலர்ந்த வேங்கை மலிதொட ரடைச்சிப்
பொலிந்த வாயமொடு கண்டக வியலித்
தழலை வாங்கியுந் தட்டை யோப்பியு
மழலேர் செயலை யந்தளிர் ததையுங்
குறமகள் காக்கு மேனற்
புறமுந் தருதியோ வாழிய மழையே. **(அகம். 188)**

*இதனுட் கொன்னே செய்தியோ அரவ மென்பதனாற் பய னின்றி அலர்விளைத்தியோ வெனவுங் கூறி ஏனற் புறமுந் தரு தியோ என்பதனால் வரைந்து கொள்வையோ வெனவுங் கூறித் தலைவனை மழைமேல் வைத்துக் கூறலிற் சுட்டாயிற்று. கொன்னே செய்தியோ என்றதனால் வழுவாயினும் வரைதல் வேட்கையாற் கூறினமையின் அமைந்தது.*

*'அன்புறுதகுந (231) என்பதனுள் ஏனையதற்குக் காரணங் காட்டினாம்.*

[1]விளையா டாயமொடு.... பிறவுமா ருளவே. **(நற். 172)**

*இதனுட் புன்னையை அன்னை நுவ்வகையாகு மென்ற தனான் இவளெதிர் நும்மை நகையாடுத லஞ்சுதுமென நகை யாடிப் பகற்குறியெதிரேகொள்ளாமைக் குறிப்பினான் மறைத்துக் கூறி மறுத்தவாறு காண்க. இதனைச் செவ்வனங் கூறாமையின் அமைத்தார்.*

*'உள்ளுறை யுவம மேனை யுவமம்' (46) என்னுஞ் சூத்திரத்து [1]விரிகதிர் மண்டிலம்' என்னும்* **மருதக்கலி** *(71)யுட் சிறப்புக் கொடுத்து நின்றது காட்டினாம்.*

*அறத்தொடு நிலையும் பொழுதும் ஆறும் முதலியனவுஞ் செவ்வனங் கூறப்படுதலின் இவை கரந்தே கூறப்படுதலிற் 'கெடலரு மரபின்' என்றார். இவை தோழிக்குந் தலைவிக்கும் உரியவாறு செய்யுட்களை நோக்கி யுணர்க. (48)*

---

செறிவன. கருவி - தொகுதி. வாளா - பயனின்றி. அரவம் - முழக்கம். அடைச்சி - அணிந்து. தழலை - கவண்; வேறுகூறுவாருமுளர். தட்டை - மூங்கிலை நறுக் கிப் பிளந்து ஒன்றிலே தட்டுவது. புறமுந்தருதியோ - காத்தலைச் செய் வாயோ? உம்மை அசை.

1. ஆய் - தாய். நுவ்வை - நுந்தங்கை.

**(உள்ளுறை யைந்தானும் தலைவியுந் தோழியுமாக்கிய வின்பம் தலைவன்கண்ணு நிகழ்ந்து இன்பஞ்செய்யுமெனல்)**

**243.** அந்தமில் சிறப்பி னாக்கிய வின்பந்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே.

*இது, முற்கூறிய உள்ளுறைபற்றித் தலைவற்கு வருவதோர் வழுவமைக்கின்றது.*

**இ — ள்:** *ஆக்கிய அந்தமில் சிறப்பின் இன்பமும் - முற் கூறிய உள்ளுறை ஐந்தானும் அவர்களுண்டாக்கிய முடிவிலாத சிறப் பினையுடைய இன்பம், தன்வயின் வருதலும் வகுத்த பண்பு- தலைவன் கண்ணும் நிகழ்ந்து இன்பஞ் செய்தலுங் காமத்துக்கு முதலாசிரியன் வகுத்த இலக்கணம், என்றவாறு.*

*தலைவன்தன்மை என்ப தொன்றின்றி நந்தன்மையெனக் கருதுதலின் யாம் ஒன்றை நினைந்து ஒன்று கூறினும் அவன் முனியாது இன்பமெனக் கொள்வனெனக் கூறியவற்றை, அவன் இவை இன்பந்தருமென்றே கோடலின் வழுவமையப்பட்டன. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க.* *(49)*

**(எய்தாதெய்துவித்தல்)**

**244.** மங்கல மொழியும் வைஇய மொழியு
மாறி லாண்மையிற் சொல்லிய மொழியுங்
கூறியன் மருங்கிற் கொள்ளு மென்ப.

*இது, மேன் மூன்றுபொருளும் வழுவாயமைக என்றலின் எய்தாத தெய்துவித்தது.*

**இ — ள்:** *மங்கலமொழியும் - தலைவற்குத் தீங்குவருமென் றுட்கொண்டு தோழியுந் தலைவியும் அதற்கஞ்சி அவனை வழுத்துதலும், வைஇயமொழியும் - தலைவன் தம்மை வஞ்சித் தானாகத் தலைவியுந் தோழியுங் கூறலும், வைஇயமொழி, தீங்கைவைத்த மொழியுமாம்; மாறில் ஆண்மையிற் சொல்லிய மொழியும் - மாறுபாடில்லாத ஆளுந் தன்மையிடத்தே பழி படக்கூறிய மொழியும், கூறியன் மருங்கிற் கொள்ளும் என்ப - வழுவமைதியாகக் கூறிய இலக்கணத்திடத்தே கொள்ளுமொழி யென்று கூறுவர் ஆசிரியர், என்றவாறு.*

[1]நோயில ராகநங் காதலர் (அகம். 115, 227)

எனவும்,

[2]காந்தளுஞ் செய்வினை முடிக்கத் தோழி

எனவுங் கூறுவன நம்மை அறனனறித் துறத்தலின் தீங்கு வரு மென்றஞ்சி வாழ்த்தியது. நம்பொருட்டுத் தீங்கு வருமென நினைத்தலின் வழுவா யமைந்தது.

[3]வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தலின் (கலி. 134)

என்பது வஞ்சித்தமை கூறிற்று.

[4]இதுவுமோ, ரூராண்மைக் கொத்த படிறுடைத்து (கலி. 89)

என்பது ஆண்மையிலே பழியுண்டு என்றது. இதுவும் வழீஇ அமைந்தன. *(50)*

***(சினம் முதலியன ஒருபொருளைச் சிறப்பித்துவருமாயின் அமைக்கப்படுமெனல்)***

**245.** சினனே பேதைமை நிம்பிரி நல்குர
வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே.

இது, மெய்ப்பாட்டியலுள் ஆகாதென்பவற்றுட் சில அமைகவென வழுவமைக்கின்றது. இது பொதுவாகக் கூறலின் தலைவிக்குந் தோழிக்குங் கொள்க.

**இ — ள்:** சினனே - கோபம் நீடித்தலும், பேதைமை - ஏழைமை யும், நிம்பிரி - பொறாமைதோன்றுங் குறிப்பும், நல்குரவு - செல்வ மின்மையும், அனைநால்வகையும் - என்ற அத்தன்மையனவாகிய நாற்கூறும், சிறப்பொடுவருமே - ஒருபொருளைச் சிறப்பித்துக் கூறுதல் காரணத்தான் வரும், என்றவாறு.

சின்த்தை ஆண்டுக் கொடுமையினடக்கினார்

நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி எனவும், (கலி. 60)

தொடிய வெமக்குநீ யாரை (கலி. 88)

எனவுஞ் சினம்பற்றிவரினும் அவை தன்காதலைச் சிறப்பித்தலின் அமைந்தன.

---

1. நோயிலராக என்றதே வாழ்த்தாகும்.
2. இது என்னநூலிற் செய்யுளென்பது தெரியவில்லை.
3. வையினர் - இறந்துபட்டு வருத்தந்தீராமல் என்னை வைத்து என்பது கலியுரை.
4. ஊர் ஆண்மை - ஊரையாளுந்தன்மை. படிறு - கொடுமை.

[1]செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி (கலி. 19)

*எனக் கழிபெருங் காதலான் நின்னை உள்ளவாறறிந்திலே னெனத் தன் பேதைமையைக் காதலாற் சிறப்பித்தலின் அமைந்தது.*

[2]உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்
தறல்வாரும் வையையென் றறையுந ருளராயின். (கலி. 30)

*இது, [3]நிம்பிரி. அவரோடும் விளையாடுவானெனப் பொறாமை கூறியும் அவன் ஈண்டையானாக வேண்டுமெனக் காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது.*

[4]பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோ
லுண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்
றரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரீஇமெலிந் தொழியப் பந்த ரோடி
யேவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
யறிவு மொழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தாதை கொழுஞ்சோ றுள்ளா
ளொழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துண்ணுஞ் சிறுமது கையளே. (நற்றிணை. 110)

*இது, குடிவறனுற்றென நல்குரவு கூறியுங் காதலைச் சிறப் பித்தலின் அமைந்தது.*

*இது,* மெய்ப்பாட்டியலுள் *விலக்காமையின் அதனைச் சார ஈற்றிலே வைத்தார். (51)*

---

1. தீவிய - இனிய, யாங்குஅறிகோ - எப்படி அறிவேனோ அலர் - பலரறிந்த பழிமொழி
2. உறலியாம் - தன்னோடு உறுதற்குரியயாம். துருத்தி - ஆற்றிடைக்குறை.
3. நிம்பிரி - பொறாமை.
4. பிரசம் - தேன். கலம் - பாத்திரம் (கிண்ணம்). ஒக்கல் - ஓச்சல். பரீஇமெலிந் தொழிய - (செவிலியர் பற்றமுடியாமையால்) வருந்தி மெலிந்தொழியுமாறு. பரீஇ - ஓடியுமாம். யாண்டு - எப்படி. வறன் - வறுமை. உள்ளாள் - நினை யாளாய். பொழுதுமறுத்துண்ணல் - ஒருபொழுதின்றி ஒருபொழுதுண்ணல். மதுகை - வன்மை

## (முறைப்பெயர்பற்றியும் வழுவமைத்தல்)

**246.** அன்னை யென்னை யென்றலு முளவே
தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினுந்
தோன்றா மரபின வென்மனார் புலவர்.

*இது, முறைப்பெயர் பற்றி வருவதோர் வழுவமைக்கின்றது.*

*இ — ள்:* சொல்லினும் எழுத்தினுந் தோன்றா மரபின - சொல் லோத்தினும் எழுத்தோத்தினுஞ் சொல்லப்படாத இலக்கணத் தனவாய, தொல் நெறி முறைமை - புலனெறி வழக்கிற்குப் பொருந் திய பழைய நெறி முறைமையானே, அன்னை என்னை என்றலும் உள என்மனார் புலவர் - தோழி தலைவியை அன்னை யென்றலும் தலைவி தோழியை அன்னை யென்றலும் இருவருந் தலைவனை என்னை யென்றலும் உளவென்று கூறுவர் புலவர் என்றவாறு.

[1]அன்னா யிவனோ ரிளமா ணாக்கன். (குறுந். 33)

புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய். (குறுந். 150)

*இவை, தோழியைத் தலைவி அன்னாயென்றன.*

[2]அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாட னூர்ந்த மாவே. (ஐங்குறு. 202)

[3]அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பா ளன்னன்
றூவலி னனைந்த தொடலை யொள்வாட்
பாசி சூழ்ந்த பெருங்கழற்
றண்பனி வைகிய வரிக்கச் சினனே. (ஐங்குறு. 206)

*இவை, தோழி தலைவியை அன்னை யென்றன.*

எனக்கு மாகா தென்னைக்கு முதவாது. (குறுந். 27)

ஒரீ இயின னொழுகு மென்னைக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே. (குறுந். 203)

*இவை, தலைவி தலைவனை என்னை யென்றன.*

---

1. இது - இச்சூத்திரப்பொருள்.
2. மக - பிள்ளை; சிறுவன் அவனுக்குக் குடுமி உச்சியிலிருப்பது போல மாவுக்கும் உச்சியிற் குடுமி உள்ளதாதலின் மா குடுமித்தலைய என்றார். குடுமி - உளை; தலையாட்டம்.
3. காப்பாளன்னன் - காப்பாளைப்போன்றவனாய். காப்பு ஆள் - காவல்புரியும் ஆள். தூவல் - மழை. தொடலை - தொடுக்கப்பட்டது. தொடுக்கப்பட்ட தாகிய வாள் என்க. பனி - குளிர்ச்சி.

*தோழி கூறியது வந்துழிக் காண்க. தலைவன் தலைவியை அன்னையெனக் கூறலும் உளதென்பாருமுளர். எழுத்தினுஞ் சொல்லினுமென்னாத முறையன்றிக் கூற்றானே புறத்திற்கும் இவை கொள்க:*

**என்னை மார்பிற் புண்ணுக்கு,**

**என்னைக் கூரிஃ தன்மை யானு**
**மென்னைக்கு நாடிஃ தன்மை யானும்,** (புறம். 85)

**என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை**
**முன்னின்று கன்னின் றவர்,** (குறள். 271)

**என்னை மார்பிற் புண்ணும் வெய்ய,** (புறம். 280)

*என்பன கொள்க. ஏனைய வந்துழிக் காண்க.*

*இனி, உம்மையாற் [1]பிறவுமுள வென்பது பெறுதலின்,*

**எந்தைதன், னுள்ளங் குறைபடா வாறு** (கலி. 61)

*என்றாற்போல் வருவன பிறவுங் கொள்க.* *(52)*

***(கட்புலனாகக் காட்டலாகாப் பொருளிவையெனல்)***

**247. ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா**
**கற்பு மேரு மெழிலு மென்றா**
**சாயலு நாணு மடனு மென்றா**
**நோயும் வேட்கையு நுகர்வு மென்றாங்**
**காவயின் வரூஉங் கிளவி யெல்லா**
**நாட்டிய மரபி னெஞ்சுகொளி னல்லது**
**காட்ட லாகாப் பொருள வென்ப.**

*இது, கட்புலனாகக் காணப்படாத பொருண்மேலும் கட்புலனாகக் காணப்பட்டாற்போலப் பொருள்கோடல் வழுவமைக்கின்றது.*

*இ – ள்:* **ஒப்பாவது:** *ஒத்த கிழவனுங் கிழத்தியு மென்றவழி அவரொப்புமை மனனுணர்வா னுணர்வதன்றி மெய் வேறுபாடுபற்றிப் பொறியானுணரலாகா தென்றது; தந்தைய ரொப்பர் மக்களென்பதும் அது.*

**உருவாவது:** *[2]உட்கு, அதுவும் பொறிநுதல் வியர்த்தல் போல்வனவற்றா னன்றிப் பிழம்பு பற்றி உணரலாகாது.*

---

1. பிற என்றது என்னை என்றலன்றி எந்தை எனவுங் கூறன் முதலியவற்றை.
2. உட்கு - அச்சம். பொறிநுதல் வியர்த்தல் ஒருமெய்ப்பாடு மெய்ப்பாட்டியல் 12ம் சூத்திரநோக்கியறிக. பிழம்பு - வடிவு.

**வெறுப்பாவது:** செறிவு; அதுவும் மக்கட் குணமாய் [1]இசையாததோர் மன நிகழ்ச்சியாதலிற் பொறியான் உணரலாகாது.

**கற்பாவது:** தன் கணவனைத் தெய்வமென்று உணர்வ தொரு மேற்கோள்.

**ஏராவது:** [2]எழுச்சி; அஃது எழுகின்ற நிலைமையென நிகழ் காலமே குறித்து நிற்கும்.

**எழிலாவது:** அங்ஙனம் வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்.

[3]**சாயலாவது:** ஐம்பொறியால் நுகரும் மென்மை.

**நாணாவது:** செயத்தகாதனவற்றின்கண் உள்ளமொடுங்குதல்.

**மடனாவது:** கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை.

**நோயாவது:** நோதல்.

**வேட்கையாவது:** பொருள்கண்மேல் தோன்றும் பற்றுள்ளம்; 'செய்யுண்மருங்கின் வேட்கை' (86) என்புழி அவாவிற்கு வேறு பாடு கூறினாம்.

**நுகர்வாவது:** இன்பதுன்பங்களை நுகரும் நுகர்ச்சி. 'என்றா' என்பன எண்ணிடைச்சொல்.

என்று வருங் கிளவி - ஒப்பு முதல் நுகர்வு ஈறாகப் பன்னிரண்டென்று அகப்பொருட்கண் வருங் கிளவிகளும்.

ஆவயின் வருங் கிளவி - அப்பன்னிரண்டின்கண்ணே புறப் பொருட்குரியவாய் அவ்வாசகத்தான் வருங் கிளவிகளும்.

ஆங்கு; ஈண்டு, உவமவுருபு; அவைபோல்வன கிளவி என்ப தாம்.

எல்லாம் நாட்டிய மரபின் நெஞ்சு கொளின் அல்லது - ஏனையவும் நாடக வழக்கத்தாற் புலனெறி வழக்கஞ்செய்த முறைமையானே நெஞ்சு உணர்ந்து கொள்ளினன்றி,

1. இசையாமை - உடன்படாமை.
2. எழுச்சி என்றது வளர்ச்சியைக் குறிக்கின்றதுபோலும், பின்எழில் என்பதில் அங்ஙனம் எனச் சுட்டலின்.
3. சாயல் - மென்மை (தொல். உரி. 4).

காட்டலாகாப் பொருள என்ப - உலகியல் வழக்கான் ஒருவர்க்கொருவர் கட்புலனாகக் காட்டப்படாத பொருளைப் பொருளாகவுடைய என்று கூறுவர் புலவர் என்றவாறு.

இவை மேல்வரும் மெய்ப்பாடு பற்றி உணர்தலிற் கட்புலனா காவோவெனின், **மெய்ப்பாடாவது:** மனக்குறிப்பாதலின் அதன் குறிப்பிற்குப் பற்றுக் கோடாகிய பொருளினவை யென்றுணர்க.

இனி, இவை புறப்பொருட்கண் வருமாறு:

[1]வரைபுரையு மழகளிற் றின்மிசை (புறம். 38)

எனவும்,

[2]உருகெழு முரசம். (புறம். 50)

எனவும்,

[3]வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன். (புறம். 53)

எனவும்,

[4]நிலைகிளர் கூட னீளெரி யூட்டிய
புலர்புகழ் பத்தினி (சிலம்பு–பதி. 35; 36)

எனவும் வரும். இவ்வாறே ஏனையவற்றிற்கும் ஒட்டிக்கொள்க.

இனி எல்லாமாவன: ஒளியும் அளியும் காய்தலும் அன்பும் அழுக்காறும் பொறையும் நிறையும் அறிவும் முதலியனவும் பிறவுமாம்.

**ஒளியாவது:** [5]வெள்ளைமையின்மை.

**அளியாவது:** அன்புகாரணத்தால் தோன்றும் அருள்.

**காய்தலாவது:** வெகுளி.

**அன்பாவது:** மனைவியர்கண்ணுந் தாய் தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின்கண்ணும் மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப் பித்து நிற்கும் நேயம்.

**அழுக்காறாவது:** பிறர் செல்வ முதலியவற்றைப் பொறாமை.

**பொறையாவது:** பிறர் செய்த தீங்கைப் பொறுத்தல்.

**நிறையாவது:** மறை பிறரறியாமல் ஒழுகுதல்.

---

1. புரை - ஒப்பு.
2. உரு - அச்சம்.
3. வெறுத்த - செறிந்த, இது செறிவு.
4. இது கற்பிற்குதாரணம்.
5. வெள்ளைமை - அறிவுமுதிராமை.

அறிவாவது: நல்லத னலனுந் தீயதன் றீமையும் உள்ளவா றுணர்தல். இவை கண்டிலமென்று கடியப்படா கொள்ளும் பொருளென்றார். இவை ஆசிரியனாணையன்றென்பது மேற் சூத்திரத்தாற் கூறுகின்றான். (53)

**(காட்டலாகாப் பொருள்களும் உள்பொருளாதலின் பொருளே எனல்)**

**248.** **இமையோர் தேஎத்து மெறிகடல் வரைப்பினு**
**மவையில் கால மின்மை யான.**

இஃது, இவையுங் காட்டலாகப் பொருள்கள் ஆசிரியனா ணையாற் கொண்டனவல்லவற்றைப் பொருளெனக் கொள்க என்கின்றது.

இ — ள்: இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும் - தேவருலகத்தின்கண்ணுந் திரையெறியுங் கடல்சூழ்ந்த நிலத்தின் கண்ணும், அவைஇில் காலம் இன்மை யான - அறம் பொருள் இன்பங்களின் நுகர்வு இல்லாததோர் காலம் இன்றாகையால் அவற்றைப் பொருளென்றே கொள்க என்றவாறு.

தமிழ் நடக்கும் எல்லை கூறாது தேவருலகையும் மண்ணு லகையும் கூறியமையின் இவை யாண்டும் ஒப்ப முடிந்தனவென வும் அவை உள்ள அளவும் இவை நிகழ்வனவெனவுங் கூறலின் வழுவமைதியாயிற்று. இமையாக் கண்ணராகலின் இமையோர் என்றார். இடையூறில்லா இன்பச் சிறப்பான் இமையோரை முற்கூறினார். (54)

## பொருளியல் முற்றிற்று

-----

பருவ ராலுகள் வாவிசூழ் மதுரையம் பதிவாழ்
பொருவ ராநச்சி னார்க்கினி யானுரை புணையாங்
கருவ ராநெறி யுதவுதொல் காப்பியக் கடற்கே
வெருவ ராதுநின் றனமகிழ்ந் தேகுவன் விரைந்தே.

*தொல்காப்பியனார் திருவடி வாழ்க*

ooo

# உதாரணச் செய்யுட் குறிப்புரை

## அகத்திணையியல்

### 3 - ம் சூத்திரம்

1. கணம் - கூட்டம்; திரட்சி. கான்கெழு நாடு - காட்டிலுள்ள நாடு (முல்லை). குறும்பொறைநாடு - மலைநாடு (குறிஞ்சி). நல் வயலூரன் - நல்ல வயல்பொருந்திய ஊரையுடையவன் (மருதம்). தெண்கடற்சேர்ப்பன் - தெள்ளிய கடற்கரை (ஊரை) யுடையவன் (நெய்தல்) நானிலங்களையுமுடையவன் என்றபடி. கையறு மாலை = செயலற்ற மாலையே! விளி. கடும்பகல் - நடுப்பகல் (உச்சிக்காலம்). களைஞர் - நீக்குபவர்; தடுப்பவர். இதனை நச்சினார்க்கினியர் அகத்திணையியலில் 12ம் சூத்திர உரையுள் பருவவரவின்கண் மாலைப்பொழுதுகண்டு ஆற்றாளாய தலைவி தோழிக்க்கு கூறியதென்று கூறலின் நெய்தற்கண் பாலை வந்ததாகும். இதனாலே பிரிவு பாலைக்குரியதென்பதும், அது நெய்தற்கண் மயங்கி வந்ததென்பதும் பெறப்படும். சேர்ப்பனுக்கு ஏனை நிலங்களை விசேடணமாக்கிக் கூறியதனானும், ஏனை ஒழுக்கங்களுக்குரிய நிலங்களிவையென்பது குறிப்பாற்றோன்ற வைத்தமையானும் ஐந்திணைக்கும் இடநியமித்ததென்பது பெறப்படும்.

2. வைநுனை - கூரிய நுனையையுடைய மொட்டு. இல்லம் - தேற்றா. பிணி - மொட்டு. திரித்தன்ன மருப்பு என இயைக்க. திரித்தல் - முறுக்கல். மருப்பின் இரலை என வொட்டுக. அவல் - பள்ளம். அடைய - ஒருங்கு. தெறிப்ப - துள்ள. புலம்பு - நீர் பெறாத வருத்தம். கருவி - தொகுதி. வானம் - மேகம். உறை - துளி. குரங்குஉளை - வளைந்த தலையாட்டம் (உச்சிமயிர்). வள் - வார். நரம்பு ஆர்ப்பன்ன பறவை என இயைக்க. பறவை - வண்டு. உவக்காண் - உவ்விடத்தே. ஒட்டி நின்ற ஒரு சொல். இது பரிமேலழகர் கருத்து. இது பொருத்தமோ என்பது ஆராயத்தக்கது. உங்கேகாண் என்பது நன்று. நாடன் தோன்றுமெனக் கூட்டுக. உறந்தை - உறையூர். குணாது - கிழக்கின்கணுள்ளது. அரிவை - விளி. (அகம் - 4).

3. கிளை - சுற்றம். பாராட்டும் - விரும்பிப் பாதுகாக்கும். முளை - மூங்கின் முளை. தருபு - தந்து. குளகு - இலையுணவு. உருவு - வடிவு. ஒளிறு - விளங்கிய. உறை - மழை. நவின்று - பயின்று. சிமை - சிகரம். வட்டித்து - சூழ்ந்து. ஏறு - இடியேறு. உரைஇய - பரந்த. காண்புஇன் சாயல் - காண்டற்கினிய சாயல். தடைஇ - வளைந்து. படாஅ - துயிலா. இயவுக்கெடவிலங்கி - வழிதடுமாறலான் விலகி. வழங்குநர் - வழிச்செல்வோர். புலிபார்க்கும்

மலையின் பிளப்பினையுடைய இடத்தில் வரவு அரிதென்னாய் என இயைக்க. ஆரம் - சாந்தம். முயங்கல் - தழுவல். சாஅய்தும் - மெலிவேம். அலர் - பலரறிந்த பழிமொழி. அம்பல் - சிலரறிந்த பழிமொழி. தோன்றி - காந்தள். பகல்வந்தீமே - பகற்பொழுதில் வருவாயாக. வினைத்திரிசொல்.

4. புட - மொய்த்தலால். ததைந்த - சிதறின; மலர்ந்த கண்ணி - நெற்றிமாலை. உரு - நிறம்; அச்சமுமாம். மழவர் ஓட்டிய - மழவதேசத்தாரை ஓடச்செய்த. ஆவிநெடுவேள் - ஒரு குறுநில மன்னன். அறுகோடு - அறுத்துத் திருத்தின கோடு. பொதினி - ஒருமலை. சிறு காரோடன் - சாணைக்கல் செய்வோன். பயின் - அரக்கு. கல் - சாணைக்கல். காடிறந்தோர் ஆங்கண் (சொல்லிய) சொல் தாம் மறந்தனர்கொல்என இயைக்க. தோழி - விளி. பொலங்கலம் - பொன்னுங்கலமும். வெறுக்கை - செல்வம். தருமார் - தருவார் (தரும்படி). உலறிய - வற்றிய; நேரான. வெளவுநர் - ஆறலைப்பார். மடிய - வாராதொழிய. நவிரல்வான்பூ - பழையதாகிய வெள்ளியபூ. சூரற்கடுவளி - சூறாவளி. ஆர் - ஆர்ப்பு. முன்கடல் - கடல்முன். மரத்த வெம்மைய, ஆற்ற தோன்றலகாடு என இயைக்க. (அகம் - 1).

5. முனைஇய - வெறுத்த. காரான் - எருமை. நோன்தளை பரீஇ - வலியகட்டை அறுத்துக்கொண்டு. பழனம் - வயல். உடன் - ஒருங்கு. தூம்பு - மதகு. மயக்கி - காலாலுழக்கி. ஆரும் - உண்ணும். புலக்கேம் - புலப்பேம். யார் - அதற்கு நீ யார்? என்ன உற வினை என்றபடி. வாருற்று - நீட்சியுற்று. உறைஇறந்து - மழைக் கால வீழ்ச்சியைக் கடந்து. சமம்ததைய நூறும் - போர் சிதையக் கெடுக்கும். சென்றீ - செல்; ஈ முன்னிலையசை. தகைக்குநர் - தடுப்போர். (அகம் - 46).

6. கானல் - கடற்கரைச்சோலை. பாடு - ஒலி. எழுந்து - மிக்கு. தொகுதி - கூட்டம். குவை - திரட்சி. குடம்பை - கூடு. அல்குறு காலையாகிய மாலை எனக் கூட்டுக. அல்குதல் - (எல்லாம் தம்பதியிற்சென்று) தங்குதல். தளர - ஒல்க. தூங்கி - அசைந்து. தூங்கிவந்த கொண்டல் என இயைக்க. கொண்டல் - கீழ்க்காற்று. கையறுபு - செயலற்று. இனைய - வருந்த. மறாஅலியர் - மறவாதொழிக. கேண்மையை மறவாதொழிக என மாற்றிக்கொள்க. அளி - அளித்தல் (=அருளல்) முனைஇ - வெறுத்து. ததும்பும் - ஒலிக்கும். செறிமடைவயிர் - செறிக்கப்பட்ட மடை (மூட்டுவா)யையுடைய கொம்பு. வயிர் - கொம்புவாச்சியம். பிளிற்றி - ஒலித்து. (அகம் - 40).

7. முல்லை - விளி. நீபெறக் கேண்மை எவன்? என முடிக்க. எவன் - எவ்வியல்பினது. மாஅயோள் - மாமை நிறமுடையோள்.

8. கரந்தை - நிரைமீட்டற்குரியது. கண்ணி - மாலை. பரி - குதிரை. கடைஇ - செலுத்தி.

9. நறை - நறுமணம். எறிந்து - வெட்டி. உறை - மழை. ஏனல் - தினை. காணீரோ - கண்டிலீரோ. ஏ மரை - அம்பு தைத்த மரை. ஈண்டுப் போந்தது காணிரோ என இயைக்க. (திணை: நூற் - 1).

10. வாரா - வளர்ந்து. முதுக்குறைவு - பேரறிவு. இது தோழி நகையாடிக் கூறியதுபோலும்.

11. ஆள்வினை - முயற்சி. கண்பனி - கண்ணீர்.

12. எங்கை - என் தங்கை; என்றது பரத்தையை. ஆகி - ஆகியும்.

13. பூசல் - ஒலி. ஏதின்மாக்கள் - அயலார். நோவர் - வருந்துவர். என் நலத்துக்கு நோவாரில்லை என இயைக்க.

## 5ம் சூத்திரம்

14. பாடுஇமிழ்பரப்பு - (திரை) முறிதலையுடைத்தாகிய முழங்குகின்ற கடல். அசைஇய - துயின்ற. ஆடுகொள்நேமியான் - வெற்றியைக்கொண்ட சக்கரத்தினையுடையோனாகிய திருமால்.

15. மடையடும் - பலியாகச் சமைக்கும். காமன் - மன்மதன். படைமன்இடுவான் - தன் கையிற் படையை மிகவும் (போக விடுவான்) செலுத்துவான்.

16. படியோர் - (பிரதியோர்) பகைவர், படியார் என்பதில் ஆ - ஓவாயிற்றாக உரைப்பினுமமையும். தேய்த்த - அழித்த. நெடுவேள் - முருகன்.

17. புதுப்புனல் - புதுநீர். தவிர்தல் - ஒழிதல்: தங்கல். தேற்றி - வார்த்தையால் தெளிவித்து. தெய்வத்திற்றெளிப்பேன் - பின், தெய்வத்தாற் தெளிவிப்பேன். (சத்தியஞ் செய்வேன்).

18. மனை - இல்; விடு. அணங்கு - தெய்வம்.

19. புகாஅர்த்தெய்வம் - சங்கமுகத்திலுள்ள தெய்வம். சங்கமுகம் - கடலில் ஆறுவந்து கலக்குமிடம்.

20. அணங்கு - தெய்வம். அயரும் - வழிபாடுசெய்வாள்.

21. சினை - மரக்கொம்பு. சினம் - கோபம் (வெப்பம்) தணிந்தீக - தணிக; அகரந் தொக்கது. கனலி - ஞாயிறு.

22. வளி - காற்று.

23. நெய்தல் - இரங்கலொலி. கேளன்மார் - கேளாதொழிவார்.

24. வன்புலக்காடு - வன்புலமாகிய காடு; முல்லையுங் குறிஞ்சியும் வன்புலமாதலின் முல்லையை வன்புலக்காடு என்றார்.

25. இறும்பு - சிறுகாடு.

26. புலத்தல் - வெறுத்தல்.

### 6ம் சூத்திரம்

27. விருந்தின்மன்னர் - புதியமன்னர். கலம் - ஆபரணம். தெறுப்ப - குவிப்ப. வேந்தன் - தான் துணையாகப்போன வேந்தன். பெயல் - மழை. ஆர்கலிதலையின்று - ஆரவாரத்தோடுபெய்தது ஓவத்தன்னநிலம் என்க. ஓவம் - சித்திரம். கோபம் - இந்திரகோபம் (-தம்பலப்பூச்சி). வள்வாய் - செறிவைத்தன்கட்கொண்ட. ஆழி - உருளை. உள்ளூற்று உருள - நிலத்தில் ஆழ்ந்து உருள. உள்ளூறல் - பெயலால் நனைதல் என்பர் குறிப்புரைகாரர். கடவி - செலுத்தி. மதவுநடை - வலியநடை. தாம்பு - கயிறு. அசை - கட்டிய. சுரை - முலைமடி. மூடிய - சோர (சொரிய). கனை - கனைக்கின்ற (அழைக் கின்ற). காற்பரிபயிற்றி - காற்செலவைப் பயிலச்செய்து. கொடு மடி - இலைபறித்திடுதற்குக் குழியக்கோலின மடி. பின்றை - (பசு நிரைகளின்) பின். தூங்க - மெத்தென நடக்க. நகுதல் - மலர்தல். சுவையின் - சுவைபோல. தீவிய - இனியவாக. மிழற்றி - மொழிந்து திங்கள் - விளி. தாலி - ஐம்படைத்தாலி. ஒற்றி - நினைந்து. விலங்கு அமர்க்கண்ணள் - ஒருக்கடித்துப்பார்க்குங் கண்ணளாய். விரல் விளிபயிற்றி - விரலால் அழைத்து. பூங்கொடிநிலை காண்குவம் கடவுக என இயைக்க.

28. மன்று - ஊர் அம்பலம். பாடு - ஒலி. அவிதல் - அடங்கல். மனை - இல்லிலுள்ளார். மடிந்தன்று - துயிலுற்றனர். யாமம் - இடையாமம். கொளவரின் - முற்பட்டுவரின்; உயிர்கொளவரின் எனலுமாம். கனைஇ - செறிந்து. உரைஇ - பரந்து. கரைபொழி யும் - மிகும்; கரைந்து ஒழியும் என்றுமாம். எவன்கொல் - எத் தன்மையோ! சூழாது - கலந்தாலோசியாது. இறும்பு- சிறுகாடு. சிலம்பு - பக்கமலை. தலைஇ - பெய்து. வார்பு - ஒழுகி. இட்டு அருங்கண்ண - குறுகிய அரிய இடத்திலுள்ள. படுகுழி - யானைப் படுகுழி. இயவு - வழி. நெஞ்சம் சூழாது தாங்கிய சென்றது எவன் கொல்? என இயைக்க. இடுகல் - ஒடுங்கலுமாம்.

### 7ம் சூத்திரம்

29. அடூஉநின்ற - வருத்தாநின்ற. தமியோர் - தனித்திருப்போர். மதுகை - வலி. தூக்காய் - ஆராயாய். முனிதல் - வெறுத்தல். முரண் - மாறுபாடு.

### 8ம் ஆத்திரம்

30. அணைமென்றோள் - அணைபோலும் மெல்லிய தோள். அமர்துணை - விரும்பிய பரத்தை. வாட புணர்ந்து எனவியைக்க மல்லல் - வளப்பம். கவ்வையிற் பொலிந்த பொதுக்கொண்ட பூவணி வதுவையென மாற்றுக. கவ்வை - ஆரவாரம். பொது - சிறப்பில் லாமை. வதுவை - கலியாணம். வைகறைப்பெற்றது மாண்பன்றோ எனக் கூட்டி முடிக்க.

31. தணத்தல் - நீங்கல். பாராட்டல் - கொண்டாடுதல். வந்தீயான் - வாரான். கதுப்பறல் - அறல் கதுப்பு; என்றது அறலையுடைய கூந்தலை. காணிய - காண்டற்கு.

32. நெடுவேள்-முருகக்கடவுள். செவ்வாய்வானம் - செவ் வானம். பறைஉகப்ப - சிறையை உயர்த்த; பறப்ப. எல்லை - பகற்காலம். குடவயின்கல் - அத்தகிரி. மதர் எழில் மழைக்கண் - மதர்த்த அழகிய குளிர்ந்த கண். மாண்நலம் - மாண்ட அழகு. ஆனாது - அமையாது. அழல் - அழுதல். அத்திரி - கோவேறு கழுதை. பரிமெலிந்து - செலவு மெலிந்து. எல்லி - இராக்காலம். படப்பை - தோட்டம்; சோலை.

பெரும! ஞாயிறு கல்சேர்ந்தன்று; இவள் அழல் தொடங்கினள்; செல்லாது; அசைஇ, சேர்ந்தனை, செலின், சிதைகுவதுண்டோ என வியைக்க.

33. மா - மாமரம். விளைந்து - பழுத்து. கதூஉம் - கவ்வும். ஆடிப்பாவை - கண்ணாடியுள் தோன்றும் சாயை; உருவம். மேவன - விரும்புவன.

34. அரி - உள்ளிடுபரல். அவ்வளை - அழகியவளை. ஐயை - ஐயை என்னும் பெயருடைய பெண். தித்தன் - ஒரு சிற்றரசன். நீவெய்யோள் - நீ விரும்பிய பரத்தை. குழைய - பொலிவுகெட. அகம் - மார்பு. வனம் - அழகு. சுணங்கு - தேமல். மாயம் - வஞ்சனை. சாயினை பற்றி - வணங்கிப் பலகாற் சொல்லி. அந்தூம்பு வள்ளை - அழகிய உட்டுளையினையுடைய வள்ளைக்கொடி. அரில் - பிணக்கம்; தூறு. மத்தி - ஒரு குறுநில மன்னன். கழாஅர் - ஓர் ஊர். தொல்லஃது - பழையது.

நெருநல் ஆடினை, இன்று வந்து புதல்வன் தாயெனச் சாயினை பயிற்றி எள்ளல்; அஃது அமைகும்; இளமை தொல்லஃது; நின் பொய்ம்மொழி இனிமைசெய்வது எவன் எனக் கூட்டி முடிக்க.

### 9ம் சூத்திரம்

35. ஆறு - வழி. இரும்பொறை -பெரியமலை.

உடைத்து ஆகலின் ஆறு நன்று எனக்கூட்டி முடிக்க.

36. கையறல் - செயலறுதல். தானை - சேனை. ஆற்றவுமிருத்தல் - மிகவுந் தங்குதல்.

37. மா - பெரிய. வீ - பூ. அறை - பாறை. வரித்தல் - கோலஞ் செய்தல். அன்னாய்! பிரிந்தெனப் பசப்பது எவன்கொல்? எனக் கூட்டுக.

38. எக்கர் - மணற்றிடல். கமழ - மணம்வீச. துவலைத்தண்துளி - துவலையாகிய தண்ணிய துளி.

39. அறல் - நீர். வரி - இசை. துவன்றி - நிறைந்து. விளைக்கும் - உண்டாக்கும்.

40. கள்ளியம்காடு - கள்ளிக்காடு. வறன் - வறட்சி. வலங்கடந்து - ஓடும் வெற்றியைக் கடந்து; வலத்தில் வீழவென்று எனினுமாம். புலவுப்புலி - புலால் விருப்புடைய புலி. கலவு - மூட்டுவாய்.

குறும்பு - காட்டான். நூறி - கொன்று; சிதைத்த. கல் முடுக்கர் - கற் பாறையின் முடுக்கு. திற்றி - தசை. கெண்டும் - அறுத்துத் தின்னும்; அகழ்ந்து தின்னும் எனினுமாம். இறும்பு - சிறுகாடு. கண் - கணு. வயலை - வயலைக் கொடி. புலம்ப - தனிப்ப. ஆழேல் - (துன் பத்தில்) ஆழ்ந்திடாதே அழேல் எனினுமாம். விகாரம். அற்சிரம் - முன்பனிக்காலம் அகல்யாறு - அகன்ற ஆறு. தொகல் - தொகுதி. மாஅத்து - மாமரத்து. இணர் - கொத்துக்கள். மஞ்சு ஊர - மேகம் தவழ. தோழி! கொடியோர்க்கு அகம்புலம்ப ஆழேல் என்றி; என்? யாற்றடைக்கரைப் பொங்கரில் மஞ்சு ஊரக் குயில் அகவும் குரல் கேட்போர்க்கு கண்பனி நிறுத்தல் எளிதோ எனக் கூட்டி முடிக்க. முடை இறுக்கும் சுரம் என்க. முடை - தசை.

## 10ஆம் சூத்திரம்

41. பகைவென்று - பகையை வென்று. வகை - கூறுபாடு. செம்மல் - தலைமை. புதல் - சிறுதூறு. பூஅம்கட் பொதிசெய்யா - பூவாய் அழகிய கள்ளைப் பொதிதலைச் செய்யாத.

42. நூல்அறுமுத்து - நூல்அற்ற முத்துமாலை. தண்சிதர் - குளிர்ந்த பனித்துளி. தாளி - தாளியறுகு. நாள் - விடியற்காலம்.

## 11ம் சூத்திரம்

43. கிளர்ந்தன்ன - எழுந்துசென்றாலொத்த: அன்னவங்கம் என வியைக்க. உரு - அச்சம். வங்கம் நீர் இடையே பிளக்கும்படி என வியைக்க. எல்லை - பகற்காலம். விரைசெலல் இயற்கை - விரைந்து செல்லுந் தன்மையாக. வங்கூழ் - காற்று. நீகான் - மீகாமன். எரி - தீபம். ஒய்ய - செலுத்த.

ஆள்வினைப்பிரிந்த - பொருள்தேடும் முயற்சிபற்றிப் பிரிந்த. அழிபடர் அகல - வருந்துதற்குக் காரணமாகிய துன்பம் நீங்கும் படி. ஆல் - அசை. பெறின் வருவர்மன் என வியைக்க. வைப்பு - மருதநிலத்து ஊர். பகன்றை - கிலுகிலுப்பை; சிவதையுமாம். பலவுக்காய் - பலாக்காய், பாகல் தூங்க எனவியைக்க. பாகல் - பாகற்கொடி. தூங்க - அசைய. ஆனாவாடை - இடைவிடாது வீசுகின்ற வாடைக்காற்று. இழை - ஆபரணம். கவின் - அழகு.

44. துறைகெழுநாட்டின்கண் குன்றம்போலும் வெண்மண லிலே ஏறிநின்று; தோன்றலை இன்னும் காண்கம் எனவியைக்க. தோன்றும் - காணப்படும்; கூம்புங் கலனும் தோன்றும்; அத் தோன்றுதலை என்க. தோன்றும் துறையென முடிப்பினுமமையும்.

## 12ம் சூத்திரம்

45. சிறையவண்டினம் - சிறகினையுடைய வண்டுக்கூட் டம். கூந்தல் நாறும் - கூந்தல் நறுமணம் வீசாநிற்கும். தெய்யோ, மாதோ என்பன அசைகள்.

46. புலிகொல்-புலியாற்கொல்லப்பட்ட குருளை-குட்டி கேழல் -ஆண்பன்றி. நாடன், நீத்தோன் மறந்தனன் எனக் கூட்டி முடிக்க.

47. வன்கண்மை - தறுகண்மை. மென்சொன் மடமகள் - மெல்லிய சொற்களையுடைய மடமகள். நீத்தல் - நீக்குதல். தவப்பல - மிகப்பல.

48. கண்ணை - கண்ணையுடையாய். கடாவுதி - கடவுதி என நின்றது. கடாவுதி - வினாவுவாய். ஆயின்என் எனப் பிரிக்க. அஃதூஉம் என்பதில் ஆய்தம் விகாரத்தாற் றொக்கது. பயந்த மாறாகிய அஃதூஉம் அறிய வாகுமோ என மாற்றி இயைக்க.

49. முளைநிரைமுறுவல் - முளைபோலும் நிரைந்த பல். நெருநல் - முன்னாள். குறி - குறிப்பிடம்; குறிப்பின் தங்கிவிளை யாடல். அலர் பெரிது என முடிக்க. கௌவை - ஒலி.

50. படலை - மாலை. படலையில் மொய்ப்ப நீ நயந்துறையப் பட்டோள் யாவள் என முடிக்க. எம்மறையாதி - எமக்கு மறை யாதி. யாரள் என்ற பாடத்திற்கு எத்தகைய உறவினள் எனப் பொருள் கொள்க.

51. உதுக்காண் - உவ்விடத்தே பார். பாசடும்பு - பசிய அடம் பங்கொடி. பரிய - அற; வருந்த. வந்தன்று - வந்தது. உண்கண் - மையுண்ட கண். மரீஇய - மருவிய; பொருந்திய. தேர் அடும்பு பரிய அதன்மேல் ஊர்ந்திழிந்து நெய்தலை மயக்கி வந்ததென்க.

52. கேள் - உரிமை. அது ஆகுபெயராய் உரிமையுடை யாளை யுணர்த்திற்று. கண்டிகும் - கண்டேம்.

53. உறாஅவறுமுலை - பால் பொருந்தப்பெறாத வெறு முலை. உண்ணாப்பாவை - உண்ணாவியல்பையுடைய (விளை யாட்டிற்குரிய) பாவை. மடுத்தல் - பொருந்தவைத்தல்.

54. ஆனாது - அமையாது. வளைத்தோள் - வளையலணிந்த தோள். புல்லென்றன - பொலிவழிந்தன (வாட்டமடைந்தன).

55. குருகு - கொக்கு. பிள்ளை - பார்ப்பு. நக்க - மலர்ந்த. நேர்கல்லேன் - உடன்படேன்.

56. இலங்குவளை தெளிர்ப்ப - விளங்குகின்ற வளையல் கள் ஒலிக்க. அலவன் ஆட்டி - நண்டையலைத்து. முகம்புதை கதுப்பினள் - முகத்தை மறைக்கின்ற கூந்தலையுடையள்.

57. வேப்புநனை - வேம்பினரும்பு. கள்வன் - நண்டு. பூவுறைக்கும் - பூவுதிரும். எவன்கொல் - யாதுகொல்.

58. பழனம் - வயல். கம்புள் - சம்பங்கோழி. பயிர் - ஒலிக் குறிப்பு. தந்தை கைவேல் - தந்தை கையின் வேல்.

59. நெறிமருப்பு எருமை நீலவிரும்போத்து - திருகிய கொம்பையுடைய நீலநிறத்தையுடைய பெரிய எருமைக்கடா. பழனவெதிர் - கரும்பு.

*60. புளிற்றா - ஈன்றணிய எருமைஆ. நுந்தை - நுமது தந்தை.*

*61. புரவிச் சூட்டு மூட்டுறு கவரி - குதிரையின் உச்சியின் மூட்டிற் பொருத்திய சாமரை (தலையாட்டம்). சேயரிப் புனிற்றுக் கதிர் - சிவந்த வரிபொருந்திய இளங்கதிர். மூதா - முதிய ஆன். பாகல் ஆய் - கொடிப் பகன்றையொடு. பரீஇ - பாகற் கொடியையும் நுணுகிய பகன்றைக் கொடியையும் அறுத்து. (அவற்றால்) காஞ்சியினகத்துக் கரும்பருத்தியாக்கும் - காஞ்சிக் குற்றியினிடத்துக் கரிய பருத்தித் தண்டினை வைத்து (வேலியாக)க் கட்டும். கரும்பருகியாக்கும் என்னும் பாடத்திற்குக் கரும்புத் துண்டுகளை அருகே வைத்துக் கட்டும் எனப் பொருள் கொள்க. மூதாதின்றலஞ்சி அதனைக் கரும்பு அருத்திக் காஞ்சியினகத்துயாக்கும் எனப் பொருள் கொள்வாரும் உளர். பொருந்துவ கொள்க. பரீஇ யாக்கும் எனக் கூட்டி முடிக்க. ஆம்பல் முழுநெறிப்பகைத்தழை - செவ்வாம்பலின் முழுப்பூவாற் றொடுத்த நிறம் மாறுபட்ட தழை. முழு நெறி - புறவிதழ் ஒடித்த பூ எனப் புறநானூற்றுரைகாரர் (116ம் செய்யுள்) கூறுவர். வேறு பூவும் இலையும் விரவத் தொடுத்திருத்தலின் பகைத் தழை என்றார். மிகுதிபற்றி ஆம்பற்றழையாயிற்று. காயா ஞாயிற்று ஆகத்து அலைப்ப - இள ஞாயிறுபோல உடம்பிலே கிடந்து மோத. பொய்தல் - விளையாட்டு. பொலிக என - பொலிக என்று யாய் கூற. வந்து - யாம் வந்து. நின்நகா - நின்னொடு (நக்கு) சிரித்து விளையாடி. நகா - எள்ளாது எனினுமாம். பொன்னிறங்கொளல் பிழைத்த தவறோ என முடிக்க. கையுறை - கையிலுறுவிப்பது. வெள்ளை - வெள்ளாடு. ஓச்சி - செலுத்தி ; பலியிட்டு. தணிமருங்கு அறியாள் - நோய் தணியுமிடத்தைக் காணாளாய். காயா ஞாயிற்றுப் பொய்தலாடி எனக் கூட்டி காயாத ஞாயிற்றுப்போதில் விளையாடி எனப் பொருள் கூறுவாருமுளர்.*

*62. அகல் - நெருங்கிய, வாலிய - வெள்ளியவாக. கோடல் - வெண்காந்தள். பெயல் - மழை. உழந்த - வருந்திய. சேண் - ஆகாயம். ஏர்தரு - எழுந்த. கூதிர்ப்பொழுது நின்றன்று என மாற்றிக் கூட்டுக. பாசறையோராகிய காதலர் என இயைக்க. நம்நிலை - நமது துன்ப நிலை. தந்நிலை - தாமுறுந் துன்பநிலை. யாமிறந்துபடின் அவர் துன்பமடைவார் என்பாள். தந்நிலை அறிந்தனர்கொல் என்றாள்.*

*63. மங்குல் மாமழை - மிக விருண்ட மேகம். துள்ளுப் பெயல் - விழுந்த நீர் துள்ளுதலையுடைய மழை. புகையுற - புகைபோல. புள்ளி நுண்துவலை - புள்ளி வடிவாகிய நுண்ணிய பனித்துளிகள். கருவிளை - காக்கணம்பூ. துய் - பஞ்சிற்றொடர் நுனி. புதல்இவர் - புதல்களிற் படருகின்ற. இருவகிர் ஈருளின் - இரு பிளவான ஈரலைப்போல. ஈரியதுயல்வர - ஈரமுடையன வாய் அசைய. சிதர்சினை தூங்கும் - சிறு நீர்த்துளிகள் சினைகளிற் றொங்கும். தூங்கும் - துளித்துக்கொண்டிருக்கும் எனினுமாம். அற்சிரம் - முன்பனிக்காலம். ஆனாதுஎறிதரும் - அமையாது வீசும். வாடையொடு - வாடையால். நோனேன் - பொறேன்.*

64. துறுகல் - குண்டுக்கல். புலிக்குருளை - புலிக்குட்டி. எல்லி - இரவு. நல்லை அல்லை - நன்மை தருவாய் அல்லை.

65. துஞ்சுதல் - துயிலல். பக - பிளக்க. ஏறுதல் - மேலெழு தல். பாடு - ஒலி. உரைஇ - உலாவி. சிலைத்து - முழங்கி. ஆம் - நீர். தளி - மழை. ஈன்று - பெய்து. வாலா - தூய்தல்லாத. ஆடும் - அசை யும்; உலாவும். புதல் - தூறு. காண்பு இன் காலை - காணுதற்கினிய காலத்து. படு - குழி; குண்டு. பதவு - அறுகு. புறக்கு - முதுகு. அரக்கு - செம்மெழுகு. ஈயன்மூதாய் - தம்பலப்பூச்சி (இந்திரகோபம்). பாஅய் - பரந்து. ஈரணி - இருநிறம் (-நீரொரு நிறமும் இஃதொரு நிறமுமாகத் தோன்றல்). இரீஇய - தன்னுள் அமைத்துக் கொண்ட. ஈர்மருங்கில் அணிதிகழ என்று மாற்றி, ஈரமான இடத்தில் அழகுற விளங்க என்று பொருள் கொள்வாருமுளர்.

66. வயவுநோய் - கருப்பந் தங்கிய காலத்துப் பிறக்கும் வேட்கை நோய். நலிதல் - வருத்தல். அல்லாந்தார் - அலமந்தசுற்றத் தார். அலவுற - வருந்த. பயம் - உணவு. பசுமை - பயிர்களால் உண் டான பசுமை. புனிறு-ஈன்றணிமை. வண்டல் - வண்டற் பாவை. வடு - பூக்களுதிர்ந்து கிடந்த வடு. ஐம்பால் - மயிர். எக்கர் - இடுமணல். அறல் - நீர். வார - பெருக. மாயவள் - மாமைநிறமுடையவள். திதலை - தேமல். ஐய - அழகிய. கொங்கு - தாது. உறைத்தர - உதிர் தலைச்செய்ய. இறுத்தரல்-வந்து தங்கல். சேய்-தூரம். சின்மொழி - விளி. நிறை - நிறுத்தல். நீவி - கைகடப்ப. வைகலான் - நாளின்கண்.

போழ்து - இளவேனிற்காலம். புரி - புரிதலால் (விரும்ப லால்). வாடும் - வாடலுறும். சூழ்பு - சூழ்ந்து. கரத்தல் - மறைத் தல். கதிர் விடுத்த - ஞாயிற்றின் கதிர் அலர்த்திய. உயிர்வலிப்பேன் -உயிரை அவரிடம் செல்லாமற் காப்போன். நிலாக்கங்குல் - நிலாவையுடைய இராக்காலம். திறந்து - (வண்டுகள்) திறந்து.

பொருட்பிணி - பொருள் வேட்கை; பொருளில்லாமை யாலுண்டான வருத்தம் எனினுமாம். படர்ந்து - விரும்பி. படர்ந்துவந்தனர் என இயையும்.

67. சிறியவிலை - சிறியிலை எனத் தொக்கு நின்றது. உணீஇய - உண்ணும்பொருட்டு. உகக்கும் - உயரப்பறக்கும். நாட்டு இன்று கொல் என இயைக்க.

68. கையறுமாலை - செயலற்ற மாலையே! கடும்பகல் - உச்சிக் காலம். களைஞர் இலர் - நீக்குவார் (தடுப்பார்) இலர்.

69. ஊழி - ஊழிக்கண். தடுமாறல் - உயிர்கள் பிறந்திறந்து தடுமாறல் - தொகல் - ஒடுங்கல். வேண்டும் - விரும்பும். கண் - தன்கண். பெயர்த்தல் - ஒடுக்கல். எல் - பகல். தன்கதிர்மடக்கி கதிர்மாய என்க. கதிர்மாய - ஞாயிறுபட. அல்லது - நீதி அல்

லாதது மலைந்திருந்து - ஏறட்டுக்கொண்டிருந்தது. எல்லைக்கு வரம்பாய - பகற்பொழுதிற் கெல்லையாகிய.

பைதல் - வருத்தம். குழல் - விளி. இனி - இக்காலம். உயர்தல் - நீங்கல். இடும்பை - துன்பம். இனைதல் - வருந்தல்.

**13ம் சூத்திரம்**

70. ஆய்தூவி - அழகிய சூட்டுமயிர். ஆய் - நுணுகிய எனினு மாம். தூது - கல். மாதர் - காதல். பேதுறூஉம் - மயக்கமுறுத்தும்.

71. ஆயர் - இடையர். புல்லல் - தழுவல். உயிர்வளியா அறியா - உயிரை ஒரு காற்றாக உணராதே. நளிவாய் மருப்பு - செறிந்த வாயையுடைய கோடு.

72. முள் எயிறு - கூரிய கோடு. எருத்து அடங்குவான் - கழுத்திலே கிடக்குமவன். அடங்குவான் பெறும் என்க.

காரி - கரிய ஏறு. கதம் - கோபம். வைமருப்பு - கூரிய மருப்பு. கொள்வான் துயில்பெறும் என இயைக்க. கொள்வான் - அடக்குபவன்; தழுவுபவன்.

73. புணை - தெப்பம். உறீஇய - காமுறச்செய்த.

74. கல்லாப்பொதுவனை - சாதித்தன்மை இயல்பாக அமைந்த இடையனாந் தன்மையுடைய.

75. நடாக்கரும்பு - எழுதியகரும்பு. அமன்ற - நெருங்கிய.

76. வயங்கொளிமண்டிலம்-சூரியமண்டிலம். உருப்பு- வெப்பம்.

77. மிடல் - வலி. மடங்கல் - சிங்கம். உடவல் - கோபித்தல். கடந்தடுமுன்பு - வஞ்சியாது எதிர்நின்று அடும்வலி. கணிச்சி - மழு. சினவல் - சினந்துகூறல். ஏறுபெற்றுதிர்வன - (முப்புரம்) அழிவுபெற்று உதிர்வன. அழலவிர் ஆரிடை - வெப்பமான அரியவழி. நிலையேகற்பு - நிலை பெற்ற கற்பு.

**14ம் சூத்திரம்**

78. கோடல் - காந்தள். எதிர்முகை - தோற்றிய அரும்பு. இடைப்படவிரைஇ - இடையே கலந்து. மாண்ட - மாட்சிப் பட்ட. முறி - தளிர். முயங்கற்கும் இனிது - தழுவுதற்கும் இனியது.

79. அல்குபடர் - மிக்க துன்பம் மதர்மழைக்கண் - மதர்த்த குளிர்ச்சியுடைய கண். திருமணி - அழகிய நீலமணி. யார் மகள் - யாவர் புதல்வி. இவடந்தை - இவளது தந்தை. நோன்தாள் - வலியதண்டு. கண்போனெய்தல் - கண்போன்ற நெய்தல்.

80. வந்து - போந்து. உயா - வருத்தம். விளி - ஓசை. உருள் - குறுந்தடி உருள்கின்ற. மகுளி - ஓசை. குடிஞை - கோட்டான். ஒழியச் சூழ்ந்தனை - போக்கு ஒழியக் கருதினை. மாஇதழ் -கரிய

இதழ். மலிர் - நீர். துறவு - நறவம்பு. உள்அகம் கனல - உள்ளம் கொதித்தலால். பழங்கண் - துன்பம். அறல் - நீர். வெய்ய உகுதர - வெப்பங்கொண்டனவாய்ச் சொரிய. வெரீஇ - அஞ்சி. மெல் இறை முன்கை - மெல்லிய சந்தினையுடைய முன்கை. அடர் - பொற்றகடு. அகல்சுடர் - அகலில்ஏற்றிய விளக்கு. உயங்குசாய் சிறுபுறம் - வருந்தி மெலிந்த பிடர். முயங்கியபின் - தழுவிய பின்.

81. விரைசெலல் திகிரி - விரைந்துசெல்லும் ஞாயிறு. கடுங் கதிர் - கடிய கதிர். விடுவாய் - பிளப்பு. தாஅய் - பரக்க. நீர் அறவறந்த - நீர் அற்று வறட்சியுற்ற. வள்எயிறு - கூரியபல். கள்ளியங்காட்ட - கள்ளிக்காட்டையுடைய. கடம் - சுரம். உள் ஊன் - உள்ளி ருக்கும் தசை. சுரிமூக்குநொள்ளை - சுரிந்த மூக்கினை யுடைய சிறுநத்தை. இயவு - வழி. விழுத்தொடை - சிறந்த அம்பு. எழுத் துடை நடுகல் - எழுத்துக்களையுடைய நடுகல். அருஞ்சுரக்கவலை - அரிய பாலையிடத்துக் கவர்த்தவழி. கரத்தல் வல்லா நெஞ்சம் - கரத்தல் மாட்டாத நெஞ்சம். என்றி - என்று கூறாநின்றாய்.

82. ததைந்த - செறிந்த மலர்ந்த. கொடியஇணர் - நீண்ட பூங்கொத்து. மகளிர் கதுப்பு - மகளிர் கூந்தல். புதுப்பூங்கொன்றை - புதிய பூக்களையுடைய கொன்றை. கானம் - காடு. யான் தேறேன் - யான் தெளியேன். பொய்வழங்கலர் - பொய்ம்மொழி கூறார்.

83. பறியுடைக்கையர் - பறிஓலையுடைய கையினை யுடையர் . மறி இனம் - ஆட்டின் திரள். ஆடுடை இடைமகன் - ஆடுகளையுடைய இடையன். சிறுபசுமுகையே - சிறிய செவ் வியையுடைய முல்லை அரும்புகளே.

84. கல்பிறங்கு அத்தம் - கற்கள் விளங்கும் பாலை. வாரா அளவை - வாராக்காலம். வம்பமாரி - பருவமல்லாத பருவத்து மழை. நெரிதர - நெருங்கும்படி. பருவம் வாரா அளவை. வம்பமாரியைக் கார்என மதித்து, இணர் ஊழ்த்த என முடிக்க.

85. கானல் - கடற்கரைச்சோலை. அலவ! நின்னல்லது பிறிது யாது மிலன் எனக் கூட்டுக. அலவன் - நண்டு. தூதுசேறற்குப் பிறிது யாது மிலன் என்க. நசைஇ - விரும்பி துறைவனை - துறை யையுடையவனுக்கு. எவ்வம் - தன்பம். அசாவுதல் - தளர்ந்திருத் தல். வேட்டம் - வேட்டை; என்றது இரைகவருதலை. மடிதல் - ஒழிந்திருத்தல். காக்கை கனவும் எனக் கூட்டுக. நீந்துமோ என அலவ! நீயே சொல்லல் வேண்டும் எனக் கூட்டி முடிக்க.

86. கொடுஞ்சிறை - வளைந்த சிறகு. இறைஉற - தாங்குதல் உற. நெறி - வழி. பிள்ளை - குஞ்சு. மராஅம் - கடம்பு. செரீஇய - செருகும் படி. பறவை செலவு, விரையும் எனக் கூட்டுக.

87. நல்கல் - அருளல். பெரும! நின் நல்கல் தருக்கேம் எனக் கூட்டுக. தகவிலசெய்யாது - தகுதியற்றன செய்யாது. வீழ்ந்தார் - (நீ) விரும்பினார்.

88. பரி - விரைவு. மான் - குதிரை. உளை - தலையாட்டம். வேழம் - கொறுக்கச்சி. பகரும் - கொடுக்கும். ஊர்துஞ்சுயாமம் என்க. துயில் - நித்திரை.

### 15ம் சூத்திரம்

89. வேனில் - வேனிற்காலம். நாள் - விடியல். அரி - உள்ளிடு பரல். ஓராறு படீஇயர் - ஒருவழியிற் பொருந்தி வரற்கு. பொதுள - செறிய மராஅத்து. அலரி - வெண்கடம்பின் மலர் கூந்தல்குறும் பலமொசிக்கும் - கூந்தற்கண் குறியனவாய்ப் பலவாய் மொய்க்கும்.

கோல் - திரட்சி. தெளிர்த்தல் - ஒலித்தல். கவலை - கவர்த்த வழி. மரம் - ஏணிமரம். யாஅத்து - யா மரத்தினிடத்து. பொழித்து - உரித்து. கோதுஉடைத்ததரல் - கோதாந்தன்மையையுடைய சக்கைகள். தீமூட்டு ஆகும் - தீமூட்டற்கு ஆகின்ற. துன்புறுதகுந - துன்பமுறுதற்குத் தகுந்தவிடமாகிய. கோடு - புற்றின் புடைப்பு. அரில் - சிறுதூறு. இரை - புற்றாஞ்சோறு.

90. பிடவு - ஒருமரம். ஊன்பொதி அவிழா - தசையின்கட்டு விரியாத. துறுகல் - பொற்றைக்கல். அளை - குகை. பிணவு - பெண் புலி. உழுவைஏற்றை - ஆண்புலி. ஓர்க்கும் - கேளாநிற்கும். நெறி - முடக்கம். கவலை - கவர்வழி. நிரம்பாநீள்இடை - சென்றுமுடி யாத நீண்டவழி. உண்ணாஉயக்கம் - உண்ணாத வருத்தம். சாஅய் - மெலிந்து. மருந்து பிறிது இன்மையின் - (அவ்விரக்கத்தைப் போக்கும்) மருந்து பிறிது இல்லாமையானே. வினை - செயல்.

91. கை கவர் முயக்கம் - கையகத்திட்ட முயக்கம்.

92. கூழ் - உணவு. வரைப்பு - மாளிகை. ஊழ் - முறைமை.

93. அல்குபதம் - தங்கும் உணவு. இங்கே நெல்லுணவு குறித்தது என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

### 16ம் சூத்திரம்

94. அலமரும்தகைய - சுழலுந்தன்மையன. ஏ - அம்பு. தேமொழி - இனியமொழி. பரீஇ - பருத்தி. வித்திய - விதைத்த. குரீஇ - குருவியினம்.கண் அலமருந்தகைய நோய்செய்தன எனக் கூட்டி முடிக்க.

### 19ம் சூத்திரம்

95. கண்ணியை - மாலையையுடையாய். சாந்தினை - சந்தனத்தை யுடையையாய் செய்குறி - செய்யப்பட்ட குறியிடம்.

96. உடையிவள் - நின்னை உயிராகவுடைய இவள். எம - எம்முடைய வார்த்தைகள். கடைஇயஆறு - நெஞ்சைச் செலுத்திய வழி. அடை - இலை. அணிமலர் - அழகிய மலர்கள்.

97. மயில் ஆல - மயில் ஆரவாரித்து ஆடும்படியாக. மறந்தைக்க - மறப்பாராக. மாகொன்ற - மாமரத்தைத் தடிந்த. வென் வேலான் குன்று - திருப்பரங்குன்று.

### 21ம் சூத்திரம்

98. யாய் - தாய். புடைதாழ - பக்கத்தே தாழாநிற்க. பாங்கர் - பாங்கர்க்கொடி. பாட்டங்கால் - முற்றூட்டு. எல்லா - ஏடா. கற்றதிலை - உலகியலிற் கற்றதொன்றும் இல்லை. ஐய - வியக்கத் தக்க. பெயர்ப்ப - மறுப்ப. அல்லாந்தான் - அலமந்தான். மகளிரியல்பு - மகளிரை வரைந்து கொள்ளுமியல்பு. களைகுவை - போக்குவை.

99. காணாமையுண்ட - பிறர்காணாமை யுண்ட. மெய்கூர - மெய்யிடத்துத் தோன்றி மிகுகையினாலே.

100. தண்டழைக்கொடிச்சி - தண்ணிய தழையையுடைய கொடிச்சி. வளையள் - வளையையணிந்தவள். முளைவாலெயிறு - முளைபோலும் வெளிய எயிறு. ஆரணங்கினள் - வருத்துந் தன்மையுடையள்.

### 22ம் சூத்திரம்

101. சிலைவில் - சிலையாகிய வில். சிலை - ஒருமரம். பகழி - அம்பு. செந்துவராடை - செவ்வியதுவராடை. அணங்குநெஞ்சு - வருத்துகின்ற நெஞ்சம். சுணங்கு - தேமல். அணங்கு - தெய்வம்.

102. முளவுமாவல்சி - முட்பன் றியூனுணவு. இந்நிலை என்றது உடன் போக்கை. இரக்குமளவை - இரந்து உடன்படுவித்து வருங்காறும். விரையாதீமே - விரையாதொழிவாய். ஏ - அசை. வென்வேல் - வெற்றி பொருந்திய வேல். விடலை - விளி.

103. மா - விலங்குகள். தன்னையர் - தமையன்மார். படுபுள் - படியும் பறவைகள். நல்நலம் - நல்ல நிறவழகு. நயவரவுடையை - விருப்பம் வருந் தகுதியுடையை.

104. முற்றாமஞ்சள் - இளமஞ்சட்கிழங்கு. பிணர் - சருச்சரை. இறவு - இறாமீன். குப்பை - குவியல். உணங்கல் - காய்தல். பாக்கம் - கடற்கரை ஊர். பாக்கமும் இனிது எனக் கூட்டுக. அளிது - இரங்கத்தக்கது. ஐது - மெல்லியது. காணாஊங்கு நனி இனிது என இயைக்க. ஊங்கு - முன்.

105. ஆன்றோர் - அறிவானமைந்தோர். அறிகரி - தாமறிந்த சான்று. இதற்கு இது மாண்டது. இப்பொருட்கு இப்பொருள் ஏற்ற மாட்சிமையுடையது. அதற்பட்டு - அக்கண்வலையிற் பட்டு. மயிற்கண் - மயிலினது பீலிக்கண். பாவை - பாவைபோல் வாள். காவலான் - கடற்கரைச்சோலையின்கண். கானலான் நெஞ்சம் ஒழிந்தன்று; அறிகரிபொய்த்தல் ஆன்றோர்க்கில்லை; குறுகல் ஓம்புமின் என முடிக்க.

### 23ம் சூத்திரம்

*106. நகுதற்கு - மகிழ்தற்கு. தொடீஇயர் (யான் நின்மெய்யைத்) தீண்டுதற்கு. உசாவுதல் - ஆராய்தல். கோன் - அரசன். கோயில் - அரசமாளிகை. நகாமை - சிரியாமை.*

*107. முதுக்குறைமை - முதுமைக்கண்ணுறைகின்ற நிலைமை. போற்றாய் களை - போற்றாது கைவிடு. வேட்டார்க்கு - (தண் ணீரை) விரும்பினார்க்கு.*

*108. பிற - வேறாக. ஞாயிற்றுப்புத்தேண்மகன் - கன்னன். புகா - உணவு. எந்தை - என் தமையன். இனம் - பசுத்திரள். என்னை - என் பிதா. கலம் - கறவைக்கலம்.*

*109. வழங்காப்பொழுது - வெயில் வெம்மையால் ஒரு வரும் இயங்காத உச்சிக்காலம். வழங்கல் - (நீ) திரிகின்ற தன்மை.*

*110. அல்கல் அகல் மறை - தங்கும் அகன்ற பாறை. ஆயம் - மகளிர் கூட்டம். முச்சி - மயிர்முடி. அரவு - பாம்பு. உற்று - உறலால். நாமுடன்செலற்கு - நாமுங் கூடிப்போதற்கு (உடன்படுவாயாக).*

### 24ம் சூத்திரம்

*111. தாமரைக்கண்ணி - தாமரைப் பூவாலாகிய மாலை. கோதை - மாலை. அணங்கு - தெய்வம்.*

*112. முளிதயிர் - முற்றிய தயிர். கழுவுதல் - அழுக்குப்போக்கல். கழாஅது - கழுவாது. தயிர் பிசைந்த விரலைக் கழுவாது என இயைக்க. குய்ப்புகை - தாளிதப்புகை. துழந்து - துழாவி. தீம் புளிப்பாகர் - இனிய புளிக்குழம்பு. புளிப்பாகர் பதந் தப்பாத படி. துழாவுவதற்கு அவசிய நிமித்தம் தயிர் பிசைந்த கையைக் கழுவாது குலைந்த ஆடையை உடுத்தாளென்க. இனி - கழுவுறு கலிங்கம் என்பதற்கு விரலைத் துடைத்த ஆடையைத் துவைக் காது உடுத்து என்பர் குறுந்தொகை உரைகாரர் டாக்டர் சாமி நாதையர். இஃது ஆராயத்தக்கது.*

*113. அரி - செவ்வரி. நீரும்நில்லா - நீரும் தங்கா (விழுகின்ற என்றபடி) வைவாய் வான்முகை - கூரிய முகத்தையுடைய வெள்ளிய மொட்டு. கோதை - மாலை. கதுப்பு - கூந்தல். மாறல் மாறுக - மாறலைச் செய்யினுஞ் செய்க. அந்தில் - அசைநிலை; அவ்விடத்து எனினுமாம். துனி - வெறுப்பு. கேட்கு ஞான்று பெற்றோள்போல உவக்குநள் என முடிக்க. மானடிமருங்கில் பெயர்த்த குருதி - குதிரைகள் அடிவைத்த இடத்திலே வீழ்த்திய இரத்தம் நூறிப் பெயர்த்த குதிரை என இயைக்க.*

*114. செம்மல் - தலைமை. வனப்பு - அழகு. ஆர - நுகர.*

*115. தடமருப்பு - வளைந்த மருப்பு. எருமைக்குருவி எனக் கூட்டுக. மடநடை - இளநடை. காண்டகுநல்லில் - காட்சி மிக்க*

நல்ல இல்லம். சிறுதாழ் - சிறிய மோதிரம். சேப்ப சிவப்ப, வாளை யீர்ந்தடி - வாளைமீனின் ஈரியதசை, வாழை எனவும் பாடம். பொருத்த நோக்கிக் கொள்க. வியர் - வேர்வை. அட்டில் - அடிசிற்சாலை. சிவப்பான்று - சிவப்பமைந்து (கோபந்தணிந்து). சிவப்பாளன்று எனவும் பாடம். காண்கம் - காண்பேம்.

116. குலைஇய - வளைந்த. உரு - அச்சம். திருவில் - அழகிய வில். பணை -முரசு. பௌவம் - கடனீர். பெயர் - மழை. மாதிரம் - திக்கு. ஏமுறுகாலை - இன்பமெய்தியகாலத்தே. அயில் - நுண்மணல். படாஅர் - சிறுதூறு. புறம் - முதுகு. புறவு - காடு. அருமுனைஇயவு - அரிய முனை தலையுடையவழி. முனைதல் - ஆறலைப்போரா லாயது. எரி - நெருப்பு. யாத்த - கட்டிய. அலங்கல் - அசைதல். தலை - பக்கம். களம் - நெற்களம். மறுகும் - கொண்டுபோகும். தண்ணடை - மருதநிலம்; நாடுமாம். எயில் - அரண். பெயர்க்கும் - செலுத்தும். ஒண்ணுதல் சீறூரோள்யாம் பாசறையேம் என்க.

117. ஒருபடை - ஒப்பற்ற படை. பெயர்க்கும் - ஓடச்செய்யும். விறல் நின்றன்று - வெற்றி நின்றது (நிலைபெற்றது). பூக்கோள் - பொற்றாமரைப் பூப்பெறல். கையற்று- செயலற்று. நப்புலந்து - என்னை வெறுத்து. பழங்கண் - துன்பம். யாங்காகுவள் - எவ்வாறாவள். ஊழுறு கிளர்வீ - அலர்ந்த விளக்கம்பொருந்திய பூ. சுணங்கு - தேமல். ஒதுக்கு - நடை. மாயோள் யாங்காகுவள் கொல் என முடிக்க. மாயோள் - மாமைநிறமுடையாள்.

## 26ம் சூத்திரம்

118. அரம்போழ் அவ்வளை - அரத்தாற் போழப்பட்ட அழகிய வளைகள். நிரம்பா வாழ்க்கை - முடிவுபோகாத இல் வாழ்க்கை. நேர்தல் - முற்றுவித்தல். ஈர்ங்காழ் - ஈரியகொட்டை. ஆலி - ஆலங்கட்டி. ஓதி - ஓந்தி. மைஅணல் - கரியதாடி - படா - துயிலா. பாவடி - பரந்தஅடி. முரணில்காலை - மாறுபாடில்லாத காலம். தமியோர் மதுகை - தனித்திருப்போர் வலி. தூக்காய் - ஆராயாய். வாடை - வாடையே! தூக்காய் அலைத்தி என இயைக்க. கடவுள் சான்ற செய்வினை மருங்கு - தெய்வத்தன்மையமைந்த செய்யும் வினையாகிய ஓதல் வினையிடத்து. பரி - செலவு. கரிகால் - கரிகாற்சோழன். சூடாவாகை - வாகையென்னுமூர். சூடாவாகை - என்பதிற் சூடா என்னுமடை வெளிப்படை குறித்துநின்றது. பறந்தலை - போர்க்களம். ஆடு - வெற்றி. சென் றோர்வல்வரின் எமக்கு ஓடவைமன் என இயைக்க.

119. கேள்வி - கல்வி. புரையோர் - மேலோர். மையற்ற படிவம் - மாசற்ற விரதம். மறுத்தரல் - மீட்டல்.

120. தூதுநடந்தான் - கண்ணன்.

121. மாறு - பகையரசன். தகை - வீரத்தாற் பிறந்த அழகு.

122. புணை - தெப்பம். போராகிய கடலைக் கடத்தற்கு உதவியாகிய தெப்பம். கனங்குழை - கனங்குழையுடையாள். கண்ணோக்கால் - அவளுடைய கட்பார்வையால்.

123. கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர் - வெற்றி பொருந்திய சோழர் கொங்குநாட்டரசரை யடக்கும்பொருட்டு. போர்கிழவோன் - போரென்னுமூருக்குத் தலைவன். போரென்னு மூர்க்குத் தலைவனாகிய பழையன் என்க. இவன் ஒரு சேனாபதி. பேஎர் எனவும் பாடம்.

## 28ம் சூத்திரம்

124. ஒருகுழையொருவன் - ஓர் குண்டலன் (-பல தேவன்). பருதியஞ்செல்வன் - சூரியன். மீனேற்றுக்கொடியோன் - சுறாக் கொடியோன் - மன்மதன். ஏனோன் - மன்மதன் தம்பிசாமன். ஆனேற்றுக்கொடியோன் - சிவன். கவின் - அழகு. நோதக - பிரிந்தார்க்கு வருத்தமுண்டாக. புதிதுண்ணும் பருவம் - இள வேனிற்காலம். ஒல்குபு - அலைவுற்று. நிழல்சேர்ந்தார் - தன்னை நிழலாக வந்தடைந்த குடிமக்கள். விருந்து நாடு - புதுமையான நாடு முன்றுரை - துறைமுன். இசை - புகழ். ஏதினாடு - அய னாடு. அறல்சாய்பொழுது - நீரற்று ஓடுதல் சுருங்கின இள வேனில். ஊறு - (முன்பு ஆண்ட அரசர் செய்த) வருத்தம். ஆறு - நெறி. அகன்ற - (முன் ஆண்டஅரசர்) நீங்கின. தெருமரல் - சுழற்சியுறற்க. தூதுவந்தன்று என இயைக்க. வந்தன்று - வந்தது.

125. கேள்கேடுஊன்ற - நண்பரைக் கேட்டினின்று தாங்க. கிளைஞர் - உறவினர். கேளல்கேளீர் - அயலவர். எதிரிய - ஒத்த. ஊக்கம் - உள்ளக் கிளர்ச்சி.

126. ஆக்கம் - செல்வம். அணி - பூண் (ஆபரணம்). சென்ற திறம் வரற்கு அன்றோ என இயைக்க.

## 29ம் சூத்திரம்

127. கேட்கும் என்றது இவ்வாலிலே பேயுண்டெனக் கேட்டும் என்றபடி. கடுத்தும் - ஐயுற்றும். அணங்காகும் - வருத்தமாகும். வாய் - உண்மை. மன்ற - அறுதியாக. கேள் - உறவானவர். புதுவது - புதிய தொன்று. இது - இப்பாராட்டு. ஒன்று - ஒருகாரியம். அது தேர - அக்காரியத்தை ஆராயநிற்க. கனவுவார் - கனாக்காண்கின் றவர். கொள்ளாள் - முற்றெச்சம். இடுமருப்பு - குத்துங்கொம்பு. தேர் - பேய்த்தேர் - கானல் நீரென்று கானலைக் கருதி ஓடுகின்ற சுர மென்க. முற்றுமளவும் வல்லுவள் கொல்லோ என்றார் என இயைக்க. நொய்யார் - நொய்ய மகளிர். போயின்று - போயிற்று.

128. கலம் - ஆபரணம். நண்ணார் - பகை அரசர். வழிமொழிந்து - வழிபாடுசொல்லி; அவன் சொல்லை அனுவதித்து எனினுமாம்.

### 30ம் சூத்திரம்

129. பகடு புறந்தருநர் - பகட்டைப் பாதுகாப்போர். பகடு - எருது; எருமைக்கடா. புறந்தரல் - பாதுகாத்தல்.

130. கூலம்பகர்நர் - கூலம்விற்போர். கூலம் - பலபண்டம்; கருஞ் சரக்கு என்பாருமுளர். குடிபுறந்தருநர் - கீழ்க்குடிகளைப் பாதுகாக்கும் மேற்குடிகளாகிய காணியாளர்.

131. குறிப்பு - எண்ணம். கலங்கல் - கலங்கற்க.

### 32ம் சூத்திரம்

132. விலங்குதல் - குறுக்கிட்டுக்கிடத்தல். சிமயம் - சிகரம். வேறு பன்மொழி - தமிழல்லாத பலமொழிகள் (பாஷைகள்). தேம்தேயம். வினை - போர்த்தொழில். நசைஇ - விரும்பி. பரித்தல் - தாங்கல்; செலுத்தல் எஃகம் - வேல்.

### 35ம் சூத்திரம்

133. உழந்தும் - வருந்தியும். மடல் - மடன்மா.

134. வஞ்சி - உறையூர். வேட்டமாமேற்கொண்டபோழ்து மடலூர் தல் காட்டுகேன் வம்மின் என இயைக்க.

### 36ம் சூத்திரம்

135. மள்ளர் - வீரர். கொட்டின் - பறை முழக்கினால். ஆலல் - ஆடல். படுமழை - தாழ்ந்தமேகங்கள். தலைஇ - நீரைப்பெய்து. போகியசுரன் - போன அருவழி. சுரம் - பாலைநிலம். சுரன். சுரம் நனி இனிய வாகுக என முடிக்க.

136. கலிழும் - கலங்கும்; அழும். இடைநின்று - காட்டினிடத்தே நின்று. கனலியர் - வெப்பமடைகுக. அறனில்பால் கனலியர் என முடிக்க.

137. விடலை - காளை. விடலையது தாய் இடும்பை எய்துக என முடிக்க. கோள் - கொலை. பிழைத்த - தப்பிய. கலை - ஆண்மான். வம்பு - புதுமை.

138. மகளை - மகளே; ஐ சாரியை. வரைப்பு - இடம். புலம்ப - தனிப்ப. நோவேன் - நோகின்றேனல்லேன். நோவல் - (கலுழுமென் நெஞ்சைக் குறித்து) நோகின்றேன் என முடிக்க முடங்குதாள் - வளைந்த அடி. தார் - மாலை; ஆரம். செம்பூழ் - சிவந்த காடை. புன்கண்ண - பொலிவற்றகண்ணவாய். மன்று - தொழுவம். பைதல் - துன்பம். மறவர் - வெட்சிமறவர். செதுகால் - சோர்ந்த கால். குரம்பை - குடில். சே - ஆனேறு. நோவேன் நோகேன் என்றிருப்பது நலம்.

139. எம்வெங்காமம் - எமது மிக்க விருப்பம். மெய் - உண்மை மொழி. செம்மல் - தலைமை. குடுமி - தலையிலுள்ள ஆர்க்கு. பாகல் - பாகற்பழம். பறைக்கண் - பறைக்கண்போலும் வட்ட மான கண். வம்பலர் - புதியோர். அறிந்த - பழகிய. மாக்கட்டு - மாக்களையுடையது. ஆறு மாக்கட்டு ஆகு என முடிக்க. புலம்ப - தனிப்ப. சூழி - முகபடாம். பாழி - ஓரூர். காப்பு - காவல். அத்தம் - அருவழி; சுரமுமாம். ஆர்கழல் - ஆர்க்கினின்றும் கழன்ற. துய்த்தவாய - உண்ட வாயையுடைய வாய். எண்கு - கரடி.

140. இறந்த - கடந்த. குறுமகள் - சிறியமகள். இஞ்சி - மதில். பூவல் - செம்மண். மனை - வீட்டுமுற்றம். அயரும் - கொண் டாடும். நுசுப்பு இவர்ந்து - இடையில் இவரச்செய்து. ஓம்பிய - வளர்த்த (பாதுகாத்த). தில் - அசைநிலை. அறுவை - வஸ்திரம். குடுமி - உச்சி (கோலின் றலை). நாற்றிய - தூக்கிய. ஆகுவது - நிகழ் வது. திட்பம் - உறுதி. படீஇயர் - துயிலும்படி. குறிப்பு எனத் திட்பங் கூறுக என முடிக்க.

141. இல் - மனை. வயலை - ஒருகொடி. ஊழ்த்தல் - நெட்டுவிட்டுச் சொரிதல். செல் - மேகம். அஃகின - மழை பெய்து குறைந்தன. பாவை - விளையாட்டுப் பாவை. ஏதிலாளன் - அய லான். பொய்ப்ப - பொய்கூற. இறந்துபோயினள் என இயைக்க. இறந்து - கடந்து. மான்றமாலை - இருள் மங்கிய மாலைக்காலம். அகடு - வயிறு. என்றது உள்ளிடத்தை. திங்களங்கடவுள் - திங்கட் கடவுளே! பெயர்த்தரின் - மீட்பின். கொன்றைக்காவலன் - சிவன். குடுமி - சடாமுடி. தந்தையென்றது - யயாதியை. இளமை யீந்தோன் - பூரு. வியலிடம் - அகலிடம் (பூமி). பெயர்த்தரின் குன்றாயாய் வியலிடத்தின்கண் மன்ற விளங்குவை என இயைக்க.

142. தூவி - இறகு. பச்சூன் - பசிய ஊன்கறி. வல்சி - சோறு; காக் கையே! வல்சி தருகுவன் என இயைக்க. கரைந்தீமே - கரைவாய்.

143. புறந்தந்த - பாதுகாத்த. உள்ளாள் - நினையாள். இஞ்சி - மதில். புலம்ப - தனிமையுற. தனிமணி இரட்டும் - ஒப்பற்ற மணி மாறி மாறி ஒலிக்கும். தாழ் - தடையாணி. கடிகை - காம்பு. குறும்பு - சிற்றரண். மழவர் - வீரர் (வெட்சியர்). ஆதந்து - அவை மீட்டு. முரம் பின்வீழ்த்த - அவ்வெட்சியாரை மேட்டுநிலத்தே கொன்றுவீழ்த் திய. மறவர் - கரந்தை வீரர். பதுக்கைக்கண் நடுகல் என இயைக்க. தோப்பிக்கள் - நெல்லில் வடித்த கள். துரூஉ - செம்மறி ஆட்டுக் குட்டி. கவலை - கவர்த்தவழி. உள்ளாள் - பிறளாயினள்; ஆயினும் (துணை=) துணைவன் தன்மார்பு துணையாகத் துயிற்றுக என இயைக்க. கோவல் - திருக்கோவலூர். காரி - ஒரு வள்ளல்.

144. நீர்நசை - நீர்வேட்கை. ஊக்கிய - முயன்ற. உயவல் - வருத் தம். இயம் - வாய்ச்சியம். தூம்பு - நெடுவங்கியம். உயிர்க்கும் - நெட் டுயிர்ப்புக்கொள்ளும் (நெடுமூச்சுவிடும்) அத்தம் - அருவழி; காடு.

145. உள்ளுதல் - நினைத்தல். நெஞ்சு உணத் தேற்றிய - நெஞ்சு கொளத் தெளிவித்த. அழுங்கல் - இரங்கல்; வருந்தல். அலர் - பழிமொழி. இறந்த - கடந்த.

146. முயலி - முயன்று. பாஅய - பரப்பிய. விரித்த. உகக்கும் - உயரப் பறக்கும்.

147. நோவேன் - நோவேனாகிய நான். இவட்கும் நோவது வே - இவளுக்கும் நோகவேண்டியுள்ளது. அவட்கோ நோவா நின்றேனாகியயான். இவட்கும் நோகவேண்டியுள்ளது. அவட்கு நோவேனோ! இவட்கு நோவேனோ! என்பது கருத்து. ஏர் - எழுச்சி; அழகு. கண்நோவது என முடிப்பாருமுளர்.

148. வரி - வரியப்பட்ட வயலை - ஓர்கொடி. நொச்சியினிலை மயிலடிபோன்றது ஆதலின், 'மயிலடியிலைய' என்றார். மாக் குரல் - கரிய பூங்கொத்து. காண்வர - காண. தனியே - (அவனின்றித்) தனியே. தெறுவர - என்னை வருத்த. மகளை - மகளே! ஐ - சாரியை. இலையில் - இலையில்லாத. சினை - மரக்கிளை. புறவு - புறா. உருப்பு - வெப்பம். அமையம் - சமையம் - பொழுது. அமர்ப்பனள் - போர்செய்யப் புகுந்தாற் போன்ற கண்களையுடையவளாய்.

149. என்பாவை - எனது பாவைபோல்வாள். பாவைக்கு இனிய நன்பாவை - பாவைபோல்வாளுக்கு இனிமையான நல்ல விளையாட்டுப் பாவை. பூவைக்கு - பூவைபோல்வாளுக்கு. பூவை - நாகணவாய். என்று யான் கலங்க நீங்கினாளோ என முடிக்க நோக்கினையும் நுதலையும் உடைய பூங்கணோள் என இயைக்க. பூங்கணோள் என்பது ஈண்டுப் பெண் என்னும் பொருட்டாய் நின்றது. காட்டிற் செல்லும் அச்சத்தாற் சுழலுதல்பற்றி அலம் வரும் என்றார். நோக்கினையும் நுதலினையும் உடையேனாய் யான் கலங்க என்றல் இத்துணைச் சிறப்பின்று.

150. தாங்கல் - பொறுத்தல். அவலம் - துன்பம். ஒல்லுதல் - பொருந்தல்; இயைதல். தெற்றி - திண்ணை. கண்டு உள்ளின் உள்ளம்வேம் என இயைக்க.

151. கயந்தலை - மெல்லிய தலை. பயம்பு - படுகுழி. விளிப் படுத்த - பிளிற்றிய. கம்பலை - ஒலி. வெரீஇ - அஞ்சி. குழவி - கன்று. தாதுஎரு - தாதாகிய எரு. ஆயம் - தோழியர்கூட்டம். அழுங்கின்று - வருந்திற்று. இறீஇயர் - இறுக. அசைஇ - தங்கி. பாவை - பாவையை. தாயும் அழும் என முடிக்க.

152. அறம் - நல்வினை. அருளின்று - அருளிற்று. ஓதியை யும் - சிறுநுதலையும் உடைய மகள் என்க.

153. கரீஇ - கழித்து. அயர்தல் - கொண்டாடல். வதுவை நன் மணம் - வதுவைக் கல்யாணம். கழிகென - செய்துமுடிக என்று தாய்க்குச்சொல்லின் எவனோ? என முடிக்க. எவன் - எத்தன்மையது.

### 37ம் சூத்திரம்

154. நம் இவண் ஒழிய - நாம் இங்கு ஒழிந்திருப்ப. நாம் நம் எனக் குறுகிநின்றது. நம்மை இவண் ஒழித்து எனினுமாம் - நிலம் - நிலத்திலுள்ளார். இன்னா - துன்பம்; வெயில் முதலியவற் றால் இன்னாத என்க. நெருநல் - முன்னாள். தகுவி - தகுதியுடை யாள்; தகுவியாகிய என்மகள் என்க தழை - தழையுடைய கூழை - தழைகொய்தலாற் கூழையான கீழதாகிய வண்டல் என இயைக்க.

155. நிலந்தொட்டுப்புகார் - நிலத்தைத் தோண்டிப் புகமாட் டார் .வானம் ஏறார் - விண்ணுலகத்தும் ஏறிப் போகமாட்டார். முந்நீர் - கடல், கடலின்மேல் காலால் நடந்து செல்லமாட்டார். குடிமுறை குடிமுறை தேரின் - முறையே குடிகள்தோறும் ஆரா யின் (தேடின்). கெடுநர் - தப்புவார் (காணப்படாதொழிவார்). நம் காதலோர் - நம்மால் காதலிக்கப்பட்டார்; என்றது தலை வனையும் தலைவியையும்.

156. ஓர்த்தல் - ஆராய்தல். அமர் - போ.

### 39ம் சூத்திரம்

157. பல்காழ் - பல மணிவடம். அவரி - அழகிய வரி. விழ வொலி கூந்தல் - விழவிடம்போல நறுமணம் வீசுந் தழைத்த கூந்தல் - கொண்டாடத்தக்க தழைத்த கூந்தல் எனினுமாம். மாயோள் - மாமை நிறமுடையவள்.

158. உன்னங்கொள்கையொடு - நங்கருத்தினை உணர்ந்து கொள்ளுதலோடு. உளங்கரந்து - தாமறிந்தவற்றை மறைத்து. உய்கம் - உய்வேம். ஈரம் - அன்பு. கௌவை - அலர். நாடுகண் அகற்றிய - தன்நாட்டை இடம் விசாலிக்கச்செய்த. உவ - மகிழ் வாய். நம்மொடு ஓராங்குச்செல வயர்ந்தனர் - நம்மொடு உடன் செல்ல விரும்பினர். கழை - மூங்கில். பிசைந்த - ஒன்றோடொன்று உரிஞ்சுதலால். கால் - காற்று. கூரெரி புணரிமிசைக் கண்டாங்கு தோன்றும் நனந்தலை என இயைக்க. நனந்தலை - அகன்ற இடம். வெரிந் - முதுகு. காட்டுமீக்கூறும் - காட்டை மேம்படச் சொல்லும். ஒருத்தல் - களிறு. ஆறுகடிகொள்ளும் - வழியைக் காக்கும். அழுங்கிய செலவு - தாழ்த்திருந்த செலவை. அழுங் கியசெலவு செலவயர்ந்தனர் என முடிக்க.

159. இலங்கு வீங்கு எல்வளை - விளங்குகின்ற செறிந்த ஒளியையுடைய வளையையுடையாய்! ஆய்நுதல் - அழகு குறைந்த நுதல். விலங்கு அரி - குறுக்கிட்ட ரேகை. அனந்தல் குறைநித்திரை. நலம் - அழகு. பசலை - பசப்பு.

160. வேல் - ஒருமரம். வினைஞர் - தொழில்செய்வோர். இயலுதல் - தொழிலிற் புகுதல். தைஇயின - கட்டப்பட்டன. தலைஇ - பெய்து. உலவை - மரக்கொம்பர். பொதுளல் - தழைத்தல். பனி

நீங்குவழிநாள் - இளவேனிற்காலம். வந்தன்று - வந்தது. மாலைப் போது தூதாகவந்தது என இயைக்க. உலறுதல் - காய்தல். வணர் - வளைவு. புலிமருள்செம்மல் - புலியும் மருளும் தலைமை. அலமரலல் - சுழலற்க.

161. அண்ணாந்து - நிமிர்ந்து. ஏந்திய - உயர்ந்த மேனியில் தாழ்ந்த எனக் கூட்டுக. மணி - நீலமணி. நீத்தல் ஓம்புமதி - கைவிடலைப் பாதுகாப்பாயாக. பணீஇயர் - அடக்கும்பொருட்டு. இவட்குத் தளரினும் முடிப்பினும் (இவளை) நீத்தலோம்புமதி என முடிக்க.

162. நின்னலதிலள் - நின்னை இன்றியமையாமையாக வுடையள். யாய் - தாய். ஆயிடையேன் - அத்தன்மையினேன்.

163. கமஞ்சூற்குழிசி - நிறைந்த பரிய தயிர்த்தாழி. பாசம் - கயிறு. மத்தம் - மத்து. நெய்தெரி இயக்கம் - வெண்ணெய் தோன்றக் கடையுமொலி. வெளின்முதல் - தறியினடி. வைஇய - வைக்க. அயர்தல் - மேற்கொண்டொழுகல்; விரும்பல்; வரைத்தன்றியும் - அளவன்றியும்.

164. ஓரை-விளையாட்டு. ஏதிலாளன்-அயலான். என்றது தலைவனை. காதல் - காமவேட்கை. பால் - ஊழ். விழவயர்தல் - மண விழவு செய்தல். அன்னை-தாயே! யாய் - என்தாய்; என்றது செவிலியை.

165. அன்னை என்றது நற்றாயை. அன்னையாகிய நின்மகள் என இயைக்க. "அன்னை யென்னை யென்றலு முளவே... ...புலவர்" என்னும் (பொருளியல் - 52) சூத்திர விதிப்படி தலைவியைத் தோழி ஈண்டு அன்னை என்றாள் என்க. யாய் - என்றாய் எனத் தன்மைக்கண் வந்தது. தன் அமர் - தன்னை விரும்பிய. துணை என்றது தலைவனை. முனாது - பழையது. புல்லி - ஒரு குறுநில மன்னன். உழைவயின் - தன்பக்கவிடம். வன்கண் - இரக்க மின்மை. புன்கண். - துன்பம்.

166. கல்லா - மரமேறிப் பழகாத. இருவெதிர் - பெரிய மூங்கில். கழை - பெருங்கோல். ஏறி - ஏறலால். அஃது - வரைந்தமை யாய்க்கு உரைத்தனனல்லனோ என மாறிக் கூட்டுக. யாய் - என்றாய்.

167. பழுநி - பழுத்து. சுரம் - பாலைநிலம். நம்மூர் நனி புலம்பினது என முடிக்க. கலிழும் - அழும்.

168. சேரி - சேரியிலுள்ளார். கல்லென - கல்லென்று ஆர வாரிப்ப. ஆனாது - அமையாது (இடைவிடாது). தன்மனை தானே யிருக்க எனமாறிக் கூட்டுக. நீர் உணலாய்ந்திசின் என முடிக்க. உணல் ஆய்ந்திசின் - உண்ணுதலை நினைந்தேன். ஆல் - அசை.

## 40ம் சூத்திரம்

169. நணித்து - சமீபமாக. வெம்முரண்செல்வன் - வெம்மை யான் மாறுபடுகின்ற சூரியன். வெம்மையான் வலிய சூரியன் எனினு மாம். கதிருமூழ்த்தனன் - கிரணங்களை உதிர்த்தான். (மேல் கடலில் வீழ்த்தினான் என்றபடி. சேர்ந்தனைசெல் - எம்மூரை அடைந்து

(விடியலிற்) செல்வாயாக. அரிய - செல்லுதற்கரிய. சேய - தூரமா யுள்ளன. ஆறுஅரிய சேய; ஆதலாற் சேர்ந்தனை செல் என இயைக்க.

170. வதுவை - மணச்சடங்கு. ஈன்றோர் - பெற்றோர் (தாய் தந்தையர்) மீண்டனைசொல் - மீண்டு (எம்மூர்க்கு) வருவாய்.

171. பெயர்ந்து-மீண்டு. சுரன் - பாலைநிலம். இறத்தல் - கடத்தல்.

172. சங்கம் - சங்கு. பெண்ணை - பனை. அன்றில் - ஒருபறவை. இது பனைமடலுள் வாழ்வது. வாமான் - வாவுங் குதிரை. கோதை - சேரன். கொல்லி - ஒருமலை. கனி - பழம். இவை தோன்றிய பொருட்குப் பயன்படாது பிறர்க்குப் பயன்படுவன என்றபடி.

173. அலங்கல் - மாலை. ஆடு எருத்து - அசைகின்ற கழுத்து. குழை - குண்டலம். விலங்கல் - மலை. வேறு - வேறுவேறான உருவம். அலங்கல் - அசைதல். எம் அண்ணல் - எமது இறைவன். என்றது சிவனை விளையாட்டென்றார்; அர்த்த நாரீசுவர வடிவாய் விளையாடலைக் குறித்து.

174. கனலி - ஞாயிறு. உருப்பு - கொதிப்பு. யாத்து - யாமரத் தினது. அசைஇ - இளைப்பாறி. சிறுவரை - சிறுபோழ்து. சுரன் - காண்பை என இயைக்க. முன்னிய - முற்பட்டுச் சென்ற.

175. ஒருசுடருமின்றி - இருசுடருள் ஒரு சுடருமின்றி. இருசுடர் என்றது ஞாயிறுந் திங்களுமாகிய இரண்டையும்.

176. அழுந்துபட - ஆழ்ந்துபட; குறுக்கல் விகாரம். (தொல். சொல். 403). வீழ்ந்த - கீழேசென்றுகிடந்த. ஒலிவல் ஈந்து - தழைத்த வலிய ஈத்தமரம். உலவை - காற்று. எறிந்த - தாக்கிய. செம்மறுத்தலைய - (குருதிபடிதலால்) சிவந்த மறுப்பொருந்திய தலையையுடைய. நெய்த்தோர் - இரத்தம். வல்லியக்குருளை - புலிக் குட்டி. மரல் - மரற்செடி. இண்டு - இண்டங்கொடி. ஈங்கை - ஓர் கொடி. ஐயள் - மெல்லியள். எல் - இரா. மிளிர்க்குதல் - புரட்டுதல்.

177. தாரம் - மயிர்ச்சாந்து. வார்ந்த - நேரான. சேர்ந்து - திரண்டு. தழைத்தைஇ - தழையை உடுத்து. இவள் என்றது தலைவியை. விறலி என்பது நற்றிணையுரை. இச்செய்யுளுக்கு துறை கொண் டமையில் நச்சினார்க்கினியர் கருத்து வேறு. நற்றிணை உரை காரர் கொழுநற் காக்க எனப் பாடங்கொள்வர்.

178. தொடியோள் - வளையை அணிந்தவள். யார்கொல் - யாவரோ! அளியர் - இரங்கத்தக்கார். பறையினொலிக்கும் என இயைக்க. அழுவம் - காடு. முன்னியோர் - முற்பட்டுச்செல்வோர். முன்னியோர் யார்கொல் என இயைக்க.

179. கல்அளை - கல்லிலுள்ள குண்டு. வெம்பிய - வெயி லால் வெப்பமடைந்த. ஆழியான் - திருமால், குடங்கை - உள் ளங்கை. இவ்வருவார் என்றது செவிலியை.

180. அமர்வில் - அமர்தலில்லாத (=அடக்கமில்லாத). ஒரா அவதியாய் - நீங்காத அவதியையுடையாய். தான்கண்டாள் என்றது தன் பக்கத்து வரும் தன் மனையாளாகிய தலைவியை. களக்கனி வண்ணனையான் கண்டேன் என்றது புணர்ந்துடன் வந்தாரிருவருள் தலைவன் கூற்று. இது தேடிச்சென்ற செவிலியை நோக்கிக் கூறியது.

181. நவின்ற - பயின்ற ஒண்தொடி - ஒண்தொடியையுடையாள். இன்துணை - இனிய துணையாகிய தலைவன். மலையிறந்தோள் - (அவள்) மலையைக்கடந்தாள்.

182. கதிர் - ஞாயிற்றின்கிரணம். உறித்தாழ்ந்தகரகம் - உறியிலே தங்கின கமண்டலம். முக்கோல் - திரிதண்டம். அவல் அசைஇ - தோளிலே வைத்து. வேறோரா நெஞ்சத்து - அயன், அரி, அரன் என்னும் மூவரையும் ஒருவனாகவல்லது நினையாத நெஞ்சத்தாலே. குறிப்பு ஏவல்செயன் மாலைக்கொளை - ஐம் பொறியும் நுமக்கு ஏவல்செய்தலை இயல்பாகவுடைய கோட் பாடு. நடை - ஒழுக்கம். வெவ்விடை - வெவ்விய காடு. தம்முளே புணர்ந்த - தம்மிலே கூடின. பெரும என்றது அவ்வந்தணரு ளாசிரியனாகிய பெரியோனை. போறீர் - போலிருந்தீர். படுப்பவர் - மெய்ப்படுப்பவர்; (பூசுவோர்). ஏழ் - ஏழ்நரம்பு. முரல்பவர் - பாடுவார். சூழ்தல் - ஆராய்தல். இறந்த - மிக்க. எவ்வம் - துன்பம். தலைப்பிரியா என்று பாடமிருப்பின் அதுவே நலம்.

## 41ம் சூத்திரம்

183. இல்லோர் - பொருளில்லார். செய்வினை - பொருள் செய்தற்குரிய செயல்கள். கைம்மிக - மிக; ஒருசொல். உய்த்தியோ- செலுத்துகின்றாயோ? வெண்டேர் - யானைத்தந்தத்தாற்செய்த வெள்ளிய தேர். முடுக - விரைந்துசெல்ல. நேமி - தேருருளை. கால் - காற்று. பல்மாண்ஆகம் - பலவாக மாட்சிமைப்பட்ட மேனி.

184. வாள்வரி - வாள்போலும் வரி. வயமான்-வலிய புலி. கோள் - கொலைத்தொழில். சிகரல் - சிதறல் (சிதார் எனவும் பாடல்) செம்மல் - பழம்பூ. தாய் - பரந்து. அசைஇ - தங்க; கிடக்க. அதிரல் - புனலி. எதிர்வீ - மாறுபட்ட பூக்கள். பராஅம் அணங்கு - பராவப்படும் தெய்வம். நகன்மணந்தபூவின் - கோயிலின்கண் கூடிக்கிடந்த பூக்களைப் போல. நயவரும் - விரும்பத்தக்கதாகின்றது. தொடி-பூண். குறு நெடுந்துணைய - குறியவும் நெடியவுமாய அளவையுடைய. வாள் - கொலையுமாம்.

185. அவிரறல் - விளங்குகின்ற மணல். தொடலைதைஇய - மாலையைத் தொடுக்கும். கதவ - கோபத்தையுடையன. கதவ என்பதற்கு, வேகமாகத் தாக்குவன என்றும் பொருள் கூறலாம்.

186. அழிவிலமுயலும் - அழிவில்லாத கருமங்களை முயன்று செய்யும். அழிவில்லாத தவமுமாம். பொரிப்பூ-நெற்பொரி போலும்

பூ. முறி - தளிர். அணங்குகொள - வீற்றுத் தெய்வம் சிறப்படைய. திமிரி -அப்பி. நெடிய - நேரமாக. குறும்பல்ஊர - குறிய (அடுத்தடுத் துள்ள) பல ஊர்களை உடையன. ஆறு உடையன என்க. ஆறு - வழி.

187. இரிந்த - புறமிட்டோடின. செந்நாகு - சிவந்த ஆனின் பெண். காள் - வைகறை. வெரூஉம் - அஞ்சும். தயிர்கடையும் ஒலியைப் புலியின் ஒலியென்று அஞ்சும். ஆநிலைப்பள்ளி - பசுத் தொழுவத்தினிடத்து.

188. வினையமைபாவை - இயந்திரத்தொழிலமைந்த பாவை. இயலி - இயங்காநின்று. தலைநாட்கு எதிரிய - முதற் பெய லைப் பெய்யத்தொடங்கிய. கடுஞ்செம்மூதாய் -விரைந்த செலவினை யுடைய சிவந்த நிறத்தையுடைய தம்பலப்பூச்சி. கொண்டு - பிடித்து. வேங்கை-வேங்கைமரம், அமர் (ஆறலை கள்வர் முதலாயினோ ருடைய) - போர். பெயர்க்குவென்-நிலை கெட்டு ஓடச்செய்வேன்.

189. ஓர்த்தல் - ஆராய்தல். கலுழ்தல் - அழுதல்.

190. அருளியோர் - தமக்கு அருள்செய்யவந்த அந்தணர். தாபதர் முதலியோர். தெறுதல் - கொல்லுதல். புரிவு - மனம் பொருந்தல், விருப்பம். வலித்தல். துணிந்தகூறல்.

191. காதலி- நம்பாற் காதலையுடையாள் என்றது தலைவியை. கலிழும் - அழும்; கலங்கும். இழைத்தல் - செய்தல்.

192. நல்ல - நல்லவற்றை, அருந்தொழில் உதவி - அரிய போர்த்தொழிற்குதவி செய்து.

193. வந்தால் - நீ வந்தால். செல்லாமோ - யாம் போகேமோ. ஆரிடையாய் - அரிய இடையினையுடையாய். அத்தம் - காடு. தந்து - கொண்டணிந்து. ஆர் - நிறையப்பட்ட. தகரம் - மயிர்ச் சாந்து. மகரக்குழை - மகரக்குண்டலம். மறித்த - சென்றுமீண்ட.

194. சேய்த்து - தூரத்திலுள்ளது. விடிற்சுடர்நுதல் காண் குவம் என இயைக்க. மண்ணுறு - மண் பூசிய.

195. தழங்குகுரல் தழுங்குரல் என நின்றது. தழங்குதல் - ஒலித்தல். வன்மருங்கு - வலிஇடம்; என்றது காட்டை. அவன் மருங்கு என்று பிரித்தல் சிறப்பின்று. எதிர்ந்தது - எதிர்கொண்டு சொரிந்தது. அலமரல் - சுழற்சித்துன்பம்.

196. தூற்றி - எடுத்துக்கூறி, பிறிதுநினைத்தல் - வாராரென நினைத்தல். யாம் வெங்காதலி - எம்மால் விரும்பப்பட்ட காதலையுடையாள். சாய் - மெலிந்து சொல்லியதை எமக்கு உரைமதி என இயைக்க. மதி - முன்னிலையோசை.

197. பனி - குளிர்ச்சி, பசலை - பசப்பு, துனி - வெறுப்பு. படர் - துன்பம். கையறல் - செயலறல். உயவுத்துணை - வருத்தந் தீர்க் குந்துணை. உயா - வருத்தம் (தொல். சொல். உரி.73) தேர் காண் குவை என முடிக்க.

*198. படு - ஒலிக்கின்ற. பணை - முரசு. மின்கூற்றமாக பணை - மூங்கில் பருமையுமாம்.*

*199. ஐயவாயின - வியக்கத்தக்கவாயின. கிளவி ஐயவாயின என இயக்க. கையற - செயலற. கார்நாள் எமக்கே நோய் நன்கு செய்தன எனக் கூட்டுக.*

*200. முரம்பு - பருக்கைக் கற்களையுடைய மேட்டுநிலம். திகிரி - உருளை. பணை - பந்தி. முனைஇய - வெறுத்த. வயமா - வெற்றியையுடைய குதிரை. விடிற்காண்குவம் என முடிக்க.*

*201. ஒரூஉ - (எம்மைவிட்டு) நீங்குவாயாக. குரல் - பெண் மயிர். மொய்ம்பு - தோட்கட்டு. தொடிய - தீண்டுதற்கு. மற்று - பதில். வாயல்லாவெண்மை - உண்மையல்லாத பயனில்லாத சொற்கள்.*

*கண் - கண்ணருள். தவறு- தப்பு. எவன் - யாது? இஃதொத்தன் - இவனொருத்தன். கள்வன் - ஞெண்டு. புனல் - நீர்க்கரை. ஒதுக்கம் - நடையாலாய வடு. சேர்பு-சேர்ந்துகிடத்தாற்போல; கிடத்தல் வினை வருவிக்கப்பட்டது. சாலாவோ - அமையாவோ. தேற்ற - தெளி விக்க. தெளிக்கு - தெளிவிப்போன் (குளுறுவேன் என்பது கருத்து).*

*தேற்றம் - (நெஞ்சைத்) தெளிவியேம். போர் - ஊடற் போர். அணங்கு - வருத்தம். விளியுமோ - கெடுமோ.*

**42ம் சூத்திரம்**

*202. அளி - அருள். சாயல் - மென்மை, இறீ இயர் - இறுக. கொடுந்தொடை - வளைந்த கால். கறவை - பாற் பசு. குவவு - திரட்சி. ஆகம் - மார்பு. வறன் - வறந்த. அசைஇ - தங்கி. வான் புலந்து - மேகத்தை வெறுத்து. அசாவினம் - வருந்திய கூட் டம். திரங்கிய - வற்றிய. மரல் - ஒரு செடி. பதம் - சோறு. மெய்ந் நிழல் - அவள் மெய்யின் நிழல்போல அகலேனென முடிக்க. ஓரை - விளையாட்டு. தோடு - திரட்சி. ஆடுவழி - விளையாடுமிடம்.*

*203. அத்தம் - காடு. முகிழ்நகை - அரும்பிய நகை. எடுத்தேன் - எடுத்து வளர்த்தேன். கொடுத்தோர் - அவளைத் தலைவனிடம் கொடுத்தோர். ஆயத்தோர் - தோழியர் கூட்டத்தார்.*

*204. பரிதப்பின - நடை ஓய்ந்தன. வாள்- ஒளி. பிறர் - தான் கருதி நோக்குவாராகிய தலைவனுந் தலைவியுமல்லாத பிறர். ஆணும் பெண்ணுமாக இணைந்து தூரத்து வருவாரைத் தம் மகளுந் தலைவனுமெனக் கருதிப் பின் அவரல்லாமை கண்டு வெள்கினாளாதலின் பிறர்பலர் என்றாள்.*

*205. கம்பலை - ஒலி. இன்னாத - இனிமையல்லாத = துன்பத் தைத் தரும் இசையினாரா - இசைத்தலைக்கேட்டு. கடுவினை யாளர் - கொடுந் தொழிலைச் செய்யும் ஆறலை கள்வர் முதலி*

யோர். குரவின் பூ பாவை போறலின் பாவையென்றார். பறித்துக் கோட்பட்டாயோ - பறித்துக் கொள்ளப்பட்டாயோ. பைய - மெல்ல.

206. கோங்கம்-முலை, முலைபோறலின் முலைகொடுப்ப என்றார். பாவை என்றது பாவைபோலும் குரவம்பூவை. மொழி காட்டாயாயினும் (நினக்குச் சொல்லிய) சொல்லைச் சொல்லா யாயினும் வந்து ஈதென்று வழிகாட்டாயென இயைக்க.

207. குடம்புகா - குடம்புகாமல் - (பிறர்) அள்ளாமல்; குடம்புகாத கூவலெனினுமாம். கூவற் சின்னீர் - கூவலிலுள்ள அற்பநீர். இடம்பெறா - குடித்தற்கு இடம்பெறாமையால். மா - விலங்குகள். ஏறா - சென்று முடியாத. உடம்புணர் காதல் - உடன் கூடிச் செல்லுங் காதலால், உவப்ப இறந்த - மகிழ்ந்து சென்ற.

208. பசந்தன்று - பசந்தது. சாய்ஐது ஆகின்றது - நுணுகி மெல் லிதாகின்றது. அவலம் - துன்பம். உயிர்கொடுகடியினல்லது - என்னுயிரைக்கொண்டு செல்லினல்லது. நினையின் எவனோ? - ஆராயுமிடத்து இவை வேறு என்செய்வன. பொரி - பொருக்க. பொகுட்டு - தாமரைப் பொகுட்டுப்போல் அடிமரத்தினி லெழுந் திருப்பது. ஆலி - ஆலங்கட்டி. தூம்பு - உட்டுளை. வீ - பூ. எண்கு - கரடி. வீயைக் கவருமென இயைக்க. நிரையப் பெண்டிர் - நரகம் போலும் பெண்கள். கௌவை மேவலராகி - அலர்தூற்றுதலை விரும்புதலையுடையோராக. இன்னா - இனிமையல்லாத சொற்கள் புரைய அல்ல - உயர்ச்சியைத் தருவன அல்ல. பரைசி - தெய்வத்தைப் பரவி. ஆறிய - அடங்கிய. இதற்படல்என் - இந் நிலையிற்படுதல் எவ்வாறாம்.

209. நாண் - நாணம், நீடுஉழந்தன்று - நெடுங்காலம் உட னிருந்து வருந்தியது. இனி - இப்பொழுது. சிறை - கரை. புனல் நெரிதர - நீர்நெருங்கி அடித்தலால். உக்காங்கு-வீழ்ந்தாற் போல. தாங்கல் - தடுத்தல். நெரிதர - நெரிக்க (மென்மேல் நெருக்க). கைநில்லாது - எம்பால் நில்லாது; போய்விடும். அளிது - அஃது இரங்கத்தக்கது. நாண் நனி நீடுழந்தன்று, இனிக் கைநில்லாது அளிது என முடிக்க.

210. மறுகு - வீதி மறுகிற் பெண்டிர் சிலரும் பலரும் என இயைக்க. அம்பல் - பழிமொழி. வலத்தள் - வலக்கையிற் கொண் டவளாய். வலந்தனள் என்னும் பாடத்திற்குச் சுழற்றினவளாய் என்று கொள்க. அலந்தனன் - துன்பமுடையனாயினேன். சொல் வயர்ந்திசின் - சொல்ல விரும்பினேன். அழுங்கல் - பேரொலி.

211. சேட்புலமுன்னிய - தூரியவிடத்தைச் செல்லக் கருதிய. யாய் - என்றாய். ஆய்நலம் - நுணுகிய அழகு. நலம் - இன்பமுமாம். ஆயத்தோர்க்கு என்மின் என இயைக்க.

212. கவிழ்மயிர் - கவிழ்ந்து தொங்குகின்ற மயிர். செந் நாயேற்றை - செந்நாயேற்றையானது. ஏற்றை - ஆண். குருளைப்

பன்றி - பன்றிக்குட்டி. விரைந்த - விரைந்து செல்கின்ற. ஆயத்தோர்க்கு உரைமின் என முடிக்க.

213. வேய் - மூங்கில். வனப்பு - அழகு. ஆய்கவின் - நுணுகிய அழகு. பரியல் - வருந்தற்க. வந்தமாறு - வந்தகாரணம். வந்தமாறு தரூஉம் என இயைக்க.

214. வேண்டு - விரும்பிக் கேட்பாயாக. படப்பைத்தேன் - தோட்டத்தில் வைத்த தேன். மயங்கிய - கலந்த. உவலை - இலை. கீழதாகிய - கலுழிநீர் என இயைக்க. கலுழி - கலங்கல்.

215. அறம்சாலியர் - நல்வினை நிறைவதாக. வறனுண்டாயினும் - வறற்காலம் உளதானாலும். எந்தையை - என்றலைவனை. மறைத்த குன்று, அறஞ்சாலியர் எனக் கூட்டுக. கோள் - கொலைத்தொழில்.

216. மான் அதர் - மான் செல்லும் வழி. மான் என்பதற்கு விலங்குகள் என்றலுமாம். மயங்கி - கலந்துள்ள. மலைமுதல் - மலையடி தோளி பரல்வடுக்கொளத் தான்வருமென்ப என இயைக்க.

217. துறந்ததைக்கொண்டு - (நின்னைத்) துறந்ததனால். அட - வருத்த. சாஅய் - மெலிந்து. புலந்து - வெறுத்து. அளைகண் - நீர் அளைந்தகண். எவ்வம் - துன்பம். ஏமம் - இன்பம். முந்துற நின்மகள் - வந்தனள் என முடிக்க.

## 43ம் சூத்திரம்

218. எழில் - அழகு. மாமை - மாந்தளிர்போலும்நிறம். சுணங்கு - தேமல். ஆரம் - மார்பு. தொடுத்தென - எதிராக வைத்துக் கட்டினதென்று சொல்லும்படி. அமையார் - வேட்கை தணியார். எண்ணுவது - நினைக்கின்ற காரியம்.

219. அளிநிலை - அருளுநிலை. அமரிய - மாறுபட்ட. விளிநிலை - அழைக்குந்தன்மை. நிலம்வடுக்கொளா - நிலம் வடுக்கொளச்செய்து; என்றது இதற்குமுன் மெத்தென நடக்குமடி. இப்பொழுது கோபத்தால் நிலம் வடுக்கொள்ளுமாறு (ஊன்றி) நடந்து என்றபடி. வறிது - சிறிது. அகம் - தன்னிடம் வாயல் - உண்மையல்லாத. கண்ணியது. நினைத்த காரியம். வினை தலைப்படுதல் - (ஆள்வினை) தொழிலிற் தலைப்படுதல். செல்லா நினைவுடன் - போகாமற்றடுக்கும் நினைவோடு. முளிந்த - உலர்ந்த. ஓமை - மாமரம் முதையற்காடு - பழங்காடு. அம் - சாரியை. மோடு - உயரம் ஈட்டுதல் - கொண்டுவந்து குவித்தல். காய் உதிர்ந்து கிடக்குமென இயைக்க. கவான் - மலைப்பக்கம். மாய்த்தபோல - தீட்டிவிட்டது போல. மழுகுநுனை - தேய்ந்த கூரிய முனை. பாத்தியன்ன - பரப்பி வைத்தாலொத்த; பகுத்துவைத்தாலொத்த எனினுமாம். குடுமி - முனை; உச்சி. அதர - வழியையுடைய. அதரகானம் என இயையும். முரம்பு - மேட்டுநிலம். இறக்க - கடக்க. அறத்தாறன்

றென மொழிந்த தொன்றுபடுகிளவி - நின்னிற்பிரியேன், பிரிதல் அறத்தாறன்றெனக் கூறிய இயற்கைப் புணர்ச்சிக் காலத்து வார்த்தை. அன்னவாக - கூறிய அத்துணையாகுக. முன்னம் - குறிப்பு. ஒன்றுநினைந்து ஒற்றி - போக்குடன்படாமையை எண்ணித் துணிந்து. பாவை - கண்மணிப்பாவை. மாய்த்த - மறைத்த. ஆகம் - மார்பு. புன்றலை - மென்மையான தலை. பிணையல் - (செங்கழுநீர்) மாலை உயிர்த்தல் - நெட்டுயிர்ப்புக்கொள்ளுதல். மணி - பவளம். காட்சி - தோற்றம். கடிந்தனம் - தவிர்ந்தேம்.

220. வேர்பிணிவெதிரத்து - வேர்கள் பிணிப்புண்ட மூங்கி லினிடத்தே. கால் - காற்று. நரலல் - ஒலித்தல். கந்து - தறி. அயர் வுயிர்த்தல் - நெட்டுயிர்ப்புக்கொளல். என்றூழ் - வெயில். அழுவம் - காடு. குன்று - மலை. மதியம் - திங்கள். முள்ளெயிற்றினையும் திருநுதலையுமுடைய நாள் நிரம்பிய மதித் திங்கள் எம்முடை யதுமொன்றுண்டு. அஃது இப்பொழுது மாலையும்பரஃது என உள்ளினனல்லவோ என இயைக்க.

221. உறல்யாம் - தன்னை உறுதற்குரியயாம். உயர்ந்தவன் விழவு - காமன் விழா. விறலிழையவர் என்றது பறத்தையரை. விளையாடல் - நீர்விளையாடல். பொழுது - இளவேனிற்காலம். துருத்தி - ஆற்றிடைக்குறை. அறல்வாரும் - நீர்பெருகும். அற லுண்டாகும்படி ஒழுகும் என்றுமாம்.

222. உயவு - வருந்தியுறையும். பொரி - பொருக்கு. புள்ளி நிழல் - புள்ளிபோன்ற நிழல். கட்டளை - கட்டளைக்கல். வட்டரங்கு - வட்டாடற்குரிய அரங்கு. நெல்லிவட்டுஆடும் - நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு ஆடும். ஆடும் சீறூர் என இயைக்க. சுரம் - பாலைவனம். முதல்வந்த - முற்பட்டுவந்த. உரம் - வலி. படர் பொழுதென உள்ளினனல்லனோ என முடிக்க சுடர் - விளக்கு. படர்தல் - வருந்தல்.

**44ம் சூத்திரம்**

223. பொருள்வேட்கை - பொருளாசை. துரப்ப - செலுத்த. உறை - உறைதல். சூழாதி - நினையாதேகொள். தொய்யில் - தொய்யிற்கொடி. யாழ - முன்னிலையசை. நின்மார்பிற்சுணங்கு - நின்மார்பு மலைத்தலால் இவள்கணுண்டான தேமல். இதற்கு நச்சினார்க்கினியர் கருத்து வேறு. அது அத்துணைப் பொருத்த மில்லை. முகப்ப - முகந்துகொண்டு உடனே வர. கிடாவது - ஓரி டத்தே கிடவாது. செல்லார் - ஒழுகார். ஓராங்கு - ஒருசேர. வளமை - செல்வம். விழை தக்கதுண்டோ - விரும்பத்தக்கதாக உளதோ. ஒன்றன்கூறாடை - ஒரு ஆடையின் கூறாகிய ஆடையை. சென்ற இளமை தரற்கு அரிது - கழிந்த இளமை மீண்டு தருதற்கு அரிது.

224. பொய்யற்ற கேள்வி - மெய்ப்பொருளுணர்ச்சி. புரை யோர் - மேலோர். படர்ந்து - சென்று; அடைந்து. மையற்றபடிவம் - மாசற்ற விரதம். மறுத்தரல் - மீட்டல். ஒல்வதோ - பொருந்துவதோ.

225. கோளூற - உயிரைக்கொள்ள. பிறர் - பகையரசர். தாள் - முயற்சி. வலம் - வெற்றி. நாள்இழைசுவர் - பிரிந்துசென்ற நாளைக் கீறிவைத்த சுவர். ஆழல் - துன்பத்து ஆழாதே. நறவுநொடைநெல் லின் நாண் மகிழ் அயரும் - (கோடுடன்) நறவை விற்றுக்கொண்ட நெல்லால் நாளோலக்கச் சிறப்புச்செய்யும். கள்வர் கோமா னாகிய புல்லியின் வேங்கடம் பெறினும் நின் ஆகம் பொருந்துதல் மறந்து ஆங்குப் பழகுவராதலரிது என முடிக்க. ஆவீயென்பான் நெடுநகராகிய பொதினி அன்ன ஆகம் என இயைக்க.

226. குறிப்பு - கருத்து. தனித்துப் பிரிவரோ - நின்னைத் தனித்திருக்கவிட்டுப் பிரிவரோ (பிரிந்திரார்). கலங்கல் - ஆதலால், கலங்கற்க. பனி - நீர்த்துளி. வார - வடிய.

227. பொறி - புள்ளி. வானம்வாழ்த்தி - வானம்பாடிப்புள். உறைதுறந்து - துளிபெய்தலைவிட்டு. பறைபுஉடன் - இலை யாவும் கெட்டொழிதலோடு. புல்லென்ற - பொலிவழிந்த. முரம்பு - மேட்டுநிலம் வாளியம்பு - அலகம்பு. நிரம்பாநோக்கு - இடுக்கிக் குறிபார்க்கும் பார்வை. நிரயங்கொண்மார் - தம் நிரைகளை மீட்க வேண்டி அம் சாரியை. நல்லமர்க் கடந்த - வெட்சியாரின் நல்ல போரை வென்றுபட்ட அதர் - வழி. பீலி - மயிற்பீலி. ஊன்று வேல் பலகை - ஊன்றிய வேலும் அதனோடு சார்த்திய பரிசையும். நடுகல், வேலையும் பரிசையையும் கொண்டு வேற்றுமுனையையொக்கு மென இயைக்க. வேற்றுமுனை - பகைமுனை. மொழிபெயர்தேம் - வேற்றுமொழி வழங்கும் தேயம். கழிப்பிணிக்கறைத்தோல் - கழி யாற் பிணிக்கப்பட்ட கரிய பரிசை. உவல்இடுபதுக்கை - தழையால் மூடிய கற்குவியல். ஆள்உகுபறந்தலை - ஆட்கள் இறந்துபட்ட பாழ்நிலம். உருஇல் ஊராத பேய்த்தேர் என மாற்றி இயைக்க. சென்ற ஆறு தேரொடு பரல் இமைக்கும் எனக் கூட்டி முடிக்க. நிரயங்கொண்மார் எனவும் பாடம். நிரயம் - நரகம்.

228. தந்நிலை - யாமிறந்துபடின் தாமடையும் துன்பநிலை. இதற்கு உரை முன் எழுதப்பட்டுளது.

### 45ம் சூத்திரம்

229. கோடு - சிகரம். இறத்தல் - கடந்துசேறல். கண்நீட விடுமோ? விடாது என்றபடி. மற்று - வினைமாற்று. ஏ - அசை நிலை. உடைத்து - அணையை உடைத்து. நீடு நினைந்து என்பது தலைவன் வினை. அவர் நீடு நினைந்து துடைத்தொறும் வெள் ளத்தைச் சொரிந்த கண்ணியல்பை அவரறிவராதலின் அவரை அது நீடவிடாது என்றபடி. நீட்டித்து வருதலை நினைந்து எனவே பிரிதலைக்கருதி என்பது பெறப்படும்.

230. வளை - சங்கு. பகரும் - விலைகூறும். கொண்கன் - நெய்தல் நிலத்தலைவன். படல் - கண்படல். பாயல் - படுக்கை.

வெளவுதல் - கவர்தல், இன்பாயற்படல் என மாற்றிக்கொள்க படலை விசேடணமாக்கி பாயலை ஆகுபெயராக்கினு மமையும்.

231. கூந்தலையும் உண்கண்களையுமுடைய பிணிக்கொண் டோள் என்க. நெஞ்சமானது அவள் சொல்லைத் தீர்ப்போம் (சொல்லுவாம்) என்று சொல்லும், அறிவானது செய்த வினையை முடிவு போக்காது இடையே இகழ்ந்து விட்டுவிடுதல். அறியாமை யோடு, இகழ்ச்சியையும் தருமென்று உறுதிப்பாட்டை ஆராய்கை யாலே தாமதித்து; ஏ நெஞ்சமே சிறிது விரையாதேகொள் என்னும் களிறுமாறுபற்றிய - இரு. களிறு ஒன்றோடென்று மாறாகப் பற்றிய. கயிறுபோல என்னுடம்பு வீவதுபோலும் என முடிக்க.

232. கானம் - காடு. கருந்தகடு - கரிய தகடுபோன்ற விதழ். அதிரல் - புனலிப்பூ காண்வர - அழகுண்டாக. மராம் - கடப்பம்பூ. அடைச்சி - சூடி. தெளிர்ப்ப - ஒலிப்ப. இயலி- நடந்து. சிறுபுறம் - பிடர்; சிறிய முதுகுமாம். சாஅய் - விலகி. அல்கியேம் - தங்கி னேம். குழுமும் - முழங்கும். பாணி - ஒலி.

233.

234. அளிது - இரங்கத்தக்கது. ஆள்வினை - முயற்சி. ஓம்பன் மின் - பாதுகாவாதீர். அதாஅன்று - அஃதன்றி. புலம்புறுநிலை - தனிமைநிலை.

235. தலைமணந்த - ஒன்றோடொன்று நெருங்கிய ஞெமை - ஒருமரம். குடிஞை - பேராந்தை. பொன்செய் கொல்லனின் - பொன்செய்யும் கொல்லன் தொழில் செய்தற்கண். ஒலிபோல தெளிர்ப்ப - ஒலிப்ப. முரம்பு - மேட்டுநிலம். சென்றிசின் - சென்ற னன். உரைத்தென - உலாவியதென. நறுந்தண்ணியன் - நறிய குளிர்ச்சியையுடையனாய். வாராநின்றான்; கண்டீர்; (நோகோ) நோவேனோ? மகிழ்வேன் என்றபடி.

236. இனைந்து - வருந்தி. நீடுயிர்த்தல் - நெட்டுயிர்ப்புக்கொள் ளல். எண்ணி இனைந்து நொந்து அழுதனள் என மாற்றிக்கூட்டுக. எல் - விளக்கம். நல்கிய - வரைந்துகொண்ட. மணியுட் பரந்த நீர் போல் - மணியும் அதனுட் பரந்த நீரும்போல். துணிபாம் - (வேறல லரென்று) துணிகுவாம். சிதைஇல்லத்துக்காழ் - தேய்த்த காலத்துக் கலங்கலைச் சிதைக்கின்ற தேற்றாம்விதை. கலத்தில் நீரைத் தேற்றத் தெளியுமா போலத் தெளிந்து என விரித்துரைக்க.

237. குரவை - குரவைக்கூத்து. மரபுளிபாடி - முறையாற் பாடி. சுற்றத்தார்கூறு மரபைப்பாடி என்பது நச்சினார்க்கினியர் கூறிய பொருள். எங்கோ உலகில் வாழியர் என்று யாம் தெய்வம் பரவுதும் என இயைத்து முடிக்க.

238. மரையா மரற்செடியைச் சுவைக்கும்படி மாரிவறப்ப என்க. ஆரிடை - அரியவழி. சுரை - மூட்டுவாய். சுருங்கி - உடலஞ் சுருங்கி. உள்நீர் - உள்ளே பொருந்திய நீர். துயரத்தைக் கண்ணீர் நனைத்துப் போக்கும் கடுமையையுடைய காடு என விரித்துரைக்க அறியாதீர் போல் - யான் இறந்துபடுதலை அறியாதீர் போல. இன்நீர அல்ல - இக்கூற்று இனிய நீர்மையையுடையனவல்ல. துன்பந் துணையாக நாடின் - துன்பத்திற்குத் துணையாக எம்மை யுங் கொண்டுபோக ஆராயின்.

239. எல்வளை - ஒளிபொருந்திய வளையையுடையாய்! நீவரின் சீறடி கல்லுறின் தோய்ந்தவைபோலக் கறுக்குநவல்லவோ என இயைக்க. தாமரை அல்லிசேர் ஆயிதழ் அரக்குத்தோய்ந்தவை போல - தாமரையின் அல்லியைச்சேர்ந்த அழகியவிதழ்கள் இங்கு லிகந் தோய்ந்தனபோல.

### 46ம் சூத்திரம்

240. விரிகதிர்மண்டிலம் - சூரியமண்டிலம். ஊர்தர - பரவா நிற்ப. புரிதலை - இதழ்முறுக்குண்ட தலையையுடைய. அங்கள் - அழகியதேன். புணர்ந்து - கூடிநுகர்ந்து. வாய்சூழும் - அவ் விடத்தே சூழ்ந்து திரியும். துனிசிறந்து - துனி மிகுதலாலே. அறல்வார - காமத்தீயால் சுவறி அறுதலையுடைத்தாய் ஒழுக. அளித்தலின் - அருளுதலானே. பனி ஒரு திறம் வார - பனி ஒருகூற்றில் வடியா நிற்ப. தளைவிடூஉம் - அலரும்.

241. யான் ஈண்டையேன்; என் நலன் ஆண்டொழிந்தன்று என முடிக்க. கவணொடு - கவணால். யானை வெருவிக் கைவிடு பசுங்கழை நிவக்கும் கானககாடு என இயைக்க. நிவக்கும் - நிமிரும்; மேற்சொல்லும். கழை - மூங்கில்.

### 47ம் சூத்திரம்

242. ஒன்றல் - பொருந்தல். பொருகளிறு - ஒன்றோடொன்று பொருத களிற்று யானைகள். தாள் - அடி. நின்றுகொய - ஏறா மல் நிலத்தே நின்று கொய்ய. ஒன்று என்றது நொதுலர் வரை வொடு புகுந்த ஒன்று.

### 48ம் சூத்திரம்

243. வீங்குநீர் - பெருகுநீர். நீலம் - கருங்குவளைப்பூ. பகர் பவர் - விற்போர். வயற்கொண்ட - வயலிடத்தே பறித்துக்கொண் டவை. கொண்ட - வினைப்பெயர். ஞாங்கர்மலர் - தலையிடத் தனவாகிய மலர். நாற்றம் கடாஅம் விருந்தயர - ஊர் புகுந்த வண்டிற்கு, நாற்றத்தையுடைய மதத்தை (அம்மதத்தின்முன் படிந்த வண்டுகள்) விருந்து செய்ய. அல்கி - தங்கி. இறை - முன்கையிலுள்ள வளை; ஆகுபெயர். வீழுநர் - விரும்பிய கணவர். புணர்ந்தவர் - வினைப்பெயர். வண்டு, அல்கி பாய்ந்தூதிப் படர் தீர்ந்து மறந்துள்ளாத புனல் என முடிக்க.

## 50ஆம் சூத்திரம்

244. வாருறுவணர்ஐம்பால் - கோதுதலுற்ற கடைகுழன்ற ஐம்பால். ஐம்பால் - ஐந்து கூறாக முடிக்கப்படுவது. இறை - முன்கை. எழில்பிணை மான் - அழகினையுடைய பெண்மான் மால்நோக்கு எனக் கண்ணழித்து மயங்கிய நோக்கு எனினுமாம். கார் - மழை. கூர்எயிறு - விழுந்தெழுந்த கூரிய எயிறு என்பர் நச்சினார்க்கினியர். அரி - உள்ளிடுமணி. அறிந்தீயாது இறப்பாய்கேள் - அறியாது போகின்றவளே கேள்.

உளனா - உயிருடனே இருக்க. உயவுநோய் - வருத்தத்தினை யுடைய காமநோய். தவறு - தப்பு. களைநர்இல் - களைபவர் இல்லாத. அறிந்து அணிந்து - அறிந்துவைத்தும் அழகுசெய்து. போத்தந்த - புறப்படவிட்ட நுமர் - நுமரை நில்லாது எய்க்கும் இடை - நிற்க மாட்டாது இளைக்கும் இடை உரு - வடிவு. அல்லல் கூர்ந்து - வருத்த மிக்கு. அணங்காகி - வருத்தஞ்செய்வதாகிய நோய்-காம நோய். ஒறுத் தல் - வருத்துதல். தண்டித்தல் மறுத்து - வருந்துகின்ற நிலைமை யைப்போக்கி. நீபடுபழி - நீ எய்துவதொருபழி. பழிநிறுக்குவன் போல்வல் என மாற்றிக் கூட்டுக. நிறுக்குதல் - நிலைநிறுத்துதல்.

245. இவள் தந்தை விழுப்பொருள் யார்க்கும் கொடுக்கும். நீ வேண்டிய பொருள் யாது என்றாள் தோழி. போதாய் - கூற்றின் (சொல்லின்) குறிப்பறியாதவளே! வேண்டும் - இரக்கும். புன் கண்மை - மிடி. ஈண்டு - என்பால். மருளி - மருண்டு. என்னை அரு ளீயல் - எனக்கு அருள் செய்தலை. வேண்டுவன் - இரப்போன்.

## 51ம் சூத்திரம்

246. சான்றவிர் - நற்குணங்களெல்லாமமைந்தீர்! அறிவுறுப் பேன் - தெரியச்செய்வேன். மான்றதுளி - மயங்கிய மழை. உரு என்னைக்காட்டி - தன்வடிவை என்னைக் காணப்பண்ணி (எனக்குக்காட்டி) அளியள் - அளிக்குந்தன்மையளாய். என் நெஞ்சு ஆறுகொண்டாள் - என் நெஞ்சைத் தான்வரும் வழியாகக் கொண் டாள். அதற்கொண்டு - அதனை முதலாகக் கொண்டு. அலங்குதல் - அசைதல். மிலைந்து - சூடி. பெண்ணை மடல் - பனைமடற் குதிரை. எவ்வநோய் - துன்பந்தரும் காம நோய். உயிர்ப்பாக இளைப்பாறு தலாக. மாதர்திறத்து - மாதர் வருத்தின கூற்றிலே ஒரு கூற்றினை. பாய்மாநிறுத்து - அப் பாய்மாவை மனத்தே நிறுத்தி, நிறுத்தி உயிர்ப்பாக மாதர்திறத்துப் படுவேனென இயைக்க. எல்லை - பகல். எவ்வத்திரை - துன்பமாகிய திரைகள். மடல்புனையா - அம்மடன்மா ஒரு தெப்பமாக நீந்துவேன்- அக்கடலை நீந்துவேன். உய்யா - பிழைக்கமுடியாத. இம்மாஉயலாகும் - இம்மடன்மா பிழைக்கும்படி செய்வதொன்றாயிருந்தது.

ஏரென - அழகால் வந்த நோயென்று யான் கூறும்படியாக "காமனதாணையால் வந்த காம நோயாகிய படை என விரித்துரைக்க. படைமுற்றி உடைத்து உள் அழித்தரும் என மாற்றி முடிக்க." ஆணெழின்முற்றி-ஆண்டன்மையின் அழகாகிய மதிலைச் சூழவிட்டிருந்து. இம்மா ஏமம் - இம்மடன்மா பரிகாரமாயிற்று. தகையால் - அழகால். தலைக்கொண்ட - அவளிடத்தைப் பற்றிக் கொண்ட. நெஞ்சிடத்து எரிகின்ற காமத்தீ அமையாது என்னுள் ளத்தைச் சுடும் என மாற்றிப் பொருள் கொள்க. இதற்குச் சிறிது வேறுபட உரைப்பார் நச்சினார்க்கினியர்.

அழன்மன்ற......இம்மா என்பதற்கு காமமாகிய பொறுத்தற் கரிய நோய் அறுதியாக நெருப்பு; அந் நெருப்பிற்கு இம்மா அறுதியாக ஒரு நிழலாயிருந்தது என்றான் என உரைக்க.

ஆன்றோர் - ஆன்றோர்கள் உள்ளிடப்பட்ட அரசனை- இவன் தவஞ் செய்தற்குரியனென்று தவத்துள்ளே கூட்டிக் கொள் ளப்பட்ட அரசனை. துறக்கத்தின் வழீஇ - துறக்கத்திற் சேறலை வழுவுகையினாலே. பெயர்த்து - அவ்வழுவுகையினின்று மீட்டு. அவர் - அச் சான்றோர். உறீஇயாங்கு - உறுவித்தாற் போல. உறீஇ யாங்குத் தீர்த்தல் நுந்தலைக்கடனே என இயைக்க. நுந்தலைக் கடன் - நும்மிடத்து முறைமையாகும்.

247. உக்கம் - தலை. நடு உயர்ந்து - இடை இல்லையாய். வாள் வாய் - வாள்போலும் வாயையுடைய. கொடுமடாய் - வளைந்த மடுப்பையுடையாய். கொக்குரித்தன்னமடுப்பென்றார்; தோல்திரைந்திருத்தலின், அகலம் - மார்பு. ஊன்றும் - அக்கூன் ஊன்றும். புறம் - முதுகு. அக்குளுத்து - அக்குளுக் காட்டுதலால் நச்சினார்க்கினியர் உரையின்படி அக்குளுத்தும் என்று இருக்க வேண்டும். புல்லல் - முயங்கல் (தழுவல்). அருளீமோ - வருவாயாக.

248. உளைத்தவர் - வெறுத்தவர். முளைத்த - தோன்றின முறுவல் - எயிறு. படுகளி - மிக்ககளிப்பு. மூப்பு - முதுமை. மூப்புச் செய்யுமென முடிக்க.

249. அலர் - பூ. நாற்றம் உண்டோ என இயைக்க. விறலி - பாணினியே! பிணங்கல் - பிணங்கற்க. அரும்பு - வண்டு. முயக்கு அமிர்தன்றோ என முடிக்க. முயக்கு - தழுவுதல்.

250. இஃதொத்தன் - இவனொருத்தன் . மேவேமென்பார் - புணர்ச்சிக் குறிப்பின்றி நிற்பார். மேவினன் - புணர்ச்சிக் குறிப்புடை யனாய்; முற்றெச்சம். அமன்ற - நெருங்கிய. மெல்லிணர் செல்லா- மெல்லிய பூங்கொத்து நீங்காத. எல்லா - ஏடா. இன்னா - துன்பம்.

### 52ம் சூத்திரம்

251. மனை - இல்லம். வயலை - வயலைக் கொடி. வேழம் - கொறுக்கச்சி; கரும்பென்பாருமுளர். தோள் (நல்லன்) அல்ல னென்னும் என இயைக்க.

252. முளிதயிர் - செறிந்ததயிர். கழுவுறு கலிங்கம் - அழுக்குப் போகத் தோய்த்த வஸ்திரம். கழாஅது - கழுவாது. விரலைக் கழு வாது உடுத்து என இயைக்க. குய்ப்புகை - தாளிதப்புகை துழந்து - துழாவி. புளிப்பாகர் - புளிக்குழம்பு. கழாஅது - தோய்க்காது என்று கூறுவாரு முளர். பொருத்த நோக்கிக்கொள்க.

253. கொளலரிதாக - கொள்ளுதலரிதாக. ஏற்றுக் காரி - ஏறாகிய காரி. காரி - கருநிறமுடையது. கதம் - கோபம். பாய்ந்த - பாய்ந்து தழுவின. ஆர்வுற்று - மகிழ்ச்சி நிறைதலுற்று. உச்சி பதித்து - தலையில் மிதித்து. மிதித்துக் கொடைநேர்ந்தார் என இயையும். உச்சி பதித்து - தலையில் மிதித்து. மிதித்துக் கொடை நேர்ந்தார் என இயையும். உச்சி மிதித்து என்றது அவர் கூறாமல் அடங்கச் செய்து என்றபடி.

### 54ம் சூத்திரம்

254. முகிழ முகிழ்த்தே வரவாயினும் - அரும்பு போல முகிழ்த்து வருதலுடையதாயினும். வருதல் - முகஞ் செய்தல்: வளர்தல். முலைவர வாயினும் அஞ்சுதக்கன என இயைக்க. அர வெயிறு - பாம்பின் பல்லு. ஒழுக்கம் - வெளிப் போந்தும் வெளி வராமலுமிருத்தல். அணங்குதகு இவள் - வருத்தம் செய்யுந் தகுதியுடைய இவள். தகு - தக்கு என நின்றது. இவள் இளைய ளாயினும், முதுக் குறைந்தனள் (- பேரறிவுற்றாள்) என முடிக்க தாய் நோயிலளாகு என இயைக்க. அணங்கு - அணங்கு போன்ற என்றுமாம்.

255. ஆள்வினை - தவமுயற்சி. முனிவன் என்றது விசுவாமித் திரனை. போற்றிய - பாதுகாத்த. எய்திய ஞான்று - எய்திய போது. மதியுடம்பட்ட - அவன் கருத்தினைத் தன் நோக்கான் உடன்பட்ட; இதனைக் கண்ணுடன் முடிக்க. ஞாண் - நாண். இடி ஒலி - இடிபோலும் ஒலி. இடியின் ஒலி கேட்ட பாம்பு என, இடியொலியைக் கேட்ட என்பதனோடும் கூட்டுக.

256. பாண்டியன் மகள் - சித்திராங்கதை. விசயன் - அருச் சுனன். இதன் கருத்து நன்றாகப் புலப்படவில்லை. இச் செய் யுளிற் பிழையுமிருக்கலாம் போலும்.

257. முட்கால் - முட்பொருந்திய தாள் (அடி). காரை தீங் கந்தாரம் - காரை முதுபழம்போல முற்ற விளைந்த இனிய கந்

தாரமென்னும் பெயரையுடையதுமது எனப் பொருள் கொள்க. தீங்கட்டாரம் எனவும் பாடம். தாரம் - பண்டம் (பொருள்). ஆயம் - நிரை. தலைச்சென்று - கள் விலைக்கு நேராகக் கொடுத்து. பெருத்த - மிக்க. எச்சில் ஈர்ங்கை - எச்சிலான ஈரியகை. கையை வில்லின் புறத்தே திமிரி என இயைக்க அணல் - தாடி. தொடுதல் ஓம்பு - தொடுதலைப் பாதுகாப்பாயாக. சாடியைத் தொடுத்தல் ஓம்புமதி என இயைக்க காய்தல் - விடாய்த்தல்.

*258.* பல்லாளிரை ஓம்பு மென்ப என முடிக்க. வில்லேருழவர் கடந்து கொண்ட பல்லானிரை என இயைக்க. கடந்து - வென்று. வெட்சித்தாயத்து - நிரைகவருமுரிமையையுடைய. இதனை உழவரொடு முடிக்க.

## 55ம் சூத்திரம்

*259.* நெடுவேள்ஆவி - ஒருவள்ளல்.

*260.* எவ்வி - ஒரு குறுநில மன்னன். இவன் கொடையிற் சிறந்தவன்; வேலி எனவும் படுவன். புறநானூறு பார்க்க. பூ - பொற்றாமரைப்பூ. புல்லென்று - பொலிவழிந்து.

*261.* ஏறு - ஆனேறு. பொதுமகளிர் - இடைச்சாதி மகளிர். புணர்குறி - புணர்தற்கு வேண்டும் நிமித்தம். கொண்டு - பெற்று.

முற்றிற்று.

# உதாரணச் செய்யுள் முதற்குறிப்பகராதி

**எண் - பக்கஎண்**

## ஆ

## கா



## கி

## நி



## நீ



## நு



## நெ

○○○

# அரும்பத முதலியவற்றின் அகராதி

**எண் - பக்க எண்**

### கா

கி



கு



கூ

### கெ



### கே



### கை



### கொ



### கோ



### கௌ



### ச

### தூ



### தெ



### தே



### தொ



### தோ



### ந



### நா

# சூத்திர முதற்குறிப்பகராதி

# சிறுபொழுதாராய்ச்சி

**நா**ம், செந்தமிழ்த் தொகுதி 26, பகுதி 2ல் சிறுபொழுது என்னும் ஒரு விஷயம் எழுதினேம். அதற்கு மறுப்பாகச் செந்தமிழ் தொகுதி 29, பகுதி 5ல் ஸ்ரீமத். சி. **வீரபாகுப்பிள்ளையவர்கள்** சிறு பொழுதாராய்ச்சி என ஒரு விஷயம் எழுதி வெளிப்படுத்தியிருக் கிறார்கள். அவ்வாராய்ச்சி **ஸ்ரீ சிவஞானசுவாமிகள் கருத்தைத்** தாபிக்க வந்ததே. எமக்குச் சுவாமிகளிடத்திற் காய்வும், இளம்பூரணர் நச்சினார்க்கினியரிடத்தில் உவப்பும் இல்லை. தமிழுலகிற்கு உண்மையை வெளிப்படுத்த வேண்டுமென்று எம்மால் அவ்விஷ யம் எழுதப்பட்டதன்றிப் பொழுது போக்கிற்காக எழுதப்பட்ட தன்று. பிள்ளையவர்களோ, சுவாமிகள்மீது கொண்ட உவப்புக் காரணமாக உண்மையை மறைத்துத் தமது சொல்வன்மையானே மெய்ம்மைகாட்டி அவ்விஷயத்தை எழுதியுள்ளார்கள். அங்ஙனம் எழுதியுள்ளார்கள் என்பது அவ்விஷயத்தைப் படித்த அறிஞர்க் குணராதே போகாது, எனினும், ஆழ்ந்து நோக்காதார்க்கு அஃதும் உண்மைபோலக் காணப்படுமென்பதுபற்றி, இன்னுமொருமுறை யாம் அதனை ஆராய்ந்துகாட்ட வேண்டியதாயிற்று. நிற்க.

நாம் எழுதிய 'சிறுபொழுது' என்னும் விஷயத்தையும் பிள்ளையவர்கள் எழுதிய 'சிறுபொழுதாராய்ச்சி' என்னும் விஷயத்தையும் படித்தவர்களுக்கு, விஷயத் தொடக்கம், இன்னது என்பது விளங்குமாதலின், அவ்விஷயத் தொடக்கத்தை யாம் ஈண்டு எடுத்துக்கூறாது, பிள்ளையவர்களின் ஆராய்ச்சியுள் வேண் டியவற்றை மாத்திரம் எடுத்துக்காட்டி மறுத்து உண்மையை நாட்டுதும்.

பிள்ளையவர்கள் "இவ்விதம் ஸ்ரீ சுவாமிகள் இளம்பூரணரை யும் நச்சினார்க்கினியரையும் மறுத்துச் சிறுபொழுதைந்து என்று கூறிவிடவே சிறுபொழுதாறென்பது பழங்கதையாய்விட்டது" என்றார்கள்.

சுவாமிகளிடத்திலுள்ள உவப்போடு நோக்குவார்க்குச் சிறு பொழு தாறென்பது பழங்கதையாவதன்றி, ஏனை அறிஞர்க்கு

அது பழங்கதையாகுமா? முன்னோர் கூறிய உண்மை நூல்களைப் பழங்கதை என்று கூறப்புகுந்த இக்காலத்துப் பிள்ளையவர்கள் சிறுபொழுதாறென்பது பழங்கதையாய்விட்டது என்று கூறுவது ஒரு நூதனமன்று.

பிள்ளையவர்கள், இளம்பூரணருரைப்பதிப்பில், 'வைகறை விடியல்' என்றிருப்பது, நச்சினார்க்கினியர் காலம்வரையும் 'வைகுறுவிடியல்' என்று தானிருந்திருக்கிறது என்றும், அதற்குக் காரணம் நச்சினார்க்கினியர் தமக்குச் சாதகமாக இருக்கும் 'வைகறை விடியல்' என்னும் பாடத்தை எடுத்துக்கொள்ளாமையே என்றும், பின் 'வைகறை விடியல்' என்னும் பாடம் ஏடு எழுது வோரால் திருத்தப்பட்டதென்றும் கூறுகிறார்கள்.

நச்சினார்க்கினியர் 'வைகறை விடியல்' என்னும் பாடத்தை எடுத்துக் கொள்ளாமையால், இளம்பூரணர் கொண்ட பாடமும் 'வைகுறு விடியல்' தான் எனின், நச்சினார்க்கினியர் 'வைகறை விடியல்' எனப் பாடாந்தரம் கொண்டதற்குக் காரணமின்று. ஆகையால் நச்சினார்க்கினியருக்கு முன்னேயே இரண்டு பாடமும் இருந்ததென்பது துணிபேயாம். ஆயின் இளம்பூரணர் 'வைகுறு விடியல்' எனவும் பாடம் என்று கூறவில்லை. ஆதலால் அப்பா டமே ஐயமாகின்றது. அகப்பொருள் விளக்கப் பழையவுரையிலும், இறையனாரகப்பொருளுரையிலும், 'வைகறை விடியல்' என்றே பிரமாணங் காட்டப்பட்டதனாலும், 'வைகறை விடியல்' என்பதே உண்மைப்பாடமென்பது துணிபாம். பிள்ளையவர்கள், இறைய னாரகப் பொருளிலுள்ள 'வைகுறு விடியல்' என்னும் பாடத்தை, யாம் பட்டதாரிகள் போலத் திருத்திவிட்டேம் எனக் குறை கூறிய துணிபு மிக வியக்கத்தக்கது. ஸ்ரீமாந். தாமோதரம்பிள்ளை யவர்களால் சுபானு வருடத்துச் சித்திரை மாதத்திற் பதிப்பித்த பதிப்பைப் பிள்ளையவர்கள் நோக்கியிருப்பார்களாயின், அவ் வாறு குறைகூறமாட்டார்கள். அதுவே முதற்பதிப்புப் போலும். 'வைகுறு விடியல்' எனக் காணப்படும் பாடங்கள், பின் புத்தகம் பதித்தோரால், நச்சினார்க்கினியர் பாடத்தின்படி திருத்தப் பட்டனவேயாம்.

நச்சினார்க்கினியர், மற்றவர்கள் சொல்வதை விடத் தாம் புதிதாக ஒன்று சொல்வதில் விருப்பமுடையராதலால், இளம் பூரணருக்கு மாறாக 'வைகுறு விடியல்' என்னும் பாடத்தை

எடுத்துக் கூறி விளக்கியிருக்கலாமென்பதே எமது கருத்து. அன்றியும், 'வைகுறு' 'வைகறை' என்னும் இருசொற்களின் பொருளையும் அவர் விளக்கியே சேறலின், சொல்லின் பொருளை விளக்குதற்கு அவ்வாறு கூறினாரென்று கொள்வதன்றி வேறுகோடல் பொருந்தாதென்க. குற்றியலுகரப் புணரியலில், "அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும் - எல்லா விறுதியு முகர நிறையும்" என்று இளம்பூரணர் கொண்ட பாடத்தை, நச்சினார்க்கினியர் '**நிலையும்**' என்று பாடங்கொண்டமைபற்றி, நச்சினார்க்கினியர் காலம் வரையும் நிலையும் என்றுதானிருந்தது. பின், '**நிறையும்**' என்றும் திருத்தப்பட்டது என்று கொள்ள முடியுமா? ஆதலின் அக்காரணம் பொருந்தாது. ஆகையால் நச்சினார்க்கினியர், 'வைகுறு விடியல்' என்னும் பாடத்தையே தாம் கொண்டு, இளம்பூரணர் பாடத்தைப் பாடாந்தரமாகக் கொண்டார் என்பதே துணிபாம். பிள்ளையவர்கள், 'வைகுறு விடியல்' என வரும் இலக்கியப் பிரயோகங்களை நோக்கித் தங்கருத்திற்கேற்ப வினைத்தொகையாக்கற்கே 'வைகுறு விடியல்' தான் இளம்பூரணர் பாடமும் என்றதன்றிப் பிறிதொன்றன்று.

இனிப் பிள்ளையவர்கள், வைகுறு விடியலை உம்மைத் தொகையாகக் கோடல் பொருந்ாதென்கிறார். பிள்ளையவர்கள் கூறியவாறு வைகுறுதல் - கழிதல் எனக்கொண்டு கழிதலுறுவது என்னும் பொருளில் வைகறைக்கும் வரும் என்பது துணிபாம். அது, 'வைகுறுமீன்' (அகம். 17) என்பதற்கு, 'விடிகின்ற காலத்துமீன்' என்றே உரைகாரர் பொருள் கூறலானு மறியப்படும். ஒளி குறைந்த இலவம் பூக்களுக்கு விடியற்காலத்து (வைகறை) மீனும் ஒளி குன்றல் பற்றி உவமையாக ஆசிரியர் கூறினார். பெரும்பாணாற்றுப்படையிலே, 'பொற்குழை' ஒளி குறைந்து விளங்கல் பற்றி, "வைகுறு மீனிற் பையத் தோன்றும்" (318ம் அடி) என, விடிகின்றகாலத்து மீனே யுவமை புணர்க்கப்பட்டது. நச்சினார்க்கினியர் 'வைகுறு மீன்' என்பதற்கு, விடிதற்குக் காரணமாகிய வெள்ளியாகிய மீன் என்று பொருள் கூறுகின்றனர். ஆண்டும் ஒளி குறைதற்கே உவமையாதலின், விடிகின்ற காலத்துமீன் என்றலே பொருத்தமாம். வெள்ளியாகிய மீனென்றல் 'பையத் தோன்றும்' என்பதற்கு அவ்வளவு பொருத்தமுடையதன்று. நற்றிணை உரையாசிரியரும், 'வைகுறு மீன்' (48) என்பதற்கு விடியற்காலத்து மீன் என்றே பொருள் கூறுகின்றனர்.

இங்ஙனம் வைகுறு விடியற்கும் பெயராய் வருதலின் 'வைகுறு விடியல்' என நச்சினார்க்கினியர் கொண்ட பாடத்திற்கும் வலிந்து கொள்ளாது, இடம் நோக்கி வைகுறுவும் விடியலும் என்று உம்மைத் தொகையாகவும் பொருள் கொள்ளலாமென்பது துணிபு. 'வைகுறு விடியல்' என்பதை வைகறைக்குக் கொள்ளுங் கால் வைகுறுவாகிய விடியல் எனவுங் கொள்ளலாம். இங்ஙனமாக 'வைகுறு விடியல்' என்பதைப் பண்புத் தொகையாகவும் உம்மைத் தொகையாகவுங் கோடல் பொருந்தாதென்பது எவ்வாறு பொருந்தும்? 'வைகறை விடியல்' என்பதும் அங்ஙனே இடம் நோக்கி இரு தொகையாகவுங் கொள்ளப்படும்.

இனி, "உலகவழக்கிலாகட்டும் செய்யுள் வழக்கிலாகட்டும் இரவு, முதல்யாமம், இரண்டாம் யாமம், நடுயாமம், நான்காம் யாமமென, நான்கு பிரிவாகவே பிரிக்கப்படுகின்றது. மாங்குடி மருதனார் தமது மதுரைக்காஞ்சியிலே இரவை நான்குகூறாகப் பகுத்து வருணித்திருப்பதும், அதனுரையிலே நச்சினார்க்கினியர் இரண்டாம் யாமத்திற்கும் நான்காம் யாமத்திற்கும் நடுவிடத்த தாகிய தெய்வங்களுலாவும் செயலற்ற கங்குல் என்பதும் நாங் கூறியதை உறுதிப்படுத்திவிடும்" என்றார்கள்.

இரவை நான்கு கூறாகப் பிரிப்பது வடமொழி வழக்கு. மூன்று கூறாகப் பிரிப்பது தமிழ் வழக்கு. நச்சினார்க்கினியருரைப் படி மாங்குடி மருதனாரும் கருதிப் பாடினார் என்பது உண்மை யாயின் அது வடமொழி வழக்கேயாம். கனாநூல் முதலியவையு மன்னவேயாம். தமிழ் வழக்கு மூன்றே. அது, பொருளிலக்கண நூல்கள் அவ்வாறே கூறுதலானறியப்படும். "மாலை யாமம் வைகறை" என்று அகப்பொருள் விளக்கமே கூறுகின்றது. அதுவே பிரமாணமாம். அன்றியும், அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை முதலியவற்றிலும் யாமம் ஒன்றாகவே கூறப்படு கின்றது. பானாள் என்றும், 'அரையிருள்' என்றும், 'நள்ளென் யாமம்' என்றும், நடுயாமம் என்றும், இப்படியே வருகின்றன. முதல் யாமத்திற்கு யாம் பிரமாணங் காட்டாமல் விட்டது சிந்திக்கத்தக்கது என்கிறார்கள். இளம்பூரணர், சேனாவரையர் முதலியோரும் உதாரணம் வந்தவழிக் காண்க என்கிறார்கள்; அங்ஙனம் வருதலால் அவர்கூற்றுப் பிழையாகுமா? இலக்கியம் இறந்துபட்டிருக்கலாம். அல்லது பாடாமல் விட்டிருக்கலாம். முதல் யாமத்திற்கு யாம் மேற்கோள் காட்டாமைபற்றி அஃது

இல்லையென்பது கருத்தாகுமா? பகலானது எப்படித் தமிழ் வழக்குப்படி முற்பகல், நடுப்பகல், பிற்பகல் எனப் பிரிக்கப் படுமோ அப்படியே இரவும் முன்னிரவு, நள்ளிரவு, பின்னிரவு எனப் பிரிக்கப்படுமென்பது தானே போதராதா? ஆகையால், சிலப்பதிகாரம் கூறும் அரையிருள்யாமம் என்பதும், பட்டினப் பாலையில் வரும் கடைக்கங்குல் என்பதும் முறையே இடையா மத்தையும் பின்னிரவையும் குறிக்குமென்பது திடம். வைகறை யும் கடைக் கங்குலும் ஒன்றாம். நச்சினார்க்கினியர் கடைக் கங்குல் - விடியல் என்றதும் பின்னிரவாகிய வைகறையையே.

சிலப்பதிகாரத்தில், 'அரையிருள் யாமத்தும் பகலுந் துஞ் சார்' என்பதற்கு உரைகாரர், 'நான்குயாமம்' என்பதை மனத்தில் வைத்துக் கொண்டு 'அரையிருள் யாமம்' உம்மைத்தொகை என்றும், அரையிருள் இரண்டாம்யாமமென்றும், பகல் நடு யாமமென்றும், நலிந்து பொருள் கொள்கின்றனர். பழைய உரையாசிரியரோ, 'அரையிருள் யாமத்தும் ஒரு மாத்திரைப் பொழுதும்' என்றும் பொருள் கூறுகின்றனர்; ஆதலின் பழைய உரைப்படி நடுயாமமாகிய ஒருபொழுதே கொள்ளப்படுதலின், இரவும் மூன்று பிரிவையுடையதென்பது துணியப்படும். இங்ங னமே மதுரைக்காஞ்சியிலும், நச்சினார்க்கினியரும் அடிகளைப் பிரித்துக் கூட்டி, நலிந்து நான்குயாமம் கொள்கின்றனர். பாட் டின்படி மூன்றுயாமங் கொள்ளலாகும். அதனைக் காலம் வாய்த்துழிக் காட்டுதும். ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இனி, நளவெண்பாவிலே, புகழேந்திப்புலவர்,

> மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
> வில்லி கணைதெரிந்து மெய்காப்ப – முல்லையெனும்
> மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
> புன்மாலை யந்திப் பொழுது.

என்று மாலை கூறிப் பின்,

> ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
> வீக்கிய கச்சையர் வேல்வாளர் – காக்க
> இடையாமம் காவலர்கள் போந்தா ரிருளின்
> புடைவா யிருள்புடைத்தாற் போன்று.

என்று இடையாமம் கூறிப் பின், "பூசுரர்தங் கைம்மலரும்" என்னுஞ் செய்யுளில், "புலர்ந்ததே யற்றைப் பொழுது" என வைகறையுங் கூறுவர்; ஆதலானும் தமிழ் வழக்கின்படி இரா மூன்று பிரிவுடைய தென்பதே திண்ணம்.

